# சுவாமி விவேகானந்தரின்
# ஞானதீபம்
## சுடர் 3

சொற்பொழிவுகள் மற்றும் எழுதியவற்றின்

தொகுப்பு

ஸ்ரீராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை-600004

# பதிப்புரை

**சு**வாமி விவேகானந்தர் ஏற்றி வைத்த ஞானதீபத்தின் மூன்றாம் சுடர் இது. இதில் ஒளிர்வது ஞானயோகம்.

சுவாமிஜியின் கருத்துப்படி ஞானயோகம்தான் யோகங்களுள் அறிவுபூர்வமானது, தத்துவபரமானது, ஆனால் மிகவும் கடினமானது. எனவே ஞானயோகத்தின் சிறப்பை, அதன் தேவையை, அதன் படிகளை, அதன் செயல்முறைப் பகுதியை விளக்குகின்ற அதேவேளையில், பாதையில் வருகின்ற தடைகளையும் மனமயக்கங்களையும் எடுத்துக் கூறி நம்மை எச்சரிக்கவும் செய்கிறார் அவர். ஞானயோகத்தின் திரட்சியை இதைவிட எளிமையாகத் தர முடியுமா என்பது சந்தேகமே.

இந்தச் சுடர் வகுப்புச் சொற்பொழிவுகள், சொற்பொழிவுகள், சொற்பொழிவுக் குறிப்புகள் என்று மூன்று பகுதிகளைக் கொண்டது. 'ஆன்மா: அதன் தளையும் முக்தியும்' என்ற வகுப்புச் சொற்பொழிவையும், 'வேத மத லட்சியங்கள்' மற்றும் 'பகுத்தறிவும் மதமும்' என்ற இரண்டைத் தவிர பிற சொற்பொழிவுகளையும் திரு. எம். செல்லம் ஐயர் M.A., அவர்களும் அவரது மகனான திரு. விசாக விஜயன் M.A., அவர்களும் மொழிபெயர்த்திருந்தனர். ஆரம்பநிலைப் பாடங்களுள் முதல் மற்றும் கடைசிச் சொற்பொழிவும், 'ஞானயோகம்: சில குறிப்புகள்' என்ற சொற்பொழிவுக் குறிப்பும் தமிழில் முதன்முதலாக வெளிவருகின்றன. பிற பகுதிகள் முந்தைய பதிப்பிலிருந்து (1963) எடுத்தாளப்பட்டுள்ளன.

மொழிபெயர்ப்பு, மொழிவளம், அச்சுப்பிரதிகளைச் சரிபார்த்தல் என்று பணியில் ஈடுபட்ட அனைவருக்கும் இறைவன் திருவருள் புரிவாராக! ஞானதீபத்தின் இந்தச் சுடரும் படிப்போருக்கு ஒளிகாட்டி, வழிகாட்டி ஆன்மீகப் பாதையில் அழைத்துச் செல்லுமாக!

31.1.1997, சுவாமி விவேகானந்தரின் 135-ஆம் ஜெயந்தி
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-4

## இந்தச் சுடரில்....

ஆன்மீகத் துறைக்கு சுவாமி விவேகானந்தர் அளித்த பெருங்கொடையான 'நான்கு யோகங்களுள்' இறுதி யோகமான ஞானயோகத்தை இந்தச் சுடரில் காண்கிறோம். இந்தச் சொற்பொழிவுகள் அனைத்தும் நியூயார்க்கிலும் லண்டனிலும் ஆற்றப்பட்டவை. இவை தவிர மூன்றாம் பகுதியாக வருவது சொற்பொழிவுக் குறிப்புகள்.

முதற்பகுதியான வகுப்புச் சொற்பொழிவுகள் 1895 டிசம்பர் 11 முதல் 1896 பிப்ரவரி 12 வரைக் கிழமைதோறும் நிகழ்த்தப் பட்டவை. காலையில் உயர்நிலைப் பாடங்களும், மாலையில் ஆரம்பப் பாடங்களும் நிகழ்த்தப்பட்டன. இரண்டாம் பகுதி 1896-ஆம் ஆண்டு லண்டனில் நிகழ்த்தப்பட்ட சொற் பொழிவுகள். மூன்றாம் பகுதி சொற்பொழிவுக் குறிப்புகள்.

## பொருளடக்கம்

# I. வகுப்புச் சொற்பொழிவுகள்

## அ. ஆரம்பநிலைப் பாடங்கள்

### 1. ஞானத்திற்கான முதற்படி

11 டிசம்பர் 1895

ஞானம் என்றால் அறிவு. அறிதல் என்று பொருள்படுகின்ற 'ஜ்ஞ' என்ற மூலச்சொல்லிலிருந்து இந்த வார்த்தை பிறந்துள்ளது. அறிவின்மூலம் அடையப்படுகின்ற யோகமே ஞான யோகம். ஞானயோகத்தின் லட்சியம் என்ன? முக்தி, விடுதலை. எதிலிருந்து விடுதலை? நமது குறைகளிலிருந்து விடுதலை, வாழ்க்கைத் துன்பங்களிலிருந்து விடுதலை. நாம் ஏன் துன்பப்படுகிறோம்? ஏனெனில் நாம் கட்டுண்டிருக்கிறோம். அந்தக் கட்டு அல்லது தளை எது? அது இயற்கை சம்பந்தப்பட்டது. நம்மைக் கட்டி வைத்திருப்பது யார்? நாம், நாமே.

இந்தப் பிரபஞ்சமே காரணகாரிய விதிகளால் கட்டப்பட்டிருக்கிறது. அக உலகிலும் சரி, புற உலகிலும் சரி, காரணமில்லாத எந்தப் பொருளோ எந்த உண்மையோ இருக்க முடியாது. நம்மைக் கட்டியிருக்கின்ற இந்தத் தளையும் உண்மையானது. நாம் கட்டுப்பட்டிருக்கிறோம் என்பதை நிரூபிக்க வேண்டியதில்லை. உதாரணமாக, இந்த அறையிலிருந்து சுவரை ஊடுருவிக் கொண்டு என்னால் வெளியேற முடியுமானால் சந்தோஷமாகத்தான் இருக்கும், ஆனால் அது முடியாது. எனக்கு நோயே வராமல் இருக்குமானால் அது மிகவும் நல்லது, ஆனால் நோய் வருவதை என்னால் தடுக்க முடியாது. எனக்குச் சாவே கிடையாது என்றால் மிகவும் மகிழ்ச்சிதான், ஆனால் நான் இறந்தேயாக வேண்டும். என்னால் இயலாத லட்சக்கணக்கான விஷயங்களை எல்லாம் செய்ய முடியுமானால் பேரானந்தம்தான். ஆசை இருக்கிறது, ஆனால் அதை நிறைவேற்றுவதில் வெற்றி பெற முடியவில்லை. ஆசைகள் இருந்து, அவற்றை நிறைவேற்றும் வழி கிடைக்காமல் போகும்போதுதான் துன்பம் என்ற வினோதமான பிரதிச்செயல் உண்டாகிறது. ஆசைக்குக் காரணம் யார்? நான், நானே. எனவே இப்போது நான் படும் துன்பங்களுக்கெல்லாம் நானே காரணம்.

குழந்தை பிறக்கும்போதே அதன் துன்பமும் தொடங்கிவிடு கிறது. பலவீனனாக, உதவியற்றவனாக அவன் பூமிக்கு வரு கிறான். வாழ்க்கையின் முதல் அறிகுறியே அழுகைதான். ஆரம் பத்திலேயே இப்படித் துன்பம் இருக்கும்போது, துன்பத்திற்கு நாம் எப்படிக் காரணமாக முடியும்? அது நமது முன் வினைப் பயனால் நிகழ்ந்தது.

இங்கே சுவாமிஜி மறு பிறவிபற்றி நீண்ட விளக்கம் அளித்தார்.

முதலில், நாம் என்றென்றும் இருந்துவருகிறோம் என்பது புரிகிறது. இரண்டாவதாக, நாமே நமது வாழ்க்கையை உரு வாக்கி உள்ளோம் என்பது தெரிகிறது. விதி என்று எதுவும் கிடையாது. நமது வாழ்க்கை நமது முன்வினைப் பயன், நமது கர்மத்தின் விளைவு. இவ்வாறு நாமே நமது கர்மத்தை உருவாக்கி இருக்கிறோம் என்றால், அதை அழிக்கவும் நம்மால் முடியும் என்பது உண்மைதானே?

இந்த வினைப்பயனை எப்படி அழிப்பது என்பதை மனித குலத்திற்குக் காட்டுவதே ஞானயோகத்தின் சாரமாகும். வண்ணத்துப் புழு தன் உடலிலிருந்து சுரக்கின்ற பொருளால் தன்னைச் சுற்றித் தானே கூடமைத்துக்கொண்டு, அதில், தானே சிறைப்படுகிறது. அங்கே கிடந்தவாறு அது அழலாம், கதறலாம், ஓலமிடலாம். ஆனால் அதன் உதவிக்கு யாரும் வர மாட் டார்கள். இறுதியில் அதுவே ஞானம் பெறுகிறது, அழகிய வண்ணத்துப் பூச்சியாக வெளிவருகிறது. நமது தளைகளைப் பொறுத்தவரையிலும் இதே விஷயம்தான். யுகயுகங்களாக நாமும் பிறப்பு இறப்பு என்று சுழன்று வருகிறோம். இப்போது துன்பத்தை உணர்கிறோம், நாம் கட்டுண்டிருப்பதை எண்ணி அழுது புரள்கிறோம். ஆனால் அழுவதாலும் புரள்வதாலும் எந்தப் பயனும் இல்லை. இந்தத் தளைகளை உடைப்பதில் நாம் முனைந்து ஈடுபட வேண்டும்.

எல்லா தளைகளுக்கும் முக்கியக் காரணம் அறியாமை. மனிதன் இயல்பிலேயே கொடியவன் அல்ல, ஒருபோதும் அல்ல. அவன் இயல்பிலேயே தூயவன், முற்றிலும் புனித மானவன். ஒவ்வொரு மனிதனும் தெய்வீகமானவன். நீ காண் கின்ற ஒவ்வொரு மனிதனும் இயல்பிலேயே கடவுள்தான். இந்த இயல்பு அறியாமையால் மறைக்கப்பட்டிருக்கிறது. இந்த அறியாமையே நம்மைக் கட்டுண்டவர்களாக ஆக்கியிருக்கிறது. எல்லா துன்பங்களுக்கும் அறியாமையே காரணம். எல்லா கொடுமைகளுக்கும் அறியாமையே காரணம். அறிவு உலகை

நல்லதாக்குகிறது. அறிவு எல்லா துன்பங்களையும் ஒழிக்கிறது, அறிவு நம்மைச் சுதந்திரர்களாக்குகிறது. ஞானயோகத்தின் கருத்து இதுவே. அறிவு நம்மைச் சுதந்திரர்களாக்குகிறது! எந்த அறிவு? வேதியியலா? இயற்பியலா? வானஇயலா? பூமியியலா? அவை எல்லாம் நமக்குச் சிறிது உதவுகின்றன, மிகச்சிறிது உதவுகின்றன. ஆனால் முக்கியமான அறிவு என்பது உங்கள் இயல்பே. 'உன்னை அறிந்துகொள்.' நீங்கள் உண்மையில் யார், உங்கள் உண்மை இயல்பு எது என்பதை அறிந்துகொள்ள வேண்டும். அந்த எல்லையற்ற இயல்பை உங்களுள் உணர வேண்டும். அப்போது தளைகளெல்லாம் நொறுங்கிவிடும்.

இந்த ஆன்மாவை அறிய பல்வேறு வழிகள் உள்ளன. பகுத்தறிவுபூர்வமான ஆராய்ச்சி ஒன்றின் துணையை மட்டுமே ஞானயோகம் நாடுகிறது. அறிவுபூர்வமான ஆராய்ச்சி மட்டுமே, பகுத்தறிவு மட்டுமே ஆன்மீக உணர்வு நிலைக்கு உயர்ந்து, நாம் யார் என்பதை நமக்குக் காட்டுகிறது. இங்கே வெறுமனே நம்புவது என்ற பேச்சிற்கே இடம் இல்லை. எதையும் நம்பாதீர்கள் —ஞானியின் கருத்து இதுவே. எதையும் நம்பாதீர்கள், ஒவ்வொன்றையும் நம்புவதிலிருந்து விடுபடுங்கள்—இதுவே முதற்படி. அறிவுபூர்வமானவராக இருக்கத் துணிவுகொள்ளுங்கள், விவேகம் உங்களை எங்கே அழைத்துச் சென்றாலும் அங்கு செல்லத் துணிவுடன் இருங்கள்.

'நான் அறிவுபூர்வமாகத்தான் வாழ்கிறேன்' என்று பலரும் சொல்வதைக் கேட்கலாம். ஆனால் அப்படி வாழ்வது என்னவோ மிகவும் கடினமான காரியம். அறிவைச் செலுத்தி ஆராய்ந்து அதன்படி வாழத் துணிகின்ற ஒருவன் இருப்பானானால் நான் இருநூறு மைல்கள் சென்றும் அவனைக் காணத் தயாராக இருக்கிறேன். சொல்வதற்கு எளிதானது இதைவிட எதுவும் இல்லை; செய்வதற்குக் கடினமானதும் இதைவிட எதுவும் இல்லை. எப்போதும் மூட நம்பிக்கைகளையே பின்பற்றி வாழப் பழகிவிட்டோம். தேசிய அளவிலான அல்லது மனித குலம் முழுமைக்குமே உரியதான பழைய காட்டுமிராண்டித் தனமான மூட நம்பிக்கைகள்; குடும்பம், நண்பர்கள், நாடு, நாகரீகம், சாஸ்திரங்கள், பால்வேறுபாடு என்று ஏதேதோ சம்பந்தப்பட்ட மூட நம்பிக்கைகள் எல்லாம் நம்மைக் கட்டியுள்ளன. இதில் அறிவைப்பற்றி நாம் பேசுகிறோம்! அறிவுபூர்வமாகச் சிந்திப்பது ஏதோ ஒருசிலர் மட்டுமே. 'எதையெடுத்தாலும் நம்ப நான் தயாராக இல்லை. இருளில் உழல நான்

தயாராக இல்லை. நான் ஆராய்ந்து பார்க்க வேண்டும்' என்று பலர் சொல்வதைக் கேட்கிறோம். அவ்வாறே ஆராயவும் மனிதன் தலைப்படுகிறான். ஆனால் அவன் நெஞ்சோடு இறுகக் கட்டியணைத்துள்ள பொருட்களையெல்லாம் அந்த ஆராய்ச்சி நொறுக்கித் தூள்தூளாக்கும்போது, 'இனி தாங்காது; எனது லட்சியங்களை உடைத்தெறியும்வரை ஆராய்ச்சி என்பது சரி தான், அத்தோடு நின்றுவிட வேண்டும்' என்கிறான். இவன் ஒருபோதும் ஞானியாக மாட்டான். இந்த வாழ்க்கை என்றல்ல, இனி வரப்போகும் வாழ்க்கைகளிலும் அவன் தன் தளைகளைச் சுமந்தே செல்கிறான். மரணத்தின் ஆதிக்கத்தில் அவன் மீண்டும் மீண்டும் வருகிறான். இத்தகையோர் ஞானயோகத்திற்குத் தகுதி யானவர்கள் அல்ல. பக்தி, கர்மம், ராஜயோகம் என்று அவர் களுக்கு எத்தனையோ வழிகள் உள்ளன. ஆனால் ஞானயோகம் அவர்களுக்கு இல்லை.

மிகவும் துணிவுடையவர்கள் மட்டுமே இந்தப் பாதையைப் பின்பற்ற முடியும் என்பதை முதலிலேயே உங்களுக்குச் சொல்லி, உங்களைத் தயார்ப்படுத்த நான் விரும்புகிறேன். கோயிலை நம்பாதவனும், எந்த மதப் பிரிவையும் சாராதவனும், 'எதை யும் நம்ப மாட்டேன்' என்று சொல்லித் திரிபவனும் பகுத்தறிவு வாதி என்று எண்ணிவிடாதீர்கள். அப்படி இல்லவேயில்லை. அப்படியெல்லாம் பிதற்றித் திரிவது இன்று ஒரு வீரச் செயலாகக் கருதப்படுகிறது.

பகுத்தறிவுவாதியாக இருப்பதற்கு அவநம்பிக்கை மட்டு மின்றி அதற்குமேலும் பல வேண்டும். அறிவுபூர்வமாக ஆராய்வதுடன், அந்த ஆராய்ச்சி இட்டுச் செல்கின்ற வழியில் போவதற்கான துணிவு வேண்டும். இந்த உடம்பு ஒரு பொய்த் தோற்றம் என்று உங்கள் பகுத்தறிவு உங்களுக்குக் கூறினால், உடம்பை விட்டுவிட நீங்கள் தயாராக இருக்கிறீர்களா? சூடு, குளிர் என்பனவெல்லாம் வெறும் புலன் மயக்கங்களே என்று உங்கள் பகுத்தறிவு உங்களிடம் சொல்கிறது. பயமின்றி அவற் றைத் தாங்கிக்கொள்ள உங்களால் முடியுமா? புலன்கள் மனத் திற்குக் கொண்டுவருகின்ற அறிவு எல்லாமே பொய் என்று பகுத்தறிவு உங்களிடம் சொன்னால் புலனறிவை மறுக்க உங் களிடம் துணிவு இருக்கிறதா? இருக்குமானால் நீங்கள் ஒரு பகுத்தறிவுவாதி.

பகுத்தறிவையும் நம்பி உண்மையையும் கடைப் பிடிப்பது மிகவும் கடினமானது. மூடத்தனமாக எதையாவது

பின்பற்றுபவர்கள் அல்லது அரை ஆஷாடபூதிகள்— இவர்களால்தான் இந்த உலகமே நிறைந்திருக்கிறது. இந்த வேஷதாரிகளைவிட முட்டாள்களும் மூடர்களும் எவ்வளவோ மேல்! அவர்கள் நல்லவர்கள்.

ஏதாவது ஒரு லட்சியத்தை எடுத்துக்கொள்ளுங்கள். மரணம் வரை உறுதியாக அதைப் பின்பற்றுங்கள். அதுவே முக்திக்கு வழி. அரைமனத்துடன் ஈடுபடுவது நம்மை எங்கேயும் இட்டுச் செல்லாது. விரும்பினால் மூட நம்பிக்கைகளைக் கைக்கொள்பவர்களாக இருங்கள், விரும்பினால் கொள்கைவெறியர்களாக இருங்கள். ஏதாவது ஒன்றாக இருங்கள், உங்களுக்கும் ஏதோ இருக்கிறது என்பதைக் காட்டுங்கள். எது உண்மை என்று முடிவு செய்ய முடியாத, 'எல்லாம்' தெரிந்த, கஞ்சா போதையில் மதிமயங்கிக் கிடப்பதுபோல் மயக்கத்தில் மிதக்கின்ற முட்டாள்களைப்போல் இருக்காதீர்கள். புலன்களை நாடிநாடி இவர்களுக்கு அது ஒரு பழக்கமாகவே போய்விட்டது. உலகம் இத்தகையவர்களால் நிறைந்துவருகிறது. பூமிக்குச் சாரத்தைச் சேர்ப்பவர்கள் (Salt of the Earth) என்று தீர்க்கதரிசிகளைப்பற்றி ஏசு சொன்னார். ஆனால் இவர்களோ பூமிக்கு அழுக்கைச் சேர்ப்பவர்கள், வெறும் சாம்பல் குவியல்கள்.

எனவே முதலில் பகுத்தறிவைப் பின்பற்றுவது என்றால் என்ன என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்வோம். அந்தப் பாதையில் என்ன தடைகள் வரும் என்பதைப் பிறகு பார்ப்போம்.

பகுத்தறிவைப் பின்பற்றுவதில் முதல் தடை நாம் உண்மையை நோக்கிப் போகத் தயங்குவதே. உண்மை நம்மைத் தேடி வர வேண்டும் என்று நாம் நினைக்கிறோம். எனது பயணங்களின் போது பலர் என்னிடம், 'ஓ, நீங்கள் போதிக்கின்ற மதம் அவ்வளவு சுலபமாக இல்லை. சற்று சொகுசான மதத்தைத் தாருங்கள்' என்று கூறினர். அவர்கள் 'சொகுசான மதம்' என்று எதைக் குறிப்பிடுகிறார்களோ எனக்குத் தெரியவில்லை. என் வாழ்க்கையில் நான் எந்தச் சொகுசான மதத்தையும் கற்றுக்கொள்ளவில்லை. சொகுசாக இருக்கிறதோ, சுலபமாக இருக்கிறதோ, என் மதத்திற்கு வேண்டுவது உண்மை. இவர்கள் ஒரு பாதை வழியாகப் போகப் பழகிவிட்டார்கள். அதிலிருந்து வெளிவரும் துணிவு அவர்களுக்கு இல்லை. உண்மை அவர்களிடம் சென்று கைகட்டி நிற்க வேண்டும் என்று விரும்புகிறார்கள் போலும்!

இந்த உலகம் எவ்வளவோ இன்பமயமானது, உலகெங்கும் இன்பமும் இனிமையும் நிறைந்து கிடக்கிறது, நாம் வெளியில் சென்று அள்ளிக்கொள்ள வேண்டியதுதான்—என்றெல்லாம் குழந்தைப் பருவத்தில் நாம் நினைத்தது உண்டு. ஒவ்வொரு குழந்தையின் கனவும் அதுதான். ஆனால் அவன் வெளியில் வரும்போது, வெளியில் வந்து அன்றாட உலகை எதிர்கொள் ளும்போது கனவுகள் கலைந்துவிடுகின்றன.

நாடுகளின் விஷயமும் அப்படியே. இன்று கட்டப்படுகின்ற ஒவ்வொரு நாடும் நகரமும் பழைய நாடுகளின் அழிவின்மீதே கட்டப்படுகின்றன, இன்று காடு மண்டிக் கிடக்கின்ற இடங்கள் ஒவ்வொன்றும் நேற்றைய நகரங்கள் என்பதை அறியும்போது உலகின் நிலையாமை அவர்களுக்குத் தெளிவாகப் புரிகிறது. அன்று உருவாக்கப்பட்ட அறிவும் செல்வமும் ஆற்றலும் எல்லாம் அழிந்துவிட்டன. பண்டையோரின் விஞ்ஞானங்கள் எல்லாம் என்றென்றைக்குமாக அழிந்துவிட்டன. எவ்வாறு அழிந்தது என்பது யாருக்கும் தெரியாது. இது நமக்கு ஒரு பெரிய பாடத்தைப் போதிக்கிறது—வெறுமை, வெறுமை, எல் லாம் வெறுமை! எல்லாம் மனிதனின் வீண் முயற்சியும் ஏமாற்ற மும்தான்! இதையெல்லாம் காணும்போது உலகின்மீதும் அது நமக்குத் தரும் அனைத்தின் மீதும் வெறுப்புத் தோன்று கிறது. இதுவே வைராக்கியம், பற்றின்மை; ஞானத்திற்கான முதற்படி.

புலன்களை நாடுவதே மனிதனின் இயல்பான ஆசை. புலன்களிலிருந்து திரும்புவது அவனை இறைவனிடம் மீண்டும் அழைத்துச் செல்கிறது. எனவே உலகின் வெறுமை களிலிருந்து திரும்புவதே நாம் கற்றுக்கொள்ள வேண்டிய முதல் பாடம். உள்ளே மூழ்குவதும், வெளியே தலையை நீட்டி ஐந்து நிமிடம் இருப்பதுமாக எவ்வளவு காலம் போராடிக் கொண்டிருப்பாய்? கர்மம் என்ற இந்தச் சக்கரத்தில் மாட்டிக் கொண்டு எவ்வளவு காலம் மேலும்கீழுமாக வந்துபோய்க் கொண்டிருப்பாய்? அரசனாக, சக்கரவர்த்தியாக எத்தனையோ தடவை வாழ்ந்துவிட்டாய். எத்தனையோ முறை செல்வத்தில் மிதந்துவிட்டாய். எத்தனையோ முறை வறுமையில் வாடி விட்டாய். பேராற்றல் மிக்கவனாக எத்தனையோ ஆயிரக் கணக்கான முறை வாழ்ந்துவிட்டாய். ஆனால் வினைப்பயனின் வெறிபிடித்த வேகத்தில் இதோ மீண்டும் மனிதனாகப் பிறந்துள்ளாய்.

பயங்கரமான இந்தக் கர்மச் சக்கரம் விதவைகளின் கண்ணீருக்காகவோ அனாதைகளின் அழுகுரலுக்காகவோ நிற்பதில்லை. இப்படி எவ்வளவு காலம் போய்க்கொண்டிருப் பாய்? எவ்வளவு காலம்? வாழ்நாள் முழுவதையும் சிறையில் கழித்து, அதன்பின் வெளிவந்தபோது புற உலகின் ஒளியைத் தாங்க முடியாமல் மீண்டும் அந்த இருள் நிறைந்த சிறைக்கே செல்ல விரும்பிய கிழவனைப்போல்தான் வாழ விரும்பு கிறாயா? நம் எல்லோர் விஷயமும் இப்படியேதான். இந்த உலகம் கீழானது, இருள் மிக்கது, சேறும் சகதியும் நிறைந்தது, கொடூரமானது, கானல்நீர் போன்றது. ஒரு கால்பந்தைப்போல் இங்கு நாம் பந்தாடப்படுகிறோம். எனினும் நாம் அதை இறுகப் பற்றிக்கொண்டிருக்கிறோம்! நாம் இயற்கையின் கைகளில் அடிமைகள். ஒருவாய்ச் சோற்றிற்கு அடிமைகள், புகழுக்கு அடிமைகள், இகழ்ச்சிக்கு அடிமைகள், மனைவிக்கு அடிமை கள், கணவனுக்கு அடிமைகள், குழந்தைக்கு அடிமைகள், எல்லா வற்றிற்குமே அடிமைகள். இதை அன்பென்று கூறுகிறீர்களா? நான் அப்படிச் சொல்ல மாட்டேன். இது ஆசை, வெறும் ஆசை, மிருகத்தனமான ஆசை. அதற்குமேல் எதுவும் இல்லை. இவை அனைத்திலிருந்தும் விடுபடுங்கள். இந்தக் கொடூர மான கனவுகளுக்கு முடிவே கிடையாதா?

பெரியபெரிய நாட்டையும் நகரங்களையும் கட்டி, முட்டாள்தனமான வாழ்க்கை நடத்திவிட்டால் அது நாகரீகம் ஆகிவிடாது. உண்மையான நாகரீகம் என்பது கடவுளை நோக்கிச் செல்வது; புலன்களை அடக்குவது; அதன்மூலம் ஆன்ம வீட்டிற்கு அரசனாக இருப்பது. நமது அடிமைத்தனத்தை எண்ணிப் பாருங்கள். நாம் காணும் அழகிய உருவம் ஒவ்வொன்றும், என்னைப் புகழ்ந்து கூறும் வார்த்தைகள் ஒவ்வொன்றும் அப்படியே என்னைக் கவர்ந்து இழுக்கின்றன. என்னைக் குறைகூறும் வார்த்தைகள் ஒவ்வொன்றும் என்னைத் துன்புறுத்துகின்றன. வருகின்றவன், போகின்றவன் என்று ஒவ்வொரு முட்டாளும் என் மனத்தின்மீது ஆதிக்கம் செலுத்துகிறான். உலகில் நிகழும் சின்னஞ்சிறு அசைவுகூட என் மீது ஒரு பதிவை உண்டாக்கிவிடுகிறது. இதுவும் ஒரு வாழ்வா? எனவே வாழ்க்கையின் துன்பத்தை நீ உணர்ந்து விட்டால், இத்தகைய வாழ்க்கை வாழத் தகுந்ததல்ல என்பது உனக்கு உறுதியாகிவிட்டால் நீ ஞானத்தை நோக்கி முதற்படி எடுத்து வைத்துவிட்டாய். ❧

## 2. சாதனைப் படிகள்

18 டிசம்பர் 1895

ஞானநெறி சாதகனுக்கு இருக்க வேண்டிய தகுதிகளுள் முதலில் அவசியமானவை சமமும் தமமும் ஆகும். இவற்றை ஒன்றாகவே கொள்ளலாம். புலன்கள் வெளியில் அலையாமல், தங்கள் மையங்களிலேயே இருக்கச் செய்வது இவற்றின் நோக்கமாகும்.

'புலன் என்பதுபற்றி முதலில் விளக்கிக் கூறுகிறேன். இதோ கண்கள் இருக்கின்றன. ஆனால் கண்கள் காட்சிப் புலன்கள் அல்ல; அவை பொறிகள் அல்லது கருவிகள் மட்டுமே. நமக்குக் கண்கள் இருந்தாலும் காட்சிப் புலன் இல்லாவிட்டால் நாம் பார்க்க முடியாது. இனி, பொறி, புலன் இரண்டும் இருந்தாலும் மனம் ஈடுபடாவிட்டால் காட்சி ஏற்படாது. எனவே புலனறிவு ஏற்பட மூன்று விஷயங்கள் இன்றியமையாதவை: ஒன்று வெளிப்பொறிகள் அல்லது கருவி; அடுத்தது உட்கருவிகள் அல்லது புலன்கள்; மூன்றாவது மனம். இவற்றுள் ஒன்று இல்லாவிட்டாலும் புலனறிவு ஏற்படாது.

இவ்வாறு மனம் இரண்டு வகைக் கருவிகளின்மூலம் செயல்படுகிறது: ஒன்று வெளிக்கருவிகள், மற்றொன்று உட்கருவிகள். நான் பொருட்களைப் பார்க்கும்போது என் மனம் வெளியே சென்று செயல்படுகிறது. நான் கண்களை மூடிக் கொண்டு சிந்திப்பதாக வைத்துக்கொள்ளுங்கள். இப்போது அது வெளியே செல்லவில்லை; உள்ளேயே செயல்படுகிறது. ஆனால் இரண்டிலும் கருவிகள் செயல்படுகின்றன. நான் உங்களைப் பார்த்துக்கொண்டே உங்களுடன் பேசும்போது பொறி, புலன் இரண்டும் செயல்படுகின்றன. கண்களை மூடிக்கொண்டு சிந்திக்கும்போதோ, புலன்கள் மட்டும் செயல்படுகின்றன; பொறிகள் செயல்படுவதில்லை. இந்தக் கருவிகள் செயல்படாவிட்டால் எண்ணங்களே இல்லை.

ஏதாவது சின்னம் (Symbol) இல்லாமல் நீங்கள் சிந்திக்க முடியாது. பார்வையற்றோர்கூட ஏதாவது ஓர் உருவத்தை

ஆதாரமாகக் கொண்டுதான் சிந்திக்க முடியும். பொதுவாகக் காட்சிப் புலன்களும் கேள்விப் புலன்களுமே மிகச் சுறுசுறுப் பாக இருக்கின்றன.

புலன் என்னும் சொல் மூளையில் உள்ள நரம்பு மையத் தையே குறிக்கிறது என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். கண்களும் காதுகளும் வெளிக் கருவிகளே. புலன்கள் உள்ளே இருக்கின்றன. உட்கருவிகள் கெட்டுவிட்டால், கண் களும் காதுகளும் இருந்தாலும் நம்மால் பார்க்கவோ கேட்கவோ முடியாது. எனவே மனத்தை அடக்க வேண்டுமானால் முதலில் இந்தப் புலன்களை அடக்க வேண்டும். உள்ளேயோ வெளி யிலோ மனம் அலையாமல் அடக்குவதும், புலன்களைத் தங்கள் மையங்களிலேயே இருக்கச் செய்வதும்தான் சமம், தமம் என்று சொல்லப்படுகின்றன. மனம் வெளியே அலையாமல் அடக்கு வது சமம்; வெளிக்கருவிகளை அடக்குவது தமம்.

அடுத்தது உபரதி: புலன்களுக்கு விஷயமானவற்றைப்பற்றி நினைக்காமல் இருப்பது. நாம் பார்த்தவை, கேட்டவை, பார்க்க இருப்பவை, கேட்க இருப்பவை, உண்டவை, உண்ண இருப் பவை, நாம் வசித்த இடங்கள் என்று இப்படிப் புலன் விஷயங் களை நினைப்பதிலேயே நம் பொழுதில் பெரும்பகுதி கழிந்து விடுகிறது. இவற்றைப்பற்றி நினைப்பதிலும் பேசுவதிலும் நாம் நீண்ட நேரத்தைச் செலவிடுகிறோம். வேதாந்தியாக விரும்பு பவன் இந்தப் பழக்கத்தை ஒழித்துவிட வேண்டும்.

அடுத்த சாதனை வருகிறது (வேதாந்தியாவது மிகவும் கடினம்)—அது திதிட்சை. எல்லா சாதனைகளிலும் மிகக் கடின மானது இது. 'தீமையை எதிர்க்காதே' என்னும் பொறுமை லட்சியத்திற்குச் சற்றும் குறைந்ததல்ல இது.

இதற்குச் சிறிது விளக்கம் தேவை. நாம் துன்பங்களை எதிர்த்துப் போராடாமல் இருக்கலாம். ஆனால் அதேவேளை யில் அவற்றால் பெருந்துயரத்தை உணரலாம். ஒருவன் என்னைக் கண்டபடி ஏசுவதாக வைத்துக்கொள்வோம். நான் வெளிப் படையாக அவனை வெறுக்காமல் இருக்கலாம்; அவனைத் திருப்பி ஏசாமல் இருக்கலாம்; வெளிப்படையாகச் சீற்றம் காட்டாமல் உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளலாம். ஆனால் கோபமும் வெறுப்பும் என் உள்ளத்துள் இருக்கலாம். அவனைப் பற்றி என் மனம் இழிவாக நினைக்கலாம். தீமையை எதிர்க் காதிருப்பது என்பது இது அல்ல. கோபம் வெறுப்பு என்னும் உணர்ச்சியே என் மனத்தில் இருக்கக் கூடாது; தீங்கு செய்தவரை

எதிர்க்க வேண்டும் என்னும் எண்ணமே எழக் கூடாது. ஒன்றுமே நடக்காததுபோல் மனம் அவ்வளவு அமைதியாக இருக்க வேண்டும். இந்த நிலைக்கு என் மனம் வந்த பிறகுதான் நான் திதிட்சையை அடைந்தவன் ஆவேன்; அதற்குமுன் அல்ல.

எந்தத் துன்பத்தையும் தீமையையும் எதிர்க்க வேண்டும் அல்லது ஒழித்துவிட வேண்டும் என்னும் எண்ணமே சிறிதும் இல்லாமல், அதனால் மனத்தில் துக்கமோ எந்த வகையான கலக்கமோ இல்லாமல் துன்பங்களைப் பொறுக்கும் மனநிலை தான் திதிட்சை.

நான் ஒரு தீமையை எதிர்க்கவில்லை என்று வைத்துக் கொள்வோம். அதன் விளைவாக எனக்குப் பெருங்கேடு விளை கிறது. அப்பொழுதும் 'நான்' இதை எதிர்க்காமல் இருந்து விட்டேனே!' என்ற பச்சாதாபம் நெஞ்சில் தோன்றாமல் இருப் பதுதான் திதிட்சை. இந்த நிலையை மனம் அடையும்போது தான் திதிட்சையில் நிலைபெறுகிறது.

திதிட்சை பழக இந்தியர்கள் அசாதாரணமான செயல் களில் எல்லாம் ஈடுபடுகிறார்கள். சற்றும் பொருட்படுத்தாமல் மிகுந்த வெப்பத்தையும் குளிரையும் பொறுக்கப் பழகுகிறார்கள்; பனி பெய்தாலும் அவர்கள் கவலைப்படுவதில்லை. ஏனெனில் உடம்பை அவர்கள் பொருட்படுத்துவதில்லை. உடம்பு என்பது ஏதோ தங்களுக்குத் தொடர்பில்லாத வெளிப்பொருள்போல் அதனை அதன் போக்கில் விட்டுவிடுகிறார்கள்!

அடுத்த தகுதி சிரத்தை—நம்பிக்கை. தன் மதத்திலும் இறைவனிடமும் எல்லையற்ற நம்பிக்கை ஒருவனுக்கு இருக்க வேண்டும். நம்பிக்கை இல்லாதவன் ஞானியாக முடியாது. உலகில் கோடி பேர்களுள் ஒருவர்கூடக் கடவுளை நம்புவ தில்லை என்று ஒருமுறை பெரிய மகான் ஒருவர் என்னிடம் சொன்னார். 'ஏன் அப்படி?' என்று நான் கேட்டேன். அவர் சொன்னார்: 'இந்த அறையில் ஒரு திருடன் இருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அடுத்த அறையில் ஏராளம் பொன் உள்ளது. அது அவனுக்குத் தெரிந்துவிடுகிறது. அந்த இரண்டு அறைகளையும் பிரிக்கும் சுவர் மிகவும் மெல்லியது. அவனது மனநிலை எப்படி இருக்கும்?'

'அவனால் தூங்கவே முடியாது. அந்தப் பொன்னை அடை வது எப்படி என்றே அவன் மனம் இடையறாது வழி தேடிக் கொண்டிருக்கும். அவனால் வேறு ஒன்றையும் நினைக்க இயலாது' என்று நான் பதில் சொன்னேன்.

'அப்படியானால் கடவுள் உண்டு என்னும் நம்பிக்கை ஒருவனுக்கு இருக்குமானால், அந்தக் கடவுளை அடைய வேண்டும் என்னும் முயற்சியில் அவன் பைத்தியமாகிவிட மாட்டானா? எல்லையற்ற, அழிவற்ற பேரின்பம் தன் கைக்கு எட்டும் நிலையில் இருக்கிறது என்பதை அறிந்த ஒருவன் அதை அடைய வேண்டும் என்னும் முயற்சியில் பித்தனாகிவிட மாட்டானா?' என்று அவர் என்னைக் கேட்டார்.

கடவுள் உண்டு என்னும் உறுதியான நம்பிக்கையும் அவரை அடைய வேண்டும் என்னும் பேராவலும்தான் சிரத்தை.

இதற்கு அடுத்த படி சமாதானம்; மனத்தை இறைவனிடம் நிலை நிறுத்துவதற்கான இடைவிடாத பயிற்சி. எதையும் ஒரே நாளில் சாதித்துவிட முடியாது. மதம் முழுவதையும் ஒரு குளிகையாக்கி விழுங்கிவிட முடியாது. இடைவிடாமல் தீவிரமாக முயல்வதால்தான் முடியும். மெதுவான ஆனால் தொடர்ந்த பயிற்சியால்தான் மனத்தை அடக்க முடியும்.

அடுத்தபடி, முமுட்சுத்துவம்—முக்தி பெற வேண்டும் என்னும் திவிரமான ஆர்வம். எட்வின் ஆர்னால்ட் எழுதிய 'ஆசிய ஜோதி' (Light of Asia) என்ற நூலைப் படித்தவர்களுக்கு அந்த மொழிபெயர்ப்பு நூலில் வரும் புத்தரின் முதல் உபதேசம் நினைவிருக்கலாம்:

> உங்கள் துன்பத்திற்கு நீங்களே காரணம்; பிறர் அல்ல.
> நீங்கள் பிறப்பதற்கும் சாவதற்கும்
> வேறு யாரும் காரணம் அல்ல.
> நீங்கள் சம்சார சக்கரத்தில் சுழல்வதற்கும்,
> துக்கமும் துன்பமும் நிறைந்த
> அந்தச் சக்கரத்தின் ஆரக்கால்களைக்
> கட்டியணைத்து முத்தம் இடுவதற்கும்
> கண்ணீர்க் கடலில் உழல்வதற்கும்,
> அதன் மையமான சூன்யத்தில் அரைபடுவதற்கும்,
> நீங்களே காரணம்; வேறு யாரும் அல்ல.

நமது துன்பங்கள் அனைத்தும் நாமே ஆக்கிக் கொண்டவை. இதுதான் நம் இயற்கை. அறுபது ஆண்டுகள் சிறையில் அடைபட்டிருந்த சீனன் ஒருவனை ஒரு புதுச் சக்கரவர்த்தியின் முடிசூட்டு விழாவின்போது விடுதலை செய்தார்களாம். அவன் வெளியே வந்தவுடன், 'ஐயோ! என்னால் இந்த ஒளியைத் தாங்க முடியவில்லை. எலிகளும் சுண்டெலிகளும் நிறைந்த பயங்கரமான அந்த இருண்ட சிறைக்கு வெளியே என்னால்

வாழவே இயலாது! என்னைக் கொன்றுவிடுங்கள்; அல்லது மீண்டும் சிறைக்கு அனுப்பிவிடுங்கள்' என்று கதறினானாம். அவன் சிறைக்கே அனுப்பப்பட்டான். எல்லா மனிதர்களின் நிலையும் இதுவே. எல்லாவிதத் துன்பங்களின் நிலையும் இதுவே. எல்லாவிதத் துன்பங்களின் பின்னாலும் தலைதெறிக்க ஓடியே நமக்குப் பழக்கமாகிவிட்டது. எனவே அவற்றிலிருந்து விடுபட நாம் விரும்புவதில்லை. ஒவ்வொரு நாளும் இன்பத்தின் பின்னால் ஓடுகிறோம்; ஆனால் நாம் அதை அடையும்முன் அது மறைந்துவிடுகிறது; விரல் இடுக்குகள் வழியாக நழுவி விடுகிறது. என்றாலும் குருட்டு முட்டாள்களான நாம் இந்தப் பைத்தியக்கார ஓட்டத்தை நிறுத்துவதில்லை; அதே வழியில் தொடர்ந்து ஓடிக் கொண்டிருக்கிறோம்.

இந்தியாவில் பல இடங்களில் மாடுகள் செக்கிழுப்பதைக் காணலாம். மாடுகளின் கழுத்திலிருக்கும் நுகத்தடியிலிருந்து ஒரு சிறு குச்சி நீட்டிக்கொண்டிருக்கும். அந்தக் குச்சியின் நுனியில் ஒரு பிடி வைக்கோல் கட்டப்பட்டிருக்கும். நேராக மட்டுமே பார்க்கும்படி அந்த மாடுகளின் கண்கள் கட்டப்பட்டிருக்கும். மாடு தன்முன் தெரிகின்ற வைக்கோலைத் தின்னக் கழுத்தை நீட்டி நகர்கிறது. கூடவே அந்த வைக்கோலும் முன்னால் நகர்கிறது. மாடு தனக்கு எட்டாத அந்த வைக்கோலைப் பிடிக்கும் முயற்சியை விடாமல் நகர்ந்துநகர்ந்து சுற்றிச்சுற்றி வருகிறது. வைக்கோல் அதற்குக் கிடைப்பதில்லை. இந்த முயற்சியில் அது செக்கிலிடப்பட்டிருக்கும் எள்ளை ஆட்டி எண்ணெயாக்கிவிடுகிறது. இயற்கை, செல்வம், சொத்து, மனைவி, மக்கள் இவற்றின் அடிமைகளாகப் பிறந்துள்ள நாமும், ஒரு பிடி வைக்கோலை, வெறும் கானல்நீரைப் பின்பற்றி ஓடிக் கொண்டேயிருக்கிறோம். ஆனால் எதற்காக ஓடுகிறோமோ, அது கிடைக்காமல் பிறப்பு இறப்பு என்னும் முடிவில்லாத வட்டத்தில் சுழன்றுகொண்டே இருக்கிறோம்.

நமது பெரிய கனவு அன்பு. நாம் அன்பு செலுத்தப் போகிறோம்; அன்பைப் பெறப் போகிறோம்; துன்பமே இல்லாத இன்பத்தை நோக்கிப்போகிறோம் என்றெல்லாம் கனவு காண்கிறோம். ஆனால் நாம் இன்பத்தை நோக்கிச் செல்லும் அளவிற்கு இன்பம் நம்மை விட்டு விலகிப்போகிறது. இவ்வாறு தான் உலகம் செல்கிறது; சமுதாயம் செல்கிறது. வெறும் குருட்டு அடிமைகளான நாமும் நம்மை அறியாமலே இந்தப் பயனற்ற சுழற்சியில் சுழல்கிறோம். உங்கள் வாழ்க்கையையே

ஒவ்வொருவரும் ஆராய்ந்து பாருங்கள். இன்பத்தின் அளவு எவ்வளவு குறைந்தது, இந்தப் பயனற்ற கானல்நீர் வேட்டையில் ஒவ்வொருவரும் உண்மையில் பெற்ற லாபம் எவ்வளவு சிறியது என்பதை நீங்கள் உணர்வீர்கள்.

ஸோலனும் குரோசஸும் பற்றிய கதை[1] உங்களுக்குத் தெரியுமா? ஆசியாமைனர் மகிழ்ச்சி நிறைந்த இடம் என்று குரோசஸ் என்னும் அரசன் முனிவரான ஸோலனிடம் கூறினான். அதற்கு அந்த முனிவர், 'மகிழ்ச்சி நிறைந்த இடமா? அப்படி மகிழ்ச்சியாக இருக்கின்ற ஒருவனை நான் பார்க்கவில்லையே!' என்றார்.

'என்ன உளறுகிறீர்கள்! இந்த உலகத்திலேயே மகிழ்ச்சியுடன் இருப்பவன் நான், தெரியவில்லையா?' என்றான் குரோசஸ். 'உங்கள் வாழ்வின் இறுதிவரை பொறுங்கள்; அவசரப்பட வேண்டாம்' என்று கூறிவிட்டு முனிவர் சென்றார். நாளடைவில் பாரசீகர்கள் குரோசஸைப் போரில் வென்று அவனை உயிருடன் எரிக்குமாறு கட்டளையிட்டனர். சிதை அடுக்கப்பட்டது. பாவம், குரோசஸ் அதைப் பார்த்தவுடன், 'ஸோலன்! ஸோலன்!' என்று உரக்கக் கத்தினான். 'யாரை நினைத்துக் கதறுகிறாய்?' என்று பாரசீக மன்னன் அவனைக் கேட்டபோது குரோசஸ், தனக்கும் முனிவருக்கும் நடந்த உரையாடலைச் சொன்னான். அதைக் கேட்ட பாரசீக அரசன் அவனிடம் இரக்கம்கொண்டு அவன் உயிரைக் காப்பாற்றினான்.

நம் ஒவ்வொருவருடைய வாழ்க்கைக் கதையும் இதுவே. இயற்கை நம்மீது அவ்வளவு தூரம் ஆதிக்கம் செலுத்துகிறது. அது நம்மை உதைத்துத் தள்ளிக்கொண்டே இருக்கிறது. ஆயினும், நாம் வெறியுடன் அதைப் பின்தொடர்கிறோம். எவ்வளவு ஏமாற்றம் அடைந்தாலும் இன்பம் கிடைக்கும் என்றே நம்புகிறோம். இந்த நம்பிக்கை என்னும் கானல்நீர் நம்மைப் பைத்தியமாக்குகிறது. இவ்வுலகில் இன்பம் கிடைக்கும் என்று எப்போதும் நம்பியே நாம் வாழ்கிறோம்.

பழங்கால இந்தியாவில் ஓர் அரசன் இருந்தான். அவனிடம் நான்கு கேள்விகள் கேட்டார்கள்; 'இந்த உலகத்தில் மிகவும் அற்புதமானது எது?' என்பது முதற்கேள்வி. 'நம்பிக்கை' என்று விடை வந்தது. அது மிகவும் வியக்கத் தக்கது. இரவிலும் பகலிலும் நம்மைச் சுற்றிப் பலர் செத்துக் கொண்டேயிருப்பதை

1. குரோசஸ் (கி.மு. 560–546), ஸோலன் (கி.மு. 638–558) இருவரும் கிரேக்க வரலாற்றுப் பாத்திரங்கள்.

நாம் பார்க்கிறோம். ஆனாலும் நமக்கு மரணம் இல்லை என்று நினைக்கிறோம். நாமும் சாகத்தான் வேண்டும் என்றோ, நமக்கும் துன்பங்கள் நேரும் என்றோ நாம் நினைப்பதில்லை. ஏமாற்றங்களுக்கு எதிராக, தடைகளுக்கு எதிராக, நியாயங்களுக்கு எதிராகத் தனக்கு வெற்றி கிடைக்கும் என்றே ஒவ்வொருவனும் எண்ணுகிறான். உண்மையில் இதுவரை யாருமே இந்த உலகில் மகிழ்ச்சியாக இருந்ததில்லை. ஒரு மனிதனிடம் ஏராளம் சொத்து இருக்கும், சாப்பாட்டுக்குக் குறைவே இல்லை, ஆனால் அவனது ஜீரண சக்தி கெட்டிருக்கிறது; அவனால் எதையுமே சாப்பிட முடிவதில்லை. மற்றொருவனுக்கு அசுரத்தனமான ஜீரண சக்தி இருக்கிறது, ஆனால் உண்பதற்கு எதுவும் இல்லை அவனுக்கு. ஒருவன் பணக்காரனாக இருப்பான், அவனுக்கு மக்கட்பேறு இல்லை. மற்றொருவன் சோற்றுக்கே வழி இல்லாத பரம ஏழை, அவனுக்கு ஒரு பட்டாளம் குழந்தைகள் இருக்கின்றன. அவைகளை எப்படிக் காப்பாற்றுவது என்பதே அவனுக்குத் தெரிவதில்லை. ஏன் இப்படி? ஏனெனில் இன்பமும் துன்பமும் ஒரு நாணயத்தின் முன்னும் புறமும் போன்றவை. இன்பத்தை அனுபவிப்பவன் துன்பத்தையும் அனுபவித்தே தீர வேண்டும். துன்பம் இல்லாமல் இன்பம் மட்டும் நமக்குக் கிடைக்கும் என்ற முட்டாள்தனமான எண்ணம் நமக்கெல்லாம் இருக்கிறது. இந்த எண்ணம் நம்மீது செலுத்தும் அளவற்ற ஆதிக்கத்தால் நாம் புலன்களை அடக்கும் ஆற்றலையே இழந்து விட்டோம்.

நான் பாஸ்டனில் இருந்தபோது ஓர் இளைஞன் என்னிடம் வந்து ஒரு துண்டுக் காகிதத்தில் யாரோ ஒருவரின் பெயரையும் முகவரியையும் என்னிடம் கொடுத்தான். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது: 'வழி மட்டும் தெரிந்திருந்தால் இந்த உலகத்திலுள்ள செல்வமும் இன்பமும் அனைத்தும் உன்னுடையதுதான். நீ என்னிடம் வந்தால் அவற்றை அடையும் வழியை நான் சொல்லித் தருவேன். கட்டணம்: 5 டாலர்.' அவன் இதை என்னிடம் கொடுத்துவிட்டு, 'இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' என்று என்னைக் கேட்டான். 'இளைஞரே! இதை அச்சிடுவதற்கான பணம்கூட உம்மிடம் இல்லையே! அதற்கான பணத்தை முதலில் பெறுவதுதானே!' என்று நான் சொன்னேன். அதை அவன் புரிந்துகொள்ளவில்லை. சற்றும் சிரமமின்றித் தனக்குப் பெரும் செல்வமும் இன்பமும் கிடைக்கப்போகிறது என்ற மயக்கத்தில் இருந்தான் அவன்.

மனிதர்கள் இரண்டு எல்லைகளுக்குள் சிக்கிக் கொள் கிறார்கள்—எல்லாம் மலர்ச்சியாகவும் அழகாகவும் நல்லனவாக வுமே தோன்றுகின்ற உச்சக்கட்ட இன்பநோக்கு எல்லை ஒன்று. எல்லாம் தங்களுக்கு எதிராகவே தோன்றுவதான உச்சக்கட்ட துன்பநோக்கு எல்லை மற்றொன்று. மக்களுள் பெரும்பாலா னோர் ஏறக்குறைய வளர்ச்சி பெறாத மூளை உடையவர்களே. லட்சத்தில் ஒருவருக்கே மூளை சரியான வளர்ச்சி பெற்றிருக் கிறது. மற்றவர்கள் சிலவகைக் கிறுக்குக் குணங்கள் (Idiosyncrasies) உடையவர்களாகவோ அல்லது ஒரேஎண்ண வெறியர் களாகவோ (Monomaniacs) இருக்கிறார்கள்.

நாம் எதிலும் தீவிரவாதிகளாக இருப்பது இயற்கையே. நாம் நல்ல உடல்நலத்துடன் இளைஞர்களாக இருக்கும்போது, உலகின் செல்வம் எல்லாம் நம்முடையதே என்று நினைக் கிறோம். பின்னர் கால்பந்துபோல் சமுதாயத்தில் இங்கும் அங்கும் அடியும் அலைச்சலும்பட்டு, வயது முதிரும்போது ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு முணுமுணுக்கிறோம்; மற்றவர்களின் ஊக்கத்தையும் முயற்சியையும் தடுத்துக் கெடுக்க முயல்கிறோம்.

இன்பத்துடன் துன்பமும் அதுபோலவே துன்பத்துடன் இன்பமும் எப்போதும் கலந்தேதான் இருக்கும் என்பது ஒரு சிலருக்கே தெரிகிறது. துன்பம் வெறுப்பைத் தந்தே தீரும். ஏனெனில் இரண்டும் இரட்டைகள். துன்பத்தை நாடுவது மனிதனுடைய பெருமைக்குக் குறைவாவதுபோல் இன்பத்தை விரும்புவதும் அவனது பெருமைக்குக் குறைவானதுதான். பகுத்தறிவு படைத்தவர் இரண்டையுமே நாட மாட்டார். ஆட்டி வைக்கப்படும் நிலையிலிருந்து விடுபட ஏன் மனிதர்கள் முயல் வதில்லை? இப்போது சாட்டையால் அடிபடுகிறோம்; வலியால் அழத் தொடங்கியவுடன் இயற்கை நமக்கு ஒரு ரூபாய் கொடுக் கிறது. நாம் அழுகையை மறக்கிறோம். திரும்பவும் சாட்டையடி விழுகிறது; அழுகிறோம். இயற்கை ஒரு கட்டி வெல்லம் கொடுக் கிறது. திரும்பவும் அழுகையை மறந்து சிரிக்கத் தொடங்கு கிறோம்.

முனிவர் விடுதலையை விரும்புகிறார். புலனின்பப் பொருட்கள் எல்லாம் வீண் என்பதும் சுக துக்கங்களுக்கு முடி வில்லை என்பதும் அவருக்குத் தெரியும். இந்த உலகத்துச் செல்வந்தர்களுள் எத்தனையோ பேர் பழைய இன்பங்களில் நிறைவின்றிப் புதுப்புது இன்பங்களைத் தேடித் திரிகின்றனர்!

எல்லா இன்பங்களும் பழையவை ஆகிவிடுகின்றன. அவர்களுக்குப் புது இன்பங்கள் தேவைப்படுகின்றன. ஒவ்வொரு நாளும் அவர்கள் எவ்வளவு முட்டாள்தனமானவற்றைப் படைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியவில்லையா? இவையெல்லாம் ஒரு கணநேரம் நரம்புகளைத் தட்டி எழுப்புகின்றன, அவ்வளவுதான். இந்தக் கணநேர எழுச்சிக்குப் பின் தோன்றும் பிரதிச்செயல் எவ்வளவு துன்பம் தருவது!

மக்களில் பெரும்பாலானோர் ஆட்டு மந்தைகளே. முதலில் போகும் ஆடு, குழியில் தவறி விழுந்துவிட்டால், தொடர்ந்து செல்லும் ஆடுகளும் அதுபோலவே குழியில் விழுந்து கழுத்தை முறித்துக்கொள்ளும். அதுபோலவே மக்களும் சமுதாயத்தில் முக்கியமான ஒருவன் என்ன செய்கிறானோ அதையே பின் பற்றுகிறார்கள்; தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை.

உலக விஷயங்களின் வெறுமை புலப்படும்போது, இப்படி இயற்கையின் அடிமையாக, அது இழுத்த இழுப்புகெல்லாம் வளைந்து கொடுப்பது தவறு என்பதை மனிதன் உணர்கிறான்; இது வெறும் அடிமை வாழ்வு. ஒருவன் வந்து அவனிடம் ஓரிரு இனிய சொற்களைச் சொன்னால் புன்னகை புரிகிறான்; கடுஞ் சொற்களைச் சொல்லிவிட்டால் வருந்துகிறான். ஒரு வாய்ச் சோற்றுக்கும், ஒரு மூச்சளவு காற்றுக்கும், ஆடைகளுக்கும், தேசப்பற்றிற்கும், நாட்டிற்கும், பெயருக்கும், புகழுக்கும் அடிமையாக இருக்கிறான் மனிதன். இவ்வாறு அவன் அடிமைத்தனத்தில் சிக்குண்டு கிடக்கிறான். இந்தப் பற்றுக்களின் காரணமாக உண்மை மனிதன் உள்ளே புதைந்து கிடக்கிறான். வெறும் அடிமை உருவையே மனிதன் என்று நீங்கள் கூறுகிறீர்கள். தனது இந்த அடிமைத்தனத்தை மனிதன் உணரும்போது இதிலிருந்து விடுதலை பெறுவதற்குத் தீவிர ஆவல் எழுகிறது. செக்கச் சிவந்த நெருப்புத் தணல் ஒன்றை ஒருவனது தலையில் வைத்தால் அதைக் கீழே தள்ள அவன் எப்படிப் போராடுகிறான்! தான் இயற்கையின் அடிமை என்பதை உண்மையாக உணர்ந்த மனிதனும் விடுதலை பெற, முக்தி பெற அவ்வளவு தீவிரமாகப் போராடுவான்.

முமுட்சுத்துவம் அல்லது முக்தி பெறுவதற்கான ஆவல் என்பது என்ன என்பதை இப்போது பார்த்தோம். அடுத்த சாதனையும் கடினமானதுதான். நித்திய-அநித்திய விவேகம்—

உண்மையையும் உண்மை அல்லாததையும், அழிவற்றதையும் அழிவதையும் ஆராய்ந்து அறிவதே இந்தச் சாதனை.

இறைவன் மட்டுமே அழியாதவர், மற்றவை எல்லாம் அழியக் கூடியவை. எல்லாமே அழிகின்றன— தேவர்கள், மனிதர்கள், மிருகங்கள், பூமி, சூரியன், சந்திரன், விண்மீன்கள் எல்லாமே அழிகின்றன. எல்லாமே இடைவிடாமல் மாறிக் கொண்டே இருக்கின்றன. இன்று மலைகளாக இருப்பவை நேற்றுக் கடல்களாக இருந்தவை; அவை நாளை மீண்டும் கடல்கள் ஆகிவிடும். எல்லாமே மாறும் நிலையில்தான் இருக்கின்றன. பிரபஞ்சம் முழுவதும் ஒரே மாற்றப் பிண்டம்தான். ஆனால் மாற்றமே இல்லாத ஒருவர் இருக்கிறார்; அவர் கடவுள். நாம் அவரை நெருங்கும் அளவுக்கு நாம் மாறுவது குறையும்; இயற்கை நம்மீது செலுத்தும் ஆதிக்கமும் குறையும். நாம் அவரை அடைந்து அவருடன் நிற்கும்போது இயற்கையை வென்றுவிடுவோம்; இயற்கை என்னும் இந்தத் தோற்றத்தை அடக்கியாளும் ஆற்றல் நமக்கு வந்துவிடும். அது நம்மைப் பாதிக்கவே பாதிக்காது.

இந்தச் சாதனை நமக்குக் கைகூடிவிட்டால் நாம் இந்த உலகத்தில் பெற வேண்டுவது வேறு ஒன்றுமே இருக்காது. எல்லா அறிவும் நமக்குள்ளேயே இருக்கின்றன; எல்லா நிறைவும் ஏற்கனவே ஆன்மாவில் உள்ளன. ஆனால் இந்த நிறைவை இயற்கை மூடிக்கொண்டிருக்கிறது. ஆன்மாவின் இந்தத் தூய்மையை ஒன்றன்மேல் ஒன்றாக இயற்கையின் பல அடுக்குகள் மூடிக்கொண்டிருக்கின்றன. நாம் செய்ய வேண்டுவது என்ன? உண்மையில் நாம் நம் ஆன்மாவை முன்னேற்றுவது இல்லை. நிறைவான ஒன்றை வளர்ப்பது எப்படி? அதை மூடியிருக்கும் திரையை விலக்குகிறோம், அவ்வளவுதான். அதை மட்டும் செய்துவிட்டால் ஆன்மா தன் கலப்பற்ற தூய்மையுடனும், தன் இயல்பான சுதந்திரத்துடனும் தானாகவே வெளிப்படும்.

இப்பொழுதுதான் ஆராய்ச்சி தொடங்குகிறது. இந்தச் சாதனைகள் ஏன் தேவை? ஏனெனில் ஆன்மீக உணர்வு என்பது கண், காது அல்லது மூளையின் உதவியால் கிடைப்பதல்ல. எந்தச் சாஸ்திரமும் நம்மை ஆன்மீக உணர்வு உடையவர்களாக்கிவிட முடியாது. உலகின் எல்லா நூல்களையும் நாம் படிக்கலாம். ஆனாலும் ஆன்மீகம் கடவுள் என்பது பற்றியெல்லாம் கடுகளவுகூடப் புரிந்துகொண்டிருக்க மாட்டோம்.

வாழ்நாள் முழுவதும் பேசலாம். ஆயினும் ஓர் அடிகூட ஆன்மீகத்தில் முன்னேறியிருக்க மாட்டோம். உலகம் இதுவரை கண்ட அறிஞர்களுள் நாம் மிகச் சிறந்தவராக இருக்கலாம். ஆயினும், நாம் இறைவனின் அருகில்கூடச் சென்றிருக்க மாட்டோம். மாறாக, வெறும் அறிவுப் பயிற்சிகளின் காரணமாக, மத நம்பிக்கையே இல்லாதவர்கள் உருவாகியிருப்பதை நீங்கள் பார்க்கவில்லையா? இப்படி அறிவுப் பயிற்சிக்கு மட்டும் இடம் கொடுத்து, இதய உணர்ச்சிகள் விரிய இடமே கொடுக்காதது மேலை நாட்டுக் கல்விமுறையின் தீமைகளுள் ஒன்றாகும். இந்தக் கல்வியால் மனிதனின் சுயநலம் மேலும் பத்து மடங்கு பெருகுகிறது; கடைசியில் அவனை அழிவில் கொண்டு சேர்க்கிறது.

அறிவுக்கும் உணர்ச்சிக்கும் போராட்டம் ஏற்படும்போது உணர்ச்சியைப் பின்பற்றுங்கள். ஏனெனில் அறிவுக்கு ஒரே ஒரு நிலைதான் உண்டு. அது பகுத்தறிவு. அதற்குள்தான் அறிவு செயல்பட முடியும். அதைக் கடந்து செல்ல அதனால் இயலாது. அறிவு ஒருபோதும் எட்ட முடியாத மிகவுயர்ந்த நிலைக்கு உணர்ச்சி அல்லது இதயம்தான் ஒருவனைக் கொண்டுபோகும். இது அறிவிற்கும் அப்பாலுள்ள உள்ளுணர்வு என்னும் நிலை வரையில் செல்கிறது. அறிவு ஒருபோதும் உள்ளுணர்வு நிலையை அடைய இயலாது. இதய உணர்ச்சிதான் உள்ளொளி பெறும்போது உள்ளுணர்வு நிலையாகிறது. அறிவு நிறைந்த, ஆனால் இதய உணர்ச்சியற்ற ஒருவன் உள்ளுணர்வு பெறவே முடியாது. அன்புள்ளம் கொண்ட மனிதர்களில் இதயமே பேசுகிறது; அறிவால் பெற முடியாத உள்ளுணர்வு என்னும் கருவி இதயத்திற்குக் கிடைக்கிறது. வெளி உணர்வுகளுக்கெல்லாம் கருவியாக அறிவு விளங்குவதுபோல், உள்ளுணர்வின் கருவியாக இதயம் விளங்குகிறது.

கீழான நிலையில் உணர்ச்சி என்பது அறிவைவிடத் தாழ்ந்த கருவி ஆகும். பாமரன் ஒருவனுக்குப் பல விஷயங்கள் தெரியாவிட்டாலும் அவன் இயல்பாகவே உணர்ச்சி வசப்படுபவனாக இருக்கிறான். அவனைப் பேராசிரியர் ஒருவருடன் ஒப்பிட்டுப் பாருங்கள்! பேராசிரியரிடம்தான் எத்தனை அற்புதமான திறமைகள் உள்ளன! ஆனால் அவர் அறிவுக்கு அடிமையாக இருப்பவர். அவர் அறிஞராக இருக்கின்ற அதேவேளையில் சற்றும் இரக்கமற்ற கொடியவராகவும் இருக்க முடியும். ஆனால் உணர்ச்சிப் பெருக்குள்ள, இதயமுள்ள, மனிதன் இரக்கமற்றவனாக, கொடியவனாக ஒருபோதும் இருக்க முடியாது.

உணர்ச்சிவசப் படுகின்ற யாரும் கொடியவனாக இருந்ததே இல்லை. சரியான முறையில் பழக்கினால், இதயத்தை, உணர்ச்சியை, அறிவையும் கடந்து செல்லும் உயர்ந்த கருவி யாக்கி உள்ளுணர்வாக மாற்றிவிடலாம்.

முடிவில் மனிதன் அறிவுக்கு அப்பால் சென்றேயாக வேண்டும். மனிதன் பெற்றுள்ள அறிவும், உணர்கின்ற திறனும், பகுத்தறிவும், இதயமும் எல்லாமே இந்த உலகம் என்ற பாலை மும்முரமாகக் கடைந்தவண்ணம் இருக்கின்றன. பலநாள் கடை வதன் பலனாக வெண்ணெய் கிடைக்கிறது. இந்த வெண்ணெய் கடவுள். இதய உணர்ச்சி பெற்றவர்களுக்கு வெண்ணெய் கிடைக்கிறது. மிகுந்துள்ள மோர்தான் அறிவாளிகளுக்குக் கிடைக்கிறது.

இந்தச் சாதனைகளெல்லாம் இதயப் பயிற்சிச் சாதனைகள்; அன்பையும் இதயப் பண்பான எல்லையற்ற கருணையையும் வளர்ப்பதற்கான பயிற்சிகள். இறைவனை அடைவதற்கு ஒருவன் அறிஞனாகவோ கற்றறிவாளனாகவோ இருக்க வேண்டிய தில்லை. ஒருமுறை மகான் ஒருவர் என்னிடம், 'பிறரைக் கொல் வதற்குக் கத்திகளும் கேடயங்களும் இருக்க வேண்டும்; ஆனால் தற்கொலை செய்துகொள்ள ஓர் ஊசியே போதும். அது போலவே, பிறருக்கு உபதேசம் செய்யப் பேரறிவும் கல்வியும் அவசியம்; சுய அனுபவத்திற்கு அவை எதுவும் தேவையில்லை' என்று சொன்னார்.

நீங்கள் தூயவர்களா? நீங்கள் தூயவர்களானால் இறை வனை அடைவது நிச்சயம். 'தூய மனம் உடையவர்கள் பேறு பெற்றவர்கள்; அவர்கள் இறைவனைக் காண்பார்கள்!' உல கிலுள்ள விஞ்ஞானம் அனைத்தும் தெரிந்திருந்தாலும், நீங்கள் தூயவராக இல்லாவிட்டால், அது உங்களுக்கு உதவாது. நீங்கள் படிக்கும் புத்தகங்களிலேயே உங்கள் மனம் புதைந்திருக்கலாம், அதனால் பெரிய பயன் எதுவுமில்லை. இதயமே இறைவனை அடைய முடியும். எனவே இதயத்தையே பின்பற்றுங்கள். அறிவால் காண முடியாததையும் தூய இதயம் காண்கிறது; உள்ளுணர்வைப் பெறுகிறது. அறிவால் ஒருபோதும் அறிய இயலாதவற்றை இதயம் அறிகிறது.

தூய இதயத்திற்கும் அறிவிற்கும் முரண்பாடு இருக்கு மானால், இதயம் காட்டும் வழி பகுத்தறிவுக்கு முரணானதாக உங்களுக்குப் பட்டாலும் சரி, எப்போதும் இதயத்தையே பின் பற்றுங்கள். பிறருக்கு நன்மை செய்ய வேண்டும் என்று உங்கள்

இதயம் சொல்லும்போது, அப்படிச் செய்வது உலக நீதிக்கு உகந்ததல்ல என்று உங்கள் அறிவு சொல்லலாம். ஆயினும் இதயத்தையே பின்பற்றுங்கள். இதயத்தைப் பின்பற்றும்போது, அறிவைப் பின்பற்றுவதால் ஏற்படும் தவறுகளைவிடக் குறை வான தவறுகளே ஏற்படுவதைக் காண்பீர்கள். உண்மையைப் பிரதிபலிக்கும் சிறந்த கண்ணாடி தூய இதயமே. எனவே இந்தச் சாதனைகள் எல்லாம் இதயத் தூய்மைக்காகவே. இதயம் தூய்மை அடையும் அந்தக் கணமே அதில் எல்லா உண்மை களும் பளிச்சிடுகின்றன. நீ போதுமான அளவு தூயவனாக இருந்தால், பிரபஞ்சத்தின் உண்மைகள் அனைத்தும் உன் இதயத்தில் வெளிப்படும்.

அணுக்கள் பற்றிய உண்மைகள், நுட்பமான மூலப் பொருட்கள், மனிதர்களின் அரிய காட்சிகள் இவை எல்லாம் தொலை நோக்கி, உருப்பெருக்கி, சோதனைச்சாலை என்று எது பற்றியும் கேள்விப்படாத மனிதர்களால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கண்டுபிடிக்கப்பட்டுவிட்டன. அவர்கள் இவற்றைப்பற்றி எல்லாம் எப்படி அறிந்தார்கள்? இதயத்தின் மூலம்தான். அவர்கள் இதயத்தைத் தூய்மைப் படுத்தினார்கள். அதே பாதையை இன்றும் நாம் பின்பற்றலாம். உண்மையில் உலகத்திலுள்ள துன்பங்களைக் குறைக்க இதயப் பயிற்சியால்தான் முடியுமே தவிர, அறிவு வளர்ச்சியால் முடியாது.

அறிவு வளர்ச்சியால் நடந்த நன்மைதான் என்ன? நூற்றுக் கணக்கான விஞ்ஞானத் துறைகள் கண்டுபிடிக்கப்பட்டுள் ளன. அவற்றின் பலனாகச் சிலர் பலரை அடிமையாக்கி வாழ் கின்றனர், அவ்வளவுதான். அவசியமில்லாத புதிய தேவைகள் பெருகிவிட்டன. பணம் இருக்கிறதோ இல்லையோ, ஒவ் வோர் ஏழையும் இன்று இந்தப் புதுத் தேவைகளை நிறை வேற்றிக் கொள்ள விரும்புகிறான். இது நிறைவேறாவிட்டால் போராடுகிறான்; அந்தப் போராட்டத்திலேயே உயிரை விடுகிறான், இதுதான் அறிவு வளர்ச்சியின் பலன்! துன்பங்களை நீக்குவதான பிரச்சினையினுடைய தீர்வு அறிவின் மூலமாக அல்ல; இதயத்தின் மூலமாகத்தான் உள்ளது. அறிவு வளர்ச்சிக்குச் செலவான முயற்சிகளெல்லாம் மக்களை மேலும் தூயவர்களாக, மேலும் மென்மையானவர்களாக, மேலும் பொறுமையானவர்களாக மாற்றப் பயன்பட்டிருக்குமானால், இன்று நாம் காண்பதைவிட இந்த உலகத்தில் ஆயிரம் மடங்கு

இன்பங்கள் நிறைந்திருக்கும். என்றும் இதயத்தையே பண் படுத்துங்கள். இதயத்தின் மூலமாகவே இறைவன் பேசுகிறான், அறிவின் மூலமாகப் பேசுவது நீங்கள் மட்டுமே.

'உன் காலிலிருந்து செருப்பைக் கழற்றிவிடு. நீ நிற்பது புனித பூமி' என்று மோசஸுக்குக் கட்டளை இடப்பட்டதைப் பழைய ஏற்பாட்டில் படிக்கவில்லையா! சாஸ்திரங்களையும் அத்தகைய மரியாதையுடன் படிக்க வேண்டும். தூய மனத் துடனும் பணிவுடனும் நாடுபவனின் இதயம் திறக்கிறது. அவனுக்கு எல்லா கதவுகளும் திறக்கின்றன. அவன் உண்மையைக் காண்பான்.

அறிவைமட்டும் கொண்டு நீங்கள் ஆன்மீக உண்மைகளை அறிய விழைந்தால், சில அறிவு ஜாலங்களைப் பழகலாம்; சில அறிவுக் கொள்கைகளை உருவாக்கலாம். ஆனால் உண்மையை அறிய இயலாது. உண்மையின் முகம் அதிசயமானது—யார் அதைக் கண்டாலும் அது உண்மை என்ற உறுதி அவர்களுக்கு ஏற்பட்டுவிடும். சூரியனைக் காட்ட வேறு விளக்கு தேவை யில்லை, அதுவே சுயமாக ஒளிரக்கூடியது. உண்மைக்கு ஓர் ஆதாரம் தேவையானால், அந்த ஆதாரத்திற்கு எது ஆதாரம்? உண்மைக்குச் சாட்சி தேவையானால், அந்தச் சாட்சியை எந்தச் சாட்சியால் மெய்ப்பிப்பது? மரியாதையுடனும் பக்தியுடனும் நாம் அந்த உண்மையை அணுக வேண்டும். அப்போது உண்மை யையும் உண்மை அல்லாதவற்றையும் நமது இதயமே உறுதி யாகக் காட்டிவிடும்.

ஆன்மீகம் என்ற துறை நம் புலன்களைக் கடந்து உள்ளது, அறிவுக்கு அப்பால் உள்ளது. இறைவனைப் புலன்களால் உணர முடியாது. யாரும் கடவுளைத் தம் கண்களால் கண்டதில்லை; காணவும் இயலாது. அறிவாலும் யாரும் இறைவனை அறிந்த தில்லை. நீங்களும் சரி, நானும் சரி, யாரும் இறைவனை அறிந்த தில்லை. கடவுள் எங்கே இருக்கிறார்? ஆன்மீக தளம் எங்கே இருக்கிறது? புலன்களுக்கு அப்பால், அறிவுக்கு அப்பால், நாம் செயல்படுகின்ற பல்வேறு தளங்களுள் அறிவும் ஒன்று, அவ் வளவுதான். அறிவுத்தளத்தைக் கடந்து புலன்களையும் கடந்து, உங்கள் சொந்த மையத்தை நீங்கள் அணுக வேண்டும். அதனை அணுக அணுக நீங்கள் இறைவனைப் படிப்படியாக நெருங்கு வீர்கள்.

இறைவன் இருப்பதற்கு அத்தாட்சி என்ன? நேரடிக் காட்சி அதாவது பிரத்தியட்ச அனுபவம்தான். இந்தச் சுவர்

இருக்கிறது என்பதற்குச் சான்று, இதை நான் நேரில் காண்பதுதான். இப்படியே இறைவனையும் பல்லாயிரம்பேர் கண்டு அனுபவித்திருக்கின்றனர். அவரைக் காண விரும்பும் எல்லோரும் இப்படித்தான் கண்டு அனுபவிப்பார்கள். ஆனால் இந்தக் காட்சி புலன்-காட்சியே அல்ல. அது புலன்களைக் கடந்தது, புலனறிவைக் கடந்தது.

நம்மைப் புலன்களுக்கு அப்பால் அழைத்துச் செல்ல இந்தப் பயிற்சிகள் எல்லாம் அவசியம். முற்பிறவியின் பல்வேறு வினைப்பயன்கள், தளைகள்—இவற்றின் காரணமாக நாம் கீழே இழுக்கப்படுகிறோம். இந்தப் பயிற்சிகள் நம்மைத் தூய்மைப் படுத்தி, நம் பளுவைக் குறைக்கின்றன; தளைகள் எல்லாம் தாமே கழன்றுவிடுகின்றன. அப்போது நம்மை இழுத்துக் கட்டியிருக்கும் இந்தப் புலனாகிய சிறையிலிருந்து விடுபட்டு நாம் மேலே போவோம். அப்போது நாம் விழிப்பு, கனவு, தூக்கம் என்னும் மூன்று சாதாரண நிலைகளில் சிக்கிய மக்கள் காணாதவற்றை எல்லாம் காண்போம்; கேளாதவற்றை எல்லாம் கேட்போம்; உணராதவற்றை எல்லாம் உணர்வோம். அப்போது நாம் பேசும் மொழியே உலகுக்குப் புதிராக இருக்கும்; உலகம் அதைப் புரிந்துகொள்ளாது. ஏனெனில் புலனறிவைத் தவிர வேறொன்றும் உலக மக்களுக்குத் தெரியாது.

உண்மை ஆன்மீகம் என்பது புலனறிவை எல்லாம் கடந்து நிற்பதாகும். புலனறிவைக் கடந்து செல்லும் ஆற்றல் உலகத்தில் மறைந்திருக்கிறது. மிகச் சிறிய புழுகூட என்றாவது ஒருநாள் புலன்களைக் கடந்து சென்று, இறைவனை அடையும். எந்த உயிரும் தோல்வி அடைவதில்லை. தோல்வி என்பதே உலகத்தில் இல்லை. இந்த முயற்சியில் நூறுமுறை மனிதன் அடிபடலாம்; ஆயிரம் முறை வழுக்கி விழலாம். ஆனால் தானே கடவுள் என்பதை அவன் இறுதியில் உணரவே செய்வான். முன்னேறியவாறு நேர்கோட்டிலேயே செல்வது என்பது இல்லை என்பது நமக்குத் தெரியும். ஒவ்வோர் ஆன்மாவும் வட்டப்பாதை வழியேதான் நகருகிறது. எப்பொழுதாவது இந்த வட்டத்தை ஒவ்வொன்றும் முடித்தே தீர வேண்டும். எனவே ஓர் ஆன்மா எவ்வளவுதான் மெதுவாக நகர்ந்தாலும், மேல்நோக்க வேண்டிய ஒரு காலம் வந்தே தீரும். யாரும் தொலைந்து போவதில்லை. இறைவன் என்ற ஒரே பொது மையத்திலிருந்து தோன்றியவர்களே நாம் அனைவரும். எனவே இறைவனிட மிருந்து தோன்றி விளங்கும் ஒவ்வோர் உயிரும் அது எவ்வளவு

உயர்ந்ததானாலும் தாழ்ந்ததானாலும், முடிவில் எல்லா உயிர்களுக்கும் தந்தையான இறைவனை அடைந்துதான் தீர வேண்டும்.

'யாரிடமிருந்து எல்லாம் தோன்றுகின்றனவோ, யாருக்குள் யாவும் வாழ்கின்றனவோ, முடிவில் யாரை யாவும் அடைகின்றனவோ, அவரே கடவுள்.'[1]

1. யதோ வா இமானி பூதானி ஜாயந்தே, யேன ஜாதானி ஜீவந்தி ।
யத்ப்ரயந்த்யபிஸம் விசந்தி, தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம. ॥
—தைத்திரீய உபநிடதம், 3. 1. 1.

# 3. ஆன்மா: அதன் தளையும் முக்தியும்

8 ஜனவரி 1896

அத்வைத வேதாந்தத்தின் கருத்துப்படி, பிரபஞ்சத்தில் உண்மையாக இருப்பது ஒன்றே. அதைப் பிரம்மம் என்று அத்வைத வேதாந்தம் குறிக்கிறது. மற்ற எதுவுமே உண்மை யற்றவை, மாயையின் சக்தியால் பிரம்மத்திலிருந்து வெளிப்படு பவை, உருவாக்கப்படுபவை. அந்தப் பிரம்மத்தை மீண்டும் அடைவதே நமது குறிக்கோள். நாம் ஒவ்வொருவரும் அந்தப் பிரம்மமாகிய உண்மையும் இந்த மாயையும் கலந்த கலவைதான். மாயை அல்லது அறியாமையிலிருந்து நம்மால் விடுபட முடிந் தால், நாம் உண்மையில் யாரோ அதுவாக ஆவோம். இந்தத் தத்துவத்தின்படி, ஒவ்வொரு மனிதனும் மூன்று பகுதிகளால் ஆனவன்—உடல், அந்தக்கரணம் அல்லது மனம், அதன் பின்னால் ஆன்மா. இந்த ஆன்மாவின் புறப் போர்வை உடல், அகப் போர்வை மனம். உண்மையில் ஆன்மாவே எல்லாவற்றை யும் உணர்ந்து அனுபவிக்கிறது. உடலில் உறைவது ஆன்மாவே. இதுவே அந்தக்கரணமான மனத்தின்மூலம் உடலை இயக்கு கிறது.

மனித உடலில் ஜடப்பொருள் அல்லாதது இந்த ஆன்மா ஒன்றுதான். ஜடப்பொருளாக இல்லாததால் அது கூட்டுப் பொருளாக இருக்க முடியாது. கூட்டுப்பொருள் அல்லாததால் அது காரணகாரிய விதிகளுக்கு உட்பட்டதல்ல. ஆகவே அது அழிவற்றது. அழிவற்ற ஒன்றிற்கு ஆரம்பம் இருக்க முடியாது. ஏனென்றால் ஆரம்பம் உள்ள எதற்கும் முடிவும் இருந்தேயாக வேண்டும். அத்துடன், ஆன்மா உருவம் இல்லாதது என்றும் ஆகிறது. ஜடப்பொருள் அல்லாத எதற்கும் உருவம் இருக்க முடியாது. உருவம் உள்ள எதற்குமே ஆரம்பமும் முடிவும் இருந்தாக வேண்டும். ஆரம்பமும் முடிவும் இல்லாத உருவம் எதையும் யாருமே பார்த்திருக்க முடியாது. சக்தியும் ஜடப் பொருளும் இணைந்தே உருவம் உண்டாகிறது. இந்த நாற்காலிக் கென்று ஒரு தனிப்பட்ட உருவம் இருக்கிறது. அதாவது,

ஒரு குறிப்பிட்ட ஜடப்பொருளின்மீது ஒரு குறிப்பிட்ட அளவு சக்தி செயல்பட்டு அதை இந்தக் குறிப்பிட்ட உருவமாக்கியிருக்கிறது. பொருள், சக்தி இரண்டின் சேர்க்கையால் உண்டாவது தான் உருவம். இந்தச் சேர்க்கை நிரந்தரமானதாக இருக்க முடியாது. ஒவ்வொரு சேர்க்கையும் பிரிந்து போகின்ற காலம் வந்தே தீரும். எனவே எல்லா உருவங்களுக்கும் ஆரம்பமும் முடிவும் உண்டு.

நமது உடல் அழிந்துவிடும் என்பது நமக்குத் தெரியும். அதற்கு ஓர் ஆரம்பம் இருப்பதால் முடிவும் உண்டு. ஆனால் ஆன்மா உருவமற்றதாக இருப்பதால், ஆரம்பம், முடிவு என்ற விதிகளுக்கு அது கட்டுப்படுவதில்லை. அது எல்லையற்ற காலம் முதல் இருந்துவருகிறது. எப்படிக் காலம் நிரந்தரமானதோ அதேபோல் ஆன்மாவும் நிரந்தரமானது. இரண்டாவதாக, ஆன்மா எங்கும் நிறைந்ததாகத்தான் இருக்க வேண்டும். உருவமுள்ளதைத்தான் இடம் கட்டுப்படுத்துகிறது. உருவம் அற்றதை இடத்தால் கட்டுப்படுத்த முடியாது. ஆகவே அத்வைத வேதாந்தத்தின் கருத்துப்படி, உங்களுள், என்னுள் என்று எல்லோருள்ளேயும் உள்ள ஆன்மா எங்கும் நிறைந்தது. நாம் பூமியில் எப்படி இருக்கிறோமோ, அதேபோல் சூரியனிலும் இருக்கிறோம். நீங்கள் அமெரிக்காவில் இருக்கிறீர்கள், அதுபோலவே இங்கிலாந்திலும் இருக்கிறீர்கள். ஆனால் உடல் மற்றும் மனத்தின் மூலமே ஆன்மா செயல்படுகிறது. ஆகவே உடலும் மனமும் இருக்கும் இடத்திலெல்லாம் ஆன்மாவின் செயல் வெளிப்படையாகத் தெரிகிறது.

நாம் செய்யும் ஒவ்வொரு செயலும், நினைக்கும் ஒவ்வோர் எண்ணமும் நம் மனத்தில் ஒரு பதிவை உண்டாக்குகிறது. அதை சம்ஸ்கிருதத்தில் சம்ஸ்காரம் என்கிறார்கள். இந்தச் சம்ஸ்காரங்களின் கூட்டுப்பலனே 'குணம்' என்று சொல்லப்படுகின்ற மிகப் பெரும் சக்தி. ஒவ்வொரு மனிதனும் தன் குணத்தைத் தானே உருவாக்கிக் கொள்கிறான். அவன் தன் வாழ்க்கையில் மனத்தாலும் உடலாலும் செய்த செயல்களின் பலனே குணம். மரணத்திற்குப் பின், ஒரு மனிதன் போகும் இடத்திற்கு வழிகாட்டுவது, அவனது சம்ஸ்காரங்களின் கூட்டுப்பலனே. ஒருவன் இறக்கிறான். உடல் வீழ்ந்து பஞ்சபூதங்களுடன் கலந்துவிடுகிறது. அப்போது சம்ஸ்காரங்கள் அழிவதில்லை. அவை மனத்துடன் சேர்ந்திருக்கின்றன. மனம் மிக நுட்பமான பொருளால் ஆக்கப்பட்டிருப்பதால்,

அது அவ்வளவு விரைவில் அழிவதில்லை. ஏனென்றால் ஒரு பொருள் எவ்வளவு நுட்பமான பொருளால் ஆக்கப்பட்டிருக் கிறதோ அந்த அளவிற்கு அது நிலைத்ததாகவும் இருக்கிறது. காலப்போக்கில் மனமும் அழிந்து விடுகிறது. அதற்காகத்தான் நாம் போராடுகிறோம்.

இந்த வேளையில் எனக்குத் தோன்றும் சிறந்த உதாரணம் சுழல்காற்றைப் பற்றியதுதான். பல திசைகளிலிருந்து வரும் பல காற்றோட்டங்கள் ஓரிடத்தில் சந்தித்து, ஒன்றுசேர்ந்து, சுழல ஆரம்பிக்கின்றன. அவ்வாறு சுழலும்போது காகிதம், வைக் கோல் போன்றவற்றைத் தங்களுக்குள் இழுத்துக்கொண்டு புழுதிப்புயலாக மாறுகின்றன. வேறோரிடத்தில் அவற்றை உதறி விட்டு, வேறு பொருட்களை இழுத்துக் கொள்கின்றன. இவ் வாறே, தங்கள் வழியில் இருக்கும் பொருட்களைக்கொண்டு, பலவிதமான புழுதிப் படலங்களை உருவாக்கியவாறே செல் கின்றன. அதைப் போலவே, சம்ஸ்கிருதத்தில் பிராணன் என்று சொல்லப்படும் சக்திகள் ஒன்றுசேர்ந்து ஜடப்பொருளிலிருந்து உடலையும் மனத்தையும் உருவாக்குகின்றன. பிறகு உடல் விழும் வரை சுழன்று செல்கின்றன. விழுந்ததும், மறுபடியும் வேறு பொருட்களிலிருந்து வேறு உடலையும் மனத்தையும் உருவாக்கு கின்றன. இவ்வாறு தொடர்ந்து நடந்துகொண்டே இருக்கிறது. ஜடப்பொருள் இல்லாமல் சக்தியால் பயணம் செய்ய முடியாது. எனவே உடல் வீழ்ந்தவுடன் மனமாகிய பொருள் எஞ்சி நிற் கிறது. பிராணன் சம்ஸ்கார வடிவில் மனத்தின்மீது செயல் படுகிறது. பிறகு பிராணன் வேறோரிடத்திற்குப் போய் புதிய பொருட்களிலிருந்து புதிய உடலை உருவாக்கிக்கொண்டு மறு படியும் இதேபோல் செயல்படுகிறது. இப்படியே, தன்னுடைய சக்தி முழுவதும் செலவழியும்வரை, இடத்திற்கு இடம் மாறிக் கொண்டே இருக்கிறது. அதன்பிறகுதான் அது கீழே விழுகிறது. அதன் செயலும் முடிகிறது. ஆகவே மனம் அழிந்து தூள் தூளாகச் சிதறி, சம்ஸ்காரங்களையும் விட்டுவைக்காமல் போகும்போதுதான், நாம் பரிபூரண சுதந்திரம் அடைவோம். அதுவரை நாம் கட்டுப்பட்டேதான் இருப்போம். அதுவரை ஆன்மா மனத்தின் சுழற்சியால் மூடப்பட்டிருக்கிறது; தான் இடம்விட்டு இடம் மாறுவதாகக் கற்பனையும் செய்து கொள் கிறது. சுழல் அழிந்தவுடன், தான் எங்கும் நிறைந்திருப்பதை ஆன்மா உணர்கிறது. அது இப்போது, தான் விரும்பும் இடத் திற்குப் போக முடியும். அது முழுச் சுதந்திரம் பெற்றுவிடுகிறது;

தான் விரும்பும் அளவுக்கு, உடல்களையும் மனங்களையும் படைத்துக் கொள்ளும் சக்தி அதற்கு வந்துவிடுகிறது. ஆனால் அதுவரையில் அது சுழலுக்குள்தான் சிக்கியிருக்க வேண்டும். இந்தச் சுதந்திரம் அல்லது முக்தியாகிய குறிக்கோளை நோக்கியே நாமெல்லோரும் போய்க் கொண்டிருக்கிறோம்.

இந்த அறையில் ஒரு பந்து இருப்பதாக வைத்துக் கொள் வோம். நாம் ஒவ்வொருவரும் ஒரு மட்டையால் அந்தப் பந்தைப் பல திசைகளிலிருந்தும் அடிக்கிறோம். அது அங்கு மிங்கும் ஓடி, கடைசியில் அறையை விட்டு வெளியே பறந்து செல்கிறது. அது எந்தத் திசையில், எவ்வளவு சக்தியோடு வெளியே போகும் என்பது, இந்த அறையில் அந்தப் பந்தின்மேல் செயல்பட்ட சக்திகளுக்கு ஏற்பவே அமையும். நாம் கொடுத்த ஒவ்வோர் அடியும் அதன் பலனைக் கொடுக்கும். மனத்தாலும் உடலாலும் நாம் செய்யும் செயல்கள் ஒவ்வொன்றும் அந்த அடியைப் போன்றவை. மனித மனம்தான் அடிபடும் அந்தப் பந்து. உலகமாகிய இந்த அறையில் நாம் அடைபட்டு அடி பட்டுக் கொண்டிருக்கிறோம். இந்த உலகத்திலிருந்து நாம் விடு படுவது, நாம் வாங்கும் அடிகளின் சக்தியைப் பொறுத்தே இருக்கிறது. மேலே சொன்ன இரண்டு நிகழ்ச்சிகளிலுமே, பந்து வாங்கும் அடிகளே அதன் வேகத்தையும் திசையையும் நிர்ணயிக்கின்றன. ஆகவே இந்த உலகில் நாம் செய்யும் செயல்களே நமது அடுத்த பிறவியை நிர்ணயிக்கின்றன.

நம்முடைய இப்போதைய பிறவி முற்பிறவியின் பலனே. இதோ ஓர் உதாரணம்! நான் உங்களிடம் ஒரு முடிவில்லாத சங்கிலித் தொடரைக் கொடுப்பதாகவும், அதில் கறுப்பு மற்றும் வெள்ளை வளையங்கள் ஒன்றன்பின் ஒன்றாக, மாறிமாறி அமைந்திருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அந்தச் சங்கிலிக்கு ஆரம்பமோ முடிவோ இல்லை. அந்தச் சங்கிலியின் இயல்பைப்பற்றி நான் உங்களைக் கேட்கிறேன். இரண்டு முனை களிலும் சங்கிலி முடிவில்லாததாக இருப்பதால், அதன் இயல்பைக் கண்டு பிடிப்பதில் முதலில் உங்களுக்குச் சிறிது சிரமம் இருக்கும். ஆனால் அது ஒரு சங்கிலி என்பதை நீங்கள் மெதுவாகத் தெரிந்துகொள்வீர்கள். இந்த எல்லையற்ற சங்கிலி மாறிமாறி, கறுப்பு, வெள்ளை வளையங்களால் ஆனது, இந்த வளையங்களை எல்லையில்லாமல் பொருத்தியதால் ஆனதே இந்தச் சங்கிலி என்பதையும் கண்டுபிடித்து விடுவீர்கள். சங்கிலி யிலுள்ள ஒரு வளையத்தின் இயல்பு தெரிந்துவிட்டால்,

முழுச்சங்கிலியின் இயல்பும் தெரிந்துவிடும். ஏனெனில் முற்றிலும் ஒரேவகையான அமைப்பைத் திரும்பத்திரும்பக் கொண்டதே இந்தச் சங்கிலி.

நமது முற்பிறவி, இந்தப் பிறவி, மறுபிறவி எல்லாம் சேர்ந்து, தொடக்கமும் முடிவும் இல்லாத ஒரு சங்கிலித் தொடரைப் போல் இருக்கிறது. அந்தச் சங்கிலியின் ஒவ்வொரு வளையமும் பிறப்பு, இறப்புக்கு இடையிலுள்ள ஒரு பிறவியாகும். அந்த இணைப்பின் இரண்டு முனைகளே பிறப்பும் இறப்பும் ஆகும். இந்தப் பிறவியில் நம்முடைய இயல்பும் செயல்களும், சிறிது மாறுபாடுகளுடன் மீண்டும்மீண்டும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. இந்த இரண்டு வளையங்களின் இயல்பையும் நாம் அறிந்துவிட்டால், நாம் இந்த உலகத்தில் கடந்துசெல்ல வேண்டிய வழிகளைப் பற்றியெல்லாம் அறிந்து கொள்ளலாம். ஆகவே நாம் கடந்துவந்த வழிகளே இப்போது நாம் கடந்து கொண்டிருக்கும் வழியைத் தீர்மானித்துள்ளன. அதைப்போல் நம்முடைய செயல்களாலேயே நாம் இந்த உலகத்தில் இருக்கிறோம். நாம் இந்த உலகத்தை விட்டு வெளியே போகும்போது, நம் செயல்களின் கூட்டுப்பலனை நம்மோடு எடுத்துச் செல்வதைப்போல், இந்தப் பிறவியை எடுக்கும்போது, முற்பிறவியில் செய்த செயல்களின் கூட்டுப் பலனோடு இவ்வுலகிற்குள் வருகிறோம். நம்மை எது வெளியே எடுத்துச் செல்கிறதோ, அதுவேதான் நம்மை உள்ளேயும் கொண்டுவருகிறது.

நம்மைப் பிறக்கச் செய்வது எது? நமது முன்வினைகள். நம்மை இவ்வுலகிலிருந்து வெளியே கொண்டுபோவது எது? இங்கே நாம் செய்யும் செயல்கள். இவ்வாறே தொடர்ந்து நடைபெறுகிறது. பட்டுப்புழு தன் வாயிலிருந்து வெளிப்படும் நூலைக்கொண்டே கூட்டைப் பின்னி, அதற்குள் அகப்பட்டுக் கொள்வதைப்போல் நாமும் நமது செயல்களாகிய வலையை நாமே பின்னி அதற்குள் சிக்கிக் கொண்டிருக்கிறோம். காரண காரிய விதியை நாம் தொடங்கி வைத்துவிட்டோம். அதிலிருந்து விடுபடுவது நமக்கு மிகவும் சிரமமாக இருக்கிறது. சக்கரத்தைச் சுழற்றிவிட்டு விட்டோம். இப்போது அதுவே நம்மை நசுக்குகிறது. ஆகவே, நல்லதும் கெட்டதும் ஆகிய நம் செயல்களால் நாம் ஒருபோலவே கட்டுப்பட்டிருக்கிறோம் என்று இந்தத் தத்துவம் நமக்குப் போதிக்கிறது.

ஆன்மாவிற்குப் போக்கும் வரவும் இல்லை. அதற்குப் பிறப்போ இறப்போ இல்லை. இயற்கைதான் ஆன்மாவின்

முன்னால் இயங்கிக் கொண்டிருக்கிறது. இந்த இயக்கத்தின் பிரதிபலிப்பு ஆன்மாவில் தெரிகிறது. ஆன்மா, அறியாமை காரணமாக, தான் இயங்குவதாகவும் இயற்கை நிலையாக இருப்பதாகவும் நினைத்துக் கொள்கிறது. அவ்வாறு நினைக்கும் போது அது பந்தப்பட்டுவிடுகிறது. தான் இயக்கமற்றிருப்பதை யும், எங்கும் நிறைந்திருப்பதையும் அது உணரும்போது சுதந் திரம் அடைகிறது. தளையில் கட்டுண்ட ஆன்மாதான் ஜீவன். ஆகவே ஆன்மா வருகிறது போகிறது என்றெல்லாம் சொல்வது, சுலபமாகப் புரிந்துகொள்வதற்காகத்தான். சூரியன் பூமியைச் சுற்றுவதில்லை என்பதே உண்மையானாலும், வான இயலைப் படிக்கும்போது அது பூமியைச் சுற்றுவதாகப் பாவித்துக் கொள் வதைப் போன்றதே இது. அதுபோலவே ஜீவாத்மா உயர்ந்த நிலைகளுக்கோ தாழ்ந்த நிலைகளுக்கோ செல்கிறது. மறுபிறவி பற்றிய பிரபலமான விதி இது. படைப்பு அனைத்திற்கும் இந்த விதி பொருந்தும்.

மனிதன் மிருகத்திலிருந்து தோன்றினான் என்ற கருத்தைப் பயங்கரமானதாக நினைக்கிறார்கள் இந்த நாட்டு மக்கள். ஏன்? கோடிக்கணக்கான இந்த மிருகங்களின் கதி என்ன? அவை என்ன பயனற்றவையா? நமக்கு ஆன்மா உண்டு என்றால் அவற்றிற்கும் உண்டு. அவற்றிற்கு ஆன்மா இல்லை என்றால் நமக்கும் இல்லை. மனிதனுக்கு மட்டுமே ஆன்மா உண்டு, மிருகங்களுக்கு இல்லை என்று சொல்வது அபத்தம். மிருகங் களைவிடக் கேவலமான மனிதர்களை நான் பார்த்திருக்கிறேன்.

சம்ஸ்காரங்களின் பலனுக்கு ஏற்ப, ஆன்மா உயர்ந்த மற்றும் தாழ்ந்த பிறவிகளை எடுத்துக்கொண்டே இருக்கிறது; ஒன்றி லிருந்து மற்றொன்றிற்கு மாறுகிறது. மனிதன் என்ற உயர்ந்த பிறவியில்தான் அது சுதந்திரத்தை அடைய முடியும். தேவதை களைவிட மனித நிலைதான் உயர்ந்தது. எல்லா பிறவிகளிலும் உயர்ந்தது மனிதப் பிறவி. மனிதப் பிறவியில் மட்டுமே ஜீவன் சுதந்திரம் பெற முடிவதால், மனிதன்தான் படைப்புக்களிலேயே மிகச் சிறந்தவன்.

பிரபஞ்சம் முழுவதுமே பிரம்மத்தில்தான் இருந்தது. அதி லிருந்து வெளிப்பட்டது. அது எங்கிருந்து வெளிப்பட்டதோ, அதற்குள் அடங்குவதற்காகத்தான் இயங்கிக் கொண்டிருக்கிறது. டைனமோவிலிருந்து வெளிப்படும் மின்சக்தி ஒரு சுற்றை முடித்துக்கொண்டு, மீண்டும் டைனமோவில் அடங்குவது போன்றதே இது. ஆன்மாவின் விஷயமும் இப்படித்தான்.

அது பிரம்மத்திலிருந்து வெளிப்பட்டு, பல்வேறு வகையான தாவரங்களாக, மிருகங்களாகப் பிறந்து, கடைசியில் மனிதனாகப் பிறக்கிறது. மனிதப் பிறவிதான் பிரம்மத்தை மிகவும் நெருங்கிய நிலையாகும். நாம் எந்தப் பிரம்மத்திலிருந்து வெளிப் பட்டோமோ அந்தப் பிரம்மத்தை அடைவதற்கான முயற்சிதான் வாழ்க்கையின் பெரிய போராட்டம். நாம் அதை அறிந்திருக் கிறோமா இல்லையா என்பது பெரிய விஷயம் அல்ல. பிரபஞ்சத்தில் நாம் காணும் எல்லா இயக்கங்களும், தாதுப் பொருட்கள், தாவரங்கள், மிருகங்கள் என்று எல்லாவற்றிலும் நாம் காணும் போராட்டங்களும் மையத்திற்குத் திரும்பிச் சென்று அமைதி பெறுவதற்கான முயற்சிகளே.

முதலில் ஒரு சமநிலை இருந்தது. அது கலைந்துவிட்டது. எல்லா பகுதிகளும் எல்லா அணுக்களும் எல்லா மூலக்கூறு களும் இழந்த தங்கள் சமநிலையைத் திரும்பப் பெறவே போராடிக் கொண்டிருக்கின்றன. இந்தப் போராட்டத்தில், அவை ஒன்றுசேர்ந்து, பல்வேறு உருவங்களைப் படைத்து, இயற்கை என்றும் இந்த அற்புதக் கோலத்தை விரிக்கின்றன. தாவர உலகிலும் மிருக உலகிலும் எங்கும் உள்ள போராட்டங் கள், போட்டிகள், சமுதாயப் போராட்டங்கள், போர்கள் எல் லாமே, அந்தச் சமநிலையைத் திரும்ப அடைவதற்கான இடை யீடற்ற போராட்டத்தின் வெளிப்பாடுகளே.

பிறப்பிலிருந்து இறப்புவரையிலான இந்த வாழ்க்கை, இந்தப் பயணம்தான் சம்ஸ்கிருதத்தில் சம்சாரம் அதாவது பிறப்பு-இறப்புச் சுழல் எனப்படுகிறது. இந்தச் சுழலில் சுழன்று கொண்டிருக்கும் படைப்புகள் எல்லாமே, என்றோ ஒருநாள் நிச்சயமாகச் சுதந்திரம் அடைந்தே தீரும். எல்லோரும் சுதந்திரம் அடைவோம் என்றால் அதற்காக நாம் ஏன் போராட வேண்டும்? எல்லோரும் சுதந்திரம் அடைந்தே தீருவோம் என்றால் அமைதி யாக அமர்ந்து, போராடாமல் காத்திருக்கலாமே! இன்றோ நாளையோ எல்லோரும் சுதந்திரம் அடைந்தே தீர்வோம் என்பது உண்மைதான். யாரும் இதற்கு விதிவிலக்கல்ல. எதுவும் அழிய முடியாது. எல்லாமே மேலே வரத்தான் வேண்டும். அப்படியானால் நமது போராட்டத்தின் பயன் என்ன? முதலில், போராட்டம்தான் நம்மை மையத்திற்குக் கொண்டு செல்லும் ஒரே வழி. இரண்டாவதாக, நாம் ஏன் போராடுகிறோம் என்பதே நமக்குத் தெரியாது. நாம் போராட வேண்டும், அவ்வளவுதான். 'ஆயிரக்கணக்கானோரில் ஏதோ சிலருக்கே தாங்கள் சுதந்திரம்

அடைந்துவிடுவோம் என்ற விழிப்புணர்ச்சி ஏற்படுகிறது.'[1] மிகப் பெரும்பாலோர் லௌகிக விஷயங்களிலேயே திருப்தி அடைகின்றனர். சிலருக்குத்தான் தங்கள் சொந்த இடத்திற்குத் திரும்பிப் போக வேண்டும், இந்த விளையாட்டு போதும் என்ற விழிப்புணர்ச்சி உண்டாகிறது. இவர்கள் உணர்வுபூர்வமாகப் போராடுகிறார்கள்; மற்றவர்கள் உணராமலே போராடு கிறார்கள்.

வேதாந்தத் தத்துவத்தின் முதலும் முடிவுமாக உள்ளது 'உலகைத் துறந்துவிடு'; உண்மையற்றதை விலக்கி, உண்மையை ஏற்றுக்கொள் என்பதுதான். 'உலகத்தைவிட்டு வெளியேறி எல் லாவற்றிற்கும் மையத்தை அடைய ஏன் முயல வேண்டும்? நாம் எல்லோரும் கடவுளிடமிருந்து தோன்றியவர்களாகவே வைத் துக் கொள்வோம். ஆனால் இந்த உலகம் இன்பமயமானதாகவும் விரும்பத்தக்கதாகவும் இருக்கிறதே! எனவே மேன்மேலும் உலக இன்பங்களை ஏன் நாடக் கூடாது? இதிலிருந்து வெளியே போக ஏன் முயல வேண்டும்?' என்று லௌகிகர்கள் கேட்கலாம். 'நாளுக்கு நாள் உலகில் காணும் அற்புத முன்னேற்றங்களைப் பாருங்கள். என்னென்ன வசதிகள் தினந்தோறும் உருவாக்கப் படுகின்றன! இது மிகவும் இன்பம் தரக்கூடியதாக இருக்கிறது. இதைவிட்டு வெளியே போய், இது அல்லாத வேறொன்றை அடைய ஏன் முயல வேண்டும்?' என்று அவர்கள் கேட் கிறார்கள்.

அதற்கு விடை இதோ: இந்த உலகம் நிச்சயமாக அழிந்து விடும்; தூள்தூளாகச் சிதறிவிடும்; பலமுறை நாம் திரும்பத் திரும்ப ஒரேமாதிரி இன்பங்களை அனுபவித்திருக்கிறோம். நாம் பார்க்கும் எல்லா உருவங்களும் மறுபடியும் மறுபடியும் வெளிப் பட்டுக்கொண்டே இருப்பவைதாம். நாம் வாழும் இந்த உலக மும் இதற்கு முன் பலமுறை இங்கே இருந்திருக்கிறது. நான் இங்கே உங்கள் முன், இதற்கு முன்பு பலமுறைகள் பேசி யிருக்கிறேன். இது இவ்வாறுதான் இருக்க வேண்டும் என்பதை நீங்கள் தெரிந்துகொள்வீர்கள். நீங்கள் இப்போது கேட்டுக் கொண்டிருப்பதுபோல் இதற்கு முன் பலமுறை கேட்டிருக் கிறீர்கள். இன்னும் பலமுறை இப்படியேதான் நிகழும். ஆன்மாக்கள் என்றும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கின்றன.

---

1. மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித் யததி ஸித்தயே।

—கீதை, 7.3.

உடல்கள் மட்டுமே அழிந்து, மறுபடியும் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. இரண்டாவதாக, இந்த விஷயங்கள், குறிப்பிட்ட கால இடைவெளியில் மீண்டும்மீண்டும் நடந்துகொண்டே இருக்கின்றன. நம்மிடம் மூன்று நான்கு பகடைக் காய்கள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அவற்றை உருட்டினால், 5,4,3,2 என்று விழுவதாகவும் வைத்துக் கொள்வோம். உருட்டிக் கொண்டே இருந்தால், இந்தச் சேர்க்கை மறுபடியும் எப் போதாவது வந்தே தீரும். உருட்டிக்கொண்டே இருங்கள். எவ் வளவு முறை உருட்டிய பிறகு இந்தச் சேர்க்கை மறுபடியும் வரும் என்று கணிக்க முடியாது. இதுதான் தற்செயல் விதி (Law of Chance).

ஆன்மாக்கள் மற்றும் அவற்றோடு தொடர்பு உடையவை களின் விஷயமும் இதுதான். கால வித்தியாசம் எவ்வளவு இருந்தாலும், ஒரேமாதிரி சேர்க்கைகளும் அழிவுகளும், மறு படியும்மறுபடியும் தோன்றிக்கொண்டேதான் இருக்கும். அதே பிறவி, அதேபோல் உண்பதும், உறங்குவதும், பிறகு அதேபோன்ற சாவு– இவை சுழன்றுசுழன்று வந்துகொண்டே இருக்கின்றன. உலகிலுள்ள இன்பங்களைவிட உயர்ந்த எதுவும் இருப்பதாக சிலர் நினைப்பதே இல்லை. ஆனால் உயர் நிலை களை அடைய விரும்புபவர்கள், புலனின்பங்களே எல்லாம் என்று நினைப்பதில்லை. அவை அந்த உயர்ந்த நிலைக்குப் போகும் வழியில் இருப்பவை என்றுதான் அவர்கள் நினைக் கிறார்கள்.

சாதாரணமான புழுவிலிருந்து மனிதன் வரையிலுள்ள எல்லா உருவங்களுமே, முன்பு நாம் கண்டதுபோல் தொடர்ந்து சுற்றிக் கொண்டேயிருக்கும் ரங்கராட்டினத்திலுள்ள தொட் டில்களைப் போன்றவை. உட்காருபவர்கள்தாம் மாறுகிறார்கள். ஒரு மனிதன் ஒரு தொட்டிலில் உட்கார்ந்து, சுற்றிவிட்டு, இறங்குகிறான். ஆனால் ரங்கராட்டினம் சுற்றிக்கொண்டே இருக்கிறது. ஓர் ஆன்மா ஓர் உருவத்தை எடுக்கிறது; அதில் சில காலம் வசிக்கிறது; பின்னர் அதை விட்டுவிட்டு, வேறு உருவங்களுக்குத் தாவுகிறது. ராட்டினத்தை விட்டு விடுதலை பெற்று வெளியே வரும்வரை இந்தச் சுழற்சி நடந்துகொண்டே இருக்கிறது.

மனித வாழ்க்கையின் இறந்தகாலம் மற்றும் எதிர்காலங் களை அறிந்து சொல்லும் வியக்கத்தக்க சக்தியுள்ளவர்கள் எல்லா நாட்டிலும் எல்லா காலங்களிலும் இருந்திருப்பதாகத்

தெரிகிறது. ஆன்மா இயல்பாகவே சுதந்திரமானது. ஆன்ம சுதந்திரம் அடைந்தவர்களிடம், ஆன்மா காரணகாரிய விதி களிலிருந்து விடுபட்டு, தன் சுதந்திரத்தை உறுதிப்படுத்திக் கொள்வதிலிருந்து இது தெரியவருகிறது. ஆனாலும் ஜீவாத்மா என்ற நிலையில் இருக்கும்வரையில் அதன் செயல்பாடுகள் பொதுவாக காரணகாரிய விதிகளைச் சார்ந்தே இருக்கின்றன. ஆகவே காரணகாரிய விதிகளின் பலனை முன்கூட்டியே அறி யும் திறன் உள்ளவர்களுக்கு, இறந்தகாலம் மற்றும் எதிர்காலங் களைப்பற்றித் துல்லியமாகச் சொல்ல முடிகிறது.

ஆசைகளும் தேவைகளும் இருக்கிறது என்றால் அது முழுமையடையாத நிலையையே குறிக்கிறது. நிறைநிலையும் சுதந்திரமும் அடைந்த எதற்கும் ஆசை இருக்க முடியாது. கடவுள் எதையும் விரும்ப முடியாது. விரும்பினால் அவர் கடவுளாக இருக்க முடியாது; அவர் நிறைநிலையை அடை யாதவராகத்தான் இருப்பார். கடவுள் இதனை விரும்புகிறார், அதனை விரும்புகிறார், கோபம் அடைகிறார், மகிழ்ச்சி கொள் கிறார் என்றெல்லாம் சொல்வது வெறும் குழந்தைப் பேச்சு. அதற்குப் பொருளே இல்லை. ஆகவேதான் எதற்கும் ஆசைப் படாதீர்கள்; 'ஆசைகளையெல்லாம் துறந்துவிட்டு, பரிபூரணத் திருப்தியோடு இருங்கள்' என்று எல்லா மகான்களும் போதித் திருக்கிறார்கள்.

ஒரு குழந்தை இந்த உலகத்தில் பிறக்கும்போது, ஊர்ந்து கொண்டும் பல் இல்லாமலும் பிறக்கிறது. அவன் கிழவனாகி இறக்கும்போதும் ஊர்ந்துகொண்டும் பல் இல்லாமலும் உலகை விட்டு வெளியேறுகிறான். இரண்டு எல்லைகளும் ஒரேமாதிரி இருக்கின்றன. ஆனால் குழந்தைக்கு வாழ்க்கை அனுபவம் இல்லை. கிழவனோ வாழ்ந்து அனுபவித்து முடித்து விட்டான். ஆகாசத்தின் அதிர்வுகள் மிகவும் குறைவாக இருக் கும்போது நமக்கு வெளிச்சம் தெரிவதில்லை, நாம் இருளில் இருக்கிறோம். அதிர்வுகள் மிகவும் அதிகமாக இருக்கும்போதும் இருள்தான் இருக்கிறது. இரண்டு எல்லைகளும் பொதுவாக ஒன்று போலவே தெரிகிறது. ஆனால் இரண்டிற்கும் இடையே இரு துருவங்களுக்கிடையே உள்ள தூரம் உள்ளது. சுவருக்கு ஆசை இல்லை; நிறைநிலை பெற்ற மனிதனுக்கும் ஆசை இல்லை. சுவருக்கு, ஆசைப்படுவதற்கான அறிவு இல்லை. நிறை நிலை பெற்ற மனிதனுக்கோ ஆசைப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஆசையே இல்லாத முட்டாள்கள் உலகில் இருக்கிறார்கள்.

அதற்குக் காரணம், அவர்கள் மூளையிலுள்ள குறைபாடுதான். அதேவேளையில் ஆசையற்ற நிலையே மிக உயர்ந்த நிலை. ஆனால் இரண்டும் ஒரே நிலையின் எதிர் துருவங்கள், ஒன்று மிருக நிலைக்கு அருகில் உள்ளது, மற்றது தெய்வ நிலைக்கு அருகில் உள்ளது.

# 4. ஆன்மா, இயற்கை, இறைவன்

15 ஜனவரி, 1896

வேதாந்தத் தத்துவத்தின்படி மனிதன் மூன்று பொருட்களால் ஆனவன் என்று கூறலாம். அனைத்திற்கும் வெளியே அவனது தூல வடிவமான உடல் உள்ளது. இதில்தான் கண், மூக்கு, காது போன்ற புலன் உணர்ச்சிக் கருவிகள் இருக்கின்றன. வெளியே தெரியும் கண் என்ற இந்த உறுப்பு காட்சிப் புலன் அல்ல; இது வெறும் கருவிதான். இதற்குப் பின்னால்தான் புலன் இருக்கிறது. அதுபோலவேதான் காதுகளும். அவை கருவிகள் மட்டுமே. அவற்றிற்குப் பின்னால் புலன் உள்ளது. இக்கால உடலியல் வல்லுனர்கள் இதை மையம் (Centre) என்கிறார்கள். வடமொழியில் புலன்கள் இந்திரியங்கள் எனப்படுகின்றன.

கண்களை இயக்குகின்ற மையம் அழிந்துவிட்டால், கண்கள் பார்க்கும் சக்தியை இழந்துவிடும். எல்லா புலன்களின் விஷயமும் இப்படித்தான். புலன்களும் தாமாகவே உணர்வதில்லை. இவற்றுடன் இன்னொன்று இணைய வேண்டும். அந்த இன்னொன்று மனம். உங்கள் மனம் எதிலாவது ஆழ்ந்திருக்கும்போது உங்கள் அருகில் கடிகார மணியடிப்பதைக் கூடப் பலவேளைகளில் நீங்கள் கேட்பதில்லை; ஏன்? காது இருக்கிறது, மணியோசை அதிர்வுகள் காதினுள் புகுந்து மூளைக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. ஆனாலும் நீங்கள் அதைக் கேட்கவில்லை. ஏன்? ஏனெனில் மனம் புலனுடன் இணையவில்லை. புறப்பொருட்களின் பதிவுகள் புலன்களுக்கு எடுத்துச் செல்லப்படுகின்றன. அப்போது புலன்களுடன் மனம் இணைந்திருந்தால், இந்தப் பதிவுகளை வாங்கி அதற்கு மனம் ஒரு நிறத்தை, ஓர் அர்த்தத்தைக் கொடுக்கிறது. இதையே நான்-உணர்வு என்கிறோம்.

நான் ஏதோ ஒரு வேலையில் ஈடுபட்டிருக்கும்போது ஒரு கொசு என் விரலைக் கடிப்பதாக வைத்துக்கொள்வோம். அதனை நான் உணர்வதில்லை. ஏனெனில் என் மனம்

வேறு ஒன்றில் ஈடுபட்டிருக்கிறது. பின்னால், புலன்களால் கிடைத்த பதிவோடு மனம் தொடர்புகொள்ளும்போது ஒரு பிரதிச்செயல் உண்டாகிறது. அந்தப் பிரதிச்செயலின் காரண மாக நான் கொசுவை உணர்கிறேன். எனவே மனம் புலனுடன் ஈடுபடுவது மட்டும் போதாது; சங்கல்பம் (Will) என்ற உருவில் இதற்கு ஒரு பிரதிச்செயலும் ஏற்பட வேண்டும். இந்தப் பிரதிச்செயல் எதிலிருந்து வருகிறதோ அதுவே புத்தி.

முதலில் வெளி உறுப்பு அல்லது பொறி இருக்க வேண்டும். பிறகு புலன். பிறகு மனம் புலனுடன் இணைய வேண்டும். பிறகு புத்தியின் பிரதிச்செயல் ஏற்பட வேண்டும். இவையனைத்தும் முடிந்த உடனே 'நானும் புறப்பொருளும்' என்ற கருத்து மின் னுகிறது. அப்போதே ஓர் உணர்ச்சி, ஒரு கருத்து, ஓர் அறிவு உண்டாகிறது. புறத்தில் அமைந்த ஒரே கருவியான பொறி உடலில் இருக்கிறது. இதற்குப் பின்னால் நுட்பமான உட் கருவியாகிய புலன், பின்னர் இன்னும் நுட்பமான மனம், பின்னர் புத்தி, பிறகு நான்-உணர்வு. இந்த நான்-உணர்வே, நான் பார்க்கிறேன்; 'நான் கேட்கிறேன்....' போன்ற அறிவு களுக்கு ஆதாரம்.

இந்தச் செயல்தொடர் முழுவதும் சில ஆற்றல்களால் நடைபெறுகின்றன. இவற்றை உயிர்ச் சக்திகள் எனலாம். சம்ஸ்கிருதத்தில் இவற்றைப் பிராணன் என்கிறார்கள். மனித னின் வெளிப் பொறிகள் அமைந்துள்ள இந்த உடல் தூலவுடல் எனப்படுகிறது. சம்ஸ்கிருதத்தில் இதை ஸ்தூல சரீரம் என்பர். இதற்குப் பின்னால்தான் புலன், மனம், புத்தி, நான்-உணர்வு என்ற தொடர் அமைகிறது. இவையும், உயிர்ச் சக்திகளும் இணைந்த ஒன்றே நுண்ணுடல் அல்லது சூட்சும சரீரம். இந்தச் சக்திகள் மிக நுட்பமான அணுக்களால் ஆனவை; எத்தகைய தீங்கு ஏற்பட்டாலும் இந்த உடம்பு அழியாத அளவுக்கு அவை நுட்பமானவை. எந்தவிதமான கேடும் அதிர்ச்சியும் சூட்சும உடலைப் பாதிப்பதில்லை.

நம் கண்ணுக்குப் புலனாவதான தூலவுடல் பருப்பொரு ளால் ஆனது; எனவே அது தொடர்ந்து புதுப்பிக்கப்படுகிறது; மாறுபடுகிறது. உட்கருவிகளான மனம், புத்தி, நான்-உணர்வு என்பவை மிகமிக நுட்பமான பொருளால் ஆனவை. எனவே பல யுகங்களானாலும் அவை அழியாமல் இருக்கும். வேறு எது வுமே தடைசெய்ய முடியாத அளவிற்கு நுட்பமானவை இவை. இவை எந்தத் தடைகளையும் கடந்துவிடும். இந்தத் தூலவுடல்

அறிவற்றது; நுண்ணுடலும் அதுபோன்றதுதான். ஆனால் இது சற்று நுட்பமான ஜடப்பொருளால் ஆக்கப்பட்டுள்ளது.

இந்த நுண்ணுடலின் ஒரு பகுதி மனம்; ஒரு பகுதி புத்தி; ஒரு பகுதி நான்-உணர்வு. ஆனாலும் இவற்றில் எந்த ஒன்றும் 'அறிபவன்' ஆக முடியாது. இவற்றுள் எதுவும் பார்ப்பவனாக, சாட்சியாக, யாருக்காக அறிவுச்செயல் நடக்கிறதோ அவனாக, நடக்கும் செயலைப் பார்ப்பவனாக ஆக முடியாது. மனத்திலும் புத்தியிலும் நான்-உணர்விலும் ஏற்படும் இயக்கங்கள் எல்லாம் இவை அல்லாத வேறு யாருக்காகவோதான் இருக்க வேண்டும். இவை நுட்பமான ஜடப்பொருள் அணுக்களால் ஆனவை. ஆதலால் தன்னொளி உடையவையாக இருக்க முடியாது. இவற்றின் ஒளி இவற்றிற்குச் சொந்தமானதாக இருக்க முடியாது. எடுத்துக்காட்டாக, இந்த மேஜையை எந்த ஜடப்பொருளும் உருவாக்கியிருக்க முடியாது. எனவே இவற்றிற்கெல்லாம் பின்னால் யாரோ ஒருவர் இருக்க வேண்டும்; இவரே எல்லா தோற்றங்களுக்கும் உண்மைக் காரணமானவர்; உண்மையாகவே எல்லாவற்றையும் அனுபவிப்பவர். இவரையே வடமொழியில் ஆத்மன் என்கிறார்கள். இவரே மனிதனின் உண்மை ஆன்மா.

உண்மையில் எல்லா பொருட்களையும் பார்ப்பவர் இவரே. வெளிப்பொறிகளும் புலன்களும் புறப்பொருட்களின் பதிவை மனத்திற்கு அனுப்புகின்றன. மனம் இவற்றைப் புத்திக்கு அனுப்புகிறது. புத்தி இவற்றை முகம்பார்க்கும் கண்ணாடி போல் பிரதிபலிக்கிறது. இதற்குப் பின்னால் உள்ள ஆன்மா இந்த பிரதிபலிப்பைப் பார்த்து, தன் கட்டளைகளையும் செயல் யோசனைகளையும் விடுக்கிறது. இந்தக் கருவிகளை எல்லாம் ஆள்வது ஆன்மாவே. உடலாகிய வீட்டிற்குத் தலைவன் அதுவே; உடம்பினுள் உள்ள அரசன் அதுவே. நான்-உணர்வு, புத்தி, சித்தம், பொறிகள், புலன்கள், உடல் எல்லாமே ஆன்மா வின் கட்டளைக்கு அடங்கி நடக்கின்றன. இவற்றையெல்லாம் தோற்றுவிப்பதும் அதுவே. அதுதான் மனிதனின் ஆன்மா.

இப்படிப் பிரபஞ்சத்தின் ஒரு சிறுபகுதியில் என்ன இருக்கிறதோ அது பிரபஞ்சம் முழுவதிலும் இருக்கும் என்பதை நாம் காண முடியும். ஏனெனில் பிரபஞ்சத்தை முழுவதுமாக எடுத்துக் கொண்டால் அது எந்த அமைப்பில் உருவாக்கப்பட்டிருக் கிறதோ, அதே அமைப்பில்தான் அதன் ஒவ்வொரு பகுதியும் கட்டப்பட்டிருக்கும் என்பது பிரபஞ்ச நியதி. எனவே பிரபஞ்சம் என்று நாம் வழங்கும் இந்தத் தூலப்பொருளான அமைப்பிற்குப்

பின்னால் நுண்ஜடப் பொருளால் ஆன ஒரு சூட்சுமப் பிர பஞ்சம் இருக்க வேண்டும். இதையே நாம் சிந்தனை அல்லது கருத்து என்கிறோம். இதற்குப் பின்னால் ஆன்மா என்ற ஒன்று இருக்க வேண்டும். இதுவே இந்தச் சிந்தனைகள் எல்லாம் எழு வதற்கு ஆதாரம்; இதுவே மற்ற எல்லாவற்றிற்கும் கட்டளை யிடும் தலைவன், இந்தப் பிரபஞ்சத்தை ஆளும் அரசன் என்று நாம் நினைப்பது இயற்கைதானே! இப்படி ஒவ்வோர் உட லுக்கும் மனத்திற்கும் பின்னால் இருக்கும் ஆன்மாவைப் பிரத் யகாத்மன் அல்லது ஜீவான்மா என்றும், இதை இயக்குகின்ற, ஆள்கின்ற, செயல்படுத்துகின்ற பிரபஞ்ச ஆன்மாவை இறைவன் என்றும் சொல்கிறோம்.

இந்தப் பொருட்கள் எல்லாம் எங்கிருந்து வருகின்றன என்று ஆராய்வதே அடுத்த விஷயம். வருவது என்பதன் பொருள் என்ன என்பதுதான் இதற்கு விடை. சூன்யத்திலிருந்து ஏதாவது ஒன்றை உண்டாக்க முடியும் என்பது இதன் பொரு ளானால், இது முடியாத காரியம். இந்தப் படைப்பை, இந்த வெளிப்பாட்டை சூன்யத்திலிருந்து தோற்றுவித்திருக்க முடியாது. காரணம் இல்லாமல் எந்தக் காரியமும் தோன்றாது. காரியம் என்பது காரணத்தின் வேறு உருவம். இதோ ஒரு கண்ணாடி இருக்கிறது. இதைத் துண்டுதுண்டாக உடைத்து, பொடியாக்கி, ரசாயனப் பொருட்களின் உதவியால் ஏறக்குறைய அழித்து விடுவதாக வைத்துக்கொள்வோம். உடனே அது சூன்யமாகி விடுமா? கண்டிப்பாக இல்லை, முன்பிருந்த உருவம் போய்விடும். என்றாலும் அந்தப் பொருளின் துகள்கள் இருக்கவே இருக்கும். இந்தத் துகள்கள் ஒருவேளை நாம் புலன்களால் அறிய முடியாத அளவுக்கு நுட்பமாகிவிடலாம்; என்றாலும் அவை இருக்கத்தான் செய்கின்றன. இருக்கும் அந்த அணுக்களைக் கொண்டு வேறொரு கண்ணாடியை ஒருவேளை செய்யவும் முடியலாம். ஒரு பொருளின் விஷயத்தில் இது உண்மையானால், எல்லாவற்றின் விஷயத்திலும் உண்மையாகத் தான் இருக்க வேண்டும்.

சூன்யத்திலிருந்து எதையுமே படைக்க முடியாது. அது போல் இருக்கும் எதையுமே இல்லாமல் செய்யவும் முடியாது. அது மிகமிக நுட்பமாக மாறலாம்; மீண்டும் தூலப் பொரு ளாகவும் மாறலாம். கடல்நீர் நீராவியாகி மேலே சென்று மழைத்துளியாகிறது. அது காற்றின் வழியே மிதந்து மலையை நோக்கிச் செல்கிறது. பிறகு நீராக மாறி, பூமிக்கு வந்து,

பல நூறு மைல் ஓடிச் சென்று மீண்டும் தாய்க் கடலை அடைகிறது. விதை மரத்தை உண்டுபண்ணுகிறது. பின்னர் விதையை விட்டுவிட்டு மரம் அழிகிறது. இந்த விதை திரும்ப மரமாகிறது. மறுபடியும் விதை உண்டாகிறது. இப்படியே இந்த வட்டம் சுழல்கிறது. பறவையைப் பாருங்கள். அது முட்டையிலிருந்து தோன்றுகிறது; அழகான பறவை ஆகிறது; வாழ்கிறது; இறுதியில், வருங்காலப் பறவைகளின் கருவைத் தாங்கும் முட்டைகளை விட்டுவிட்டுச் சாகிறது. விலங்குகளும் இப்படியே. மனிதர்களும் இப்படியே. எல்லாமே சில விதைகள், சில கருக்கள், சில நுட்பமான அணுக்கள் இவற்றில் தொடங்கு வது போலுள்ளது. பின்னர் பருமை பெற்று வளர்கின்றன; மறுபடியும் படிப்படியாக நுண்மை பெற்றுப் பழைய கருஉரு வில் ஒடுங்கிவிடுகின்றன. பிரபஞ்சம் முழுவதும் இப்படியே தான் நடைபெறுகிறது.

இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே உருகுவதுபோல், படிப் படியாகக் கரைந்து, நுட்பத்தன்மை பெற்று, முடிவில் முற்றிலும் மறைந்தே விடுகின்ற ஒருகாலம் வருகிறது. ஆனால் அப்போதும் அது மிகமிக நுட்பமான ஜடப்பொருளாக இருக்கவே செய் கிறது. இந்தப் பூமி குளிர்ந்துகொண்டே வருகிறது; நாளா வட்டத்தில் இது மிகக் குளிர்ந்துவிடும். பிறகு இது துண்டு துண்டாக உடைந்து, தூள் தூளாகி, நுட்பமாகி, அதிநுட்பமாகி மீண்டும் ஆகாசமாகிவிடும் என்று நவீன விஞ்ஞானமும் வான இயலும் கூறுகின்றன என்றாலும் இந்த நுட்பமான அணுக்கள் எல்லாம் இருக்கவே செய்கின்றன. இந்த அணுக்கள் சேர்ந்து உண்டாகின்ற பொருளிலிருந்தே மீண்டும் பிரபஞ்சம் வெளிப் படுகிறது. அது மீண்டும் மறையும், மீண்டும் வேறொன்று வெளிப்படும்.

காரியமாகிய இந்தப் பிரபஞ்சம், தன் காரணமாகிய நுட்ப மான ஆகாச அணுக்களாக மாறுவதும், மறுபடியும் இவை தூல உருப்பெற்றுக் காரியப் பிரபஞ்சமாவதும், அலைகள் கடலோடு கலந்து அவற்றின் உருவம் அழிவதும், திரும்ப மேலெழுந்து உருவம் பெறுவதும்போல் ஓயாமல் நடந்து கொண்டே இருக்கும். காரியம் காரணம் ஆவதையும், மீண்டும் காரணம் காரியம் ஆவதையும் வடமொழியில் ஸங்கோசம் (சுருங்குதல்), விகாஸம் (விரிதல்) என்பர். பிரபஞ்சம் முழுவதுமே ஆகாச நிலைக்குச் சுருங்குகிறது; பிறகு பழைய நிலைக்கு விரிகிறது; இக்கால விஞ்ஞான மொழியில் சொல்வதானால்,

பிரபஞ்சம் ஒடுங்குகிறது (Involution), பின்னர் பரிணமிக்கிறது (Evolution). தாழ்ந்த நிலை உயிர்கள் மெதுவாக படிப்படியாக வளர்ந்து உயர்நிலை உயிராவதே பரிணாமம் என்று நாம் கேள்விப்படுகிறோம். இது உண்மைதான். ஆனால் இத்தகைய பரிணாமம் ஒவ்வொன்றிற்கு முன்னரும் ஓர் ஒடுக்கம் இருக்கவே செய்தது.

உலகிலுள்ள சக்தியின் மொத்த அளவு எப்போதும் ஒன்று தான் என்பதும், எந்தப் பொருளுக்கும் அழிவு என்பதில்லை என்பதும் நமக்குத் தெரியும். ஜடப்பொருளின் ஓர் அணுவைக் கூட அழிக்க முடியாது. சக்தியின் மிகக்குறைந்த அளவைக் கூட நம்மால் அழிக்கவும் முடியாது; கூட்டவும் முடியாது. சக்தியின் மொத்த அளவு எப்போதும் ஒருபோலவே இருக்கும். ஒடுங்குவது, பரிணமிப்பது என்று வெளிப்பாடுதான் வேறு படுகிறது. எனவே இந்தப் பிரபஞ்சம் முன்னால் ஒடுங்கிய பிரபஞ்சத்தின் பரிணாம விரிவே. மீண்டும் இது நுட்ப மாகி, மிக நுட்பமாகி ஒடுங்கிவிடும். அதிலிருந்து மீண்டும் புதிய யுகம் தோன்றும். பிரபஞ்சமே இப்படித்தான் நடை பெறுகிறது.

சூன்யத்திலிருந்து ஏதோ ஒன்று படைக்கப்பட்டது என்ற பொருளில் படைப்பு என்பது எதுவுமே ஏற்படவில்லை என் பதைக் காண்கிறோம். படைப்பு என்பதைவிட வெளிப்பாடு என்பதுதான் தகுந்த சொல்லாக இருக்கும். பிரபஞ்சம் என் பது வெளிப்பாடு, அதை வெளிப்படுத்தியவர் இறைவன். பிர பஞ்சம் அவர் மூச்சின் வழியே வெளிவருவதுபோல் உள்ளது. திரும்பவும் அது அவருள்ளேயே ஒடுங்குகிறது. திரும்பவும் அவர் அதை வெளிப்படுத்துகிறார். வேதங்களில் அழகான உவமையால் இதனை விளக்கியிருக்கிறார்கள். எல்லையற்ற வனாகிய இறைவன் பிரபஞ்சத்தை மூச்சாக வெளிவிடுகிறான்; திரும்பவும் மூச்சாக அதை உள்ளே இழுத்துக் கொள்கிறான். நாம் ஒரு சிறு தூசியை நம் மூச்சால் உள்ளே இழுத்து வெளியே விடுவது போன்றது இது.

இதெல்லாம் சரிதான். ஆனால், 'முதன்முதலாகப் படைப்பு எப்படி, எங்கே இருந்தது?' என்ற கேள்வி எழலாம். 'முதலில்' என்பதன் பொருள் என்ன, என்பதுதான் பதில். முதல் என்ற ஒன்று இல்லவே இல்லை. காலத்திற்கு ஒரு தொடக்கத்தைக் குறிப்பிட்டால், காலம் என்ற கருத்தே அழிந்துவிடும். காலம் தொடங்கிய எல்லை ஒன்றை நிறுவ முயலும்போது, அந்த

எல்லைக்கும் அப்பால் உள்ள காலத்தை நினைத்தாக வேண்டும். அதேபோல் இடம் (Space) தொடங்கிய எல்லையை நினைக்க எண்ணினால், அந்த எல்லைக்கும் அப்பால் உள்ள இடத்தை நினைக்க வேண்டும். காலமும் இடமும் எல்லையற்றவை; எனவே இவற்றிற்குத் தொடக்கமும் இல்லை, முடிவும் இல்லை. இறைவன் ஐந்தே நிமிடத்தில் பிரபஞ்சத்தைப் படைத்து முடித்து விட்டுப் பிறகு உறங்கப் போய்விட்டார், அப்போதுமுதல் உறங்கிக்கொண்டே இருக்கிறார் என்ற கருத்தைவிட இது சிறந்த கருத்து. இந்தக் கருத்து, இறைவன் என்றென்றைக்குமான சிருஷ்டி கர்த்தா என்ற கருத்தை நமக்குத் தருகிறது. அலைகள் தொடர்ச்சியாக எழுவதும் விழுவதுமாக உள்ளன. இறைவன் முடிவற்ற இந்த நிகழ்ச்சியை இயக்கி வருகிறார்.

எப்படிப் பிரபஞ்சத்திற்குத் தொடக்கமும் முடிவும் இல்லையோ, அப்படியே இறைவனும் தொடக்கமும் முடிவும் இல்லாதவர். இது இப்படித்தான் இருந்தாக வேண்டும். தூல உருவிலோ நுண்ணுருவிலோ பிரபஞ்சப் படைப்பு இல்லாத காலம் ஒன்று உண்டு என்று நாம் சொன்னால், அப்போது கடவுளும் இல்லை என்று ஆகிவிடும். ஏனெனில் கடவுளை நாம் பிரபஞ்ச சாட்சி என்றல்லவா சொல்கிறோம்? பிரபஞ்சம் இல்லை என்றால், இறைவனும் இல்லை. ஒரு கருத்து மற்றொன்றைத் தொடர்கிறது. காரியம் என்ற கருத்திலிருந்தே காரணம் என்ற கருத்தைப் பெறுகிறோம். எனவே காரியம் இல்லை என்றால் காரணமும் இல்லை. இந்த ஆராய்ச்சியின் முடிவு என்ன? பிரபஞ்சம் எப்படி முடிவற்றதோ, அப்படியே இறைவனும் முடிவற்றவர் என்பதுதான்.

ஆன்மாவும் முடிவற்றதாகத்தான் இருக்க வேண்டும், ஏன்? முதலில் ஆன்மா என்பது ஜடப்பொருள் அல்ல என்பது நமக்குத் தெரிகிறது. அது தூல உடல் அல்ல, மனம், சிந்தனை என்பவைபோல் நுண்ணுடலும் அல்ல. அது பஞ்சபூதத்தால் ஆன உடலும் அல்ல; கிறிஸ்தவர்கள் சொல்வது போன்ற ஆவி உடலும் (Spiritual body) அல்ல. தூல உடலும் ஆவி உடலும் மாறுதலுக்கு உட்பட்டவை. தூலவுடல் ஒவ்வொரு நிமிடமும் மாறுதலுக்கு உட்பட்டு விரைவில் அழிந்துவிடுகிறது. ஆவி உடல் நெடுங்காலம் இருக்கிறது. ஆனால் அதுவும், ஒருவன் முக்தி பெறும்வரையில் நீடித்து, பிறகு அழிகிறது. ஒருவன் முக்தி பெற்றதும் ஆவி உடல் மூலப்பொருட்களாகப் பிரிந்து விடுகிறது; ஒவ்வொரு முறை மனிதன் சாகும்போதும் தூலவுடல்

அழிகிறது. ஆன்மா எதனாலும் ஆக்கப்படாததால், அது அழிவற்றதாகவே இருக்க வேண்டும்.

அழிவு என்பதன் பொருள் என்ன? ஒரு பொருள் தன் மூலக்கூறுகளாகப் பிரிவதையே அழிவு என்கிறோம். டம்ளரைப் பொடியாக்கினால் அது தன் மூலக்கூறுகளாகப் பிரியும்; இதையே டம்ளரின் அழிவு என்கிறோம். பொருள் தன் மூலக் கூறுகளாகப் பிரிவதே அழிவு. எனவே மூலக்கூற்று அணுக்களால் அமைக்கப்படாத எந்தப் பொருளுக்கும் அழிவு இல்லை; அதாவது, மூலக்கூறுகளாகப் பிரிவது என்பது அதற்கு இல்லை என்றாகிறது. ஆன்மா எந்தப் பொருளாலும் ஆனதல்ல. அது பிரிக்க முடியாத ஒரே பொருள். எனவே அதற்கு அழிவு இருக்க முடியாது. அதனால் அதற்குத் தொடக்கமும் இல்லை என்பது புலனாகிறது. ஆகவே ஆன்மா விற்குத் தொடக்கமும் இல்லை; முடிவும் இல்லை.

மூன்று பொருட்கள் உள்ளன. முடிவற்ற ஆனால் மாறு படுகின்ற இயற்கை ஒன்று. இயற்கை முழுவதற்கும் தொடக்க மும் இல்லை, முடிவும் இல்லை. ஆனால் அதற்குள் பல கோடி மாறுதல்கள் நிகழ்கின்றன. பல்லாயிரம் ஆண்டுகளாகக் கடலை நாடி ஓடும் ஆறு போன்றது இது. எப்போதும் அது அதே ஆறு தான். என்றாலும் ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டே இருக்கிறது; நீர்த்துளிகள் நொடிக்குநொடி இடம் மாறிய வண்ணம் உள்ளன. அடுத்தது, எல்லாவற்றையும் ஆள்பவ ரான, மாறுதல் இல்லாதவரான இறைவன் இருக்கிறார். மூன்றா வதாக, இறைவனைப் போலவே மாறுதல் இல்லாத, முடிவற்ற, ஆனால் இறைவனுக்கு உட்பட்ட ஆன்மா இருக்கிறது. ஒன்று தலைவன், மற்றொன்று சேவகன்; மூன்றாவது இயற்கை.

பிரபஞ்சத்தின் தோற்றம், தொடர்ச்சி, மறைவு மூன்றிற்கும் இறைவனே காரணம். எனவே காரியம் தோன்ற வேண்டு மானால், காரணம் இருந்தேயாக வேண்டும். அது மட்டுமல்ல; காரணமே காரியம் ஆகிறது. சில பொருட்களாலும் செய் பவனின் ஆற்றல்களாலும் டம்ளர் உருவாகிறது. டம்ளரில் இந்த ஆற்றல்களும் மூலப்பொருட்களும் இருக்கின்றன. இந்த ஆற்றல்களே இணைக்கும் சக்தி. இந்தச் சக்தி விலகினால் டம்ளர் தூள் தூளாகிவிடும். ஆக்கும்போது பயன்படுத்தப்பட்ட பொருட்களும் கண்ணாடியில் இருக்கின்றன என்பதில் சந்தே கம் இல்லை. அவற்றின் உருவம் மட்டுமே மாறியிருக்கிறது. காரணம் காரியம் ஆகிவிட்டது. காரியம் என்பதை எப்போதும்

காரணங்களாகப் பிரித்துவிட முடியும். காரணமே காரியமாகத் தோற்றம் அளிக்கிறது. எனவே கடவுள் காரணமாகவும் பிரபஞ்சம் காரியம் ஆகவும் இருந்தால், அவரே பிரபஞ்சம் ஆகியுள்ளார் என்பதே இந்த ஆராய்ச்சியால் பெறும் முடிவாகும். ஆன்மாக்கள் காரியம், இறைவன் காரணம் என்றால் இறைவனே ஆன்மாக்களாகி உள்ளார் என்பதுதான் முடிவு. எனவே ஒவ்வோர் ஆன்மாவும் இறைவனின் ஓர் அம்சமே. 'பெரிய நெருப்புத் தணல் ஒன்றிலிருந்து பல சிறு நெருப்புப் பொறிகள் சிதறுவதுபோல், எல்லையற்ற இறைவனிடமிருந்து, பிரபஞ்சம் முழுவதிலும் உள்ள இந்த ஆன்மாக்களெல்லாம் பொறிகளாகச் சிதறி உள்ளன.'[1]

எல்லையற்ற இறைவனும் முடிவற்ற இயற்கையும் இருப் பதை நாம் கண்டோம். எல்லையற்ற ஆன்மாக்களும் கணக் கற்றவை இருக்கின்றன. இதுவே மதத்தின் முதற்படி; இதுவே துவைதம், இந்த நிலையில் மனிதன் தன்னை இறைவனிலிருந்து என்றென்றும் வேறுபட்டவனாகக் காண்கிறான். இங்கு இறைவன் தனிப்பொருள்; மனிதனும் தனிப்பொருள்; இயற்கை யும் தனிப்பொருள். இது துவைதம். இதன்படி, செய்பவனும் செயற்படுபொருளும் ஒன்றுக்கொன்று எல்லாவற்றிலும் நேர் மாறானவை. மனிதன் இயற்கையைப் பார்க்கும்போது அவன் பார்ப்பவன், இயற்கை பார்க்கப்படும் பொருள். செய்பவற்றை யும் செயற்படுபொருளையும் இரண்டாக அவன் காண்கிறான். மனிதன் கடவுளைக் காணும்போது அவன் பார்ப்பவனாகத் தன்னையும், பார்க்கப்படும் பொருளாக இறைவனையும் காண் கிறான். இருவரும் முற்றிலும் வேறுபட்டவர்கள். இறைவனுக் கும் மனிதனுக்கும் உள்ள துவைத நிலை இதுவே. சாதாரண மாக மதத்தின் முதற்படி இதுவே.

இன்னொரு கருத்தும் உள்ளது. அதை நான் சற்றுமுன் உங்களுக்கு விளக்கினேன். பிரபஞ்சம் காரியம்; அதற்குக் காரணம் இறைவன் என்பதை மனிதன் அறியத் தொடங்கும் போது, இறைவனே பிரபஞ்சமாகவும் ஆன்மாக்களாகவும் ஆகி றார் என்பதையும், இறைவன் முழுமை, தான் இறைவனின் ஓர் அம்சம் என்பதையும் அவன் அறிகிறான். நாம் சிறிய உயிர்கள்,

---

1. யதா ஸு்தீப்தாத் பாவகாத் விஸ்புலிங்கா:
ஸஹஸ்ரச: ப்ரபவந்தே ஸரூபா: |
ததாக்ஷராத்விவிதா: ஸோம்ய பாவா:
ப்ரஜாயந்தே தத்ர சைவாபி யந்தி || —முண்டக உபநிடதம், 2. 1. 1.

அந்தப் பெருநெருப்பின் சிறு பொறிகள். இந்தப் பிரபஞ்சம் முழுவதும் இறைவனின் வெளிப்பாடே—இது அடுத்த படி. வடமொழியில் இது விசிஷ்டாத்வைதம் எனப்படுகிறது. எனக்கு உடல் இருக்கிறது. இந்த உடல் ஆன்மாவை மூடியிருக்கிறது. ஆன்மா உடலுள் இருந்துகொண்டே உடல் வழியாகப் பிரகாசிக்கிறது. அதுபோல் எல்லையற்ற பல ஆன்மாக்களையும் இயற்கையையும் கொண்ட இந்தப் பிரபஞ்சம் இறைவனுக்கு உடல்போல் அமைகிறது. பிரபஞ்சம் ஒடுங்கும் காலம் வரும் போது அது படிப்படியாக நுட்பமாகிறது. ஆனாலும் இந்தச் சூட்சுமப் பிரபஞ்சமும் இறைவனின் உடலாகவே இருக்கிறது. மீண்டும் பிரபஞ்சம் தூலமாக விரியும்போதும் அது இறைவனுக்கு உடலாகவே இருக்கிறது. எப்படி மனித ஆன்மா மனிதனின் உடலிற்கும் மனத்திற்கும் ஆன்மாவாக இருக்கிறதோ, அப்படியே இறைவன் நம் ஆன்மாவுக்கு ஆன்மாவாக இருக்கிறார். நமது ஆன்மாவுக்கு ஆன்மா என்ற சொற்றொடரை எல்லா மதத்தினரும் கேட்டிருப்பீர்கள். மேற்சொன்னதே அதன் பொருள். இறைவன் ஆன்மாக்களுக்குள் வாழ்கிறார். அவற்றை இயக்குகிறார், அடக்கி ஆள்கிறார்.

முதல் படியில் நாம் என்றென்றும் இறைவனிலும் இயற்கையிலுமிருந்தும் பிரிந்து தனியே நிற்பவர்கள். இரண்டாம் படியில் நாம் தனியானவர்கள். ஆயினும் இறைவனிடமிருந்து வேறானவர்கள் அல்ல; இறைவன் என்னும் ஒரே தொகுதியில் மிதக்கும் தனித்தனி அணு அல்லது துகள் போன்றவர்கள் நாம். நாம் தனித் தனியானவர்கள், ஆனால் இறைவனுள் நாம் அனைவரும் ஒன்றே. நாம் எல்லோருமே அவருள் இருக்கிறோம். நாம் எல்லோருமே அவருடைய பகுதிகள்; எனவே நாம் எல்லோரும் ஒன்றே என்றாலும், மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையிலும், மனிதனுக்கும் இறைவனுக்கும் இடையிலும் மீற முடியாத ஒரு தனித்தன்மை இருக்கிறது; இரண்டும் வேறுபட்டவை, ஆனால் வேறுபடாதவை.

இன்னும் நுட்பமான கேள்வி ஒன்று எழுகிறது: எல்லையற்ற ஒன்றிற்குப் பகுதிகள் இருக்க முடியுமா? எல்லையற்றதன் பகுதிகள் என்பதன் பொருள் என்ன? ஆராய்ந்து பார்த்தால், இது முரணானது என்பது புரியும். எல்லையற்றதைப் பிரிக்க முடியாது; அது எப்போதும் எல்லையற்றதாகவே இருக்கும். அதைப் பிரிக்க முடியுமானால், அப்படிப் பிரிந்த ஒவ்வொன்றும் எல்லையற்றதாகவே இருக்கும். எல்லையற்ற இரண்டு இருக்க

முடியாது. இரண்டு இருக்குமானால் ஒன்று மற்றொன்றுக்கு எல்லை வகுத்துவிடும்; இரண்டும் முடிவுள்ளவை ஆகிவிடும். எனவே முடிவற்றது என்பது ஒன்றுதான். அதைப் பிரிக்கவே முடியாது. இதன் முடிவு என்ன? முடிவற்ற பொருள் ஒன்றே, பல அல்ல. இந்த முடிவற்ற ஒன்றாகிய ஆன்மாவே பல்லாயிரம் கண்ணாடிகளில் பிரதிபலிக்கிறது. இந்தப் பிரதிபலிப்பினால் பல்லாயிரம் ஆன்மாக்கள் இருப்பதுபோன்ற தோற்றம் உண்டாகிறது. இந்தப் பிரபஞ்சத்தின் அடிப்படையாகிய எல்லையற்ற ஆன்மாவையே நாம் இறைவன் என்கிறோம். முடிவற்ற அதே ஆன்மா மனித மனத்திற்கு அடிப்படையாக இருக்கும்போது மனித ஆன்மா என்கிறோம்.

## 5. பேரின்பத்திற்கு வழி

### (கடோபநிடதம்)

22 ஜனவரி 1896

வேதத்தில் உள்ள ஒரு கதையை இன்று உங்களுக்குச் சொல்கிறேன். இந்துக்களின் புனித சாஸ்திரங்கள் வேதங்கள். இலக்கியக் கருவூலம் அது. அதன் இறுதிப் பகுதியே வேதாந்தம்; அதாவது வேதங்களின் முடிவு. இந்தப் பகுதி வேதங்களின் கொள்கைகளை விளக்க முயல்கிறது. முக்கியமாக இது நமது இப்போதைய பொருளான தத்துவப் பகுதியை ஆராய்கிறது. இது மிகப் பழைய சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டுள்ளது; இது பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டது என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும்.

ஒருவன் ஒரு பெரிய யாகம் செய்ய விரும்பினான். இந்து மதத்தில் யாகத்திற்கு முக்கியத்துவம் அதிகம். யாகங்களில் பல வகை உண்டு. யாகக் குண்டங்களை அமைத்து அக்கினியில் பல பொருட்களைச் சமர்ப்பிப்பார்கள்; பல்வேறு மந்திரங்களை ஓதுவார்கள். யாகத்தின் முடிவில் அந்தணர்களுக்கும் ஏழைகளுக்கும் தானம் அளிப்பார்கள். ஒவ்வொரு யாகத்திற்கும் ஒவ்வொரு வகையான தானம் உண்டு.

குறிப்பிட்ட ஒரு யாகத்தின் முடிவில், யாகம் செய்பவன் தன் சொத்து முழுவதையும் தானம் செய்துவிட வேண்டும். யாகம் செய்ய விரும்பிய இந்த மனிதன், பெரிய பணக்காரன், ஆனால் கருமி. இருப்பினும் மிகக் கடினமான இந்த யாகத்தைச் செய்து பெரும் புகழை அடைய வேண்டும் என்று விரும்பினான். இந்த யாகத்தைச் செய்து முடித்த அவன், தன் சொத்து எல்லாவற்றையும் தானம் செய்வதற்குப் பதிலாக, குருடும் நொண்டியும் கிழடுமான, இனிமேல் பாலே கொடுக்க இயலாத பசுக்களாகப் பார்த்துத் தானம் செய்தான்.

அவனுக்கு நசிகேதன் என்று ஒரு மகன் இருந்தான். அவன் சிறுவன். அறிவு நிறைந்தவன். தன் தந்தையின் இந்த தானங்களை கண்ட அவன், அதன் விளைவாக அவருக்கு நேரக்கூடிய

பழிபாவங்களைப்பற்றிச் சிந்தித்து, தன்னையே தானமாக்கிக் கொண்டு இதற்குப் பரிகாரம் தேட எண்ணினான். எனவே தன் தந்தையிடம் சென்று, 'என்னை யாருக்குக் கொடுக்கப் போகிறீர்கள்?' என்று கேட்டான். அவர் எதுவும் சொல்ல வில்லை.அவன் விடாமல் இரண்டாம் முறையாக, பின்னர் மூன்றாவதாக இதே கேள்வியைக் கேட்டான். இந்த நச்சரிப்பைப் பொறுக்க முடியாத தந்தை, 'உன்னை எமனுக்குக் கொடுக் கிறேன்' என்று கூறினான்.

அந்தச் சிறுவன் நேராக எமலோகத்திற்குப் போய்விட் டான். அப்போது எமன் அங்கு இல்லை. எமன் வரும்வரையில் அவன் அங்கேயே காத்திருந்தான்.

மூன்று நாட்களுக்குப் பிறகு வீடு திரும்பிய எமதர்மன் நசிகேதனைப் பார்த்து, 'ஓ பிராமணா! நீ என் விருந்தாளி. மூன்று நாட்களாக என் வீட்டில் பட்டினியாக இருந்திருக் கிறாய். நான் உன்னை வணங்குகிறேன். உன்னைப் பட்டினி போட்டதற்குப் பிரதியாக நீ கேட்கும் மூன்று வரங்களை நான் கொடுக்கிறேன்' என்றான்.

'என் தந்தைக்கு என்மேல் உள்ள கோபம் தணிய வேண்டும்' என்று முதல் வரம் கேட்டான் சிறுவன். பிறகு ஏதோ ஒரு யாகத்தைப்பற்றித் தனக்குத் தெரிய வேண்டும் என்று இரண் டாவது வரம் கேட்டான்.

பின்னர் வருகிறது மூன்றாவது வரம்: ஒருவன் இறந்தால் அவனுக்கு என்ன நேர்கிறது? அவன் அழிந்துவிடுவதாகச் சிலரும், அவன் அழிவதே இல்லை என்று சிலரும் கூறுகின்றனர். உண்மை என்ன? இதுவே நான் கேட்கும் மூன்றாவது வரம்' என்று கேட்டான்.

எமன் கூறினான்: முற்காலத்தில் தேவர்கள் இந்தப் புதிருக்கு விடை காண முயன்றார்கள். இது மிக நுட்பமானது, இதைப் புரிந்துகொள்வது கடினம். வேறு ஏதாவது வரம் கேள்! இதை மட்டும் கேட்காதே. நூறு ஆண்டு ஆயுள் வேண்டும் என்று கேள். ஆடு, மாடு, குதிரைகள், பேரரசு எல்லாம் கேள். இந்தக் கேள்விக்கு விடை கூற மட்டும் என்னை வற்புறுத்தாதே. மனிதன் நுகர்வதற்குரிய எந்தப் போகத்தை நீ கேட்டாலும் நான் தருகிறேன். இந்த ரகசியத்தை மட்டும் தெரிந்துகொள்ள விரும்பாதே.'

நசிகேதன் கூறினான்: 'இல்லை, மனிதன் செல்வத்தால் மட்டும் திருப்தி அடையலாகாது. பணம் வேண்டும் என்றால்,

உங்கள் தரிசனமே அதைக் கொடுத்துவிடும். உங்கள் ஆட்சி நடைபெறும் வரையில் நாங்கள் வாழ்வதும் திண்ணம். மண்ணுலகில் எவ்வளவு காலம் வாழ்ந்தாலும் அழிய வேண்டியவனான மனிதன் அறிவு பெற்று, அழிவில்லாத, சாவில்லாத ஒருவரைக் கண்ட பிறகு இந்த மண்ணுலகில் நீண்ட ஆயுளை விரும்புவானா? ஆடல் பாடல் முதலிய போகங்களின் கணநேர வாழ்வை உணர்ந்த யார்தான் போக வாழ்வை விரும்புவார்? சாவுக்குப்பின் நிகழ்வது என்ன என்ற இந்த ரகசியத்தை எனக்கு விவரியுங்கள். நசிகேதன் வேண்டுவது இதுதான்—மரணத்தின் புதிர்.' இதைக் கேட்ட எமன் மிகவும் மகிழ்ந்தான்.

சென்ற இரண்டு மூன்று சொற்பொழிவுகளிலும், ஞானம் மனத்தைப் பக்குவப்படுத்துகிறது என்று நான் சொன்னேன். ஞானத்தைப் பெறுவதற்குரிய முதல் பக்குவம், உண்மையைத் தவிர, வேறொன்றிலும் ஆசை வைக்கக் கூடாது, உண்மைக்காகவே உண்மையை விரும்ப வேண்டும் என்பதுதான். எமன் கொடுப்பதாகச் சொன்ன சொத்து, சுகம், ஆயுள் முதலியவற்றை அந்தச் சிறுவன் விரும்பாமல் விலக்கியதைப் பாருங்கள். உண்மையை அறிவதற்காக, ஞானத்திற்காக அவன் எல்லாவற்றையும் துறக்க ஆயத்தமாக இருந்தான். இவ்வாறுதான் ஞானம் வரும்.

எமனுக்கு நசிகேதனிடம் திருப்தி ஏற்பட்டது. எனவே உபதேசிக்கத் தொடங்கினான்:

இரண்டு வழிகள் இருக்கின்றன; ஒன்று இன்ப நுகர்ச்சி, மற்றொன்று பேரின்ப அனுபூதி. இவை இரண்டும் பலவகைகளில் மக்களின் மனத்தைக் கவர்கின்றன. இந்த இரண்டில் பேரின்ப வழியைத் தேர்ந்தெடுப்பவன் ஞானியாகிறான். சிற்றின்ப வழியைத் தேர்ந்தெடுப்பவன் அழிவைத் தேடிக்கொள்கிறான். நசிகேதா, நான் உன்னைப் பாராட்டுகிறேன்! நீ இன்பப் பொருள் ஒன்றையும் கேட்கவில்லை. நான் பலவகையில் உனக்குப் போகத்தில் ஆசையூட்ட முயன்றேன். நீ எல்லாவற்றையும் எதிர்த்து வென்றாய். ஞானமே போகவாழ்வைவிட உயர்ந்தது என்பது உனக்குத் தெரிந்திருக்கிறது.

'அறியாமையில் மூழ்கி, போகங்களில் உழல்பவனுக்கும் மிருகங்களுக்கும் வேற்றுமை இல்லை என்பதை நீ புரிந்துகொண்டிருக்கிறாய். பலர், அறியாமையில் மூழ்கியிருந்தாலும், ஆணவத்தால் தாங்கள் பெரிய ஞானிகள் என்ற செருக்குடன், குருடன் குருடனுக்கு வழிகாட்டுவதுபோல் தீய வழிகளில்

அலைகின்றனர். ஓ நசிகேதா! வெறும் களிமண் பொம்மைகளால் மகிழும் குழந்தைகள் போன்ற இந்த மூடர்களின் மனத்தில் உண்மை ஒளிர்வதில்லை. அவர்களுக்கு இந்த உலகமும் விளங்குவதில்லை; அந்த உலகமும் விளங்குவதில்லை. அவர்கள் இரண்டு உலகங்களையுமே மறுத்து, அதன் விளைவாகத் திரும்பத்திரும்ப என் வசப்படுகிறார்கள்.

'பலருக்கு அதைப்பற்றி அறிவுரை பெறுவதற்கு வாய்ப்பு இருப்பதில்லை. பலர் அறிவுரை பெற்றாலும் அதை அறிந்து கொள்வதில்லை. ஏனெனில் அதற்கு ஆசிரியர் தகுதியுடையவராக இருக்க வேண்டும். அதுபோலவே சீடனும் தகுதியுடையவனாக இருக்க வேண்டும். ஆசிரியர் தெளிந்த ஞானம் இல்லாதவராக இருந்தால் அவர் நூறுமுறை உபதேசித்தாலும், சீடன் நூறுமுறை கேட்டாலும் ஆன்மாவை அந்த உண்மை ஒளிரச் செய்வதில்லை. நசிகேதா, உன் மனத்தை வீண் வாதங்களால் குழப்பிக்கொள்ளாதே! தூய நெஞ்சில்தான் இந்த உண்மை நன்றாக ஒளிரும்.

'யாரை மிகவும் கடின முயற்சி இல்லாமல் காண முடியாதோ, யார் மறைந்திருக்கிறானோ, யார் இதயத்திற்கும் இதயமான குகையில் புகுந்திருக்கிறானோ, அந்தப் பழையவனை ஊனக் கண்களால் காண முடியாது. அவனை ஞானக்கண்ணால் பார்க்கும் ஒருவன் இன்பம் துன்பம் இரண்டையும் விட்டுவிடுகிறான். இந்த ரகசியத்தை அறிந்தவன் வீண் ஆசைகள் அனைத்திலும் இருந்து விடுபட்டு, மிக நுட்பமான ஞானக் காட்சியைப் பெறுகிறான். இதனால் அவனுக்குப் பேரின்ப நிலை வாய்க்கிறது. நசிகேதா, பேரின்ப வழி இதுதான். இந்த நிலையை அடைந்தவன், பாவம் புண்ணியம், கடமை கடமை அல்லாதவை, இம்மை மறுமை எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவன். இதை அறிந்தவனே அறிந்தவன்.

'எல்லா வேதங்களும் யாரைத் தேடுகின்றனவோ, யாரைக் காண மனிதன் பலவகைத் துறவுகளை மேற்கொள்கிறானோ, அவரது பெயரை நான் சொல்லப் போகிறேன். அதுதான் ஓம். அழிவில்லாத இந்த ஓம் என்பதுதான் பிரம்மம். அது அமரத்துவம் வாய்ந்தது. இதன் ரகசியத்தை அறிந்தவன் விரும்பியதை அடைகிறான்.

'நசிகேதா, நீ எதைப்பற்றி அறிய விரும்புகிறாயோ, அந்த ஆன்மா பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை. தொடக்கம் இல்லாததாகவும் என்றும் உள்ளதாகவும் உள்ள அந்தப்

பழம்பொருள், உடல் அழிந்தாலும் அழிவதில்லை. தான் கொன்றதாகக் கொலையாளி நினைப்பதும், தான் கொல்லப் பட்டதாகக் கொலையுண்டவன் நினைப்பதும் தவறு. ஆன்மாவால் எதையும் கொல்லவும் இயலாது; எதனாலும் அதைக் கொல்லவும் இயலாது. சிறியதில் சிறியதாகவும் பெரியதில் பெரியதாகவும், எல்லா உயிர்களுக்கும் இறைவனாக வும் விளங்கும் அவன், எல்லா உயிர்களுடையவும் இதயக் குகையிலும் உறைகிறான். பாவம் இல்லாதவன், அதே இறை வனது கருணையால் அவனை முழுப் பெருமையுடனும் காண் கிறான். (இறைவனை உணர்வதற்குக் காரணமானவற்றுள் இறையருளும் ஒன்று என்பது தெரிகிறது.)

'உட்கார்ந்த நிலையில் அவன் மிகத் தொலைவிலும் செல் கிறான்; படுத்த நிலையில் அவன் எங்குமே போகிறான். தூய்மை யான, நுட்பமான அறிவுடையவர்களைத் தவிர, வேறு யார் தான் முரண்பட்ட இயல்புகளின் சங்கமமாக இருக்கின்ற இறைவனை அறியும் தகுதி உடையவர்? உடல் அற்றவனாக ஆனால் உடலுக்குள் வசிப்பவனாக, தொடப்படாதவனாக ஆனால் எல்லா பொருட்களுடனும் ஒட்டியதுபோல் தோன்றுபவனாக, எங்கும் நிறைந்தவனாக ஆன்மாவை யார் அறிந்து அனுபவிக்கிறாரோ, அந்த ஞானி துன்பத்திலிருந்து விடுதலை பெறுகிறார்.

'வேதங்களை ஓதுவதாலோ, கூர்த்த அறிவாலோ, அதிகக் கல்வியாலோ, ஆன்மாவை அடைய முடியாது. ஆன்மா யாரைத் தேடுகிறதோ அவனே அதை அடைகிறான். அவனுக்குத் தன் மகிமையை அது காட்டுகிறது. தொடர்ந்து பாவச் செயல்களைச் செய்பவன், மனம் அமைதி பெறாதவன், தியானம் செய்ய முடியாதவன், மனம் எப்போதும் குழம்பியதாகவும் சலனம் உடையதாகவும் இருப்பவன்—இவர்களால் இதயக் குகையில் ஒளிரும் ஆன்மாவை உணர்ந்து அனுபவிக்க இயலாது.

'நசிகேதா, இந்த உடலே தேர், புலன்களின் பொறிகளே குதிரைகள், மனமே கடிவாளம், புத்தியே தேரோட்டி, ஆன்மாவே சவாரி செய்பவன். ஆன்மா தன்னைத் தேரோட்டி யுடனும் புத்தியுடனும், அதன்மூலம் மனமாகிய கடிவாளக் கயிற்றுடனும், மீண்டும் அதன்மூலமாகப் பொறிகளாகிய குதிரைகளுடனும் இணைத்துக் கொள்ளும்போது அவன் போகி என்று அழைக்கப்படுகிறான். அந்த நிலையில் அவன் அறிகிறான்; செயல்புரிகிறான்; செயல்படுகிறான். மனம்

தன்வசப் படாதவன், விவேகம் அற்றவன்—இவர்களின் புலன்கள், பாகனுக்கு அடங்காத இடக்குக் குதிரைகள்போல் அவர்களுக்கு வசப்படுவதில்லை. ஆனால் விவேகி, மனம் தன்வசப் பட்டவன் இவர்களின் புலன்கள் பாகனுக்குக் கட்டுப்பட்டு நடக்கின்ற சாதுக் குதிரைகள்போல் அவர்களுக்கு அடங்கி நடக்கின்றன. விவேகம் உடையவன், உண்மையை நாடும் வழியையே பின்பற்றிச் செல்லும் மனம் உடையவன், எப்போதும் தூயவன்—இவர்களுக்கு உண்மை விளங்குகிறது. இந்த நிலையை அடைந்த ஒருவனுக்குப் பிறவியே இல்லை. நசிகேதா, இந்த நிலையை அடைவது மிகவும் கடினமானது, இதன் வழி மிக நீண்டது, மிகவும் கடினமானது. மிக நுட்பமான ஞானம் பெற்றவர்களே இந்த உண்மையைக் காணவோ புரிந்துகொள்ளவோ முடியும். அதற்காக நீ பயந்துவிடாதே. விழித்தெழுந்து முயற்சியில் ஈடுபடு. லட்சியத்தை அடையும் வரையில் நில்லாதே! வாள்முனையில் நடப்பதுபோன்று இது மிகவும் கடினமானது என்று முனிவர்கள் கூறுகிறார்கள். புலன்களுக்கும், தொட்டு நுகர்வதற்கும், எல்லா உருவத்திற்கும் சுவைகளுக்கும் அப்பாற்பட்டவன் யாரோ, மாறுதல் அற்ற, முடிவற்ற, அறிவுக்கு அப்பாற்பட்ட, அழிவே இல்லாதவன் யாரோ, அவனை அறிவதால் மட்டுமே நாம் மரணத்திலிருந்து தப்ப முடியும்.'

அடைய வேண்டிய லட்சியம் எது என்பதை இதுவரையிலும் எமன் விளக்குவதை நாம் காண்கிறோம். எது உண்மை என்பதை அறிவதால் மட்டுமே பிறப்பு, இறப்பு, துக்கம், துன்ப துயரங்கள் என்று நம்மை ஆட்டுவிக்கும் சக்திகளிலிருந்து நாம் விடுபட முடியும். இதுவே நமக்குக் கிடைக்கின்ற முதற் கருத்து.

எது உண்மை? ஒருபோதும் மாறுபடாத மனித ஆன்மாவே அது. அதுவே இந்தப் பிரபஞ்சத்திற்கு ஆதாரமாக நிற்கிறது. இதை அறிவது மிகவும் கடினம் என்றும் சொல்லப்படுகிறது. அறிவது என்பது, வெறுமனே அறிவால் புரிந்துகொள்வது அல்ல; அனுபூதியே ஆகும். இந்த ஆன்மா பார்க்கப்பட வேண்டியது, உணரப்பட வேண்டியது என்று திரும்பத்திரும்ப நாம் படிக்கிறோம். ஆனால் இந்த ஊனக்கண்களால் அதைக் காண முடியாது. அதைக் காணப் பார்வை மிக நுட்பமாக வேண்டும். சுவர்களையோ புத்தகங்களையோ பார்க்கப் பயன்படும் பார்வை ஊனக்கண் பார்வையாகும். ஆனால் உண்மையைப் பார்க்க

உதவும் பார்வை மிக நுட்பமானது. இந்தப் பார்வையைப் பெறுவதுதான் அந்த அறிவின் முழு ரகசியம். ஒருவர் மிகவும் தூயவராக இருக்க வேண்டும் என்றும் எமன் சொல்கிறான். பார்வையை மிகவும் நுட்பம் ஆக்கிக்கொள்ளும் வழி இது தான். பிறகு அவன் நமக்கு வேறு வழிகளையும் சொல் கிறான்:

'தானே ஒளிர்பவரும் தனியானவருமான அவர், பொறி புலன்களுக்கு அப்பாற்பட்டவர், பொறிபுலன்களால் புறப் பொருட்களையே பார்க்க இயலும். ஆனால் உண்மைப் பொருளை அக நோக்கால்தான் காண முடியும். இதற்கு வேண்டிய தகுதியை நாம் நினைவில்கொள்ள வேண்டும். பார் வையை உள்ளே திருப்பி ஆன்மாவை அடையும் ஆவல்தான் இந்தத் தகுதி. இயற்கையில் நாம் காணும் அழகிய பொருட்கள் எல்லாம் மிக நல்லவையே; என்றாலும் இறைவனைக் காணும் வழி அதுவல்ல. பார்வையை உள்ளே திருப்புவது எப்படி என் பதை நாம் கற்றுக்கொள்ள வேண்டும். வெளியே பார்க்க வேண்டும் என்ற கண்களின் ஆர்வத்தைக் குறைக்க வேண்டும். நெரிசலான தெருவில் நடக்கும்போது, வண்டிகளின் ஓசை காரணமாக, நீங்கள் பேசுவது உங்களுடன் செல்பவருக்குச் சரியாகக் காதில் விழுவதில்லை. அவர் பேசுவது உங்களுக்குக் கேட்பதில்லை. மனம் வெளியே பார்ப்பதால், பக்கத்தில் இருப்பவர் பேசுவது கேட்பதில்லை. அதுபோலவே, நம்மைச் சூழ்ந்திருக்கும் உலகிலும் ஓசை நிறைந்திருப்பதால், அது மனத்தை வெளியே இழுக்கிறது. நாம் எப்படி ஆன்மாவைப் பார்ப்பது? மனத்தின் இந்த வெளிப்போக்கை நிறுத்த வேண்டும். இதைத்தான், பார்வையை உள்ளே திருப்புவது என்று சொல்கிறோம். இப்படிச் செய்தால்தான் உள்ளே இருக்கும் இறைவனின் மகிமையைக் காண முடியும்.

இந்த ஆன்மா என்பது என்ன? இது அறிவுக்கே எட்டாத ஒன்று என்பதைப் பார்த்தோம். இது அழிவில்லாதது. எங்கும் நிறைந்தது என்பதையும், நீங்கள் நான் எல்லோருமே எங்கும் நிறைந்தவர்கள் என்பதையும், மாற்றமில்லாதவர்கள் என்பதை யும் இந்த உபநிடதத்தில் கண்டோம். இப்படி எங்கும் நிறைந்த பொருள் ஒன்றுதான் இருக்க முடியும். ஒரேபோல் எங்கும் நிறைந்த இரு பொருட்கள் எப்படி இருக்க முடியும்? முடியா தல்லவா? அதுபோல் எல்லையற்ற இருவர் இருக்க முடியாது. எனவே இருப்பது ஒரே பொருளான ஆன்மாதான். நீங்கள்,

நான், இந்தப் பிரபஞ்சம் எல்லாமே ஒன்றுதான். அது பலவாகத் தோன்றுகிறது, அவ்வளவுதான். 'எப்படி ஒன்றாகிய நெருப்பு, உலகில் புகுந்து பலவிதங்களில் காட்சி அளிக்கிறதோ, அப்படியே எல்லோருக்கும் ஆன்மாவான அந்த ஒரே ஆன்மா வும் எல்லா உருவங்களாகவும் காட்சி அளிக்கிறது.'

இப்போது கேள்வி ஒன்று எழுகிறது: இந்த ஆன்மா பூரணமானது, தூய்மையானது, இதுவே பிரபஞ்சத்திலுள்ள ஒரே ஆன்மா என்பது உண்மையானால், அது தூய்மையற்ற உடல், பாவ உடல், நல்ல உடல் முதலியவற்றுள் புகும்போது அதற்கு என்ன நேர்கிறது? அவற்றுள் அது எப்படிக் குறைவற்ற தாக இருக்க முடியும்? 'ஒவ்வொரு கண்ணின் பார்வைக்கும் அடிப்படைக் காரணமாக இருப்பது சூரியன். என்றாலும் எந்தக் கண்களில் உள்ள குற்றமும் அதனை எந்தவிதத்திலும் பாதிப்பதில்லை. காமாலை நோயாளி எல்லாவற்றையும் மஞ்சள் நிறமாகக் காண்கிறான். அவன் பார்வைக்கும் ஆதாரம் சூரியன் தான். ஆனால் இந்தக் குறை சூரியனைப் பாதிப்பதில்லை. இதைப்போலவே ஒன்றேயான இந்தப் பரம்பொருள் எல்லா வற்றிற்கும் ஆன்மாவாக இருந்தாலும், வெளியே உள்ள தூய்மையோ, தூய்மையின்மையோ அதைப் பாதிப்பதில்லை.

'கணத்திற்குக் கணம் மாறிக்கொண்டிருக்கும் நிலையற்ற இந்த உலகில் மாறுதலற்ற நிலையான ஒன்றை யார் அறி கிறானோ, உணர்வற்றதான இந்த உலகில் உணர்வுப் பொருளை யார் அறிகிறானோ, வேற்றுமை நிறைந்த இந்த உலகில் ஒன்றே யான பரம்பொருளை யார் அறிகிறானோ, அவ்வாறு அறிந்து யார் அதைத் தன்னுள்ளும் காண்கிறானோ, அவனுக்கே பேரின்பம் உரியதாகும்; வேறு யாருக்கும் அல்ல, வேறு யாருக்கும் அல்ல. அங்கே சூரியன் ஒளிர்வதில்லை; நட்சத்திரங்கள் பிரகாசிப்பதில்லை; மின்னல் மின்னுவதில்லை; பிறகு நெருப்பிற்கு இடம் எங்கே?அவர் ஒளிர்வதால்தான் மற்றவை சுடர் விடுகின்றன. அவரது ஒளியால்தான் மற்ற எல்லா பொருட்களும் ஒளி பெறுகின்றன. மனத்தை அலைக்கழிக்கும் ஆசைகளெல்லாம் அடங்கியபின், இறக்கும் இயல்புடையவனான மனிதன் இறப்பற்றவன் ஆகிறான்; பிரம்மத்தை அடைகிறான். மனத்தின் கோணல்கள் எல்லாம் நிமிர்ந்தவுடன், இதயத்தின் முடிச்சுக்களெல்லாம் அறுபட்ட வுடன், இறக்கும் இயல்புடையவன் இறப்பற்றவன் ஆகிறான். இதுதான் வழி. இந்த ஆராய்ச்சி நமக்கு இன்பம் தரட்டும்,

நம்மைக் காக்கட்டும், நமக்கு ஆற்றலைத் தரட்டும், நமக்குள் சக்தி ஆகட்டும். நாம் ஒருவரை ஒருவர் வெறுக்காமல் இருப்போமாக! எல்லோருக்கும் அமைதி உண்டாகட்டும்!'

வேதாந்தத் தத்துவத்தில் இதுபோன்ற சிந்தனைகளையே நீங்கள் காண முடியும். உலகம் முழுவதும் காணப்படும் சிந் தனைகளுக்கு முற்றிலும் வேறுபட்ட சிந்தனை ஒன்றை நாம் இங்கே காண்கிறோம். பிற நூல்களைப் போலவே வேதங்களின் மிகப் பழைய பகுதிகளிலும் உண்மையை வெளியில் தேடும் முறையே இருந்தது. மிகமிகப் பழைய நூல்கள் சிலவற்றுள் ஒரு பிரச்சினை எழுப்பப்பட்டது. 'தொடக்கத்தில் என்ன இருந்தது? உள்ளது, இல்லாதது இரண்டும் இல்லாத நிலையில், இருளை இருள் மூடியிருந்த நிலையில் இவற்றையெல்லாம் படைத் தவர் யார்?' தேடல் இவ்வாறு தொடங்கியது. அந்த நூல்கள் தேவதைகள், தேவர்கள் போன்ற பலவற்றைப்பற்றிப் பேசத் தொடங்கின. பிறகு இவற்றால் எல்லாம் பயனில்லை என்று அவற்றை விட்டுவிட்டன.

அந்த நாட்களில் அவர்கள் உண்மையை வெளியில் தேடி னார்கள். அவர்களால் ஒன்றையும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் பிற்காலத்தில் அவர்கள், தன்னில் தானாக விளங்கும் அந்த ஒன்றேயான பரம்பொருளை உள்ளே தேட வேண்டிய தாயிற்று என்று வேதங்களில் படிக்கிறோம். விண்மீன்கள், வானவெளி மற்றும் அண்டவெளி என்று இந்தப் பிரபஞ்சம் முழுவதும் தேடினாலும் பலன் ஒன்றும் கிடைப்பதில்லை; பிறப்பு, இறப்பு என்ற பிரச்சினைக்குத் தீர்வு கிடைப்பதில்லை என்பதுதான் வேதங்களின் அடிப்படைக் கருத்தாகும்.

எனவே நமக்குள்ளே உள்ள அற்புத எந்திரத்தை ஆராய நேர்ந்தது. இந்த ஆராய்ச்சியின் விளைவாகப் பிரபஞ்ச ரகசியம் விளங்கத் தொடங்கியது. நட்சத்திர மண்டல ஆராய்ச்சியோ சூரியனைப் பற்றிய ஆராய்ச்சியோ, இந்தப் பலனை அளிக்கவில்லை. மனிதனை அணுவணுவாகப் பிரித்து ஆராய வேண்டியிருந்தது—அவனது உடலை அல்ல; அவனது ஆன்மாவை. இந்த ஆன்மாவில் அவர்களின் பிரச்சினைக்கு விடை கிடைத்தது. அவர்கள் கண்ட விடை என்ன? உடலுக்கும் மனத்திற்கும் உள்ளே அழியாத உண்மைப் பொருள் இருக் கிறது. இந்தப் பொருளுக்குப் பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை. தானே தானாக நிற்கும் இது எங்கும் நிறைந்தது, ஏனெனில் இதற்கு உருவம் இல்லை. உருவமோ வடிவமோ

இல்லாதது, காலம் மற்றும் இடத்தால் எல்லைப்படுத்தப் படாதது, ஓரிடத்தில் மட்டும் இருப்பது என்பது இயலாத காரியம். எப்படி இருக்க இயலும்? அது எங்கும் இருக்கிறது; அனைவரிடமும் சமமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

மனித ஆன்மா என்பது என்ன? கடவுள் ஒருவர் உண்டு, அவரைத் தவிர பல ஆன்மாக்களும் உண்டு; தன்மையிலும், உருவிலும் எல்லா விஷயங்களிலுமே கடவுளிலிருந்து என்றும் வேறுபட்டவை இவை என்று சொல்லும் ஒரு பிரிவினர் உள்ளனர். இது துவைதம். இது மிகமிகப் பழைய, பண்படாத கருத்து.

'எல்லையற்ற இறைவனின் அம்சமே ஆன்மாக்கள்' என்று இன்னொரு பிரிவினர் இவர்களுக்கு விடை கூறுகின் றனர். இந்த உடலே தனியான ஒரு பிரபஞ்சம்; உடலுக்குப் பின் மனம், அதற்குப்பின் ஜீவாத்மா உள்ளது. இதுபோலவே இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே ஓர் உடம்பு; இதற்குப்பின் பிரபஞ்ச மனமும், அதற்கும் பின்னால் பிரபஞ்ச ஆன்மாவும் உள்ளன. எப்படி மனித உடல், பிரபஞ்ச உடலின் ஓர் அம்சமோ, அப் படியே மனித மனம் பிரபஞ்ச மனத்தின் ஓர் அம்சம்; மனித ஆன்மா பிரபஞ்ச ஆன்மாவின் ஓர் அம்சம் என்கிறது விசிஷ் டாத்வைதம் என்ற பிரிவு.

பிரபஞ்ச ஆன்மா எல்லையற்றது என்பது நமக்குத் தெரி யும். எல்லையற்ற ஒன்றிற்குப் பகுதிகள் எப்படி இருக்க முடியும்? அது எப்படி உடையவோ பகுபடவோ முடியும்? எல்லையற்ற இறைவனின் ஓர் அம்சம் நான் என்று சொல்வது கவிதைநயமாக விளங்கலாம். ஆனால் சிந்திப்பவர்கள், இது முரணான பேச்சு என்று ஒதுக்கிவிடுவார்கள். எல்லையற்ற ஒன்றைப் பகுப்பது என்றால் என்ன? சிறு துண்டுகளாகப் பகுக்கவோ பிரிக்கவோ செய்வதற்கு அது என்ன பருப்பொருளா! எல்லையற்றதைப் பகுக்கவே முடியாது. அப்படி முடியுமானால் அது எல்லை யற்றதாக இருக்க இயலாது. முடிவு என்ன? பிரபஞ்ச ஆன்மா வாக இருப்பது எதுவோ, அதுவே நீ. நீ அதன் அம்சம் அல்ல, முழுமை. இறைவன் ஆகிய முழுமை நீயே.

பிறகு இந்த வேறுபாடுகள் எல்லாம் என்ன? பல கோடி உயிர்களை நாம் பார்க்கிறோமே! அவை எல்லாம் என்ன? பல கோடி நீர்த்துளிகளில் சூரியன் பிரதிபலிக்கும்போது ஒவ் வொரு துளியிலும் அதன் முழு உருவமும் தெரிகிறது. ஆனாலும் அவை பிரதிபிம்பங்கள் மட்டுமே. உண்மை சூரியன் ஒன்றே

ஒன்றுதான். இப்படியே நம் ஒவ்வொருவரிலும் இருப்பதாகத் தோன்றும் ஆன்மா இறைவனின் பிரதிபிம்பமே; வேறு எதுவும் அல்ல. இந்தப் பிரதிபிம்பங்களுக்கெல்லாம் ஆதாரமான உண்மைப் பொருள் ஒன்றான இறைவனே. அங்கே நாம் எல்லோரும் ஒருவரே. ஆன்மா என்ற நிலையில் உலகத்தில் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது; அதுவே எனக்குள்ளும் உங்களுக்குள்ளும் இருக்கிறது; அது ஒன்றேதான். அந்த ஒன்றேதான் இந்தப் பல்வேறு உடல்களில் பல ஆன்மாக்களாகப் பிரதிபலிக்கிறது. இந்த உண்மை நமக்குத் தெரிவதில்லை. நாம் ஒவ்வொருவரும் வேறுபட்டவர்கள், இறைவனுக்கு அன்னியமானவர்கள் என்று நினைக்கிறோம். இப்படி நினைக்கும்வரை உலகம் துக்கம் நிறைந்ததாகவே இருக்கும். இது மாயை.

துயரத்திற்கு மற்றொரு காரணம் பயம். ஒருவன் ஏன் மற்றொருவனுக்குத் தீமை செய்கிறான்? தனக்கு வேண்டிய அளவு இன்பம் கிடைக்க மற்றவன் தடையாவானோ என்ற பயம் காரணமாகத்தான். தனக்கு வேண்டிய பணம் கிடைக்க மற்றவன் தடையாவானோ என்று ஒருவன் அஞ்சுகிறான். இந்த அச்சம் காரணமாக, மற்றவர்களைத் துன்புறுத்திக் கொள்ளையடிக்க அவன் முற்படுகிறான். உள்ளது ஒன்றுதான் என்றால், பயத்திற்கு இடம் ஏது? என் தலையில் இடி விழுகிறது என்றால், அந்த இடி நானேதான். ஏனெனில் இருப்பது நான் மட்டும்தானே! கொள்ளை நோயும் நானே; புலியும் நானே; சாவும் நானே. வாழ்வு, சாவு—இரண்டும் நானே. பிரபஞ்சத்தில் இரண்டு உள்ளது என்ற நினைப்பிலிருந்து பயம் உண்டாகிறது என்பதை நாம் காண்கிறோம்.

'பிறரை நேசியுங்கள்' என்ற உபதேசத்தை நாம் அடிக்கடிக் கேட்கிறோம். ஏன்? உபதேசித்துவிட்டார்கள், ஆனால் அதன் விளக்கம் இங்கே இருக்கிறது. நான் ஏன் பிறரை நேசிக்க வேண்டும்? ஏனெனில் அவர்களும் நானும் ஒன்றல்லவா? நான் ஏன் என் சகோதரனிடம் அன்பாக இருக்க வேண்டும்? நானும் அவனும் ஒன்று என்பதால்தான். இந்த ஒருமை, பிரிவற்ற இந்தத் தன்மை பிரபஞ்சத்தில் நிலவுகிறது. நம் காலடியில் நெளியும் மிகத் தாழ்ந்த புழுவிலிருந்து மிக உயர்ந்த பிராணிவரை உள்ள உயிரினங்களுக்கெல்லாம் உடல்கள் பலவானாலும், ஆன்மா ஒன்றுதான். எல்லா வாய்களின்மூலமும் நீ உண்கிறாய்; எல்லா கைகளின்மூலமும் நீ உழைக்கிறாய்; எல்லா கண்களின் மூலமும் நீ காண்கிறாய். பலகோடி உடல்களின்மூலம்

ஆரோக்கிய வாழ்வை அனுபவிப்பதும், பல கோடி உடல்களின் மூலம் நோயால் துன்புறுவதும் நீதான்.

இந்த எண்ணம் உறுதி பெற்று, அனுபவமாகி, இதை நாம் கண்டு உணர்ந்தோமானால், அந்த நிமிடத்திலேயே துக்கமும் பயமும் அழிந்துவிடும். எனக்கு மரணம் ஏது? எனக்கு அப்பால் வேறு எதுவுமே இல்லையே! பயம் ஒழிகின்ற அன்றுதான் முடிவற்ற இன்பமும் எல்லையற்ற அன்பும் நெஞ்சில் இடம்பெறும். பிரபஞ்சப் படைப்புகள் அனைத்திடமும் தோன்றும் என்றும் மாறாத இரக்கமும், அன்பும், அழிவற்ற ஆனந்தமும் மனிதனை எல்லாவற்றிற்கும் மேலாக உயர்த்தி விடுகின்றன. இவற்றிற்குப் பிரதிச்செயல் என்பது ஒன்றுமே இல்லை; எந்தத் துக்கமும் அதைத் தொட முடியாது. ஆனால் இந்தப் பிரபஞ்ச சம்பந்தமான, உண்பது, பருகுவது போன்ற சிறிய செயல்களுக்குப் பிரதிச்செயல்கள் கண்டிப்பாக உண்டு. நான் பிரபஞ்சத்திலிருந்து வேறுபட்டவன்; இறைவனிலிருந்து வேறுபட்டவன் என்ற இந்தத் துவைத எண்ணமே, இந்த இன்பதுன்பங்களுக்கு முற்றிலும் காரணம். 'நானே அவன்; நானே இந்தப் பிரபஞ்சத்தின் ஆன்மா, நான் எல்லையற்ற பேரின்ப வடிவினன், என்றென்றும் சுதந்திரமானவன்' என்ற அனுபவம் உண்டான உடனே உண்மை அன்பு தோன்றும், பயம் பறந்துவிடும்; துயரங்களெல்லாம் ஒழியும்.

## 6. முண்டக உபநிடதம்

29 ஜனவரி, 1896

சென்ற ஞானயோகச் சொற்பொழிவில் ஓர் உபநிடதம் பற்றிப் பார்த்தோம். இன்று வேறொன்றைப் பார்ப்போம். தேவர்களில் முதல்வரும், இந்த யுகத்தின் தலைவரும், பாது காவலரும் ஆனவர் பிரம்மா. எல்லா ஞானங்களுக்கும் சாரமான பிரம்மஞானத்தை அவர் தமது மகனான அதர்வனுக்கு அளித் தார். அதர்வன் தன் மகனான அங்கிரசுக்கும், அங்கிரஸ் தன் மகனான பரத்வாஜருக்கும் அதனை அளித்தார். இவ்வாறு தலைமுறை தலைமுறையாக அது வந்தது.

சௌனகன் என்றொரு செல்வந்தன் இருந்தான். கற்பதற் காக அவன் இந்த அங்கிரஸிடம் சென்றான். அவரை அணுகி, 'ஐயா, எதை அறிவதால் எல்லாம் அறியப்படுமோ அதை எனக்கு உபதேசிக்க வேண்டும்' என்று கேட்டுக்கொண்டான்.

ஒன்று மேலானது, மற்றொன்று தாழ்ந்தது. வேதங்களின் பல்வேறு அங்கங்களுள் ஒன்று ரிக்வேதம். வேறோர் அங்கம் சிக்ஷை. எல்லா விஞ்ஞானங்களும் தாழ்ந்தவையே. எது உயர்ந்த விஞ்ஞானம்? எந்த விஞ்ஞானத்தின்மூலம் மாறாத பரம் பொருளை அடைவோமோ, அது மேலான விஞ்ஞானம். அந்தப் பரம்பொருளைக் காண முடியாது, உணர முடியாது, குறிப்பிட்டுக் கூற முடியாது. அது நிறமற்றது, கண்கள் அற்றது, காதுகள் அற்றது, கால் அற்றது, மூக்கு இல்லாதது, என்றென் றும் உள்ளது, எங்கும் நிறைந்தது, எல்லாவற்றையும் ஊடுருவி யது, தனியானது. அதிலிருந்தே எல்லாம் வெளிவந்துள்ளன.

மகான்கள் அந்தப் பரம்பொருளைக் காண்கிறார்கள். அவரைக் காண்பதே மேலான ஞானம்.

சிலந்தி தன் உடலிலிருந்தே நூலை உருவாக்கி வலை பின்னுகிறது, பின்னர் தன்னுள்ளேயே அதனை இழுத்துக் கொள்ளவும் செய்கிறது. செடிகள் தங்கள் இயல்பினாலேயே வளர்கின்றன. இவை தனித்தனியாக, ஒன்றிற்கொன்று மாறு பட்டதாகக் காட்சியளிக்கின்றன. இதயம் மனிதனின் மற்ற அங்கங்களிலிருந்து வேறுபட்டதாகத் தோன்றுகிறது; செடிகள்

பூமியிலிருந்து வேறுபட்டதாகத் தோன்றுகின்றன. நூல் சிலந்தியிலிருந்து வேறுபட்டதாகத் தோன்றுகிறது. ஆனாலும் பூமி, சிலந்தி—இவை காரணங்கள். இவற்றிலேயே செடிகள், நூல் முதலியவை செயல்படுகின்றன.

மாறாத இந்தப் பரம்பொருளிலிருந்து பிரபஞ்சம் தோன்றியுள்ளது. முதலில் பரம்பொருளில் ஆசை எழுகிறது. அதிலிருந்து ஹிரண்யகர்ப்பன் அல்லது படைப்புக் கடவுள் தோன்றினார். அதிலிருந்து உணர்வு, அதிலிருந்து ஜடப்பொருளும் எல்லா உலகங்களும் தோன்றின.

முக்திக்கும் சரி, சுகபோகங்களுக்கும் சரி, வேதங்களில் பல்வேறு வழிகள் கூறப்பட்டுள்ளன. இவற்றையெல்லாம் எப்படிச் சென்றடைவது என்பதும் சொல்லப்பட்டுள்ளது.

ஒருவன் இறக்கும்போது சூரியக் கிரணங்கள் வழியாகப் பல்வேறு அழகிய உலகங்களுக்குச் செல்கிறான். அங்கிருந்து சொர்க்கத்திற்குச் செல்கிறான். அங்கே சில காலம் வாழ்ந்த பிறகு அவன் கீழே வர வேண்டியுள்ளது.

இங்கே இரண்டு வார்த்தைகள் உள்ளன—இஷ்டம், பூர்த்தம். யாகங்கள் போன்ற சடங்குகள் இஷ்டம். சாலைகள் அமைப்பது, மருத்துவமனைகள் கட்டுவது போன்றவை பூர்த்தம்.

'மதச் சடங்குகளும் நற்பணிகள் செய்வதும்தான் மிக உயர்ந்தவை, அதற்குமேல் உயர்ந்தவை எதுவும் இல்லை என்று நினைப்பவர்கள் முட்டாள்களே.' அவர்கள் விரும்புவதை அடைகிறார்கள். சொர்க்கங்களுக்குச் செல்கிறார்கள், சுக போகங்கள் ஒவ்வொன்றையும் அனுபவிக்கிறார்கள். கூடவே ஒவ்வொரு துக்கத்தையும் அனுபவிக்கிறார்கள். ஆனால் எதற்கும் முடிவு இருக்கத்தானே வேண்டும்! அவை முடிந்ததும் கீழே வருகிறார்கள், மனிதர்களாகப் பிறக்கிறார்கள், இன்னும் கீழான பிறவியை அடைகிறார்கள்.

உலகைத் துறந்து, புலன்களை அடக்கக் கற்றுக்கொண்டவர்கள் காடுகளில் வாழ்கிறார்கள். அவர்கள் இறந்ததும் சூரியக் கிரணங்களின் வழியாகச் சென்று பரம்பொருள் வாழும் உலகை அடைகிறார்கள்; மரணமிலாப் பெருநிலையை எய்துகிறார்கள்.

மேலோர் இவ்வாறு நல்ல மற்றும் தீய செயல்களின் பலன்களை ஆராய்ந்து, எல்லா கடமைகளையும் விட்டுவிடுகிறார்கள். எங்குச் சென்றால் திரும்பிவர வேண்டாமோ, எந்த இடத்தில் மாற்றங்கள் எதுவும் இல்லையோ அந்த இடத்தை அறிய

அவர்கள் விரும்புகிறார்கள். அதற்காக, கையில் யாகத்திற்கான விறகுகளுடன் குருவை நாடுகிறார்கள். குரு என்பவர் வேறு எந்தப் பொருளையும் பெற்றுக்கொள்ள மாட்டார் என்பதற் காகத்தான் விறகை எடுத்துச் செல்கிறார்கள். குரு இயற்றும் யாகத்திற்கு அது உதவியாக அமையும் என்று எங்கள் நாட்டில் கருதுகிறார்கள்.

குரு என்பவர் யார்? யார் சாஸ்திரங்களை அறிந்தவரோ, யாருடைய மனம் எப்போதும் பிரம்மத்திலேயே சஞ்சரிக் கிறதோ, செயல்புரிவது, சொர்க்கத்திற்குச் செல்வது போன்ற வற்றைப்பற்றி யார் கவலைப்படுவதில்லையோ அவரே குரு.

யார் சீடன்? யார் தன் மனத்தை அடக்கியவனோ, யார் அமைதியை அடைந்தவனோ, யார் ஆசைகளால் மனத்தில் எழுகின்ற பேரலைகளை ஒடுக்கியவனோ, யார் 'நான் இதைச் செய்வேன், அதைச் செய்வேன்' என்பதெல்லாம் மனத்தை அலைக்கழிப்பது என்பதை உணர்ந்தவனோ, பெயர்புகழை நாடியே மனிதன் எல்லா வேலைகளையும் செய்கிறான் என் பதை யார் உணர்ந்தவனோ அவனே சீடன்.

இத்தகைய சீடனிடம் அந்த மேலான குரு பிரம்ம ஞானத்தைப் போதிக்கிறார்—'மகனே, பற்றியெரியும் நெருப் பிலிருந்து அதே தன்மைகொண்ட தீக்கதிர்கள் எப்படி எழு கின்றனவோ, அவ்வாறே மாறாத பரம்பொருளிலிருந்து இந்த எல்லா உருவங்களும் கருத்துக்களும் படைப்பும் வெளிவரு கின்றன. அவை மீண்டும் அந்தப் பரம்பொருளையே சென்றடை கின்றன.'

இந்தப் பரம்பொருள் அழிவற்றவர், என்றென்றும் இருப் பவர், உருவமற்றவர், தொடக்கம் இல்லாதவர், உயிர் மனம் அனைத்தையும் கடந்து, அனைத்திற்கும் வெளியில் நிற்பவர், தூயவர், மாற்றமில்லாத நிலைக்கு அப்பாற்பட்டவர், அனைத் தையும் கடந்தவர். அவரிடமிருந்தே பிராணன், மனம், புலன்கள், காற்று, ஒளி, தண்ணீர், அனைத்தையும் தாங்குகின்ற இந்தப் பூமி என்று எல்லாம் தோன்றியுள்ளன. சொர்க்கங்கள் அவரது தலை, சூரியனும் சந்திரனும் அவரது கண்கள், திசைகள் அவரது காதுகள், வேதங்களின் எல்லையற்ற அறிவு அவரது வாக்கு, காற்று அவரது வாழ்வு, பிரபஞ்சம் அவரது இதயம், பூமி அவரது பாதம். ஒவ்வோர் உயிரின் அழிவற்ற ஆன்மா அவரே. வேதங்களும் தேவர்களும் அவரிலிருந்தே தோன்றினர். சாதாரண மனிதர்களைவிட மிக உயர்ந்தவர்களும் தேவர்களுக்கு

ஏறக்குறைய நிகரானவர்களுமான சாத்தியர்கள் அவரிலிருந்தே வெளிப்பட்டனர். எல்லா மனிதர்களும், எல்லா மிருகங்களும், எல்லா உயிர்களும், எல்லா மன ஆற்றல்களும், எல்லா உண்மையும், எல்லா நல்லொழுக்கமும் அவரிலிருந்தே தோன்றின. கர்மேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள், உயிர்கள் வாழ்கின்ற ஏழு உலகங்கள் எல்லாம் அவரிலிருந்தே வந்தன. கடல்களும் சமுத்திரங்களும் அவரிலிருந்தே உண்டாயின. ஆறுகளும் நதிகளும் அவரிலிருந்தே பாய்ந்து கடலில் கலக்கின்றன. எல்லா செடிகளும் எல்லா திரவங்களும் அவரிலிருந்தே தோன்றின. எல்லாவற்றின் உள்ளேயும் உறைபவர் அவரே. ஒவ்வோர் உயிரின் ஆன்மா அவரே. இந்த மேலான பரம்பொருள், ஒன்றேயான இறைவன்—அவரே பிரம்மம், அவரே செயல், அவரே யாகம், அவரே பிரபஞ்சம், அவரே மும்மூர்த்திகள்.

அவரை அறிபவன் அறியாமைத் தளையிலிருந்து தன் ஆன்மாவை விடுவித்து முக்தி பெறுகிறான். அவரை எப்படி அறிவது? வேதாந்த அறிவாகிய உபநிடதம் என்னும் வில்லை எடுத்துக்கொள். வழிபாடு என்கின்ற கூரான அம்பை அதில் வை. வில்லின் நாணை எப்படி இழுப்பது? உன் மனம் இறைவனின் உருவத்தை எடுக்கச் செய்வதன்மூலம்; நீயே அவன் என்பதை உணர்வதன்மூலம். இவ்வாறு இலக்காகிய பிரம்மத்தை அடைய வேண்டும். மனித மனமே அம்பு. நாம் வீழ்த்த வேண்டிய இலக்கு பிரம்மம். மனத்தை ஒருமுகப்படுத்துவதன்மூலம் இதைச் செய்ய வேண்டும். அம்பு இலக்கைத் தாக்கும்போது அதை ஊடுருவி அதனுடன் ஒன்றாகக் கலக்கிறது. அதுபோலவே நமது ஆன்மாவாகிய அம்பும் இலக்காகிய பிரம்மத்துடன் ஒன்றுபடுமாறு எய்ய வேண்டும்.

உபநிடதங்களின் சில பகுதிகள் மகா வாக்கியங்கள் என்று கூறப்படுகின்றன. இவை அடிக்கடி மேற்கோள் காட்டப்படுகின்றன. எல்லா வார்த்தைகளும் ஆன்மாவிலேயே உள்ளன, மற்ற பேச்சுக்களால் என்ன பயன்? இந்த வாழ்க்கையிலேயே பிரபஞ்சத்துவத்தை அடைவதற்கான பாலம் இது.

ஒரு சக்கரத்தின் எல்லா ஆரங்களும் மையத்தில் கூடுவது போல் உடம்பின் ரத்தக் குழாய்கள் எல்லாம் இதயத்தில் கூடுகின்றன. அந்த இதயத்தில் ஓம் என்னும் மந்திரத்தைத் தியானம் செய். உனக்கு வெற்றி உண்டாகட்டும். நீ வெற்றிகரமாக லட்சியத்தை அடைவாய். எல்லா இருளையும் கடந்து சென்று, எல்லாம் அறிந்தவரான இறைவனை அடைவாய். அவரது

மகிமை வானில் நிலவுகிறது, பூமியில் நிலவுகிறது, எங்கும் நிலவுகிறது. மனமாக, பிராணனாக, உடம்பின் தலைவனாக, உணவில் உறைபவனாக, வாழ்க்கைச் சக்தியாக இருப்பவர் அவரே. இது அதிகமாக மேற்கோள் காட்டப்படும் மற்றொரு வாக்கியமாகும்.

யாருடைய இயல்பு பேரானந்தமோ, யார் மரணமிலாப் பெருநிலையாக ஒளிர்கிறாரோ அவரை முனிவர்கள் மேலான ஞானத்தின்மூலம் காண்கிறார்கள். இரண்டு வார்த்தைகள் உள்ளன—ஒன்று ஞானம்; மற்றொன்று விஞ்ஞானம். ஞானம் என்பதை அறிவு என்றும் விஞ்ஞானம் என்பதை அனுபூதி என்றும் மொழிபெயர்க்கலாம்.

இந்த மேலான ஞானத்தால் ஆன்மாவை உணர்ந்தவன் என்ன ஆவான்? அவனது இதயத்தின் முடிச்சுக்கள் எல்லாம் வெட்டப்படுகின்றன. உண்மையைத் தரிசித்த பின்னர் உன்னிடமிருந்து இருள் அகன்றுவிடுகிறது. நீ எப்படிச் சந்தேகம்கொள்ள முடியும்? பல்வேறு அறிவியல்கள், பலவகைத் தத்துவங்கள் என்று சண்டையிட்டுக் கொண்டிருக்கின்ற உனது முட்டாள்தனத்தை என்னென்று சொல்வது! உண்மையை உணர்ந்தபின் அவற்றைக் கண்டு நீ சிரிப்பாய். உனது சந்தேகங்கள் அகன்றுவிடும், செயல்களெல்லாம் உன்னை விட்டு விலகிவிடும்.

அனைத்திற்கும் அப்பால் பொன்னிறப் பேரொளி திகழ்கிறது. மாசற்ற, ஒப்புவமையற்ற அவரே பிரம்மம். ஒளியும், ஒளிக்கெல்லாம் ஒளியும், அனைத்தையும் அறிபவரும், ஆன்மாவும் அவரே. அவரை அப்படியே நீ அறி. அங்கே சூரியன் ஒளிர்வதில்லை, சந்திரன் ஒளிர்வதில்லை, நட்சத்திரங்கள் ஒளிர்வதில்லை, மின்னல் மின்னுவதில்லை. அந்த நிலை மனம் சம்பந்தப்பட்டது; அது மன ஆழங்களில் நிகழ்கின்ற ஒன்று. அவர் ஒளிர்வதாலேயே எல்லாம் ஒளிர்கின்றன. அவர் உள்ளே ஒளிரும்போது மனிதனே ஒளிர்கிறான். பிரபஞ்சமே அவரது ஒளியால் ஒளிர்ந்து திகழ்கிறது. உபநிடதங்களைப் படிக்கும்போது இத்தகைய பகுதிகளைப் படியுங்கள்.

இந்து மனத்திற்கும் ஐரோப்பிய மனத்திற்கும் வேறுபாடு உள்ளது. மேலைநாட்டு முறையில் தனிப்பொருளை ஆராய்ந்து பொதுமை அடையப்படுகிறது. இந்தியாவில் இதற்கு மாறான முறை பின்பற்றப் படுகிறது. உபநிடதங்களில்போல் தத்துவ நுண்மை (Metaphysical Sublimity) வேறெங்கும் இல்லை. அவை உங்கள் புலன்களைக் கடந்து, சூரியனையும்

நட்சத்திரங்களையும் கடந்து, எல்லையற்ற மடங்கு நுண்மைக்கு உங்களை அழைத்துச் செல்லும்.

முதலில் இறைவன் புலன்கள் சம்பந்தப்பட்ட நுண்மையாக வர்ணிக்கப்படுகிறார். அதாவது அவரது பாதங்களே பூமி, அவரது தலையே விண்ணுலகம் என்றெல்லாம் கூறப்படுகிறது. ஆனால் இது, குரு என்ன சொல்ல விரும்பினாரோ அதை வெளிப்படுத்தவில்லை. எனவே அவர் இதனை முதலில் சீடனுக்குச் சொல்லிவிட்டு, பின்னர் அனைத்திற்கும் அப்பாலுள்ள மிக உயர்ந்த கருத்தை படிப்படியாக அவனுக்குக் கொடுக்கிறார். அந்தக் கருத்து மிக உயர்ந்ததாக இருப்பதால் அவரால் அதனை உடன்பாட்டு முறையில் சொல்ல முடிய வில்லை. எனவே உருவகமாகக் கூறுகிறார்.

ஒரே மரத்தில் இரு பறவைகள் அமர்ந்திருக்கின்றன. அவற் றின் இறக்கைகள் மிகவும் அழகாக உள்ளன. அந்தப் பறவைகள் எப்போதும் சேர்ந்தே இருக்கின்றன, சேர்ந்தே வாழ்கின்றன. அவற்றுள் ஒன்று அந்த மரத்திலுள்ள பழங்களை உண்கிறது. மற்றொன்று எதையும் உண்ணாமல் அதைப் பார்த்தவாறே உள்ளது. நமது உடம்பிலும் இரு பறவைகள் உள்ளன. அவையும் சேர்ந்தே இருக்கின்றன. அவை இரண்டின் உருவமும் ஒன்று போலவே உள்ளன. அவற்றின் இறக்கைகளும் அழகாக உள்ளன. அவற்றுள் ஒன்று மனித ஆன்மா, அதுவே பழங்களையெல்லாம் சுவைத்தபடி உள்ளது. மற்றொன்று இறைவன். அவர் நமது உடலில் உறைகிறார். அவரே நமது ஆன்மாவின் ஆன்மா.அவர் நற்பலன்கள், தீய பலன்கள் எதையும் ஏற்றுக் கொள்வதில்லை; சாட்சியாக நின்று அவற்றைப் பார்க்க மட்டுமே செய்கிறார்.

ஆனால் மற்ற பறவையான மனிதன் தன்னைப் பலவீனன் என்றும், சிறியவன் என்றும், அற்பன் என்றும் கருதுகிறான்; எல்லாவிதமான பொய்களையும் சொல்கிறான். 'நான் ஆண், நான் பெண், நான் சிறுவன், நான் நன்மை செய்வேன், நான் தீமை செய்வேன், நான் சொர்க்கத்திற்குப் போவேன்' என்று ஏதேதோ கூறுகிறான்; ஜன்னி கண்டவன்போல் உளறுகிறான்; செயல்படுகிறான். அவனது நோயின் அடிப்படை என்னவென் றால் பலவீனம். அதன் காரணமாக அவன் எவ்வளவோ துன்புறு கிறான். தன்னை ஒன்றுக்கும் உதவாதவன் என்றே அவன் கருதுகிறான். அவன் சாதாரணமானவன். அவனை யாரோ தேவர்களும் தேவதைகளும் ஆள்கிறார்கள். அவனுக்கு மகிழ்ச்சி என்பதே இல்லை.

அதே மனிதன் இறைவனைக் காணும்போது, யோகியாகும் போது, மற்றொரு பறவையாகிய இறைவன் தன் மகிமையில் தானே திளைத்து வீற்றிருப்பதைக் காண்கிறான். 'இறைவன் என்று நான் அழைத்தது என் மகிமையையே. என்னைச் சிறியவனாக எண்ணிக்கொண்டு துன்பத்தில் உழன்றது வெறும் மாயை. அப்படி ஒன்றே கிடையாது. நான் ஒருபோதும் ஆணாகவோ பெண்ணாகவோ வேறு எதுவாகவோ இருந்ததில்லை.' இவ்வாறு உணர்ந்து அவன் துன்பங்களிலிருந்து விடுபடுகிறான்.

அந்தப் பொன்னிறப் பறவையை, இறைவனை, பிரபஞ்சத் தலைவனைக் கண்ட மகான் இன்பதுன்பச் செயல்களாகிய மாசுகளிலிருந்து விடுபடுகிறார். நற்செயல்களும் தீயசெயல்களைப் போலவே மாசு உடையதுதான். இந்த நிலையை அடைந்தபிறகு அவர் மேலான சமத்துவ நிலையை அடைகிறார். எல்லா ஆன்மாக்களுக்கும் ஆன்மா நானே. எல்லா ஆன்மாக்கள் மூலம் ஒளிர்பவன் நானே. ஆண், பெண், பசு, நாய், மற்ற மிருகங்கள், பாவம், பாவி, துறவி, அரசன் எல்லோரிலும் இருப்பவன் நானே. எங்கும் நிறைந்திருப்பவன் நானே என்பதை அந்த மகான் உணர்கிறார். அதை உணர்ந்து மௌனியாகிறார். அவர் யாரையும் விமர்சிப்பதில்லை, யாரையும் ஏசுவதில்லை, யாருக்கும் தீங்கு நினைப்பதில்லை. அவரது ஆசைகள் எல்லாம் ஆன்மாவில் ஒடுங்கிவிட்டன. இத்தகைய ஞானிகள் பிரம்மத்தைத் தவிர வேறு எதையும் காண்பதில்லை. இதுவே மேலான பிரம்மஞானிகளின் அடையாளம். இந்த எல்லா பொருட்களுடனும் அவர் விளையாடுகிறார். மிகச் சாதாரணமான புழுவிலிருந்து மிக மேலான தேவர்கள்வரை எல்லாம் அவரே.

இந்தக் கருத்துக்களைத் தெளிவாக்க வேண்டும். நமக்குச் சொர்க்கம் மற்றும் அதுபோன்ற உலகங்கள் தேவையானால், அவை கிடைக்கும் என்ற கருத்து முதலில் காட்டப்பட்டது; வேதங்களின் மொழியில் சொல்வதானால், ஒருவன் விரும்பியது கிடைக்கும்.

ஆன்மா வருவதோ போவதோ இல்லை என்பதை முந்தைய சொற்பொழிவுகளில் நான் கூறியிருந்தேன். ஆன்மாவிற்குப் பிறப்போ இறப்போ கிடையாது. அது எங்கும் நிறைந்தது. அது நீங்களே. நீங்கள் இந்தக் கணத்தில் சொர்க்கத்தில் இருக்கிறீர்கள், அதேவேளையில் மிக இருண்ட நரகங்களிலும் உழல்கிறீர்கள். நீங்கள் எங்குமே இருக்கிறீர்கள். நீங்கள் இல்லாத இடம்தான் எது? நீங்கள் எங்கேனும் போக முடியுமா?

வருவது, போவது என்பதெல்லாம் வெறும் கட்டுக்கதை. ஆன்மா வருவதோ போவதோ கிடையாது.

இந்தக் காட்சிகள் மாறுகின்றன. மனம் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் இருக்கும்போது ஒரு குறிப்பிட்ட காட்சியைக் காண்கிறது; ஒரு குறிப்பிட்ட கனவைக் காண்கிறது. நாமும் இந்த நிலையில் இந்த உலகையும் மனிதர்கள், மிருகங்கள் என்று பலவற்றையும் காண்கிறோம். மனத்தின் இந்த நிலை மாறுகிறது. அப்போது, நாம் உலகமாகக் காண்கின்ற இந்த இடத்தையே சொர்க்கமாகக் காண்போம், அல்லது நரகமாகக் காண்போம், அல்லது நாம் விரும்பிய ஏதோ ஓர் இடமாகக் காண்போம். அது நமது ஆசைகளைப் பொறுத்தே அமைகிறது.

ஆனால் இந்தக் கனவும் நிலையானதாக இருக்க முடியாது. எந்தக் கனவும் கலைந்தேயாக வேண்டும் என்பது நமக்குத் தெரியும். எந்தக் கனவும் நிரந்தரமானதல்ல. நாம் எதைச் செய்ய வேண்டும் என்று நினைக்கிறோமோ அதையே கனவு காண்கிறோம். சொர்க்கத்திற்குப் போக வேண்டும், அங்கே நண்பர்களைக் காண வேண்டும் என்று வாழ்க்கை முழுவதும் எண்ணி வந்தவர்கள், இந்த வாழ்க்கைக் கனவு முடிந்ததும் தங்கள் ஆசைகளால் உந்தப்பட்டு, அத்தகைய ஒரு கனவில் ஆழ்கிறார்கள். அதுபோலவே மூடநம்பிக்கைகளில் உழல்பவர்களும், நரகத்தைப்பற்றி என்னென்னவோ நினைத்து பயந்தவர்களும் அத்தகையதோர் இடத்திற்குச் சென்றதாகக் கனவு காண்பார்கள். இந்த வாழ்க்கையில் மிருகத்தனமான கருத்துக்களைக் கொண்டிருப்பவர்கள் இறந்தபின் பன்றி, நாய் என்று மிருகங்களாகிறார்கள். ஒவ்வொருவரின் விஷயமும் இப்படியே. எதை விரும்புகிறானோ அதை அடைகிறான்.

சாலைகள் அமைத்தல், மருத்துவமனைகள் கட்டுதல் போன்ற நற்செயல்களைத் தவிர உயர்வான எதுவும் தெரியாதவர்கள் இறந்தபின் ஒரு நல்ல கனவில் ஆழ்கிறார்கள். அங்கே அவர்களுக்குத் தேவ உடல் கிடைக்கும், விரும்பியதை உண்ணலாம், சுவர்களை ஊடுருவிச் செல்லலாம், வேண்டுமானால் கீழே பூமிக்கு வந்து யாரையாவது பிரமிக்கச் செய்யலாம்— இவ்வாறுதான் இந்த உபநிடதம் தொடங்குகிறது.

சொர்க்கத்தில் வாழும் தேவர்களைப்பற்றியும், அவர்களைப்போன்றே ஆனால் சற்றுக் கொடியவர்களான அசுரர்களைப்பற்றியும் நமது புராணங்களில் கூறப்பட்டுள்ளது.

தேவர்கள் உங்கள் தேவதூதர்களைப் போன்றவர்கள். அவர்களுள் சிலரிடம் அவ்வப்போது சற்றே இழிகுணம் தலைதூக்கிவிடும், பூமியிலுள்ள இளம்பெண்களைக் கவர எண்ணிவிடுவார்கள்—அவ்வளவுதான் வித்தியாசம். இதற்காகவே அவர்கள் பாராட்டவும் படுகிறார்கள். இவர்களிடமிருந்து நீங்கள் என்ன எதிர்பார்க்க முடியும்? அவர்கள் இங்கே வெறும் மருத்துவமனை கட்டுபவர்களாக இருந்தவர்கள்தானே! மற்ற மனிதர்களைவிட வேறென்ன பெரிதாக அறிந்துவிடப் போகிறார்கள்! ஏதோ நல்ல வேலைகள் செய்தார்கள், தேவர்கள் ஆகிவிட்டார்கள், அவ்வளவுதான். பெயருக்காக, புகழுக்காக, ஏதோ பரிசு கிடைப்பதற்காக நற்பணிகள் செய்தார்கள். இப்போது சொர்க்கத்தில் இருப்பதாகக் கனவு காண்கிறார்கள்.

இனி, இந்த வாழ்க்கையில் தீமைகள் செய்து, அதனால் அசுரர்கள் ஆனவர்கள் இருக்கிறார்கள்.

ஆனால் இந்தக் கனவுகள் நீண்ட காலம் நிலைப்பதில்லை என்று எங்கள் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இரு சாராரும் திரும்பி வந்தேயாக வேண்டும். அவர்கள் மீண்டும் பூமிக்குவந்து, பழைய கனவாகிய மனித வாழ்க்கையைத் தொடர்கிறார்கள், அல்லது இன்னும் கீழான நிலையை அடைகிறார்கள். அதனால் சொர்க்கம், நரகம் போன்ற முட்டாள்தனமான எண்ணங்களையெல்லாம் விட்டுவிடுவதுதான் அறிவுள்ள, சிந்திக்கத் தெரிந்த மனிதனுக்கு அழகு என்று இந்த நூல்கள் கூறுகின்றன.

கனவு, உண்மை என்று இந்த உலகில் இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. நாம் வாழ்க்கை என்று எதை அழைக்கிறோமோ அது கனவு, கனவுக்குள் கனவு என்று கனவுகளின் தொடரே, ஒரு கனவு சொர்க்கம் என்று அழைக்கப்படுகிறது; மற்றொன்று பூமி, இன்னொன்று நரகம் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது. ஒரு கனவு மனித உடல், இன்னொரு கனவு மிருக உடல்—எல்லாம் கனவுகளே. சச்சிதானந்த வடிவினரான பரம்பொருளே உண்மை. அவரே குரு. இந்தக் கனவுகளிலிருந்து விடுபட விரும்புபவர் அவரே. அனைத்தையும் சாட்சியாக நின்று காண விரும்புபவர் அவரே. தனது சொந்த இயல்பை உணர விரும்புபவர் அவரே. மனமயக்கத்திலிருந்து விடுபட்டு அதைக் கடந்து செல்ல விரும்புபவர் அவரே.

நான் சொர்க்கத்திற்குப் போக வேண்டும் என்று விரும்பும்போது அது என்னை மனவசியத்திற்கு உள்ளாக்குகிறது. அந்த நிலையிலேயே நான் இறக்கும்போது நேராக

சொர்க்கத்திற்குச் செல்வதாகக் காண்கிறேன், அங்கே இறக்கைகளுடன் தேவதைகள் பறப்பது போன்றவற்றை எல்லாம் பார்க்கிறேன்.

மரணத்தின் வாசலிலிருந்து மீண்டுவந்த ஐம்பது பேரை யாவது நான் பார்த்திருப்பேன். அவர்கள் எல்லோருமே சொர்க்கம் அதுஇது என்று ஏராளம் கதைகள் சொன்னார்கள். இவையே எங்கள் நாட்டின் புராணங்கள். இவை எல்லாமே மனமயக்கங்கள்.

இங்கே மேலைநாட்டினர் ஒரு பெரிய தவறு செய் கிறார்கள். உங்கள் சொர்க்கம், நரகம் போன்ற கருத்துக்களை யெல்லாம் நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் நீங்கள் இந்த உலகம் உண்மை என்று கூறுகிறீர்கள். அது தவறு. ஏனென்றால் உலகம் உண்மையென்றால், சொர்க்கம் நரகம் எல்லாமே உண்மை. ஒன்றின் நிருபணம்தான் பிறவற்றிற்கும் நிரூபணம். ஒன்று மனவசிய நிலையானால் மற்றவையும் அவ்வாறே. சொர்க்கங்கள் மட்டும் அல்ல, இந்த உலகமும் இந்த வாழ்க்கையும்கூட மனமயக்கமே என்று வேதாந்தி கூறுகிறான்.

சிலர் மனவசியத்தின் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு என்று மாறிமாறிச் சென்றுகொண்டே இருக்க விரும்பு கிறார்கள். இவர்களே சம்சாரிகள், இவர்கள் முட்டாள்கள். ஒரு கனவிலிருந்து மற்றொரு கனவிற்கு, ஒரு மயக்கத்திலிருந்து மற்றொரு மயக்கத்திற்கு என்று பயணம் செய்துகொண்டே இருக்கிறார்கள்; 'நான் ஆண், நான் பெண்' என்ற கருத்துக்களில் வருடக்கணக்காக மூழ்கிக் கிடக்கிறார்கள். என்ன முட்டாள் தனம்! ஆன்மாவில் ஆணாவது, பெண்ணாவது! இது பயங்கர மான மனமயக்கம். ஆன்மாவில் பால்வேறுபாடு எப்படி இருக்க முடியும்? இது சுய மனவசியமே. நீங்களே உங்களை வசியத்தில் ஆழ்த்திக்கொண்டு, ஆண், பெண் என்றெல்லாம் நினைத்துக் கொள்கிறீர்கள். அத்துடன் விடுகிறோமா? சொர்க்கத்திற்குப் போக வேண்டும், அங்கே தேவ தேவியர்கள் எல்லாம் இருப்பார்கள் என்று எண்ணுவதும், முழந்தாளிட்டுப் பிரார்த்தனை செய்வதும், தேவ உடல் பெற்று, சிம்மாசனங் களில் அமர்ந்து கோடிக்கணக்கானோரால் வழிபடப் பெற வேண்டும் என்று விரும்புவதுமாக எத்தனையெத்தனை மனமயக்கங்களை வளர்த்துக்கொள்கிறோம். இந்த மனமயக்கங் களில் இருந்து மீண்டுவர வேண்டும். நாம் எல்லோரும் ஒரே நிலையில்தான் இருக்கிறோம். தனியாக நில்லுங்கள்.

கனவுகளிலிருந்தும் மனமயக்கங்களிலிருந்தும் விடுபட்டுச் சுதந்திரராக இருங்கள்.

நாம் காண முடியாத, உணர முடியாத சிலர் இங்கே இருக்கலாம். உன் முன்னால் மூன்று புத்தகங்கள் உள்ளன, உன்னை மனவசியத்திற்கு ஆளாக்கி, அங்கே அந்தப் புத்தகங் களே இல்லை என்று நம்பச் செய்துவிட்டால், நீ ஒரு வருடம் அதே இடத்தில் இருந்தாலும் மனவசியத்திலிருந்து விடுபடும் வரை அவற்றைக் காண முடியாது. அதே மனவசிய நிலையில் இருக்கின்ற யாரும் அந்த நூல்களைக் காண முடியாது. எல்லாம் மனமயக்கம். ஆண், பெண், மிருகங்கள் எல்லாமே மனவசியத் தில் ஆழ்ந்திருக்கின்றன. எல்லோரும் ஒரே நிலையில் இருப்ப தால் எல்லோரும் இந்தக் கனவைக் காண்கிறோம்.

மனம், பௌதிகம், நல்லொழுக்கம் என்று எது சம்பந்தப் பட்டதானாலும் பிரபஞ்சம் முழுவதுமே மனவசியத்திற்கு உள்ளாகியிருப்பதாக வேதாந்தத் தத்துவம் கூறுகிறது. இதற்குக் காரணம் யார்? நாமே. இந்த அழுகையும் கதறலும் எதுவும் உங்களுக்குக் கடுகளவுகூடப் பயன் தராது. இந்த மனவசியத் திலிருந்து விடுபடுவதற்கான முயற்சியே பற்றின்மை; இந்த மனவசியத்தை மேலும் இறுகப் பிடித்துக்கொள்வதே பற்று. இதனால்தான் எல்லா மதங்களும் உலகைத் துறக்குமாறு கூறுகின்றன—இதன் உண்மைப் பொருள் என்ன என்பதைப் பல மதங்கள் அறியவில்லை என்பது வேறு விஷயம்.

என்னென்ன கட்டுக்கதைகள்! சிலர் காட்டில் பட்டினி யாகக் கிடப்பார்கள், அங்கே ஒரு பேய் வந்துவிடும். மந்திர வாதிகள் வருவார்கள், ஒரு கயிற்றைப் பூமியிலிருந்து எழச் செய்து வானம்வரை கொண்டுபோவார்கள். இவை எவற்றை யும் நான் பார்த்ததில்லை. முகலாய மன்னர்களுள் ஜஹாங்கிர் ஒருவர். அவர் எழுதுகிறார்: 'அல்லா, இந்தப் பேய்கள்தான் என்னவெல்லாம் செய்கின்றன! மந்திரவாதி ஒரு கயிற்றையோ, சங்கிலியையோ மேலே எறிகிறான். அது உயரத்தில், இன்னும் உயரத்தில் சென்று, அங்கே ஏதோ ஒன்றைப் பற்றிக்கொண்டது போல் அப்படியே நிலையாக நிற்கிறது. அதன் வழியாக ஒரு பூனையை அல்லது நாயை, ஓநாயை, பின்னர் புலியை, பிறகு சிங்கத்தை அனுப்புகிறான். சிலவேளைகளில் மனிதனைக் கூட அனுப்புகிறான். எல்லோரும் மேலே சென்று மாயமாக மறைந்துவிடுகிறார்கள். இரண்டு பேர் மேலே போவார்கள், அங்கே சண்டையிடுவார்கள், திடீரென்று காணாமல்

போய்விடுவார்கள். தீவிரமாகச் சண்டையிடும் ஓசை மட்டும் கேட்டபடி இருக்கும். திடீரென்று மேலேயிருந்து ஒரு தலை விழும், ஒரு கால் விழும், ஒரு கை விழும். இந்தக் காட்சிகளை மூவாயிரம் பேர் அமர்ந்து பார்த்துக் கொண்டிருப்பார்கள். இந்த மாயாஜாலங்களைச் செய்பவனோ ஒரு கோவணத்தை மட்டுமே உடுத்திய ஒரு சாதாரண மனிதன்.'

இதைத்தான் மனவசியம் என்கிறார்கள். பார்த்துக் கொண்டிருப்பவர்கள்மீது ஒரு வலையை வீசி மறைப்பது போன்றது இது. இதுதான் அவர்களது கலை. இதன் ஆதிக்கத்திற்கு ஓர் உள் எல்லையும் வெளி எல்லையும் உண்டு. இந்த வெளி எல்லையைக் கடந்தும், உள் எல்லைக்கு உள்ளேயும் இருப்பவர்கள் அதனால் பாதிக்கப்படுவதில்லை. இந்த மாயாஜாலங்களைச் செய்பவன் இவை எதையும் காண்பதில்லை. அவனுக்கு அருகில் நீங்கள் நின்றால் உங்களுக்கும் எதுவும் தெரியாது.

நாம் இந்த உலகமென்னும் மனவசியத்தின் ஆதிக்கத்திற்கு உட்படாதிருக்க வேண்டுமானால் வெளி எல்லையைக் கடந்து ஞானம் என்ற பகுதியில் இருக்க வேண்டும். இல்லாவிடில் இந்த மாயாஜாலத்தை நிகழ்த்துபவருக்கு அருகில், உள் எல்லையாகிய பக்தி என்ற பகுதியில் நின்றுகொள்ள வேண்டும். பிரபஞ்சம் என்னும் இந்த இந்திரஜாலத்தை இறைவனே உண்டாக்கி விளையாடிக் கொண்டிருக்கிறார். எத்தனையோ ஜாலங்கள் வந்துபோய்க் கொண்டிருக்கின்றன. இந்த மாயாஜாலங்களை உருவாக்குகின்ற சக்தியே மாயை. இந்த மாயையை ஆள்பவர் கடவுள். நாம் கண்ட நிகழ்ச்சியில் சங்கிலியை மேலே எறிகின்ற மந்திரவாதி மாயாஜாலத்தில் மயங்காதது போல் இறைவனும் மாயையில் மயங்குவதில்லை. பார்வையாளர்கள் மனவசியத்திற்கு உள்ளாகியதுபோல் நீங்கள், நான் என்று சாதாரண ஆன்மாக்கள் எல்லாம் மாயையில் மயங்குகின்றன.

இறைவனின் பாதங்களின் அருகே ஊர்ந்து சென்று அந்த உள் எல்லைக்குள் நின்றுகொள். உன்னை மாயை பாதிக்காது— என்கிறான் பக்தன். அவனது காட்சி தெளிவாக இருக்கிறது.

ஆனால் ஞானி இத்தகைய சிரமங்களுக்கு உள்ளாக விரும்புவதில்லை. இதனை அபாயமான பாதை என்று அவன் ஒதுக்குகிறான். உடம்பெல்லாம் சேறு மூடிக் கிடக்கிறது, அதைப் போக்க, மேலும் சேற்றால் உடம்பைத் தேய்ப்பவன்

பைத்தியக்காரனைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? எனவே மனவசியத்தை அதிகரிப்பானேன்? எல்லைக்கு வெளியே வாருங்கள், மாயையை வெட்டித் தள்ளுங்கள்.

நீங்கள் சுதந்திரமாக இருக்கும்போது மாட்டிக்கொள்ளா மலேயே விளையாடலாம். இப்போது நீங்கள் மாட்டிக் கொண்டுள்ளீர்கள்—இதுதான் வித்தியாசம்.

இதனால்தான் சொர்க்கம், பிறப்பு, இறப்பு போன்ற கருத்துக்களையெல்லாம் விட்டுவிட வேண்டும் என்று இந்த உபநிடதம் ஆரம்பத்திலேயே கூறுகிறது. இதுவரை யாரும் பிறக்கவும் இல்லை, இறக்கப்போவதும் இல்லை. எல்லாம் முட்டாள்தனம். எல்லோரும் மனவசியத்தில் ஆழ்ந்துள்ளார்கள். முடிவற்ற வாழ்க்கை என்பதும் முட்டாள்தனம்தான். சொர்க்க மும் மனமயக்கம், பூமியும் மனமயக்கம்.

சொர்க்கமும் மூட நம்பிக்கை, கடவுளும் மூட நம்பிக்கை, ஆனால் தான்மட்டும் உண்மையானவன் என்கிறான் உலோகாயதவாதி. ஒன்று மூட நம்பிக்கையென்றால், மற்றதும் மூட நம்பிக்கையே அல்லவா? ஒரு சங்கிலியின் ஒரு பகுதி பொய் என்றால் எல்லாமே பொய்தானே? சொர்க்கமும் இல்லை, பூமியும் இல்லை, கடவுளும் இல்லை என்றால் மனிதனும் இல்லை. இந்த மனவசியத்தில் ஆழ்ந்திருக்கும்வரை நீங்கள் கடவுள், இயற்கை, ஆன்மா என்று எல்லாவற்றையும் காணவே செய்வீர்கள். அதிலிருந்து விடுபடும்போது கடவுள் மறைந்து விடுவார், இயற்கை மறைந்துவிடும், அதுபோல் ஆன்மாவும் மறைந்துவிடும். எனவே கடவுள், சொர்க்கம், செயல்களின் பலனை அனுபவித்தல் போன்ற கருத்துக்களையெல்லாம் முத லில் விட்டுவிட வேண்டும். சொர்க்கத்திற்குப் போவது போன் றவை எல்லாம் கனவிற்குள் இன்னொரு கனவு, அவ்வளவுதான்.

இவற்றை எல்லாம் விளக்கிய பிறகு, இதிலிருந்து வெளி யேறுவது எப்படி என்பதை உபநிடதம் கூறுகிறது. பரம்பொரு ளுடன் ஒன்றுபடுவதே அது காட்டும் ஒரே கருத்தாகத் தெரி கிறது. வெளிப்பட்டுத் தோன்றும் உலகமும் இந்த நாடகமும் எல்லாமே மாயை, இவை இறைவன் அல்ல. எதிலிருந்து இந்த உலகம் வெளிப்பட்டுள்ளதோ, எதன்மீது இந்த நாடகம் நடைபெறுகிறதோ அதுவே பரம்பொருள். உண்மையில் நாம் அவருடன் ஒன்றுபட்டவர்கள். நீங்கள் அவருடன் ஒன்றுபட்ட வர்கள் என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால் அதை அனுபூதி யில் உணர வேண்டும், அவ்வளவுதான். இரண்டு வார்த்தைகள்

உள்ளன—ஒன்று அறிவு, மற்றொன்று அனுபூதி. அறிவு அனுபூதிக்கு உட்பட்டது, அனுபூதி அறிவைக் கடந்தது. எனவே வெறும் அறிவுவளர்ச்சி மட்டும் போதாது. தனது கொள்கை சரி என்று யார் வேண்டுமானாலும் சொல்லலாம். ஆனால் அது அனுபூதியாகிவிடாது. அதை அனுபூதியில் உணர வேண்டும். இது மனமயக்கம் என்பதை நாங்கள் புரிந்துள்ளோம் என்று எல்லோரும் சொல்லலாம். ஆனால் அது அனுபூதி யாகாது. எப்போது அந்த மனமயக்கம் தெளியுமோ, மனவசியம் விடுபடுமோ—அது ஒரு கணநேரத்திற்காக இருந்தாலும் சரி—அப்போதுதான் அது அனுபூதி ஆகும். அந்த அனுபூதி ஒரு மின்னல்வெட்டுபோல் மின்னி மறையலாம், ஆனாலும் அது வந்தேயாக வேண்டும்.

நீங்கள் பாடுபட்டால் அந்த நிலையை அடைவீர்கள். அந்த மனவசியம் உங்களைவிட்டு விலகும்போது நீங்கள் ஓர் உடம்பு, ஆண், பெண் போன்ற எண்ணங்கள் எல்லாம் அத னுடன் சேர்ந்தே விலகிவிடுகின்றன. திடீரென ஒரு விளக்கு அணைவதுபோல் காட்சியே மாறிவிடுகிறது.

அதன்பிறகு என்ன நடக்கும்? உங்கள் வினைப்பயனில் ஏதாவது எஞ்சியிருக்குமானால், இந்த உலகம் மீண்டும் உங்கள் முன் தோன்றும். ஆனால் அது முன்னைப்போன்ற வேகத்துடன் உங்களைப் பாதிக்காது. அது என்ன என்பதை நீங்கள் அறிந்து விட்டீர்கள். உங்களுக்குப் பந்தம் எதுவும் இல்லை. கண்கள் இருக்கும்வரை நீங்கள் காண்பீர்கள், காதுகள் இருக்கும்வரை கேட்பீர்கள்; ஆனால் எதிலும் முன்னைப்போன்ற வேகம் இருக்காது.

கானல்நீர் என்பதுபற்றி நான் ஏராளம் படித்திருக்கிறேன். ஆனால் நான்கு வருடங்களுக்கு முன்பு மேற்கு இந்தியாவில் பயணம் செய்துகொண்டிருந்தபோதுதான் அதைக் காண முடிந்தது. நான் ஒரு சன்னியாசி. எனவே எனது பயணம் மிகவும் மெதுவாக இருந்தது. பொதுவாக நான் நடந்தே சென்றேன். அப்போது அழகிய ஏரிகளையும், அவற்றின் கரையில் 'நிற்கின்ற மரங்களின் நிழல்கள் அதில் பிரதிபலிப் பதையும், மென்காற்றினால் ஏரிநீர் மெதுவாக அசைவதையும், அருகே பறவைகள் பறப்பதையும், மிருகங்களையும் தினமும் காண்பேன். ஆகா, எத்தனை அழகிய பகுதி என்று எனக்குள் நானே எண்ணிக் கொள்வேன். ஒருநாள் எனக்கு மிகவும் தாகமாக இருந்தது. அந்த ஏரியிலிருந்து தண்ணீர் குடிக்க

அதை அணுகினேன். அவ்வளவுதான், அது மாயமாக மறைந்துவிட்டது. 'கானல்நீர் என்று என் வாழ்நாள் முழுவதும் படித்திருக்கிறேனே, அது இதுதான்' என்ற எண்ணம் மனத்தில் எழுந்தது. வியப்பு என்னவென்றால் ஒருமாத காலம் பயணம் செய்தும் அதன் உண்மையை நாம் அறிந்துகொள்ளவில்லை. உண்மைக்கும் கானல்நீருக்கும் இடையே உள்ள மெல்லிய வேறுபாட்டை உணரவில்லை. அந்த ஒரு கணத்தில் எல்லாம் தெளிவாகிவிட்டது. அதன்பிறகு நான் எப்போது அதைக் கண்டாலும், 'ஓ, இது வெறும் கானல்நீர்' என்பது மனத்தில் தெளிவாக இருந்தது, அது என்னை ஏமாற்றவில்லை.

அனுபூதியும் அப்படியே. உலகின் உண்மை ஒருகணம் அனுபூதியில் உணரப்பட்டுவிட்டால், அதன்பிறகு நீ எவ்வளவு காலம் வாழ்ந்து, எவ்வளவு வினைப்பயனை அனுபவிக்க நேர்ந் தாலும் ஏமாற மாட்டாய்.

இரண்டு சக்கரங்கள் உள்ள ஒரு வண்டியை எடுத்துக் கொள்ளுங்கள். அது ஓடிக்கொண்டிருக்கும்போது அச்சை நான் வெட்டிவிடுகிறேன். ஒரு சக்கரம் உடனே அச்சிலிருந்து பிரிந்து வீழ்ந்துவிடும். ஆனால் மற்றது, ஆரம்ப வேகத்தின் உந்துதல் காரணமாகச் சிறிது தூரம் ஓடிப் பின்னர் விழும். உடம்பு ஒரு சக்கரம், ஆன்மா மற்றொன்று. இரண்டும் மாயை என்னும் அச்சினால் இணைக்கப்பட்டுள்ளது. ஞானமே கோடரி. அது மாயை என்னும் அச்சை வெட்டியதும் ஆன்மா என்னும் சக்கரம் நின்றுவிடுகிறது; வீண் கனவுகள் காண்பதை நிறுத்திவிடுகிறது. உடல் என்னும் சக்கரம் வினைப்பயனாகிய ஆரம்ப வேகம் காரணமாகச் சிறிது தூரம் ஓடி பிறகு விழுகிறது. ஆனால் அதன் வேகம் நற்பாதையிலேயே அதைக் கொண்டு செல்லும், அதாவது அந்த உடம்பு நன்மையை மட்டுமே செய் யும். ஒரு முட்டாளை மகானாக எண்ணிவிடக் கூடாது என்பதற் காகவே இதை நான் சொன்னேன். மகானாகிய முக்தபுருஷனால் தீமை எதுவும் செய்ய முடியாது. எனவே ஏமாந்துவிடாதீர்கள்.

நீங்கள் சுதந்திரராகி, மனவசியம் உங்களைவிட்டு விலகும் போது உண்மைக்கும் கானல்நீருக்கும் இடையில் உள்ள வேறு பாட்டைப் புரிந்துகொள்வீர்கள். அது உங்களை மேலும் பந்தத் திற்கு உள்ளாக்காது. மிகப் பயங்கரமானவைகூட உங்களை பயமுறுத்தாது. ஒரு மலையே உங்கள்மீது வீழ்ந்தாலும் நீங்கள் கவலைப்பட மாட்டீர்கள்; ஏனென்றால் அது வெறும் மன மயக்கம் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

## ஆ. உயர்நிலைப் பாடங்கள்

# 1. ஞானயோகத்திற்கு ஒரு முன்னுரை

11 டிசம்பர் 1895

இது யோகத்தின் அறிவுபூர்வமான, தத்துவபூர்வமான பகுதி; கடினமான பகுதி. ஆனால் நான் மெதுவாக உங்களை அந்தப் பாதையில் அழைத்துச் செல்கிறேன்.

மனிதனையும் கடவுளையும் இணைக்கும் பாதையே யோகம். இதைப் புரிந்துகொண்டால் மனிதன், கடவுள் என்ப தற்கெல்லாம் என்ன விளக்கம் வேண்டுமானாலும் நீங்கள் கொடுக்கலாம். அவை ஒவ்வொன்றுடனும் யோகம் என்ற சொல் பொருந்துவதை நீங்கள் காண முடியும். பல்வேறு யோகங்களும் மாறுபட்ட பல்வேறு மனங்களுக்கானவை என்பதை எப்போதும் நினைவில்கொள்ள வேண்டும். ஒன்று உங்களுக்குப் பொருந்தாவிட்டால் இன்னொன்று பொருந்தும்.

ஒவ்வொரு மதமும் கொள்கை, செயல்முறை என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மேலைநாட்டினர் கொள்கைப் பகுதியை எடுத்துக்கொண்டார்கள், அவர்களைப் பொறுத்த வரை செயல்முறைப் பகுதி என்பது சில நற்பணிகளைச் செய்வது மட்டுமே. யோகம்தான் மதத்தின் செயல்முறைப் பகுதி. நற்பணிகளைத் தவிரவும் மதம் எவ்வாறு செயல்முறை ஆற்றலைத் தர முடியும் என்பதை அது காட்டுகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மனிதன் ஆராய்ச்சியின்மூலம் கடவுளை அறிய விழைந்தான். அதன் விளைவே 'டீசம்' (Deism). இந்தக் கோட்பாடு கொஞ்சநஞ்சம் விட்டுவைத்ததை டார்வினின் கொள்கையும் (Darwinism) மில்லின் கொள்கையும் (Millism) அழித்துவிட்டன. மனிதன் சரித்திர காலத்திற்கும், மதங்களை ஒப்புநோக்குவதற்கும் தள்ளப்பட்டான். இயற்கைப் பொருட்களை வழிபடுவதி லிருந்தே மதம் ஆரம்பமாயிற்று என்று அவர்கள் எண்ணினர். (மாக்ஸ் முல்லரின் கருத்தும் இதுவே). வேறு சிலர், முன்னோர் வழிபாட்டிலிருந்தே மதம் பிறந்தது என்கின்றனர்.

(ஹெர்பர்ட் ஸ்பென்சரின் கருத்து). ஆனால் முழுமையாக எடுத்துக் கொண்டால் இவையனைத்தும் தவறாகவே இருந்தன. புற வழிகள் எதன்மூலமும் உண்மையை அடைய முடியாது.

'ஒரு பிடி களிமண்ணை அறிந்தால் முழுவதும் அறிந்ததே ஆகும்.' முழுப் பிரபஞ்சமும் ஒரே திட்டப்படிதான் அமைக்கப் பட்டுள்ளது. தனிமனிதன் என்பவன் ஒருபிடி களிமண் போன்ற வன். இயற்கையின் ஓர் அணுவான மனித உயிரின் ஆரம்பம், அதன் வரலாறு இவற்றை அறிந்தால் முழு இயற்கையையும் அறியலாம். பிறப்பு, வளர்ச்சி, முன்னேற்றம், நலிவு, மரணம் இவையே இயற்கை முழுவதிலும் உள்ள வரிசைக் கிரமம். செடி யாகட்டும், மனிதன் ஆகட்டும் இந்தக் கிரமம் ஒருபோலவே உள்ளது. வேறுபாடுகள் அனைத்தும் காலத்திலேயே உள்ளது. ஓர் உயிரைப் பொறுத்தவரை முழு வட்டமும் ஒரு நாளில் முடிந்து போகலாம்; இன்னொன்று அறுபது வருடங்களில் முடியலாம். ஆனால் வழிகள் ஒன்றே.

பிரபஞ்சத்தைச் சரியாக ஆராய்வதற்கு ஒரே வழி மனத்தை ஆராய்வதே. மதத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள முறையான ஒரு மனஇயல் தேவையாக இருக்கிறது. ஆராய்ச்சியின்மூலம் மட்டும் உண்மையை அடைவது என்பது முடியாதது. ஏனெ னில் குறைகளுடன் கூடியதான ஆராய்ச்சியால் அதன் அடிப் படையையே சரியாக ஆராய முடியாது. எனவே மனத்தை ஆராய ஒரே வழி முதலில் தகவல்களைச் சேகரிக்க வேண்டும், புத்தியால் அவற்றை ஒழுங்குபடுத்திக் கோட்பாடுகளை உருவாக்க வேண்டும். புத்திதான் வீட்டைக் கட்ட வேண்டும்; ஆனால் செங்கல் இல்லாமல் அதனால் வீடு கட்ட முடியாது; அதேவேளையில் செங்கல்லைச் செய்யவும் அதனால் முடியாது. உண்மைகளை அறிய உறுதியான வழி ஞானயோகமே.

முதலில் மனத்தின் இயல்பைப் பற்றிய அறிவு உள்ளது. பொறிகள் அதாவது இந்திரியங்கள் உள்ளன; அவை கர்மேந் திரியங்கள், ஞானேந்திரியங்கள் என்று பகுக்கப்பட்டுள்ளன. பொறிகள் என்பவை புறக் கருவிகள். காண்கின்ற கருவி என்பது கண் மட்டுமல்ல, மூளையிலுள்ள பார்வை மையமும் சேர்ந்ததே ஆகும். ஒவ்வொரு புலனும் அவ்வாறே. அதன் செயல்கள் எல்லாமே அகமுகமானவை. மனம் பிரதிச்செயல் புரியும் போது தான் புறப் பொருளை நாம் அறிகிறோம். அறிவதற்கு உணர்ச்சி நரம்புகள், (Sensory nerves) கட்டளை நரம்புகள் (Motor nerves) போன்றவை தேவை.

மனம் என்பதை எடுத்துக்கொள்வோம். அது ஓர் அமைதியான ஏரி போன்றது. அதில் கல்லை எறிந்தால் அதிர்கிறது. அதிர்வுகள் சேர்ந்து கல்லில் மோதுகின்றன. இந்த அதிர்வு ஏரி முழுவதும் பரவுகிறது. அதை உணரவும் முடியும். மனம் அந்த ஏரியைப் போன்றது. அது எப்போதும் அதிர்வுகளுக்கு உள்ளாகிய வண்ணமே இருக்கிறது. இந்த அதிர்வுகள் ஒவ்வொன்றும் ஒரு பதிவை மனத்தில் விட்டுச் செல்கின்றன. நான்-உணர்வு என்பது இந்தப் பதிவுகளின் மொத்த விளைவாகும். எனவே இந்த நான்-உணர்வு என்பது வேகமாக மாறிக்கொண்டிருப்பது, இது உண்மையல்ல.

பிராணனை வசப்படுத்தப் பயன்படும் மிக நுண்ணிய கருவியே சித்தம். மனிதன் இறக்கும்போது உடல் இறக்கிறது; ஆனால் எல்லாம் அழிந்துபோனாலும் மனத்தின் ஒரு சிறு பகுதி அழிவதில்லை. சிறுபகுதியாகிய இந்த விதையே புதிய உடலுக்கான காரணமாக அமைகிறது. இதையே செயின்ட்பால் ஆவிஉடல் (Spiritual body) என்றார். மனம் என்பது ஜடப் பொருள்தான் என்னும் இந்தக் கொள்கை தற்காலக் கொள்கைகள் அனைத்துடனும் ஒத்துப்போகிறது. சித்தத்திற்கு ஊறு நேர்ந்ததாலேயே ஒரு முட்டாள் அவ்வாறு முட்டாளாக இருக்கிறான். உணர்வு என்பது ஜடப்பொருளில் இல்லை. ஜடப் பொருட்களைச் சேர்த்து உணர்வை உருவாக்கவும் முடியாது. அப்படியானால் உணர்வு எங்கே இருக்கிறது? அது ஜடப் பொருளுக்குப் பின்னால் இருக்கிறது. அதுவே ஜீவன், உண்மை ஆன்மா. ஜடப்பொருள் என்னும் கருவியின்மூலம் செயல் புரிவது அதுவே. ஜடப்பொருள் இல்லாமல் சக்தியைச் செலுத்த முடியாது. ஜீவன் தனியாகப் பயணம் செய்ய முடியாது. எனவே மரணத்தின்போது அனைத்தும் அழிந்துவிட்டாலும் மனத்தின் ஒருபகுதி அழியாமல் இருந்து ஜீவனைக் கொண்டுசெல்கிறது.

ஒரு பொருளை நாம் எப்படி அறிகிறோம்? எதிரே இருக்கும் சுவர் ஒரு பதிவை எனக்கு அனுப்புகிறது. ஆனால் என் மனம் எதிர்ச்செயல் புரியும்வரை அதை என்னால் காண முடியாது. அதாவது வெறும் காட்சியால் ஒன்றை அறிய முடியாது. இந்தச் சுவரை அறியும் முறை என்பது ஓர் அறிவுமுறை. இந்த முறையில் கண்களும் மனமும் சேர்ந்து இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் காண்கின்றன. எனவே கண்டிப்பாக அது நமது தனி இயல்பின் சாயம் பூசப்பட்டதாகவே இருக்கும். உண்மையான சுவர் அல்லது உண்மையான

பிரபஞ்சம் என்பது மனத்திற்கு வெளியிலேயே உள்ளது, அதை அறிய முடியாது. இந்தப் பிரபஞ்சம் அ என்று இருக்கட்டும். ஆனால் நாம் காணும் பிரபஞ்சம் அ + மனம்.

புறத்தில் உண்மையான ஒன்று அக உலகிற்கும் பொருந்த வேண்டும். மனம் தன்னையே காண விரும்புகிறது. ஆன்மாவை இந்த மனத்தின்மூலமே காண முடியும். ஆன்மா என்பதைத் தனியாகப் பார்த்தால் அது இந்தச் சுவரைபோல் அறிய முடியாததே. இந்த ஆன்மாவை இ என்று அழைப்போம். ஆனால் நாம் காணும் ஆன்மா இ + மனம் என்பதாகும். மனத்தின் இத்தகைய ஆராய்ச்சியை முதலில் கண்டவர் காண்ட். ஆனால் நமது வேதங்களில் இது அந்தக் காலத்திலேயே குறிக்கப் பட்டுள்ளது. இப்போது மனம் என்பது அ, இ இரண்டிற்கும் இடையில் நின்று இரண்டின்மீதும் செயல்புரிகின்ற ஒன்று என்பதைக் காண்கிறோம்.

அ என்பது அறிய முடியாததாக இருந்தால், அதற்கு நாம் கொடுக்கும் பண்புகள் கண்டிப்பாக நமது மனத்திலிருந்து வந்தவையாகத்தான் இருக்க வேண்டும். காலம், இடம், காரண காரியம் இவை மூலமாகவே மனம் ஒன்றை உணர்கிறது. காலம் என்பது இருந்தால்தான் எண்ணம் பயணம் செய்ய முடியும். இடம் இருந்தால்தான் மிகத் தூலமான ஜடப்பொருள் அதிர முடியும். இந்த அதிர்வுகளின் தொடரே காரணகாரியம். இவற்றின் மூலமாகவே மனம் ஒன்றை அறிய முடியும். எனவே மனத்தைக் கடந்த ஒன்று கண்டிப்பாகக் காலம், இடம், காரண காரியம் இவற்றையும் கடந்ததாகவே இருக்க வேண்டும்.

பார்வையற்றவன் ஒலியின்மூலமும் தொடுஉணர்வின் மூலமுமே உலகை அறிகிறான். ஐம்புலன்கள் கொண்ட நமது விஷயம் வேறு. நம்மில் யாருக்காவது மின்சார அலைகளைக் காணும் மின் புலன் ஒன்று இருக்குமானால் அவனுக்கு இந்த உலகமே வேறாகத் தோன்றும். எனினும் அ என்ற பிரபஞ்சத்தைப் பொறுத்தவரை அது அப்படியே இருக்கிறது. ஒவ்வொருவனும் தன் மனத்தின்மூலம் தன் உலகைக் காண்கிறான். அ + ஒரு புலன், அ + இரு புலன்கள், இப்படியே அ + ஐந்து புலன்கள்வரை உலகைக் காண்கிறோம். இவை அனைத்தும் வேறுபட்டனவாக இருந்தாலும், அ மாறாமலேயே இருக்கிறது. இ என்பதும் நமது மனங்களுக்கெல்லாம் அப்பாற் பட்டிருக்கிறது. எனவே அது காலம், இடம், காரணகாரியம் இவற்றிற்கு அப்பாற்பட்டிருக்கிறது.

இப்போது, 'காலம், இடம், காரணகாரியம் இவற்றைக் கடந்து அ, இ என்று இரண்டு பொருட்கள் உள்ளதாக நமக்கு எப்படித் தெரியும்?' என்னும் கேள்வி எழலாம், உண்மைதான். காலம் என்பதே இந்த வேறுபாட்டை உண்டாக்குகிறது. இரண்டும் காலத்தைக் கடந்திருப்பதால் இரண்டும் உண்மையில் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும். மனம், இந்த ஒன்றையே வெளியில் காணும்போது அ என்றும், உள்ளே காணும்போது இ என்றும் அழைக்கிறது. இந்த ஒருமை, மனங்கள் என்னும் பல கண்ணாடிகளால் பார்க்கப்படுகிறது.

பிரபஞ்சமாகத் தெரியும் இந்தப் பூரணமான ஒன்றே கடவுள். இது ஒன்றே பூரண நிலை. மற்றவை எல்லாம் தாழ்ந்த நிலையே. அவை நிலையற்றவை.

மாறாத ஒன்று மாறியதாக எப்படி மனத்திற்குத் தோன்றுகிறது? தீமை, சுதந்திர சங்கல்பம் (Free will) இவற்றின் தொடக்கம் எது, என்பது போன்ற கேள்வியே இது. இந்தக் கேள்வியே முரணானது; இருக்க முடியாதது. காரணமும் காரியமும் இருப்பதாக எடுத்துக்கொள்வதால்தான் இந்தக் கேள்வியே எழுகிறது. மாறாத ஒன்றில் காரணமும் காரியமும் இல்லை. மாறுகின்ற ஒன்றைப் போன்ற அதே நிலையில்தான் மாறாத ஒன்றும் இருக்கும் என்று கொள்கிறது இந்தக் கேள்வி. 'ஏன்? எங்கிருந்து?' இந்தக் கேள்விகளெல்லாம் மனத்திலேயே உள்ளன. ஆன்மா, காரணகாரிய விதிகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது. அது மட்டுமே சுதந்திரமானது. அதன் ஒளியே மனத்தின் ஒவ்வொரு வடிவத்தின்மூலமும் பிரகாசிக்கிறது.

ஒவ்வொரு செயலின்மூலமும் நான் சுதந்திரமானவன் என்பதை வற்புறுத்துகிறேன். ஆனால் ஒவ்வொரு செயலும் நான் கட்டுப்பட்டவன் என்று நிரூபிக்கிறது. உண்மையான ஆன்மா சுதந்திரமானது. ஆனால் மனம், உடல் இவற்றுடன் சேரும்போது அது சுதந்திரமானதல்ல. சங்கற்பமே உண்மையான ஆன்மாவின் முதல் வெளிப்பாடு. எனவே ஆன்மாவை முதலில் எல்லைக்கு உட்படுத்தியதும் சங்கல்பமே. ஆன்மா, மனம் இவற்றின் கூட்டுப்பொருளே சங்கல்பம். கூட்டுப் பொருளான எதுவும் நிலையாக இருக்க முடியாது. நாம் வாழ நினைக்கிறோம். ஆனால் இறக்கிறோம், இறந்தேயாக வேண்டும். மரணமில்லாத வாழ்க்கை என்பது முரணானது, வாழ்க்கை என்பதே ஒரு கூட்டுப்பொருள். எனவே அது மரணமற்றதாக இருக்க முடியாது. உண்மைப் பொருள் என்பது மாறாதது,

நிலையானது. இந்தப் பூரணமான ஒன்று, அழிபவையான சங்கற்பம், மனம், எண்ணம் இவற்றுடன் எப்படிக் கலந்தது? அது கலக்கவே இல்லை. நீ என்பது நீதான். (நாம் முன்பு கூறிய இ). நீ சங்கற்பம் ஆகவில்லை; நீ மாறவே இல்லை. மனிதனாக நீ ஒருபோதும் இருக்கவில்லை, அது மாயை.

அப்படியானால் மாயை எதில் இருக்கிறது? இந்தக் கேள்வியே சரியில்லை. மாயை ஒருபோதும் உண்மையில் இருக்க முடியாது; மாயையிலேயே இருக்க முடியும். இந்த மாயைக்கு முன்பிருந்த ஒன்றிற்குச் செல்லவே அனைவரும் போராடுகிறார்கள். அதாவது உண்மையாகவே சுதந்திரத்திற் காகப் போராடுகிறார்கள். அப்படியானால் வாழ்க்கையின் மதிப்பு என்ன? நமக்கு அனுபவங்கள் தருவதற்காகவே வாழ்க்கை அமைகிறது. இந்தக் கருத்து பரிணாமக் கொள்கையை விட்டு விடுகிறதா? இல்லவே இல்லை. மாறாக இந்தக் கருத்து பரிணாமத்தை விளக்கவே செய்கிறது. ஜடப்பொருள் நுண் ணியதாகி உண்மை ஆன்மாவை வெளிப்படுத்தும் முறையே அது. நமக்கும் இன்னொரு பொருளுக்கும் இடையில் ஏதோ ஒரு திரை இருப்பதுபோல் அது உள்ளது. திரை விலகும்போது பொருள் தெளிவாகத் தெரிகிறது. ஆன்மாவின் வெளிப்பாடு என்பதே உண்மை.

## 2. பிரபஞ்ச இயல்

### (சாங்கியத் தத்துவம்)

18 டிசம்பர் 1895

பிண்டம், அண்டம் அல்லது அகம், புறம் என்னும் இரண்டு உலகங்கள் உள்ளன. அனுபவத்தின் வாயிலாக இந்த இரு உலகங்களிலிருந்தும் நாம் பல உண்மைகளை அறிகிறோம். மன இயல், ஆன்மீகத் தத்துவம் என்பவை அக அனுபவம் காரணமாகக் கிடைத்தவை. புற அனுபவம் காரணமாகத் தோன்றியது பலவகை அறிவியல்கள். பூரணமான உண்மை என்பது இந்த இரண்டு உலக அனுபவங்களுடனும் இயைந்ததாக இருக்க வேண்டும். பிண்டம் அண்டத்தை மெய்ப்பிப்பதாக இருக்க வேண்டும்; அண்டமும் அவ்வாறே பிண்டத்தை நிரூபிப்பதாக இருக்க வேண்டும். பௌதீக உண்மைகளுக்கு அத்தாட்சி அகவுலகில் இருக்க வேண்டும். அதுபோலவே அகவுலக உண்மைகளுக்கு நிரூபணம் புறவுலகில் இருக்க வேண்டும். ஆனால் பல நேரங்களில் இந்த இரண்டிற்கும் இடையே முரண்பாட்டையே நாம் காண்கிறோம்.

உலக வரலாற்றின் ஒருகாலத்தில் அகம் சம்பந்தப்பட்டவை பலம் பெற்று, புற உண்மைகளுடன் போராடத் தொடங்குகின்றன. தற்போது பௌதீக அறிவியல் விஞ்ஞானிகள் ஆதிக்கம் பெற்று, மனஇயல் வல்லுனர்கள் மற்றும் ஆன்மீகத் தத்துவவாதிகளின் பல முடிவுகளை மட்டம்தட்டிவிட்டனர். என் அறிவுக்கு எட்டிய வரையில், மனஇயலின் முக்கியப் பகுதிகளும், தற்கால விஞ்ஞானத்தின் முக்கியப் பகுதிகளும் இயைபாகவே உள்ளது.

ஒரு தனிமனிதன் எல்லா துறைகளிலும் சிறந்தவனாக இருக்க முடியாது. அது போலவே, ஒரு நாடு அல்லது ஓர் இனம் எல்லா வகை அறிவிலும் ஆராய்ச்சியிலும் சமமான திறமை பெற்றிருக்க இயலாது. தற்கால ஐரோப்பிய நாடுகள் புறவுலக அறிவியல் ஆராய்ச்சியில் மிகவும் மேன்மை பெற்று விளங்குகின்றன. ஆனால் அவை மனிதனின் அக இயல்பைப்

பற்றிய அறிவில் அவ்வளவு வலிமை பெற்றவையாக இல்லை. கீழை நாட்டினர் இதற்கு மாறாக, பௌதீக உலக ஆராய்ச்சியில் அவ்வளவு திறமை உடையவர்களாக இல்லை. ஆனால் அவர்கள் அகவுலக ஆராய்ச்சியில் மிகவும் மேன்மை பெற்று விளங்குகிறார்கள். இதனால்தான் கீழை நாட்டு பௌதீக விஞ்ஞானங்களுக்கும் மேலை நாட்டு விஞ்ஞானங்களுக்கும், அதுபோல் மேலை நாட்டு மனஇயலுக்கும், கீழை நாட்டு மனஇயலுக்கும் இடையில் வேறுபாடு காணப்படுகிறது. மேலை விஞ்ஞானிகள் கீழை நாட்டு விஞ்ஞானிகளை வென்றுவிட்டார்கள். என்றாலும் இரு பிரிவினரும் உண்மையே தங்கள் அடிப்படை என்று கூறுகின்றனர். நான் ஆரம்பத்தில் சொன்னதுபோல் எந்தத் துறையாக இருந்தாலும் உண்மை ஒருபோதும் தனக்குத்தானே முரண்படாது; அக உண்மைகளும் புற உண்மைகளும் இயைபுடனே திகழும்.

பிரபஞ்ச இயல் பற்றிய இக்கால வானநூல் அறிஞர்கள் மற்றும் விஞ்ஞானிகளின் கொள்கை நமக்குத் தெரியும். இந்த விஞ்ஞானக் கொள்கைகள், எவ்வளவு மோசமாக ஐரோப்பிய மதக் கொள்கைகளின் அஸ்திவாரத்தையே அசைக்கின்றன என்பதும் நமக்குத் தெரியும். தற்கால விஞ்ஞான உண்மைகள் வெடிகுண்டுகளைப்போல் சமயக் கோட்டைகளைத் தகர்க்கின்றன. எனவே இந்த விஞ்ஞான ஆராய்ச்சிக்குத் தடை விதிக்க மதவாதிகள் பலமுறை முயன்றதும் நமக்குத் தெரியும்.

கீழை நாட்டுப் பிரபஞ்ச இயல் மற்றும் அது சம்பந்தமான உண்மைகளின் மனஇயல் கருத்துக்களை இப்போது உங்களிடம் கூற விரும்புகிறேன். அவை தற்கால விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுடன் எவ்வளவு ஆச்சரியமான ஒற்றுமை உடையனவாக இருக்கின்றன என்பதை நீங்கள் காணலாம். இவற்றுள் எங்காவது இயைபு இல்லாததுபோல் தோன்றுமானால் அதற்குத் தற்கால விஞ்ஞானத்தின் குறைதான் காரணமாக இருக்குமே தவிர, அவர்கள் அல்ல என்பதையும் நீங்கள் காண முடியும்.

இயற்கை என்ற சொல்லை நாம் எல்லோரும் பயன்படுத்துகிறோம். பழைய சாங்கியத் தத்துவவாதிகள் இதைக் குறிக்க இரண்டு சொற்களைப் பயன்படுத்தினார்கள்—ஒன்று இயற்கை என்ற சொல்லை மிகவும் ஒத்திருக்கும் பிரகிருதி என்ற சொல், மற்றொன்று விஞ்ஞானபூர்வமான சொல்லான அவ்யக்தம். மாறுபாடு அற்றதும், அணு, மூலக்கூறு, சக்திகள், மனம், எண்ணம், அறிவு போன்ற அனைத்தின் தோற்றத்திற்கும்

மூலகாரணமாக இருப்பதும் என்பதே அவ்யக்தம் என்பதன் பொருள்.

மனம் ஒரு ஜடப்பொருள் என்பதைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தியத் தத்துவவாதிகளும் அறிஞர்களும் கூறியிருப்பதைக் காணும்போது நமக்குத் திகைப்பே உண்டாகிறது. இன்றைய உலோகாயதவாதிகள் (Materialists) எதை நிரூபிக்க முயல்கிறார்கள்? உடம்பைப்போல் மனமும் இயற்கையின் கூறு என்பதைத்தானே? எண்ணமும் அப்படியே. ஆராய்ச்சி இன்னும் முன்னேறமுன்னேற, அறிவும் இவ்வாறே இயற்கையின் கூறு என்பது தெரியவரும். இவை எல்லாமே அவ்யக்தம் என்ற இயற்கையிலிருந்து தோன்றியவை.

அவ்யக்தம் என்பது சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று சக்திகளின் சமச்சீர் நிலை என்று சாங்கியர்கள் சொல்கிறார்கள். தாழ்ந்த சக்தியாகிய தமஸ் கவரும் சக்தி. சற்று உயர்ந்த ரஜஸ், விலக்கும் சக்தி. மிக உயர்ந்த சக்தியாகிய சத்வம், இவை இரண்டின் சமச்சீர் நிலை ஆகும். கவரும் சக்தி, விலக்கும் சக்தி ஆகிய இரண்டும் சத்வத்தால் சரியான கட்டுப்பாட்டில் வைக்கப் பட்டால் படைப்பு நின்றுபோகிறது; உலகில் இயக்கமே இல்லாமல் போய்விடுகிறது. இந்தச் சமச்சீர் நிலை தவறியதும் சமநிலை குலைகிறது. இரண்டு சக்திகளுள் ஒன்று மற்றொன்றை விட வலிமை பெறுகிறது; இயக்கம் ஏற்படுகிறது. படைப்பு தொடங்குகிறது.

இவையெல்லாம் ஒரு சுழற்சியாக, ஓர் ஒழுங்குமுறையில் நடைபெறுகின்றன. அதாவது இந்தச் சமநிலை தவறுகின்ற காலம் ஒன்று உண்டு. அப்போது இந்தச் சக்திகள் சேர்ந்தும் கலந்தும், படைப்பு எல்லாம் வெளிப்படத் தொடங்குகின்றன. அதேவேளையில் ஆரம்ப நிலையாகிய சமச்சீர் நிலையை மீண்டும் அடைய வேண்டும் என்ற போக்கு எல்லா பொருட்களிடமும் இருக்கிறது. அந்தக் காலமும் வருகிறது. தோன்றிய பொருளெல்லாம் அப்போது மொத்தமாக அழிந்துவிடுகின்றன. ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின் மீண்டும் எல்லாம் கலைகின்றன; படைப்பு தொடங்குகிறது. திரும்பவும் இது அலைகள்போல் மெள்ள மெள்ள அடங்குகிறது. பிரபஞ்ச இயக்கம் எல்லாமே, தொடர்ந்து எழுவதும் விழுவதுமாக இருக்கின்ற அலைகள் போன்றே இருக்கிறது.

பிரபஞ்சம் முழுவதுமே ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒடுங்கி நிற்கிறது என்பது சில தத்துவவாதிகளின் கருத்து.

வேறு சிலர், இந்த ஒடுக்கம் பிரபஞ்சத்தின் குறிப்பிட்ட ஒரு பகுதிக்கு மட்டுமே என்கிறார்கள்; நமது பகுதி ஒடுங்கி அவ்யக்த நிலையை அடையும்போது பல கோடி வேறு பகுதிகள் வெளிப் படத் தொடங்கும் என்பது இவர்களின் கருத்து. எனக்கும் இரண்டாவது கருத்தே சரியாகத் தோன்றுகிறது. அதாவது ஒடுக்கம் என்றால் பிரபஞ்சம் எல்லாமே ஒரேவேளையில் ஒடுங்கி விடுவதல்ல; பல்வேறு பகுதிகளில் பல்வேறு விஷயங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. எப்படியானாலும் நாம் காண்கின்ற அனைத்தும் அதாவது இயற்கையே அலைகள் போல் எழுவதும் விழுவதுமாக முன்னேறிக் கொண்டிருக்கிறது என்ற உண்மை மாறவில்லை.

ஒடுக்க நிலை அல்லது சமச்சீர் நிலை அடைவதே பிரளயம் —ஒரு சுழற்சி அல்லது கல்பத்தின் முடிவு. பிரபஞ்சத்தின் தோற்ற ஒடுக்கங்களை இறைவனது வெளிமூச்சிற்கும் உள் மூச்சிற்கும் ஒப்பிடுகின்றனர் இந்தியாவின் புராண ஆசிரியர்கள். இறைவன் பிரபஞ்சத்தை மூச்சாக வெளிவிடுவது போலவும், உள்மூச்சாகத் தன்னுள் ஒடுக்கிக்கொள்வது போலவும் உள்ளது.

ஒடுங்கும்போது பிரபஞ்சம் என்ன ஆகிறது? அது இருக் கிறது. சூட்சும உருவாக இருக்கிறது, காரண உருவில் இருக்கிறது என்கிறது சாங்கியத் தத்துவம். அந்த நிலையிலும் அது காரண காரியம், இடம், காலம் போன்றவற்றிலிருந்து விடுபடவில்லை. அவை இருக்கின்றன. மிக நுட்பமான உருவில் இருக்கின்றன, அவ்வளவுதான். பிரபஞ்சம் முழுவதுமே சுருங்கத் தொடங்கு வதாகக் கற்பனை செய்துகொள்ளுங்கள். நாம் ஒவ்வொருவருமே ஒரு சிறு மூலக்கூறு (Molecule) ஆகிறோம். ஆனால் இந்த மாற் றத்தை நாம் உணரவே மாட்டோம். நம்மைச் சுற்றியுள்ள எல் லாமே அதேவேளையில் சுருங்குவதுதான் இதற்குக் காரணம். எல்லாமே ஒடுங்குகிறது; திரும்பவும் விரிகிறது. காரணம் காரி யத்தை வெளிப்படுத்துகிறது. இப்படியே சுழன்று செல்கிறது.

தற்காலத்தில் நாம் ஜடப்பொருள் என்று எதைக் குறிப்பிடு கிறோமோ, அதையே பழங்கால மனஇயல் அறிஞர்கள் பூதங் கள் அல்லது புற மூலக்கூறுகள் (External Element) என்றார்கள். அவர்களின் கருத்துப்படி அழிவே இல்லாத ஒரே ஒரு மூலகம் (Element) உண்டு; மற்ற மூலகங்களெல்லாம் இதிலிருந்தே தோன்றுகின்றன. இதுவே ஆகாசம். இது தற்காலத்தின் 'ஈதரை' (Ether) ஏறக்குறைய ஒத்தது. ஈதரும் ஆகாசமும் ஒரேபோன்றவை அல்ல. இந்த மூலகத்துடன் ஆதிசக்தியான பிராணனும் உள்ளது.

பிராணனும் ஆகாசமும் பற்பல வகையில் இணைந்து மூலகங்களை உருவாக்குகின்றன. கல்ப முடிவில் எல்லாம் ஒடுங்கி, மீண்டும் ஆகாசத்திலும் பிராணனிலும் சேர்கின்றன.

மனிதன் எழுதியவற்றுள் மிகவும் புராதனமான ரிக்வேதத்தில் படைப்பைப் பற்றிய அழகிய கவிதை[1] ஒன்று வருகிறது. இருப்பு இன்மை (Aught, Nought) இரண்டுமே இல்லாதபோது இருளின் மீது இருள் புரண்டு கொண்டிருந்தபோது என்ன இருந்தது?' இதற்கு விடை பின்வருவதாகும். 'எந்த அதிர்வும் இன்றி இருந்தது அது.'

அப்போதும் பிராணன் இருந்தது; ஆனால் அதில் இயக்கம் இல்லை. ஆனீதவாதம் என்றால் அதிர்வின்றி இருப்பது என்பதாகும். அதிர்வு நின்றுவிட்டது. பிறகு நீண்ட இடைவெளிக்குப் பின் கல்பம் தொடங்கும்போது, அதிர்வின்றி இருந்த அணு அதிரத் தொடங்குகிறது. பிராணன் ஆகாசத்தின்மீது அடிமேல் அடி கொடுக்கத் தொடங்குகிறது. அணுக்கள் செறிவுற்று இணைந்து, பல்வேறு மூலகங்கள் தோன்றுகின்றன.

இந்தப் பகுதிகளை வினோதமாக மொழிபெயர்த்திருப்பதை நாம் காண்கிறோம். அவற்றின் பொருளை உணர்ந்து கொள்ள விரும்புபவர்கள், தத்துவ அறிஞர்களையோ உரையாசிரியர்களையோ நாடவும் மாட்டார்கள்; சுயமாக அறிந்து கொள்வதற்குப் போதிய அறிவும் அவர்களுக்கு இல்லை. முட்டாள் ஒருவன் மூன்றே மூன்று சம்ஸ்கிருத எழுத்துக்களைப் படித்துவிட்டு ஒரு முழு நூலையே மொழிபெயர்த்துவிடுகிறான்; பஞ்சபூதங்களைக் காற்று, நெருப்பு என்றெல்லாம் மொழிபெயர்க்கிறார்கள். உரையாசிரியர்களை அணுகினால் இவற்றின் பொருட்கள் இவையே இல்லை என்பது தெரியவரும்.

பிராணன் ஆகாசத்திற்குக் கொடுக்கும் அடிகளின் பலனாக வாயு அல்லது அதிர்வுகள் உண்டாகின்றன. இந்த வாயு அதிரத் தொடங்குகிறது. இந்த அதிர்வுகளின் பலத்த வேகத்தால் ஏற்படும் உராய்வினால் வெப்பம் அல்லது தேஜஸ் தோன்றுகிறது. இந்த வெப்பம் திரவமாகிறது; இதுவே அப்பு அல்லது நீர். பின்னர் இந்தத் திரவம் திடமாகிறது. ஆகாசமும் அதிர்வும் இருந்தது, பின்னர் வெப்பம் வந்தது, பின்னர் அது திடமாகி, தூலப்பொருளாகச் சுருங்கியது. ஒடுங்கும்போது

---

1. நாஸதாஸீன்னோஸதாஸீத் ததானீம்...
தம ஆஸீத் தமஸா கூடமக்ரே...
—நாஸதீய சூக்தம், ரிக்வேதம் 10. 129.

தூலத்திலிருந்து தொடங்கி இதே முறையில் பின்னோக்கிச் செல்கிறது. திடம் திரவமாகும்; திரவம் அனலாகும்; அனல் அதிர்வுகள் ஆகும்; முடிவில் இந்த அதிர்வுகள் நிற்கும், கல்பமும் முடியும். இப்படியே பிரபஞ்சம் தோன்றித்தோன்றி ஒடுங்கிய வண்ணம் இருக்கும்.

ஆகாசத்தின் துணையின்றிப் பிராணன்மட்டும் தனியாகச் செயல்பட முடியாது. இயக்கம், அதிர்வு, எண்ணம் என்று நாம் அறியும் சக்திகள் எல்லாம் பிராணனுடைய பல்வேறு நிலைகள். உருவம், தடை என்று நாம் அறியும் ஜடப்பொருள் எல்லாம் ஆகாசத்தின் வேறு நிலைகள். ஆதாரப் பொருள் ஒன்றின்றிப் பிராணன் தனியாக வாழ இயலாது; செயல்படவும் இயலாது. அது சுத்தப் பிராணனாக இருக்கும்போது ஆகாசத்தையே தன் இருப்பிடமாகக் கொண்டிருக்கிறது. அது புவியீர்ப்புச் சக்தி, மையநோக்குச் சக்தி போன்ற இயற்கைச் சக்திகளாக மாறும் போது அதற்கு ஆதாரமாக ஜடப்பொருள் தேவைப்படுகிறது.

சக்தி இல்லாத ஜடப்பொருளையோ, ஜடப்பொருள் இல் லாத சக்தியையோ நாம் காண முடியாது. சக்தி, ஜடப்பொருள் என்று நாம் சொல்பவை நுட்பமான பிராணன், ஆகாசம் என்பவற்றின் தூல வெளிப்பாடுகளே ஆகும். பிராணனைத்தான் ஆங்கிலத்தில் Life, அதாவது உயிர், ஆதார சக்தி என்று வழங்கு கிறோம். ஆனால் இதை மனித உயிர் என்ற எல்லைக்குள் குறுக்கக் கூடாது; அதேவேளையில் அதை ஆன்மா என்றும் எண்ணிவிடக் கூடாது. இப்படியே இந்தப் பிரபஞ்சச் சக்கரம் சுழல்கிறது. படைப்பிற்கு ஆரம்பமும் முடிவும் இருக்கவே இய லாது. இது முடிவற்ற ஒரு நிகழ்ச்சி.

பழைய மனஇயல் வல்லுனர்களின் மற்றொரு கருத்தை இங்கே கூறுவோம். 'தூலப் பொருட்கள் எல்லாமே நுண் பொருட்களின் பலன்களே' என்று அவர்கள் கூறுகின்றனர். தூலப் பொருள் ஒவ்வொன்றும் தன்மாத்திரைகள் எனப்படு கின்ற நுண்ணணுக்களால் ஆனது. நான் ஒரு பூவை முகர்ந்து பார்க்கிறேன். முகர வேண்டுமானால் ஏதோ ஒன்று என் மூக்கை யும் மலரையும் இணைக்க வேண்டும். மலர் அங்கே இருக்கிறது, அது என்னை நோக்கி நகரவில்லை. மலரிலிருந்து வந்து என் மூக்குடன் தொடர்பு கொள்கின்ற மலரின் நுண்ணணுக்களே தன்மாத்திரைகள். வெப்பம், ஒளி முதலிய எல்லாவற்றிலும் நிகழ்வது இதுதான். இந்தத் தன்மாத்திரைகளை இன்னும் நுட்பமான அணுக்களாகப் பகுக்கலாம்.

வெவ்வேறு தத்துவவாதிகள் வெவ்வேறு கொள்கைகளை உடையவர்களாக இருக்கிறார்கள். ஆனால் இவை வெறும் கொள்கைகள் மட்டுமே என்பது நமக்குத் தெரியும். தூலமான எதுவுமே மிகமிக நுண்ணிய அணுக்கள் சேர்ந்தது என்று அறிவது நமக்குப் போதுமானது. புறத்தில் உணர்பவை முதலில் நமக்குப் புலனாகிறது. பிறகு கண், காது இவற்றுடன் தொடர்பு கொள்ளும் நுண் மூலகங்கள் புலனாகின்றன. ஆகாச அலைகள் என் கண்களைத் தொடுகின்றன. அவற்றை என்னால் பார்க்க முடியாவிட்டாலும், நான் ஒளியைக் காண வேண்டுமானால் முதலில் அந்த அலைகள் என் கண்களைத் தொட வேண்டும்.

கண்கள் இருக்கின்றன. ஆனால் அவை பார்ப்பதில்லை. மூளையிலுள்ள பார்வைமையத்தை நீக்கிவிடுங்கள். அப்போதும் கண்கள் இருக்கும். புறப் பொருட்களின் படம் விழித்திரையில் விழவே செய்யும். என்றாலும் கண் பார்க்காது. எனவே கண்கள் துணைக் கருவியே தவிர பார்வைப் புலன் அல்ல. மூளையில் உள்ள பார்வைமையமே பார்வைப் புலன். இது போலவேதான் மூக்கும் வெறும் துணைக்கருவி, அதற்குப் பின்னால் மூளையில் ஒரு புலன் இருக்கிறது. பொறிகள் வெறும் புறக் கருவிகள் மட்டுமே. இவற்றிற்கு அப்பால் மூளையில் இருக்கும் புலன்கள் அல்லது இந்திரியங்களே புலனுணர்ச்சி மையங்கள் ஆகும்.

மனம் புலன்களுடன் இணைந்தால்தான் அறிவு உண்டாகும். நாம் படிப்பில் ஆழ்ந்திருக்கும்போது மணியோசை நமக்குக் கேட்பதில்லை. ஏன்? காது இருக்கிறது, ஒலி அதன் வழியாக மூளைக்கும் சென்றது. ஆனாலும் அது கேட்கவில்லை. ஏனெனில் மனம் கேள்விப் புலனுடன் இணையவில்லை.

ஒவ்வொரு பொறி அல்லது கருவிக்கும் ஒவ்வொரு புலன் அல்லது இந்திரியம் உண்டு. புலன் ஒன்றுதான் என்றால், இதனுடன் மனம் இணைந்து நிற்கும்போது எல்லா புலன் உணர்ச்சிகளையும் ஒரேவேளையில் நாம் உணர்வோம். ஆனால் இப்படி நடப்பதில்லை என்பதை மணியோசை உதாரணம் நமக்குக் காட்டிவிட்டது. எல்லா பொறிகளுக்கும் புலன் ஒன்றானால் பார்ப்பதும் கேட்பதும் ஒரேவேளையில் நடக்க வேண்டும். ஒரே நேரத்தில் மனத்தால் பார்க்கவும் கேட்கவும் முகரவும் முடிந்திருக்க வேண்டும். இது இயலாத காரியம். எனவே ஒவ்வொரு பொறிக்கும் தனித்தனிப் புலன் இருக்க வேண்டுவது இன்றியமையாதது. நவீன உடலியல் நூலும் இதையே கூறுகிறது. கட்டாயமாக ஒரே நேரத்தில் பார்க்கவும் கேட்கவும்

முடியும். அதற்குக் காரணம் மனம் இரண்டு புலன்களிலும் பகுதிபகுதியாக இணைந்திருப்பதே ஆகும்.

புலன்கள் எதனால் ஆனவை? கண், காது, மூக்கு போன்ற பொறிகள் தூல ஜடப்பொருளால் ஆனவை என்பது தெரிகிறது. புலன்களும் ஜடப்பொருளால் ஆனவைதாம். தூலப் பொருளால் ஆன உடல் எவ்வாறு பிராணனைப் பல தூல சக்திகளாக மாற்றுகிறதோ, அவ்வாறே ஆகாசம், வாயு, தேஜஸ் போன்ற நுண் மூலகங்களால் ஆகிய புலன்கள், பிராணனை உணர்ச்சியின் நுண்சக்திகளாக மாற்றுகின்றன. புலன்கள், பிராணனின் இயக்கங்கள், மனம், புத்தி இவற்றின் இணைப்பையே மனிதனின் நுட்ப உடல் அல்லது லிங்க சரீரம் அல்லது சூட்சும சரீரம் என்கிறோம். லிங்க சரீரத்திற்கு உருவம் உண்டு. ஏனெனில் ஜடப் பொருளாலான எதற்கும் உருவம் இருந்தேயாக வேண்டும்.

விருத்தி உருவிலுள்ள, அதாவது சமநிலை கலைந்து அதிர்கின்ற சித்தமே மனம் எனப்படுகிறது. ஏரியில் கல் ஒன்றை எறிந்தால், முதலில் அதிர்வும் பின்னர் அதற்கு எதிர்ப்பும் ஏற்படும். ஒரு கணம் நீர் அதிர்கிறது. பிறகு அது கல்லில் சென்று மோதுகிறது. இதுபோலவே சித்தத்தில் ஒரு பதிவு ஏற்பட்டதும் அது முதலில் சற்று அதிர்கிறது; இதுவே மனம். மனம் இந்தப் பதிவை இன்னும் உள்ளேகொண்டு சென்று, தீர்மானிக்கின்ற மையமான புத்தியில் சேர்க்கிறது. இங்கே எதிர்ச்செயல் உண்டாகிறது. புத்திக்குப் பின்னணியாக நான்- உணர்வு இருக்கிறது. அதற்குப் பின்னால் மகத் இருக்கிறது. இது இயற்கையின் மிக உயர்ந்த அறிவு நிலை. இந்தத் தொடரிலுள்ள ஒவ்வொன்றும் தனக்கு முன்னுள்ள பொருளாகிய காரணத்தின் காரியம் ஆகும். ஏரிநீருக்கு விழும் அடி ஒவ்வொன்றும் புறவுலகிலிருந்து வருகிறது. மனத்திற்கு ஏற்படும் தாக்குதல்கள் வெளியிலிருந்தும் வரலாம், உள்ளிருந்தும் வரலாம். மகத்திற்குப் பின்னால் மனிதனின் ஆன்மாவான புருஷன் இருக்கிறது. இது தூய்மையானது, பூரணமானது. இதுவே எல்லாவற்றையும் அனுபவிப்பது. இதற்காகவே இந்தப் பிரபஞ்ச மாறுதல்கள் எல்லாம் நடைபெறுகின்றன.

மனிதன் இந்த மாறுதல்களை எல்லாம் காண்கிறான். அவன் ஒருபோதும் தூய்மையற்றவனாக இருந்ததில்லை. ஆனால் வேதாந்திகள் கூறுவதுபோல் ஏற்றுச்செயல் (அத்யாஸம், Superimposition) காரணமாக அவன் தூய்மையற்றவன்போல் தோன்றுகிறான். தூய பளிங்கு தன்னைச் சாரும்

சிவப்பு அல்லது நீல நிறம் பெறுவதுபோல் தோன்றுவது இதற்கு உவமையாகும். பளிங்கில் நிறம் பிரதிபலிக்கிறது. ஆனால் அது தூயதாகவே இருக்கிறது. பல ஆன்மாக்கள் இருப் பதாகவும், ஒவ்வொன்றும் தூயது, பூரணமானது, குறைவற்றது என்றும் கொள்வோம். பல்வேறு தூலப்பொருட்களும் நுண்பொருட்களும் அவற்றைச் சார்ந்தும் சூழ்ந்தும் இவை பல பண்புகள் கொண்டவைபோல் தோன்றச் செய்கின்றன.

இயற்கை இப்படியெல்லாம் செய்யக் காரணம் என்ன? ஆன்மாவின் முன்னேற்றத்திற்காகவே இயற்கை இந்த மாறுதல்களை எல்லாம் அடைகிறது. இந்தப் படைப்பு முழுவதும் ஆன்மாவின் நன்மைக்காக, அதன் முக்திக்காகவே. பிரபஞ்சம் என்று கூறப்படும் இந்த மகத்தான புத்தகம், மனிதன் படித்து அறிவு பெறுவதற்காகவே அவன் முன்னே விரிந்து கிடக்கிறது. இதன் விளைவாக அவன், தான் எல்லாம் அறிந்தவன், எல்லாம் வல்லவன் என்பதைக் கண்டறிகிறான்.

நான் இங்கே ஒன்று சொல்ல வேண்டும்: எங்கள் சிறந்த மன வல்லுனர்களுள் சிலர் நீங்கள் நினைப்பது போன்றவரான ஒரு கடவுளை நம்புவதில்லை. எங்கள் மனஇயலின் தந்தை யான கபிலர், கடவுள் உண்டு என்பதையே மறுக்கிறார். சகுணக் கடவுள் என்ற ஒருவர் அவசியமே இல்லை என்பது அவர் கருத்து. படைப்பை நடத்த இயற்கையே போதுமானது என் கிறார் அவர். படைப்புத் திட்டக் கொள்கையை (Design Theory)[1] அவர் ஒரேயடியாகத் தலையில் அடித்துவிட்டார். அது ஒரு குழந்தைத்தனமான கொள்கை என்றும், இவ்வளவு குழந்தைத் தனமான கொள்கை இதுவரையில் தோன்றியதே இல்லை என்றும் சொல்லிவிட்டார்.

ஆனால் அவர் ஒரு விசித்திரமான இறைவனை ஒப்புக் கொள்கிறார். நாம் எல்லோரும் விடுதலை பெறுவதற்காகத் தான் போராடுகிறோம். அந்த விடுதலை அல்லது முக்தியை அடைந்ததும் நாம் இயற்கையுடன் இரண்டறக் கலந்துவிட முடியும். அடுத்த கல்பத்தின் தொடக்கத்தில் மீண்டும் வெளி வந்து இயற்கையை ஆள்பவராக இருப்போம். அப்போது நாம் எல்லாம் அறிந்தவராக எல்லா வல்லமையும் பெற்றவர்களாக ஆகிவிடுகிறோம்! அதாவது ஒருவிதத்தில் நாம் ஒவ்வொரு வரும் இறைவனாகிவிடுகிறோம். நீங்களும் நானும் மிகத் தாழ்ந்த

1. படைப்பில் ஒரு திட்டமும் ஒழுங்குமுறையும் இருப்பதால் அதைப் படைத்த ஒருவர் இருந்தேயாக வேண்டும் என்னும் கொள்கை.

படைப்புகளும்கூட, ஏதாவது ஒரு கல்பத்தில் இறைவனாகியே தீர்வோம். இத்தகைய இறைவன் நிரந்தரமானவர் அல்ல.

ஆனால் என்றும் உள்ள, எல்லாம் வல்ல ஓர் இறைவன் இருக்கவே முடியாது என்று சாதிக்கிறார் அவர். அப்படி ஒரு கடவுள் இருப்பாரானால் ஒரு பிரச்சினை ஏற்படுகிறது—அவர் கட்டுப்பட்டவராக அல்லது சுதந்திரமானவராக இருக்க வேண்டும். முற்றிலும் சுதந்திரமான இறைவன் படைக்க மாட் டார். அதற்கு அவசியமே இல்லை. கட்டுப்பட்டவர் என்றால் அவராலும் படைப்பு நடைபெறாது, ஏனெனில் அவரால் படைக்க இயலாது; அவருக்கு அந்த ஆற்றல் இல்லை. இரண்டு வகையில் பார்த்தாலும் என்றும் உள்ள, அழிவற்ற, எல்லாம் அறிந்த, எல்லாம் வல்ல இறைவன் ஒருவன் இருக்க முடியாது. நமது சாஸ்திரங்களில் இறைவன் என்று எங்கே வந்தாலும் முக்திப் பெற்ற மனிதர் என்பதே அதன் பொருள் என்கிறார் அவர்.

ஆன்மாக்களின் ஒருமையையும் கபிலர் நம்புவதில்லை. அவருடைய ஆராய்ச்சி முறை அற்புதமானது, பிரமிப்பைத் தருவது. இந்தியச் சிந்தனையாளர்களின் தந்தை அவரே. புத்த மதம் முதலிய பல நெறிகள் அவரது சிந்தனையின் விளைவுகளே.

அவரது மனஇயலின்படி எல்லா ஆன்மாக்களும் தங்கள் சுதந்திரத்தையும் தங்கள் சொந்த உரிமைகளான அதாவது எல்லாம் வல்ல மற்றும் எல்லாம் அறிகின்ற தன்மையை மீண்டும் பெற முடியும். இப்போது ஒரு கேள்வி எழுகிறது: இந்தப் பந்தம் எங்கிருந்து வந்தது? இதற்குத் தொடக்கம் இல்லை என்கிறார் கபிலர். தொடக்கம் இல்லை என்றால் முடிவும் இருக்க இயலாது. அப்படியானால் நாம் சுதந்திரராகவே முடியாது. இந்தப் பந்தத்திற்குத் தொடக்கம் இல்லை என்றாலும், அது ஆன்மாவைப்போல் ஒரே நிலையில் இருப்பதல்ல என்கிறார் கபிலர். அதாவது, இயற்கைக்குத் (பந்தத்தின் மூல காரணம்) தொடக்கமும் முடிவும் இல்லை என்றாலும் இது ஆன்மாவிற்கு உள்ளது போன்றதல்ல. ஏனெனில் இயற்கைக்குத் தனியான இருப்பு இல்லை. அது ஆறு போன்றது. ஆறு ஒவ்வொரு நொடியும் புதிய நீரைப் பெறுகிறது. இப்படி நொடிக்குநொடி மாறிக் கொண்டிருக்கும் நீரின் பிரவாகத்தையே ஆறு என்கிறோம். ஆனால் ஆறு ஒரேமாதிரியான, ஒரே நிலையில் உள்ள பொருள் அல்ல. இயற்கையில் உள்ள ஒவ்வொன்றும் தொடர்ந்து மாறியபடியே

இருக்கின்றன. ஆனால் ஆன்மா மாறுவதில்லை. இயற்கை இப்படித் தொடர்ந்து மாறிக் கொண்டிருப்பதால், ஆன்மா அதன் பந்தத்திலிருந்து வெளிவர முடியும்.

பிரபஞ்சம் முழுவதன் திட்டமும் அதன் ஒரு பகுதியின் திட்டம் போன்றதே. எனக்கு ஒரு மனம் இருப்பதுபோலவே பிரபஞ்ச மனமும் ஒன்று உண்டு. தனி மனிதனிடம் எப்படியோ, அப்படியே பிரபஞ்சத்திலும் உண்டு. பிரபஞ்சத்திற்குத் தூல உடல் உண்டு; அதற்குப் பின்னால் சூட்சும உடல் உண்டு; அதற்குப் பின்னால் பிரபஞ்ச மனம் உண்டு; அதற்குப் பின்னால் பிரபஞ்ச நான்-உணர்வு உண்டு; அதற்குப் பின்னால் பிரபஞ்ச அறிவு இருக்கிறது. இவையெல்லாம் இயற்கையினுள் உள்ளன. எல்லாம் இயற்கையின் வெளிப்பாடே; அதற்கு வெளியில் இல்லை.

தூலவுடலும் அறிவுத்திறனும் நாம் நமது பெற்றோரிட மிருந்து பெற்றவை. பரம்பரைக் கொள்கையின்படி பார்த்தால், நமது உடம்பு நமது பெற்றோரின் உடம்பின் பகுதியே. நமது அறிவும் நான்-உணர்வும் நமது பெற்றோருடைய அறிவு மற்றும் நான்-உணர்வின் பகுதியே. பெற்றோரிடமிருந்து கிடைத்த சிறு அறிவுடன் பிரபஞ்ச அறிவிலிருந்து பெற்றவற்றையும் நாம் சேர்த்துக் கொள்ளலாம். எல்லையற்ற அறிவுக் களஞ்சியம் ஒன்று உள்ளது. இதிலிருந்து நமக்கு வேண்டியதை நாம் பெற்றுக் கொள்ளலாம். பிரபஞ்சத்தில் எல்லையற்ற மனசக்திக் களஞ்சியம் ஒன்று இருக்கிறது. இதிலிருந்து நாம் ஓய்வில்லாமல் எடுத்துக் கொண்டே இருக்கிறோம். ஆனால் இந்த அறிவு அல்லது மனச் சக்தியின் விதை நமக்கு நம் பெற்றோரிடமிருந்தே கிடைக்க வேண்டும். பரம்பரைக் கொள்கையுடன் மறுபிறவிக் கருத்தும் இணைந்ததே நம் கொள்கை. பரம்பரைக் கொள்கைப் படி, மறுபிறவி எடுக்கும் ஆன்மா, தன்னை ஒரு மனிதனாக ஆக்குவதற்கு வேண்டிய மூலப்பொருட்களைப் பெற்றோரிட மிருந்தே பெற்றுக்கொள்கிறது.

நான் இருப்பதே பிரபஞ்சம் இருப்பதற்குக் காரணம், நான் இல்லை என்றால் பிரபஞ்சமும் இருக்காது என்று ஐரோப்பியத் தத்துவ அறிஞர்கள் சிலர் அடித்துச் சொல் கிறார்கள். இதுவே வேறுவிதமாகச் சொல்லப்படுகிறது. உலக மக்கள் எல்லோரும் இறந்து, மனிதப்பூண்டே அற்றுப்போய், புலனறிவும் பகுத்தறிவும் பெற்ற மற்ற பிராணிகளும் அழிந்து போகுமானால், இந்தத் தோற்றப் பிரபஞ்சமும் மறைந்துவிடும்.

ஆனால் இந்த ஐரோப்பியத் தத்துவவாதிகளுக்கு இதன் அடிப்படைக் கோட்பாடு தெரிந்தாலும், மனஇயல் உண்மை தெரியாது. நவீன தத்துவ சாஸ்திரமும் இதைப்பற்றி மிகச் சிறிதளவே அறிந்திருக்கிறது.

சாங்கியத்தின் நோக்கில் பார்த்தால் இது எளிதாகப் புரிந்து விடும். என் மனத்தின் ஒரு பகுதி கலக்காத எந்தப் பொருளும் இருக்க முடியாது. இந்த மேஜையை உள்ளது உள்ளபடி எனக்குத் தெரியாது. அதைப் பற்றிய ஒரு பதிவு என் கண்களுக்கு வருகிறது; பிறகு புலனுக்குப் போகிறது; பிறகு மனத்திற்குப் போகிறது. மனம் பிரதிச்செயல் புரிகிறது. இந்தப் பிரதிச் செயலையே நான் மேஜை என்று சொல்கிறேன். இது ஏரியில் கல்லை வீசுவது போன்றதுதான். கல்லை வீசியதும், ஏரி கல்லை நோக்கி ஓர் அலையை வீசுகிறது. நமக்குத் தெரிவது இந்த அலைதான். புற உலகில் என்ன இருக்கிறது என்பதை யாருமே அறிய முடியாது. அதை அறிய நான் முயலும்போது, அது நான் கொடுக்கின்ற பொருளாக மாற வேண்டியிருக்கிறது. நான், என் மனத்தால் அந்தப் பொருளை உருவாக்கி என் கண் களுக்கு அந்தப் பொருளைப் புலப்படுத்தியிருக்கிறேன். வெளியே ஏதோ ஒன்று இருக்கிறது; அதுதான் வாய்ப்பு, ஒரு சூசகம், அவ்வளவுதான். அதில் நான் என் மனத்தைச் செலுத்து கிறேன். இது நான் பார்க்கும் உருவத்தை அடைகிறது. அப்படி யானால் நாம் எல்லோரும் ஒரேமாதிரியான பொருட்களையே காண்பது எப்படி? நம் எல்லோருடைய மனங்களும் பிரபஞ்ச மனத்தின் ஒரு பகுதியாக இருப்பதுதான் இதற்குக் காரணம். ஒரேமாதிரியான மனம் கொண்டவர்கள் ஒரே மாதிரி பார்ப் பார்கள். வேறுபட்ட மனம் கொண்டவர்கள் வேறாகவே பார்ப் பார்கள்.

## 3. பிரகிருதியும் புருஷனும்

### (சாங்கியத் தத்துவத்தைப்பற்றிய ஓர் ஆராய்ச்சி)

8 ஜனவரி 1896

பிரகிருதியை அவ்யக்தம் என்கிறார்கள் சாங்கியர்கள். அதிலுள்ள மூலப் பொருட்களின் சமச்சீர் நிலையே பிரகிருதி என்று விளக்குகிறார்கள். எனவே அந்தச் சமச்சீர் நிலையில் எந்த இயக்கமும் இருக்க முடியாது என்பது தெளிவு. தொடக்க நிலையில் எந்தவிதமான தோற்றம் அல்லது விரிவும் ஏற்படு வதற்கு முன், இயக்கமே இல்லாமல் சமச்சீர் நிலை மட்டுமே இருந்தபோது பிரகிருதி அழியவில்லை. ஏனெனில் சமநிலை இன்மையாலோ மாறுதலாலோதானே அழிவு ஏற்பட முடியும்!

சாங்கியத் தத்துவத்தின்படி அணுக்கள் ஆதி காரணம் அல்ல. இந்தப் பிரபஞ்சம் அணுக்களிலிருந்து உருவாகவில்லை. அணு என்பது விரிவின் இரண்டாவது அல்லது மூன்றாவது படியாக இருக்கலாம். ஆதிமூலப் பொருள் அணுக்களாக, தூலப் பொருட்களாக, பெரிய பொருட்களாக ஆகியிருக்கலாம்.

தற்கால ஆராய்ச்சிகளும் இதையே சுட்டுகின்றன. உதாரண மாக, ஈதர் (Ether) அல்லது ஆகாசம் பற்றிய தற்காலக் கருத்துப் படி, அது அணுக்களால் ஆனது என்று கூறினால் ஒன்றும் புரிவதில்லை. இதைத் தெளிவுபடுத்த வேண்டுமானால் இப்படிக் கூற வேண்டும்: காற்று அணுக்களால் ஆனது; ஆகாசம் எங்கும் நிறைந்தது, எல்லாவற்றினுள்ளும் ஊடுருவி நிற்பது. காற்ற ணுக்கள் இந்த ஆகாசத்தில் மிதப்பதுபோல் தோன்றுகின்றன. ஆகாசம் அணுக்களால் ஆனது என்றால், இரண்டு அணுக் களுக்கிடையில் இடம் இருந்தாக வேண்டுமே! இந்த இடத்தை அடைத்திருக்கும் பொருள் எது? இன்னும் நுட்பமான ஆகாசம் ஒன்று இதை அடைத்திருக்கிறது என்றால், இந்த நுட்பமான ஆகாசத்தினுடைய அணுக்களின் இடைவெளியை எது நிரப்பு கிறது என்ற கேள்வி எழும். இந்த வாதத்திற்கு முடிவே இல்லை; இதனை சாங்கியர்கள் 'அனவஸ்தா தோஷம்' என்கிறார்கள். எனவே இந்த அணுக்கொள்கை அறுதிமுடிவாக முடியாது.

சாங்கியத்தின்படி பிரகிருதி எங்கும் நிறைந்தது; அனைத்தின் காரணத்தையும் உள்ளடக்கிய ஒன்று. காரணம் என்பது என்ன? நமக்கு வெளிப்பட்டுத் தோன்றுகின்ற தூல நிலையின் நுட்ப நிலையே. வெளிப்பாட்டின் தொடக்க நிலையே. அழிவு என்பது என்ன? காரியம் காரணமாவது. உங்களிடம் ஒரு மண் பானை இருக்கிறது, அதை அடித்தால் அது உடைந்து போகிறது. இதன் பொருள் என்ன? காரியமான பானை, காரணமான, பானையின் தொடக்க நிலையான மண்ணாகிறது என்பதுதான். இந்த விளக்கத்தை விட்டுவிட்டு, அழிவு என்பது முற்றிலும் அழிந்து சூனியம் ஆவது என்றெல்லாம் கூறுவது பொருளற்றது.

பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் கபிலர் கூறிய இந்த உண்மையை, அதாவது காரியம் காரணமாவதே அழிவு என்பதை இக்கால பௌதீக விஞ்ஞான முறைப்படி நிரூபித்துக் காட்ட முடியும். நுண் நிலைக்குத் திரும்பச் செல்வதே அழிவு. ஜடப்பொருளுக்கு அழிவில்லை என்பதைச் சோதனைச்சாலையில் நிரூபிக்கும் விதம் நமக்குத் தெரியும். இந்த அறிவுயுகத்தில் யாராவது ஒருவர் ஜடப்பொருளோ ஆன்மாவோ அழிந்து விட்டது என்று சொன்னால் அவனது பேச்சு கேலிக்குத்தான் இடமாகும். பாமரனோ முட்டாளோதான் இப்படிப் பேசுவான். பழங்காலத் தத்துவவாதிகள் போதித்ததுடன் இன்றைய விஞ் ஞானிகளின் கருத்து ஒத்துப்போவது வியப்பிற்குரிய விஷயம். இப்படித்தான் இருக்க வேண்டும், இதுதான் உண்மைக்கு நிரூபணம். மனத்தை ஆதாரமாகக் கொண்டு முன்னவர் ஆராய்ந் தனர். பிரபஞ்சத்தின் மனப்பகுதியை ஆராய்ந்து அவர்கள் சில முடிவுகளைக் கண்டார்கள். நாம் பௌதீகப் பகுதியை ஆராய்ந் தாலும், இதே முடிவுக்குத்தான் வர வேண்டும்; இரண்டும் ஒரு மையத்தில்தானே முடிய வேண்டும்!

பிரபஞ்சத்தில் பிரகிருதியின் முதல் வெளிப்பாட்டைச் சாங்கியர்கள் மகத் என்று சொல்கிறார்கள். இதன் பொருள் புத்தி—மிகப் பெரும் தத்துவம். பிரகிருதியில் ஏற்படும் முதல் மாற்றம் இந்தப் புத்திதான். இதைத் தன்னுணர்வு (self-consciousness) என்று சொல்ல மாட்டேன்; அப்படிச் சொல்வது தவறாகும். உணர்வு என்பது மகத்தின் ஒரு பகுதி மட்டுமே. மகத் என்பது எங்கும் நிறைந்தது. உணர்வறுநிலை, உணர்வு நிலை, உணர்வுகடந்த நிலை எல்லாவற்றையும் அடக்கி நிற்பது தான் மகத். எனவே உணர்வின் ஒரு பகுதிக்குரிய பெயரால்

இதைச் சுட்டுவது பொருந்தாது. உதாரணமாக, பிரகிருதியில் நடக்கும் சில மாறுதல்களை நாம் கண்ணால் கண்டு புரிந்து கொள்கிறோம். ஆனால் மிக நுட்பமான வேறு சில மாறுதல் களும் நடைபெற்ற வண்ணம் இருக்கின்றன. அவை நமக்குப் புலனாவதில்லை. இந்த இரண்டுவகை மாறுதல்களுக்கும் காரண மாக இருப்பது ஒன்றுதான்; அதுதான் மகத். மகத்திலிருந்து தான் பிரபஞ்ச நான்-உணர்வு (Universal egoism) தோன்றுகிறது. இவையெல்லாம் பொருட்களே. ஜடப்பொருளுக்கும் மனத்திற் கும் தரத்தில் தவிர வேறுவகையான வேறுபாடு எதுவும் இல்லை. ஒரே பொருள் தூல நிலை, சூட்சும நிலை என்று இரண்டு நிலையில் இருக்கிறது; ஒன்றே மற்றொன்றாக மாறுகிறது. இது தற்கால உடலியல் ஆராய்ச்சிகளுடன் அப்படியே பொருந்து கிறது. மனம் மூளையிலிருந்து வேறுபட்டதல்ல என்ற கருத்தை நம்புவதனால் எவ்வளவோ போராட்டங்களிலும் குழப்பங் களிலுமிருந்தும் நாம் தப்பலாம்.

நான்-உணர்வும் இரண்டுவிதமாக மாறுகிறது. ஒருவகை யில் அது இந்திரியங்களாக மாறுகிறது. இந்திரியங்கள் இரண்டு வகைப்படும்—ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள். இவை கண், காது போன்ற வெளி உறுப்புக்கள் அல்ல. இவற்றிற்குப் பின்னால் உள்ள நரம்பு மையம் அல்லது மூளை மையங்களே இவை. நான்-உணர்வு ஜடப்பொருளாக மாறுகிறது. அந்தப் பொருளால்தான் இந்த இந்திரியங்கள் ஆக்கப்படுகின்றன. அதே பொருளால்தான் தன்மாத்திரைகள் என்ற மற்றொரு வகையும் ஆக்கப்படுகின்றன. மிக நுண்ஜடப்பொருளான இவையே நம் ஞானேந்திரியங்களைத் தாக்கி, நாம் புறப் பொருட்களை உணரும்படிச் செய்கின்றன. இவற்றை நாம் உணர முடியாது. ஆனால் அவை உள்ளன என்ற அளவில் அறிந்துகொள்ளலாம். அவ்வளவுதான்.

தன்மாத்திரைகளிலிருந்துதான், நாம் காண்கின்ற, உணர் கின்ற பொருட்களான நிலம், நீர் போன்றவை படைக்கப்பட் டுள்ளன. இது உங்கள் மனத்தில் நன்றாகப் பதிய வேண்டும். இதை நீங்கள் புரிந்துகொள்வது கடினம். ஏன்? ஏனெனில் மனத்தையும் ஜடப்பொருளையும்பற்றி மேலைநாடுகளில் வியப் பான கருத்துக்கள் நிலவுகின்றன. இவற்றை மூளையிலிருந்து விலக்குவது அவ்வளவு எளிதல்ல. இளமையில் மேலைநாட்டுத் தத்துவம் படித்த நானே இந்தக் கருத்துக்களை விலக்கப் பெரும் பாடு படவேண்டியிருந்தது. இவை பிரபஞ்ச மூலக்கூறுகள்.

இடையீடற்ற, மாறுபாடற்ற, எல்லாவற்றின் முதல் நிலையான, ஒன்றேயான, அந்தப் பிரபஞ்ச ஜடப்பொருளை நினைத்துக் கொள்ளுங்கள். பால் தயிராவதுபோல் இது மாறுபடத் தொடங்குகிறது. முதல் மாறுபாடுதான் மகத். இந்த மகத் இன்னும் தூலமான நான்-உணர்வாக மாறுகிறது. மூன்றாவது மாறுபாடு பிரபஞ்ச நிலையிலுள்ள இந்திரியங்களாகவும் தன்மாத்திரைகளாகவும் வெளிப்படுகிறது. இந்தத் தன்மாத்திரைகளே பிறகு ஒன்றுசேர்ந்து, நாம் கண்டு, கேட்டு, உணர்கின்ற இந்தத் தூலப் பிரபஞ்சமாக ஆகிறது. சாங்கியத் தத்துவத்தின்படி, பிரபஞ்சப் படைப்புக் கிரமம் இதுவாகும்.

அண்டத்தில் இருக்கும் எதுவும் பிண்டத்திலும் இருந்தேயாக வேண்டும். ஒரு தனி மனிதனை எடுத்துக்கொள்ளுங்கள். மாறுபாடற்ற மூலப் பிரகிருதிக்கூறு ஒன்று அடிப்படையாக அவனிடம் இருக்கிறது. இந்த மூலப் பிரகிருதி அவனிலுள்ள மகத்தாக மாறுகிறது; இது பிரபஞ்ச மகத்தின் ஓர் அம்சமாகும். அவனிலுள்ள பிரபஞ்ச மகத்தின் அம்சமே நான்-உணர்வாக மாறுகிறது; பிறகு புலன்களாகவும் தன்மாத்திரைகளாகவும் மாறுகிறது. இந்தத் தன்மாத்திரைகளின் பலவகைச் சேர்க்கையால் உடல் உருவாகிறது.

இதை நீங்கள் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். சாங்கியத் தத்துவத்தை அறிய இதைப் புரிந்துகொள்வது மிகவும் அவசியம். உலகம் முழுவதிலுமுள்ள தத்துவங்களின் அடிப்படையும் இதுதான். கபிலருக்கு நன்றிக்கடன்படாத எந்தத் தத்துவ சாஸ்திரமும் உலகில் இல்லை. பிதகோரஸ் இந்தியாவிற்கு வந்து இந்தத் தத்துவத்தைக் கற்றுச் சென்றார். கிரேக்கர்களின் தத்துவத்திற்கு ஆரம்பம் அதுதான். பிறகு இது அலெக்சான்டிரிய பிரிவுக்கும், பின்னர் க்னாஸ்டிக் நெறிக்கும் (Gnostic) அடிப்படை ஆயிற்று.

சாங்கியத் தத்துவம் இரண்டாகப் பிரிந்தது. ஒரு பிரிவு ஐரோப்பாவிற்கும் அலெக்சான்டிரியாவிற்கும் சென்றது; மற்றது இந்தியாவிலேயே இருந்தது. இதிலிருந்துதான் வியாசரின் தத்துவம் பிறந்தது. உலகில் முதன்முதல் தோன்றிய அறிவுபூர்வமான தத்துவம் (Rational philosophy) கபிலரின் சாங்கியத் தத்துவமே. தத்துவ அறிஞர் ஒவ்வொருவரும் இவரை வணங்கியாக வேண்டும். தத்துவத்தின் தந்தையாகிய இவரது கருத்தை நாம் அறிந்தேயாக வேண்டும் என்பதை

நான் வற்புறுத்த விரும்புகிறேன். இந்த அபூர்வ மனிதரை, தத்துவ மனிதர்களுள் முதல்வரைப் பற்றிய பேச்சைச் சுருதிகளிலும் காண்கிறோம்; 'கபிலர் என்ற முனிவரை முதலில் தோற்றுவித்த இறைவனே!'[1] என்கிறது சுருதி. இவரது கண்டுபிடிப்புகள் எவ்வளவு வியப்பிற்கு உரியது! யோகி களின் அசாதாரண அறிவுத்திறனுக்குச் சான்று வேண்டு மானால், கபிலர் போன்றவர்களே சான்று. அவர்களிடம் நுண்ணோக்கிகளோ, தொலைநோக்கிகளோ இல்லை. ஆனாலும் அவர்களின் அறிவு எவ்வளவு நுட்பமான கருத்துக்களை ஆராய்ந்தது! அவர்களின் ஆராய்ச்சித்திறன் எவ்வளவு உயர்ந்தது!

ஷோபனேரின் தத்துவத்திற்கும் இந்தியத் தத்துவத்திற்கும் உள்ள வேற்றுமையை இங்கே காணலாம். ஆசை அல்லது சங்கல்பமே எல்லாவற்றிற்கும் காரணம் என்கிறார் ஷோபனேர். வாழ வேண்டும் என்ற சங்கல்பம்தான் நம்மை வெளிப்படுத்து கிறது. ஆனால் நாங்கள் இதை ஒப்புக்கொள்வதில்லை. இந்தச் சங்கல்பமும் கட்டளை நரம்புகளும் (Motor nerves) ஒன்றே. நாம் ஒரு பொருளைக் காணும்போது அங்கே சங்கல்பம் இல்லை. ஆனால் அந்த உணர்ச்சிகள் மூளைக்கு எடுத்துச் செல்லப்பட்டவுடன், 'இதைச் செய், இதைச் செய்யாதே' என்ற கட்டளைகளாக எதிர்ச்செயல் பிறக்கிறது. நான்-உணர்வினுடைய மூலக்கூறுகளின் இந்த நிலையைத்தான் சங்கல்பம் என்கிறோம். எதிர்ச்செயல் அல்லாததாக சங்கல்பத்தின் ஓர் அணுக்கூட இருக்க முடியாது. சங்கல்பம் செயல்படுவதற்கு முன்னால் எத்தனையோ விஷயங்கள் உள்ளன. நான்-உணர்விலிருந்து உண்டாக்கப்பட்ட ஒன்றுதான் சங்கல்பம். இன்னும் நுட்பமான மகத்திலிருந்து ஆக்கப்பட்டது தான் நான்-உணர்வு. மகத்தும் அவ்யக்த பிரகிருதியின் பரிணாமமே ஆகும். நாம் காண்பதெல்லாம் சங்கல்பம் என்பது பௌத்தர்களின் கருத்து. மனத்தத்துவப்படி இது முற்றிலும் தவறு. ஏனெனில் சங்கல்பத்தைக் கட்டளை நரம்புகளுடன் மட்டுமே ஒன்றுபடுத்திக் கூற முடியும். கட்டளை நரம்புகள் இல்லை என்றால், மனிதனுக்குச் சங்கல்பம் என்பதே இல்லாமல் போய்விடும். உங்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கக்கூடிய இந்த

1. ரிஷிம் ப்ரஸூதம் கபிலம் யஸ்தமக்ரே ।
ஜ்ஞானைர்பிபர்த்தி ஜாயமானம் ச பச்யேத் ॥
—சுவேதாஸ்வதர உபநிடதம், 5.2.

உண்மை, தாழ்ந்தநிலை மிருகங்களிடம் நடத்தப்பட்ட நீண்டகால ஆராய்ச்சிக்குப் பின்னரே கண்டுபிடிக்கப்பட்டது.

இந்தப் பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். மனிதனிலுள்ள மகத் அல்லது மூலதத்துவம் அல்லது புத்தியைப் பற்றி நன்றாகத் தெரிந்துகொள்வது அவசியம். இந்தப் புத்தி தான் நான்-உணர்வாக மாறுகிறது. உடம்பில் உள்ள எல்லா சக்திகளுக்கும் மூலகாரணம் இந்தப் புத்திதான். அடித்தள உணர்வு, உணர்வு, மேல்தள உணர்வு ஆகிய எல்லாமாகி நிற்பது இதுதான்.

இந்த மூன்று நிலைகளும் என்ன? அடித்தள உணர்வு நிலையை நாம் விலங்குகளிடம் காண்கிறோம். இதையே இயல்புணர்ச்சி (Instinct) என்கிறோம். இது தவறவே தவறாது. ஆனால் இது ஓர் எல்லைக்கு உட்பட்டது. இயல்புணர்ச்சி மிகமிக அரிதாகவே தவறுகிறது. எது நச்சுச் செடி, எது நல்ல செடி என்பதை இயல்புணர்ச்சியினாலேயே ஒரு விலங்கு ஏறக்குறைய அறிந்துவிடுகிறது. ஆனால் இந்த இயல்புணர்ச்சி ஓர் எல்லைக்கு உட்பட்டே செயல்படுகிறது. ஏதாவது ஒரு புதுப்பொருள் அல்லது புதிய நிலை வந்துவிட்டால், அதற்கு அது புரிவதில்லை. அது ஓர் எந்திரம்போல் செயல்படுகிறது.

இதற்கு அடுத்த பரிணாமப் படியில் உயர்ந்தநிலை உணர்வு ஒன்று செயல்படுகிறது. இது தவறக்கூடியது; அடிக்கடித் தவறு செய்கிறது. ஆனால் இதன் செயல்படு எல்லை விரிந்தது. மெள்ளவே இது செயல்படும். இதையே நாம் பகுத்தறிவு என்கிறோம். இது இயல்புணர்ச்சியைவிடப் பரந்தது. ஆனால் இயல்புணர்ச்சியே பகுத்தறிவைவிட நிச்சயமானது. இயல்புணர்ச்சியைவிடப் பகுத்தறிவில் தவறுவதற்கான வாய்ப்புகள் ஏராளம்.

இதைவிட உயர்ந்த நிலையும் மனத்திற்கு உண்டு. இதை மேல்தள உணர்வு (Superconscious) என்பர்; யோகிகளிடம்தான் இது செயல்படுகிறது. அவர்கள் இதை வளர்த்திருக்கிறார்கள். இது தவறவே தவறாது. பகுத்தறிவு செயல்படும் எல்லையை விட மிக விரிந்த எல்லையில் இது செயல்படுகிறது. இதுதான் மிக உயர்ந்த நிலை. எனவே இருப்பதற்கெல்லாம் மகத் தான் மூல ஆதாரம் என்பதை நாம் மறக்கக் கூடாது. இதுவே பல வகைப் பொருளாகவும் நிலையாகவும் விரிகிறது; அறிவு செயல்படுகின்ற அடித்தள உணர்வு, உணர்வு, மேல்தள உணர்வு ஆகிய மூன்று மன நிலைகளுக்கும் ஆதாரமாக நிற்கிறது.

அடிக்கடிக் கேட்கப்படுவதான நுட்பமான கேள்வி ஒன்று இப்போது எழுகிறது—இந்தப் பிரபஞ்சத்தை, குறைவற்ற இறைவன் படைத்தான் என்றால், பிரபஞ்சத்தில் ஏன் குறைகள் காணப்படுகின்றன? நமது காட்சிக்கு உட்பட்டதையே, அதாவது அற்பமான நமது உணர்வுக்கும் பகுத்தறிவுக்கும் எட்டிய பகுதியைத்தான் நாம் பிரபஞ்சம் என்கிறோம். அதற்குமேல் நம் அறிவு செல்வதில்லை. இந்தக் கேள்விக்கே இடம் இல்லை. ஒரு மொத்தப் பொருளிலிருந்து சிறுபகுதியை மட்டும் எடுத்து, அதை ஆராய்ந்தால், அது இயைபற்றதாகத் (Inharmonious) தோன்றுவது இயற்கைதானே? பிரபஞ்சமும் இயைபற்றதாகத் தோன்றுவதற்குக் காரணம் இதுதான். நாமே அவ்வாறு செய்துள்ளோம்.

எப்படி? பகுத்தறிவு என்பது என்ன? அறிவு என்பது என்ன? பொருட்களின் இடையிலுள்ள தொடர்பைக் கண்டு பிடிப்பதுதான் அறிவு. நாம் ஒரு மனிதனைப் பார்த்து, இவன் ஒரு மனிதன் என்பது தெரியும் என்று சொல்கிறோம். இதற்குக் காரணம், நம் சித்தத்தில் முன்பே இதுபற்றிய பதிவுகள் இருப்பதை நினைவுகொள்வதுதான். நாம் பல மனிதர்களைப் பார்த்திருக்கிறோம்; ஒவ்வொருவரும் நமது மனத்தில் ஒரு பதிவை ஏற்படுத்தினர். இந்த மனிதனைப் பார்த்தவுடன் இந்த உணர்ச்சிகளைப் பழைய பதிவுகளுடன் ஒப்பிடுகிறோம். இதுபோன்ற பல பதிவுகள் அங்கே தோன்றுகின்றன. இவற்றைக் கண்டவுடன் நாம் இந்த மனிதனையும் அந்த இனத்துடன் சேர்த்துவிடுகிறோம். புதிய உணர்ச்சி ஒன்று தோன்றும்போது, இதுபோன்ற உணர்ச்சிப் பதிவுகள் நம் மனத்தில் ஏற்கனவே இருந்தால், நமக்கு நிறைவு ஏற்படுகிறது. இப்படிப் புதிய ஒன்றைப் பழைய பதிவுகளுடன் பொருத்தி அறிவதையே அறிவு என்கிறோம். ஏற்கனவே நம் மனத்தில் நிறைந்திருக்கும் அனுபவத் தொகுதியுடன் இணைத்து ஒரு புது அனுபவத்தைத் தெரிந்துகொள்வதே அறிவு எனப்படும்.

ஏற்கனவே நம் மனத்தில் அனுபவம் நிறைந்திருந்தாலன்றிப் புது அறிவோ அனுபவமோ பெற முடியாது என்பதற்கு இது ஒரு சிறந்த நிரூபணம் ஆகும். சில மேலைநாட்டுத் தத்துவ அறிஞர்கள் கூறுவதுபோல் நமக்கு அனுபவம் ஒன்றுமே இல்லாமல் நம் மனம் வெறும் பலகையாக இருந்தால் நாம் புது அறிவு ஒன்றுமே பெற இயலாது. மனத்தில் ஏற்கனவே நிறைந்திருக்கும் பழைய அனுபவங்களுடன் பொருத்திப் புது அனுபவங்களைப்

புரிந்துகொள்வதற்குத்தான் அறிவு என்பது பெயர். ஒரு புது அனுபவத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க அறிவு அல்லது அனுபவக் களஞ்சியம் ஒன்று இருக்க வேண்டும். இத்தகைய களஞ்சியம் ஒன்று இல்லாமல் ஒரு குழந்தை பிறப்பதாக வைத்துக்கொள் வோம். அந்தக் குழந்தை எந்த அறிவையுமே பெற முடியாது. எனவே ஏற்கனவே ஓர் அறிவுக்களஞ்சியத்தைப் பெற்றிருந்த நிலையில் அந்தக் குழந்தை இருந்திருக்க வேண்டும்; இப் படியேதான் அறிவு வளர்ந்துகொண்டே போகிறது. இந்த வாதம் தவறு என்று காட்ட ஒரு வழி சொல்லுங்கள், பார்க்கலாம்.

இது ஒரு கணித உண்மையாகும். பழைய அறிவுக்களஞ் சியம் இல்லாமல் புது அறிவு ஏற்பட முடியாது என்று சில மேலை நாட்டுத் தத்துவ நெறிகளும் கருதுகின்றன. குழந்தை இந்த அறிவுக் களஞ்சியத்துடன்தான் பிறக்கிறது. ஆனால் இது அந்தக் குழந்தையின் கடந்தகால அனுபவங்களால் வந்தது அல்ல. மாறாக அதன் முன்னோர்களுடைய அனுபவங்களின் விளைவு என்பது அவர்களின் கூற்று. அதாவது இது பரம்பரை பரம்பரையாக வருவது என்று அவர்கள் எண்ணுகின்றனர். இந்தக் கருத்து முற்றிலும் தவறு என்பதை அவர்கள் விரைவில் உணர்வார்கள். ஜெர்மானியத் தத்துவ அறிஞர்கள் சிலர் இந்தப் பாரம்பரியக் கொள்கைகளுக்கு மரணஅடி கொடுத்து வரு கிறார்கள். பாரம்பரியக் கொள்கை நல்லதுதான். ஆனால் அது முழுமையானதல்ல, அது உடற்கூற்றுக்கு மட்டுமே விளக்கம் கொடுக்கிறது. நம்மைப் பாதிக்கின்ற சூழ்நிலைகளை நீங்கள் எப்படி விளக்குவீர்கள்? பல காரணங்கள் சேர்ந்து ஒரு காரி யத்தை உருவாக்குகின்றன. நம்மைப் பாதிக்கின்ற காரணங் களுள் சூழ்நிலையும் ஒன்றாகிறது. நமது சூழ்நிலையை நாமே ஆக்கிக் கொள்கிறோம். நம் இறந்தகாலத்தைப் பொறுத்து நமது நிகழ்காலச் சூழ்நிலை அமைகிறது. குடிகாரன் நகரத்தின் மிக மோசமான சேரியை நோக்கியே இழுக்கப் படுகிறான்.

அறிவு என்பது என்ன என்பது இப்போது விளங்குகிறது அல்லவா? பழைய அனுபவங்களுடன் ஒரு புது அனுபவத்தை இணைத்து இனம்கண்டு கொள்வதே (Recognition) அறிவு. இனம்காண்பது என்பது என்ன? ஏற்கனவே உள்ள அனுபவப் பதிவுகளுடன் புது அனுபவங்களை ஒப்பிட்டு, ஒத்த பதிவுகளைக் கண்டுபிடிப்பதே; இதற்குமேல் எதையும்

குறிப்பிடவில்லை. அறிவு என்பது இத்தகைய தொடர்புகளைக் கண்டுபிடிப்பதுதான் என்றால், நாம் எந்த ஒன்றை அறிய வேண்டுமானாலும் அதேபோன்ற நிகழ்ச்சித் தொடர் முழுவதையும் அறிந்தாக வேண்டும் என்றாகிறது. அப்படித் தானே! ஒரு கூழாங்கல் இருக்கிறது; இதை அறிந்துகொள்ள வேண்டுமானால், இதுபோன்ற கூழாங்கல்லைப்பற்றிய அறிவுத்தொடர் ஒன்றை நாம் காண வேண்டும்.

ஆனால் பிரபஞ்சம் முழுவதையும் ஒன்றாகக் காணும் போது இது இயலாது. நம் மனத்தில் அதுபோன்ற அனுபவத் தின் ஒரே ஒரு பதிவுதான் இருக்கிறது. அதேபோன்ற அல்லது அந்த இனத்தைச் சேர்ந்த வேறு பதிவு ஒன்றுமே இல்லை. அதை வேறு எதனுடனும் ஒப்பிட முடியாது. அதை அது போன்ற அனுபவக் களஞ்சியத்துடன் பொருத்திப் பார்க்க இயலாது. எனவே நம் அறிவால் தனிப்பட்டு நிற்கும் பிரபஞ்சம் என்ற இந்தத் துண்டு, வியப்பிற்குரிய ஒரு புதிய பொருள்; இதனுடன் பொருத்திப் பார்க்க இதுபோன்ற பழைய பொருட் பதிவு ஒன்றும் இல்லையே! அதனால்தான் நாம் இதை அறிந்து கொள்ளப் போராடுகிறோம். இது பயங்கரமானது, கெட்டது, கொடியது என்றெல்லாம் கருதுகிறோம். சிலவேளைகளில் இது நல்லது என்றும் நாம் நினைக்கலாம்; ஆனால் இது குறை உடையது என்றுதான் எப்போதும் கருதுகிறோம். இதற்கு இணையான வேறு பொருட்பதிவை அறியும் போதுதான் இது புரியும். பிரபஞ்சத்தையும் அறிவையும் தாண்டி நாம் நிற்கும் போதுதான் பிரபஞ்சத்தை நம்மால் அறிய முடியும்; அப்போது தான் அதன் உண்மை விளங்கும். அதைச் செய்யாமல் எத்தனை முறைதான் தலையைச் சுவரில் மோதிக் கொண்டாலும் பிரபஞ்சத்தின் உண்மை நமக்கு விளங்காது. ஏனெனில் பண்டைய அனுபவங்களுடன் புதிய அனுபவத்தை ஒத்துப் பார்ப்பதே அறிவு; நமது உணர்வுநிலை பிரபஞ்சத்தின் ஒருபக்க அறிவை மட்டும்தானே தர முடியும்!

இறைவனைப் பற்றிய நம் கருத்தும் இப்படித்தான். பிரபஞ்சத்தின் ஒருபக்க அறிவையே நாம் பெறுவதுபோல் நாம் காண்பது அவரது ஒரே ஒரு பகுதிதான். எஞ்சிய பகுதி எல்லாம் மனித அறிவிற்கு அப்பாற்பட்டது. 'நானே எல்லாம்! இந்தப் பிரபஞ்சம்கூட என் ஒரு பகுதிதான் என்று சொல்லும் அளவிற்கு நான் பெரியவன்.' இதனால்தான் நாம் இறைவனைக் குறை உடையவராகக் காண்கிறோம்; அவரை நம்மால்

உணர்ந்துகொள்ள முடியவில்லை. அவரையும் பிரபஞ்சத்தையும் அறிவதற்கான ஒரே வழி அறிவுக்கு அப்பால் செல்வதுதான், உணர்வுகடந்த நிலையை அடைவதுதான். கேட்டது, கேட்கப்படுவது, கருதப்பட்டது, கருதப்படுவது—இவற்றிற்கு அப்பால் போகும்போதுதான் நீ உண்மையிடம் வருகிறாய். 'சாஸ்திரங்களைக் கடந்து செல்; ஏனெனில் அவை பிரகிருதிவரை மட்டுமே, முக்குணங்கள் வரை மட்டுமே கற்பிக்கின்றன.'[1] இவற்றைக் கடந்த பிறகுதான் நாம் இயைபைக் காண்கிறோம்; அதற்கு முன்பல்ல.

அண்டத்தைப் போலவே, அதே முறையில்தான் பிண்டமும் அமைந்திருக்கிறது. பிண்டத்தின் நடுப்பகுதி மட்டுமே நமக்குத் தெரியும். அதன் அடித்தளமும் தெரியாது. மேல்தளமும் தெரியாது; நடுத்தளமாகிய உணர்வுத்தளம் மட்டுமே நமக்குத் தெரியும். ஒருவன் தன்னை, 'நான் பாவி' என்று சொன்னால், அவன் சொல்வது உண்மை அல்ல, ஏனெனில் தான் யார் என்பது அவனுக்குத் தெரியாது. மக்களுள் மிகப் பெரிய அறிவிலி அவன். தன்னைப் பற்றியதில் அவனுக்கு ஒரு பகுதியே தெரியும். ஏனெனில் அவனது அறிவு அவனது அடிப்படையின் ஒரு பகுதியையே உட்படுத்துகிறது. எனவே பகுத்தறிவின்மூலம் இந்தப் பிரபஞ்சத்தின் ஒரு பகுதியை மட்டுமே அறிய முடியும்; முழுவதையும் அறிய முடியாது. ஏனெனில் அறிவின் அடித்தளம், நடுத்தளம், மேல்தளம், தனிமனித மகத், பிரபஞ்ச மகத், இதன் பலவகை பரிணாமங்கள் எல்லாம் சேர்ந்ததே பிரபஞ்சம்.

இயற்கையைப் (பிரகிருதி) பரிணமிக்கச் செய்வது எது? பிரகிருதி முழுவதுமே ஜடம் அல்லது உணர்வற்றது என்பதையே நாம் காண்கிறோம். அது பலவற்றின் சேர்க்கையால் ஆனது, உணர்வற்றது. எங்கெல்லாம் நியதி இருக்கிறதோ, அதன் ஆட்சிக்கு உட்பட்டதெல்லாம் உணர்வற்றதாகத்தான் இருக்க வேண்டும். மனம், புத்தி, சங்கல்பம் எல்லாமே உணர்வற்றவைதான். ஆனால் அவை எல்லாமே, உணர்வைப் பிரதிபலிக்கின்றன. இந்த 'சித்' அதாவது உணர்வு என்பது எல்லாவற்றிற்கும் அப்பால் உள்ள புருஷனுக்குச் சொந்தமானது என்கின்றனர் சாங்கியர். பிரபஞ்சத்தில் ஏற்படும் மாறுதல்களுக்கெல்லாம் தன்னை அறியாமலே காரணமாக இருப்பவன்

1. த்ரைகுண்ய விஷயாவேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன ||
—கீதை, 2. 45.

இந்தப் புருஷனே. அதாவது இந்தப் புருஷனே பிரபஞ்ச ரீதியில் எடுத்துக்கொள்ளப்படும்போது பிரபஞ்சத்திற்கு இறைவன் ஆகிறார். இறைவனின் சங்கல்பமே பிரபஞ்சப் படைப்பிற்குக் காரணம் எனப்படுகிறது. சாதாரணப் பேச்சிற்கு இது சரி; ஆனால் இது உண்மையாக இருக்க முடியாது என்பது வெளிப்படை. சங்கல்பம் எப்படிப் பிரபஞ்சப் படைப்பிற்குக் காரணமாக இருக்க முடியும்? பிரகிருதியின் மூன்றாவதோ நான்காவதோ வெளிப்பாடுதான் சங்கல்பம். இதற்கு முன்னால் பல இருந்தனவே, அவற்றைப் படைத்தது எது? சங்கல்பம் என்பது கூட்டுப்பொருள். கூட்டுப்பொருள் எதுவும் பிரகிருதியின் படைப்பு. எனவே சங்கல்பம் பிரகிருதியைப் படைக்க முடியாது. அதாவது, இறைவனது சங்கல்பம் பிரபஞ்சத்தைப் படைத்தது என்பது சரியாகாது.

சங்கல்பம் நம் உணர்வின் ஒரு சிறு பகுதியிலேயே பரவி நிற்கிறது. அதுவே நமது மூளையை இயக்குகிறது. நமது உடலையோ பிரபஞ்சத்தையோ இயக்குவது சங்கல்பம் அல்ல. இந்த உடலை இயக்கும் சக்தி, ஓரிடத்தில் வெளிப்படுவதன் ஓர் அம்சமே நமது சங்கல்பம். இப்படியே பிரபஞ்சத்திலும் ஒரு சங்கல்பம் இருக்கிறது. ஆனால் அது பிரபஞ்சத்தின் ஒரு பகுதி மட்டுமே. பிரபஞ்சம் முழுவதையும் இயக்குவது சங்கல்பம் அல்ல. எனவே சங்கல்பக் கொள்கையால் பிரபஞ்சத்தை விளக்க முடியாது. சங்கல்பமே உடலை இயக்குகிறது என்று வைத்துக் கொள்வோம். அதன்பின் சங்கல்பத்திற்கு ஏற்ப உடலைச் செயல் படுத்த முடியாத நிலை வரும்போது நமக்குக் கோபம் வருகிறது. இது நம் தவறு. சங்கல்பம்தான் உடலை இயக்கும் சக்தி என்று நினைப்பதற்கு நமக்கு உரிமை இல்லை. இப்படியே பிரபஞ்சத் தையும் சங்கல்பமே இயக்குவதாகக் கொண்டு, பொருட்கள் பொருந்தவில்லை என்று கண்டால், அது நம் தவறு. எனவே புருஷன் என்பது சங்கல்பம் அல்ல.

புருஷன் என்பது புத்தியாகவும் இருக்க இயலாது. ஏனெனில் புத்தி ஒரு கூட்டுப்பொருள். மூளையைப் போன்ற ஏதாவது பொருள் இல்லாமல் புத்தி இருக்க முடியாது. புத்தி இருக்கிறது என்றாலே அங்கே நாம் மூளை என்று சொல்கின்றது போன்ற ஒரு பொருள் இருந்தே தீரும். அந்தப் பொருள் ஒன்றுகலந்து குறிப்பிட்ட ஓர் உருவத்தை எடுத்துக்கொண்டு மூளையின் வேலையைச் செய்கிறது. புத்தி இருக்கும் இடத்தில் எல்லாம் இந்தப் பொருள் ஏதாவது ஓர் உருவில் இருந்தேயாக வேண்டும்.

ஆனால் புத்தி என்பதே ஒரு கூட்டுப்பொருள். அப்படியானால் புருஷன் என்பது என்ன? அது புத்தியும் அல்ல, சங்கல்பமும் அல்ல! இவற்றிற்கெல்லாம் மூலகாரணமே புருஷன். இது இருப்பதால்தான் இவை இயங்கி, பலவகையில் ஒன்றுகூடி, பல பொருட்களாகப் பரிணமிக்கின்றன. இந்தப் புருஷன் பிரகிருதியுடன் கலப்பதில்லை. அது புத்தியும் அல்ல, மகத்தும் அல்ல. தூய்மையான ஆன்மாவே புருஷன். 'நான் சாட்சி; என் முன்னிலையில் பிரகிருதி உணர்வுப் பொருட்களையும் ஜடப் பொருட்களையும் படைக்கிறது.'[1]

பிரகிருதியில் உள்ள இந்த உணர்வு என்பது என்ன? சித் என்று கூறப்படும் புத்திதான் இது. உணர்வின் அடிப்படை புருஷனே. புருஷனின் இயல்புதான் உணர்வு. இது விளக்க முடியாத ஒன்று; நாம் அறிவு என்று சொல்லும் எல்லாவற்றிற்கும் காரணமானது இதுதான். புருஷன் என்பது நான்-உணர்வு அல்ல. ஏனெனில் நான்-உணர்வு ஒரு கூட்டுப்பொருள். ஆனால் நான்-உணர்வில் உணர்வுடையதாக, உண்மையுடையதாக இருப்பதெல்லாம் புருஷனுக்கு உரியது. புருஷன் அறிபவன் அல்ல, ஆனால் புத்தியில் உணர்வுடையதாக உள்ள எல்லாம் புருஷனைச் சேர்ந்தது. புருஷனிடம் உணர்வு உள்ளது. ஆனால் புருஷன் புத்திமானோ அறிபவனோ அல்ல. புருஷனிலுள்ள சித்தும் பிரகிருதியும் சேர்ந்த கூட்டுப்பொருளையே நாம் எங்கும் காண்கிறோம். பிரபஞ்சத்தில் எது இன்பமோ, களிப்போ, ஒளியோ அது புருஷனுக்கு உரியது. ஆனால் அது ஒரு கூட்டுப் பொருள். ஏனெனில் அது புருஷனும் பிரகிருதியும் சேர்ந்தது.

'இன்பம் எங்கிருக்கிறதோ, ஆனந்தம் எங்கிருக்கிறதோ, அங்கெல்லாம் இறைவனாகிய அழியாத சக்தியின் ஒரு கிரணம் இருக்கிறது.' 'பிரபஞ்சத்தின் மிகப் பெரிய வசீகரமாக இருப்பது புருஷனே. அது பிரபஞ்சத்துடன் தொடர்பற்று அதனுடன் ஒட்டாமல் இருந்தாலும், பிரபஞ்சம் முழுவதையும் கவர்கிறது.' ஒருவன் பொன்னை நாடி ஓடுகிறான். ஏனெனில் பொன்னிற்குப் பின்னால் புருஷனின் ஒரு கிரணம் இருக்கிறது. ஆனால் அந்தக் கிரணம் ஏராளம் அழுக்குடன் கலந்திருக்கிறது. ஒருவன் தன் குழந்தைகளிடம் காட்டும் பாசத்திலும், ஒருத்தி தன்

1. மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம் |
ஹேதுநானேன கௌந்தேய ஜகத்விபரிவர்த்ததே ||

—கீதை, 9. 10.

கணவனிடம் காட்டும் நேசத்திலும் வசீகர சக்தியாக இருப்பது எது? அவற்றிற்குப் பின்னாலுள்ள புருஷனது ஒரு கிரணமே. அது அங்கே இருக்கிறது; ஆனால் அழுக்குடன் கலந்திருக்கிறது. புருஷன் அல்லாத எதற்கும் கவரும் சக்தி இல்லை. 'உணர்வற்ற இந்த உலகில் புருஷன் ஒன்றே உணர்வுப் பொருள்.' இதுவே சாங்கியர்கள் கூறும் புருஷன்.

இதனால் பெறப்படும் உண்மை என்ன? புருஷன் எங்கும் நிறைந்தது என்பதே. எங்கும் நிறைந்திராத பொருள் எல்லைக்கு உட்பட்டதாகவே இருக்க வேண்டும். எல்லைகள் (பிறவற்றால்) ஆக்கப்படுபவை. எது ஆக்கப்படுகிறதோ அதற்குத் தொடக்கமும் முடிவும் இருந்தேயாக வேண்டும். புருஷன் எல்லைக்கு உட்பட்டது என்றால் அது இறந்துவிடும். அதற்குச் சுதந்திரம் இருக்காது; அதுவே முடிவாக இருக்காது; அதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும். எனவே அது எங்கும் நிறைந்தது. கபிலரின் கருத்துப்படி புருஷர்கள் ஒன்றல்ல, பல; கணக்கற்றவை. உங்களிடமும் என்னிடமும் ஒவ்வொருவரிடமும் ஒரு புருஷன் இருக்கிறது. எண்ணற்ற வட்டங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் எல்லையற்றது; பிரபஞ்சம் முழுவதிலும் நிறைந்திருப்பது. புருஷன் மனமும் அல்ல, பொருளும் அல்ல. நாம் அறிந்ததெல்லாம் அதன் பிரதிபிம்பத்தை மட்டுமே. அது எங்கும் நிறைந்தது என்றால் அதற்கு மரணமும் இல்லை, பிறப்பும் இல்லை. பிரகிருதி தன் நிழலாகிய பிறப்பு இறப்பு என்பவற்றை அதன் மீது பரப்புகிறது. ஆனால் தன் இயல்பில் புருஷன் இவற்றிற்கு அப்பாற்பட்டது. தூய்மையானது. சாங்கியத் தத்துவம் எவ்வளவு அற்புதமானது என்பதை இதுவரையில் கண்டோம்.

இனி இந்தத் தத்துவத்திற்கு முரணான சில நிரூபணங்களைப் பார்ப்போம். இதுவரை வந்த ஆராய்ச்சியில் குறைவு ஒன்றும் இல்லை; மனத் தத்துவ முறையும் குறைவற்றதுதான். இந்திரியங்களைப் புலன்கள் என்றும் பொறிகள் என்றும், பிரிந்திருப்பதாலேயே அவை தனிப்பொருள் அல்ல, கூட்டுப் பொருள் என்பது தெரிகிறது. நான்-உணர்வையும் புலன்கள் மற்றும் பொருட்கள் என்று பிரிப்பதால், அதுவும் அவ்வாறே என்பது விளங்குகிறது. மகத் என்பதும் பொருளின் ஒரு நிலை தான். முடிவில் நிற்பதுதான் புருஷன்.

இதுவரையிலும் தடை ஒன்றும் இல்லை. ஆனால் 'பிரகிருதியைப் படைத்தது யார்?' என்று சாங்கியர்களைக் கேட்டால், புருஷனும் பிரகிருதியும் படைக்கப்படாதவை, எங்கும்

நிறைந்தவை, புருஷன் கணக்கற்றவை என்கிறார்கள். இந்தக் கருத்துக்களை மறுக்கவும், சிறந்த ஒரு முடிவைக் காணவும் வேண்டியுள்ளது. இப்படிச் செய்யும்போது நாம் அத்வைதத் தத்துவத்தை அடையவும் செய்வோம்.

நமது முதல் எதிர்க் கருத்து, எல்லையற்ற இரண்டு எப்படி இருக்க முடியும் என்பதுதான். இங்கே சாங்கியம் ஒரு முழுப் பொதுமையை எட்டவில்லை; அதில் ஒரு குறைவற்ற முடிவு இல்லை என்று நாம் வாதிக்க நேர்கிறது. வேதாந்திகள் இந்தப் பிரச்சினைகளில் இருந்தெல்லாம் தட்டுத்தடுமாறி விடுபட்டு, எப்படி ஒரு குறைவற்ற முடிவை அடைகிறார்கள் என்பதைக் காண்போம். இருந்தாலும், குறைவற்ற இந்த முடிவு ஏற்பட்டதற்கான எல்லா பெருமையும் சாங்கியத்தையே சாரும். கட்டிடம் முழுவதும் கட்டி முடித்தபிறகு, அதற்குச் சில பூச்சு வேலைகளைச் செய்து அதை அழகுபடுத்துவது எளிது.

## 4. சாங்கியமும் வேதாந்தமும்

15 ஜனவரி 1896

நாம் இதுவரையில் பார்த்த சாங்கியத் தத்துவத்தை முதலில் சுருக்கிச் சொல்லிவிட்டு, இந்தச் சொற்பொழிவில், சாங்கியத்தின் குறைகள் என்ன? வேதாந்தம் எப்படி அந்தக் குறைகளை நிரப்புகிறது என்பதைப் பார்க்கலாம்.

எண்ணம், புத்தி, பகுத்தறிவு, அன்பு, வெறுப்பு, தொடு உணர்ச்சி, சுவை, பொருள் என்றெல்லாம் கூறுகின்ற எல்லாவற்றிற்குமே பிரகிருதிதான் காரணம் என்கிறது சாங்கியம். எல்லாம் பிரகிருதியிலிருந்தே வந்திருக்கிறது. சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூவகை மூலகங்களைக் கொண்டது பிரகிருதி. இவை பண்புகள் அல்ல; இந்தப் பிரபஞ்சம் முழுவதும் தோன்றுவதற்குக் காரணமான மூலப்பொருட்கள் இவை. ஒரு கல்பத்தின் ஆரம்பத்தில் இவை சமச்சீர் நிலையில் இருக்கின்றன. படைப்பு தொடங்கும்போது பலவகையில் கலந்தும் கூடியும் பிரபஞ்சமாக வெளிப்படுகின்றன. முதல் வெளிப்பாட்டை மகத் அல்லது பிரபஞ்ச புத்தி என்கிறது சாங்கியம். இந்த மகத்திலிருந்து நான்-உணர்வு பிறக்கிறது. சாங்கியர்களின் கொள்கைப்படி இது ஒரு மூலகம் அல்லது தத்துவம் ஆகும். இந்த நான்-உணர்விலிருந்து மனம், பொறிகள், தன்மாத்திரைகள் (ஒலி, தொடு உணர்ச்சி முதலியவற்றின் நுண்ணணுக்கள்) இவை தோன்றுகின்றன. நுண்ணிய அம்சங்கள் எல்லாம் நான்-உணர்விலிருந்தே எழுகின்றன. இந்த நுண்ணிய அம்சங்களிலிருந்தே, நாம் ஜடப்பொருள் என்று கூறுகின்ற தூலப் பொருட்கள் உண்டாகின்றன. தன்மாத்திரைகளை அறிய முடியாது. அவை தூலப் பொருட்களாக மாறியபின்னரே உணரவும் புலன்களால் அறியவும் இயலும்.

புத்தி, நான்-உணர்வு, மனம் என்று மூன்றுவிதமாகச் செயல்படுகின்ற சித்தம், பிராணன் என்ற பெயரில் அறியப்படுகின்ற சக்திகளை உருவாக்குகிறது. பிராணன் என்றால் மூச்சு என்னும் கருத்தையே மறந்துவிடுங்கள். பிராணனின் ஒரு செயல் மூச்சு, அவ்வளவுதான். உடல் முழுவதையும் இயக்கும்

நரம்புச் சக்திகளே பிராணன். இதுவே எண்ணமாகவும் பரிணமிக்கிறது, மூச்சு இயக்கம்தான் பிராணனின் முக்கியமான, நமக்குத் தெரிந்த செயல்பாடு. பிராணன் காற்றை இயக்குகிறதே தவிர, காற்றால் பிராணன் இயங்கவில்லை. மூச்சியக்கத்தை அடக்கி ஆளும் கலையே பிராணாயாமம். மூச்சியக்கத்தை அடக்கியாளும் திறம் பெறவே பிராணாயாமம் செய்கிறோம். இதன் நோக்கம் மூச்சை அடக்கி ஆள்வதோ நுரையீரல்களைப் பலப்படுத்துவதோ அல்ல. அப்படிச் செய்வது வெறும் உடற்பயிற்சி மட்டுமே, பிராணாயாமம் அல்ல. உடல் முழுவதையும் இயக்கும் ஆதார சக்திகளே பிராணன். இவற்றை உடம்பில் உள்ள மனம் அல்லது அந்தக்கரணம் என்ற பொறிகள் இயக்குகின்றன.

இதுவரையில் சரி, மனத் தத்துவம் தெளிவாகவும் பொருத்தமாகவும் இருக்கிறது. உலகத்திலேயே பகுத்தறிவுபூர்வமான மிகப் பழைய சிந்தனை இது என்பதை நினைவில் கொள்வது இன்றியமையாதது. உலகில் எங்கேயாவது தத்துவமோ, பகுத்தறிவுமிக்கச் சிந்தனையோ இருக்குமானால் அவையெல்லாம் கபிலருக்கு நன்றிக்கடன் பட்டவை. பிதகோரஸ் இந்தத் தத்துவத்தை இந்தியாவிலிருந்து கற்றுச் சென்று கிரீஸில் போதித்தார். பிறகு பிளேட்டோவுக்கு இதைப் பற்றிய அறிவு சிறிது ஏற்பட்டது. இதற்குப் பிறகு க்னாஸ்டியர்கள் (Gnostics) இந்தக் கருத்தை அலெக்சான்டிரியாவுக்குக் கொண்டு சென்றார்கள். அங்கிருந்து இது ஐரோப்பாவிற்கு வந்தது. எனவே எங்கே மன இயல் தத்துவம் முதலியவற்றைப் புரிந்துகொள்ளும் முயற்சி காணப்பட்டாலும், அவற்றிற்குத் தந்தை கபிலரே. இதுவரை நாம் கண்டது அவரது மனஇயல் கருத்து என்றாலும் போகப் போக அற்புதமாக உள்ளது. சில அம்சங்களில் நாம் அவரிலிருந்து வேறுபட நேர்கிறது.

கபிலரது சிந்தனைப் போக்கின் அடிப்படையாக உள்ளது பரிணாம தத்துவம். ஒன்றை மற்றொன்றின் பரிணாமமாகவே அவர் சொல்கிறார். காரணத்தால் ஒரு காரியம் தோன்றுவது என்பது அவரது கொள்கைப்படி காரணமே வேறு உரு எடுப்பதுதான். அதுமட்டுமின்றி, நமக்குத் தெரிந்தவரையில் பிரபஞ்சம் முழுவதுமே படிப்படியாகப் பரிணாம முறையில் முன்னேறிக் கொண்டிருக்கிறது.

களிமண் உள்ளது. இதுவே வேறு உருவத்தில் குடமாக உள்ளது. மண் காரணம், குடம் காரியம். இதற்குமேல்

காரண காரிய நியதி செல்லாது. இவ்வாறு இந்தப் பிரபஞ்சம் முழுவதும் மூலப்பொருளாகிய பிரகிருதியின் பரிணாமம்தான், விரிவுதான். எனவே காரியமாகிய பிரபஞ்சம் காரணமாகிய பிரகிருதியிலிருந்து அடிப்படையில் வேறுபட்டதாக இருக்க முடியாது.

கபிலரின் கருத்துப்படி, அவ்யக்தப் பிரகிருதி முதல் புத்தி மற்றும் மனம்வரை உள்ள எதையும் அவர் 'அனுபவிப்பவன்' அல்லது 'புத்தியைத் தூண்டுபவன்' என்று சொல்வதில்லை. களிமண் கட்டி எப்படியோ, அப்படியேதான் மனமும். தன்னியல்பில் மனத்திற்கு ஒளி இல்லை. ஆனால் அதற்குப் பகுத்தறிவு இருப்பதை நாம் காண்கிறோம். எனவே பின்னின்று இதை இயக்கும் ஒன்று இருக்க வேண்டும். அதன் ஒளியே மகத், நான்-உணர்வு மற்றும் தொடர்ந்து வரும் பரிணாமங்கள் எல்லாவற்றின் வழியாகவும் ஊடுருவிச் செயல்படுகிறது. இதையே புருஷன் என்கிறார் கபிலர்; ஆன்மா என்கிறார்கள் வேதாந்திகள். கபிலரின் கருத்துப்படி புருஷன் ஒரு தனிப் பொருள்; கூட்டுப்பொருள் அல்ல. அது ஒன்றே ஜடப்பொருள் தன்மை அற்றது. இந்தப் பரிணாமங்கள் எல்லாம் ஜடப்பொருள் தன்மை பெற்றவை.

ஒரு கரும்பலகையைக் காண்கிறோம். கபிலரின் கூற்றுப்படி பொறிகள் முதலில் இந்த உணர்ச்சியை நரம்பு மையத்திற்குக் கொண்டு வருகின்றன. அங்கிருந்து இந்த உணர்ச்சி மனத்தை அடைந்து அங்கே ஒரு பதிவை உண்டாக்கும். மனம் அதைப் புத்தியின் முன் நிறுத்தும். ஆனால் புத்தி செயல்பட முடியாது. பின்னால் இருக்கும் புருஷனிடமிருந்தே செயல் வருவது போலுள்ளது. பொறிகள், அந்தக்கரணங்கள் எல்லாம் புருஷனின் வேலைக்காரர்கள் போன்றவை. உணர்ச்சியை அதனிடம் கொண்டு வருகின்றன. உத்தரவு கொடுப்பது புருஷனே. இதுவே பிரதிச்செயல் புரிகிறது; நுகர்கிறது; அறிகிறது. அதுவே உண்மைப் பொருள், அரியணையில் இருக்கும் அரசன், மனிதனின் ஆன்மா. அது ஜடப்பொருள் தன்மை இல்லாதது. அதற்குப் பொருள்தன்மை இல்லையென்றால் அது எல்லையற்றதாகத்தான் இருக்கும். அதற்கு எந்த எல்லையும் இருக்க முடியாது.

புருஷன் ஒவ்வொன்றும் எங்கும் நிறைந்தது. நாம் ஒவ்வொருவரும் எங்கும் நிறைந்துள்ளோம். ஆனால் நாம் லிங்க சரீரம் அல்லது நுண்ணுடல் மூலமாகவே செயல்பட முடியும்.

மனம், நான்-உணர்வு, அந்தக்கரணங்கள், ஆதார சக்திகள்—இவை எல்லாம் சேர்ந்ததே நுண்ணுடல் என்னும் உறை. இதையே கிறிஸ்தவர்கள் ஆவியுடல் என்கிறார்கள்! முக்திபெறுவது, தண்டனை பெறுவது, சொர்க்கம் செல்வது, மீண்டும் மீண்டும் பிறப்பது எல்லாம் இந்த உடல்தான். புருஷன் அல்லது ஆன்மாவிற்குப் போக்கும் வரவும் இருக்க முடியாது என்பதை முதலிலேயே நாம் கண்டோம். இயக்கம் என்பது போக்கு வரவைக் குறிக்கும். எது ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போய் வருகிறதோ அது எப்படி எங்கும் நிறைந்ததாக இருக்க முடியும்? இவ்வாறு கபிலரின் மனத்தத்துவ முறைப்படி ஆன்மா எல்லையற்றது.

பிரகிருதியால் ஆகாத ஒரே பொருள் ஆன்மா என்பதைக் கண்டோம். பிரகிருதிக்கு வெளியே இருப்பது ஆன்மா ஒன்றே. ஆனால் அது பிரகிருதியால் பிணைக்கப்பட்டதுபோல் தோன்றுகிறது. பிரகிருதி அதைச் சூழ்ந்து நிற்கிறது. ஆன்மா தன்னை அதுவாகவே எண்ணிவிட்டது. ''நான்தான் லிங்க சரீரம்', 'நான் தூலப்பொருள், 'நான் தூலவுடல்' என்றும் அது கருதுகிறது. இப்படி நினைத்து அது இன்பதுன்ப அனுபவங்களைப் பெறுகிறது; ஆனால் இந்த அனுபவங்களுக்கும் ஆன்மாவிற்கும் உண்மையில் தொடர்பு ஒன்றும் இல்லை; இவையெல்லாம் நுண்ணுடலிற்கே.

தியான நிலையையே மிக உயர்ந்த நிலையாக யோகி எண்ணுகிறான். இது இயக்க நிலையும் அல்ல; இயக்கம் அற்ற நிலையும் அல்ல. இந்த நிலையில்தான் நாம் புருஷனை மிக நெருங்குகிறோம். ஆன்மாவிற்கு இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை. எல்லாவற்றிற்கும் எல்லா செயலுக்கும் என்றும் சாட்சியாக நிற்பது அது. ஆனால் இது எந்தச் செயலின் பயனையும் அனுபவிப்பதில்லை. சூரியனே ஒவ்வொரு கண்ணின் பார்வைக்கும் காரணம்; ஆனால் கண்ணின் குறை எதுவும் சூரியனைப் பாதிப்பதில்லை. ஒரு பளிங்கின்முன் சிவப்பு அல்லது நீல மலரை வைத்தால், பளிங்கு சிவப்பாகவோ நீலமாகவோ தோன்றுகிறது; என்றாலும் பளிங்கு எந்த நிறமாகவும் ஆகவில்லை. இதுபோலவே ஆன்மாவிற்கும் இயக்கம், இயக்கமின்மை எதுவுமே இல்லை. இரண்டிற்கும் அப்பாற்பட்டது அது. ஆன்மாவின் இந்த நிலையை மிக நெருக்கமாக விளக்கிக் காட்டுவதுதான் தியான நிலை. இதுதான் சாங்கியத் தத்துவம்.

பிரகிருதியின் வெளிப்பாடு ஆன்மாவிற்காகவே; எல்லா சேர்க்கைகளும் யாரோ மூன்றாம் நபருக்காகவே என்பது சாங்கியத்தின் அடுத்த முடிவு. நாம் பிரகிருதி என்று சொல்லும் இந்தச் சேர்க்கை முடிவில்லாமல் அடிக்கடி நிகழும். இந்த மாறுதல்கள் எல்லாம் ஆன்மாவின் நுகர்ச்சிக்காகவும் அதன் முக்திக்காகவும் நடைபெறுகின்றன; மிகத் தாழ்ந்தவற்றிலிருந்து மிக உயர்ந்ததுவரை உள்ள அனுபவங்களை ஆன்மா பெறுவதற்காகவே அமைந்துள்ளன. இந்த அனுபவம் பெற்ற பிறகு ஆன்மா, தான் ஒருபோதும் பிரகிருதியுடன் தொடர்பு பெற்றிருக்கவில்லை, தான் பிரகிருதியிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஒன்று, தனக்கு அழிவே இல்லை, தனக்குப் போக்கும் இல்லை, வரவும் இல்லை என்பதை அறிகிறது. சொர்க்கத்திற்குப் போவதும் மீண்டும் பூமியில் பிறப்பதும் பிரகிருதி சம்பந்தமானவை. ஆன்மாவிற்கும் இவற்றிற்கும் தொடர்பில்லை. இப்படி அனுபவம் பெற்ற ஆன்மா முக்தி பெறுகிறது. ஆன்மாவின் இன்பத்திற்கும் அது அனுபவம் பெறுவதற்குமே பிரகிருதி முழுவதும் இயங்குகிறது. தன் லட்சியமான முக்தியை அடைவதற்காகவே ஆன்மா இந்த அனுபவங்களை எல்லாம் பெறுகிறது. ஆனால் சாங்கியத் தத்துவப்படி ஆன்மாக்கள் பல. இவற்றின் எண்ணிக்கைக்கு அளவே இல்லை.

பிரபஞ்சத்தைப் படைப்பவர் என்ற இறைவன் ஒருவரும் இல்லை என்பது கபிலரின் மற்றொரு முடிவு. எல்லாவற்றிற்கும் காரணம் காட்டப் பிரகிருதியே போதும்; இறைவன் தேவை இல்லை என்பதே சாங்கியர்களின் வாதம்.

ஆன்மாவின் இயல்பு குறைவற்ற உண்மை-அறிவு-இன்பம் என்கிறது வேதாந்தம். இவை ஆன்மாவின் பண்புகள் அல்ல. இவை தனித்தனியான மூன்றல்ல; ஒன்றே. ஆன்மாவின் சாரமே இவை. புத்தி, பிரகிருதியிலிருந்து தோன்றியது, ஆகையால் அது பிரகிருதியைச் சார்ந்தது என்ற சாங்கிய வாதத்தையும் வேதாந்தம் ஏற்றுக்கொள்கிறது.

புத்தி ஒரு கூட்டுப்பொருள் என்பதையும் வேதாந்தம் காட்டுகிறது. எடுத்துக்காட்டாக நம் புலனுணர்வுகளை (Perceptions) ஆராய்வோம். ஒரு கரும்பலகையைப் பார்க்கிறோம். இதுபற்றிய அறிவு எப்படி ஏற்படுகிறது? ஜெர்மானியத் தத்துவ அறிஞர்கள் கூறுவதுபோல், கரும்பலகை உள்ளது உள்ளபடி (Thing in Itself) அறிய முடியாதது. இதை நாம் அறியவே முடியாது. இதை அ என்று கொள்வோம். அ என்ற

இந்தக் கரும்பலகை என் மனத்தின்மீது செயல்படுகிறது; மனம் பிரதிச்செயல் புரிகிறது. மனம் ஓர் ஏரி போன்றது. ஒரு கல்லை ஏரியில் எறிந்தால் அதற்குப் பிரதிச்செயலான அலை ஒன்று கல்லை நோக்கி எழுகிறது. இந்த அலை கல்லைப் போன்றது அல்ல; இது ஓர் அலை. ஏரியைத் தாக்கும் கல்லைப்போல், கரும்பலகை நம் மனமாகிய ஏரியைத் தாக்குகிறது. மனம் பிரதிச்செயலாக அதை நோக்கி ஓர் அலையை வீசுகிறது. இந்த அலையைத்தான் நாம் கரும்பலகை என்கிறோம். நான் உங்களைப் பார்க்கிறேன். உண்மையாக உங்களை யாரும் பார்க்கவோ அறியவோ முடியாது, ஒருபோதும் முடியாது. அ ஆகிய நீங்கள் என் மனத்தைத் தாக்கி ஒரு பிரதிச்செயலை உண்டாக்குகிறீர்கள். இந்தப் பிரதிச்செயலாகிய அலையைத் தான் நான், நீங்கள் என்று சொல்கிறேன்.

புலன்காட்சியில் இரண்டு அம்சங்கள் உண்டு; ஒன்று, வெளியிலிருந்து வரும் தாக்கு; மற்றொன்று, அதனால் ஏற்படும் மனிதனது பிரதிச்செயல் அல்லது உள்தாக்கு. இந்த இரண்டின் கூட்டுத்தொகையே அதாவது அ+மனம்தான் நாம் காணும் புறவுலகம். பிரதிச்செயல்களின் மூலமே எல்லா அறிவுகளும் வருகின்றன. திமிங்கிலத்தின் வாலில் அடி விழுந்த எவ்வளவு நேரத்திற்குப் பிறகு, அதன் மனத்தில் பிரதிச்செயல் நிகழ்கிறது, அது எப்பொழுது வலியை உணர்கிறது என்பதை ஆராய்ச்சி யால் கண்டு பிடித்திருக்கிறார்கள். அகக் காட்சியும் இது போன்றதே ஆகும். என்னுள் இருக்கும் உண்மை ஆன்மாவும் அறிய முடியாதது. இதை இ என்று கொள்வோம். நான் இன்னார் என்பது சொல்லும்போது அது இ+மனம் என்ற கூட்டே ஆகும். இந்த இ மனத்தைத் தாக்குகிறது; எனவே நமது பிரபஞ்சம் இதுதான்: வெளிப் பிரபஞ்சம்=அ+மனம்; உள்பிரபஞ்சம் =இ+மனம். அ, இ என்ற இரண்டும், முறையே வெளியுலகிலும் உள்ளுலகிலும் உள்ள பொருட்களின் உண்மை இயல்பாகும்.

வேதாந்தக் கொள்கைப்படி 'நான் இருக்கிறேன், நான் அறிகிறேன், நான் இன்பம் நிறைந்தவன்' என்பவை உணர்வின் மூன்று அடிப்படை அம்சங்களாகும். எனக்குத் தேவை எதுவுமே இல்லை. நான் செயலற்றவன்; அமைதியானவன். என்னை எதுவும் அசைக்க முடியாது போன்ற கருத்துக்கள் எப்போதாவது தோன்றுகின்றனவே!—இவையே நம் உண்மை மையம், நம் வாழ்வின் அடிப்படைத் தத்துவம். அது எல்லைக்கு உட்பட்டு, கூட்டுபொருள் ஆகும்போது, அதுவே உலக ரீதியிலுள்ள

உண்மையாக, அறிவாக, அன்பாக வெளிப்படுகிறது. ஒவ்வொரு வனும் இருக்கிறான்; ஒவ்வொருவனும் அறிய வேண்டும்; ஒவ் வொருவனும் அன்புவெறி கொண்டவனாக இருக்கிறான். அன்பு இல்லாமல் இருக்க இயலாது. மிகத் தாழ்ந்த உயிரிலிருந்து மிக உயர்ந்த உயிர்வரை எல்லாமே அன்பு காட்டியே தீர வேண்டும்.

இ என்பதையே அதாவது எந்த உண்மையான உட் பொருள், மனத்துடன் சேர்ந்து உண்மை, அறிவு, இன்பம் இவற்றை ஆக்குகிறதோ, அதையே வேதாந்திகள் சச்சிதானந்தம் என்பார்கள். உண்மையாக உள்ளது எதுவோ, அதற்கு எல்லை இல்லை. அது கலப்பற்ற தனிப் பொருள்; எதனுடனும் சேராதது; அதற்கு மாறுபாடே இல்லை; அதுவே சுதந்திரமான ஆன்மா. அது மனத்துடன் கலந்து, கலங்கியது போலாகும்போது அதையே நாம் தனி இருப்பு, ஜீவன், உயிர் என்கிறோம். எல்லை யில்லாத வெளி (Space) ஓர் அறைக்குள் ஒரு ஜாடிக்குள் கட்டுப் படுவதுபோல் சுதந்திரமான ஆன்மாவும் தனி மனங்களுள் கட்டுப்பட்டு, தாவர உயிர், மிருக உயிர், மனித உயிர் என்றெல் லாம் ஆகிறது.

அறிவாலோ, உள்ளுணர்வாலோ, பகுத்தறிவாலோ, இயல்புணர்ச்சியாலோ நாம் அறிவது உண்மை அறிவல்ல. உண்மையறிவு, தன் நிலையில் தாழ்ந்திருக்கும்போதோ குழம்பி யிருக்கும்போதோ, அதை உள்ளுணர்வு என்கிறோம்; இன்னும் தாழ்ந்த நிலையை அடையும்போது பகுத்தறிவு என்கிறோம்; இன்னும் தாழ்ந்த நிலையை அடையும்போது, இயல்புணர்ச்சி என்கிறோம். இதுவே விஞ்ஞானம், மேலான ஞானம். இது உள் ளுணர்வோ, பகுத்தறிவோ, இயல்புணர்ச்சியோ அல்ல. இந்த உண்மையறிவு நிலையை எல்லாம் அறியும் தன்மை என்று ஓரளவு குறிப்பிடலாம். இதற்கு எல்லை இல்லை; இதில் கலப்பு இல்லை.

ஆனந்தம் மாயையால் மறைபட்டால், அதை அன்பு என் கிறோம். அதாவது தூலப்பொருட்கள், நுண்பொருட்கள், அல்லது கருத்துக்களின் மீது காண்கின்ற கவர்ச்சி என்கிறோம். ஆனந்தத்தின் குறைவுபட்ட வெளிப்பாடே அன்பு.

குறைவற்ற உண்மை, அறிவு, இன்பம் என்பவை ஆன்மா வின் இயல்புகள் அல்ல; அவை ஆன்மாவின் சாரம். இவை வேறு, ஆன்மா வேறு அல்ல. இந்த மூன்றும் ஒன்றே. ஒன்றையே நாம் மூன்று நிலைகளில் பார்க்கிறோம். இவை சார்பறிவு

(Relative Knowledge) அனைத்திற்கும் அப்பாற்பட்டவை. ஆன்மாவின் இந்தக் குறைவற்ற அறிவு மனித மூளை வழியாக ஊடுருவி வரும்போது அது உள்ளுணர்வு, பகுத்தறிவு என்றெல் லாம் ஆகிறது. எதன் வழியே ஒளிர்கிறதோ, அதற்குத் தக்கபடி அதன் வெளிப்பாடு மாறுபடுகிறது. ஆன்மா என்ற அளவில் மனிதனுக்கும் மிகத் தாழ்ந்த உயிரினத்திற்கும் வேறுபாடு ஒன் றும் இல்லை. தாழ்ந்த உயிரினத்தின் மூளை மிகக் குறைவாக வளர்ச்சி அடைந்திருக்கிறது. அதன் வழியாக ஆன்மா வெளிப் படும்போது மிக மந்தமான இயல்புணர்ச்சியாக உள்ளது. மனிதனின் மூளை மிக நுட்பமானது. அதனால் இங்கே வெளிப் பாடு இன்னும் தெளிவாக இருக்கிறது; மிக உயர்ந்த மனிதனில், இது முற்றிலும் தெளிவாக இருக்கிறது. உண்மை இப்படியே. நாம் அறியும் இந்த உண்மை அல்லது இருப்பு, எல்லைக்கு உட் பட்ட இந்த இருப்பு, ஆன்மாவின் இயல்பான உண்மை இருப் பின் பிரதிபிம்பமே ஆகும். ஆனந்தமும் இப்படியே. அன்பு என்று நாம் சொல்வதெல்லாம் ஆன்மாவின் அழிவற்ற ஆனந்தத் தின் பிரதிபிம்பமே. வெளிப்பாடு அல்லது பரிணாமத்துடன் எல்லையும் வந்துவிடுகிறது. ஆனால் வெளிப்படாததான ஆன்மாவின் இயல்பு எல்லையற்றதாகும். இந்த ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. ஆனால் அன்பிற்கு எல்லை உண்டு. நான் இன்று உன்னிடம் அன்பு காட்டுகிறேன்; நாளை வெறுக்கிறேன். என் அன்பு ஒருநாள் அதிகரிக்கிறது; ஒருநாள் குறைகிறது. ஏனெனில் அன்பு என்பது வெளிப்பாடு மட்டுமே அல்லவா!

கபிலருடன் நாம் மாறுபடும் முதற்கருத்து இறைவனைப் பற்றியதாகும். தனிமனிதனை எடுத்துக்கொண்டால், புத்தியில் தொடங்கி உடலில் முடியும் பிரகிருதியின் வரிசைக் கிரமமான பரிணாமங்களைப் பின்னின்று நடத்த ஒரு புருஷன் அரசனாக வும் செயல்படுபவனாகவும் தேவைப்படுவதுபோல், பிரபஞ்ச புத்தி பிரபஞ்ச நான்-உணர்வு, பிரபஞ்ச மனம், பிரபஞ்ச நுண் பொருள் பருப்பொருள் இவற்றை இயக்க, அடக்கியாள அரச னும் நிர்வாகியும் என ஒருவர் கட்டாயமாக இருந்தேயாக வேண்டும். அத்தகைய ஒருவர் இல்லாமல் இந்தப் பிரபஞ்ச வரிசைக் கிரமம் எப்படி முற்றுப்பெறும்? பிரபஞ்ச வரிசைக்குப் பின்னால் நிற்கும் பிரபஞ்ச புருஷன் இல்லை என்பது உங்கள் வாதமானால், தனிமனிதன் சம்பந்தமான வரிசைக்குப் பின்னால் நிற்கும் தனிமனித புருஷன் இல்லை என்று நாங்கள் மறுக் கிறோம். படிப்படியான, விரிந்த பரிணாமங்களுக்குப் பின்னால்

அவற்றை இயக்கவும் அடக்கியாளவும் இவற்றிற்கு அப்பாற் பட்ட, ஜடப்பொருள் தன்மை இல்லாத புருஷன் ஒருவன் உண்டு என்றால், இதே நியாயப்படி பிரபஞ்ச புருஷன் உண்டு என்பதும் மெய்ப்பிக்கப்படுகிறதே! பிரபஞ்ச பரிணாமங்களுக் கெல்லாம் அப்பாற்பட்ட பிரபஞ்ச ஆன்மாவையே ஈசுவரன், இறைவன், கடவுள் என்கிறோம்.

முக்கியமான வேறுபாடு அடுத்தது வருகிறது: ஒரு புருஷ னுக்கு மேல் இருக்க முடியுமா? புருஷன் எங்கும் நிறைந்தவன், எல்லை இல்லாதவன் என்பதைக் கண்டோம். எங்கும் நிறைந்த, எல்லை இல்லாத இரண்டு இருப்பது இயலாது; அ, ஆ என்று இரண்டு எல்லையற்றவை இருப்பதாகக் கொண்டால், எல்லை யற்ற அ எல்லையற்ற ஆ விற்கு எல்லை வகுத்துவிடும். எல்லை யற்ற ஆ எல்லையற்ற அ அல்லவே! இரண்டும் ஒன்றல்ல என் றால் விலக்கு (Exclusion) நேர்கிறது; விலக்கு என்பது எல்லைக்கு உட்படுவதுதானே? எனவே ஒன்றுக்கு ஒன்று எல்லையாகும். அ, ஆ இரண்டுமே எல்லையற்ற தன்மையை இழந்துவிடுகின் றன. எனவே எல்லையற்றது ஒன்றுதான் இருக்க முடியும்; அதாவது, ஒரே புருஷன்தான் இருக்க முடியும்.

இப்போது நாம் நமது அ, இ இரண்டையும் எடுத்துக் கொண்டு, இவை இரண்டல்ல, ஒன்றே என்று காட்டுவோம். வெளிப் பிரபஞ்சம் என்பது அ+மனம் என்றும், உள்பிரபஞ்சம் இ + மனம் என்றும் கண்டோம். அ, இ இரண்டும் அறியப் படாதவை, அறிய முடியாதவை. காலம், இடம், காரணகாரியம் —இவையே வேற்றுமை எல்லாவற்றிற்கும் காரணம். இவை மனத்தின் அடிப்படைக் கூறுகள். இவை இல்லாத மனநிலை இல்லை. காலம் இன்றி நீங்கள் சிந்திக்க முடியாது, வெளி இன்றிக் கற்பனை செய்ய முடியாது, காரணகாரியம் இன்றி எதுவுமே இருக்க முடியாது. இவை மனத்தின் உருவங்கள். இவை இல்லை என்றால் மனமே இல்லை. எனவே வேறுபாடு களுக்கெல்லாம் காரணம் மனமே. வேதாந்தத் தத்துவப்படி மனமும் அதன் உருவங்களுமே அ, இ இரண்டையும் எல்லைக்கு உட்படுத்தி, அவை வெளிப் பிரபஞ்சமாகவும் உட்பிரபஞ்சமாக வும் தோன்றும்படிச் செய்கின்றன. ஆனால் அ, இ இரண்டுமே மனத்திற்கு அப்பாற்பட்டவை. ஆதலால் வேறுபாடு அற்றவை; எனவே அவற்றிற்கு நாம் எந்தப் பண்புகளையும் ஏற்ற இயலாது. ஏனெனில் பண்புகள் மனத்திலிருந்து பிறந்தவை. பண்பு இல் லாதது ஒன்றாகத்தான் இருக்க இயலும். அ பண்பு அற்றது;

மனத்தின் பண்புகளையே அது ஏற்கிறது. அப்படியே இ யும். எனவே அ, இ இரண்டும் ஒன்றே. பிரபஞ்சம் முழுவதும் ஒன்றே.

பிரபஞ்சத்தில் ஓர் ஆன்மாதான் உள்ளது. இருப்பது ஒன்றே, அந்த ஒரே இருப்பு. காலம், இடம், காரணகாரியம் என்பவற்றின் வழியே செயல்படும்போது, பல்வேறு பெயர் களால் வழங்கப்படுகிறது; புத்தி, நுண்பொருள், தூலப்பொருள் என்றெல்லாம் மனம் சம்பந்தப்பட்ட மற்றும் பௌதிக உருவங் களாகவும் வழங்கப்படுகிறது. பிரபஞ்சத்திலுள்ள எல்லாமே ஒன்றுதான். அதுதான் பல்வேறு உருவங்களாகத் தோன்றுகிறது. அந்த ஒன்றின் ஒரு சிறுபகுதி காலம், இடம், காரணகாரியம் என்ற இந்த வலைக்குள் புகுந்தவுடன் பல உருவங்களைப் பெறுகிறது. இந்த வலையை எடுத்துவிட்டால் மிஞ்சுவது ஒன்று தான்.

எனவே அத்வைதத் தத்துவப்படி பிரம்மம் என்று சொல்லப்படும் ஆன்மாவில் இந்தப் பிரபஞ்சம் ஒன்றே ஒன்று தான். இந்த ஆன்மா பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகத் தோன்றும் போது இறைவன் எனப்படுகிறது. இதே ஆன்மா, சிறு பிரபஞ் சமான இந்த உடலிற்கு ஆதாரமாகத் தோன்றும்போது ஜீவன் ஆகிறது. எனவே மனித ஆன்மா என்பது இந்த ஜீவனே.

புருஷன் ஒன்றே, அதுவே வேதாந்தம் கூறும் பிரம்மம். ஆராயும்போது ஈசுவரன், ஜீவன் இரண்டுமே பிரம்மத்துள் ஒன்றாகிவிடுகின்றன. இடையீடற்ற நீயேதான் பிரபஞ்சம்; எங்கும் நீயே ஊடுருவி நிற்கிறாய். 'எல்லா கைகளாலும் நீ உழைக்கிறாய்; எல்லா வாய்களாலும் நீ உண்கிறாய்; எல்லா மூக்குகளாலும் நீ சுவாசிக்கிறாய்; எல்லா மனங்களாலும் நீ சிந்திக்கிறாய். பிரபஞ்சம் முழுவதும் நீயே! பிரபஞ்சமே உன் உடல். படைக்கப்பட்டவை, படைக்கப்படாதவை எல்லா பிர பஞ்சமும் நீயே. பிரபஞ்சத்தின் ஆன்மா, உடல், இரண்டும் நீயே. நீயே இறைவன். நீயே தேவதைகள். நீயே மனிதன், நீயே விலங்குகள்; நீயே தாவரங்கள்; நீயே கனிப்பொருள், நீயே எல் லாம். நீயே எல்லா தோற்றங்களும். இருப்பதெல்லாம் நீயே; எல்லையற்றவன் நீ. எல்லையற்ற உன்னைப் பகுக்க இயலாது. அதற்குப் பாகங்கள் இருக்க முடியாது. ஏனெனில் ஒவ்வொரு பாகமும் எல்லையற்றதாக இருக்கும். இதன் பொருள் என்ன? பகுதியும் முழுமையும் ஒன்றே என்பது. இது அர்த்தமற்றது. எனவே நீ இன்னார் என்பது உண்மையாக இருக்கவே இயலாது.

இது வெறும் பகற்கனவு. இதை உணர்ந்து சுதந்திரமாக இருங்கள். இதுதான் அத்வைதத் தத்துவத்தின் முடிவு.

'நான் உடல் அல்ல, உறுப்புகள் அல்ல; மனம் அல்ல; நான் எல்லையற்ற உண்மை அறிவு ஆனந்தம், நானே அவன்— இதுதான் உண்மை அறிவு. மற்ற விவேகம், அறிவு எல்லாமே அறியாமைதான். எனக்கு ஞானம் வருவதாவது! நானே ஞானம். எனக்கு உயிர் ஏது? நானே உயிர்! நான் இருப்பது உறுதி! நானே வாழ்வு! இருக்கும் அந்த ஒரு பொருள் நானே. எதுவும் என்னாலும் என்னுள்ளும் நானாகவுமே இருக்க முடியும். பஞ்ச பூதங்களாக நானே பரிணமித்திருக்கிறேன். ஆனால் நான் கட்டுப்படவில்லை. முக்தியைத் தேடுபவர் யார்? யாரும் இல்லை. நீ கட்டுப்பட்டிருப்பதாக எண்ணினால் கட்டுப்பட்டே இருப்பாய். உனக்கு விலங்கை நீயே பூட்டிக்கொள்கிறாய். நீ கட்டுப்படாதவன் என்பதை உணர்ந்தால் இப்போதே நீ முக்தன்—கட்டுப்படாதவன். இதுதான் ஞானம். ஞானம், ஞானம்தான் முக்தி. பிரகிருதியின் லட்சியமே முக்திதான்.

# 5. சுதந்திரமான ஆன்மா

22 ஜனவரி 1896

இருப்பவை இயற்கை, ஆன்மாக்கள் என இரண்டே என்பதுடன் சாங்கியர்களின் ஆராய்ச்சி முடிந்துவிடுகிறது. எண்ணற்ற ஆன்மாக்கள் இருக்கின்றன. இவை மிகவும் நுட்பமான, இனிச் சுருங்க இயலாத (Simple) நிலையில் இருப்பதால் மரணம் அற்றவை. எனவே இவை பிரகிருதி அல்லது இயற்கையிலிருந்து வேறுபட்டவையாகவே இருக்க வேண்டும். இயற்கை, தன்னுள்ளேயே மாறுதல் அடைந்து, இந்தப் பிரபஞ்சத்தை வெளிப்படுத்துகிறது. ஆனால் சாங்கியர்களின் கருத்துப்படி ஆன்மா செயல்படாதது. அது இனிச் சுருங்க இயலாத நுட்ப நிலையில் உள்ள ஒன்று. ஆன்மா முக்தி பெறுவதற்காகவே இயற்கை இந்த மாறுதல்களை எல்லாம் நிகழ்த்துகிறது. நான் இயற்கை அல்ல என்ற அறிவை ஆன்மா பெறுவதே அதன் முக்தி.

ஆன்மா ஒவ்வொன்றும் எங்கும் நிறைந்தது, என்பதைச் சாங்கியர்கள் ஏற்றேயாக வேண்டியிருந்தது என்பதை நாம் முன்பு கண்டோம். இனி மாற இயலாத நுட்பப் பொருளாக இருப்பதால், ஆன்மாவை எல்லைக்கு உட்படுத்த முடியாது. ஏனெனில் எல்லை என்பது காலம், இடம், காரணகாரியம் மூலமே ஏற்பட முடியும். ஆன்மா இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டது. எனவே அதற்கு எந்த எல்லையும் இருக்க முடியாது. ஒரு பொருள் எல்லைக்கு உட்பட வேண்டுமானால் அது இடம் என்பதில், அதாவது உடலில் இருக்க வேண்டும். உடல் என்றால் அது இயற்கையில் இருந்தாக வேண்டும். ஆன்மாவிற்கு உருவம் உண்டு என்றால், அது இயற்கையாகத்தான் இருக்க வேண்டும்; இயற்கைக்கு மாறுபட்ட ஒன்றாக இருக்க முடியாது. எனவே ஆன்மா உருவம் இல்லாதது. உருவம் இல்லாத ஒன்றை இங்கோ, அங்கோ, எங்கோ ஓர் இடத்தில் இருப்பதாகச் சொல்ல முடியாது. அது எங்கும் நிறைந்ததாகவே இருக்க வேண்டும். இதற்கு அப்பால் சாங்கிய ஆராய்ச்சி செல்லவில்லை.

இந்த ஆராய்ச்சி முழுமையானதல்ல என்பதே இதற்கு வேதாந்திகளின் எதிர்வாதம். இயற்கையும் எல்லையற்றது, ஆன்மாவும் எல்லையற்றது என்று அவர்கள் கூறினால் எல்லை யற்றவை இரண்டு இருப்பதாக ஆகிறது. எனவே, ஆன்மா எங்கும் நிறைந்தது என்று காட்டப் பயன்படும் அதே நியாயங் களால் இயற்கை எங்கும் நிறைந்தது என்பதையும் காட்ட முடியும். அப்போது இயற்கையும் காலம், இடம், காரணகாரியம் மூன்றிற்கும் அப்பாற்பட்டது என்றாகிவிடும். அப்படியானால் இயற்கையிடம் மாறுபாடோ வெளிப்பாடோ ஏற்பட முடியாது. இங்கே எல்லையற்ற இரண்டு இருப்பதாக ஆகிறது. அது முடியவே முடியாதது.

இந்தப் பிரச்சினைக்கு வேதாந்தியின் முடிவு என்ன?

இயற்கை, ஆன்மா—இவற்றைப் பின்னின்று இயக்கும் உணர்வுச் சக்தி ஒன்று இருக்க வேண்டும். இந்தச் சக்தியே மனம் நினைக்கும்படியும், இயற்கை செயல் புரியும்படியும் செய்கிறது. ஏனெனில் இயற்கையும், அதன் பரிணாமங்களான மிகவும் ஜடப்பொருள் நிலையிலிருந்து மிகவும் நுட்பப்பொருள் நிலையான மகத் (அறிவு)வரை எல்லாமே உணர்வற்றவை. இதனைச் சாங்கியர்களும் ஒத்துக் கொள்கிறார்கள்.

பிரபஞ்சத்திற்கு அப்பால் நின்று பிரபஞ்சத்தை இயக்கும் இந்த மூல அறிவுச் சக்தியையே வேதாந்திகள் இறைவன் என் கிறார்கள். இதன் பொருள் என்ன? பிரபஞ்சம் இறைவனிலிருந்து வேறல்ல என்பதே. இந்தப் பிரபஞ்சமாக ஆகியிருப்பது அவரே. அவர் பிரபஞ்சம் ஏற்படக் கருவி (நிமித்த காரணம்) மட்டும் அல்ல, பிரபஞ்சப் பொருளும் (உபாதான காரணம்) அவரே.

காரணம் காரியத்திலிருந்து ஒருபோதும் வேறுபட்டதல்ல. காரணத்தின் மற்றோர் உருவமே காரியம். அன்றாட அனுபவத் தில் இதை நாம் காண்கிறோம். இந்த உணர்வுச் சக்தியே பிர பஞ்சத்தின் காரணம். வேதாந்தத்தின் துவைதம், விசிஷ்டாத் வைதம், அத்வைதம் போன்ற எல்லா நிலைகளும் முதலில் இதையே வற்புறுத்துகின்றன—இறைவன் பிரபஞ்சம் ஏற்படக் கருவி மட்டும் அல்ல; பிரபஞ்சப் பொருளும் அவரே, இருப்ப தெல்லாம் அவரே.

ஆன்மாக்களும் இறைவனுடைய அம்சங்களே; எல்லை யற்ற, குறைவற்ற அந்தப் பெருநெருப்பின் சிறு பொறிகளே என்பது வேதாந்தத்தின் இரண்டாம் படி. 'ஒரு நெருப்புப் பிழம்பிலிருந்து கோடிக்கணக்கான தீப்பொறிகள் சிதறிச்

செல்வதுபோல் அந்தப் புராதனப் பரம்பொருளிடமிருந்து இந்த ஆன்மாக்கள் எல்லாம் வந்துள்ளன. சரி. இது சரிதான் என்றாலும், இதனால் முழுத்திருப்தி உண்டாகவில்லையே! எல்லையற்ற பொருளின் அம்சம் என்பதன் பொருள் என்ன? எல்லையற்றது பகுக்க முடியாத ஒன்று. அதற்கு அம்சங்கள் இருக்க இயலாது. தனிப்பொருளான ஒன்றைப் பகுப்பது எப்படி? எனவே, தீப்பொறிகள் போல் அவனிடமிருந்து வந்தவை என்பதன் பொருள் என்ன? உண்மையில் அம்சம் என்பதே இல்லை. ஆன்மா ஒவ்வொன்றும் பிரம்மமே என்று அத்வைத வேதாந்தி இதற்கு வெகு சுலபமாகப் பதில் கூறிவிடுகிறான்.

அப்படியானால் இத்தனை ஆன்மாக்கள் எப்படி இருக்க முடியும்? ஒரே சூரியன் பலகோடி நீர்த்துளிகளில் பிரதிபலிக்கும் போது பல கோடி சூரியர்கள் இருப்பதுபோல் தோன்றுகிறது. ஒவ்வொரு துளியிலும் சூரிய வடிவத்தின் ஒரு சிறு உருவம் உள்ளது. இவை தோற்றமே தவிர உண்மையல்ல. இது போலவே அந்தப் பல்லாயிரம் ஆன்மாக்களும் இறைவனின் பிரதிபிம்பங்கள்; உண்மை அல்ல. அவை பிரபஞ்சத்திலுள்ள பகுக்க முடியாத ஒரே பரம்பொருளான, பிரபஞ்சத் தலைவனான உண்மையான 'நான்' அல்ல. இந்தப் பல்வேறு சிறுசிறு உயிர்களான மக்கள், விலங்குகள் முதலிய எல்லாம் வெறும் பிரதிபிம்பங்கள்; உண்மை அல்ல. இவை இயற்கையில் தோன்றும் வெறும் மாய பிம்பங்கள். பிரபஞ்சத்திலுள்ள எல்லையற்ற ஒரே ஒருவர் இறைவனே. அவரே நீ, நான் என்றெல்லாம் தோன்றுகிறார். இந்த வேறுபாடுகள் எல்லாம் வெறும் மனமயக்கம்.

இறைவன் பகுபடவில்லை; பகுபட்டதுபோல் தோன்று கிறார், அவ்வளவுதான். காலம், இடம், காரணகாரியம் என்ற வலையின் வழியாக இறைவனைப் பார்ப்பதால்தான் இந்த வேறுபாடுகள் இருப்பதுபோல் தோன்றுகிறது. இந்த வலை வழியாக அவரைப் பார்க்கும்போது அவர் இந்தப் பிரபஞ்ச மாகத் தோன்றுகிறார். இந்த வலையின் வழியாகவே இன்னும் சற்று உயர்ந்த நிலையில் நின்று பார்த்தால், விலங்காகவும், அடுத்த படியில் மனிதனாகவும், அடுத்த படியில் தேவராகவும் அவரே காட்சியளிக்கிறார். இப்படிக் காட்சி பலவகைப்பட் டாலும் பிரபஞ்சத்தின் ஒரே எல்லையற்ற பரம்பொருள் அவரே. அவரே நாம். நானும் அவரே, நீங்களும் அவரே. நாம் அவரது

அம்சங்கள் அல்ல, முழுமையே. 'பிரபஞ்சம் என்ற இந்த விரிந்த தோற்றத்திற்குப் பின்னணியாக, எல்லாம் அறிபவராக நிற்பவர் அவரே.' இந்தத் தோற்றப் பிரபஞ்சமும் அவரே. காண்பவரும் காணப்படுபவையும் காட்சியும் அவரே. அவரே 'நான்' அவரே 'நீ'.

இது எப்படி? 'அறிபவனையே அறிவது எப்படி?' அறிபவன் தன்னையே அறிய முடியாதே! நான் மற்றவற்றை எல்லாம் பார்க்கலாம்; ஆனால் என்னையே எப்படிப் பார்த்துக்கொள்ள முடியும்? ஆன்மா, அறிபவன், எல்லாவற்றிற்கும் இறைவன், உண்மைப் பொருள் என்றெல்லாம் கூறப்படும் பரம்பொருள் பிரபஞ்சத்தின் காட்சி அனைத்திற்கும் காரணமாக இருக்கிறார். ஆனால் பிரதிபிம்பத்தின் மூலமாக அன்றி, அவர் தன்னைக் காணவோ அறியவோ முடியாது. நீங்கள் உங்கள் முகத்தைக் கண்ணாடியின் மூலம்தானே காண முடியும்? அதுபோல் ஆன்மாவும் பிரதிபிம்பத்தின் மூலமாக அல்லாமல் தன் இயல்பைத் தானே காண முடியாது. இந்தப் பிரபஞ்சத் தோற்றம் முழுவதும் இப்படி ஆன்மா தன்னைத் தானே காண்பதற்காகச் செய்யும் முயற்சியே. முதலில் உயிரணுவில் (Protoplasm) பிரதிபலிப்பதன் மூலம் இந்த முயற்சி தொடங்கியது. பின்னர் படிப்படியாகச் செடி, கொடி, விலங்கு என்று மேலும்மேலும் சிறந்த கண்ணாடிகளில் பிரதிபலித்து, கடைசியில் மிகத் தூய கண்ணாடியான நிறைமனிதனை அடைந்து முற்றுப் பெறுகிறது. தன் முகத்தைக் காண விரும்பும் மனிதன், கலங்கிய சிறு குட்டை நீரில் மங்கலாகக் காண்கிறான்; தெளிந்த நீரில் இன்னும் தெளிவாகக் காண்கிறான். பளபளப்பான உலோகத்தின் மேற்பரப்பு ஒன்றில் இன்னும் தெளிவாகக் காண்கிறான்; கடைசியாகக் கண்ணாடியில் தன் முகத்தை உள்ளபடியே காண்கிறான். எனவே, காண்பவனாகவும் காட்சிப் பொருளாகவும் உள்ள அந்தப் பரம்பொருளின் சரியான பிரதிபிம்பம் குறைவற்ற மனிதனே.

மனிதன் இயல்பாகவே ஏன் எல்லாவற்றையும் வழிபடுகிறான், நிறைமனிதனை எல்லா நாட்டிலும் ஏன் தெய்வமாக மக்கள் போற்றுகிறார்கள் என்பது இப்போது உங்களுக்கு விளங்கியிருக்கும். நீங்கள் எப்படி வேண்டுமானாலும் வாதிக்கலாம். ஆனால் அவர்களே வழிபடப்பட வேண்டியவர்கள். ஏசு, புத்தர் போன்ற அவதார புருஷர்களை மக்கள் தெய்வமாக வழிபடுவதற்குக் காரணம் இதுதான். என்றுமுள்ள பரம்பொருளின் மிக மேலான வெளிப்பாடு இவர்கள். நீங்களோ நானோ

இறைவனைப்பற்றி எண்ணக்கூடிய மிக உயர்ந்த கருத்தைவிட உயர்ந்தவர்கள் இவர்கள். ஒரு நிறைமனிதன் இத்தகைய கருத்துக்களைவிட எவ்வளவோ மேலானவன். இத்தகையவர்களிடம் வட்டம் முடிவடைந்துவிடுகிறது; காண்பவனும் காட்சிப் பொருளும் ஒன்றாகிவிடுகின்றன. இத்தகையோரிடமிருந்து மனமயக்கம் அகன்றுவிடுகிறது; அதற்குப் பதிலாக, தான் என்றுமே குறைவற்ற இறைவனாகவே இருந்து வருபவன் என்ற அனுபூதி ஏற்படுகிறது.

அப்படியானால் இடையில் இந்தப் பந்தம் எப்படி வந்தது? குறைவற்ற இறைவன் எவ்வாறு குறைவுள்ள மனிதன் ஆனார்? என்றும் சுதந்திரமான ஒன்று எப்படிக் கட்டுப்பட்டது? அது கட்டுப்படவே இல்லை, என்றுமே சுதந்திரமாகத்தான் இருந்து வருகிறது என்கிறான் அத்வைதி. பல நிற மேகங்கள் வானில் உலவுகின்றன; அவை ஒரு நிமிடம் நின்றபின் போய்விடுகின்றன. ஆனால் என்றும் நிலையாக உள்ள நீலவானம் அங்கேயே இருக்கிறது. அது ஒருபோதும் மாறுவதில்லை. தோன்றி மறைபவை மேகங்களே. அதுபோல் நீங்கள் என்றும் குறைவற்றவர்களே. உங்கள் இயல்பை எதுவும் மாற்றியதில்லை, இனி மாற்றவும் முடியாது.

'நான் குறையுடையவன், நான் ஆண், நான் பெண், நான் பாவி, நான் மனம், எனக்குச் சிந்தனை உண்டு, நான் சிந்திக்கப் போகிறேன்' என்பவையெல்லாம் வெறும் மனமயக்கங்கள். நீ சிந்திப்பதே இல்லை. உனக்கு உடல் என்ற ஒன்று ஒருபோதும் இருந்ததே இல்லை. நீ குறை உடையவனாக இருந்ததே இல்லை. நீதான் இந்தப் பிரபஞ்சம் போற்றும் தனி இறைவன். இன்று உள்ளவை, இனி உண்டாகவிருப்பவை ஆகிய எல்லாவற்றிற்கும் மேலான தலைவன் நீயே. சூரியர்கள், சந்திரர்கள், நட்சத்திரங்கள், பூமிகள், கிரகங்கள் மற்றும் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள மிகச் சிறிய பொருட்கள் எல்லாவற்றிற்கும் கடவுள் நீயே! சூரியன் ஒளி வீசுவது உன்னால், நட்சத்திரங்கள் மின்னுவது உன்னால், பூமி வளமும் அழகும் பெற்று விளங்குவதும் உன்னால்தான். உனது அருளால்தான் எல்லாம் ஒன்றோடொன்று அன்புடன் இருக்கின்றன; ஒன்றையொன்று கவர்கின்றன. எல்லாவற்றுள்ளும் நீயே இருக்கிறாய். எல்லாம் நீயே. யாரை ஒதுக்குவது? யாரை ஏற்றுக்கொள்வது? எல்லாவற்றிலும் உள்ள எல்லாமும் நீயேதான். இந்த ஞானம் வந்த அக்கணமே மனமயக்கம் விலகிவிடுகிறது.

நான் ஒருமுறை இந்தியப் பாலைவனம் ஒன்றின் வழியாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். ஒரு மாதத்திற்கும் மேலாகவே நான் அந்த வழியாகப் பிரயாணம் செய்தேன். என் கண்முன் எத்தனையோ அழகிய இயற்கைக் காட்சிகள் விரிந்தன. எவ்வளவோ அழகான ஏரிகள், ஆறுகள்! ஒருநாள் எனக்கு மிகுந்த தாகம் ஏற்பட்டது. அந்த ஏரிகளுள் ஒன்றிற்குச் சென்று தண்ணீர் குடிக்க எண்ணினேன். நான் அதை நெருங்கியபோது அது மறைந்துவிட்டது. உடனே படீரென்று என் மூளையில், 'இது கானல்நீர் அல்லவா? இதைப்பற்றி நாம் படித்திருக் கிறோமே!' என்ற எண்ணம் வந்தது. இந்த உண்மையை உணர்ந்த தும் என் முட்டாள்தனத்தை எண்ணிச் சிரித்தேன். இந்த ஒரு மாதமாக நான் கண்ட அழகிய காட்சிகளெல்லாம் வெறும் கானல்நீர் என்பது அப்போது எனக்கு விளங்கியது. ஆனால் அது கானல்நீர் என்பதைப் பிரித்தறிய அதற்குமுன் என்னால் முடியவில்லை. அடுத்தநாள் காலையில் மீண்டும் நான் பயணத் தைத் தொடங்கினேன். அப்போதும் இயற்கைக் காட்சிகளையும் ஏரிகளையும் முன்போலவே கண்டேன். ஆனால் அவற்றைக் கண்டதும், அது வெறும் கானல்நீர் என்ற எண்ணமும் உடனே வந்தது. ஒருமுறை உண்மை விளங்கிய பிறகு அது மயக்கும் ஆற்றலை இழந்துவிடுகிறது. இதுபோலவே பிரபஞ்சத் தோற்றம் என்ற இந்த மாயையும் ஒருநாள் மறைந்துவிடும். பிரபஞ்சம் முழுவதுமே மறைந்துவிடும், கரைந்து போய்விடும். இதுவே அனுபூதி.

தத்துவம் என்பது வெறும் கேலிக்கூத்தோ வெட்டிப் பேச்சோ அல்ல, அது அனுபூதியில் அறிய வேண்டிய ஒன்று. இந்த உடல் மறைந்துவிடும்; இந்தப் பூமியும் பிரபஞ்சமும் எல்லாம் மறைந்துவிடும், 'நான் உடல், நான் மனம்' என்ற எண் ணமும் சில காலத்திற்கு மறைந்து நிற்கலாம் அல்லது வினைப் பயன் முடிந்துவிட்டால் என்றென்றைக்குமாக மறைந்துவிட லாம். ஆனால் குயவன் பானை செய்து முடித்த பிறகும் அவன் சுழற்றிய வேகத்தால் அந்தச் சக்கரம் சற்று நேரம் சுழல்கிறது. அதுபோல் வினைப்பயன் சிறிது மிஞ்சியிருந்தால், மனமயக்கம் மறைந்த பிறகும், வினைப்பயனின் வேகத்தால் இந்த உடலும் சிலகாலம் செயல்படும். இந்த உலகமும் ஆண், பெண், மிருகம் என்று எல்லோரும் மீண்டும் தோன்றுவார்கள். ஆனால் உண்மை விளங்கிய பிறகு தோன்றும் கானல்நீர் போன்ற தோற் றமே அது. மாயையின் மயக்கும் சக்தி அங்கே இருக்காது.

இந்தத் தோற்றத்துடன் கூடவே, 'இதன் இயல்பை இப்போது நான் அறிவேன்' என்ற அறிவும் தோன்றும். இதனால் பந்தம் வராது; துன்பம், துயரம், தொல்லை எதுவும் உண்டாகாது. ஏதாவது துயரம் தோன்றினாலும், 'நீ வெறும் தோற்றம் என்பது எனக்குத் தெரியும்' என்று சொல்ல முடியும். இந்த நிலை அடைந்த மனிதன் ஜீவன்முக்தன், வாழும்போதே முக்தி பெற்றவன். ஜீவன்முக்த நிலைதான் ஞானயோகியின் நோக்கம், லட்சியம் எல்லாம்.

எந்தப் பற்றும் இல்லாமல் இந்த உலகில் வாழக்கூடியவனே ஜீவன்முக்தன். அவன் தண்ணீரில் உள்ள தாமரை இலை போன்றவன். நீரிலேயே இருந்தாலும் அது நீரினால் நனைவதில்லை. மனிதருள் மிக உயர்ந்த நிலையில் இருப்பவன் இவன்! மனிதருள் ஏன், உயிர்கள் அனைத்துள்ளும் உயர்ந்தவன் இவன். ஏனெனில் பரம்பொருளும் தானும் ஒன்று என்பதை இவன் அனுபூதியில் உணர்ந்துவிட்டான்; தானும் இறைவனும் ஒன்று என்ற உண்மையை உணர்ந்து அந்த அனுபவத்தில் நிற்கிறான். இறைவனுக்கும் உனக்கும் சிறிதேனும் வேற்றுமை உண்டு என்ற எண்ணம்கூட உன்னை அச்சத்தில் ஆழ்த்திவிடும். நீயே அவன், உனக்கும் அவனுக்கும் வேறுபாடு இல்லை, துளிகூட வேறுபாடு இல்லை. நீயே அவன், முற்றிலும் அவன் என்ற அனுபவம் ஏற்படுகின்ற அந்தக் கணமே எல்லா பயமும் விலகிவிடுகிறது. 'அங்கே யார் யாரைப் பார்ப்பது? யார் யாரை வழிபடுவது? யார் யாரிடம் பேசுவது? யார் பேசுவதை யார் கேட்பது? எங்கே ஒருவர் மற்றொருவரைக் காண்கிறாரோ, எங்கே ஒருவர் மற்றவரைக் காண்கிறாரோ, எங்கே ஒருவர், ஒருவர் மற்றவரிடம் பேசுகிறாரோ, எங்கே ஒருவர் பேசுவதை மற்றவர் கேட்கிறாரோ, அது சிறியது. எங்கே யாரும் யாரையும் காண்பதில்லையோ, யாரும் யாரிடமும் பேசுவதில்லையோ, அதுவே மிக உயர்ந்தது, சிறந்தது, அதுவே பிரம்மம்.'

பிரம்மமாக இருக்கும் நீ என்றும் அதுவாகவே இருக்கிறாய். அந்த நிலையில் உலகம் என்ன ஆகும்? உலகிற்கு நாம் என்ன நன்மை செய்ய முடியும்? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் அங்கு இடமே இல்லை. 'நான் பெரியவனாகிவிட்டால் என் மிட்டாய் என்னவாகும்?' என்கிறது குழந்தை. 'நான் வளர்ந்துவிட்டால், என் கோலிகள் கேட்பாரற்றுப் போய்விடுமே! எனவே நான் வளர மாட்டேன்' என்கிறான் சிறுவன். 'நான் வளர்ந்துவிட்டால் என் பொம்மையின் கதி என்ன?' என்கிறது இந்தக்

குழந்தை! இந்த உலகம்பற்றிய கேள்வியின் நிலையும் இதுதான். உலகம் என்ற ஒன்று அன்றும், இன்றும், என்றுமே இருந்த தில்லை; இனி இருக்கப் போவதும் இல்லை. உண்மையில் நாம் ஆன்மாவை உள்ளது உள்ளபடி அறிந்திருந்தால், ஆன்மாவைத் தவிர இரண்டாவது பொருளே இல்லை என்று அறிந்திருந்தால், மற்றவை எல்லாம் கனவே என்ற உண்மை நமக்குப் புலப்பட் டிருந்தால், உண்மையில் இவை இருக்கவே இல்லை என்பது நமக்கு விளங்கியிருந்தால், வறுமையும் துக்கமும் கொடுமையும் நன்மையும் நிறைந்த இந்த உலகம் நமக்குத் தொல்லை தருவது அப்போதே நின்றுவிடும்.

பிரபஞ்சம் என்ற ஒன்று இல்லவே இல்லை என்றால் பிறகு யாருக்காக, எதற்காக நாம் கவலைப்பட வேண்டும்? ஞானயோகிகள் போதிப்பது இதுதான். எனவே துணிந்து சுதந்திரமாக இருங்கள். உங்கள் எண்ணம் செல்ல முடிந்த தூரம்வரை போகத் துணியுங்கள். அதனை உங்கள் வாழ்க்கை யில் செயல்முறைப்படுத்த முயலுங்கள்; துணியுங்கள். ஞானம் பெறுவது மிகக் கடினமானது. இது தைரியம், துணிவு இவற்றின் உச்ச நிலையில் நிற்பவர்களாலேயே சாதிக்க முடிந்த ஒன்று; அறிவு உருவங்கள், புலன் உருவங்கள் என்று எல்லா நாமரூபங் களையும் உடைத்தெறியும் துணிவுள்ளவர்களால் மட்டுமே முடிகின்ற ஒன்று.

இந்த உடல் 'நான்' அல்ல; எனவே இது போக வேண்டும். இந்தக் கருத்தினால் எத்தனையோ வினோதமான செயல்கள் நடப்பதைக் காணலாம். 'நான் உடல் அல்ல, எனவே என்தலை வலி நீங்க வேண்டும்' என்பான் ஒருவன். இவனுக்கு உடலே இல்லை என்றால் தலைவலி மட்டும் எங்கிருந்து வந்தது? ஆயிரம் தலைவலிகளும் ஆயிரம் உடல்களும் வந்து போகட்டும். அத னால் எனக்கென்ன? எனக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை. தாய் தந்தையர் என்று யாருமே எனக்கு இருந்ததில்லை. நண்பர்களோ பகைவர்களோ எனக்கு இல்லை. ஏனெனில் அவர்கள் எல்லோரும் நானே. எனக்கு நண்பனும் நானே; பகை வனும் நானே. நானே உண்மை-அறிவு-இன்பம். நானே அவன்! நானே அவன்! நூறு உடல்களில் நான் காய்ச்சலாலும் பிற நோய்களாலும் அவதிப்பட்டால், பத்து லட்சம் உடல்களில் நான் ஆரோக்கியமாக இருக்கிறேன். ஆயிரம் உடல்களில் பட்டினி கிடந்து வருந்தினால், வேறு ஆயிரம் உடல்களில் நான் உண்கிறேன். ஆயிரமாயிரம் உடல்களில் நான் துன்பத்தில்

உழன்றால் ஆயிரமாயிரம் உடல்களில் நான் இன்பத்தில் திளைக்கிறேன். யார் யாரைக் குற்றம் சொல்வது? யார் யாரைப் புகழ்வது? யாரைத் தேடுவது? யாரை விலக்குவது? நான் யாரையும் தேடுவதும் இல்லை; யாரையும் விலக்குவதும் இல்லை. நானே அல்லவா முழுப் பிரபஞ்சமும்! நானே என்னைப் புகழ்கிறேன்; நானே என்னை இகழ்கிறேன். நானே எனக்காகத் துன்புறுகிறேன்; என் விருப்பப்படியே நான் இன்பமும் அனுபவிக்கிறேன். நான் சுதந்திரன்.

இவனே, துணிவும் தைரியமும் உள்ள இவனே ஞானி. பிரபஞ்சமே இடிந்து விழட்டும், அவன் புன்சிரிப்புடன், 'அது இருந்தால் அல்லவா இடிந்து விழ?' என்று அமைதியாகக் கூறுவான், 'பிரபஞ்சம் என்பது வெறும் தோற்றம்தானே?' என்பான். உலகம் இடிந்து விழுவது அவனுக்குத் தெரிகிறது. அது எங்கே இருந்தது? எங்கே போய்விட்டது?

நாம் செயல்முறைபற்றி ஆராயுமுன், கொள்கை சம்பந்தமான இன்னொரு கேள்வியைப் பார்க்கலாம். இதுவரையிலும் தர்க்கம் மிகவும் கட்டுக்கோப்பாகவே இருந்தது. மனிதன் ஆராய்ந்து பார்ப்பானானால், 'இருப்பது ஒன்றேதான்; மற்றவை வெறும் தோற்றங்களே' என்ற முடிவுக்குத்தான் வர முடியும். பகுத்தறிவுபூர்வமான ஒருவனால் வேறு எந்த முடிவுக்கும் வர முடியாது.

ஆனால் எல்லையற்றதும், என்றும் பூரணமானதும், என்றும் ஆனந்த மயமானதும், உண்மை-அறிவு-இன்பமானதும், தனிப் பொருளானதும் ஆன ஒன்று எப்படி மனமயக்கங்களுக்கு உட்பட்டது? இது உலகம் முழுவதிலும் கேட்கப்பட்டு வருகின்ற அதே கேள்விதான். அதாவது இந்த உலகில் பாவம் எப்படிப் புகுந்தது என்று நாகரீகமின்றிக் கேட்கிறோமே, அதே கேள்விதான். இது இந்தக் கேள்வியின் மிகச் சாதாரணமான இழிந்த உருவம். முன்சொன்னது தத்துவரீதியிலான கேள்வி. எனினும் இரண்டிற்கும் விடை ஒன்றுதான்.

இதே கேள்வி பலதரத்திலும் பலவகையிலும் கேட்கப்பட்டிருக்கிறது. இதன் தாழ்ந்த நிலையில் இந்தக் கேள்வி விடையற்றதாகிவிடுகிறது. ஆப்பிள் பழம், பாம்பு, பெண் என்றெல்லாம் கதைகள் சொல்வதால் இந்தப் பிரச்சினை தீர்வதில்லை. இந்த நிலையில் கேள்வி, பதில் இரண்டுமே குழந்தைத்தனமாகிவிடுகிறது. ஆனால் இந்தக் கேள்வி இப்போது உயர்ந்த நிலைகளை எட்டி வருகிறது: 'இந்த மனமயக்கம் எப்படி வந்தது?' பதிலும்

கேள்வியைப் போல் நுட்பமானதே. 'விடையற்ற கேள்விக்கு விடையை எதிர்பார்ப்பது கூடாது' என்பதே இதற்கு விடை.

கேள்வியே முன்னுக்குப்பின் முரணானது. இந்தக் கேள்வியைக் கேட்கும் உரிமையே நமக்கு இல்லை. ஏன்? நிறைநிலை என்பது என்ன? காலம், இடம், காரணகாரியம் இவற்றிற்கு அப்பாற்பட்டது. இந்த நிறைவு, குறையுடையதானது எப்படி? என்பதல்லவா கேள்வி? தர்க்க ரீதியில் இந்தக் கேள்வி பின்வருமாறு அமையும்: 'காரணகாரிய நியதிக்கு அப்பாற்பட்ட ஒன்று, எப்படி இந்த நியதிக்கு உட்பட்டது?' கேள்வியே முன்னுக்குப்பின் முரணாக உள்ளது. அது காரணகாரிய நியதிக்கு அப்பாற்பட்டது என்பதை முதற்பகுதி கூறுகிறது; ஆனால் பிற்பகுதியோ, 'அது எப்படி காரணகாரியத்திற்கு உட்பட்டது?' என்று கேட்கிறது. இந்தக் கேள்வியைக் காரணகாரிய எல்லைக்குள் மட்டுமே கேட்க முடியும். காலம், இடம், காரணகாரியம் இந்த மூன்றுக்குக் கட்டுப்பட்ட பொருட்கள் சம்பந்தமாக மட்டுமே இந்தக் கேள்வி எழ முடியும். இதற்கு அப்பால் உள்ள பொருளைப்பற்றி இந்தக் கேள்வி எழுந்தால், அது பொருளற்ற கேள்வி. ஏனெனில் அங்கே இது தர்க்கரீதியாக அமைவதில்லை. அதற்கு விடையும் காலம், இடம், காரணகாரியம் என்ற மூன்றிற்குள் அமைய முடியாது. இந்த எல்லைக்கு அப்பாற்பட்ட விடை நமக்கு விளங்க வேண்டுமானால், இந்த மூன்றிற்கும் அப்பால் நாம் சென்றாக வேண்டும். எனவே அறிஞர்கள் இந்தக் கேள்வியை எழுப்ப மாட்டார்கள். ஒருவனுக்கு நோய் வந்துவிட்டால் அவன் அதைப் போக்கிக்கொள்ளவே முயல்கிறான். முதலில் இது எப்படி வந்தது என்பது எனக்குத் தெரிய வேண்டும் என்று அவன் வற்புறுத்துவதில்லை.

இதே கேள்விக்கு இன்னோர் உருவமும் உண்டு. அது சற்று கீழானது என்றாலும், நடைமுறைக்கு ஏற்றது; எளிதில் புரியக்கூடியது. இந்த மனமயக்கத்தை ஏற்படுத்தியது எது? உண்மை ஒரு மனமயக்கத்தை, ஒரு மாயையை ஏற்படுத்த முடியுமா? முடியவே முடியாது. ஒரு மாயையே இன்னொரு மாயைக்குக் காரணமாகிறது. இப்படியே மாயைச் சங்கிலி நீள்கிறது என்பது நமக்குத் தெரியும். ஒரு நோய்தான் இன்னொரு நோய்க்குக் காரணமாக முடியுமே தவிர, உடல்நலம் நோய்க்குக் காரணமாக முடியாது. அலையும் நீரும் ஒன்றே. காரணத்தின் மற்றோர் உருவமே காரியம். எனவே காரியம் மாயை என்றால் காரணமும் மாயையாகவேதான் இருக்க வேண்டும். இந்த மாயைக்குக்

காரணம் எது? இன்னொரு மாயை. இப்படி ஆரம்பமின்றி இந்தச் சங்கிலி நீள்கிறது. இனிமேல் கேட்கக்கூடிய கேள்வி ஒன்றே ஒன்றுதான்: 'இது உன் ஏகவாதக் கொள்கையைத் தகர்த்து விடாதா? ''நீ'', ''மாயை'' என இரண்டு உள்ளது என்று இங்கே ஆகிறதே!' இதற்குப் பதில்: 'மாயை இருக்கிறது என்று கூற முடியாது' என்பதுதான். வாழ்க்கையில் நீங்கள் பல்லாயிரம் கனவுகளைக் காண்கிறீர்கள். ஆனால் அவை உங்கள் வாழ்க்கையில் ஒரு பகுதி ஆவதில்லை. கனவு வரும், போகும்; அவற்றிற்கு இருப்பு இல்லை. மாயையை 'இருப்பது' என்று சொல்வது தவறான வாதம். எனவே பிரபஞ்சத்தில் இருக்கும் தனிப்பொருள் ஒன்றே ஒன்றுதான். இது என்றும் பந்தப்படாதது, என்றும் இன்பம் நிறைந்தது. அதுவே நீ, அத்வைதிகள் பெறும் கடைசி முடிவு இதுதான்.

அப்படியானால் பல்வேறு வழிபாடுகளின் பொருள் என்ன என்ற கேள்வி எழலாம். அவை இருந்தே தீரும். அவை இருளில் ஒளியைத் தேடும் முயற்சிகள், இந்தத் தேடலின்மூலமே அவர்களுக்கு ஒளி கிடைக்கும்.

ஆன்மா தன்னைத்தானே காண முடியாது என்பதைச் சற்றுமுன் பார்த்தோம். மாயை (உண்மையல்லாதது) என்ற வலைக்கு உட்பட்டது நமது அறிவு. மாயைக்கு அப்பால்தான் முக்தி இருக்கிறது. இந்த வலைக்குள் இருப்பது அடிமைத்தனம், கட்டுப்பாடு. இங்கே எல்லாம் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டவை. மாயைக்கு அப்பால் சட்டதிட்டம் ஒன்றுமே இல்லை. பிரபஞ்சத்தைப் பொறுத்தவரை அதை ஆட்சி செய்வது சட்டதிட்டங்களே. இதற்கு அப்பால் சட்டதிட்டம் இல்லை; முக்திதான், சுதந்திரம்தான். காலம், இடம், காரண காரியம் என்ற நியதிகளுக்குள் நீ கட்டுப்பட்டிருக்கும் வரையில், 'நான் சுதந்திரன்' என்று சொல்லிக்கொள்வது பொருளற்றது. இந்த வலைக்கு உட்பட்டவையெல்லாம் கடுமையான சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டவை. உனது ஒவ்வோர் எண்ணத்திற்கும் ஒவ்வோர் உணர்ச்சியின் எழுச்சிக்கும் காரணம் உண்டு. சுதந்திர சங்கல்பம் (Free will) என்று சொல்வது பொருளற்ற பேச்சு. எல்லையற்ற உண்மைப் பொருள் இந்த மாயை வலைக்குள் புகும்போதுதான் சங்கல்பம் என்ற ஒன்று ஏற்பட முடியும். உண்மைப் பொருள் இந்த வலைக்குள் சிக்கி நிற்கின்ற பகுதியே சங்கல்பம். இந்த நிலையில் சுதந்திர சங்கல்பம் என்று சொல்வது பொருளற்ற பேச்சு, வடிகட்டின முட்டாள்தனம். சுதந்திரம்

பற்றிய பேச்செல்லாம் இப்படிப்பட்டதுதான். மாயைக்குள் சுதந்திரத்திற்கு இடம் இல்லை.

ஒவ்வொருவரும் ஒரு கல் அல்லது இந்த மேஜை போன்ற ஜடப்பொருட்களைப் போலவே, எண்ணம், சொல், செயல் இவற்றில் கட்டுப்பட்டிருக்கிறார்கள். நான் உங்களிடம் பேசுவதும் நீங்கள் அதைக் கேட்பதும் கடுமையான காரணகாரிய விதிக்கு உட்பட்ட செயல்களே. மாயையைக் கடந்து அப்பால் செல்லும் வரையில் சுதந்திரம் இல்லை. இதுதான் ஆன்மாவின் உண்மை முக்தி. எவ்வளவு அதிக அறிவு படைத்தவர்களானாலும், பிரபஞ்சத்தில் எதுவும் சுதந்திரமாக இருக்க இயலாது என்ற வாதம் எவ்வளவு நன்றாக அவர்களுக்கு விளங்கினாலும், தாங்கள் சுதந்திர புருஷர்கள் என்ற சிந்தனையிலிருந்து அவர்களால் விடுபட முடிவதில்லை. நாம் சுதந்திரம் உள்ளவர்கள் என்று சொல்லத் தொடங்கும்வரை எந்த வேலையும் நடைபெறுவதில்லை. நாம் வாயளவில் பேசும் இந்தச் சுதந்திரம் மேகங்களிடையே தெரியும் நீல வானத்தின் பகுதி போன்றது. உண்மைச் சுதந்திரமான முழு வானம் அதற்குப் பின்னால் இருக்கிறது. இந்த மாயையின் இடையே, இந்த மன மயக்கத்தின் இடையே, பொருளற்ற இந்தப் பிரபஞ்சத்தின் இடையே, புலன், உடல், மனம் என்ற இந்தப் பிரபஞ்சத்தின் இடையே உண்மைச் சுதந்திரம் இருக்க முடியாது.

தொடக்கமும் முடிவும் அற்ற, எதற்கும் அடங்காத, அடக்க முடியாத, சரியானபடி பொருந்தாத, உடைந்துள்ள, இயைபற்ற பல கனவுகளின் தொகுதியே நமது கருத்துப்படி இந்தப் பிரபஞ்சம் ஆகிறது. கனவில் இருபது தலைகொண்ட ஓர் அரக்கன் உன்னைத் துரத்துகிறான், நீ தலைதெறிக்க ஓடுகிறாய். இது இயைபற்றது என்ற எண்ணம் அப்போது உனக்குத் தோன்றவில்லை. அது நடக்கக்கூடியது என்றே எண்ணுகிறாய். இந்தப் பிரபஞ்ச நியதியும் இதுபோல்தான். நீ நியதி என்று கூறுவதெல்லாம் தானாக நடக்கும் சில பொருளற்ற நிகழ்ச்சிகளே. இந்தக் கனவு நிலையில் நாம் இதை நியதி என்கிறோம். மாயை இருக்கும் வரையில், காலம், இடம், காரணகாரியத்திற்குள் நாம் இருக்கும்வரையில் விடுதலைக்கு இடம் இல்லை. இந்தப் பல வகை வழிபாடுகளும் இந்த மாயைக்கு உட்பட்டவையே. இறைவன், விலங்கு, மக்கள் என்ற எண்ணம் எல்லாம் மாயைக்கு உட்பட்டவை. எனவே இவை வெறும் கற்பனைகள், பொய்த் தோற்றங்கள், வெறும் கனவுகள்.

ஆனால் இக்காலத்தில் கேள்விப்படும் சில அசாதாரண மனிதர்களைப்போல் நாம் அறிவுக்குப் புறம்பான வாதத்தில் இறங்காமல் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இறைவன் என்ற எண்ணம் வெறும் கற்பனை என்றும், பிரபஞ்சம் உண்மை என்றும் அவர்கள் கூறுகிறார்கள். இந்த இரண்டு கருத்துக்களும் ஒரே தர்க்கத்திற்குக் கட்டுப்பட்டவைதாம். ஒன்று உண்மை யானால் மற்றொன்றும் உண்மை. ஒன்று கற்பனையானால் மற்றொன்றும் கற்பனை. இந்த உலகம், மறு உலகம் இரண்டும் இல்லை என்பவனே உண்மையான நாத்திகனாக இருக்க முடியும். இரண்டிற்கும் வாதம் ஒன்றுதான்! இறைவன்முதல் மிகத் தாழ்ந்த பிராணிவரை, புல்லிலிருந்து பிரம்மாவரை நிற்கும் மாயையின் அளவு ஒன்றுதான். இவற்றிற்கெல்லாம் ஆதார மான விஷயம் ஒன்றுதான். ஒன்று நின்றால், மற்றதும் நிற்கும்; ஒன்று விழுந்தால், மற்றதும் விழும். இறைவன் என்ற கருத்தைத் தவறு என்று காண்பவன், தன் மனம், உடம்பு இவற்றையும் அதே கண்ணோட்டத்துடன் காண வேண்டும். இறைவன் மறைந்தால், உடம்பும் மனமும் மறைய வேண்டும். இரண்டும் மறையும் போது அங்கே உண்மையிலேயே பொருள் என்றென் றைக்குமாக நிற்கும். 'அங்கே பார்வை போக முடியாது. வாக்கும் மனமும் போக முடியாது. அதைப் பார்க்க முடியாது, அறியவும் முடியாது.'[1] பேச்சு, சிந்தனை, அறிவு, புத்தி இவற்றின் எல்லைக் குள் உள்ளவை எல்லாமே மாயைக்கு உட்பட்டவை, கட்டுக்கு உட்பட்டவை. இவற்றையெல்லாம் கடந்து நிற்பவரே மெய்ப் பொருள். எண்ணம், மனம், சொல் எதுவும் அங்கே எட்ட முடியாது.

கொள்கையைப் பொறுத்தவரை இதெல்லாம் சரிதான். ஆனால் செயல்முறை என்ற ஒன்று உள்ளதே! செயல்முறைப் பகுதிதானே உண்மையான உரைகல்! இந்த ஒருமையை அனுபவித்தறிய ஏதாவது சாதனைகள் தேவையா? கண்டிப் பாகத் தேவை. நீ பிரம்மம் ஆவது என்பதில்லை, ஏற்கனவே நீ பிரம்மமாகத்தான் இருக்கிறாய். நீ இறைவன் ஆகப்போகிறாய், குறைவற்றவன் ஆகப்போகிறாய் என்பதில்லை. நீ என்றுமே குறைவற்றவனாகத்தான் இருக்கிறாய். நீ குறைவுள்ளவன் என்று நினைப்பது மனமயக்கம். நீ திரு இன்னார், திருமதி இன்னார்

---

1. ந தத்ர சக்ஷுர்கச்சதி ந வாக் கச்சதி நோ மன: ।
—கேன உபநிடதம், 1. 3.

என்றெல்லாம் எண்ணச் செய்யும் மாயையை இன்னொரு மாயையால் அழிக்கலாம். அதுதான் சாதனை அல்லது பயிற்சி. நெருப்பு நெருப்பையே தின்றுவிடும். ஒரு மாயையை அழித்து வெல்ல இன்னொரு மாயையைப் பயன்படுத்த வேண்டும். ஒரு மேகம் வந்து பழைய மேகத்தைத் துரத்தும்; பிறகு இரண்டுமே மறைந்துவிடும்.

அப்படியானால் இந்தப் பயிற்சிகள் எவை? நாம் சுதந்திரம் பெறப் போவதில்லை, நாம் என்றுமே சுதந்திரமானவர்கள் என்ற உண்மையை நாம் ஒருபோதும் மறக்கக் கூடாது. நாம் பந்தப்பட்டவர்கள் என்ற எண்ணம் ஒவ்வொன்றும் வெறும் மாயை. நாம் இன்பமாக இருக்கிறோம், துன்பம் அனுபவிக்கிறோம் என்ற எண்ணங்களும் மிகப் பெரிய மனமயக்கங்கள். முக்தி பெறுவதற்காகப் பாடுபட வேண்டும், வழிபட வேண்டும். போராட வேண்டும்—இவையும் மனமயக்கங்கள். இந்த மாயை முந்திய மாயையைத் தாக்கித் துரத்திவிட்டு, முடிவில் இரண்டும் மறைந்துவிடும்.

முகமதியர்களும் சரி இந்துக்களும் சரி, நரியை அமங்கல மான விலங்காகக் கருதுகிறார்கள். நாயையும் அவ்வாறே பார்க்கிறார்கள். உணவை ஒரு நாய் முகர்ந்துவிட்டால்கூட அது மனிதன் உண்ணத் தகுதியற்றதாகி விடுகிறது, அதை எறியத்தான் வேண்டும். ஒரு முகமதியனின் வீட்டினுள் நரி ஒன்று நுழைந்து, சாப்பிடுவதற்காக மேஜையில் வைத்திருந்த உணவில் சிறு பகுதியை உண்டுவிட்டு ஓடிவிட்டது. அவன் ஏழை. மிகுந்த சிரமப்பட்டு அன்றுதான் தனக்காகச் சில சுவைமிக்க பதார்த்தங்களைச் சமைத்திருந்தான். ஆனால் அசுத்தமாகிவிட்டதால் அவனால் அதை உண்ண முடியாமல் போய்விட்டது. எனவே அவன் ஒரு முல்லாவிடம் போய், 'ஐயா, நரி ஒன்று வந்து என் உணவில் ஒரு சிறு பகுதியை உண்டு விட்டது. நான் என்ன செய்வது? விருந்து தயாரித்திருந்தேன், சாப்பிட எவ்வளவோ ஆசையாய் இருந்தேன். இந்த நரி வந்து என் ஆசையில் மண்ணைப் போட்டுவிட்டது!' என்று அழுதான்.

முல்லா யோசித்தார். அவருக்கு ஒரே ஒரு பரிகாரம் தான் தோன்றியது. 'இதற்குப் பரிகாரம் ஒன்றுதான்; ஒரு நாயைப் பிடித்துவந்து அதே உணவிலிருந்து சிறு பகுதியைத் தின்னச் செய்துவிடு. நாயும் நரியும் பிறவிப் பகைவர்கள். இப்போது நரி தின்ற மிச்சமும் உன் வயிற்றுக்குள் போகும், நாய் தின்ற மிச்சமும் உன் வயிற்றுக்குள் போகும். ஒன்றின்

அசுத்தத்தை மற்றொன்று மாற்றிவிடும்; உணவு தூய்மை ஆகிவிடும்' என்றார்.

நமது நிலைமையும் ஏறக்குறைய இதுதான். நாம் குறையுடையவர்கள் என்பது ஒரு மனமயக்கம். சாதனை செய்துதான் நாம் நிறைவு பெற வேண்டும் என்ற இன்னொரு மனமயக்கத்தை நாம் துணைக் கொள்கிறோம். ஒன்று, மற்றதை அழித்துவிட்டுத் தானும் அழிந்துவிடும். ஒரு முள்ளை எடுக்க இன்னொரு முள்ளைப் பயன்படுத்தி, முடிவில் இரண்டையும் எறிந்துவிடுவது போன்றது இது.

'நீயே அது' என்பதைக் கேட்டவுடனே அனுபூதி வாய்க்கின்ற நிலையிலும் சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள்! ஒரு கணத்தில் பிரபஞ்சம் மறைந்து, உண்மை நிலை அவர்களுக்கு ஒளிர்கிறது. பிறர் இந்தப் பந்தம் என்ற எண்ணத்திலிருந்து விடுதலைபெறக் கடுமையாகப் போராடத்தான் வேண்டும்.

முதற்கேள்வி இதுதான்: ஞானயோகியாகும் தகுதி உள்ளவர் யார்? அவர்களுக்கான தகுதிகள் இதோ இவை: முதலில் செயலின் பலன்களையும் சுகபோகங்களையும் இந்தப் பிறவி, மறுபிறவி இரண்டிலும் துறந்துவிட வேண்டும். நீதான் பிரபஞ்சத்தைப் படைத்தவன் என்றால், நீ வேண்டுவதெல்லாம் கிடைக்கும். ஏனெனில் உனக்கு வேண்டியதை நீயே படைத்துக்கொள்ள முடியுமே! காலமே இங்குள்ள பிரச்சினை. சிலருக்கு இது உடனே கைகூடுகிறது. வேறு சிலருக்குப் பழைய சம்ஸ்காரங்கள் குறுக்கே நின்று இது கைகூடாமல் தடுக்கின்றன. இந்தப் பிறவியாகட்டும், மறு பிறவியாகட்டும் நாம் சுகபோகங்களுக்கே முதலிடம் கொடுக்கிறோம். வாழ்வு என்பதையே மறுத்துவிடுங்கள். ஏனெனில் வாழ்வு என்பது சாவின் மறுபெயர். நீங்கள், வாழும் உயிர் என்பதையே மறுத்துவிடுங்கள். வாழ்வு யாருக்கு வேண்டும்? வாழ்வு என்பதும் மனமயக்கங்களுள் ஒன்று; சாவு இதன் மறுபக்கம். இன்பம் என்பது மனமயக்கத்தின் ஒருபகுதி; துன்பம் மறுபகுதி. இவ்வாறே அனைத்தும். வாழ்விற்கும் சாவிற்கும் உனக்கும் என்ன தொடர்பு? இவையெல்லாம் மனத்தின் படைப்புக்கள். இந்தப் பிறவி, மறுபிறவி இரண்டிலும் சுகபோக ஆசைகளை விடுவது என்பது இதுதான்.

அடுத்தது மனத்தை அடக்குதல், அது பல்வேறு அலைகளாக எழுந்து, பல்வேறு ஆசைகளைக் கொள்ளாதவண்ணம் அதனை அமைதிப்படுத்துதல்; மனத்தை நிலைநிறுத்தல்; வெளித் தூண்டுதல்கள் காரணமாகவோ உள் தூண்டுதல்

காரணமாகவோ அது அலைகளாகக் கிளர்ந்தெழாதிருக்கச் செய்தல்; சங்கல்ப சக்தியால் மனத்தை முற்றிலும் அடக்கி ஆள்தல். ஞான யோகி உடற்பயிற்சி, மனப் பயிற்சி போன்ற எதன் துணையையும் நாடுவதில்லை. தத்துவ ஆராய்ச்சி, அறிவு, சொந்த சங்கல்பம்—அவன் நம்பும் கருவிகள் இவையே.

அடுத்தபடியாக வருவது திதிட்சை, பொறுமை. என்ன துன்பம் வந்தாலும், முணுமுணுக்காமலும் குறை கூறாமலும் பொறுத்தல். ஒரு காயம் ஏற்பட்டால் அதை லட்சியம் செய்யாதீர்கள். புலி எதிரே வந்தாலும் அசையாமல் அதன் முன் நில்லுங்கள். ஏன் ஓட வேண்டும்? இந்தத் திதிட்சையைப் பழகி இதில் வெற்றி பெற்றவர்கள் உண்டு. கோடை வெயில் அனல் வீசும்பொழுது நடுப்பகலில் கங்கை மணலில் படுத்து உறங்குபவர்கள் இந்தியாவில் உண்டு. நல்ல குளிர்காலக் குளிரில் கங்கை நீரிலேயே நாள் முழுவதையும் மிதந்து கழிப்பவர்கள் உண்டு. அவர்கள் எதையும் பொருட்படுத்துவதில்லை. இமயமலையின் அந்தக் குளிரில் ஆடையே இல்லாமல் இருப்பவர்கள் உண்டு. சூடு என்ன? குளிர் என்ன? வருவது வரட்டும், போவது போகட்டும். அதனால் எனக்கென்ன? நான் உடம்பு அல்ல.

மேலை நாட்டினர் இதை நம்புவது கடினம். எனினும் இப்படி நடக்கிறது என்பதை நீங்கள் அறிந்துகொள்வது நல்லது. பீரங்கி வாயில் குதிக்கவும், உயிரைத் துரும்பாக மதித்துப் போர்க்களத்தில் இறங்கவும் உங்கள் மக்கள் மனப் பயற்சி பெற்றிருப்பதுபோல், எங்கள் மக்கள், தங்கள் தத்துவத்தைச் சிந்திக்கவும் அதைச் செயல்படுத்தவும் துணிவுடன் இருக்கிறார்கள். இதற்காகத் தங்கள் உயிரையே விடவும் அவர்கள் தயார். 'நான் உண்மை-அறிவு-இன்பம். நானே அவன்; நானே அவன்!'

நடைமுறை வாழ்க்கையில் ஆடம்பரம் வேண்டும் என்பது மேலை நாட்டினரின் லட்சியம். நடைமுறை வாழ்க்கையில் உயர்ந்த ஆன்மீகம் நிலவ வேண்டும், அந்த ஆன்மீகம் வெறும் வாய்ப்பேச்சு அல்ல, இந்த வாழ்க்கையிலேயே அதன் ஒவ்வோர் உபதேசத்தையும் நடைமுறைக்குக் கொண்டு வர முடியும் என்பதைக் காட்டுவதே எங்கள் லட்சியம். எதையும் பொறுத்தல், எதற்கும் முணுமுணுக்காமல் இருத்தல்—இதுதான் திதிட்சை. 'நான் ஆன்மா. பிரபஞ்சத்தைப்பற்றி எனக்கென்ன கவலை! இன்ப-துன்பம், நன்மை-தீமை, வெப்பம்-குளிர் எதுவும் எனக்கு ஒரு பொருட்டல்ல' என்று கூறுபவர்களை நான்

கண்டிருக்கிறேன். இதுதான் திதிட்சை, உடலின்பங்களைத் தேடி ஓடுவது திதிட்சை ஆகாது.

மதம் என்பது என்ன? 'எனக்கு இது வேண்டும், அது வேண்டும்' என்று வேண்டுவதுதானா? இது மதத்தைப் பற்றிய முட்டாள்தனமான கருத்து! இதை நம்புபவர்களுக்குக் கடவுள், ஆன்மா என்பவை பற்றிய உண்மையே தெரியாது. 'கழுகு உயர உயரப் பறக்கிறது. ஒரு புள்ளி அளவாகத் தோன்றும்வரை உயர்ந்து செல்கிறது. என்றாலும் அதன் பார்வை அழுகிய ஒரு துண்டு மாமிசம் எங்கே கிடைக்கும் என்பதில்தான்' என்று என் குருதேவர் கூறுவதுண்டு. மதம்பற்றி நீங்கள் கொண்டுள்ள கருத்துத்தான் என்ன? பலன்தான் என்ன? தெருக்களைச் சுத்தம் செய்வதும் நிறைய உணவும் உடையும் யாருக்கு வேண்டும்? கோடிக்கணக்கானோர் ஒவ்வொரு நிமிடமும் பிறந்துபிறந்து சாகிறார்கள். அதைப்பற்றி யாருக்குக் கவலை! இந்தச் சிறு உலகின் சுக துக்கங்களைப்பற்றி யாருக்குக் கவலை? துணிவிருந்தால் இவற்றை எல்லாம் கடந்து செல்லுங்கள்; நியதிகளுக்கு அப்பால் விரையுங்கள். பிரபஞ்சம் முழுவதும் மறையட்டும். தனியே நில்லுங்கள். 'நான் குறைவற்ற உண்மை, குறைவற்ற அறிவு, குறைவற்ற இன்பம்! நானே அவன்! நானே அவன்!'

## 6. உள்ளது ஒன்று பலவாகத் தோன்றுதல்

29 ஜனவரி 1896

பல்வேறு யோகங்களிலும் வைராக்கியம் அல்லது தியாகம் தான் திருப்புமுனையாகக் கூறப்படுகிறது. செயல் புரிபவன் செயலின் பலனைத் துறக்கிறான். பக்தன் எல்லையற்ற அன்புருவான இறைவனிடம் அன்பு செலுத்தி மற்ற சிற்றின்பங்களைத் துறக்கிறான். யோகி தன் அனுபவங்களைத் துறக்கிறான். அவனது தத்துவத்தின்படி இயற்கை முழுவதும் ஆன்மாவின் அனுபவத்திற்காகவே இருந்தாலும், முடிவில், தான் இயற்கையைச் சேர்ந்தவன் அல்ல என்பதை உணரவே அது பயன்படுகிறது; தான் இயற்கையிலிருந்து முற்றிலும் வேறுபட்டவன் என்பதையும் இறுதியில் அவனுக்கு உணர்த்துகிறது. அவன் தன் அறிவையும் புலன் பற்றிய அனுபவங்களையும் துறப்பதற்கு இந்த அறிவே காரணம். ஞானியோ எல்லாவற்றையும் விட்டுவிடுகிறான். அவனது தத்துவத்தின்படி இயற்கை என்ற ஒன்று அன்றும் இன்றும் என்றுமே இல்லை. இனி இருக்கப் போவதுமில்லை.

இந்த உயர்ந்த நிலைகளில் பலன் என்பதுபற்றிப் பேசவே முடியாது. பலன் என்ற பேச்சை அங்கே புகுத்துவதே தவறு. அப்படியே இந்தக் கேள்வி வந்தாலும், அதை நன்றாக ஆராய்ந்தால் நாம் காண்பது என்ன? இன்பம் பெறுதல் என்ற லட்சியமே. எது மனிதனுக்கு அதிக இன்பம் தருகிறதோ அதுவே அவனுக்கு மிகவும் பலன் தருவதாகும். உலக போகங்களுக்கு உதவாததும் மிகுந்த இன்பம் தராததுமான இந்த உயர்ந்த லட்சியங்களைவிட, அவனைப் பொறுத்தவரை, இன்பம் தருவது எதுவோ அதுவே பயனுடையது. அனைத்து விஞ்ஞானத் துறைகளின் நோக்கமும் இதுவே: சமுதாயத்திற்கு இன்பம் தேடித் தருவது. அதிக இன்பம் தருவதை எடுத்துக்கொண்டு, குறைந்த இன்பம் தருவதை மனிதன் விட்டுவிடுகிறான்.

இன்பம் என்பது உடலிலோ, மனத்திலோ, ஆன்மாவிலோ இருக்கலாம் என்பதை நாம் கண்டோம். மிருகங்களுக்கும், மிருகநிலையில் உள்ள மக்களுக்கும் இன்பம் உடலளவில்தான். பசியால் வாடிய ஒரு நாய் அல்லது ஓநாயைப்போல் சுவைத்துச் சாப்பிட எந்த மனிதனாலும் முடியாது. நாய்க்கும் ஓநாய்க்கும் இன்பம் முற்றிலும் உடலளவிலேயே. மனிதர்களிடம் சற்று உயர்நிலை இன்பத்தைக் காண்கிறோம். எண்ண நிலையில் இன்பம் பெற அவனால் முடியும். ஞானியிடம் இன்பத்தின் மிக உயர்ந்த நிலையாகிய ஆன்ம இன்பம் உள்ளது. எனவே தத்துவவாதிக்கு ஆன்மாவை அறிவதே மிகவும் பலன் தரும் முயற்சி. ஏனெனில் இதுவே ஒப்புயர்வற்ற இன்பத்தை அவனுக்கு அளிக்கிறது. புலன்களால் கிடைக்கும் இன்பமும் சரி, உடலின் பமும் சரி, அவனுக்கு உயர்பலனைத் தருபவையல்ல. ஏனெனில் அறிவில் காணும் இன்பத்தை அவன் இவற்றில் காண்பதில்லை. மேலும், அறிவு அல்லவா ஒரே லட்சியம்! நாம் அறிந்தவற்றுள் மிக உயர்ந்த இன்பம் தருவதும் அறிவே அல்லவா!

அறியாமையில் உழன்றுகொண்டு பாடுபடுபவர்களெல் லாம் தேவர்களின் உழவு மாடுகளே. தேவர் என்ற சொல்லை இங்கே அறிஞர் என்ற பொருளில் பயன்படுத்துகிறோம். எந்திரங்களைப்போல் உழைத்துத் தேய்பவர்கள் யாரும் உண்மையில் எந்த இன்பத்தையும் அனுபவிப்பதில்லை; இவர் களின் உழைப்பால் இன்பம் பெறுபவன் அறிஞனே. செல்வந்தன் ஒருவன் லட்சம் ரூபாய் கொடுத்து ஓர் ஓவியத்தை வாங்குவான். ஆனால் கலையை அறிந்தவனே அதனை ரசித்து மகிழ முடியும். அந்தச் செல்வந்தனுக்குக் கலைச்சுவை இல்லை என்றால், அந்த ஓவியத்தால் அவனுக்கு எந்தப் பயனும் இல்லை. அவன் படத்திற்குச் சொந்தக்காரன், அவ்வளவுதான். உலகம் முழுவதில் பார்த்தாலும் இன்பம் அனுபவிப்பவன் அறிஞனே. முட்டாள் எந்த இன்பத்தையும் அனுபவிப்பதில்லை. தன்னை அறியாமலே அவன் பிறர் இன்பத்திற்காக உழைக்கிறான்.

இதுவரையிலும் அத்வைதிகளின் கொள்கை என்ன என் பதைப் பார்த்தோம். அதாவது, இருப்பது ஆன்மா ஒன்றுதான்; இரண்டு இருக்க முடியாது என்பதைப் பார்த்தோம். இந்தப் பிரபஞ்சம் முழுவதிலும் உள்ள பொருள் ஒன்றுதான் என்பதைக் கண்டோம். அந்த ஒன்றுதான் புலன்களின்மூலம் பார்க்கப் படும்போது உலகமாகக் காட்சி அளிக்கிறது; இதுவே பௌதீக உலகம். இதையே மனத்தின்மூலம் பார்க்கும்போது

கருத்துலகமாகத் தெரிகிறது. உள்ளதை உள்ளபடியே காணும்போது அது எல்லையற்ற ஒன்றேயான உண்மைப் பொருளாகத் தெரிகிறது. மனிதனுக்குள் ஆன்மா உள்ளது என்று எண்ணிவிடக் கூடாது. விஷயத்தை விளக்குவதற்காக முதலில் நான் இப்படிக் கூற வேண்டியிருந்தது. ஆனால் உண்மையில் இருப்பது ஒன்றுதான். அதுவே ஆன்மா. இதனை நீங்கள் மனத்தில்கொள்ள வேண்டியது இன்றியமையாதது. அந்த ஒரே ஆன்மா புலன்களின்மூலம் புலன்கள் தோற்றுவிக்கின்ற பிரதிபிம்பங்களின் வழியாகப் பார்க்கப்படும்போது அது உடல் என்ற பெயரைப் பெறுகிறது. எண்ணத்தின்மூலம் பார்க்கப்படும்போது அதுவே மனம் என்ற பெயரைப் பெறுகிறது. அதுவே நேரில் பார்க்கப்படும்போது உள்ளதான ஒரே ஆன்மா ஆகிறது. எனவே உடல், மனம், ஆன்மா என்ற மூன்று இல்லை. எனினும் உண்மையை விளக்குவதற்காக இப்படிக் கூற வேண்டியிருந்தது, அவ்வளவுதான்.

உண்மையில் இருப்பது ஒரே ஆன்மாதான். அதுவே காட்சி வேறுபாடு காரணமாகச் சிலவேளைகளில் உடலாகவும், சில வேளைகளில் மனமாகவும், சிலவேளைகளில் ஆன்மாவாகவும் அழைக்கப்படுகிறது. இருப்பது ஒன்றுதான். அஞ்ஞானி அதை உலகம் என்கிறான். அவனது அறிவு உயரும்போது அவன் அந்தப் பொருளையே எண்ணவுலகம் என்கிறான். ஞானம் வரும்போது எல்லா மாயைகளும் மறைகின்றன; எல்லாம் ஆன்மாவைத் தவிர வேறெதுவும் இல்லை என்பதை அவன் காண்கிறான். அந்த ஒரே ஆன்மாதான் நான். இதுதான் அறுதி முடிவு.

பிரபஞ்சத்தில் மூன்றும் இல்லை, இரண்டும் இல்லை. இருப்பது ஒன்றே. மனமயக்கத்தால் கயிறு பாம்பாகத் தோன்றுவதுபோல் இந்த ஒன்றே மாயையால் பலவாகத் தோன்றுகிறது; பாம்பாகத் தோன்றுவது கயிறேதான். பாம்பு ஒன்று, கயிறு ஒன்று என்ற இரண்டு தனிப் பொருட்கள் இல்லை. யாரும் இந்த இரண்டையும் ஒரேவேளையில் காண்பதில்லை. துவைதம், அத்வைதம் என்பவை சிறந்த தத்துவச் சொற்கள். ஆனால் உண்மைக் காட்சியில் உண்மை, உண்மையற்றது இரண்டும் ஒரேவேளையில் தோன்றுவதில்லை. நாம் எல்லோரும் பிறவியிலேயே அத்வைதிகள். இதை நம்மால் தவிர்க்க முடியாது. எப்போதும் நாம் ஒன்றையே காண்கிறோம். கயிற்றைக் காணும்போது பாம்பு தெரிவதில்லை. அது மறைந்து விடுகிறது. பாம்பு

தெரியும்போது கயிறு தெரியாது. மாயையைக் காணும்போது உண்மை தெரிவதில்லை. தெருவில் நெடுந்தூரத்தில் உங்கள் நெருங்கிய நண்பன் ஒருவன் வருவதாக வைத்துக் கொள்வோம். உங்களுக்கும் அவனுக்கும் இடையே உள்ள இருள், மூடுபனி, புகை இவற்றின் காரணமாக நீங்கள் அவனை வேறு யாரோ என்று நினைக்கிறீர்கள். உங்கள் நண்பனை வேறு ஒருவனாக நீங்கள் நினைக்கும்போது உங்கள் நண்பனை நீங்கள் காண்பதில்லை; அவன் மறைந்துவிடுகிறான். யாரோ ஒருவனைத்தான் நீங்கள் காண்கிறீர்கள். அ உங்கள் நண்பன் என்று கொள்வோம். அ என்பவனை நீங்கள் ஆ என்பவனாகக் காணும்போது அ என்பவன் அங்கே இல்லவே இல்லை. இரண்டு நிலையிலும் நீங்கள் பார்ப்பது ஒருவனைத்தான். நண்பனைக் கண்டால், மற்றவன் இல்லை; மற்றவனைக் கண்டால், நண்பன் இல்லை. நாம் நம்மை உடம்பாகக் காணும்போது நாம் உடம்புதான்; வேறொன்றும் அல்ல. அப்படித்தான் மக்களுள் பெரும்பாலானோர் காணவும் செய்கின்றனர். ஆன்மா என்றும் மனம் என்றும் ஏதேதோ வாய்ப்பேச்சுப் பேசலாம். ஆனால் அவர்கள் காண்பது தூல வடிவையே; தொடு உணர்வு, பார்வை, சுவை என்னும் இவற்றையே.

சிலர் சில குறிப்பிட்ட மன நிலைகளில் தங்களை எண்ணமாகக் காண்கின்றனர். சர் ஹம்ப்ரி டேவி என்ற விஞ்ஞானியைப்பற்றிக் கூறப்படுகின்ற நிகழ்ச்சி உங்களுக்குத் தெரிந்திருக்கும். அவர் சிரிப்பு வாயுவை (Laughing Gas) வைத்துத் தமது வகுப்பில் சோதனை நடத்திக் கொண்டிருந்தார். திடீரென்று ஒரு சோதனைக் குழாய் உடைந்து வாயு வெளிப்பட்டுவிட்டது. அவர் அதை உள்ளிழுக்க நேர்ந்தது. உடனே சில கணங்களுக்குச் சிலைபோல் அசைவற்று நின்றுவிட்டார். சாதாரண நிலைக்கு வந்தபின் அவர் மாணவர்களிடம், தாம் அந்த நிலையில் இருந்தபோது பிரபஞ்சம் முழுவதுமே உண்மையில் எண்ணங்களால் ஆக்கப்பட்டதாகத் தமக்குத் தோன்றியதாகக் கூறினார். சில கணங்கள் அவருக்கு உடல் நினைவே இல்லாதபடி அந்த வாயு செய்துவிட்டது. அதுவரை உடலாகக் கண்டதையே அப்போது எண்ணங்களாக அவர் கண்டார். இந்த உணர்வு இன்னும் உயர்ந்தால், இந்தச் சிறிய உணர்வே முற்றிலுமாக மறைந்து பேருணர்வு தோன்றினால் எல்லாவற்றிற்கும் அடிப்படையான உண்மை ஒளிரும்; அதை நாம் உண்மை-அறிவு-இன்பமாகக் காண்போம். 'ஒன்றான ஆன்மா, அறிவே உருவான ஒன்று;

ஆனந்தமே உருவமான ஒன்று; ஒப்பற்றது; எல்லையற்றது; என்றும் சுதந்திரமானது; என்றும் பந்தப்படாதது; வானம்போல் எல்லையற்றது; வானம்போல் மாற்றம் இல்லாதது; தியான காலத்தில் இந்தத் தனிப்பொருள் உங்கள் இதயத்தில் சுடர் விடும்.'[1]

பல்வேறு சொர்க்கங்களையும் நரகங்களையும் இது போன்ற வேறு செய்திகளையும் எல்லா மதங்களிலும் காண்கிறோமே! இதற்கு அத்வைதிகளின் விளக்கம் என்ன? மனிதன் இறந்தபின் சொர்க்கத்திற்கோ நரகத்திற்கோ போவதாகவும், இங்கோ அங்கோ செல்வதாகவும், அல்லது வேறோர் உடலுடன் சொர்க்கத்திலோ வேறு உலகத்திலோ மீண்டும் பிறப்பதாகவும் சொல்லப்படுகிறதே! இவையெல்லாம் வெறும் மனமயக்கங்கள். உண்மையைச் சொல்வதானால் யாரும் பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை. சொர்க்கம், நரகம், இந்த உலகம் எதுவுமே இல்லை. இவை உண்மையில் என்றும் இருந்ததே இல்லை. ஒரு சிறுவனிடம் பேய்பிசாசுக் கதைகளைச் சொல்லி, மாலையில் அவனை வெளியில் அனுப்புங்கள். அவன் அங்கே தெரியும் பட்ட மரம் ஒன்றின் அடிக்கட்டையைக்கூட, கைகளை நீட்டிக்கொண்டு தன்னைப் பிடிக்க வரும் பிசாசாகவே காண்பான். காதலியைச் சந்திப்பதற்காக ஒருவன் வருகிறான். அவனுக்கு அந்த அடிமரம் தன் காதலியாகத் தெரிகிறது. போலீஸ் கண்ணுக்கு அது திருடனாகத் தெரிகிறது. திருடனின் கண்ணுக்கு போலீஸாகக் காட்சி அளிக்கிறது. ஒரே மரம்தான் இப்படிப் பலருக்குப் பலவகையாகத் தோன்றுகிறது. மரக் கட்டைதான் உண்மை, தோற்றங்கள் அனைத்தும் பார்ப்பவர் மனத்தில் இருந்தவை.

அதுபோலவே உள்ளது ஆன்மா ஒன்றே. அது வருவதும் இல்லை; போவதும் இல்லை. மனிதன் அறியாமையில் ஆழ்ந்திருக்கும்போது சொர்க்கத்திற்கும் அதுபோன்ற உலகங்களுக்கும் போக விரும்புகிறான். தன் வாழ்க்கை முழுவதும் அவன் இதைப்பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறான். உடல் போனவுடன் அவனது உலகக் கனவு மறைகிறது; அதற்குப் பதிலாகத்

---

1. கிமபி ஸததபோதம் கேவலானந்தரூபம்
 நிருபமமதிவேலம் நித்யமுக்தம் நிரீஹம் ।
 நிரவதிககனாபம் நிஷ்கலம் நிர்விகல்பம்
 ஹ்ருதிகலயதி வித்வான் ப்ரஹ்மபூர்ணம் ஸமாதௌ ॥
 —விவேக சூடாமணி, 410.

தேவர்களும் தேவதூதர்களும் நிறைந்த சொர்க்கமாக இந்த உலகமே அவனுக்குத் தோன்றுகிறது. ஒருவன் தன் மூதாதையர் களைச் சந்திக்க வேண்டும் என்ற எண்ணத்தைத் தன் வாழ்க்கை முழுவதும் வளர்த்து வந்தானானால், ஆதாமிலிருந்து எல்லோ ரையுமே அவன் சந்திப்பான்; அவர்களை அவனது மனமே படைத்துவிடுகிறது! ஒருவன் மேலும் அறிவற்றவனாக இருந்து பாவம் என்றும், நரகம் என்றும், தண்டனை என்றும் வாழ்க்கை முழுவதும் மதவெறியர்களால் அச்சுறுத்தப்பட்டு, அந்தப் பயம் நிறைந்த மனம் உடையவனாக இறந்தால் அவனுக்கு இந்த உலகமே நரகம், தண்டனை என்ற கனவாக மாறுகிறது. பிறப்பு, இறப்பு என்பவை எல்லாம் காட்சிநிலை வேறுபாடுகளே.

நீங்களும் நகர்வதில்லை; உங்கள் கற்பனையை எதன்மீது ஆதாரமாக வைக்கிறீர்களோ, அந்த ஆதாரமும் நகர்வதில்லை. நீங்கள் ஒரு மாறுதலுமற்றவர்கள், நிலையானவர்கள். நீங்கள் வரவோ போகவோ முடியுமா? முடியவே முடியாது. நீங்கள் எங்கும் நிறைந்தவர்கள். வானம் நகர்வதில்லை; ஆனால் மேகங்கள் அதன் மேற்பரப்பில் நகர்கின்றன. வானம்தான் நகர் கிறது என்று நாம் ஒருவேளை எண்ணலாம். ரயிலில் போகும் போது வெளியில் எல்லாம் நகர்வதாகத் தெரிகிறது. ஆனால் நகர்வது ரயில், வெளி நிலம் அல்ல. நாம் இருந்த இடத் திலேயே இருக்கிறோம், கனவுகளும் மேகங்களுமே இயங்கு கின்றன.

ஒரு தொடர்பும் இல்லாத கனவுகள் ஒன்றை மற்றொன்று தொடர்ந்து வந்த வண்ணமே இருக்கும். இந்த உலகத்தில் நியதி, தொடர்பு என்றெல்லாம் எதுவுமே இல்லை. ஆனால் ஏதோ பெரிய தொடர்பு இருப்பதாக நாம் எண்ணிக் கொள் கிறோம். 'விந்தை உலகில் ஆலிஸ்' (Alice in Wonderland) என்ற கதையை நீங்கள் படித்திருக்கலாம். இந்த நூற்றாண்டில் எழுதப் பட்ட சிறுவர் கதைகளுள் மிகவும் சுவையானது அது. நான் படித்து மிகவும் ரசித்தேன். அதுபோன்ற சிறுவர் கதை ஒன்று எழுத வேண்டும் என்று எனக்கும் பேராவல் உள்ளது. எனக்கு அதில் மிகவும் பிடித்தது எது தெரியுமா? முன்னுக்குப்பின் முர ணாக உள்ளது என்று நீங்கள் கருதுகிறீர்களே, அதுதான். ஒன் றிற்கும் மற்றொன்றிற்கும் அதில் எந்தத் தொடர்பையும் காண முடியாது. ஒரு நிகழ்ச்சி வரும், ஒரு சம்பந்தமும் இல்லாத அடுத்த சம்பவத்தில் அது முடியும். சிறுவர்களாக இருந்தபோது அதில் பெரிய தொடர்பு இருப்பதுபோல் நமக்குத் தோன்றியது.

தன் குழந்தைப் பருவத்தில் தொடர்புள்ளவையாக இருந்த கருத்துக்களை எல்லாம் மீண்டும் கொண்டுவந்து, தொகுத்து இந்தக் கதையை எழுதியுள்ளார் அந்த ஆசிரியர்.

பெரியவர்கள் தங்கள் கருத்துக்களைப் புகுத்திக் குழந்தைக் கதைகள் என்று எழுதுகிறார்களே, அவை பொருளற்றவை. நாம் யார்? வளர்ந்த குழந்தைகள், அவ்வளவுதான். இந்த உலகமும் 'விந்தை உலகில் ஆலிஸ்' கதையில் வருவதுபோன்று ஒன்றுக்கொன்று சிறிதும் தொடர்பற்றது. சில விஷயங்கள் ஒரேமாதிரியாகப் பலமுறை ஒன்றையொன்று தொடர்ந்து நடப்பதைக் காணும்போது, அதைக் காரணகாரியம் என்கிறோம்; அடுத்த முறையும் இந்த முறையிலேயே ஒன்றை ஒன்று தொடரும் என்று எதிர்பார்க்கிறோம். இந்தக் கனவு மாறி வேறொரு கனவு வரும்போது, அது முற்றிலும் தொடர்புள்ளது போல்தான் தோன்றுகிறது.

நாம் கனவு காணும்போது அந்த நிகழ்ச்சிகள் நன்றாகத் தொடர்புடையவை போல்தான் தோன்றுகின்றன. அந்தச் செயல்கள் நடக்க முடியாதவை என்பது கனவு காணும்போது தோன்றுவதில்லை. விழித்த பிறகே அவற்றின் தொடர்பின்மை நமக்குப் புரிகிறது. அதுபோலவே, உலகம் என்ற இந்தக் கனவிலிருந்து விழித்து அதை உண்மையுடன் ஒப்பிடும்போது, அது தொடர்பற்றதாக, முன்னுக்குப்பின் முரணானதாக இருப்பது நமக்குப் புரியும். தொடர்பற்ற ஒரு காட்சி நம்முன் ஓடுகிறது; அது எங்கிருந்து எங்கே ஓடுகிறது என்பது நமக்குத் தெரியாது. ஆனால் அதற்கு முடிவு உண்டு என்பது மட்டும் நமக்குத் தெரியும். இதுதான் மாயை; வான்வெளியில் ஓடும் மேகக்கூட்டங்களைப் போல் தோன்றி மறைபவை. அவை மாறுபவற்றையே குறிக்கின்றன. மாறாத அந்தக் கதிரவன் நீங்களே. மாறாத அதனை வெளியில் நின்று பார்க்கும்போது கடவுள் என்கிறீர்கள். உங்களுள்ளிருந்து பார்க்கும்போது அது நீங்களே. இரண்டும் ஒன்றே. உங்களிலிருந்து வேறான இறைவன் இல்லை. உங்களைவிட உயர்ந்த, உங்களைவிட உண்மையான இறைவனும் இல்லை. உங்கள் முன் தேவதைகளும் சாதாரண மானவர்களே, இறைவனைப்பற்றிய எல்லா கருத்துக்களும் சரி, பரலோகத்தில் உள்ள தந்தை என்பதும் சரி, எல்லாம் உங்கள் பிரதிபிம்பங்களே. இறைவனே உங்கள் பிரதிபிம்பம் தான். 'இறைவன் மனிதனைத் தன் பிரதிபிம்பமாகப் படைத்தான்' என்பது சரியல்ல; மனிதனே இறைவனைத் தன்

பிரதிபிம்பமாகப் படைத்தான். பிரபஞ்சம் எங்குமே தெய்வங்களை நம் பிரதிபிம்பமாக நாமே உருவாக்குகிறோம். நாமே ஒரு தெய்வத்தைப் படைத்து, அவரது காலில் வீழ்ந்து வழிபடுகிறோம். இந்தக் கனவு வரும்போது அதனை விரும்புகிறோம்.

நாம் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டியதும் இந்தச் சொற்பொழிவின் சாரமும் இதுதான்: இருப்பது ஒன்றே. இந்த ஒன்றே பல்வேறு காட்சிகள்மூலம் உலகமாகவோ, சொர்க்கம், நரகம், தேவதைகள், பேய்கள், மனிதர்கள், அரக்கர்கள், பிர பஞ்சம் என்று வெவ்வேறாகத் தோன்றுகிறது. ஆனால் 'யார் இந்த மரணக் கடலுக்கிடையில் ஒன்றேயான அதனைக் காண் கிறானோ, மிதந்து செல்லும் இந்தப் பிரபஞ்சத்தில் நிலையான ஒன்றைக் காண்கிறானோ, என்றும் மாறாத அந்த ஒன்றை அனுபூதியில் அறிகிறானோ அவனுக்கு அழிவில்லாத அமைதி கிடைக்கும். வேறு யாருக்கும் இந்த அமைதி கிடைக்காது; கிடைக்கவே கிடைக்காது!'[1]

இருப்பதாகிய இந்த ஒன்றை அறிய வேண்டும். எப்படி என்பதுதான் அடுத்தக் கேள்வி. அதை அறிவது எப்படி? பிரபஞ்சமாகிய இந்தக் கனவிலிருந்து விடுபடுவது எப்படி? நாம் அற்ப மனிதர்கள். நாம் ஓர் ஆண், ஒரு பெண் என்னும் இந்தக் கனவிலிருந்து நாம் விழிப்பது எப்படி? இந்தப் பிரபஞ்சத்தின் அழியாத ஜீவன் நாம். என்றாலும் இந்தச் சிறு ஜீவன்களாக, ஆண்களாக, பெண்களாக நம்மைக் கற்பனை செய்துகொண்டு, ஒருவனது இன்சொல்லுக்கு ஏங்குகிறோம்; மற்றவனது கோபச் சொல்லுக்கு அஞ்சுகிறோம். எத்தனை பயங்கரமான சார்பு! எவ்வளவு பயங்கரமான அடிமைத்தனம்! இந்தப் பிரபஞ்சம் யாருடைய பிரதிபிம்பமோ, இந்தப் பிரபஞ்சத்தின் சூரியனும் சந்திரனும் விண்மீன்களும் யாருடைய அம்சங்களோ, அந்த நான், எல்லா இன்பதுன்பங்களுக்கும் அப்பாற்பட்ட நான், பயங்கர அடிமையாகப் பிறர் காலடியில் நசுங்கிக் கிடக்கிறேன். என் உடம்பை யாராவது கிள்ளினால் எனக்கு வலிக்கிறது. யாராவது என்னிடம் அன்புடன் பேசினால் நான் மகிழ்கிறேன். என் நிலைமையைப் பாருங்கள்—உடலுக்கு

---

1. நித்யோऽநித்யானாம் சேதனஸ்சேதனானாம்
ஏகோ பஹூனாம் யோ விததாதி காமான் |
தமாத்மஸ்தம்யேऽனுபச்யந்தி தீரா:
தேஷாம் சாந்தி சாச்வதீ நைதரேஷாம் || —கடோபநிடதம், 2. 2. 13.

அடிமை, மனத்திற்கு அடிமை, உலகிற்கு அடிமை, அன்பான மொழிக்கு அடிமை, கோபச் சொல்லுக்கு அடிமை, ஆசைக்கு அடிமை, இன்பத்திற்கு அடிமை, வாழ்விற்கு அடிமை, சாவுக்கு அடிமை, எல்லாவற்றிற்கும் அடிமை! இந்த அடிமைத் தளையை உடைத்தெறிய வேண்டும். எப்படி? 'முதலில் இந்த ஆன்மாவைப் பற்றிக் கேட்க வேண்டும்; பிறகு சிந்திக்க வேண்டும்; பிறகு தியானிக்க வேண்டும்.' அத்வைத ஞானியின் வழி இது. உண்மை எது என்பதை முதலில் கேட்க வேண்டும். பிறகு அதைப்பற்றிச் சிந்தித்து, பிறகு அதையே தியானிக்க வேண்டும்.

'நான் பிரம்மம்' என்றே எப்போதும் நினையுங்கள். மற்ற எண்ணமெல்லாம் பலவீனத்தைத் தரும் என்று கருதி விலக்கி விடுங்கள். நீங்கள் ஓர் ஆண் ஒரு பெண் என்ற நினைவைத்தரும் எண்ணங்களை எல்லாம் ஒழித்துவிடுங்கள். உடல் போகட்டும், மனம் போகட்டும், தேவதைகள் போகட்டும், பேய்பிசாசுகள் எல்லாம் போய்விடட்டும். உள்ளதாகிய ஒன்றைத் தவிர எல்லாம் போகட்டும். 'எங்கே ஒருவன் மற்றவன் பேசுவதைக் கேட்கிறானோ, மற்றவனைப் பார்க்கிறானோ, அது சிறியது. எங்கே ஒருவன் மற்றவன் பேசுவதைக் கேட்கவில்லையோ மற்றவனைக் காணவில்லையோ அது எல்லையற்றது.' காண்பவனும் காட்சிப் பொருளும் ஒன்றாகும் நிலையே மிக உயர்ந்த நிலை. நானே பேசுபவனும் கேட்பவனாகவும், நானே ஆசிரியனும் மாணவனாகவும், நானே ஆக்குபவனும் ஆகும் பொருளாகவும் ஆகின்ற நிலையில்தான் பயம் நீங்குகிறது. நம்மைப் பயமுறுத்த அப்போது யாரும் இல்லை. இருப்பவன் நான் மட்டுமே. என்னை எது பயமுறுத்த முடியும்? இந்த உண்மைகளைத் தினமும் கேட்க வேண்டும். மற்ற எண்ணங்கள் அனைத்தையும் விலக்குங்கள். மற்ற எல்லாவற்றையும் தூக்கி எறியுங்கள். இந்த உண்மையை மீண்டும்மீண்டும் சிந்தியுங்கள். இந்த உண்மையைக் கேட்டுக்கேட்டு உள்ளம் நிரம்ப வேண்டும். ஒவ்வொரு நரம்பும், தசையும், ரத்தத் துளியும் 'நானே அவன், நானே அவன்' என்று துடிக்க வேண்டும். மரணத்தின் வாயில் இருக்கும்போதுகூட, 'நானே அவன்' என்று சொல்லுங்கள்.

இந்தியாவில் ஒரு துறவி இருந்தார். அவர் எப்போதும், 'சிவோஹம்-நானே அழியாத ஆனந்தப் பொருள்' என்று சொல்லிக்கொண்டே இருப்பார். ஒருநாள் புலி ஒன்று அவர்மீது பாய்ந்து அவரை இழுத்துச் சென்று கொன்றுவிட்டது. ஆனால் உடம்பில் உயிர் இருக்கும் வரையிலும் 'சிவோஹம், சிவோஹம்'

என்ற ஒலி அவர் வாயிலிருந்து வந்தவண்ணம் இருந்தது. மரணத்தின் வாயிலானாலும், பேராபத்தை எதிர்கொள்ள நேரும்போதும், கடுமையான போர்முனையிலும், கடலின் அடியிலும் மிக உயர்ந்த மலைச் சிகரத்திலும் அடர்ந்த காட்டின் நடுவிலும், 'நானே அவன், நானே அவன்' என்று முழங்குங்கள். இரவிலும் சரி, பகலிலும் சரி, 'நானே அவன்' என்று கூறுங்கள்.

இதுதான் பேராற்றல், இதுதான் மதம். 'பலவீனர்களால் ஒருபோதும் ஆன்மாவை அடைய முடியாது.'[1] 'இறைவா, நான் ஓர் இழிந்த பாவி!' என்று சொல்லவே சொல்லாதீர்கள். உங்களுக்கு யார் உதவுவார்கள்? நீங்கள் அல்லவா பிரபஞ்சத்திற்கே உதவுபவர்கள். பிரபஞ்சத்திலுள்ள எது உங்களுக்கு உதவ முடியும்? உங்களுக்கு உதவக்கூடிய மனிதனோ, தேவனோ, அசுரனோ எங்கிருக்கிறான்? உங்களை மீறும் சக்தி எங்கிருக்கிறது? நீங்களே பிரபஞ்சத்தின் தலைவர்கள்! நீங்கள் யாரிடம் உதவியை நாட முடியும்? உங்களிடமிருந்து அல்லாமல் வெளியில் எங்கிருந்தும் உதவி வந்ததில்லை. உங்கள் பிரார்த்தனைகள் நிறைவேறியபோது, வெளியில் உள்ள ஏதோ ஒரு சக்தி அவற்றை நிறைவேற்றியதென்று உங்கள் அறியாமை காரணமாக எண்ணினீர்கள். ஆனால் உங்களுக்குத் தெரியாமல் அவற்றை எல்லாம் நிறைவேற்றியவர்கள் நீங்களே. உங்களிடமிருந்தே உங்களுக்கு உதவி வந்தது. ஆனால் வேறு யாரோ உதவுவதாக நன்றியோடு கற்பனை செய்துகொண்டீர்கள். வெளியே இருந்து உங்களுக்கு உதவுபவர் யாருமே இல்லை. பிரபஞ்சத்தைப் படைப்பவர் நீங்களே. பட்டுப்பூச்சியைப்போல் நீங்களே உங்களைச் சுற்றி ஒரு கூட்டுச் சிறையை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களை யார் காப்பார்கள்? கூட்டை உடைத்துக்கொண்டு, அழகிய பட்டுப்பூச்சிபோல் சுதந்திரராக வெளியே வாருங்கள். அப்போதுதான் உண்மையைக் காண்பீர்கள். 'நானே அவன்' என்று எப்போதும் உங்களுக்குச் சொல்லுங்கள். இந்த வார்த்தைகள் உங்கள் நெஞ்சில் உள்ள குப்பைகளை எல்லாம் எரித்துவிடும்; உங்களுக்குள் ஏற்கனவே உள்ள பேராற்றலை இவை எழுப்பிவிடும்; உறங்கிக் கிடக்கும் ஆற்றலை எழுப்பிச் செயல்படச் செய்யும். எப்போதும் உண்மையைப்பற்றிக் கேட்பதாலேயே இது கைகூடும்; வேறு வழி இல்லை. பலவீனம் என்ற எண்ணமிருக்கின்ற இடத்தை நெருங்கவே செய்யாதீர்கள்.

---

1. நாயமாத்மா பலஹீனேன லப்ய: । —முண்டக உபநிடதம், 3. 2. 4.

ஞானியாக வேண்டுமானால் எல்லா பலவீனங்களையும் விட்டுவிடுங்கள்.

சாதனையைத் தொடங்குமுன் உங்கள் மனத்தில் எந்தவித ஐயமும் இல்லாமல் பார்த்துக் கொள்ளுங்கள். போராடுங்கள், விவாதம் செய்யுங்கள்,. ஆராய்ச்சி செய்யுங்கள். இதுதான் உண்மை, இது ஒன்றுதான் உண்மை, வேறு இல்லை என்ற உறுதி ஏற்பட்டுவிட்டால், பிறகு தர்க்கவாதங்களுக்கு முழுக்குப் போட்டுவிடுங்கள். வாயை இறுக மூடிக் கொள்ளுங்கள். எந்த வாதங்களையும் கேட்காதீர்கள். நீங்களும் வாதத்தில் இறங்காதீர்கள். உங்களுக்குத் திருப்தி ஏற்படும் வகையில் இந்தப் பிரச்சினைக்கு முடிவு கண்டாகிவிட்டது. இன்னும் என்ன வேண்டும்? இனி இந்த உண்மையை அனுபவமாக்க வேண்டும். எனவே மதிப்புள்ள காலத்தை வீண் வாதங்களில் ஏன் செலவிட வேண்டும்? இந்த உண்மையை இப்போது தியானிக்க வேண்டும். வலிமை தரும் கருத்துக்களை எல்லாம் ஏற்றுக்கொள்ளுங்கள், பலவீனப்படுத்தும் கருத்துக்களை உடனே விலக்கிவிடுங்கள்.

பக்தன் நாமரூபங்கள் மற்றும் அது போன்றவற்றால் இறைவனைத் தியானிக்கிறான். இதுதான் இயற்கை வழி; ஆனால் மெதுவான வழி. யோகி, தன் உடம்பில் உள்ள சில மையங்களைத் தியானித்து, தன் மன ஆற்றலை வளர்க்கிறான். ஞானியோ, உடலும் இல்லை, மனமும் இல்லை என்கிறான். உடல், மனம் என்ற கருத்துக்கள் ஒழிய வேண்டும்; விரட்டியடிக்கப்பட வேண்டும். அவற்றை எண்ணுவது முழு மூடத்தனம். ஒரு நோயைப் போக்க இன்னொரு நோயை ஏற்றுக்கொள்வது போன்றதே இது. ஞானியின் தியானம் மிகவும் கடினமானது. இது எதிர்மறைத் தியானம், அவன் எல்லாவற்றையும் மறுக்கிறான். எஞ்சி நிற்பது ஆன்மாவே. இது மிகவும் நுட்பமான ஆராய்ச்சிப் பாதை. ஆராய்ச்சியின் வலிமை ஒன்றினாலேயே ஆன்மாவிலிருந்து பிரபஞ்சத்தைப் பிரித்தெறிய முயல்கிறான் ஞானி. 'நான் ஞானி' என்று சொல்வது மிக எளிது. ஆனால் உண்மை ஞானியாவது மிகவும் கடினம். இந்த வழி மிக நீளமானது; வாளின் கூரிய முனையின்மேல் நடப்பது போன்றது. என்றாலும் மனம் தளராதீர்கள். 'விழித்துக் கொள்ளுங்கள்; எழுந்திருங்கள்; லட்சியம் கைகூடும் வரையில் நிற்காதீர்கள்!' என்கின்றன வேதங்கள்.

ஞானியின் தியானம் என்ன? உடல், மனம் போன்ற ஒவ்வொரு கருத்திற்கும் அப்பால் போக அவன் விரும்புகிறான்;

தான் உடல் என்ற எண்ணத்தை விரட்டப் பாடுபடுகிறான். உதாரணமாக, 'சுவாமியாகிய நான்' என்று நான் சொல்கின்ற அந்தக் கணமே உடல்எண்ணம் வந்துவிடுகிறது. அப்படியானால், நான் என்ன செய்ய வேண்டும்? என் மனத்திற்குச் சரியான அடி கொடுத்து, 'நான் உடல் அல்ல, ஆன்மா' என்பதை வற்புறுத்த வேண்டும். நோய் வந்தால் என்ன? மரணம் எவ்வளவு பயங்கரமான முறையில் வந்தாலும் என்ன? நான் உடல் அல்ல; உடம்பை ஏன் பேண வேண்டும்? திரும்பவும் மாயை வலையில் சிக்கி உழலவா? அடிமை வாழ்வைத் தொடரவா? உடல் அழியட்டும் நான் உடல் அல்ல. இதுதான் ஞானியின் வழி.

'வாழ்க்கை என்ற கடலை அபாயமின்றிக் கடக்கவே இறைவன் எனக்கு உடம்பை அருளியிருக்கிறான். பயணம் முடியும்வரை நான் இந்த உடலைப் போற்ற வேண்டும்' என்கிறான் பக்தன். 'சாதனைகள் முடிந்து முக்தி கிடைக்கும்வரை உடம்பைப் பேணிக் காக்க வேண்டும்' என்கிறான் யோகி. 'நான் ஒரு கணம்கூடக் காத்திருக்க முடியாது, இந்தக் கணமே எனக்கு முக்தி வேண்டும்' என்று ஆர்வத்தால் உந்தப்படுகிறான் ஞானி. 'நான் என்றும் சுதந்திரன். நான் என்றும் கட்டுப்படவே இல்லை. நானே என்றும் பிரபஞ்சத் தலைவனாகிய இறைவன். என்னை நிறைவுள்ளவனாகச் செய்பவர் யார்? நான் ஏற்கனவே பரிபூரணமானவன்' என்கிறான் அவன். ஒருவன் நிறைநிலையை அடைந்துவிட்டால், அவன் எல்லோரிடமும் நிறைவைக் காண்கிறான். அவன் பிறரிடம் குறை கண்டால், தன் குறையை அவர்களின்மீது கற்பிப்பதே அதற்குக் காரணம். தன்னிடம் குறை இல்லாத ஒருவன் எப்படிப் பிறரிடம் குறை காண முடியும்? நிறையைப் பற்றியோ, குறையைப் பற்றியோ ஞானிக்குக் கவலை இல்லை. அவனைப் பொறுத்தவரையில் ஒருவருமே இல்லை. முக்தி பெற்றபின் நன்மை தீமை இரண்டுமே அவனுக்கு இல்லை. நன்மை தீமைகளைக் காண்பது யார்? யாரிடம் இவை உள்ளனவோ அவரே இவற்றைக் காண்பார். உடம்பை யார் காண்பார்? தான் உடம்பு என்று நினைப்பவனே. நான் உடம்பு என்ற எண்ணம் உங்களிடமிருந்து விடுபடும் போது, உலகத்தையே நீங்கள் பார்க்க மாட்டீர்கள். அது என்றென்றைக்குமாக போய்விட்டது. அறிவுச் சக்தியால், ஜடப் பொருள்கட்டை அறுத்தெறிந்து விடுதலை பெற முயல்கிறான் ஞானி. 'நேதி, நேதி இது அல்ல, இது அல்ல' என்னும் எதிர்மறை வழி இது.

# 7. ஆன்ம ஒருமை[1]

## (யாஜ்ஞவல்கியரும் மைத்ரேயியும்)

5 பிப்ரவரி 1896

'மேகமூட்டம் நிறைந்த நாள் கெட்ட நாள் அல்ல, இறைவனின் திருநாமத்தைக் கேட்காத நாளே கெட்ட நாள்'[2] என்று நாம் சொல்கிறோம். யாஜ்ஞவல்கியர் ஒரு மாமுனிவர். வயதானபின் ஒவ்வொருவரும் உலகைத் துறந்துவிட வேண்டும் என்று இந்திய சாஸ்திரங்கள் வற்புறுத்துகின்றன. எனவே ஒரு நாள் யாஜ்ஞவல்கியர் தம் மனைவியைப் பார்த்து, 'அன்பே! இதோ என் பணம், சொத்து எல்லாம் இருக்கின்றன, எடுத்துக் கொள். நான் போகிறேன்' என்று சொன்னார். அதற்கு அவரது மனைவியான மைத்ரேயி, 'இந்த உலகம் முழுவதையும் நிரப்பும் அளவுக்கு எனக்குச் செல்வம் இருந்தாலும், அதனால் மரண மிலாப் பெருநிலை கிடைக்குமா?' என்று கேட்டாள். 'கிடைக் காது. நீ பணக்காரியாக இருப்பாய், பணத்தால் மரணமிலாப் பெருநிலையைத் தர இயலாது' என்றார் யாஜ்ஞவல்கியர். 'எதன் மூலம் நான் மரணமற்ற நிலையை அடைய முடியுமோ, அதைக் கூறுங்கள், என்றாள் அவள்.

'நீ என்றுமே என் அன்பிற்கு உரியவளாக இருந்திருக்கிறாய். இந்தக் கேள்வியால் இன்னும் எனக்கு நெருங்கியவள் ஆகிவிட் டாய். இங்கே வந்து உட்கார். உனக்கு அதைக் கூறுகிறேன். அதைக் கேட்டபிறகு அதை நன்றாகத் தியானம் செய்' என்று கூறித் தொடர்ந்தார் யாஜ்ஞவல்கியர்:

'மனைவி கணவனிடம் அன்பு செலுத்துவது கணவனுக் காக அல்ல, ஆன்மாவிற்காகவே; ஏனெனில் அவள் தன் ஆன்மா விடம் அன்பு செலுத்துகிறாள். கணவனும் மனைவியிடம்,

---

1. இந்தச் சொற்பொழிவு பிருஹதாரண்யக உபநிடதம், குறிப்பாக 2.4. மற்றும் 4. 5 பற்றியது.

2. யத்தினம் ஹரி ஸல்லாப பீயூஷவர்ஜிதம் ।
தத்தினம் துர்தினம், நைவ மேகச்சன்னோऽக்னி துர்தினம் ॥

அவள் தன் மனைவி என்பதற்காக அன்பு செலுத்துவதில்லை. ஆன்மாவை நேசிப்பதாலேயே ஒருவன் மனைவியை நேசிக்கிறான். யாரும் குழந்தைகளுக்காகக் குழந்தைகளை நேசிப்பது இல்லை. ஆன்மாவை நேசிப்பதாலேயே குழந்தையை நேசிக்கிறான். யாரும் பணத்திற்காகப் பணத்தை நேசிப்பதில்லை; ஆன்மாவை நேசிப்பதாலேயே பணத்தை நேசிக்கிறான். பிராமணனுக்காக யாரும் பிராமணனை நேசிப்பதில்லை; ஆன்மாவை நேசிப்பதாலேயே பிராமணனை நேசிக்கிறான். யாரும் க்ஷத்திரியனுக்காக க்ஷத்திரியனை நேசிப்பதில்லை; ஆன்மாவை நேசிப்பதாலேயே க்ஷத்திரியனை நேசிக்கிறான். உலகையும் யாரும் உலகிற்காக நேசிப்பதில்லை; ஆன்மாவை நேசிப்பதாலேயே உலகை நேசிக்கிறான். அதுபோலவே தெய்வங்களுக்காக யாரும் தெய்வங்களை நேசிப்பதில்லை; ஆன்மாவை நேசிப்பதாலேயே தெய்வங்களை நேசிக்கிறான். ஒரு பொருளை அந்தப் பொருளுக்காக யாரும் நேசிப்பதில்லை; ஆன்மாவிற்காகவே அந்தப் பொருளை நேசிக்கிறான். எனவே இந்த ஆன்மாவைப்பற்றிக் கேட்க வேண்டும்; விவாதிக்க வேண்டும்; தியானிக்க வேண்டும். என் அன்பிற்குரிய மைத்ரேயி, இந்த ஆன்மாவைப்பற்றி நன்றாகக் கேட்ட பிறகு, ஆன்மாவைக் கண்ட பிறகு, அனுபூதியில் உணர்ந்த பிறகு, எல்லாம் தெளிவாக விளங்கிவிடுகிறது.'

அப்போது நாம் அடையும் பலன் என்ன? நம் முன்னே ஒரு வினோதமான தத்துவத்தை நாம் காண்கிறோம். எல்லா வகையான அன்பும் சுயநலமே என்ற பேச்சை நாம் அடிக்கடிக் கேட்கிறோம். இங்கு சுயநலம் என்பது மிகவும் இழிந்த பொருளில் பயன்படுத்தப்படுகிறது. என்னிடம் எனக்குள்ள அன்புதான் நான் பிறரிடம் வைக்கும் அன்பிற்குக் காரணம் என்கிறார்கள். இது உண்மையாக இருக்க முடியாது. தன்னலம் ஒன்றுதான் மனிதனின் தூண்டுசக்தி என்று அடித்துச் சொல்லும் இக்காலத் தத்துவ அறிஞர்கள் உள்ளனர். இது உண்மை; ஆனாலும் தவறு. இவர்கள் கூறும் மனிதன் அல்லது ஜீவாத்மா என்பது உள்ளே ஒளிரும் பரமாத்மா என்ற உண்மைப் பொருளின் நிழலே. இந்த நிழலான ஜீவாத்மா சிறியதாகத் தோன்றுவதாலேயே கெட்டதாகவும் தவறானதாகவும் தெரிகிறது. ஆன்மாவிடம் செலுத்தும் அந்த எல்லையற்ற அன்பு கெட்டதாகவும் சிறுமை உள்ளதாகவும் தோன்றக் காரணம், இது ஒரு சிறிய பகுதி வழியாகத் தெரிவதால்தான்.

மனைவி, தன் கணவனிடம் அன்பு செலுத்தும்போது, தெரிந்தோ தெரியாமலோ அவள் அந்த ஆன்மாவிற்காகவே அவனிடம் அன்பு செலுத்துகிறாள்; உலகில் இது தன்னல மாகவே தோன்றுகிறது. ஆனால் இந்தத் 'தன்னலம்' உண்மை யில் அந்த ஆன்ம அன்பின் ஒரு பகுதியே. அன்பு செலுத்த வேண்டுமென்றால், அது ஆன்மாவிலும் ஆன்மாவின் மூலமாக வும்தான் முடியும். எங்கும் நிறைந்த இந்த ஆன்மாவை உணர்ந் தாக வேண்டும். தன்னலத்திற்கும் ஆன்ம அன்பிற்கும் உள்ள வேற்றுமை என்ன? ஆன்மா என்பதன் உண்மைத் தன்மையை அறியாமல் அதனிடம் அன்பு செலுத்துவது 'தன்னலம்'. ஆன்மா என்பதன் உண்மையை அறிந்து அதனிடம் அன்பு செலுத்துவது 'அன்பு'. அது சுதந்திரமானது. இப்படி அன்பு செலுத்துபவர்கள் முனிவர்கள்.

'ஆன்மாவில் அல்லாமல் வேறெங்கேயாவது பிராமண னைப் பார்க்கும் ஒருவனைப் பிராமணன் ஏற்றுக் கொள் வதில்லை, ஆன்மாவில் அல்லாமல் வேறு எங்கேயாவது க்ஷத்திரி யனைப் பார்ப்பவனை க்ஷத்திரியன் ஏற்றுக் கொள்வதில்லை. ஆன்மாவில் அல்லாமல் வெளியே உலகத்தைப் பார்ப்பவனை உலகம் ஒப்புக் கொள்வதில்லை. ஆன்மாவில் அல்லாமல் வெளியே தெய்வம் இருப்பதாக நினைப்பவனைத் தெய்வமும் விலக்கிவிடுகிறது. ஆன்மாவில் அல்லாமல் அதற்கு வெளியே எல்லா பொருட்களும் இருப்பதாக நினைப்பவனை எல்லா பொருட்களுமே விலக்கி விடுகின்றன. இந்தப் பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், இந்த உலகம், இந்தத் தெய்வங்கள் என்று இருப்பவை எல்லாமே ஆன்மாவின் உள்ளேயே இருக்கின்றன.' அன்பு என்பதை இவ்வாறு விளக்குகிறார் யாஜ்ஞவல்கியர்.

ஒவ்வொரு முறையும் நாம் ஒரு பொருளைக் குறிப்பிட்டுப் பேசும்போது அதை நாம் ஆன்மாவிலிருந்து பிரித்துவிடு கிறோம். நான் ஒரு பெண்ணை நேசிக்க முயல்கிறேன். அந்தப் பெண்ணைத் தனியாகக் குறிப்பிடும்போது அவள் ஆன்மா விலிருந்து விலக்கப்பட்டுவிடுகிறாள். எனவே அவளிடம் நான் செலுத்தும் அன்பு எல்லைக்கு உட்பட்டதாக இருக்கும்; அதன் முடிவும் துயரமாகவே இருக்கும். ஆனால் நான் அவளை ஆன்மாவாகப் பார்க்கும் அந்தக் கணமே அவளிடம் செலுத்தும் அன்பு பூரணமானதாகிறது; அது ஒருபோதும் துன்பத்தைத் தராது. ஒவ்வொன்றும் இப்படியே. பிரபஞ்சம் என்ற ஒருமை யிலிருந்து, ஆன்மாவிலிருந்து ஒரு பொருளைப் பிரித்து,

எப்போது அதனிடம் பற்று வைக்கிறோமோ, அப்போதே இந்தப் பற்றிற்கு ஒரு பிரதிச்செயல் வந்துவிடுகிறது. ஆன்மாவைத் தவிர, நாம் எதனை நேசித்தாலும் விளைவு துன்பமும் துயரமும்தான். எதையும் ஆன்மாவிற்குள் ஆன்மா வாக அறிந்து, அனுபவிப்போமானால், துக்கம், பிரதிச்செயல் எதற்கும் இடமில்லை. இதுதான் குறைவற்ற ஆனந்தம்.

இந்த லட்சியத்தை அடைவது எப்படி? இந்த நிலையை அடைவதற்கான வழியை யாஜ்ஞவல்கியர் கூறுகிறார். பிர பஞ்சம் எல்லையற்றது; ஆன்மாவை அறியாத நாம் ஒவ்வொரு பொருளையும் தனித்தனியே எடுத்து, அதை ஆன்மாவாகப் பார்ப்பது எப்படி? 'நீண்ட தொலைவிலிருந்து எழும் ஒரு முர சின் ஓசையை நம்மால் உணரவோ, அதை நம் விருப்பப்படி அடக்கியாளவோ முடிவதில்லை. ஆனால் முரசை நெருங்கி, நம் கையை அதன்மேல் வைத்த அந்தக் கணமே அந்த ஓசையை நம் விருப்பப்படி அடக்கியாள முடியும். சங்கு ஊதும் போதும் நம் கையில் சங்கு சிக்கும் வரையில், நாம் அந்த ஒலியை நன்றாக உணரவோ அடக்கியாளவோ இயலாது. ஆனால் அது கையில் சிக்கியவுடன் அதை அடக்கியாள நம்மால் முடியும். வீணையை ஒருவர் வாசிக்கும்போதும், நாம் வீணையை நெருங்கிய பிறகு தான், நாதம் பிறக்கின்ற இடம் நமக்கு வசமாகிறது. ஈர விறகை எரிக்கும்போது புகையும் பலவித நெருப்புப் பொறிகளும் அதி லிருந்து கிளம்புகின்றன. அதுபோல் இறைவனின் மூச்சாக அறிவு வெளிவந்துள்ளது. எல்லாம் அவரிடமிருந்தே தோன்றி யுள்ளன. எல்லா அறிவையும் மூச்சாக அவர் வெளியிட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். எல்லா நீரும் போய்ச் சேரும் இடம் கடல்; எல்லா தொடு உணர்ச்சிகளுக்கும் மையம் தோல்; எல்லா மணங்களுக்கும் ஒரே மையம் மூக்கு; எல்லா சுவைக்கும் ஒரே லட்சியம் நாக்கு; உருவங்களுக்கெல்லாம் ஒரே லட்சியம் கண்கள்; ஒலிகளுக்கெல்லாம் ஒரே லட்சியம் காதுகள்; சிந்தனைகளுக்கெல்லாம் ஒரே லட்சியம் மனம்; எல்லா அறிவுக் கும் ஒரே லட்சியம் உள்ளம்; செயல்களுக்கெல்லாம் ஒரே லட்சியம் கைகள். அப்படியே எல்லாவற்றிற்கும் கதி எல்லையற்ற இறைவனே. உப்புத்துண்டைக் கடலில் போட்டால், திரும்ப நாம் பெற முடியாதபடி அது எப்படிக் கரைந்து விடுகிறதோ அப்படியே இறைவனும் பிரபஞ்சப் பொருள் எல்லாவற்றுள் ளும், பிரிக்க முடியாதபடிக் கலந்திருக்கிறார். மைத்ரேயி, எல்லா அறிவும் அவரிடமே உள்ளன. இந்தப் பிரபஞ்சம் முழுவதும்

அவரிடமிருந்தே தோன்றி, அவரிடமே ஒடுங்குகின்றன. இதற்கு அப்பால் அறிவோ, அழிவோ, மரணமோ இல்லை.' பொறிகள் சிதறுவதைப்போல் நாம் அவரிடமிருந்து தோன்றியுள்ளோம். அவரை அறிந்ததும் அவரிடமே திரும்பி அவருடன் ஒன்றாகக் கலந்துவிடுவோம் என்ற எண்ணம் நமக்கு உண்டாகிறது. நாமே தான் எங்கும் நிறைந்த பொருள்.

எல்லோரையும்போல் மைத்ரேயிக்கும் முதலில் பயம் வந்து விட்டது. 'சுவாமி, குழப்பத்தை உண்டாக்குகிறீர்களே! தெய்வங் களே இருக்காது, எல்லா தனித்துவமும் அழிந்துவிடும் என்றெல் லாம் சொல்லி என்னைப் பயமுறுத்தி விட்டீர்களே! அங்கே அறிந்துகொள்ள யாரும் இருக்க மாட்டார்கள். நேசிக்க யாரும் இருக்க மாட்டார்கள். வெறுக்க யாரும் இருக்க மாட்டார்கள். நம் கதி என்ன ஆகும்?' என்று கேட்டாள் மைத்ரேயி.

யாஜ்ஞவல்கியர் கூறினார்: 'மைத்ரேயி, உன்னைக் குழப்பு வது என் நோக்கம் அல்ல. இந்த விஷயம் இத்துடன் நிற்கட்டும். உனக்குப் பயம் ஏற்பட்டிருக்கலாம். இருவர் இருக்கும்போது தான் ஒருவர் மற்றவரைப் பார்க்கவோ, ஒருவர் மற்றவர் பேச் சைக் கேட்கவோ, ஒருவர் மற்றவருக்கு நல்வரவு கூறவோ, ஒரு வர் மற்றவரைப்பற்றி நினைக்கவோ, ஒருவர் மற்றவரை அறி யவோ முடியும். ஆனால் எல்லாமே ஆன்மாவாகிவிட்டால் யார் யாரைப் பார்ப்பது? யார் பேச்சை யார் கேட்பது? யாரை யார் வரவேற்பது? யாரை யார் அறிவது?'

இந்த ஒரே கருத்தை ஷோபனேர் (Schopenhauer) எடுத்து, தமது தத்துவத்தில் எதிரொலிக்கிறார்: யாரால் இந்தப் பிரபஞ்சத்தை நாம் அறிகிறோமோ, அவனை எதனால் அறி வது? அறிபவனை எதனால் அறிவது? எவ்வாறு அறிவது? அது எப்படி முடியும்? அவனுள்ளும் அவன் மூலமாகவும் தானே நாம் எல்லாவற்றையும் அறிகிறோம்! அவனை அறியும் கருவி எது? ஒன்றும் இல்லை. ஏனெனில் அவனே அந்தக் கருவி.

எல்லாம் எல்லையற்ற இறைவனே என்பதுதான் இதுவரை யிலும் கிடைத்த முடிவு. அதுதான் உண்மைத் தனித்துவம். அங்கே பிரிவுகளுக்கோ பாகங்களுக்கோ இடம் இல்லை. பிரிவு, பாகம் என்ற எண்ணங்களெல்லாம் தாழ்ந்தவை; வெறும் மயக்கம். ஆனாலும் தனித்துவங்களாக உள்ள ஒவ்வொன்றின் உள்ளேயும் அவற்றின் மூலமாகவும் எல்லையற்ற பரம்பொருளே ஒளிர்கிறது. எல்லாம் ஆன்மாவின் வெளிப்பாடுகளே.

அந்த நிலையை அடைவது எப்படி? யாக்ஞவல்கியரே சொல்வது போல், 'இந்த ஆன்மாவைப்பற்றி முதலில் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும்.' முதலில் உண்மையை வெளியிட்ட அவர், பிறகு அதைப்பற்றி விவாதித்தார். பின்னர், எதை அறிவதன்மூலம் எல்லாவற்றையும் அறிய முடியுமோ அதை அறியும் வழியைக் காட்டினார். இறுதியாக அதைப் பற்றியே தியானிக்க வேண்டும் என்றார். பிறகு அவர் பிண்டம், அண்டம் என்ற முற்றிலும் வேறுபட்ட இரண்டு விஷயங்களை எடுத்துக் கொண்டு, அவை எப்படி அவற்றிற்குரிய பாதையில் சுற்றி வருகின்றன என்பதையும், எல்லாமே எவ்வளவு அழகாக இருக்கின்றன என்பதையும் காட்டுகிறார்; 'இந்த உலகம் இன்பம் நிறைந்தது; அது ஒவ்வோர் உயிருக்கும் உதவுகிறது; எல்லா உயிர்களும் அதற்கு உதவியாக இருக்கின்றன. இவை எல்லாமே தன்னொளி கொண்ட ஆன்மாவின் வெளிப்பாடுகள்.'

எல்லா இன்பங்களுமே—மிகத் தாழ்ந்தநிலை இன்பமானாலும் சரி—அது ஆன்மாவின் பிம்பம்தான். நல்லவை அனைத்தும் அவரது பிரதிபிம்பமே; இந்தப் பிரதிபிம்பம் நிழலானால் அதைத் தீமை என்கிறோம். இரண்டு தெய்வங்கள் இல்லை. அவரது வெளிப்பாடு குறைவாக இருந்தால், அதை இருள் அல்லது தீமை என்கிறோம். வெளிப்பாடு மிகுதியானால் அதையே ஒளி என்கிறோம், அவ்வளவுதான். நன்மை, தீமை என்பவை அவரது வெளிப்பாட்டின் அதிகமும் குறைவுமே ஆகும்.

நமது வாழ்க்கையையே எடுத்துக் கொள்வோம். குழந்தைப் பருவத்தில் நாம் நல்லது என்று எண்ணிய எத்தனையோ பொருட்கள் உண்மையில் தீயவையாக இருந்தன! தீயவை என்று எண்ணிய எத்தனையோ பொருட்கள் உண்மையில் நல்லவையாக இருந்தன! எண்ணங்கள்தாம் எப்படியெல்லாம் மாறுகின்றன! ஒரு கருத்து எவ்வாறு படிப்படியாக உயர்ந்து கொண்டே போகிறது! மிக நல்லது என்று நமக்கு ஒருசமயத்தில் பட்ட பொருள். இப்போது அவ்வளவு நல்லதாகப் படவில்லை. எனவே நல்லது, பொல்லாதது என்பவை எல்லாம் வெறும் மூடநம்பிக்கைகளே. உண்மையில் அவை இல்லை. இரண்டிற்கும் உள்ள வேற்றுமை, அளவில்தான். இரண்டும் ஆன்மாவின் வெளிப்பாடுகளே. எல்லாவற்றிலும் அவரே வெளிப்படுகிறார்—வெளிப்பாடு கனமாக இருந்தால் தீமை என்றும், மெல்லியதாக இருந்தால் நன்மை என்றும் சொல்கிறோம். மூடியிருக்கும் திரைகள் எல்லாமே அகல்வது

போலாகும்போது அது மிகமிகச் சிறந்தது. எனவே உலகில் உள்ள எல்லா பொருட்களையுமே ஆன்மாவாகத் தியானிப்பதே சிறந்த முறை. இப்படிச் செய்தால்தான் எல்லாவற்றையும் நல்லவையாகப் பார்க்க முடியும். இதுதான் சிறந்தது. தீமையும் இருக்கிறது, நன்மையும் இருக்கிறது, இரண்டும் சேரும் இடமே உண்மைப் பொருள்.

இறைவன் கெட்டவரும் அல்ல, நல்லவரும் அல்ல; மிகச் சிறந்தவர் (Best) அவர். நன்மைகள் பல இருக்கலாம், தீமைகளும் பல இருக்கலாம்; ஆனால் மிகச் சிறந்தது ஒன்றுதான் இருக்க முடியும். நன்மைக்கும் தீமைக்கும் இடையே பலவித வேறுபாடு களுக்கு இடம் உண்டு. ஆனால் மிகச் சிறந்தது ஒன்றேதான். மிகச் சிறந்ததான அதை மெல்லிய திரை வழியாகப் பார்க்கும் போது நாம் பல வகை நன்மைகளைக் காண்கிறோம்; கனத்த திரை வழியாகக் காணும்போது பலவிதத் தீமைகளைக் காண் கிறோம். நன்மை, தீமை இரண்டுமே மூடநம்பிக்கைகளின் வேறுபட்ட உருவங்கள். இவை எல்லாவகையான இரட்டை மனமயக்கங்களுக்கு உள்ளேயும் பலவகைக் கருத்துக்களுக்கு உள்ளேயும் புகுந்து, மனிதர்களின் உள்ளங்களில் நன்றாகப் பதிந்துவிட்டன. இவை மனித உள்ளங்களின்மீது கொடுங்கோல் ஆட்சி புரிந்து, உள்ளங்களைப் பயத்தால் நடுங்கச் செய்கின்றன. நம்மைப் புலிகள் ஆக்குகின்றன. நாம் பிறரிடம் காட்டும் கடுமையான வெறுப்புக்கெல்லாம் காரணம், சிறுவயதிலிருந்தே நாம் பெற்று வந்துள்ள இந்த நன்மை, தீமை என்னும் முட்டாள் தனமான கருத்துக்களே. இதனால் மனித குலத்தைப்பற்றிய நமது மதிப்பீடு முற்றிலும் தவறாகிறது. அழகிய இந்த உலகை நாம் நரகமாக்குகிறோம். ஆனால் நம் உள்ளத்திலிருந்து நன்மை மற்றும் தீமைகள் அகலும் அந்தக் கணமே இந்த உலகம் சொர்க்கம் ஆகிவிடும்.

'இந்த உலகம் எல்லா உயிர்களுக்கும் இன்பமயமானது. எல்லா உயிர்களும் இந்த உலகிற்கு இனிமை மயமானவை. இவை ஒன்றுக்கொன்று உதவியாக இருக்கின்றன. எல்லா இனிமையும் பிரபஞ்சத்தின் உட்பொருளாக இருப்பதான, ஒளி மிக்க, அழிவில்லாத ஆன்மாதான். இந்த இனிமை யாருடையது? அவரைத் தவிர எந்த இனிமை இருக்க முடியும்? இந்த ஒரே இனிமைதான் பலவிதமாக வெளிப்படுகிறது. ஞானியோ, பாவியோ, தேவனோ, கொலைகாரனோ—யாராயிருந்தாலும், இந்த மனித உடலிலோ மனத்திலோ புலன்களிலோ எங்கே

இனிமை அல்லது அன்பு தோன்றினாலும், அது அவரே. உடலின்பங்கள் அவரே. மன இன்பங்கள் அவரே. ஆன்மீக இன்பங்கள் அவரே. அவரன்றி வேறொன்று எப்படி இருக்க முடியும்? ஒருவரோடொருவர் எப்போதும் போராடிக் கொண்டிருக்கும் இருபதாயிரம் தேவர்களும் அசுரர்களும் எப்படி இருக்க முடியும்? எல்லாம் குழந்தைத்தனமான கனவுகள். மிகத் தாழ்ந்த உடலின்பம்கூட அவரே; மிக உயர்ந்த ஆன்மீக இன்பமும் அவரே. அவரன்றி எந்த இனிமையும் இல்லை.' இப்படிச் சொல்கிறார் யாஜ்ஞவல்கியர்.

நீங்கள் இந்த நிலையை அடைந்து, எப்போது எல்லாவற்றையும் சமநோக்குடன் பார்க்கிறீர்களோ, அதாவது, குடிகாரனின் குடிஇன்பத்திலும் ஆன்மாவின் இனிமையை என்று காண்கிறீர்களோ அன்றுதான் உண்மையை உணர்ந்தவர்கள் ஆவீர்கள். அன்றுதான் இன்பம் என்றால் என்ன, அமைதி என்றால் என்ன, அன்பு என்றால் என்ன என்பது உங்களுக்கு விளங்கும். முட்டாள்தனமான, பொருளற்ற, உண்மையற்ற இந்த வேறுபாடுகளுக்கு இடம் கொடுக்கும் வரையிலும் நீங்கள் எல்லாவகைத் துன்பங்களுக்கும் உட்பட நேரும். அழிவற்ற அவர், ஒளி உருவான அவர் உலகில் ஒளிர்கிறார். இங்கே தோன்றும் இனிமையெல்லாம் அவரே. இதே இன்பம்தான் உடலிலும் இருக்கிறது. இந்த உடலே உலகம் போலுள்ளது. உடம்பின் எல்லா ஆற்றல்களிலும், எல்லா இன்பங்களிலும் அவர் இருக்கிறார். கண்கள் பார்க்கின்றன; தோல் தொடுகிறது; இந்த இன்ப அனுபவங்கள் எல்லாம் என்ன? தன்னொளியாக உடம்பில் திகழும் அவரே இவை எல்லாம். அவரே ஆன்மா, எல்லா உயிர்களுக்கும் இனிமையாகத் திகழும் உலகமும், உலகிற்கு இனிமையாக உள்ள எல்லா உயிர்களும் தன்னொளியான அவரே. தன்னொளி உடையவரும் அழிவற்றவருமான அவரே உலகின் ஆனந்தம். நம்மிலும் அந்த ஆனந்தமாக அவரே இருக்கிறார். அவரே பிரம்மம்.

'இந்தக் காற்று எல்லா உயிர்களுக்கும் இனிமையாக உள்ளது. எல்லா உயிர்களும் காற்றிற்கு இனிமையாக உள்ளன. தன்னொளி நிறைந்தவரும் அழிவற்றவருமாகக் காற்றில் இருக்கின்ற அவரே உடம்பிலும் இருக்கிறார். அவரே எல்லா உயிர்களின் உயிராக வெளிப்படுகிறார்.

'சூரியன் எல்லா உயிர்களுக்கும் இனிமையாக உள்ளான். எல்லா உயிர்களும் இந்தச் சூரியனுக்கு இனிமையாக உள்ளன.

தன்னொளி நிறைந்த அவரே சூரியனில் ஒளியாகத் திகழ்கிறார். நாம் சிறிய ஒளியாக அவரையே பிரதிபலிக்கிறோம். அவருடைய பிரதிபலிப்பைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்! அவரே நம் உடம்பினுள் இருக்கிறார். அவருடைய பிரதிபலிப்பாலேயே நாம் ஒளியைக் காண்கிறோம்.

'சந்திரன் எல்லா உயிர்களுக்கும் இனிமையாக உள்ளது. சந்திரனுக்கு எல்லா உயிர்களும் இனிமையாக உள்ளன. ஆனால் தன்னொளியுள்ளவரும் அழிவற்றவருமான அவர் சந்திரனுள் திகழ்கிறார்; அவரே சந்திரனின் ஆன்மா, நமக்குள் அவரே மனமாக உள்ளார்.

'மின்னல், மிகுந்த இனிமை வாய்ந்ததாக இருக்கிறது; மின்னலுக்கும் ஒவ்வொருவரும் இனிமையாக உள்ளனர். தன் னொளி உடையவரும் அழிவற்றவருமான அவர், மின்னலின் உள்ளே உறைகிறார்; அவர் நம்முள்ளும் இருக்கிறார்; ஏனெனில் எல்லாம் பிரம்மமே அல்லவா! ஆன்மாவே எல்லா உயிர்களுக் கும் அரசன்'.

இந்தக் கருத்துக்கள் மக்களுக்கு மிகவும் பயன்படுபவை. இவை தியானத்திற்கு உரியவை. உதாரணமாக, பூமியைத் தியானி யுங்கள். பூமியை நினையுங்கள், கூடவே, பூமியில் இருப்பது எதுவோ அதுவே நம்முள்ளும் இருக்கிறது; இரண்டும் ஒன்று தான் என்பதை உணருங்கள். உடம்பைப் பூமியுடனும், நம் ஆன்மாவைப் பரமாத்மாவுடனும் ஒன்றாகப் பாருங்கள். காற்றை யும், காற்றினுள் உள்ளுறையும் ஆன்மாவையும், நம் ஆன்மா வையும் ஒன்றாகப் பாருங்கள். இவை எல்லாம் வெவ்வேறாக வெளிப்பட்டுள்ள ஒரே பொருளே. இந்த ஒருமையை அறிவதே எல்லா தியானங்களுடையவும் நோக்கமும் குறிக்கோளும் ஆகும். இதையே யாஜ்ஞவல்கியர் மைத்ரேயிக்கு விளக்க முயன்று கொண்டிருந்தார்.

# 8. ஞானயோகத்தின் மிகவுயர்ந்த லட்சியம்

## (இந்து வேதாந்தத் தத்துவத்தின் படிகள்)

12 பிப்ரவரி 1896

இன்று மேலெழுந்து நிற்கும் முதல்வகை மதக் கொள்கைகளில் எல்லாம் தெய்வீகப் பேருணர்வு (Inspiration), அருள் வெளிப்பாட்டு நூல்கள் (Revealed books) போன்ற கருத்துக்கள் நிறைந்துள்ளன. சான்றோர் ஒப்புக்கொண்டவற்றை மட்டுமே மதம் என்று இங்கு நான் குறிப்பிடுகிறேன்; மதம் என்ற பெயருக்கே தகுதியற்ற தாழ்ந்த கருத்துக்களை அல்ல.

இத்தகைய முதல்வகை மதக் கொள்கை இறைவன் என்ற எண்ணத்தில் தொடங்குகிறது—இதோ நம் கண்முன்னர் பிரபஞ்சம் உள்ளது; இதைப் படைத்த ஒருவர் இருக்க வேண்டும். இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் அவரது படைப்பே.

சிறிது காலத்திற்குப் பின்னர் இந்த எண்ணத்துடன் ஆன்மா என்ற கருத்தும் தோன்றியது—'இந்த உடம்பு இருக்கிறது; இந்த உடம்பினுள், உடம்பல்லாத ஏதோ ஒன்று இருக்கிறது. இந்தக் கருத்து, நாம் அறிந்தவற்றுள் மிகமிகப் பழமையான மதக் கருத்து. இந்தக் கருத்தைக்கொண்ட சிலரை இன்றும் நாம் இந்தியாவில் காணலாம். ஆனால் இது நெடுநாட்களுக்கு முன்னரே மறையத் தொடங்கிவிட்டது.

இந்திய மதங்களின் தொடக்கமே விசித்திரமாக இருக்கிறது. இத்தகைய விசித்திர நிலை ஒன்று இருந்தது என்பதைக் கடினமான ஆராய்ச்சியினாலும், கவனமாகக் கணக்கிடுவதாலும், ஊகத்தாலும் மட்டும்தான் நாம் நினைத்துப் பார்க்கவே முடியும். நாம் அறியும் ஆரம்ப நிலை, இந்த நிலைக்கு அடுத்த படியே தவிர முதற்படி அல்ல. ஆரம்பநிலையில் படைப்பைப் பற்றி இருந்த கருத்தே மிக விநோதமானது. வெறும் சூன்யத்திலிருந்து இறைவனின் சங்கல்பத்தால் இந்தப் பிரபஞ்சம் படைக்கப்பட்டது; முன்பு இது இல்லவே இல்லை; சூன்யத்திலிருந்துதான் இவை எல்லாம் பிறந்தன என்பதே அந்தக் கருத்து.

அடுத்த நிலையில், இந்த முடிவைப்பற்றிய சந்தேகம் வந்துவிடுகிறது. சூன்யத்திலிருந்து பொருள் எவ்வாறு தோன்ற முடியும்? வேதாந்தத்தின் முதற்படியிலேயே இந்தக் கேள்வி எழுகிறது. இந்தப் பிரபஞ்சம் இருப்பது உண்மையானால், இருக்கும் ஏதாவது ஒன்றிலிருந்துதான் இது தோன்றியிருக்க முடியும். ஏனெனில் சூன்யத்திலிருந்து எதுவும் எங்கும் தோன்ற முடியாது என்பது நன்கு தெரிந்த ஒன்று. மனிதர்கள் செய்யும் எல்லா தொழில்களுக்கும் பொருட்கள் தேவைப்படுகின்றன. வீடு ஒன்று கட்டப்பட்டிருக்குமானால் அதற்கு வேண்டிய துணைக்கருவிகள் முன்பே இருந்தன. ஒரு படகு கட்டப்பட்டிருக்குமானாலும் அப்படியே; எது செய்யப்பட்டிருந்தாலும் அப்படியே. ஏற்கனவே உள்ள காரணங்களால்தான் ஒரு காரியம் உருவாகிறது. எனவே சூன்யத்திலிருந்து இந்தப் பிரபஞ்சம் படைக்கப்பட்டது என்னும் கொள்கை கைவிடப்பட்டது.

இந்தப் பிரபஞ்சம் படைக்கப்படுவதற்குக் காரணமான மூலப்பொருள் ஒன்று தேவைப்பட்டது. இந்த மூலப்பொருள் பற்றிய ஆராய்ச்சியே உலக மதங்களின் வரலாறு ஆகும். எதிலிருந்து இவையெல்லாம் படைக்கப்பட்டது? கடவுளே மூல காரணம் என்பதையும் கடவுள் இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தார் என்பதையும் சற்று விலக்கிவிட்டுப் பார்த்தால், பிரச்சினைகளுள் பெரும் பிரச்சினையாக இருப்பது இதுதான்: எந்தப் பொருளிலிருந்து கடவுள் இதைப் படைத்தார்? எல்லா தத்துவங்களும் இந்த ஒரு கேள்வியையே சார்ந்திருப்பதுபோல் உள்ளன.

இயற்கை, இறைவன், ஆன்மா ஆகிய மூன்றும் என்றென்றும் உள்ளவை என்னும் கொள்கை இந்தப் பிரச்சினைக்கு ஒரு விடை. என்றும் ஓடுகின்ற மூன்று இணைகோடுகள் உள்ளன. அவற்றுள் இறைவன் என்ற கோடு எந்தச் சார்பும் அற்ற உண்மை; இயற்கை, ஆன்மா என்னும் மற்ற இரண்டு கோடுகளும் கடவுளைச் சார்ந்தவை. ஜடப்பொருள் மூலக்கூறுகள் ஒவ்வொன்றும் இறைவனையே சார்ந்திருப்பதுபோல், ஒவ்வோர் ஆன்மாவும் இறைவனின் சித்தத்தையே முற்றிலும் சார்ந்திருக்கிறது.

மற்ற படிகளை ஆராயத் தொடங்குமுன் நாம் ஆன்மா என்னும் கருத்தை எடுத்துக் கொள்வோம். பின்னர், வேதாந்தத் தத்துவ ஞானியர் ஒரு விஷயத்தில் மேலைநாட்டுத் தத்துவ அறிஞர்களிடமிருந்து வேறுபட்டிருப்பதைக் காணலாம்.

இந்தியாவில் வேதாந்திகள் எல்லோருக்கும் பொதுவான மனஇயல் ஒன்றுள்ளது. அவர்களது தத்துவம் எதுவானாலும், மனஇயல் சாஸ்திரம் ஒன்றுதான். அது சாங்கியர்களின் மன இயல் சாஸ்திரம்.

ஒரு பொருளைப்பற்றிய அறிவு எப்படி ஏற்படுகிறது என்பதை சாங்கியம் பின்வருமாறு கூறுகிறது. புறப்பொருளின் அதிர்வுகள் வெளிப்பொறிகளை அடைகின்றன. வெளிப்பொறிகளிலிருந்து புலன்கள் அல்லது உட்கருவிகளுக்கு இவை போகின்றன; இங்கேயிருந்து மனத்தை அடைகின்றன; பிறகு புத்தியை அடைகின்றன. புத்தியிலிருந்து ஆன்மா எனப்படும் ஒருமையை அடைகின்றன. பலவகை உணர்ச்சிகளுக்கும் காரணமான நரம்பு மையங்களை நவீன உடலியல் கண்டுபிடித்துள்ளது. முதலில் தாழ்ந்த நிலை மையங்கள், பிறகு உயர்ந்த நிலை மையங்கள். இந்த இரண்டும் நாம் கூறுகின்ற புலன்கள் மற்றும் மனம் என்பவற்றிற்குச் சரியாகப் பொருந்திவருகின்றன. ஆனால் எல்லா மையங்களையும் அடக்கியாளும் மூல மையம் ஒன்றை உடலியல் இதுவரை கண்டுபிடிக்கவில்லை. எனவே இந்த மையங்களை எல்லாம் ஒன்றுபடுத்தும் மூலம் எது என்பதைத் தற்கால உடலியல் விளக்க இயலாது. இந்த மையங்களெல்லாம் ஒன்றுபடும் இடம் எது? மூளைகளிலுள்ள மையங்களெல்லாம் தனித்தனியானவை. எல்லா மையங்களையும் அடக்கியாளும் மூல மையம் ஒன்று அங்கே இல்லை. எனவே இந்த விஷயத்தைப் பொறுத்தவரை, இந்திய மனஇயல் ஈடிணையற்றதாக நிற்கிறது. புறப்பொருட்களைப் பற்றிய நமது அறிவு நிறைவடைய வேண்டுமானால், புலன் உணர்ச்சிகள் எல்லாம் ஒன்றுபடுவதற்கு நிலைக்களன் ஒன்று இருந்தே தீர வேண்டும். இந்த மூல நிலைக்களன் இல்லாமல் நான் உங்களைப்பற்றியோ, ஒரு படத்தைப்பற்றியோ, ஒரு பொருளைப் பற்றியோ எதனையும் அறிய முடியாது. இந்த ஒன்றுபடுத்தும் நிலைக்களன் இல்லை என்றால் நாம் முதலில் பார்க்க வேண்டியிருக்கும், பின்னர் சிறிது நேரம் கழித்து மூச்சுவிட வேண்டும், பின்னர் கேட்க வேண்டும். இப்படி ஒவ்வொன்றாகத்தான் செய்ய வேண்டியிருக்கும். ஒருவர் பேசுவதைக் கேட்கும்போது அவரைப் பார்க்க இயலாது; கேட்கும்போது பார்க்க முடியாது. ஏனெனில் மையங்கள் தனித்தனி அல்லவா?

ஜடப்பொருள் எனப்படும் மூலக்கூறுகளால் ஆனது இந்த உடல். இது மந்தமானது, உணர்வற்றது. வேதாந்திகள்

நுண்ணுடல் என்று சொல்வதும் இப்படித்தான் இருக்கிறது. அவர்களது கருத்துப்படி நுண்ணுடலும் ஜடப்பொருளே. ஆனால் அது ஒளி ஊடுருவும் தன்மையுடையது; நுண்ணிய மூலக்கூறுகளால் ஆனது. இந்த மூலக்கூறுகளை உருப்பெருக்கியால்கூடப் பார்க்க முடியாது. இந்த நுண்ணுடலால் என்ன பயன்? இதுவே நுண் சக்திகளின் கொள்கலனாக உள்ளது. தூலவுடல் தூல சக்திகளின் கொள்கலனாக இருப்பதுபோல், நுண்ணுடல் நாம் எண்ணங்கள் என்று சொல்பவற்றின் பல வேறுபாடுகளாகிய நுண் சக்திகளின் கொள்கலனாக உள்ளது.

முதலில் தூலப் பொருளால் ஆன உடல், இது தூல சக்திகளுக்கு இருப்பிடம். தூலப் பொருள் இல்லாமல் சக்தி இருக்க முடியாது. அது தங்கி நிற்க ஏதாவது ஒருவகைத் தூலப்பொருள் அவசியம். எனவே தூல சக்திகள் தூலப் பொருளான உடலில் செயல்படுகின்றன. இந்தச் சக்திகளே நுண் சக்திகள் ஆகின்றன. தூல உருவில் செயல்படும் சக்திகளே நுண்ணுருவில் செயல்படும் சக்திகளாக மாறி எண்ணங்கள் ஆகின்றன. தூல சக்திக்கும் நுண் சக்திக்கும் இடையில் வேறுபாடு இல்லை. ஒரே பொருளின் தூல வெளிப்பாடு ஒன்று; நுண் வெளிப்பாடு மற்றொன்று. இதேபோல் தூல உடல் மற்றும் நுண்ணுடல்களுக்கு இடையிலும் வேறுபாடு ஒன்றும் இல்லை. சூட்சும உடலும் ஜடப்பொருளால் ஆனதுதான்; ஆனால் இது மிகவும் நுண் ஜடப்பொருள். தூல சக்திகளைச் செயல்படச் செய்யும் கருவி தூலவுடல். அதுபோல் சூட்சும சக்திகளைச் செயல்படச் செய்யும் கருவி நுண்ணுடல்.

இந்தச் சக்திகளெல்லாம் எங்கிருந்து வருகின்றன? வேதாந்தத் தத்துவத்தின்படி இயற்கையில் இரண்டு பொருட்கள் இருக்கின்றன. ஒன்று ஆகாசம். இது மிகமிக நுட்பமான ஜடப் பொருள். மற்றொன்று பிராணன். இது சக்தி. பார்த்தல், கேட்டல், உணர்தல் என்று புலன்களால் அறியப்படும் காற்று, மண் போன்ற ஜடப்பொருட்கள் அனைத்தும் ஆகாசத்தால் உருவானவை. பிராணனின் செயலால் இவை மிகமிக சூட்சுமமாகவோ அல்லது மிகமிகத் தூலமாகவோ மாறிக்கொண்டே போகின்றன. ஆகாசத்தைப் போலவே பிராணனும் எங்கும் நிறைந்தது; எல்லாவற்றையும் ஊடுருவி நிற்பது. ஆகாசம் தண்ணீர் போன்றது; பிரபஞ்சத்திலுள்ள மற்றவையெல்லாம் அந்தத் தண்ணீரால் ஆக்கப்பட்டு அதன்மீது மிதக்கும் பனிக்கட்டிகள் போன்றவை. இப்படி ஆகாசத்தைப் பல உருவங்களாக மாற்றும்

சக்தியே பிராணன். தசைநார்களின் இயக்கம், நடப்பது, அமர்வது, பேசுவது போன்ற தூலச் செயல்களாகப் பிராணன் மாறுவதற்கு நிலைக்களனான தூலவுடல் ஆகாசத்திலிருந்து உண்டாக்கப்பட்டதாகும். அதே பிராணன் நுட்ப உருவமான எண்ணமாக மாறுவதற்கு ஆதாரமான சூட்சும உடலும் ஆகாசத்தின் சூட்சும உருவத்திலிருந்து ஆக்கப்பட்டதே ஆகும்.

எனவே முதலில் தூலவுடல், அதற்கு அப்பால் நுண்ணுடல் அல்லது சூட்சும உடல்; அதற்கும் அப்பால் ஜீவன் அல்லது உண்மை மனிதன் இருக்கிறான். தூல உடலுக்கும் நுண்ணுட லுக்கும் உள்ள தொடர்பு நகத்திற்கும் உடலுக்கும் உள்ள தொடர்பைப் போன்றது. நகங்களை நாம் பலமுறை வெட்டி எறிய முடியும், ஆனாலும் அவை உடலின் பாகங்களே. ஒரு மனிதனுக்குச் சூட்சும உடல், தூலவுடல் என இரண்டு உடல்கள் இல்லை. உடம்பு ஒன்றுதான். நெடுநாள் அழியாமல் நிலைத் திருப்பது நுண்ணுடல்; விரைவில் அழிந்துபோவது தூலவுடல். எப்படி என் நகத்தை நான் பலமுறை வெட்ட முடியுமோ அப்படியே இந்தத் தூலவுடலையும் நான் பல லட்சம் தடவை உதறிவிட முடியும்; ஆனால் நுண்ணுடல் நிலைத்து நிற்கும். துவைதிகளின் கொள்கைப்படி, ஜீவன் மிகவும் நுட்பமானவன்; அணு போன்றவன்.

விரைவில் அழியும் தூலவுடலை முதலிலும், கோடிக்கணக் கான ஆண்டுகள் அழியாத நுண்ணுடலை அதற்கு அப்பாலும், அதற்கும் அப்பால் ஜீவனையும் கொண்ட ஒருவனே மனிதன் என்பதை நாம் இதுவரையில் பார்த்தோம். எவ்வாறு இறைவன் என்றென்றும் உள்ளவனோ, அவ்வாறே ஜீவன் ஆதியும் அந்த மும் அற்றவன் என்கிறது வேதாந்தம். இது போன்றதுதான் இயற்கையும்; ஆனால் இது மாறக்கூடியது. இயற்கையின் மூலப் பொருட்களான பிராணனும் ஆகாசமும் என்றும் உள்ளவை, ஆனாலும் அவை தொடர்ந்து புதுப்புது உருவங்களாக மாறிக் கொண்டிருக்கின்றன. ஜீவன் ஆகாசத்தாலோ பிராணனாலோ ஆக்கப்பட்ட பொருளல்ல; அது பொருள்தன்மையே இல் லாதது. எனவே அது என்றும் உள்ளது. பிராணன், ஆகாசம் இவற்றின் சேர்க்கையால் ஆனதல்ல ஜீவன். சேர்க்கையின் விளைவாகத் தோன்றாத எந்தப் பொருளுக்கும் அழிவு இல்லை; அழிவு என்பதே மூலப் பொருட்களாகப் பிரிவதுதானே! ஆகாசம், பிராணன் இவற்றின் சேர்க்கையால் ஆன தூலவுடல், இந்த மூலப் பொருட்களாகப் பிரிந்துவிடும். நுண்ணுடலும்

நீண்ட காலத்திற்குப் பிறகு இவ்வாறே பிரிந்துவிடும். ஆனால் தனிப்பொருளான ஜீவன் ஒருபோதும் அழியாது. இதே நியதிப்படிப் பார்த்தால், ஜீவன் பிறக்கவும் இல்லை. தனிப் பொருளான எதற்கும் பிறப்பு இல்லை. மேலே குறிப்பிட்ட அதே நியதி இங்கும் பொருந்தும்—சேர்க்கையால் உண்டாகும் பொருளுக்குத்தான் பிறப்பு உண்டு. லட்சக்கணக்கான ஆன்மாக் களாலான இந்தப் பிரபஞ்சம் கடவுளின் சங்கல்பத்திற்கு உட் பட்டது. கடவுள் எங்கும் நிறைந்தவர், எல்லாம் அறிந்தவர், உருவம் இல்லாதவர். அவர் இயற்கையின் வாயிலாக அல்லும் பகலும் செயல்படுகிறார். இயற்கை முழுவதும் அவரது ஆட்சிக்கு அடங்கியது. அவரே என்றும் அரசாள்பவர். இது துவைதிகளின் கூற்று.

இது உண்மையானால் ஒரு கேள்வி எழுகிறது: இறைவனே அரசரானால், அவர் ஏன் இவ்வளவு கொடிய உலகைப் படைத் தார்? நாம் ஏன் இவ்வளவு துன்புற வேண்டும்? அது கடவுளின் குற்றம் அல்ல என்கிறார்கள் துவைதிகள். நம் குற்றத்தாலேயே நாம் துன்பப்படுகிறோம். எதை விதைக்கிறோமோ அதையே அறுவடை செய்கிறோம். நம்மைத் தண்டிப்பதற்காக அவர் எதுவும் செய்யவில்லை. மனிதன் ஏழையாகவோ, பார்வையற்ற வனாகவோ, வேறு குறைகள் உடையவனாகவோ பிறக்கிறான். இதற்குக் காரணம் என்ன? இப்படிப் பிறப்பதற்குக் காரணமான ஏதோ ஒன்றை இவன் செய்திருக்க வேண்டும். ஜீவன் படைக்கப் படவில்லை; அது என்றுமே இருந்திருக்கிறது; பலவற்றையும் செய்துகொண்டே இருந்திருக்கிறது. நாம் எதைச் செய் கிறோமோ, அதன் பலனை அனுபவித்தேயாக வேண்டும். நல்லது செய்தால் இன்பம் அனுபவிப்போம், தீமை செய்தால் துன்பம் பெறுவோம். இப்படியே ஜீவன் புண்ணியபாவங்களைச் செய்தவாறு, இன்ப துன்பங்களை அனுபவித்தவாறு உழன்று கொண்டே இருக்கிறது.

மரணத்திற்குப் பிறகு என்ன நிகழ்கிறது? ஜீவன் இயல் பாகவே தூய்மையானது, அறியாமையே அதன் இயல்பை மறைக்கிறது என்று வேதாந்தத் தத்துவவாதிகள் கூறுகிறார்கள். பாவச் செயல்களால் ஜீவன் தன்னை அறியாமையில் மறைத்துக் கொள்வதுபோல், புண்ணியச் செயல்களால் அது மீண்டும் தன் இயல்பை உணர்கிறது. அழிவற்றதாக இருப்பதுபோல் ஜீவன் இயல்பாகவே தூயதாகவும் இருக்கிறது. ஒவ்வோர் உயிரின் இயல்பும் தூய்மைதான்.

நற்செயல்களால் பாவங்களும் தவறுகளும் கழுவப்பட்ட வுடன் ஜீவன் மீண்டும் தூயதாகிறது. இப்படித் தூய்மை அடைந்த ஜீவன் தேவயானம் எனப்படும் வழியாக செல்கிறது. இதன் பேச்சுப் பொறி மனத்துள் புகுகிறது. வார்த்தைகள் இல்லாமல் சிந்திக்க முடியாது. எங்கே சிந்தனை உள்ளதோ, அங்கே வார்த்தைகள் இருந்தே தீரும். சொற்கள் மனத்தில் புகுவதுபோல் மனம் பிராணனிலும் பிராணன் ஜீவனிலும் ஒடுங்குகின்றன. உடனே ஜீவன் உடலைவிட்டு வெகுவிரைவில் வெளியேறி, மேல் உலகங்களுக்குச் செல்கிறது.

இந்தப் பிரபஞ்சம் பல அண்டங்களால் ஆனது. பூமி ஓர் அண்டம். இந்த அண்டத்தில் சந்திரர்களும் சூரியர்களும் நட்சத்திரங்களும் இருக்கின்றன. இதற்கு அப்பால் சூரிய மண்டலமும் அதற்கும் அப்பால் சந்திர மண்டலமும் இருக் கின்றன. அவற்றிற்கும் அப்பால் மின்னல் மண்டலம் என்ற மின்சார மண்டலம் இருக்கிறதாம். ஜீவன் அந்த மண்டலத்தை அடைந்தவுடன் ஏற்கனவே நிறைநிலையை அடைந்துள்ள மற்றொரு ஜீவன் அதை வரவேற்று, பிரம்மலோகம் என்ற மிக உயர்ந்த சொர்க்கத்திற்கு அதை அழைத்துச் செல்கிறது. அங்கே சென்ற ஜீவன், பிறப்பு இறப்பு ஒன்றும் இல்லாமல் என் றென்றும் அங்கேயே வாழ்கிறது; அங்கே எல்லாவகை ஆனந்த அனுபவங்களையும் ஆற்றல்களையும் பெறுகிறது. படைக்கும் ஆற்றல் மட்டும் பெறுவதில்லை. பிரபஞ்சத்தை ஆளும் அதிகாரம் ஒருவருக்கு மட்டுமே உண்டு. அவரே கடவுள்.

யாரும் கடவுளாக முடியாது. நான்தான் கடவுள் என்று சொன்னால், அது தெய்வ நிந்தனை என்று துவைதிகள் கூறு கிறார்கள். படைக்கும் ஆற்றலைத் தவிர எல்லா ஆற்றல்களையும் ஜீவன் பெறுகிறது. அது உடல்தரித்து, உலகின் பல பகுதிகளில் உழைக்க விரும்பினால் அப்படியே செய்யலாம். தேவர்களையோ இறந்த முன்னோர்களையோ அந்த ஜீவன், தான் நினைக்கும்போது தன் முன்னே வரவழைக்க முடியும். துன்பம் என்பதே அதற்குச் சிறிதும் இல்லை. அது விரும்பினால் என்றென்றும் பிரம்ம லோகத்திலேயே வாழலாம். இவ்வளவு ஆற்றல்களை அது பெறுகிறது. இதுதான் மனிதனின் உயர்ந்த எல்லை. இவன் ஆண்டவனின் அருளைப் பூரணமாகப் பெற்றவன்; சற்றும் சுயநலம் இல்லாதவன்; மிகவும் தூய்மையானவன்; ஆசைகள் அற்றவன்; இறைவனிடம் பக்தி செய்வதையும் அவரை வழிபடுவதையும் தவிர வேறு எதையுமே இவன் நாடுவதில்லை.

இவ்வளவு உயர்ந்த நிலைக்குச் செல்லாதவர்களும் இருக்கிறார்கள். இவர்கள் புண்ணியம் செய்கிறார்கள்; ஆனால் ஏதோ பலனை எதிர்பார்க்கிறார்கள். நாங்கள் ஏழைகளுக்கு இவ்வளவு கொடுக்கிறோம், எனவே நாங்கள் சொர்க்கம் செல்ல வேண்டும் என்று இவர்கள் விரும்புகிறார்கள். இறந்தபின் இவர்களுக்கு என்ன நேரிடுகிறது? சொல் மனத்திலும், மனம் பிராணனிலும், பிராணன் ஜீவனிலும் புகுகின்றன. பிறகு ஜீவன் உடலைவிட்டு வெளியேறி சந்திர மண்டலத்தை அடைகிறது. அங்கே நெடுநாள், அதாவது அதன் புண்ணிய பலன் இருக்கும் வரையில் இன்பங்களை அனுபவிக்கிறது. புண்ணிய பலன் முடிந்ததும் தன் விருப்பங்களுக்கு ஏற்றவாறு மீண்டும் இந்த உலகில் பிறக்கிறது. சந்திர மண்டலத்தில் இருக்கும்போது ஜீவன் தேவநிலையில் இருக்கிறது என்று நாம் கூறுகிறோம். கிறிஸ்தவர் மற்றும் முகமதியர் அது தேவதூதனாக இருப்பதாகக் கூறுகிறார்கள். தேவர்கள் என்பது சில பதவிகளின் பெயர்கள் ஆகும். உதாரணமாக தேவர்களின் தலைவனான இந்திரன் என்பது ஒரு பதவியின் பெயர். பல்லாயிரம் மனிதர்கள் இந்தப் பதவியைப் பெற்றுள்ளனர். வேதங்கள் கூறும் கடமைகளுள் மிக உயர்ந்ததைச் செய்யும் புண்ணியவான் இறந்த பிறகு இந்திரன் ஆகிறான். முன்பு இந்திரப் பதவி தாங்கியவனுடைய புண்ணியம் தீர்ந்து, அவன் இதற்குள் பூமியில் மனிதனாகப் பிறக்கிறான். இந்த உலகத்தில் அரசர்கள் மாறுவது போல் தேவர்களுக்கும் சாவு உண்டு. சொர்க்கத்திலுள்ள எல்லோருக்கும் மரணம் உண்டு. மரணம் இல்லாத இடம் பிரம்ம லோகம் ஒன்றுதான். அங்கே பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை.

ஜீவன் சொர்க்கத்திற்குப் போய் நல்ல போகங்களை அனுபவிக்கிறது. எப்போதாவது அசுரர்களால் தொல்லை ஏற்படும்போது மட்டும் சிறிது துன்பம் உண்டாகும். எங்கள் புராணங்களில் தேவர்களுக்கு அவ்வப்போது தொல்லை கொடுக்கும் அசுரர்களைப்பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. எல்லா புராணங்களிலுமே தேவ-அசுரப் போர்களைப்பற்றிக் கூறப் பட்டிருக்கிறது. அசுரர்கள் சிலவேளை தேவர்களை வென்றும் இருக்கிறார்கள். ஆனால் பலவேளைகளில் தேவர்களைப்போல் அவ்வளவு தீய செயல்களை அவர்கள் செய்யவில்லை என்று தான் தோன்றுகிறது. எல்லா புராணங்களுமே தேவர்கள் பெண்களில் நாட்டம் உள்ளவர்கள் என்று கூறுகின்றன.

எப்படியோ, தங்கள் புண்ணியம் தீர்ந்ததும் அவர்கள் கீழ்நோக்கி வருகிறார்கள். மேகங்கள் வழியாக மழைக்கு வந்து, பின்னர் பூமிக்கு வந்து, ஏதாவது ஒரு தானியம் அல்லது செடியில் புகுந்து, கடைசியில் அந்தத் தானியம் அல்லது செடியை மனிதன் உண்ணும்போது மனிதனின் உடலுக்குள் புகுந்துவிடுகிறார்கள். ஒருவனுக்குத் தகுந்த உடலைப் பெறுவதற்கு வேண்டிய மூலப்பொருளைத் தந்தை கொடுக்கிறான். இந்தப் பொருள் அவனுக்கு ஏற்றதாக இல்லாவிட்டால், அவன் வேறு உடல்களை உண்டாக்கிக்கொள்ள வேண்டும். கொடுஞ்செயல் செய்யும் பாதகர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இறந்தபின் மீண்டும் மிருகங்களாகப் பிறக்கிறார்கள். மிகவும் ஈனத்தொழில் செய்யும் கயவர்களாக இருந்தால், மிகத் தாழ்ந்த மிருகங்களாகவோ செடிகளாகவோ கற்களாகவோ பிறக்கிறார்கள்.

தேவர்களாக இருக்கும்போது ஜீவர்கள் கர்மம் எதையும் செய்வதில்லை. மனிதன் ஒருவன்தான் கர்மம் செய்ய இயலும். பலன் தரும் செயல்களே கர்மம் எனப்படுகின்றன. ஒருவன் இறந்து தேவனாகும்போது அவனது புண்ணியச் செயல்களுக்கான சுக அனுபவம் மட்டுமே உண்டு. அப்போது அவன் புதிய கர்மம் ஒன்றும் புரிவதில்லை. புண்ணியகர்ம அனுபவம் தீர்ந்தவுடன் மற்ற கர்மங்களின் அனுபவம் தொடங்கிவிடுகிறது; எனவே அவன் பூமிக்கு வருகிறான்; மீண்டும் மனிதனாகிறான். இந்தப் பிறவியில் அவன் சிறந்த புண்ணியங்களைச் செய்து தூயவன் ஆகிவிட்டால், பிரம்மலோகத்திற்குப் போய்விடுகிறான். பிறகு திரும்பி வருவதே இல்லை.

கீழ்நிலை உயிர்களிலிருந்து பரிணாம முறையில் முன்னேறுகின்ற ஜீவர்களின் ஓர் இடைநிலையே மிருகநிலை. காலப்போக்கில் மிருகம் மனிதனாகிறது. மக்களின் எண்ணிக்கை வளரவளர மிருகங்களின் எண்ணிக்கை குறைந்துகொண்டே வருவது கவனித்தற்குரிய ஓர் உண்மை. மிருகங்கள் எல்லாம் மனிதர்களாக மாறிக் கொண்டிருக்கின்றன. எத்தனையோ வகை மிருகங்கள் ஏற்கனவே மனிதர்கள் ஆகிவிட்டன. இல்லையானால் அவை வேறு எங்குதான் போயிருக்க முடியும்?

வேதங்களில் நரகத்தைப் பற்றிய பேச்சே இல்லை. ஆனால் பிற்கால சாஸ்திரங்களாகிய புராணங்கள், நரகங்கள் இல்லாவிட்டால் எந்த மதமுமே பரிபூரணமாகாது என்று கருதி, பலவகையான நரகங்களைக் கண்டுபிடித்தன. இந்த நரகங்கள் சிலவற்றுள் மனிதர்கள் வாளால் இரண்டாக அறுக்கப்

படுகிறார்கள், தொடர்ந்து சித்திரவதை செய்யப்படுகிறார்கள். என்றாலும் அவர்கள் சாவதில்லை. இடையீடில்லாமல் துன்பத்தை அனுபவிக்கிறார்கள்! ஆனால் இது ஒரு குறிப்பிட்ட காலத்திற்குத்தான் நடைபெறும் என்று அந்தப் புராணங்கள் கருணையுடன் கூறுகின்றன. செய்த பாவங்களின் பலனை இப்படி நரகத்தில் அனுபவித்த பிறகு, அவர்கள் மீண்டும் பூமிக்கு வருகிறார்கள். அவர்களுக்கு இன்னும் ஒரு வாய்ப்பு தரப்படுகிறது. இப்போது அவர்கள் பெறும் உடல் கர்ம சரீரம் எனப்படுகிறது. நமது விதியை வகுத்துக்கொள்ள இந்த உடலே உதவுகிறது. ஒரு பெரிய வட்டத்தில் நாம் ஓடிக்கொண் டிருக்கிறோம். அந்த வட்டத்தில் இந்த மனித உடல் என்னும் புள்ளியே நம் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் கருவி. எனவே ஜீவன் ஏற்கும் உருவங்களுள் மனித உருவமே மிகச் சிறந்ததாக எண்ணப்படுகிறது. மனிதன் தேவர்களைவிட உயர்ந்தவன்.

இதுவரையிலும் கலப்பற்ற, சிக்கலில்லாத, துவைதத் தத் துவத்தைப் பார்த்தோம். ஆனால் மேலே கூறியதுபோல் இருக்க முடியாது என்று இன்னும் சற்று உயர்ந்த வேதாந்தத் தத்துவம் கூறுகிறது. கடவுளே இந்த உலகிற்கு மூலப் பொருளாகவும் மூல ஆற்றலாகவும் இருக்கிறார். எல்லையற்ற கடவுள் ஒருவரும், அதே தன்மையுள்ள ஆன்மா ஒன்றும், அதே தன்மையுள்ள இயற்கை ஒன்றும் இருப்பதாகச் சொன்னால், இப்படியே முடி வில்லாமல் சொல்லிக்கொண்டே போகலாம். இதனை ஒத்துக் கொள்ள முடியாது. தர்க்க நியாயத்திற்கெல்லாம் இங்கு இட மில்லாமல் போய்விட்டது. எனவே கடவுளே பிரபஞ்சத்திற்கு மூலப் பொருளாகவும் மூல ஆற்றலாகவும் இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. தம்முள்ளிருந்தே அவர் பிரபஞ்சத்தை வெளிபடுத்துகிறார். அப்படியானால், கடவுளே எப்படிச் சுவர் களும் மேஜைகளும் பன்றிகளும் கொலைகாரர்களும் இன் னும் உலகிலுள்ள கொடிய பொருட்களும் ஆனார்? கடவுள் தூயவர் என்று நாம் சொல்கிறோமே! இப்படித் தூய்மையற்ற பொருட்களாக எல்லாம் அவர் எப்படி ஆக முடியும்? விடை இதுதான்: நான் ஓர் ஆன்மா; எனக்கு உடல் இருக்கிறது. ஒரு வகையில் இந்த உடல் என்னில் வேறுபட்டதல்ல. என்றாலும் நான், அதாவது உண்மை நான் இந்த உடம்பல்ல. இப்படித் தான் அதுவும்.

உதாரணமாக நான் ஒரு குழந்தை, நான் ஓர் இளைஞன், நான் கிழவன் என்றெல்லாம் சொல்கிறேன். ஆனால் என்

ஆன்மா மாறவே இல்லை. அது ஒரே ஆன்மாவாகவே இருக்கிறது. இதுபோலவே இயற்கை, கணக்கற்றஆன்மாக்கள் என்றெல்லாம் ஆன இந்தப் பிரபஞ்சம் முழுவதும் இறைவனின் எல்லையற்ற உடல் போலவே இருக்கிறது. அவர் எல்லாவற்றுள்ளும் நிறைந்திருக்கிறார். கடவுள் ஒருவரே மாறாதவர். இயற்கையும் ஆன்மாக்களும் மாறிக்கொண்டே இருக்கின்றன. இந்த மாறுதல்களால் இறைவன் பாதிக்கப்படுவதில்லை. இயற்கை எந்த விதத்தில் மாறுகிறது? உருவங்களில்தான். அது புதுப்புது உருவங்களை எடுத்துக்கொள்கிறது. ஆன்மா இவ்வாறு மாற இயலாது. ஆன்மா அறிவில் சுருங்கவும் விரியவும் செய்கிறது. பாவச் செயல்களால் அது சுருங்குகிறது. ஆன்மாவின் இயல்பு பற்றிய உண்மையான அறிவையும், அதன் தூய்மையையும் குறைக்கும் செயல்கள் பாவச் செயல்கள். ஆன்மாவின் இயற்கைப் பெருமையை விளக்குபவை புண்ணியச் செயல்கள். இந்த ஆன்மாக்கள் அனைத்தும் தூயவையாக இருந்தவைதாம். ஆனால் சுருங்கிவிட்டன. இறையருளாலும் புண்ணியச் செயல்களாலும் இவை விரிவடைந்து தங்கள் பழைய தூய நிலையை அடைந்துவிடும். காலப்போக்கில் ஒவ்வொருவரும் இந்தப் பிரபஞ்ச வட்டத்திலிருந்து விடுதலை பெற்றேயாக வேண்டும். அதற்கான வாய்ப்பும் ஒவ்வொருவருக்கும் சமமாகவே கிடைக்கிறது. என்றாலும் இந்தப் பிரபஞ்சம் முடிவுற்றுவிடாது. ஏனெனில் இது முடிவில்லாதது. இது இரண்டாவது கொள்கை. முதற்கொள்கை துவைதம். இந்த இரண்டாவது கொள்கைப்படி இறைவன், ஆன்மா, இயற்கை என்னும் மூன்று இருக்கின்றன. ஆன்மாவும் இயற்கையும் இறைவனின் திருமேனியாக இருக்கின்றன. எனவே இந்த மூன்றும் ஒரு தொகுதி. இது மத முன்னேற்றத்தில் அடுத்த படியாகும். இதற்கு விசிஷ்டாத்வைதம் என்று பெயர். துவைதத்தின்படி, பிரபஞ்சம் கடவுளால் இயக்கப்படும் ஓர் எந்திரம். விசிஷ்டாத்வைதத்தின்படி பிரபஞ்சம் இறைவனால் வியாபிக்கப்பட்டுள்ள ஓர் உயிர்ப்பொருள்.

கடைசியில் வருவது அத்வைதம். இறைவன் இந்தப் பிரபஞ்சத்தின் மூலப் பொருளாகவும் மூல ஆற்றலாகவும் இருக்கத்தானே வேண்டும் என்ற கேள்வியை எழுப்புகிறார்கள் அத்வைதிகள். அப்படியென்றால் இறைவனே இந்தப் பிரபஞ்சமாக ஆகியிருக்கிறார் என்றாகிவிடுகிறது. இதற்கு எதிர்ப்பேச்சு இல்லை. இறைவனே ஆன்மா; பிரபஞ்சம் அவரது உடல்; உடல் மாறிக்கொண்டே இருக்கிறது; ஆனால் இறைவன்

மாற்றம் இல்லாதவர் என்று மற்றவர்கள் சொல்லும்போது அத்வைதிகள், இது பொருளற்ற பிதற்றல் என்கிறார்கள்.

அப்படியானால் இந்த உலகத்தின் மூலப்பொருள் இறைவனே என்று சொல்வதால் என்ன பயன்? மூலப்பொருள் என்பது மூல ஆற்றலாகிய காரணத்தின் காரியம் அவ்வளவே. காரியம் என்பது காரணத்தின் மறு உருவமே ஆகும். நாம் ஒரு காரியத்தைப் பார்க்கும்போதெல்லாம் அது ஒரு காரணத்தின் வேறு உருவம் என்பதை உணர்கிறோம். பிரபஞ்சம் காரியமாக வும், இறைவன் காரணமாகவும் இருப்பதாகக் கொண்டால் இறைவனின் வேறு உருவே பிரபஞ்சம் என்றாகிறது.

இந்தப் பிரபஞ்சமே இறைவனின் உடல். இந்த உடல் தூலத்தன்மையிலிருந்து சுருங்கிச்சுருங்கி, நுட்பத்தன்மை பெற்றுப் பிரபஞ்சத்திற்கு மூல காரணம் ஆகிறது என்று பிறர் சொன்னால், அத்வைதிகள், இறைவனே இந்தப் பிரபஞ்ச மாகிறார் என்கிறார்கள்.

இப்போது ஒரு நுட்பமான கேள்வி எழுகிறது. இறைவனே பிரபஞ்சம் என்றால், நாமும் நாம் காணும் எல்லா பொருட் களுமே இறைவன்தானே! ஆம். இந்தப் புத்தகமும் இறைவன், எல்லாம் இறைவன்; என் உடல் இறைவன், என் மனம் இறை வன், என் ஆன்மா இறைவன். அப்படியானால் பல உயிர்கள் ஏன் இருக்க வேண்டும்? இறைவனே இந்த லட்சக் கணக்கானவர் களாகப் பிரிந்துவிட்டாரா? அந்த ஒரே கடவுள் இப்படிப் பல லட்சம் உயிர்களாக மாறிவிட்டாரா? இல்லாவிட்டால் எப்படி இத்தனை உயிர்கள் உண்டானார்கள்? பரிபூரணமான ஆற்றலும் பொருளும் ஆன பிரபஞ்சத்தின் ஒரே பொருளான அந்தக் கடவுள் இப்படிப் பலவாகப் பிரிந்தது எப்படி? எல்லையற்றதைப் பிரிக்கவே இயலாது. தூய்மையான இறைவன் பிரபஞ்சமானது எப்படி? அவரே பிரபஞ்சமானார் என்றால், அவர் மாறும் இயல்புடையவர். மாறுபவரானால் அவர் இயற்கையின் ஒரு பகுதியே ஆவார்; இயற்கையாகவும் மாறும் இயல்புடையதாக வும் உள்ள பொருளுக்குப் பிறப்பு, இறப்பு இரண்டும் உண்டு. நம் இறைவனும் மாறும் இயல்புடையவர் என்றால், அவர் ஒரு நாள் அழிந்தே தீரவேண்டும். இதை நன்றாகக் கவனியுங்கள்.

சரி, கடவுளின் எவ்வளவு பகுதி இந்தப் பிரபஞ்சமாகி யுள்ளது? அது அ என்னும் (மதிப்புத் தெரியாத அளவு) பகுதி என்று வைத்துக்கொண்டால், இப்போது கடவுள் அ என்ற அளவு குறைந்துவிட்டார்; அதாவது இப்போதுள்ள கடவுள்,

கடவுள்—அ (கடவுள் கழித்தல் அ). எனவே படைப்புக்குப் பின்பு உள்ள கடவுள், படைப்புக்கு முன்பு உள்ள கடவுளல்ல. ஏனெனில் அவரது ஒரு பகுதிதான் பிரபஞ்சம் ஆகிவிட்டதே!

எனவே அத்வைதிகள், 'பிரபஞ்சம் என்பதே இல்லை; காண்பது வெறும் மாயை. இந்தப் பிரபஞ்சம், தேவர்கள், தேவதைகள் தேவதூதர்கள், இந்த உலகத்தில் பிறந்து சாகும் மற்ற உயிர்கள், மேலும் கீழுமாக வந்து போய்க் கொண்டிருக்கும் ஆன்மாக்கள் எல்லாமே கனவு' என்கிறார்கள். ஜீவன் என்பதே இல்லை. எப்படிப் பல ஜீவர்கள் இருக்க இயலும்? எல்லையற்ற ஒன்றுதான் உள்ளது. ஒரே சூரியன் பல நீர்நிலைகளில் பிரதி பலிக்கும்போது பலவாகத் தோன்றுகிறது. பலகோடி நீர்த் துளிகள் ஒரே சூரியனைப் பலகோடி சூரியன்களாகக் காட்டு கின்றன; ஒவ்வொரு துளியில் தெரியும் பிம்பமும் சூரியனின் குறைவற்ற பிம்பமே. இப்படிப் பலகோடி பிம்பங்கள் தோன்றி னாலும், உண்மையில் உள்ளது ஒரு சூரியனே. இப்படியே எல்லா ஜீவர்களும் பல மனங்களில் பிரதிபலிக்கும் ஒரே இறை வனே. நீர்த்துளிகளைப்போல் மனங்களும் இந்த ஒரே பூரணப் பொருளைப் பிரதிபலிக்கின்றன. இந்தப் பல ஜீவர்களிலும் இறைவனே பிரதிபலிக்கிறார். கனவு என்றாலும் அதற்கு மூல மான ஓர் உண்மைப் பொருள் இருந்தேயாக வேண்டும். அந்த உண்மைப் பொருளே, எல்லையற்ற பரிபூரணப் பொருளாகிய இறைவன்.

உடல், மனம், உயிர் இவற்றின் சேர்க்கையான நீ வெறும் கனவு. ஆனால் உனது உண்மை வடிவம், உண்மை-அறிவு-இன்பமே. நீயே இந்தப் பிரபஞ்சத்தின் இறைவன். நீயே இந்தப் பிரபஞ்சத்தை எல்லாம் படைத்து, மீண்டும் உனக்குள் ளேயே அடக்கிக் கொள்கிறாய். அத்வைதி இப்படித்தான் சொல்கிறான்.

எனவே பிறவிகள், மறுபிறவிகள், வருவது போவது அனைத்தும் மாயையின் கற்பனைகள். நீ எல்லையற்றவன். நீ எங்கே போக முடியும்? சூரியன், சந்திரன், இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் எல்லாவற்றையும் அடக்கிய உனது இயல்பில் வெறும் துளிகளே. நீ எப்படிப் பிறக்கவோ இறக்கவோ முடியும்? நான் ஒருபோதும் பிறக்கவும் இல்லை; பிறக்கவும் மாட்டேன். எனக்குத் தாயோ, தந்தையோ, நண்பர்களோ, பகைவர்களோ இருந்ததில்லை. ஏனெனில் நான் பரிபூரணமான உண்மை அறிவு-இன்பப் பொருள். நானே அவன், நானே அவன்.

இந்த நெறியின்படி எது லட்சியம்? இந்த ஞானம் ஏற்பட்டவன் பிரபஞ்சத்துடன் ஒன்றாகிவிடுகிறான். அவனுக்கு எல்லா சொர்க்கங்களும், பிரம்மலோகம்கூட, இல்லாமல் போய்விடுகிறது, எல்லா கனவும் மறைந்துவிடுகிறது. தானே பிரபஞ்சத்தின் என்றென்றுமுள்ள இறைவன் என்பதை அவன் உணர்கிறான். அவன் தனது உண்மையான தனித்துவமாகிய உண்மை-அறிவு-இன்பம் என்பதை அடைந்து சுதந்திரனாகிறான். சிறு பொருட்களில் இன்பம் காண்பது மறைந்துவிடுகிறது. இந்தச் சிறு உடலின் மூலமும் இந்தச் சிறு தனி உயிரின் மூலமும்தான் நாம் இப்போது இன்ப அனுபவம் பெற்று வருகிறோம். இந்தப் பிரபஞ்சமே நமது உடலாகிவிட்டால், எவ்வளவு இன்ப அனுபவம் கிடைக்கும்! ஓர் உடலுடன் இருக்கும்போதே இன்பம் உண்டானால், எல்லா உடல்களும் என்னுடையனவாக இருக்கும்போது எவ்வளவு இன்பம் கிடைக்கும்! இந்த நிலையில்தான் முக்தி கிடைக்கிறது. இதுதான் அத்வைத வேதாந்தம்.

வேதாந்தத் தத்துவம் மூன்று படிகள் ஏறியிருக்கிறது. இதற்கு மேல் நாம் போக இயலாது. ஏனென்றால், எல்லாம் ஒன்றே என்ற ஒருமைக்கு மேல் போவது எப்படி? எந்த விஞ்ஞானமானாலும், அது ஒருமையை அடைந்துவிட்டால், எக்காரணம் கொண்டும் அதற்கு மேல் போக முடியாது. முழுமை என்ற இந்தக் கருத்திற்கு மேல் போக முடியாது.

எல்லோரும் இந்த அத்வைதத் தத்துவத்தை ஏற்றுப் பின்பற்ற இயலாது; இது கடினமானது. முதன்முதலில் இதைச் சாதாரண அறிவால் புரிந்துகொள்வது கடினம். மிகக் கூர்மையான அறிவும் தைரியமும் தெளிவும் இதற்கு அவசியம். இரண்டாவதாக, பெரும்பான்மையான மக்களுக்கு இது ஏற்றதாகவும் இல்லை. அதனால்தான் இந்த மூன்று படிகள் இருக்கின்றன.

முதற்படியில் தொடங்குங்கள். அதில் கருத்தைச் செலுத்தி அதைப் புரிந்துகொண்ட பிறகு இரண்டாம் படிக்குத் தானாகவே வழி திறக்கும். ஓர் இனம் முன்னேறுவதுபோல்தான் தனி மனிதனும் முன்னேற வேண்டும். மதக் கருத்தின் உச்ச நிலையை அடைய மனிதச் சமுதாயம் எந்தப் படிகளைக் கடந்திருக்கிறதோ, அந்தப் படிகளையெல்லாம் தனி மனிதனும் கடந்து செல்ல வேண்டும். மனித சமுதாயம் ஒரு படியிலிருந்து இன்னொரு படிக்கு முன்னேறப் பலகோடி ஆண்டுகள் சென்றன. ஆனால் தனி மனிதன், மனித இனத்தின் முழு வாழ்வையும் குறைவான கால அளவிலேயே வாழ்ந்துவிடுவான். ஆனால்

எல்லோரும் எல்லா படிகளையும் முறையாகக் கடந்துதான் ஆக வேண்டும்.

உங்களுள் இப்போது அத்வைதிகளாக இருப்பவர்கள் முன்பு தீவிரத் துவைதிகளாக இருந்த காலத்தை நினைத்துப் பாருங்கள். நீங்கள் உடலும் மனமுமே என்ற கருத்து இருக்கும் வரையில் இந்தப் பிரபஞ்சக் கனவையும் ஏற்றுக்கொண்டேயாக வேண்டும். ஒரு பகுதியை ஏற்றால், முழுவதையுமே ஏற்றுத்தான் தீர வேண்டும். உலகம் இருக்கிறது, ஆனால் உருவக் கடவுள் இல்லை என்று சொல்பவன் முட்டாள். உலகம் இருப்பது உண்மையானால், அதற்கு மூலகாரணம் ஒன்று இருந்தேயாக வேண்டும். அதுவே இறைவன். காரியத்தை மட்டும் ஒப்புக்கொண்டு, காரணத்தை ஒப்புக்கொள்ளாமல் இருக்க முடியாது. இந்தப் பிரபஞ்சம் மறையும் போது கடவுளும் மறைவார். அந்த நிலையில் நீங்களே பரிபூரணப் பரப்பிரம்மம் ஆகிவிடுவீர்கள்; அப்போது உங்களைப் பொறுத்தவரையில் பிரபஞ்சமும் மறைந்துவிடும். நீங்கள் ஓர் உடல் என்ற கனவு இருக்கும் வரையிலும் நீங்கள் பிறப்பதாகவும் இறப்பதாகவும் உணரவே செய்வீர்கள். எப்போது இந்தக் கனவு மறைகிறதோ, அப்போதே உங்களுக்குப் பிறப்பும் இறப்பும் உண்டு என்ற கனவு மறைந்துவிடும்; பிரபஞ்சம் உண்டு என்ற கனவும் மறைந்துவிடும். நாம் எதைப் பிரபஞ்சமாகக் காண்கிறோமோ, அதை அப்போது பரிபூரணமான இறைவனாகக் காண்போம்; இதுவரையில் நமக்கு வெளியில் இருந்த இறைவனை இப்போது நமக்கு உள்ளே இருப்பவராக, நமது ஆன்மாவாகக் காண்போம்.

# II. சொற்பொழிவுகள்

## 1. மதத்தின் தேவை

7 ஜூன் 1896

மனித இனத்தின் விதியை உருவாக்குவதற்காகச் செயலாற்றி வந்துள்ள, இன்னும் செயலாற்றி வருகின்ற சக்திகள் பலவாகும். இவற்றுள் மதம் என்று நாம் சொல்கிறோமே, அந்தச் சக்தியை விட வலிமை வாய்ந்தது வேறொன்றுமில்லை. எல்லா சமூக இயக்கங்களுக்கும் பின்னால் எங்கோ நின்று அவை இயங்கக் காரணமாக இருப்பது மதம் என்ற இந்தத் தனிப்பட்ட சக்தியே. மனிதர்களையெல்லாம் ஒன்றாக இணைந்து வாழச் செய்யும் உணர்வைத் தோற்றுவிக்கின்ற சக்திகளுள் மகத்தான சக்தி மதம் என்பதிலிருந்தே தோன்றியுள்ளது.

இனம், தட்பவெப்ப நிலை, ஏன், பாரம்பரியம் இவற்றின் காரணமாக மனிதர்களுள் ஏற்படும் பிணைப்புகளைவிட, மதத்தால் ஏற்படும் பிணைப்புகள் பல நேரங்களில் வலிமை மிக்கவையாக இருப்பது நமக்குத் தெரிந்த விஷயம். ஒரே குலத்தைச் சேர்ந்தவர்களுக்கு இடையே, ஏன், சகோதரர்களுக்கு இடையே இருக்கும் ஒற்றுமையைவிட, ஒரே கடவுளை வழிபடுபவர்களுக்கு மற்றும் ஒரே மதத்தைச் சார்ந்தவர்களுக்கு இடையே காணப்படுகின்ற ஒற்றுமை உறுதிமிக்கதாகவும் நிலைத்து நிற்பதாகவும் இருக்கிறது என்பது எல்லோரும் அறிந்த உண்மை.

மதம் எவ்வாறு தோன்றியது என்பதை அறிய பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இன்று நம்மிடம் வந்து சேர்ந்துள்ள பழமையான மதங்கள் எல்லாம் ஒரு விஷயத்தில் உரிமை கொண்டாடுவதைக் காண்கிறோம். அவை இயற்கைக்கு அப்பாற்பட்டவை, மனிதனால் தோற்றுவிக்கப்படாதவை, மனித சக்திக்கு அப்பால் எங்கிருந்தோ தோன்றியவை என்பதே அந்த உரிமை. தற்கால அறிஞர்கள் இரண்டு கொள்கைகளை ஓரளவு ஒப்புக் கொள்கின்றனர். ஒன்று, இறந்த முன்னோர்களை வழிபடுதல்; மற்றொன்று, எல்லையற்ற பரம்பொருள் கருத்தின் பரிணாம வளர்ச்சி. ஒருசாரார், இறந்த முன்னோர்

வழிபாடுதான் மதத்தின் தொடக்கம் என்று கருதுகிறார்கள். மற்றொரு சாரார், இயற்கைச் சக்திகளை உருவகப்படுத்தி வழிபடத் தொடங்கியதிலிருந்துதான் மதம் தோன்றியது என்கிறார்கள்.

உடல் அழிந்தாலும், அந்த உடலில் வாழ்ந்த உறவினர்கள் வாழ்ந்து கொண்டிருப்பதாக நம்பி, அவர்களை மறக்காமல் இருக்க மனிதன் விரும்புகிறான். அவர்களுக்கு உணவளித்து ஏதோ ஒருவிதத்தில் வழிபடவே விழைகிறான். இதிலிருந்துதான் மதம் என்று நாம் அழைக்கின்ற ஒன்று வளரத் தொடங்கியது.

எகிப்தியர்கள், பாபிலோனியர்கள், சீனர்கள் மற்றும் அமெரிக்காவிலும் வேறு இடங்களிலும் உள்ள பல்வேறு இனத்தினரின் பழமையான மதங்களை ஆராய்ந்தால் முன்னோர் வழிபாடே இந்த மதங்களின் தொடக்கமாக இருந்தது என் பதற்குப் பல தெளிவான சான்றுகள் இருப்பது தெரியவருகிறது. பழங்கால எகிப்தியர்கள் ஆன்மாவைப்பற்றி கொண்டிருந்த முதல் கருத்து, அதற்கு ஒரு நகல் உண்டு என்பதாகும். ஒவ்வொரு மனித உடலின் உள்ளேயும் அதைப் போன்ற நகல் ஒன்று இருக்கிறது; மனிதன் இறந்தபின் இந்த நகல் வெளியே சென்று தொடர்ந்து வாழ்கிறது; இறந்த உடல் கெடாமல் இருக்கும்வரை தான் இந்த நகலும் வாழ முடியும் என்று அவர்கள் நம்பினர். அதனால்தான், இறந்த உடலைச் சேதப்படாமல் பாதுகாக்க மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டனர். உடல்களைப் பாது காக்க மாபெரும் பிரமிடுகளை அவர்கள் கட்டியதற்கும் இதுவே காரணம். இறந்த உடலின் ஏதேனும் ஒரு பகுதிக்குக் கேடு ஏற் பட்டால் நகலுக்கும் அதே கேடு ஏற்படும் என்பது அவர்களது நம்பிக்கையாக இருந்தது. தெளிவாக, இது முன்னோர் வழி பாடுதான்.

பழங்கால பாபிலோனியர்களிடம், நகலைப் பற்றிய இதே கருத்தைச் சிறிது வேறுபாட்டுடன் காண்கிறோம்: நகல் அன் புணர்ச்சியையே இழந்துவிடுகிறது; தனக்கு உணவு, நீர் முதலிய வற்றையும் மற்றும் பல உதவிகளையும் அளிக்கச் சொல்லி, வாழ்பவர்களைப் பயமுறுத்து கிறது; தன் மனைவி, குழந்தை களிடம்கூட அது அன்பை இழந்துவிடுகிறது.

பண்டைய இந்துக்களிடையேகூட முன்னோர் வழிபாட் டின் சில சுவடுகளை நாம் காண்கிறோம். சீனர்களிடையேயும் இந்த முன்னோர் வழிபாடுதான் அவர்களது மதத்திற்கு அடிப்படையாக இருந்தது என்று கூறலாம். இன்றும் அந்தப்

பரந்த நாட்டில் எங்கும் இந்தக் கருத்து ஊடுருவி நிற்கிறது. உண்மையில், சீனாவில் சிறந்து விளங்கும் ஒரே மதம் முன்னோர் வழிபாடு என்றுகூடச் சொல்லலாம். ஆகவே ஒருபக்கம் பார்த்தால், முன்னோர் வழிபாடுதான் மதத்தின் ஆரம்பம் என்ற கருத்து உடையவர்களுக்கு வலிமையான ஆதாரங்கள் இருப்பதுபோல் தோன்றுகிறது.

அதற்கு மாறாக, மதத்தின் ஆரம்பம் இயற்கை வழிபாடு தான் என்பதற்கு ஆதாரங்கள் பழைய ஆரிய இலக்கியங்களில் இருப்பதாகச் சில அறிஞர்கள் கூறுகின்றனர். இந்தியாவின் பல பகுதிகளில் முன்னோர் வழிபாடு இருப்பதற்கு ஆதாரங்கள் இருந்த போதிலும் மிகப் பழைய இலக்கியங்களில் இந்தக் கருத்தின் சுவடே இல்லை. ஆரிய இனத்தின் மிகப் பழைய நூலாகிய ரிக்வேத சம்ஹிதையில், முன்னோர் வழிபாடு பற்றிய செய்தியே காணப்படவில்லை. இயற்கை வழிபாடுதான் அதில் காணப்படுவதாகத் தற்கால அறிஞர்கள் கருதுகின்றனர்.

இயற்கையின் திரைக்குப் பின்னால் இருப்பது என்ன என்று அறிவதற்கு மனித மனம் போராடி வருகிறது. சூரியஉதயம், அழகிய மாலை வேளை, கடும் சூறாவளி போன்ற இயற்கையின் மாபெரும் சக்திகளும், இயற்கையின் எழில் வண்ணங்களும் மனித உள்ளத்தை வியப்பில் ஆழ்த்திச் சிந்தனையைத் தூண்டி வந்துள்ளன. இயற்கையின் திரைக்கு அப்பால், இருப்பவற்றைப் பற்றிச் சிறிதாவது தெரிந்து கொள்வதற்கு மனித மனம் விரும்புகிறது. இந்தப் போராட்டத்தில் மனித மனம், இயற்கையின் இந்தச் சக்திகளை உருவகப்படுத்துகிறது; அவற்றிற்கு ஆன்மாவும் உடலும் அளிக்கிறது; சிலசமயம் அவற்றை அழகு மிக்கதாகவும் சிலசமயம் அனைத்தையும் கடந்ததாகவும் பாவனை செய்கிறது. இவற்றை உருவத்துடனோ உருவமில்லாமலோ எப்படிச் சித்தரித்தாலும் இந்த முயற்சிகளின் முடிவுகள் எல்லாம் விவரிக்க முடியாத கருத்துக்களாகவே அமைகின்றன. புராதன கிரேக்கர்களிடையே இதைக் காண்கிறோம். அவர்களுடைய புராணங்களில் எல்லாம், இயற்கையைத் தத்துவமாக வழிபடும் செய்திகளைக் காண்கிறோம். இவ்வாறே, புராதன ஜெர்மானியர், ஸ்காண்டினேவியர் மற்றும் பிற ஆரிய இனங்களின் புராணங்களிலும் காண்கிறோம். ஆகவே இங்கும் இயற்கையின் சக்திகளை உருவகப்படுத்துவதே மதத்தின் தோற்றத்திற்கு ஆரம்பமாக இருந்தது என்ற கருத்திற்குப் பல வலுவான ஆதாரங்களைக் காண்கிறோம்.

இந்த இரண்டு கருத்துக்களும் ஒன்றுக்கு ஒன்று முரண் பாடு உடையனவாகத் தோன்றுகின்றன. ஆனால் மதத்தின் தோற்றத்திற்கு உண்மையான வித்து என்று நான் கருதும் ஒரு மூன்றாவது கருத்தின்மூலம் இந்த இரு கருத்துக்களையும் இணைக்க முடியும். புலன்களின் வரையறையைக் கடந்து செல்வதற்கான போராட்டமே மதத்திற்கு வித்து என்று நான் கூறுவேன்.

இறந்த முன்னோர்களை, இறந்தவர்களின் ஆவியை மனிதன் தேடுகிறான். அதாவது, உடல் மறைந்த பின், அப்பால் என்ன இருக்கிறது என்பதை ஒரு கணமாவது காண அவன் விரும்புகிறான்; இயற்கையின் மாபெரும் தோற்றங்களுக்குப் பின்னால் இயங்கும் சக்தியைப் புரிந்து கொள்ள விரும்புகிறான். இந்தக் கருத்துக்களில் எதைப் பின்பற்றினாலும் ஒன்று மட்டும் உறுதி; அதாவது அவன் புலன்களின் வரையறையைக் கடந்து செல்ல விரும்புகிறான்.

புலன்களின் நுகர்ச்சியால் மட்டும் மனிதனுக்கு மனநிறைவு ஏற்படுவதில்லை. அவன் அவற்றைக் கடந்து போக விரும்பு கிறான். இதன் விளக்கம் ஏதோ மர்மமாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. கனவுகள் மூலமாகவே மதத்தைப் பற்றிய எண்ணம் முதன்முதலாகக் கிடைக்கிறது என்ற கருத்து இயல் பாக இருப்பதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது. மரணமிலாப் பெருநிலையைப் பற்றிய எண்ணம் கனவுகள் மூலம்தான் மனித னுக்கு முதலில் ஏற்பட்டிருக்கும். என்னவோர் அற்புதமானநிலை அது, அல்லவா? குழந்தைகளும் மன வளர்ச்சி அடையாதவர் களும் கனவிற்கும் நனவிற்கும் இடையில் பெரிய வேறுபாடு காண்பதில்லை என்பது நமக்குத் தெரியும். உடம்பு வெளிப்படை யாக இயங்காத தூக்க நிலையிலும் மனம் சிக்கலான பலவேலை களில் ஈடுபட்டிருக்கிறது. எனவே உடம்பு மறைந்தபின்னும் மனம் தொடர்ந்து தன் வேலைகளைச் செய்துகொண்டே யிருக்கும் என்ற முடிவுக்கு மனிதன் வருவதில் என்ன வியப்பு இருக்க முடியும்? அது இயல்பான முடிவே அல்லவா! இந்தக் கனவுக் கருத்திலிருந்துதான் மனித மனம் மேன்மேலும் உயர்ந்த கருத்துக்களுக்குச் செல்கிறது என்பதுதான் என்னைப் பொறுத்தவரை இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளைப்பற்றிய இயல்பான விளக்கம்.

காலம் செல்லச்செல்ல, பலர் தங்கள் கனவுகள், நனவுநிலையோடு ஒத்திருக்கவில்லை, கனவுநிலையில்

மனிதனுக்குப் புதியதொரு வாழ்க்கை எதுவும் அமைவதில்லை, நனவுநிலையின் அனுபவங்களே கனவில் பிரதிபலிக்கின்றன என்று கண்டார்கள்.

ஆனால் இதற்குள் தேடல் தொடங்கிவிட்டது. இந்தத் தேடல் அகவுலகிலாக இருந்தது. மனத்தின் பல்வேறு நிலைகளைப் பற்றிய ஆராய்ச்சியில் மனிதன் ஆழ்ந்தான். இந்த ஆராய்ச்சியின் பயனாக, கனவு மற்றும் நனவுநிலைகளைவிட உயர்ந்த நிலைகள் இருப்பதைக் கண்டுபிடித்தான். உலகின் முக்கிய மதங்களெல்லாம் இந்த நிலைகளை ஆனந்தப் பரவச நிலை (Ecstasy) அல்லது அக விழிப்புணர்வுநிலை (Inspiration) என்று கூறுகின்றன.

சிறந்த மதங்களை நிறுவியவர்களும் சரி, அதன் தீர்க்கதரிசிகளும் மத ஆச்சாரியர்களும் சரி, நனவுநிலை, தூக்கநிலை இவை இரண்டுமற்ற மன நிலைகளை அடைந்ததாக எல்லா மதங்களிலும் சொல்லப்படுகிறது. அந்த நிலைகளில் ஆன்மீக உலகம் என்று கூறப்படுகின்ற உலகைப் பற்றிய புதியவற்றை அவர்கள் நேருக்குநேர் கண்டதாகவும் சொல்லப்படுகிறது. நம்மைச் சுற்றியுள்ள உண்மைகளை நனவுநிலையில் நாம் உணர்வதைவிட மிகமிக ஆழமாக, ஆன்மீக உண்மைகளை அவர்கள் அந்த நிலைகளில் உணர்ந்தார்கள்.

உதாரணமாக இந்து மதத்தை எடுத்துக் கொள்வோம். வேதங்களை ரிஷிகள் எழுதியதாகச் சொல்கிறார்கள். இந்த ரிஷிகள் சில உண்மைகளை உணர்ந்த முனிவர்கள். 'மந்திரங்களைக் காண்பவர்' அதாவது வேத மந்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் கருத்துக்களை உணர்ந்தவர்கள் என்பதுதான் 'ரிஷி' என்ற சம்ஸ்கிருதச் சொல்லின் பொருள். இவர்கள் தாங்கள் சில உண்மைகளை உணர்ந்திருப்பதாக அறிவித்தார்கள். அதாவது புலன்களுக்கு அப்பாற்பட்ட தத்துவங்களை அறிந்து அந்த உண்மைகளை எழுதியும் வைத்தார்கள். யூதர்கள், கிறிஸ்தவர்கள் இவர்களுடைய மதங்களும் இவ்வாறே சொல்வதை நாம் காண்கிறோம்.

பௌத்தர்களை இதற்கு ஒரு விதிவிலக்கு எனலாம்; உதாரணமாக புத்தமதத்தின் தென் பிரிவினர். இப்போது ஒரு கேள்வி எழலாம்—கடவுள், ஆன்மா இவற்றை புத்த மதத்தினர் ஒப்புக்கொள்வதில்லை என்றால், அவர்களின் மதம் புலன்களுக்கு அப்பாற்பட்ட நிலையிலிருந்து எப்படித் தோன்றியிருக்க முடியும்?

ஆனால் புத்த மதத்தினரும் நிலையான அறநியதிக் கோட்பாடு ஒன்றை ஒப்புக்கொள்கின்றனர். இந்தக் கோட்பாடு நாம் கருதுகின்ற பகுத்தறிவால் உணரப்பட்டதல்ல. புத்தர் புலன்களுக்கு அப்பாற்பட்ட ஒரு நிலையில் இருந்தபோதுதான் இந்தக் கோட்பாட்டைக் கண்டுபிடித்தார். புத்தரின் வாழ்க்கையைப் படித்தவர்களுக்கு, சுருக்கமாக 'ஆசிய ஜோதி'[1] என்னும் அந்த அழகிய கவிதையிலாவது படித்தவர்களுக்கு, புலன்களுக்கு அப்பாற்பட்ட அந்த நிலையை அடையும்வரை புத்தர் போதி மரத்தின் அடியில் உட்கார்ந்திருந்ததாகச் சித்தரிக்கப்பட்டிருப்பது நினைவிருக்கலாம். புத்தரின் உபதேசங்கள் அனைத்தும் புலன்களுக்கு அப்பாற்பட்ட நிலையில் பிறந்தவைதாம்; அறிவால் ஆராய்ந்து தெளிந்தவை அல்ல.

இவ்வாறு மிக உன்னதமானதொரு கருத்தை எல்லா மதங்களும் வெளியிடுகின்றன. மனித மனம் சிலவேளைகளில் புலன்களின் எல்லைகளை மட்டுமல்லாமல், பகுத்தறிவின் ஆதிக்கத்தையும் கடந்து செல்கிறது என்பதுதான் அந்தக் கருத்து. அந்த நேரங்களில், புலன்களின் மூலமாகவோ ஆராய்ச்சி மூலமாகவோ உணர முடியாத பல பேருண்மைகளை மனித மனம் நேருக்குநேர் காண்கிறது. இந்த உண்மைகளே உலகின் எல்லா மதங்களுக்கும் அடிப்படையாக இருக்கின்றன.

இந்த உண்மைகளை மறுத்துக் கூறவும், இவற்றைப் பகுத்தறிவின் மூலம் சோதிக்கவும் நமக்கு உரிமை உண்டு. மனித மனத்திற்குப் புலன்களையும் அறிவின் எல்லைகளையும் கடந்து செல்லும் விசித்திரமான இந்த ஆற்றல் உண்டு என்று உலகிலுள்ள எல்லா மதங்களும் உறுதியாகச் சொல்கின்றன. இந்த ஆற்றலை அவை ஓர் உண்மை வாக்குமூலமாகவே வெளியிடுகின்றன.

மதங்கள் கூறும் இந்தக் கருத்துக்கள் எவ்வளவு தூரம் உண்மை என்பது இருக்க, எல்லா மதங்களுக்கும் பொதுவான ஒரு பண்பு இருப்பதை நாம் காண்கிறோம். உதாரணமாக, இயற்பியல் கண்டுபிடித்துள்ள உண்மைகளெல்லாம் தூலமானவை. மதங்களின் இந்தக் கருத்துக்களோ எளிதில் புரிந்துகொள்ள முடியாதவை (Abstractions). மிகவும் மேம்பாடடைந்துள்ள மதங்களில் இந்தக் கருத்துக்களைக் கலப்பற்ற ஒரு தனிநிலைத் தத்துவமாகவே சொல்லியிருக்கிறார்கள். சிலர்

1. The Light of Asia;எட்வின் ஆர்னால்ட் (Edwin Arnold) எழுதிய புத்தரின் வரலாறு பற்றிய காவியம்.

சூட்சுமத் தத்துவமாக இதைக் கூறுகிறார்கள்; சிலர் எங்கும் நிறைந்த ஒரு சக்தியாக இதைக் கருதுகிறார்கள்; கடவுள் என்னும் சூட்சும உருவமாகச் சிலர் கூறுகிறார்கள்; சிலர் அறநெறிக் கோட்பாடாகக் கருதுகிறார்கள்; எல்லா பொருட்களின் உள்ளும் ஊடுருவி நிற்கும் சாரமாக வேறு சிலர் கூறுகிறார்கள்.

தற்காலத்திலும்கூட, புலன்களுக்கு அப்பாற்பட்ட மன நிலையோடு தொடர்பு கொள்ளாமலேயே செய்யப்படும் மதப் பிரச்சாரத்தின் பலவித முயற்சிகளும், பழங்காலத்தினரின் தத் துவங்களையே வேறு பெயர்களில் சொல்வதாக அமைகிறது. அதாவது 'ஒழுக்கக் கோட்பாடு', 'லட்சிய ஒருமை' என்று பல வாறாகக் கூற வேண்டியிருக்கிறது. இந்தத் தத்துவங்கள் புலன் களுக்கு அப்பாற்பட்டவை என்பதை இவர்களின் இந்தச் செயல்கள் எல்லாம் காட்டுகின்றன.

நாம் யாரும் இதுவரை ஒரு லட்சிய புருஷனைப் பார்த்த தில்லை. ஆனாலும் அப்படிப்பட்ட ஒருவரை நம்பச் சொல் கிறார்கள். லட்சிய பூரண மனிதன் யாரையும் நாம் இதுவரை பார்த்ததில்லை. ஆனாலும் அத்தகைய ஒரு குறிக்கோள் இல் லாமல் நம்மால் முன்னேற முடியாது.

பல மதங்களின் கருத்துக்களிலிருந்து ஓர் உண்மை நமக்குப் புலப்படுகிறது. எல்லோருக்கும் குறிக்கோளாக இருக்க வேண்டிய ஒரு தத்துவம் இருக்கிறது. அதை உருவமுள்ள தாகவோ உருவமற்றதாகவோ, ஓர் அறநியதியாகவோ, ஒரு தோற்றமாகவோ அல்லது எல்லாவற்றுள்ளும் ஊடுருவி நிற்கும் சாரமாகவோ மதங்கள் நம்முன் வைக்கின்றன. இந்தக் குறிக்கோளை அடையவே நாம் எப்போதும் போராடிக் கொண் டிருக்கிறோம். யாராயிருந்தாலும் சரி, எங்கேயிருந்தாலும் சரி, எல்லையற்ற சக்தியே ஒவ்வொருவருக்கும் குறிக்கோளாக இருக்கிறது; எல்லையற்ற ஆனந்தமே குறிக்கோளாக இருக்கிறது. எல்லையற்ற சக்திக்காகவோ எல்லையற்ற ஆனந்தத்திற்காகவோ நடக்கும் போராட்டமே, நம்மைச் சுற்றி நாம் காணும் பல செயல்களுக்கும் இயக்கங்களுக்கும் காரணமாக இருக்கிறது.

எல்லையற்ற சக்தியை அடையவே தாங்கள் போராடினா லும், புலன்களால் அதை அடைய முடியாது என்பதைச் சிலர் விரைவில் அறிந்து கொள்கிறார்கள். எல்லையற்ற ஆனந்தத் தைப் புலன்கள் மூலமாக அடைய முடியாது; அதாவது, எல்லையற்றதை வெளிப்படுத்துவதற்கு, எல்லைக்குக் கட்டுப் பட்ட புலன்களாலும் உடலாலும் முடியாது என்று அவர்கள்

தெரிந்துகொள்கிறார்கள். எல்லைக்குட்பட்ட ஒன்றின் மூலம் எல்லையற்றதை வெளிப்படுத்த முடியாது என்பதை உடனேயோ தாமதித்தோ அறிந்து, இத்தகைய முயற்சியைச் சீக்கிரமே மனிதன் கைவிட வேண்டியிருக்கிறது. இந்த முயற்சியை விட்டுவிடுவதே, துறப்பதே, நீதிநெறிக்கு அடிப்படையாக அமைகிறது. நீதிநெறியின் அடிப்படையே துறவுதான். துறவை அடிப்படையாகக் கொள்ளாத நீதிநெறியை இதுவரை யாரும் பிரச்சாரம் செய்ததில்லை. 'நான் அல்ல, நீதான்' என்றே நீதிநெறி எப்போதும் கூறுகிறது. 'தன்னலமல்ல, பிறர் நலம்' என்பதே அதன் குறிக்கோள்.

புலன்களின்மூலம் எல்லையற்ற சக்தியையும் ஆனந்தத்தையும் அடைவதற்கு மனிதன் முயலும்போது, அவன் விடாமல் பிடித்துக் கொண்டிருக்கும் தனது தனித்துவத்தைப் பற்றிய கருத்துக்களைத் துறந்துவிட வேண்டும் என்று நீதிநெறி விதிகள் கூறுகின்றன. மற்றவர்களை முன்னால் வைத்து, நீ பின்னால் இருக்க வேண்டும். 'நான்தான் முதலில்' என்று புலன்கள் கூறுகின்றன. அறநெறியோ, 'நான்தான் கடைசி' என்று கூறுகிறது.

இவ்வாறு எல்லா நீதிநெறிக் கோட்பாடுகளும் துறவை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அதாவது ஜடப்பொருள் நிலையில், 'நான்' என்பதை அழித்துக்கொள்வதுதான் நன்னெறியே தவிர, வளர்த்துக் கொள்வதல்ல. எல்லையற்றது ஒரு நாளும் ஜடப்பொருள் நிலையில் வெளிப்படாது. அது நடைபெற முடியாததும் நினைக்க முடியாததுமாகும். மனிதன் ஜடப்பொருள் நிலையைவிட்டு உயர்ந்த நிலைகளுக்குச் சென்றால்தான், எல்லையற்றதைப் பற்றிய அறிவு அவனுக்கு ஏற்படும். இந்த முறையைப் பின்பற்றியே எல்லா நீதிநெறிக் கோட்பாடுகளும் அமைந்துள்ளன. எல்லாவற்றின் மையக் கருத்தும் நிரந்தரமாகத் தன்னலத்தை விடுவதுதான். முழுமையான தன்னல மறுப்பே அறநெறியின் குறிக்கோளாகும்.

தனித்துவத்தைப்பற்றி நினைக்காமல் இருக்க வேண்டும் என்று சொன்னாலே மனிதர்கள் அதிர்ச்சி அடைகிறார்கள். தங்கள் தனித்துவம் என்று அவர்கள் சொல்லிக் கொள்ளும் அந்த நிலையை இழப்பதற்கு மிகவும் பயப்படுகிறார்கள். அதே நேரத்தில், அவர்களே நீதிநெறியின் உயர்ந்த குறிக்கோள்களைச் சரி என்று ஒப்புக்கொள்கிறார்கள். அந்த நீதிநெறியின் நோக்கம், குறிக்கோள், கருத்து எல்லாமே தனித்துவத்தை அழிப்பதே

தவிர, வளர்ப்பதல்ல என்பதை அவர்கள் கணநேரமும் நினைத்துப் பார்ப்பதில்லை.

பயன்கருதும் அளவுகோல்களைக் கொண்டு (Utilitarian standards) மனிதனின் நீதிநெறி உறவுகளை விளக்க முடியாது. முதலாவதாக, பயன்கருதும் நோக்கங்களை ஆதாரமாகக் கொண்டு, எந்த நீதிநெறி விதியையும் உருவாக்க முடியாது. இயற்கையைக் கடந்த ஒன்றின் அனுமதி இல்லாமல், அல்லது உணர்வுகடந்த நிலை என்று நான் கூறுகின்ற நிலையை அடையாமல் எந்த நீதிநெறியும் இருக்க முடியாது. எல்லையற்றதை நோக்கிச் செல்லும் போராட்டம் இன்றி, ஒரு குறிக்கோள் இருக்க முடியாது. மனிதர்களைத் தங்கள் சமுதாயக் கட்டுப்பாட்டிற்குள் சிறைப்படுத்தி வைக்க விரும்பும் எந்த நெறியாலும் மனித குலத்தின் நீதிநெறிக் கோட்பாடுகளை விளக்க முடியாது. எல்லையற்ற பொருளுக்கான போராட்டம், புலன்களுக்கு அப்பால் உள்ள நிலையை அடைவது இவையெல்லாம் நடக்காதது, அசட்டுத்தனமானது என்று கூறி அவற்றை விட்டு விடும்படி நம்மிடம் சொல்கிறார்கள் பயன்கருதுவோர். அதே மூச்சில், நீதிநெறி முறைகளைப் பின்பற்றி சமுதாயத்திற்கு நன்மை செய்யுமாறும் கேட்கிறார்கள்.

நாம் எதற்காக நன்மை செய்ய வேண்டும்? நன்மை செய்வது இரண்டாம் பட்சமே. நமக்கு ஒரு குறிக்கோள் இருக்க வேண்டும். நீதிநெறி நமது குறிக்கோள் அல்ல; அது நம் குறிக்கோளுக்கு உதவும் சாதனம் மட்டுமே. ஒரு குறிக்கோள் இல்லையென்றால் நீதிநெறி முறைகளை நாம் எதற்காகக் கடைப்பிடிக்க வேண்டும்? மற்றவர்களுக்கு நான் எதற்காக நன்மை செய்ய வேண்டும்? ஏன் அவர்களுக்குத் தீமை செய்யக் கூடாது? இன்பம்தான் மனித குலத்தின் குறிக்கோள் என்றால், மற்றவர்களைத் துன்புறுத்தி, நான் ஏன் இன்பம் பெறக் கூடாது? எது என்னைத் தடுக்க முடியும்?

இரண்டாவதாக, பயன்கருதிச் செயல்புரிவதன் அடிப்படை மிகவும் குறுகியது. இப்பொழுது நடைமுறையிலுள்ள சமுதாயப் பழக்க வழக்கங்களெல்லாம், சமுதாயத்தின் தற்போதைய நிலையை ஆதாரமாகக் கொண்டவை. ஆனால் சமுதாயம் என்றென்றைக்கும் இப்படியேதான் இருக்கும் என்று தீர்மானிப்பதற்கு, பயன்கருதுவோருக்கு என்ன உரிமை இருக்கிறது? பல காலத்திற்கு முன் சமுதாயம் இருக்கவில்லை; இன்னும் சில காலத்திற்குப் பின் இல்லாமலும் போகலாம்.

அனேகமாக, நாம் இன்னும் உயர்ந்த நிலையை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும் பரிணாமப் பாதையில், நாம் இப்போது இருப்பது ஒரு படியாக இருக்கலாம். எனவே சமுதாய அடிப்படையில் மட்டுமே இயற்றப்படும் விதிகள் நிலையானவையாக இருக்க முடியாது; மனித இயல்பின் முழுப் பரிமாணத்தையும் தன்னுள் அடக்கிக்கொள்ள முடியாது. பயன்கருதும் கொள்கைகள், மிஞ்சிப் போனால் தற்போதைய சமுதாயச் சூழ்நிலையில் மட்டுமே செயல்பட முடியும். அதற்கு அப்பால் அவற்றிற்கு மதிப்பில்லை.

ஆனால் மதம், ஆன்மீகம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுந்த எந்த ஒழுக்கநெறியும் சரி, நீதிநெறிக் கோட்பாடுகளும் சரி எல்லையற்ற மனிதத் தத்துவம் முழுவதையுமே தனது எல்லையாகக் கொண்டுள்ளது. இது தனிமனிதனைக் கருத்தில் கொள்கிறது, ஆனால் அதன் தொடர்புகள் எல்லையற்றதுடன் உள்ளது. அது சமுதாயத்தையும் கருத்தில் கொள்கிறது. சமுதாயம் என்பது, தனிமனிதர்கள் பலரின் சேர்க்கை தானே! தனிமனிதனுக்கும் அவனது நிலையான உறவுகளுக்கும் இந்த நீதிநெறி பொருந்துமானால் சமுதாயத்திற்கும், அது எந்த நிலையில் இருந்தாலும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பொருந்தும். ஆகவே மனித குலத்திற்கு என்றுமே ஆன்மீக மதம் அவசியமாக இருப்பதை நாம் காண்கிறோம். எவ்வளவுதான் இன்பம் தருவதாக இருந்தாலும், ஜடப் பொருட்களைப் பற்றியே மனிதன் எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்க முடியாது.

ஆன்மீகத்தில் அதிகமாக ஈடுபடுவது, நடைமுறை உறவுகளைக் குலைக்கிறது என்று சொல்லப்படுகிறது. சீன ஞானி கன்பூஷியஸ் வாழ்ந்த அந்தக் காலத்திலேயே, 'இந்த உலகைக் கவனிப்போம். இந்த உலக விவகாரங்களை முடித்த பிறகு மறு உலகங்களைப்பற்றிக் கவனிப்போம்' என்ற கருத்து இருந்தது. இந்த உலக விவகாரங்களைக் கவனிப்பது மிகவும் நல்லதே. ஆன்மீகத்தில் அதிகமாக ஈடுபடுவது நம் நடைமுறை உறவுகளைச் சிறிது பாதிக்கும் என்றால், நடைமுறை என்று சொல்லப்படுகின்ற உலக விவகாரங்களில் அதிகமாக ஈடுபடுவது இம்மை மறுமை இரண்டையுமே பாதிக்கும். அது நம்மை உலோகாயதர்களாக்கி விடும். ஏனெனில் மனிதன் இயற்கையைக் குறிக்கோளாகக் கொள்ள வேண்டியவன் அல்ல, அதற்கும் மேலே போக வேண்டியவன்.

இயற்கையைக் கடந்து செல்லப் போராடிக் கொண்டிருக்கும் வரைதான் மனிதன் மனிதனாக இருக்க முடியும். இயற்கை என்பது அக இயற்கை, புற இயற்கை இரண்டையுமே குறிக்கிறது. நமது உடம்பிலும் அதற்கு வெளியேயும் உள்ள ஜடப்பொருளின் மூலக்கூறுகளை அடக்கி ஆள்கின்ற நியதிகள் மட்டுமல்ல, நம்முள் இருக்கும் நுண் இயற்கையும் இவற்றின் ஆளுகைக்கு உட்பட்டதே. இந்த நுண் இயற்கையே உண்மையில், புற இயற்கையை நடத்தும் சக்தியாகும். புற இயற்கையை வெல்வது நல்லது, மிகவும் சிறப்பு வாய்ந்தது. அக இயற்கையை வெல்வது அதைவிடச் சிறந்தது. நட்சத்திரங்களையும் கிரகங்களையும் ஆள்கின்ற நியதிகளைப்பற்றித் தெரிந்துகொள்வது சிறப்பானது, நல்லது. ஆனால் மனித குலத்தின் ஆசைகள், உணர்ச்சிகள், மனம் இவற்றைப் பற்றிய நியதிகளைத் தெரிந்துகொள்வது கோடிமடங்கு நல்லதும் சிறந்ததுமாகும். இந்த அக மனிதனை வெல்வது, மனித மனத்தின் நுண்ணிய செயல்பாடுகளின் ரகசியங்களைப் புரிந்துகொள்வது, மனத்தின் அற்புதமான ரகசியங்களைத் தெரிந்து கொள்வது—இவை மதத்திற்கு மட்டுமே சொந்தமானவை.

மனித இயல்பு, அதாவது சாதாரண மனித இயல்பு பெரிய ஜட உண்மைகளையே அறிய விரும்புகிறது. சாதாரண மனிதனால் நுண்ணிய எதையும் புரிந்துகொள்ள முடியாது. பாமர மக்கள், ஆயிரம் ஆட்டுக் குட்டிகளைக் கொல்லும் சிங்கத்தை வியந்து பாராட்டுகின்றனர். இது சிங்கத்திற்குக் கணநேர வெற்றி; ஆனால் இறந்த ஆயிரம் ஆட்டுக் குட்டிகளைப்பற்றி அவர்கள் துளிகூடப் பச்சாதாபப்படுவதில்லை என்று சரியாகவே சொல்லப்பட்டிருக்கிறது. மக்கள் உடல் வலிமையின் வெளிப்பாடுகளில்தான் அதிக இன்பம் காண்கிறார்கள். சாதாரண மக்களிடம் நாம் இந்தத் தன்மையையே காண்கிறோம். புற விஷயங்களில்தான் அவர்கள் இன்பம் காண்கிறார்கள். அவற்றை மட்டுமே அவர்களால் புரிந்துகொள்ள முடிகிறது.

ஆனால் புலனின்பத்தைப் பொருட்படுத்தாத சிலர் ஒவ்வொரு சமுதாயத்திலும் இருக்கத்தான் செய்கிறார்கள். இவர்கள் புலன்களைக் கடந்தவற்றில் இன்பம் காண்கிறார்கள். ஜடத்தைவிட உயர்ந்ததன் கணநேரக் காட்சி இவர்களுக்கு அவ்வப்போது கிடைக்கிறது. அதை அடைய அவர்கள் போராடுகிறார்கள். இத்தகையோரின் எண்ணிக்கை பெருகும் போதுதான் ஒரு நாடு உயர்வடைகிறது. பயன்கருதுவோர்

இதனை வீண் முயற்சி என்று சொன்னாலும், எல்லையற்றதை நோக்கிச் செல்லும் இந்த முயற்சிகள் நின்றுபோகும் போதுதான் ஒரு நாடு தாழ்வடைகிறது. சமுதாயங்களின் வரலாறுகளை ஊன்றிப் படித்தால் இந்த உண்மை புலனாகும். அதாவது, ஒவ்வோர் இனத்தின் வலிமைக்கும் ஆதார ஊற்று அதன் ஆன்மீகம்தான். ஆன்மீகம் தளர்ந்து, உலோகாயதம் வலுப்படும் போது அந்த இனத்தின் வீழ்ச்சி தொடங்குகிறது.

மதத்திலிருந்து உறுதியான தத்துவங்களையும் உண்மை களையும் கற்றுக் கொள்கிறோம். மதத்தின்மூலம் பல வசதி களைப் பெற்றுக் கொள்கிறோம். இது தவிர மதத்தை ஒரு விஞ்ஞானமாக, ஆராய்ச்சிக்கு உரியதாகக் கொண்டால், அது மனித மனத்திற்குக் கிடைக்கக்கூடிய உயர்ந்த, சிறந்த, ஆரோக் கியமான பயிற்சியாகவும் அமையும். எல்லையற்றதை அடை வதற்கான இந்தத் தேடல், அதைப் பற்றுவதற்கான இந்தப் போராட்டம், புலன்களின் கட்டுப்பாடுகளைக் கடந்து செல் வதற்கான இந்த முயற்சி, அதாவது ஜடத்திலிருந்து ஆன்மீக மனிதனை உருவாக்குவது போன்ற இந்த முயற்சி, எல்லையற் றதை நம்மோடு ஐக்கியப்படுத்திக் கொள்வதற்காக அல்லும் பகலும் நடக்கும் இந்த முயற்சி, இந்த முயற்சிதான், இந்தப் போராட்டம்தான், மனிதன் செய்கின்ற போராட்டங்களிலெல் லாம் மிகவும் பெருமையானதும் சிறப்புமிக்கதுமாகும்.

உண்பதிலேயே சிலர் பேரானந்தம் அடைகின்றனர். அவர்கள் அவ்வாறு ஆனந்தம் அடையக் கூடாது என்று சொல்ல நமக்கு உரிமை இல்லை. குறிப்பிட்ட சில பொருட்களை உடைமையாகக் கொள்வதில் சிலர் மகிழ்ச்சி அடைகின்றனர். அதையும் தடுக்க நமக்கு உரிமையில்லை. அதேபோல் ஆன்மீகச் சிந்தனையில் மிகவுயர்ந்த ஆனந்தம் காணும் மனிதனைத் தடுக்க மற்றவர்களுக்கும் உரிமை இல்லை. பரிணாம வளர்ச்சியில் ஓர் உயிர் எவ்வளவு கீழ்மட்டத்தில் உள்ளதோ அவ்வளவு அதிகம் அது புலன்களில் இன்பம் காணும். நாயையோ ஓநாயையோ போன்று ஆர்வத்துடன் ஒருசில மனிதர்களால் மட்டுமே உண்ண முடியும். நாய் அல்லது ஓநாயின் இன்பமெல்லாம் புலன்களைப் பற்றிக்கொண்டுள்ளதுபோல் தோன்றுகிறது. எல்லா நாடுகளிலுமே, மனிதகுலத்தின் கீழ்ப்படிகளில் உள்ளவர்கள் புலன்களில்தான் இன்பம் காண்கின்றனர். படித்தவர்களும் பண்பட்டவர்களும் சிந்தனை,தத்துவம், கலை, அறிவியல் இவற்றில் இன்பம் காண்கின்றனர். ஆன்மீகம்

இவை அனைத்தையும்விட உயர்ந்த நிலை. அது எல்லையற்ற தானதால் அதன் நிலையும் மிகவுயர்ந்தது; அதை ரசிக்கத் தெரிந்தவர்களுக்கு அதில் கிடைக்கும் இன்பமும் மிகவுயர்ந்தது. ஆகவே மனிதன் இன்பத்தைத் தேட வேண்டும் என்ற பயன்கருதும் கொள்கைப்படி பார்த்தாலும், அவன் மதச் சிந்தனைகளை வளர்க்கவே வேண்டும். ஏனெனில் அதில்தான் மிகவுயர்ந்த இன்பம் உள்ளது. ஆகவே மத ஆராய்ச்சி மிகவும் அவசியம் என்று எனக்குத் தோன்றுகிறது. அதிலிருந்து கிடைக்கும் பலன்களைக் கொண்டு இந்த உண்மையை அறியலாம்.

மனித மனத்தை முன்னேற வைப்பதற்கான தூண்டுசக்தி களுள் மிகவும் சிறந்தது மதம். ஆன்மீகம் நமக்குத் தரும் சக்தியைப் போன்று வேறு எந்த லட்சியமும் தருவதில்லை. மனித வரலாற்றைப் பார்ப்போமானால், இப்படித்தான் எப்போதும் இருந்து வந்திருக்கிறது என்பதும், ஆன்மீக சக்திகள் அழிந்துவிடவில்லை என்பதும் நமக்குத் தெரிய வரும். பயன்கருதும் கொள்கையின் அடிப்படையிலேயே மனிதர்கள் நல்லவர்களாகவும் ஒழுக்க சீலர்களாகவும் இருக்க முடியும் என்பதை நான் மறுக்கவில்லை. பயன்கருதும் நோக்கத்தை மட்டுமே கடைப்பிடித்து, ஒழுக்கசீலர்களாகவும் நல்லவர் களாகவும் பலர் இந்த உலகில் இருந்திருக்கிறார்கள்.

ஆனால் உலகையே அசைப்பவர்கள், உலகம் முழு வதிலுமே ஒரு கவர்ச்சி சக்தியைப் பரவச் செய்வதுபோல் வாழ்ந்தவர்கள், யாருடைய சக்தி ஆயிரக்கணக்கானோரின் உள்ளங்களில் வேலை செய்கிறதோ அவர்கள், யாருடைய வாழ்க்கை மற்றவர்களின் வாழ்க்கையில் ஆன்மீகத் தீயைக் கொழுந்துவிட்டெரியச் செய்கிறதோ அவர்கள்— இவர்கள் அனைவருடைய பின்னணியிலும் ஆன்மீகம் ஒளிர்வதை நாம் எப்போதும் காண்கிறோம். அவர்கள் இந்தத் தூண்டு சக்தியை மதத்திலிருந்து பெறுகிறார்கள்.

ஒவ்வொரு மனிதனுக்கும் இயல்பாகவும் பிறப்புரிமையாக வும் உள்ள எல்லையற்ற ஆற்றலை அடைய உதவுகின்ற மிக உன்னதமான தூண்டுசக்தி மதம். குணத்தை உருவாக்குவதிலும், நல்ல சிறந்த அனைத்தையும் தருவதிலும், மற்றவர்களுக்கும் தனக்கும் அமைதியை அளிப்பதிலும் மிக உன்னதமான தூண்டு சக்தி மதமே. மதத்தை இந்த நோக்கிலிருந்துதான் ஆராய வேண்டும்.

முன்னைவிடப் பரந்த அடிப்படையில் மதத்தை நாம் ஆராய வேண்டும். மதத்தைப் பற்றிய குறுகிய, எல்லைக்கு உட்பட்ட, விவாதத்திற்குரிய கருத்துக்களை விட்டுவிட வேண்டும். மதப் பிரிவுகள் மற்றும் இனம், நாடு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்ட மதக் கருத்துக்களை நாம் கைவிட வேண்டும். ஒவ்வோர் இனமும் ஒவ்வொரு நாடும் தனக்கென்று ஒரு தனிக் கடவுளை அமைத்துக் கொண்டு, மற்றவர்களின் கடவுள் தவறு என்று நினைப்பது கடந்த காலத்திற்கே உரிய மூடநம்பிக்கை. இதைப்போன்ற எல்லா கருத்துக்களையும் நாம் ஒதுக்கிவிட வேண்டும்.

மனித மனம் விரிவடையுந்தோறும் அதன் ஆன்மீகமும் படிப்படியாக விரிவடைகிறது. உலகின் எல்லா மூலைமுடுக்குகளையும் சென்றடையாத ஒரு சிறு எண்ணத்தைக்கூட மனிதனால் நினைக்கவே முடியாத காலம் வந்துவிட்டது. எந்திரங்கள்மூலம் உலகம் முழுவதோடும் நாம் தொடர்பு கொள்ளத் தொடங்கிவிட்டோம். ஆகவே உலகின் எதிர்கால மதங்கள் உலகம் முழுவதையுமே தழுவக் கூடியனவாகவும் பரந்த எண்ணங்கள் கொண்டவையாகவும் இருக்க வேண்டும்.

எதிர்கால மதத்தின் லட்சியங்கள், உலகில் நல்லதாகவும் உன்னதமாகவும் இருக்கின்ற அனைத்தையும் தழுவியதாக இருக்க வேண்டும். அதேவேளையில் வருங்காலத்தில் எல்லையற்று வளர்வதற்கான இடம் கொண்டதாகவும் இருக்க வேண்டும். பழமையின் நன்மைகளையெல்லாம் பாதுகாக்க வேண்டும்; ஏற்கனவே உள்ளவற்றோடு, இனி வரப்போகும் கருத்துக்களையும் சேர்த்துக் கொள்ளக் கதவுகளைத் திறந்து வைத்திருக்கவும் வேண்டும்.

ஏற்றுக்கொள்ளும் தன்மை உடையனவாக மதங்கள் இருக்க வேண்டும். கடவுளைப் பற்றிய தங்கள் லட்சியங்கள் வேறுபட்டிருப்பதற்காக ஒன்றையொன்று வெறுப்புடன் பார்க்கக் கூடாது. கடவுள் நம்பிக்கையற்ற, அதாவது நாம் 'கடவுள்' என்றால் எப்படிப் புரிந்துகொள்கிறோமோ அப்படிப் புரிந்துகொள்ளாத, எத்தனையோ ஆன்மீகச் செம்மல்களையும் சான்றோர்களையும் நான் என் வாழ்நாளில் கண்டுள்ளேன். ஒருவேளை அவர்கள் நம்மைவிடச் சிறந்த முறையில் கடவுளைப் புரிந்து கொண்டிருக்கலாம்.

கடவுளைப் பற்றிய சகுணக் கருத்துக்களான உருவமுடையவர், எல்லையற்றவர், அறநெறி, லட்சிய மனிதர் போன்ற

எல்லாமே மதம் என்ற தலைப்பில் அடங்க வேண்டும். இவ்வாறு, மதங்களெல்லாம் விரிந்த கருத்துக்கள் உடையனவாகும்போது, நல்லது செய்யும் அவற்றின் ஆற்றலும் பல நூறு மடங்குபெருகி விடும். மாபெரும் சக்தி வாய்ந்தவையான மதங்கள், குறுகிய நோக்கத்தின் காரணமாகவும் குறுகிய கட்டுப்பாடுகளின் காரண மாகவும், உலகிற்கு நன்மையைவிடத் தீமையே அதிகம் செய் துள்ளன. தற்காலத்தில்கூட, ஏறக்குறைய ஒரேவிதமான கருத்துக் களைக் கொண்ட பிரிவுகளும் சமுதாயங்களும் அந்தக் கருத்துக் களை ஒரேவிதமாக வெளியிடாததால், தம்முள் சண்டையிட்டுக் கொள்வதை நாம் பார்க்கிறோம். எனவே மதங்கள் இன்னும் விரிய வேண்டும். மதக் கருத்துக்கள் உலகம் தழுவுவனவாக, விரிந்து பரந்தனவாக, எல்லையற்றனவாக மாற வேண்டும். அப்போதுதான் மதம் தன் முழு ஆதிக்கத்தையும் செலுத்த முடியும். ஏனெனில் மதத்தின் ஆற்றல் உலகத்தில் இப்போது தான் வெளிப்பட ஆரம்பித்திருக்கிறது.

மதங்கள் அழிந்து கொண்டிருக்கின்றன, ஆன்மீகச் சிந்தனைகள் மறைந்து கொண்டிருக்கின்றன என்று சிலவேளை களில் சொல்லக் கேட்கிறோம். ஆனால் அவை இப்பொழுது தான் வளர ஆரம்பித்திருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. விரிவுபடுத்தப்பட்ட, தூய்மைப்படுத்தப்பட்ட மத சக்தி என்பது மனித வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் ஊடுருவப் போகிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரிடம் அல்லது புரோகி தர்களின் கைகளில் இருந்ததுவரை, மதம் கோயில்களிலும் சர்ச்சுகளிலும் புத்தகங்களிலும் கொள்கைகளிலும் விழாக் களிலும் உருவங்களிலும் சடங்குகளிலும் மட்டும்தான் அடங்கி இருந்தது. ஆனால் உண்மையான, ஆன்மீகமயமான, உலகம் தழுவிய கருத்துக்களை எய்தும்போது மட்டுமே மதம் உண்மை யாக உயிர்த்துடிப்பு கொண்டதாக முடியும். அப்பொழுதுதான் மதம் நம் இயல்போடு ஒன்றும்; ஒவ்வொரு கணமும் நம்முடன் வாழும்; நம் சமுதாயத்தின் ஒவ்வொரு மூலைமுடுக்கிலும் ஊடுருவி நிற்கும்; இதற்கெல்லாம் மேலாக, இதுவரை இருந்ததை விட, நல்லது செய்வதற்கு எல்லையற்ற ஆற்றல் உடையதாக மாறும்.

வாழ்ந்தால் எல்லாம் வாழும், வீழ்ந்தால் எல்லாம் வீழும் என்கிற நிலைமை இருப்பதால் பல்வேறு மதங்களுக்கிடையே இப்போது தேவைப்படுவது நட்புறவுதான். இந்த நட்புறவு பரஸ்பர மதிப்பையும் மரியாதையையும் அடிப்படையாகக்

கொண்டதாக இருக்க வேண்டும். இந்த நட்புறவு, இப்போது பல மதங்களில் துரதிர்ஷ்டவசமாகக் காணப்படுவதான, தாமே உயர்ந்தவை, மற்றவை தாழ்ந்தவை, தம் ஆதரவு அவற்றிற்குத் தேவைப்படுகிறது, என்பன போன்ற குறுகிய நோக்கங்களின் அடிப்படையில் உள்ள போலி நட்புறவாக இருக்கக் கூடாது. ஒருபுறம், மனத்தினுடைய செயல்பாடுகளின் ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டு எழுந்த, துரதிர்ஷ்டவசமாக, மதம் என்ற பெயருக்கு இப்போதும் தாங்களே முழு உரிமை உள்ளவை என்று கூறுகின்ற மதக் கருத்துக்கள்; மறுபுறம், பூமியில் நின்றுகொண்டு, அதேவேளையில் வானத்தின் ரகசியங்களைத் தங்கள் அறிவால் ஆராய்கின்ற அதாவது பௌதீக விஞ்ஞானக் கருத்துக்கள். இவை இரண்டிற்கும் இடையேதான் இந்த நட்புறவு மிக அதிகமாகத் தேவைப்படுகிறது.

இந்த ஒற்றுமை உருவாவதற்காக, இருசாராரும் விட்டுக் கொடுக்க வேண்டும்; இந்தத் தியாகங்கள் சிலவேளைகளில் மிகப் பெரிதாகவும், சிலவேளைகளில் மிகவும் துன்பம் தருவனவாகவும் இருக்கக்கூடும். ஆனால் இந்தத் தியாகங்களின் மூலம் தங்கள் நிலை உயர்ந்திருப்பதையும், தாங்கள் உண்மையை நோக்கி நன்கு முன்னேறியிருப்பதையும் இவர்கள் அறிந்து கொள்ள முடியும். முடிவில், காலம், இடம் இந்த இரண்டு பரிமாணங்களின் ஆளுகைக்கு உட்பட்டு நிற்கும் அறிவானது, காலம், இடம், மனம், புலன்கள் இவற்றையெல்லாம் கடந்து நிற்கக்கூடிய முழுமையான, எல்லையற்ற, இரண்டற்ற ஒன்றாகிய தத்துவத்தை அடைந்து இரண்டறக் கலந்துவிடும்.

## 2. மனிதனின் உண்மை இயல்பு

21 ஜூன் 1896

மனிதன் தன் புலன்களை மிகவும் இறுக்கமாகப் பற்றிப்பிடித் திருக்கிறான். தான் வாழும் இந்தப் புறவுலகம் உண்மை என்று எவ்வளவுதான் அவன் நினைத்தாலும், தனி மனிதர்கள் மற்றும் இனங்களின் வாழ்க்கையில், அவர்கள் தங்களை அறியாம லேயே, 'இது உண்மைதானா?' என்று கேட்கும் காலம் ஒன்று வரவே செய்கிறது. புலன்கள் நம்பத் தகுந்தவைதானா என்று எண்ண ஒரு நொடிநேரம்கூட அவகாசம் இல்லாத, கணந் தோறும் ஏதாவது புலனின்பத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் மனிதனுக்குக்கூட மரணம் வந்துவிடுகிறது. அப்போது அவனும், 'இது உண்மைதானா?' என்று கேட்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. மதம் இந்தக் கேள்வியில் ஆரம்பிக்கிறது; இதன் பதிலில் முடிகிறது. வரலாறுகூட நமக்கு உதவ முடியாத மிகப் புராதன காலத்தில், புராணங்களின் மர்மமான ஒளியில், நாகரீகத் தின் மங்கலான அந்தி வெளிச்சத்தில், இதே கேள்விதான் கேட்கப்பட்டது—'இது என்ன ஆகிறது? எது உண்மை?'

கவிதை நயம் செறிந்ததான கடோபநிடதம் இந்தக் கேள் வியுடன் தொடங்குகிறது: 'இறக்கின்ற மனிதனைப்பற்றி விவா தம் ஒன்று எழுகிறது. அவன் அடியோடு மறைந்துவிட்டான் என்று ஒரு சாராரும், அவன் இன்னும் உயிரோடிருக்கிறான் என்று இன்னொரு சாராரும் அடித்துச் சொல்கிறார்கள். இதில் எது உண்மை?'[1] பல பதில்கள் சொல்லப்பட்டுள்ளன. மனஇயல், தத்துவம், மதம் இவை மூன்றும் உண்மையில் இந்தக் கேள்விக் கான பதில்களால்தான் நிரம்பியுள்ளன. அதேவேளையில் இந்தக் கேள்வியே எழாமல் தடுக்கவும், 'எல்லாவற்றையும் கடந்தது எது? எது உண்மை?' என்று கேட்பதான மனத்தின் அமைதி யின்மையைத் தடுத்து நிறுத்தவும் முயற்சிகள் நடந்துள்ளன.

---

1. யேயம் ப்ரேதே விசிகித்ஸா மனுஷ்யே ।
அஸ்தீத்யேகே நாயமஸ்தீதி சைகே ॥ —கடோபநிடதம், 1. 1. 20.

ஆனால் மரணம் என்பது இருக்கும் வரையில், இந்த அடக்கு முறைகளெல்லாம் தோல்வியிலேயே முடியும்.

மரணத்திற்கு அப்பால் ஒன்றுமே இல்லையென்று நாம் பேசலாம்; நம் எதிர்பார்ப்புகள், ஆசைகள் எல்லாவற்றையும் நிகழ்காலத்திற்குள் அடக்கிவிட்டு, புலன்களால் அனுபவிக்கப் படுகின்ற இந்த உலகிற்கு அப்பால் ஏதாவது இருக்கிறதா என்று நினைக்காமல் இருப்பதற்குக் கடுமையாகப் போராட லாம். வெளியில் இருக்கும் எல்லாமே, நம்மை இந்தப் புலன் அனுபவத்தின் குறுகிய எல்லைக்குள் கட்டுப்படுத்துவதற்கே ஒருவேளை உதவலாம். நாம் இந்த எல்லையை விட்டு, விரி வடைந்து, அப்பால் போகாமல் தடுப்பதற்கு இந்த உலகம் முழு வதுமே ஒன்று சேரலாம். ஆனாலும் மரணம் என்பது இருக்கும் வரையில் இந்தக் கேள்வி மறுபடியும் மறுபடியும் எழவே செய் யும். 'உண்மைகளிலெல்லாம் சிறந்த உண்மை, பொருட்களிலெல் லாம் சிறந்த பொருள் என்றெண்ணி நாம் பற்றிப்பிடித்துக் கொண்டிருக்கும் இந்த எல்லா பொருட்களின் முடிவு மரணம் என்பதுதானா?' கண நேரத்தில் உலகம் கரைந்து மறைந்து விடு கிறது. செங்குத்துப் பாறை ஒன்றின் விளிம்பில் நின்றுகொண்டு, விரிந்து பரந்து கிடக்கின்ற எல்லையற்ற வெளியைக் காணும் எந்த மனமும், எவ்வளவுதான் கல்லாக இருந்தாலும், பயந்து பின்வாங்கி, 'இது உண்மைதானா?' என்று கேட்கும் நிலை வந்தே தீரும். மனித மனம் தன் சக்திகளையெல்லாம் திரட்டிச் சிறிதுசிறிதாக வாழ்க்கை முழுவதும் வளர்த்த எதிர்பார்ப்புகள் எல்லாம் கண நேரத்தில் மறைந்துவிடுகின்றன. அவை உண்மை தானா? இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லியே தீரவேண்டும். காலம் இந்தக் கேள்வியின் வலிமையைக் குறைப்பதில்லை; மாறாக, அதிகரிக்கவே செய்கிறது.

இன்பமாக வாழ வேண்டும் என்ற ஆசை எல்லோருக்குமே இருக்கிறது. இன்பத்தை நாடி ஒவ்வொன்றின் பின்னாலும் ஓடு கிறோம். புலன்களால் அனுபவிக்கின்ற புற உலகில் பைத்தியக் காரத்தனமாக நாம் தொடர்ந்து செயல்பட்டுக்கொண்டே இருக்கிறோம்.

வாழ்க்கையே வெற்றிமேல் வெற்றியாக இருக்கின்ற ஓர் இளைஞனைக் கேட்டால், வாழ்க்கை உண்மையானது என்று அடித்துச் சொல்கிறான்; அதை நிச்சயமாக நம்பவும் செய்கிறான். ஒருவேளை அதே இளைஞனுக்கு வயதாகி, அதிர்ஷ்டம் தன்னிடம் இருந்து விலகிவிலகிச் செல்வதை அவன்

உணரும்போது, இது விதி என்று அவனே சொல்வான். தன்னுடைய ஆசைகள் நிறைவேற முடியாது என்பதை முடிவில் உணர்ந்து கொள்கிறான் அவன். அவன் எங்கே சென்றாலும், கடக்க முடியாத வலிமைவாய்ந்த ஒரு சுவர் அவனுக்கு முன் தடையாக எழுகிறது.

புலன்களால் நடைபெறும் எந்தச் செயலுக்கும் ஓர் எதிர்ச் செயல் உண்டு. எல்லாமே கண நேரத்தில் மறைவதுதான். இன்பம், துன்பம், ஆடம்பரம், செல்வம், அதிகாரம், வறுமை எல்லாமே, ஏன், வாழ்க்கையேகூடக் கணநேரத்தில் மறைவதுதான்.

மனிதகுலத்திற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. சூன்ய வாதிகளுடன் சேர்ந்துகொண்டு, எதுவுமே இல்லை, நமக்கு ஒன்றுமே தெரியாது, எதிர்காலத்தைப் பற்றியோ, கடந்த காலத்தைப் பற்றியோ, ஏன் நிகழ்காலத்தைப் பற்றியோகூட நம்மால் எதையும் எப்பொழுதும் அறிந்துகொள்ள முடியாது என்று நம்புவது ஒரு வழி. இறந்தகாலம், எதிர்காலம் இவற்றை மறுத்து, நிகழ்காலத்தை மட்டுமே ஒப்புக்கொள்ள விரும்பு பவன், பைத்தியக்காரனே என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். இது, ஒருவன் தாய்தந்தையை மறுத்து, குழந்தையை மட்டும் ஒப்புக்கொள்வது போன்றவாதமே. இறந்தகாலத்தை யும் எதிர்காலத்தையும் மறுக்க வேண்டுமானால், நிகழ் காலத்தையும் மறுத்தேயாக வேண்டும். இது ஒரு வழி, அதாவது சூன்யவாதிகளின் வழி. உண்மையிலேயே சூன்யவாதியாக ஒரு நிமிடமேனும் இருந்த மனிதனை நான் இதுவரை பார்த்ததில்லை. பேசுவது மிகவும் சுலபம்.

இப்போது அடுத்த வழியைப் பார்க்கலாம். விளக்கம் தேடுவது, உண்மையைத் தேடுவது, எப்பொழுதும் மாறிக் கொண்டும் கண நேரத்தில் மறைந்தும் போகக்கூடிய இவ்வுலகில் எது உண்மை என்று கண்டுபிடிப்பது. இதுவே அடுத்த வழி.

ஜடப்பொருளின் மூலக்கூறுகள் சேர்ந்து உருவாகியுள்ள இந்த உடம்பில் உண்மையானது என்று ஏதாவது இருக்கிறதா? சரித்திரத்தின் ஆரம்பத்திலிருந்தே இந்தக் கேள்விக்கு விடை தேடும் முயற்சி மனித மனத்தில் இருந்துவந்திருக்கிறது. மிகவும் பழங்காலத்திலேயே மனிதர்களின் மனத்தில், இதைப் பற்றிய சிந்தனை வெளிச்சங்கள் அவ்வப்போது தோன்றியிருப்பதையும் நாம் காண்கிறோம். அழிந்து போகக்கூடிய இந்த உடலுக்கு அப்பால் போய், இந்த உடலைப் போலவே இருந்தாலும்

இன்னும் நிறைவு பெற்றதாக, குறைகள் அற்றதாக, இந்த உடல் அழிந்த பின்னும் நிலைத்திருப்பதாகவுள்ள ஒன்றைப்பற்றி அந்தக் காலத்திலேயே மனிதன் அறிந்திருந்ததைக் காண்கிறோம். ரிக்வேதத்தில் ஒரு பாடல் வருகிறது; இறந்த உடலை எரிக்கும் அக்கினி தேவனைப் பார்த்து, 'ஓ அக்கினியே! இவனை உன்னுடைய கரங்களில் மென்மையாக ஏந்திச் செல். நிறைவுள்ள, ஒளிமிக்க உடலை இவனுக்குக் கொடு, துன்பமும் மரணமும் அறவே இல்லாத முன்னோர்களின் உலகத்திற்கு இவனை எடுத்துச் செல்' என்று பிரார்த்திப்பதாக அதில் காணப்படுகிறது. இதே கருத்தை எல்லா மதங்களிலும் நீங்கள் காண முடியும்.

அத்துடன் வேறொரு கருத்தும் இருப்பது தெரிகிறது. எல்லா மதங்களும், ஒரு முக்கியமான உண்மையைச் சொல்கின்றன. மனிதன் ஓர் உயர்ந்த நிலையிலிருந்து தாழ்ந்த நிலையை அடைந்தவன் என்பதே அது. உலகில் தோன்றிய அத்தனை மதங்களும் ஒன்றுவிடாமல் இந்த உண்மையை ஒப்புக் கொண்டிருக்கின்றன. இதனைப் புராணங்களின் கதை மொழியிலோ, தத்துவத்தின் தெளிவான மொழியிலோ, அழகிய கவிதை நடையிலோ பலவிதமாகச் சொல்லியிருக்கலாம். மனிதன், முன்பிருந்த உயர்வான நிலையிலிருந்து தாழ்வடைந்தவனே என்ற உண்மையை எல்லா சாஸ்திரங்களும் புராணங்களும் வலியுறுத்துகின்றன. யூதர்களின் மத நூலில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஆதாமின் வீழ்ச்சி பற்றிய கதையின் சாரம் இதுவே. இந்துமத சாஸ்திரங்களில் இந்த உண்மை மீண்டும்மீண்டும் சொல்லப்படுகிறது. இது அவர்கள் சத்திய யுகம் என்று அழைக்கும் காலத்தைப் பற்றிய கனவாகும்.

சத்திய யுகம் எனப்படும் அந்தப் பொற்காலத்தில் ஒருவன், தான் விரும்பும்வரை மரணத்தைத் தள்ளிப் போடலாம்; விருப்பப்படி உடலை எவ்வளவு நாள் வேண்டுமானாலும் உயிருடன் வைத்துக் கொள்ளலாம். அவனது மனம் எப்போதும் தூய்மையாகவும் உறுதியாகவுமே இருக்கும். அங்கே தீமை, துன்பம் இவையெல்லாம் இல்லவே இல்லை. இப்போதைய யுகம் அந்த அப்பழுக்கற்ற சத்திய யுகத்தின் வீழ்ச்சியே. கூடவே பிரளயக் கதையையும் நாம் காண்கிறோம். இப்போதைய யுகம் முந்தைய யுகத்தின் வீழ்ச்சியே என்று எல்லா மதங்களுக்கும் சொல்வதற்கு இந்தப் பிரளயக் கதையே சான்று. இந்த உலகம் சிறிதுசிறிதாக வீழ்ச்சியடைய ஆரம்பித்து மிகவும் தாழ்ந்த நிலையை

அடைந்தவுடன், ஜலப்பிரளயம் தோன்றி மனித குலத்தின் பெரும்பகுதியை அழித்துவிட்டது. பின்னர் மறுபடியும் உயர்வடையும் முயற்சி ஆரம்பித்தது. அந்தத் தூய நிலையை நோக்கி உலகம் மறுபடியும் சிறிதுசிறிதாக முன்னேறுகிறது.

இதேபோல் பழைய ஏற்பாட்டில் உள்ள பிரளயக் கதையைப்பற்றி உங்கள் எல்லோருக்கும் தெரியும். பழங்கால பாபிலோனியர்கள், எகிப்தியர்கள், சீனர்கள், இந்துக்கள் இவர் களிடையேயும் இதே கதை நிலவுவதைக் காண்கிறோம்.

மனு என்ற பண்டைய முனிவர் கங்கைக் கரையில் தவம் செய்து கொண்டிருந்தபோது ஒரு சிறிய மீன் அவரிடம் வந்து அடைக்கலம் புகுந்தது. அவர் அதைத் தம்மிடம் இருந்த கமண்டல நீரில் விட்டார். பின்னர் மீனிடம், 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டார். தன்னை ஒரு பெரிய மீன் துரத்துவதாகவும், தனக்குப் பாதுகாப்பு வேண்டுமென்றும் அந்த மீன் மனுவிடம் கேட்டுக் கொண்டது. மனு அந்தச் சிறிய மீனைத் தம் வீட்டிற்கு எடுத்துச் சென்றார். காலையில் பார்த் தால், அந்த மீன் கமண்டலம் அளவுக்குப் பெரிதாக வளர்ந் திருந்தது. அதற்கு மேலும் அந்தக் கமண்டலத்தில் தான் வாழ முடியாது என்று அது கூறியது.

மனு அந்த மீனை ஒரு குளத்தில் விட்டார். அடுத்த நாள் அது குளத்தளவு வளர்ந்து, தான் இனிமேல் அந்தக் குளத்தில் வாழ முடியாது என்று கூறியது. ஆகவே மனு அந்த மீனை ஓர் ஆற்றிற்கு எடுத்துச் செல்ல வேண்டியிருந்தது. அதை அவர் ஆற்றில் விட்டார். மறுநாள் காலையில் மீன் ஆறளவு வளர்ந்து விட்டது.

பிறகு மனு அதைக் கடலில் விட்டார். அப்போது அந்த மீன், 'ஓ மனு, நான்தான் இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தவன். இந்த உலகத்தைப் பெருவெள்ளத்தால் நிரப்பப் போகிறேன். உன்னை எச்சரிப்பதற்காகவே நான் இந்த உருவத்தில் வந்திருக் கிறேன். நீ ஒரு பெரிய கப்பல் செய்து ஒவ்வொரு வகை மிருகத் திலும் ஓர் ஆண், ஒரு பெண் இவற்றை அதில் பாதுகாத்து வை. உன் குடும்பத்தையும் கப்பலில் ஏற்றிக் கொள். என்னுடைய கொம்பு தண்ணீரிலிருந்து வெளியே நீட்டிக் கொண்டிருக் கும். கப்பலை அந்தக் கொம்பில் கட்டிவிடு. பிரளயம் அடங் கியவுடன் கப்பலைவிட்டு வெளியே வந்து உலகில் மனித இனத்தைப் பெருக்கு' என்று கூறியது. உலகம் பெரு வெள்ளத் தில் மூழ்கியது. மனு, அந்த மீன் சொன்னபடியே தன்

குடும்பத்தையும், எல்லா வகை மிருகங்களின் இணைகளையும் எல்லாவிதமான செடி கொடிகளின் விதைகளையும் வைத்துப் பாதுகாத்தார். பிரளயம் அடங்கியவுடன் வெளியே வந்து உயிர்வகை பெருக வழி செய்தார். மனுவிலிருந்து தோன்றியதால் நாம் 'மனிதன்' ஆனோம்.

மனிதர்களின் மொழி என்பது அகத்தில் இருக்கும் உண்மையை வெளிப்படுத்துவதற்கான முயற்சியே. ஒரு குழந்தையின் மழலை மொழிகூட மிகவுயர்ந்த தத்துவத்தை வெளிப்படுத்துவதற்காகச் செய்யும் முயற்சியே என்பதை நான் உறுதியாக நம்புகிறேன். அதை வெளிப்படுத்துவதற்கு வேண்டிய உறுப்புகளோ வழியோ குழந்தைக்கு இல்லை, அவ்வளவுதான். மிகவுயர்ந்த தத்துவஞானியரின் மொழிக்கும், குழந்தைகளின் மழலை மொழிக்கும் உள்ள வேறுபாடு, அளவில்தான் இருக் கிறதே தவிர, தன்மையில் இல்லை. மிகவும் சரியானது, தவறே இல்லாதது, ஒழுங்குமுறைக்கு உட்பட்டது என்று தற்கால மொழியைப்பற்றி நீங்கள் நினைக்கிறீர்கள். அவ்விதம் மிகவும் சிறந்ததாக நீங்கள் கருதும் மொழிக்கும், பழங்காலத்தினரின் தெளிவில்லாத, மர்மமான, புராண மொழிகளுக்கும் அளவில் மட்டும்தான் வித்தியாசம் இருக்கிறது.

இந்த எல்லா மொழிகளுக்கும் பின்னால் ஓர் உன்னதமான கருத்து இருக்கிறது. அந்தக் கருத்து தன்னை வெளிப்படுத்திக் கொள்வதற்காகப் போராடுகிறது. பண்டைய புராணக் கருத்துக்களுக்குப் பின்னால், ஒளிவிடும் உண்மை மறைந் திருக்கிறது. அதேவேளையில் தற்காலத்தவரின் அழகான பளபளப்பான வார்த்தைஜாலங்களுக்குப் பின்னால் வெறும் குப்பைதான் இருக்கிறது; இதனைக் கூற நான் மிகவும் வருந்துகிறேன்.

ஆகவே புராணங்களில் இருக்கிறது என்பதற்காகவோ தற்காலத்தைச் சேர்ந்த திருவாளர் இன்னார் அல்லது திருமதி இன்னாரின் கருத்துக்களுக்கு ஒத்துவரவில்லை என்பதற் காகவோ எந்தக் கருத்தையும் நாம் ஒதுக்க வேண்டியதில்லை. தங்கள் மதங்களைத் தோற்றுவித்தவர்கள் கற்பித்த புராணங் களில் நம்பிக்கை வைக்க வேண்டும் என்று பல மதங்கள் சொல்வதற்காக, மதங்களைப் பார்த்து யாரேனும் கேலி செய்து சிரிப்பார்களேயானால், தற்காலத்தவர்களின் கருத்தைப் பார்த்து அவர்கள் இன்னும் அதிகமாகச் சிரிக்க வேண்டும். தற்காலத்தில் மோஸஸ், புத்தர், ஏசு போன்ற சமயச் சான்றோர்களின் கருத்தை

ஒருவன் எடுத்துச் சொன்னால், அவனைக் கேலி செய்கிறார்கள். அதே மனிதன், ஹக்ஸ்லி, டிண்டால், டார்வின் இவர்களின் கருத்துக்களைச் சொன்னால், கண்ணை மூடிக்கொண்டு அவற்றை ஏற்றுக்கொள்ளப் பலர் இருக்கிறார்கள். 'ஹக்ஸ்லி சொல்லியிருக்கிறார்' என்றால் போதும்; அதுவே பலருக்கு வேதவாக்கு. நாம் மூடநம்பிக்கைகளிலிருந்து விடுபட்டிருக்கும் அழகைப் பாருங்கள்! அது மதத்தின் மூடநம்பிக்கை, இது விஞ் ஞானத்தின் மூடநம்பிக்கை, அவ்வளவுதான் வித்தியாசம். மதத் தின் மூடநம்பிக்கையிலிருந்து வாழ்வளிக்கும் உன்னதமான ஆன்மீகக் கருத்துக்கள் தோன்றின. விஞ்ஞானத்தின் மூட நம்பிக்கையிலிருந்தோ காமமும் பேராசையும்தான் ஏற்பட் டுள்ளன. அந்த மூடநம்பிக்கை கடவுளை வழிபடுவது, இந்த மூடநம்பிக்கையோ பணம், புகழ், அதிகாரம் போன்ற விஷயங் களைப் பற்றியது; வித்தியாசம் அவ்வளவுதான்.

இப்போது புராணத்திற்குத் திரும்புவோம். எல்லா புராணக் கதைகளுக்கும் பின்னால் ஓர் உன்னதமான கருத்து இருப்பதை நாம் காண்கிறோம். மனிதன் தனது மேலான நிலையிலிருந்து வீழ்ச்சி அடைந்துவிட்டான் என்பதே அது. தற்கால ஆராய்ச்சி, இந்த நிலையை முற்றிலும் மறுப்பதுபோல் தெரிகிறது. பரிணாம வாதிகள் புராணக் கருத்துக்களுக்கு முற்றிலும் முரணான கருத் துக்கள் உடையவர்கள்போல் தெரிகிறார்கள். சிப்பி-பிராணி களிலிருந்தே (Mollusc) மனிதன் தோன்றினான் என்று பரிணாம வாதிகள் கருதுகிறார்கள். எனவே புராணங்கள் சொல்வது உண்மையாக இருக்க முடியாது என்பது அவர்கள் வாதம்.

இந்தியாவில் நிலவும் ஒரு புராணக் கருத்து மற்ற நாடுகளில் நிலவும் புராணங்களின் கருத்தையும் தற்கால ஆராய்ச்சியையும் இணைக்கும் பாலமாக இருக்கிறது. இந்தியப் புராணங்களில் ஒரு சுழற்சிக் கொள்கையைக் (Theory of Cycle) காண்கிறோம். எல்லா முன்னேற்றங்களும் அலைகள் வடிவத்தில் இருப்பதாக அது சொல்கிறது. ஒரு வீழ்ச்சி, தொடர்ந்து ஓர் எழுச்சி, பின் னர் வீழ்ச்சி, தொடர்ந்து எழுச்சி, இவ்வாறு செல்கிறது. இயக்கம் என்பது சுழற்சியாக உள்ளது.

தற்கால ஆராய்ச்சியின்படிப் பார்த்தால்கூட, மனிதன் பரிணமித்துக் கொண்டே செல்கிறான் என்பது சரியாகாது. ஒவ்வொரு விரிவுக்கும் முன்னால் ஓர் ஒடுக்கம் இருக்க வேண் டும். எந்திரத்திற்குள் எவ்வளவு சக்தியைச் செலுத்துகிறோமோ அதே அளவு சக்தியைத்தான் நாம் அதிலிருந்து பெற முடியும்

என்று தற்கால விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். இல்லாத திலிருந்து இருப்பதை உண்டாக்க முடியாது.

மனிதன், சிப்பி-பிராணிகளிடமிருந்துதான் தோன்றினான் என்பது உண்மையானால், புத்தர், கிறிஸ்து போன்ற பூரணமான மனிதர்கள் இந்தப் பிராணிகளுக்குள் ஒடுங்கியிருந்திருப்பார்கள் என்பதும் உண்மையாகத்தான் இருக்க வேண்டும். அப்படி இல்லையென்றால், இந்த மகாபுருஷர்கள் எங்கிருந்து தோன்றினார்கள்? சூன்யத்திலிருந்து எதுவும் தோன்ற முடியாது. இவ்வாறு, சாஸ்திரங்களைத் தற்கால ஆராய்ச்சிகளோடு இணைத்துப் பார்க்கும் நிலையில் நாம் இருக்கிறோம். சிறிதுசிறிதாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு, கடைசியில் பூரணமான மனிதனாக ஆகும் அந்தச் சக்தி, சூன்யத்திலிருந்து தோன்றியிருக்க முடியாது. அது எங்கேயாவது இருந்திருக்க வேண்டும். அந்தச் சக்தி உயிரின் முதல் கருப்பொருளிலிருந்தோ (Protoplasm), முதுகில் ஓடுள்ள பிராணிகளிலிருந்தோதான் வளர ஆரம்பித்தது என்றால், அது எப்படியாவது அந்த முதல் பொருளுக்குள் ஒடுங்கித்தான் இருந்திருக்க வேண்டும்.

மனம் என்றும் உயிர் என்றும் நாம் பலவிதமாகக் கூறுகின்ற சக்தியின் தோற்றத்திற்கு, உடல் என்று நாம் அழைக்கின்ற மூலக்கூறுகளின் கூட்டுப் பொருட்கள் காரணமா அல்லது உடலின் தோற்றத்திற்கு மனம் காரணமா என்று பெரிய விவாதமே நடந்து கொண்டிருக்கிறது. உலக மதங்கள் எல்லாம் மனம்தான் உடலின் தோற்றத்திற்குக் காரணம், மனத்தின் தோற்றத்திற்கு உடல் காரணமல்ல என்று கூறுகின்றன. உடல் என்று நாம் அழைக்கும் எந்திரத்தின் பல பாகங்களின் இயக்கத்தால் தோன்றுவதே மனம் என்று கருதுகின்ற நவீனப் பிரிவுகளும் உள்ளன.[1]

இரண்டாவது கருத்தை எடுத்துக் கொள்வோம். இதன்படி, பௌதிக மற்றும் ரசாயனப் பொருட்களால் ஆக்கப்பட்டுள்ள இந்த எந்திரத்திலிருந்தே, அதாவது உடல் மற்றும் மூளையின் தொகுதியிலிருந்தே எண்ணத் தொகுதி தோன்றியுள்ளது. ஆனால் இந்தக் கூற்று கேள்விக்குப் பதிலளிக்கவில்லை. கேள்வி அப்படியே இருக்கிறது. உடலை ஆக்குவது எது? மூலக்கூறுகளை ஒருங்கிணைத்து உடலை உருவாக்குவது எந்தச் சக்தி? சுற்றியுள்ள ஜடப்பொருள் தொகுதியிலிருந்து மூலக்கூறுகளை

---

1. உதாரணமாக, Auguste Comte-யின் Positivism.

எடுத்து எனது உடலை ஒருவிதமாகவும், வேறு உடல்களை வேறு விதமாகவும் உருவாக்குவது எந்தச் சக்தி? இந்த எல்லை யற்ற வேறுபாடுகளை எது உண்டாக்குகிறது? மூலக்கூறுகளின் சேர்க்கையான உடலிலிருந்தே மனம் எனப்படும் சக்தி தோன் றியுள்ளது என்று சொல்வது, குதிரைக்கு முன்னால் வண்டியை இணைப்பது போலாகும். இந்தச் சேர்க்கைகள் எங்கிருந்து வந்தன? இவற்றைச் சேர்க்கின்ற சக்தி எங்கே இருந்தது?

இந்தச் சேர்க்கைக்குக் காரணம் வேறு ஏதோ ஓர் ஆற்றல் என்றும், அந்த ஆற்றலே மூலக்கூறுகளைத் திரட்டி உடலை உண்டாக்கியதென்றும் கொள்வோம். அப்படியானால், அவ் வாறு உண்டாக்கப்பட்ட உடலிலிருந்தே ஆற்றல் உண்டாகிறது என்றாகும். இது சரியான பதிலல்ல.

எல்லா உண்மைகளையும் விளக்காவிட்டாலும், மிக அதிக மான உண்மைகளை விளக்குவதாகவும், ஏற்கனவே இருக்கும் கருத்துக்களுக்கு முரண்படாததாகவும் உள்ள கருத்தைத்தான் நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். ஜடப்பொருளைக் கொண்டு உடலை ஆக்கும் சக்தி எதுவோ, அதுவேதான் உடல் மூலமாக வெளிப்படவும் செய்கிறது என்று சொல்வது நியாயமாக உள்ளது. ஆகவே உடலின் மூலக்கூறுகளுடைய சேர்க்கையா லேயே மனம் உண்டாகியதென்றும், மனம் அல்லது எண்ணத் தொகுதிக்கென்று தனியான இருப்பு இல்லை என்றும் சொல் வது பொருளற்றது. அது மட்டுமல்ல, ஜடப்பொருளிலிருந்து சக்தி பிறக்க முடியாது. மாறாக, ஜடப்பொருள் என்று நாம் சொல்லும் ஒன்று இல்லவே இல்லை என்று நிரூபிக்க முடியும். ஜடப்பொருள் என்பது சக்தியின் ஒரு நிலையே. திடத்தன்மை, கடினத்தன்மை அல்லது ஜடப் பொருட்களின் வேறு எந்த நிலையும், இயக்கத்தின் பலனே என்று நிரூபிக்க முடியும். திரவப் பொருட்களின் சுழற்சிச் சக்தியை அதிகப்படுத்துவதால், அவை திடப் பொருட்களின் சக்தியைப் பெறுகின்றன.

சூறாவளியைப் போன்று சுழன்று கொண்டிருக்கும் (Vortex Motion) ஒரு காற்றுத் திரட்சி, திடப் பொருளின் ஆற்றலைப் பெறுகிறது; அது திடப் பொருட்களைத் துளைக்கவும் உடைக்கவும் வல்லதாகிறது. சிலந்திவலையின் ஒரு நுண்ணிய இழையை, எல்லையற்ற வேகத்தில் செலுத்த முடிந்தால் அது ஓர் இரும்புச் சங்கிலியின் உறுதியைப் பெற்று, தேக்கு மரத்தைக்கூட அறுத்துச் சென்றுவிடும். இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால், ஜடப் பொருள் என்று நாம்

கூறுவது இல்லவே இல்லை என்று நிரூபிப்பது எளிது. ஆனால் ஆற்றல் என்பது ஜடப்பொருளின் ஒரு நிலை என்று நிரூபிக்க இயலாது.

உடலின்மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் சக்தி எது? அது எந்தச் சக்தியாக இருந்தாலும் மூலக்கூறுகளின் வாயிலாக மனித உடல் போன்ற உருவங்களை அது படைக்கிறது என்பது தெளிவு. உங்களுக்காகவும் எனக்காகவும் வேறு யாரும் வந்து உடல்களைப் படைப்பதில்லை. எனக்காக வேறு ஒருவர் உண்பதை நான் பார்த்ததில்லை. நான் சாப்பிடும் உணவை ஜீரணம் செய்து, அதிலிருந்து என் உடம்பிற்கு வேண்டிய ரத்தம், எலும்பு போன்ற தாதுப் பொருட்களை நான்தான் பெற வேண்டும். இந்த மர்மமான சக்தி எது?

எதிர்காலம் மற்றும் இறந்தகாலத்தைப் பற்றிய கருத்துக்கள் பலருக்குப் பயத்தை உண்டாக்குகின்றன. பலருக்கு இந்தக் கருத்துக்கள் வெறும் ஊகங்களாக மட்டுமே தோன்றுகின்றன.

நாம் எடுத்துக் கொண்டிருக்கும் கருத்தை இப்பொழுது ஆராய்வோம். நம் மூலமாக இயங்கிக் கொண்டிருக்கும் இந்தச் சக்தி எது? பண்டைய சாஸ்திரங்கள் இந்தச் சக்தியைப்பற்றி, இந்தச் சக்தியின் வெளிப்பாட்டைப்பற்றி, இந்தச் சக்தி ஒளி மிக்கது, இந்த உடலைப் போலவே உருவம் கொண்டது, இந்த உடல் அழிந்த பின்னும் நிலைத்திருக்கக் கூடியது என்று கூறு கின்றன. பிற்காலத்தில் வேறு ஓர் உயர்ந்த கருத்து தோன்று வதைக் காண்கிறோம். இந்த ஒளியுடல் அந்தச் சக்தியின் பிரதிநிதி அல்ல என்பதே அந்தக் கருத்து.

உருவமுள்ள எதுவுமே மூலக்கூறுகளின் சேர்க்கையால் தோன்றியதாகத்தான் இருக்க முடியும்; அந்த உருவம் இயங்க, அதன் பின்னால் ஒரு சக்தியும் இருக்க வேண்டும். இந்த உடலை இயக்குவதற்கு, உடலல்லாத ஒன்று தேவைப்படுகிறது என்றால், இதே கருத்துப்படி, அந்த ஒளியுடலை இயக்குவ தற்கும், அதுவல்லாத வேறொன்று இருக்க வேண்டும். அந்த ஒன்றைத்தான் ஆன்மா என்று சம்ஸ்கிருத மொழியில் கூறி னார்கள். ஒளியுடல் மூலமாகத் தூலவுடலை இயக்குவது இந்த ஆன்மாவே. இந்த ஒளியுடலே மனத்தின் இருப்பிடம். ஆன்மா இதற்கும் அப்பாற்பட்டது. ஆன்மா மனமும் அல்ல. அதுவே மனத்தை இயக்கி, மனத்தின் மூலம் உடலையும் இயக்குகிறது. உங்களுக்கு ஓர் ஆன்மா உள்ளது, எனக்கு ஒன்று உள்ளது.

ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக நுண்ணுடலும் உள்ளது. அதன்மூலமாகவே நாம் தூல உடலை இயக்குகிறோம்.

பிறகு, இந்த ஆன்மாவைப் பற்றியும் அதன் இயல்பைப் பற்றியும் கேள்விகள் எழுந்தன. மனிதனின் இந்த ஆன்மா உடலும் அல்ல; மனமும் அல்ல. அப்படியானால் அது என்ன? பெரிய வாதங்கள் தொடர்ந்தன, ஊகங்கள் எழுந்தன; பல வகையான தத்துவ ஆராய்ச்சிகள் எழுந்தன. இந்த ஆன்மாவைப் பற்றிய பல்வேறு முடிவுகளுள் சிலவற்றை உங்களுக்கு எடுத்துச் சொல்ல நான் முயற்சி செய்கிறேன்.

இந்த ஆன்மா எதுவாக இருந்தாலும் சரி, அது உருவ மற்றது. எது உருவமற்றதோ, அது எங்கும் நிறைந்ததாகத்தான் இருக்க வேண்டும் என்ற கருத்தை எல்லா தத்துவப் பிரிவுகளும் ஒப்புக் கொள்வதாகத் தெரிகிறது.

மனம் என்பது இருக்கும்போதுதான், காலம், இடம் ஆகியவையும் இருக்கும். காரணகாரிய நியதியும் காலத்திற்குக் கட்டுப்பட்டதே. ஒன்றையொன்று தொடர்ந்து வருகிறது என்ற கருத்து இல்லாமல் காரணகாரியத் தொடர்பு இருக்க முடியாது. எனவே காலம், இடம், காரணகாரியங்கள் எல்லாம் மனத்தில் தான் உள்ளன. ஆன்மா மனத்தைக் கடந்தது, உருவமற்றது. எனவே அது காலம், இடம், மற்றும் காரணகாரியங்களைக் கடந்ததாக இருக்க வேண்டும். அது காலம், இடம், காரண காரியங்களைக் கடந்ததானால் எல்லையற்றதாகத்தான் இருக்க வேண்டும்.

இந்தக் கருத்திற்குப் பிறகுதான் நமது தத்துவத்தின் மிக உயர்ந்த ஊகம் வருகிறது. இரண்டு எல்லையற்றவை இருக்க முடியாது. ஆன்மா எல்லையற்றதானால் அது ஒன்றாகத்தான் இருக்க முடியும். எனவே உங்களுக்கு ஓர் ஆன்மா, எனக்கு ஓர் ஆன்மா என்று ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஆன்மா இருக் கிறது என்ற கருத்து உண்மையானதாக இருக்க முடியாது. ஆகவே, உண்மையான மனிதன் (Real Man) ஒருவனே; அவன் எல்லையற்றவன்; எங்கும் நிறைந்தவன். அந்த உண்மையான மனிதனின் எல்லைக்கு உட்பட்ட வடிவமே, தோன்றும் மனிதன் (Apparent Man). நோக்கில் பார்த்தால், தோன்றும் மனிதன் எவ்வளவு உயர்ந்தவனாக இருந்தாலும், அவன் எல்லாவற்றை யும் கடந்த அந்த உண்மையான தனிமனிதனின் எல்லைக்கு உட்பட்ட பிரதிபலிப்பே என்று புராணங்கள் சொல்வது உண்மையாகிறது.

காரணகாரியங்களைக் கடந்தும், காலம், இடம் ஆகிய வற்றிற்குக் கட்டுப்படாமலும் இருப்பதால், ஆன்மாவாகிய அந்த உண்மை மனிதன் சுதந்திரமானவனாகத்தான் இருக்க வேண்டும். அவன் ஒருபோதும் கட்டுப்பட்டவனாக இருக்க வில்லை; அவனைக் கட்டுப்படுத்தவும் முடியாது. அவனுடைய பிரதிபலிப்பான இந்தத் தோன்றும் மனிதன், காலம், இடம், காரணகாரியம் இவற்றின் எல்லைக்கு உட்பட்டு இருப்பதால் கட்டுப்பட்டவனாக இருக்கிறான். இந்தக் கருத்தையே நமது தத்துவ ஞானியருள் சிலர், மனிதன் கட்டுப்பட்டவனைப் போல் தோன்றுகிறான்; உண்மையில் அவன் கட்டுப்பட்டவனல்ல என்று சொல்கிறார்கள்.

இந்த எங்கும் நிறைந்த, எல்லையற்ற ஆன்மீகத் தன்மை தான் நம் ஆன்மாவின் உண்மையான இயல்பு, ஒவ்வோர் ஆன்மாவும் எல்லையற்றதே. அதனால், பிறப்பு, இறப்பு என்ற கருத்துக்கே இங்கு இடமில்லை. சில சிறுவர்சிறுமியருக்குத் தேர்வு நடைபெற்றது. ஆசிரியர் சற்றுக் கடினமான கேள்வி களைக் கேட்டார். 'பூமி ஏன் கீழே விழுவதில்லை?' என்பது அந்தக் கேள்விகளுள் ஒன்று. ஈர்ப்புச் சக்தியைப் பற்றிய பதி லைப் பெற வேண்டும் என்பது அவர் நோக்கம். சிறுவர்களுள் பலருக்குப் பதிலே தெரியவில்லை. சிலர் ஈர்ப்புச்சக்தி, அது, இது என்றெல்லாம் பதில்களைச் சொன்னார்கள். ஒரு புத்தி சாலிச் சிறுமி, 'அது எங்கே விழும்?' என்ற கேள்வியால் இந்தக் கேள்விக்குப் பதிலளித்தாள். ஆசிரியரின் கேள்வியே பொரு ளற்றது. பூமி எங்கே விழும்? விழுவதும் எழுவதும் பூமிக்குக் கிடையாது. எல்லையற்ற விண்வெளியில், மேல், கீழ் என்பது கிடையாது. சார்புநிலையில்தான், இந்தக் கருத்துக்கள் இருக்க முடியும். எல்லையற்றதற்குப் போக்கோ வரவோ கிடையாது. அது எங்கிருந்து வர முடியும்? எங்கே போக முடியும்?

உடலுக்குப் பிறப்பு இறப்பு உண்டு; அது எல்லைக்கு உட் பட்டது. எனவே உடலுணர்வை விட்டு, இறந்தகால, எதிர்கால எண்ணங்களையும் விட்டொழித்தால்தான் உயர்ந்த குறிக் கோளை நோக்கி முன்னேற முடியும். உடல், உண்மையான மனிதன் அல்ல; மனமும் உண்மையான மனிதனாக இருக்க முடியாது. ஏனென்றால் மனம் வளரவும் குறையவும் செய் கிறது. உண்மையான மனிதன் என்பது எல்லாவற்றையும் கடந்த ஆன்மாவாகத்தான் இருக்க முடியும்; அது மட்டுமே என்றென்றும் வாழ்வதாக உள்ளது. பார்வைக்கு இடையீடற்ற

பிரவாகமாகத் தோற்றம் அளித்தாலும், ஆறுகள்தொடர்ந்து மாறிக்கொண்டிருக்கும் நீரை உடையனவாக இருக்கின்றன. அதுபோல் உடலும் மனமும் கணம்தோறும் மாறிக்கொண்டே இருக்கின்றன. உண்மையில், உடல், மனம் என்பதெல்லாம், மாறிக்கொண்டே இருக்கும் நிகழ்ச்சித் தொடர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பெயர்கள் மட்டுமே.

உடம்பிலிருக்கும் ஒவ்வோர் அணுவும் கணத்திற்குக் கணம் மாறிக்கொண்டே இருக்கிறது. சில நிமிடங்கள் சேர்ந்தாற்போல் யாருக்குமே உடல் ஒரேமாதிரியாக இருப்பதில்லை. ஆனாலும் நாம் அதனை ஒரே உடல் என்று எண்ணுகிறோம். மனமும் அப்படித்தான். ஒரு கணம் இன்பமாக, மறுகணம் துன்பமாக, ஒருகணம் திடமாக, மறுகணம் பலவீனமாக என்று தொடர்ந்து மாறிக்கொண்டிருக்கும் சுழலாகவே மனம் செயல்படுகிறது. ஆகவே மனம் எல்லையற்ற ஆன்மாவாக இருக்க முடியாது.

எல்லைக்கு உட்பட்டவற்றிற்குத்தான் மாறுதல் உண்டு. எந்த விதத்திலாயினும் சரி, எல்லையற்றதற்கு மாறுதல் உண்டு என்று சொல்வது பொருளற்றது; அப்படி இருக்க முடியாது. எல்லைக்கு உட்பட்ட உடல்கள் என்ற நிலையில் நீங்களும் நானும் இயங்கலாம். அப்படித்தான் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வோர் அணுவும் இடைவிடாமல் இயங்கிக் கொண்டிருக் கிறது. ஆனால் பிரபஞ்சம் முழுவதையும் ஒரே பொருளாக நினைத்துப் பார்த்தால், அதற்கு மாறுதலோ இயக்கமோ இல்லை. இயக்கம் எப்போதும் ஒன்றைச் சார்ந்தது. வேறொரு பொருளைச் சார்ந்துதான் என்னுடைய இயக்கம் இருக்க முடி யும். இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எந்த அணுவின் மாறுதலையும் வேறோர் அணுவோடு ஒப்பிட்டுத்தான் தெரிந்துகொள்ள முடி யும். பிரபஞ்சம் முழுவதையும் ஒரே பொருளாக எடுத்துக் கொண்டால், அது எதைச் சார்ந்து இயங்கும்? பிரபஞ்சத்தைத் தவிர வேறு பொருளே இல்லை. ஆகவே இந்த எல்லையற்ற, இரண்டற்ற பொருளுக்கு, மாறுதலோ இயக்கமோ இல்லை; அது தனியானது, அதுதான் உண்மையான மனிதன்.

ஆகவே நம் உண்மையான இயல்பு எல்லையற்றதே அன்றி, எல்லைக்கு உட்பட்டது அல்ல. எப்போதும் மாறிக் கொண்டிருக்கின்ற, எல்லைக்குட்பட்ட சிறிய உயிர்களே நாம் என்று நம்மைப்பற்றி எண்ணிக் கொண்டிருக்கிறோம். இந்த எண்ணம் எவ்வளவுதான் திருப்தி தருவதாக இருந்தாலும், இது காலங்காலமாக இருந்துவரும் மனமயக்கமே.

நீங்களே பரம்பொருள், நீங்கள் எங்கும் நிறைந்தவர்கள் என்று சொன்னால் மனிதர்களுக்குப் பயம் வருகிறது. நீங்கள் எல்லா பொருட்களின் மூலமாகவும் செயல்படுகிறீர்கள்; எல்லா கால்களின் மூலமாகவும் நடக்கிறீர்கள்; எல்லா உதடுகளின் மூலமாகவும் பேசுகிறீர்கள்; எல்லா இதயங்களின் மூலமாகவும் உணர்கிறீர்கள். இப்படிச் சொன்னாலே மக்கள் நடுங்குகிறார் கள். தங்கள் தனித்துவம் என்ன ஆவது? என்று அவர்கள் திரும்பத்திரும்பக் கேட்கிறார்கள்.

தனித்துவம் என்றால் என்ன? அதைக் கொஞ்சம் பார்க்க விரும்புகிறேன். குழந்தைக்கு மீசை இல்லை. குழந்தை பெரிய வனானவுடன் ஒருவேளை மீசையும் தாடியும் வளரலாம். இந்த உடல்தான் தனித்துவத்தை நிர்ணயிக்கிறது என்றால், வளரும் போது அவன் தனித்துவத்தை இழந்தவனாவான். உடல்தான் தனித்துவத்தை நிர்ணயிக்கிறது என்றால், ஒரு கண்ணையோ ஒரு கையையோ நான் இழந்து விட்டால் என் தனித்துவத்தையும் நான் இழந்துவிடுவேன். இந்த நோக்கில் பார்த்தால் குடிகாரன் குடிப்பதை விடக் கூடாது. குடிப்பதை விட்டால் அவன் தனித் துவத்தை இழந்து விடுவான். திருடன் நல்லவனாகவே கூடாது, நல்லவனானால் அவனுடைய தனித்துவம் போய்விடும்! இப்படிப் பயந்துபோய், ஒருவரும் தங்கள் பழக்க வழக்கங்களை மாற்றிக்கொள்ளக் கூடாது. எல்லையற்றதைத் தவிர வேறு எதற்கும் தனித்துவம் கிடையாது. அந்த நிலைக்கு மட்டும்தான் மாற்றமே இல்லை. மற்றவையெல்லாம் இடைவிடாமல் மாறிக் கொண்டே இருக்கின்றன.

நினைவிலும்கூட தனித்துவம் இருக்க முடியாது. உதாரணத்திற்கு, என் தலையில் ஓர் அடி பட்டதால் நான் என் கடந்தகால நினைவுகளை இழந்துவிடுகிறேன் என்று வைத்துக் கொள்வோம். அப்போது என் தனித்துவத்தை நான் இழந்து விடுவேன். அதாவது நானே இல்லாமல் போய்விடுவேன். என் மூன்று வயதுவரை நடந்த நிகழ்ச்சிகள் என் நினைவில் இல்லை; நினைவும் வாழ்க்கையும் ஒன்றுதான் என்றால், எனக்கு நினை வில்லாத காலம் என் வாழ்க்கை அல்ல. வாழ்க்கையின் எந்தப் பகுதி எனக்கு நினைவில்லையோ அந்தப் பகுதியில் நான் வாழ வில்லை என்று ஆகிவிடும். இது தனித்துவத்தைப் பற்றிய மிக வும் குறுகிய கருத்து.

நாம் இன்னும் தனித்துவம் பெறவில்லை. அதை அடையத் தான் போராடிக் கொண்டிருக்கிறோம். அது எல்லையற்றது;

அதுதான் மனிதனின் உண்மை இயல்பு. இந்தப் பிரபஞ்சத்தின் வாழ்க்கை முழுவதையுமே தன் வாழ்க்கையாகப் பெற்றவன் தான் உண்மையில் வாழ்கிறான். நம் வாழ்க்கையின் முழுக் கவனத்தையும் எவ்வளவுக்கெவ்வளவு எல்லைக்குட்பட்ட பொருட்களின்மீது செலுத்துகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு விரைவாக நாம் மரணத்தைநோக்கிச் செல்வோம். நம் வாழ்க்கையை, மற்றவர்களின் வாழ்க்கையோடும் பிரபஞ்ச வாழ்க்கையோடும் ஐக்கியப்படுத்திக் கொள்ளும்போதுதான் நாம் உண்மையில் வாழ்கிறோம். நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் இந்த எல்லைக்கு உட்பட்ட அற்பமான வாழ்க்கை மரணம், மரணமேதான். இதனால்தான் நமக்கு மரண பயம் ஏற்படுகிறது. இவ்வுலகில் ஒரேஓர் உயிர் வாழ்ந்திருக்கும்வரை நானும் வாழ்வேன் என்று உணரும் போதுதான் மனிதனால் மரண பயத்தை வெல்ல முடியும். 'எல்லாவற்றிலும் நான் இருக்கிறேன்; எல்லோருள்ளும் நான் இருக்கிறேன்; எல்லா ஜீவராசிகளுக்கு உள்ளும் நான் இருக்கிறேன்; பிரபஞ்சமே நான்தான்' என்று எப்போது ஒரு மனிதன் உணர்கிறானோ, அப்போதுதான் பயமற்ற நிலை அவனுக்கு வருகிறது.

இடைவிடாமல் மாறிக்கொண்டே இருக்கும் பொருட்களுக்கு அழிவற்ற நிலை உண்டு என்று சொல்வது பொருளற்றது. எல்லையற்றதாக இருக்கும் காரணத்தால் ஆன்மா மட்டுமே தனித்துவம் பெற்றது என்று பழங்கால சம்ஸ்கிருதத் தத்துவ ஞானி ஒருவர் கூறுகிறார். எல்லையற்ற எதையும் பகுக்க முடியாது. எல்லையற்ற எதையும் துண்டுகளாக உடைக்க முடியாது. அது எப்பொழுதும் ஒரே மாதிரியானது; இரண்டற்றது; அது தான் தனித்துவம் உள்ள மனிதன்; உண்மையான மனிதன். தோன்றும் மனிதனோ, கடந்து நிற்கும் இந்தத் தனித்துவத்தை வெளிப்படுத்த முயற்சி செய்யும் போராட்டத்தின் உருவமாக இருப்பவன் மட்டுமே. ஆன்மாவிற்குப் பரிணாம வளர்ச்சி கிடையாது. கெட்டவன் நல்லவனாவது, மிருகம் மனிதனாவது, இதைப்போன்ற மாறுதல்களெல்லாம் ஆன்மாவிற்கு இல்லை. இந்த மாறுதல்களெல்லாம் இயற்கையின் பரிணாம வளர்ச்சியும் ஆன்மாவின் வெளிப்பாடுமே ஆகும்.

உங்களை என்னிடமிருந்து மறைக்கின்ற ஒரு திரை இருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்தத் திரையில் ஒரு சிறு துவாரம் இருக்கிறது. அந்தத் துவாரம் மூலமாக உங்களில் சிலரது முகத்தை மட்டுமே என்னால் பார்க்க முடியும். இப்போது

துவாரம் பெரிதாக ஆரம்பிக்கிறது, உடனே என் முன்னால் உள்ள காட்சியும் விரிவடைய ஆரம்பிக்கிறது. கடைசியாகத் திரையே மறைந்துபோகும் நிலை வந்தவுடன், நான் உங்கள் அனைவரையும் பார்க்க முடிகிறது. இந்த உதாரணத்தில், நீங்கள் யாருமே மாறுதல் அடையவில்லை; விரிவடைந்தது துவாரம் மட்டுமே. நீங்கள் உங்களைச் சிறிதுசிறிதாக வெளிப்படுத்திக் கொண்டே வந்தீர்கள். ஆன்மாவின் நிலையும் இதுதான். நீங்கள் எந்த நிறைநிலையையும் அடையப் போவதில்லை. நீங்கள் ஏற்கனவே சுதந்திரமாகவும் பூரணமாகவும்தான் இருக்கிறீர்கள்.

மதம், கடவுள், மறுவுலகைத் தேடுதல் என்பதற்கெல்லாம் என்ன பொருள்? மனிதனுக்கு ஏன் கடவுள் தேவைப்படுகிறார்? ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு சமுதாயத்திலும் மனிதன் ஒரு பூரண லட்சியத்தை மனிதனிடமோ, கடவுளிடமோ, வேறு எங்கேயோ ஏன் தேடுகிறான்? ஏனென்றால் பூரணத்துவம் பற்றிய கருத்து அவனுள் இருக்கிறது. உங்கள் இதயத் துடிப்பே அதுதான். அது உங்களுக்குத் தெரியவில்லை. அந்த முழுமை எங்கோ வெளியில் இருப்பதாக நீங்கள் தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

தன்னைத் தேடும்படியும் உணரும்படியும் உங்களைத் தூண்டுவது, உங்களுக்கு உள்ளே இருக்கும் கடவுள்தான். கோயில்களிலும் சர்ச்சுகளிலும் மண்ணிலும் விண்ணிலும் மற்றெல்லா இடங்களிலும் பல காலமாகக் கடவுளைத் தேடிவிட்டு, ஆரம்பித்த இடத்திற்கே அதாவது உங்கள் ஆன்மாவிற்கே கடைசியில் வந்து சேருகிறீர்கள். இந்த ஆன்மாவைத்தான் நீங்கள் உலகமெல்லாம் தேடினீர்கள்; இந்த ஆன்மாவை உணர்வதற்காகத்தான் கோயில்களிலும் சர்ச்சுகளிலும் அழுதீர்கள்; பிரார்த்தனை செய்தீர்கள். இந்த ஆன்மாவைத்தான் மேகங்களுக்குமேல் மறைந்திருக்கும் மர்மங்களுக்குள் மர்மம் என்று நினைத்தீர்கள். இந்த ஆன்மா உங்கள் உயிருக்கு உயிராக, அருகிலுள்ள அனைத்திலும் மிக அருகில் இருக்கிறது. உங்கள் உடல், பொருள், ஆவி இவற்றின் உண்மையான உருவம் இந்த ஆன்மாதான். இதுதான் உங்கள் உண்மையான இயல்பு. இதை உறுதிப்படுத்துங்கள், வெளிப்படுத்துங்கள். இவ்வாறு செய்வது நீங்கள் தூய்மை அடைவதற்காக அல்ல. நீங்கள் ஏற்கனவே தூய்மையாகத்தான் இருக்கிறீர்கள். நீங்கள் நிறைநிலை அடைவதற்காகவும் அல்ல; நீங்கள் ஏற்கனவே நிறைநிலையை அடைந்தவர்களாகத்தான் இருக்கிறீர்கள்.

முன் சொன்ன உதாரணத்திலுள்ள திரையைப் போன்றது தான் இயற்கை. இதற்கு அப்பாலுள்ள ஆன்மாவைப் பற்றிய உண்மையை இதுதான் மறைக்கிறது. நீங்கள் நினைக்கும் ஒவ்வொரு நல்லெண்ணமும், செய்யும் ஒவ்வொரு நல்ல செயலும் இந்தத் திரையைச் சிறிதுசிறிதாகக் கிழிப்பதுபோல் செயல்படுகிறது. அதனால் திரைக்கு அப்பாலுள்ள தூயவரான, எல்லையற்றவரான இறைவன் சிறிதுசிறிதாகத் தம்மை வெளிப்படுத்துகிறார்.

இதுவே மனிதனின் முழுச் சரித்திரம். திரை நுண்ணியதாக மாற மாற அதற்குப் பின்னாலிருக்கும் உண்மை மேலும்மேலும் பிரகாசிக்கிறது. ஏனெனில் பிரகாசிப்பதே அந்த உண்மையின் இயல்பாகும். அது அறிய முடியாதது; அதை அறிய முயல்வது வீணே. அது அறியப்படக்கூடியதாக இருந்தால் அது அதுவாக இருந்திருக்காது. ஏனெனில் அது என்றென்றுமே அறியும் பொருளாகும். அறிவு நம்மை எல்லைக்கு உட்படுத்துகிறது; நம்மைப் புறச் சார்புடையவர்களாக ஆக்குகிறது. ஆன்மாவே நிரந்தரமாக எல்லாவற்றையும் அறிபவன்; பிரபஞ்சத்திலுள்ள நிரந்தர சாட்சியாக இருப்பவன். அறிவு என்பது அந்த நிலையின் வீழ்ச்சி, ஒரு தாழ்ந்தபடி போன்றதே. நாம் ஏற்கனவே அந்த நிலையான அறிபவனாகத்தான் இருக்கிறோம். அதை எப்படி அறிவது? ஒவ்வொரு மனிதனின் உண்மை இயல்பும் அதுதான். அவன் அதை வெளிப்படுத்த பல வழிகளில் முயல்கிறான்; இல்லாவிட்டால் இவ்வளவு வகையான நீதிநெறிக் கோட்பாடுகள் ஏன் இருக்க வேண்டும். இந்தக் கோட்பாடுகளுக்கு விளக்கம் எங்கே?

பல்வேறு வகையான நீதிநெறிக் கோட்பாடுகளுள் பல்வேறு விதங்களில் வெளிப்பட்டு நிற்கின்ற ஒரு கருத்து உள்ளது. அது மற்றவர்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்பதுதான். மனிதர்களிடம் அன்பாயிருப்பது, எல்லா பிராணிகளிடமும் அன்பாயிருப்பது—இதுதான் மனிதகுலத்தை முக்கியமாக வழிநடத்தும் குறிக்கோளாக இருக்க வேண்டும். இதெல்லாமே, 'நான்தான் பிரபஞ்சம்; இந்தப் பிரபஞ்சம் இரண்டற்றது; ஒன்றே தான்' என்ற நிலையான உண்மையின் பல்வேறு வெளிப்பாடுகள். அப்படி இல்லாவிட்டால் இந்தச் செயல்களுக்கெல்லாம் காரணம் என்ன? நான் எதற்காக என்னைச் சுற்றியிருப்பவர்களிடம் அன்பு பாராட்ட வேண்டும்? ஏன் மற்றவர்களுக்கு நன்மை செய்ய வேண்டும்? என்னைக் கட்டாயப்படுத்துவது

எது? அதுதான் இரக்கம்; எங்கும் ஒரே பொருள் உள்ளது என்ற உணர்ச்சி.

கல்லான இதயங்கள்கூடச் சிலவேளைகளில் மற்றவர் களுக்காகக் கனிவதுண்டு. நீ பிடித்துக் கொண்டிருக்கின்ற இந்தத் தனித்துவம் வெறும் மனமயக்கம், அதை இப்படிக் கெட்டியாகப் பற்றிக்கொண்டிருப்பது பாராட்டத் தக்கதல்ல என்று சொன்னால் மனிதன் பயப்படுகிறான். ஆனால் அவனே, முழுத் தன்னல மறுப்புதான் எல்லா நன்னெறிக்கும் அடிப்படை என்றும் கூறுகிறான்.

இந்த முழுத் தன்னல மறுப்பு என்பது என்ன? ஆன்மா போல் தன்னைக் காட்டிக் கொண்டிருக்கின்ற தோன்றும் மனிதனை விடுவதே அது. எல்லா சுயநலத்தையும் விடுவதே அது. 'நான்', 'எனது' என்ற அகங்கார மமகாரங்கள் பழைய மூடநம்பிக்கையிலிருந்து பிறந்தவை. இந்தப் போலி ஆன்மா மறையும் அளவிற்கு உண்மை ஆன்மா வெளிப்பட்டுத் தோன்று கிறது. இதுவே உண்மையான தன்னல மறுப்பு. இதுவே எல்லா அறநெறி உபதேசங்களின் மையமும் அடிப்படையும் சாரமும் ஆகும். தெரிந்தோ தெரியாமலோ உலகம் முழுவதும் இந்தக் குறிக்கோளை நோக்கியே சென்று கொண்டிருக்கிறது; நடை முறையிலும் ஓரளவு இதை அனுசரிக்கிறது. பெரும்பாலானோர் தாங்கள் உணராமலேயே இதைச் செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் உணர்வுபூர்வமாகச் செய்யட்டும். 'நான்', 'எனது' என்பவை உண்மையான ஆன்மாவல்ல, ஆன்மாவின் தடைகளே என்று அவர்கள் உணர்ந்து அவற்றை விடட்டும். இந்தத் தோன்றும் மனிதன் அகத்தேயுள்ள எல்லையற்ற உண்மையின் ஒரு மின்னல் தோற்றம் மட்டுமே; எல்லாமாக இருக்கும் எல்லை யற்ற நெருப்பின் ஒரு பொறியே. அவனது உண்மையான இயல்பு எல்லையற்றது.

இந்த அறிவினால் ஏற்படும் பயன் என்ன? இது மனிதர் களை எப்படிப் பாதிக்கிறது? இதனால் கிடைப்பது என்ன? இந்தக் காலத்தில் எல்லாவற்றையும் லாபக் கண்ணோட்டத் திலேயே அளவிட வேண்டியுள்ளது— லாபம் எத்தனை ரூபாய், எத்தனை பைசா? இதுதான் கணக்கு. ஆனால் பணத்தையோ லௌகீக லாபத்தையோ அளவாகக் கொண்டே உண்மையை மதிப்பிட வேண்டும் என்று சொல்ல மனிதனுக்கு என்ன உரிமை இருக்கிறது? ஓர் உண்மையால் பலன் இல்லாவிட்டால் அதன் உண்மைத் தன்மை குறைந்துவிடுமா? உண்மையை

மதிப்பிடுவதற்கு லௌகீக லாபம் என்ற பயன்நோக்கு முறை தகுந்ததல்ல. ஆனால் மிகவுயர்ந்த பலன் உள்ளது. எல்லோரும் தேடி அலைவது இன்பத்தைத்தான். ஆனால் பெரும்பாலோர் உண்மைப் பொருளில் அல்லாமல், நிலையில்லாத பொருட்களில் அதைத் தேடுகிறார்கள். புலன்களின்மூலம் ஒருபோதும் இன்பம் கிடைப்பதில்லை. புலன்களின்மூலமாகவோ, புலன் அனுபவங்களின்மூலமாகவோ இன்பம் கண்டவர் யாருமில்லை. ஆன்மாவில் மட்டுமே இன்பம் இருக்கிறது. ஆகவே ஆன்மாவில் இன்பம் காண்பதுதான் மனித குலத்திற்கு உயர்ந்த பலனைக் கொடுக்கும்.

அடுத்த கருத்து, அறியாமையிலிருந்தே எல்லா துன்பங்களும் பிறக்கின்றன என்பதாகும். எல்லையற்ற ஆன்மா அழுகிறது, கதறுகிறது, அது எல்லைக்கு உட்பட்டது என்றெல்லாம் நினைப்பதுதான் அறியாமையின் மூல அடிப்படை. அழிவற்ற, எப்போதும் தூய்மையான, முழுமையான ஆன்மாவாகிய நம்மை, சிறிய மனம், சிறிய உடல் என்று நாமே நினைக்கச்செய்வதுதான் எல்லா அறியாமையின் மூலகாரணம். இதிலிருந்தே எல்லா சுயநலமும் பிறக்கிறது. நான் இந்தச் சிறிய உடம்பு என்று நினைத்த உடனேயே, மற்ற உடல்களுக்குக் கேடு செய்தாவது இந்த உடம்பைப் பாதுகாக்கவும் காப்பாற்றவும் அழகாக வைத்துக் கொள்ளவும் விரும்புகிறேன். அப்போதே நீங்கள் வேறு, நான் வேறு என்றாகி விடுகிறது. இந்தப் பிரிவுணர்ச்சியே எல்லா தீமைகளுக்கும் துன்பங்களுக்கும் காரணமாகிறது.

உலகில் இன்று வாழ்ந்து கொண்டிருக்கும் மனிதர்களில் ஒரு சிறு பகுதியினரேனும் தங்கள் சுயநலம், குறுகிய மனப்பான்மை, அற்பத்தனம் இவற்றையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டால்கூட, நாளையே இந்த உலகம் முழுவதும் சொர்க்கமாக மாறிவிடும். இதுதான் பலன். ஆனால் எந்திரங்களாலும் லௌகீக அறிவின் முன்னேற்றத்தாலும் இந்த நிலை நிச்சயமாக வராது. எரியும் நெருப்பில் ஊற்றும் எண்ணெய் அந்த நெருப்பின் தீவிரத்தை அதிகமாக்குவதுபோல், இவைகளால் துன்பமே பெருகுகிறது. ஆன்மீக அறிவு இல்லாத எல்லா லௌகீக அறிவும், எரியும் நெருப்பில் எண்ணெயை ஊற்றுவது போலாகும். லௌகீக அறிவு, சுயநலமுள்ள மனிதனின் கையில், மற்றவர்களுக்குத் தீமை செய்யும் இன்னுமோர் ஆயுதம் போலாகிவிடுகிறது. இதனால் அவன் தன்னைப் பிறர்நலத்திற்காகத் தியாகம் செய்வதை மறந்து மற்றவர்களைக்

கொள்ளையடிக்கிறான்; மற்றவர்களின் வாழ்வை அழித்து, தான் வாழ்கிறான்.

ஆன்மீக அறிவைச் செயல்முறைப்படுத்த முடியுமா என்பது இன்னொரு கேள்வி. அது இன்றைய சமுதாயத்தின் நடைமுறை வாழ்விற்கு ஒத்து வருமா? பழைய சமுதாயமாக இருந்தாலும் சரி, புதிய சமுதாயமாக இருந்தாலும் சரி, உண்மை அதன்முன் பணிந்து கைகட்டி நிற்பதில்லை; சமுதாயம்தான் உண்மையை மதித்து நடக்க வேண்டும். இல்லையென்றால் அந்தச் சமுதாயத்திற்கு அழிவு நிச்சயம். உண்மையின் அடிப்படையில்தான் சமுதாயங்களை அமைக்க வேண்டும். சமுதாயத்தின் தேவைக்கேற்ப உண்மை மாற முடியாது. சுயநலமின்மையைப் போன்ற ஓர் உயர்ந்த உண்மையைச்சமுதாயத்தில் பின்பற்ற முடியவில்லையென்றால், மனிதன் சமுதாயத்தை விட்டுவிட்டுக் காட்டிற்குப் போய்விடுவதே நல்லது. அவ்வாறு செய்பவன்தான் துணிவுள்ளவன்.

துணிச்சலில் இரண்டு வகை உண்டு. ஒன்று பீரங்கியை எதிர்க்கும் துணிச்சல். மற்றொன்று ஆன்மீக விஷயங்களில் ஏற்படும் திடசித்தம்.

இந்தியாவின்மீது படையெடுத்து வந்த ஒரு சக்கரவர்த்தியின்[1] ஆசிரியர், அவரிடம் இந்தியாவில் உள்ள முனிவர்களைப் போய்ப் பார்க்குமாறு சொன்னார். வெகுநேரம் தேடிய பிறகு, ஒரு தொண்டு கிழவர் பாறை ஒன்றின்மீது உட்கார்ந்திருப்பதைச் சக்கரவர்த்தி பார்த்தார். சிறிதுநேரம் அவருடன் பேசியபோது, அந்த முனிவரின் அறிவுத்திறன் சக்கரவர்த்தியை மிகவும் கவர்ந்தது. தம்முடன் தமது நாட்டிற்கு வருமாறு அவர் அந்த முனிவரை அழைத்தார்.

அதற்கு அந்த முனிவர், 'நான் வர விரும்பவில்லை. இந்தக் காட்டிலேயே நான் சந்தோஷமாக இருக்கிறேன்' என்று சொன்னார். 'நான் உங்களுக்குச் செல்வம், பதவி எல்லாவற்றையும் அளிக்கிறேன். நான் இந்த உலகத்திற்கே அதிபதி' என்றார் சக்கரவர்த்தி. 'அந்தப் பொருட்களிலெல்லாம் எனக்கு ஆசை கிடையாது' என்று அந்த முனிவர் பதிலளித்தார். உடனே அந்தச் சக்கரவர்த்தி, 'என்னுடன் வரவில்லை என்றால் உம்மைக் கொன்றுவிடுவேன்' என்று கூறினார். அந்த முனிவர் அமைதியாகப் புன்னகைத்துவிட்டு, 'சக்கரவர்த்தியே, நீ பேசியவற்றுள்,

1. அலெக்சாண்டர்.

வடிகட்டிய முட்டாள்தனமான பேச்சு இதுதான். உன்னால் என்னைக் கொல்ல முடியாது. சூரியனால் என்னைக்காயச் செய்ய முடியாது. நெருப்பு என்னை எரிக்க முடியாது. வாள் என்னைக் கொல்ல முடியாது. பிறப்பு இறப்பற்ற, எப்போதும் நிலைத்திருக்கின்ற, சர்வ வல்லமை படைத்த, எங்கும் நிறைந்த ஆன்மா நான்' என்று சொன்னார். இதுதான் ஆன்மீக வீரம். மற்றது,ஒரு புலி அல்லது சிங்கத்திடம் காணப்படும் வீரம்.

1857-ஆம் ஆண்டு நடைபெற்ற சிப்பாய்க் கலகத்தின்போது, முகமதிய வீரன் ஒருவன், மகாத்மாவான ஒரு துறவியைப் பலமாகக் கத்தியால் குத்திவிட்டான். இந்து விடுதலை வீரர்கள், குத்தியவனைப் பிடித்து அந்தத் துறவியிடம் கொண்டுவந்து, அவனைக் கொல்வதற்கு அனுமதி கேட்டார்கள். ஆனால் அந்தத் துறவி அமைதியாக முகமதியனைப் பார்த்து, 'சகோதரா, நீ பரம்பொருளே, நீ அவனே!' என்று சொல்லியபடியே இறந்துவிட்டார். இது ஆன்மீக வீரத்திற்கு இன்னோர் உதாரணமாகும்.

உங்களால் உங்கள் சமுதாயத்தை உண்மையுடன் பிணைக்க முடியாவிட்டால், மிகவுயர்ந்த உண்மையைக் கடைப்பிடிக்கத் தக்க விதத்தில் சமுதாயத்தை உருவாக்க முடியாவிட்டால் உங்கள் உடல்பலத்தைப் பற்றியோ, உங்கள் மேலை நாகரீகத்தின் உயர்வைப் பற்றியோ பேசுவதால் என்ன பயன்? 'இந்த வீரம் நடைமுறைக்கு ஒத்து வராது' என்று நீங்கள் சொன்னால், உங்களுடைய இந்த உயர்வான சிறப்பான வாழ்க்கையைப்பற்றி நீங்கள் தற்பெருமை அடித்துக் கொள்வதில் என்ன பயன்? காசு பணத்தைத் தவிர வேறு எதுவும் நடைமுறைக்கு ஒத்து வரவே வராதா? ஒத்து வராதென்றால் உங்கள் சமுதாயத்தைப்பற்றி ஏன் இவ்வளவு ஜம்பம்? உயர்ந்த உண்மைகளைச் செயல்முறைப் படுத்தும் சமுதாயமே மிகவும் உன்னதமான சமுதாயம். இது தான் எனது கருத்து.

மிகவுயர்ந்த உண்மையை ஏற்றுக்கொள்வதற்குச் சமுதாயம் தயாராக இல்லாவிட்டால், அதைத் தயார்ப்படுத்துங்கள். இதை எவ்வளவு சீக்கிரம் செய்கிறீர்களோ அவ்வளவு நல்லது. சகோதர சகோதரிகளே, இந்தத் தீர்மானத்துடன் வீறு கொண்டெழுங்கள்! துணிவோடு இந்த உண்மையில் நம்பிக்கை கொள்ளுங்கள்! ஆற்றலோடு இதை நடைமுறைக்குக் கொண்டு வாருங்கள்! இந்த உலகத்திற்கு இப்போது தேவைப்படுவது அஞ்சா நெஞ்சம் படைத்த சில நூறு ஆண்களும் பெண்களுமே.

இந்த உண்மையை உணர்ந்துகொள்ளவும் நடைமுறையில் பின்பற்றவும் தேவையான துணிவைப் பழகிக் கொள்ளுங்கள். இந்தத் துணிவு, மரணத்தைக் கண்டு நடுங்காது; மாறாக அது மரணத்தை வரவேற்கிறது; தன்னை ஆன்மா என்று உணரும் சக்தியை மனிதனுக்குக் கொடுக்கிறது; இந்தப் பிரபஞ்சத்தில் யாரும் தன்னைக் கொல்ல முடியாது என்று மனிதனுக்கு உணர்த்துகிறது. அந்த நிலை வந்தால்தான் நீங்கள் முக்தி பெற்றவர்கள். அப்பொழுதுதான் உங்கள் உண்மை ஆன்மாவை உணர்வீர்கள். 'இந்த ஆன்மாவைப்பற்றி முதலில் கேட்க வேண்டும்; பிறகு அதைப்பற்றிச் சிந்திக்க வேண்டும்; பின்னர் அதை தியானம் செய்ய வேண்டும்.'[1]

செயலை உயர்த்தியும் சிந்திப்பதைத் தாழ்த்தியும் மதிப்பிடுகின்ற ஒரு போக்கு தற்காலத்தில் நிலவுகிறது. செயல் சிறந்தது தான்; ஆனால் சிந்தனைதான் அதன் அடிப்படை. உடல் தசைகளின் மூலம் வெளிப்படும் சாதாரணமான சக்தியையே செயல் என்கிறோம். ஆனால் சிந்தனையின்றிச் செயலில்லை. ஆகவே சிறந்த எண்ணங்களால் மூளையை நிரப்புங்கள், சிறந்த லட்சியங்களையே கொள்ளுங்கள்; அவற்றை உங்களிடமிருந்து ஒரு போதும் விலக விடாதீர்கள். இத்தகைய ஈடுபாட்டினால் அரிய செயல்களைச் செய்ய முடியும். தூய்மையின்மையைப் பற்றிப் பேசாதீர்கள். நாம் எப்போதும் தூய்மையானவர்களே என்று சொல்லுங்கள். 'நாம் சிறியவர்கள். நாம் பிறந்துள்ளோம், இறக்கப் போகிறோம்' என்றெல்லாம் நம்மை நாமே சுயமயக்கத்தில் ஆழ்த்திக் கொண்டிருக்கிறோம்; எப்போதும் பயத்திலேயே சிக்கியிருக்கிறோம்.

ஒரு பெண் சிங்கத்தைப் பற்றிய கதை உண்டு. அது கருவுற்ற ஒரு சிங்கம். அது ஒருசமயம் இரையைத் தேடி அலைந்து கொண்டிருந்தபோது ஓர் ஆட்டு மந்தையைப் பார்த்தது. உடனே அதன்மேல் பாய்ந்தது. அந்த முயற்சியில் அது இறந்து விட்டது. இறப்பதற்கு முன் அது ஒரு குட்டியை ஈன்றது.

தாயற்ற அந்தச் சிங்கக்குட்டியை ஆடுகள் வளர்த்தன. அந்தச் சிங்கக்குட்டி ஆடுகளுடனேயே வளர்ந்தது, புல்லைத் தின்றது, ஆடுகளைப் போலவே கத்தியது. காலப்போக்கில் அந்தச் சிங்கக்குட்டி நன்கு வளர்ந்து ஒரு பெரிய சிங்கமாக

---

1. ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: ||
—பிருஹதாரண்யக உபநிடதம் 2. 4. 5

மாறியது. ஆனால் அது தன்னை ஓர் ஆடு என்றே எண்ணிக் கொண்டிருந்தது.

ஒருநாள் வேறொரு சிங்கம் இரை தேடிக்கொண்டு அங்கு வந்தது. அங்கே ஆடுகளுக்கு நடுவில் ஒரு சிங்கம் இருப்பதையும், அது ஆபத்துச் சமயத்தில் ஆடுகளைப் போலவே பயந்து ஓடு வதையும் கண்டு வியப்படைந்தது. அது அந்த ஆட்டுச் சிங்கத்தை நெருங்கி, 'நீ ஆடல்ல, சிங்கம்' என்று சொல்ல முயன்றது. புதிய சிங்கம் தன்னை நெருங்கும்போதே 'ஆட்டுச் சிங்கம்' பயந்து ஓடியது. ஆகவே புதுச் சிங்கம் ஒரு நல்ல வாய்ப்பை எதிர்பார்த்துக் காத்திருந்தது.

ஒருநாள் ஆட்டுச் சிங்கம் தூங்கிக் கொண்டிருப்பதைப் புதிய சிங்கம் பார்த்தது. உடனே அதை நெருங்கி, 'நீ ஒரு சிங்கம்' என்று கூறியது. அஞ்சி நடுங்கிய அந்த ஆட்டுச் சிங்கம், புதிய சிங்கம் சொல்வதை நம்பாமல் 'நான் ஆடுதான்' என்று சொல்லிக்கொண்டே ஆட்டைப்போல் கத்தியது. புதிய சிங்கம் ஆட்டுச் சிங்கத்தை ஓர் ஏரிக்கு இழுத்துச் சென்றது. பின்னர் அது ஆட்டுச் சிங்கத்தைப் பார்த்து, 'தண்ணீரில் பார். நம் இருவருடைய உருவங்களின் பிரதிபலிப்பும் தெரிகிறது' என்று கூறியது. ஆட்டுச் சிங்கம் ஏரி நீரில் தென்பட்ட இரண்டு பிரதி பிம்பங்களையும் ஒத்துப் பார்த்தது. பின்னர் புதுச் சிங்கத்தையும் தன்னுடைய பிம்பத்தையும் பார்த்தது. அடுத்த கணமே, தான் ஒரு சிங்கம் என்ற எண்ணம் அதற்கு வந்துவிட்டது. உடனே அது கர்ஜித்தது; ஆடுபோல் கத்துவது மறைந்துவிட்டது.

நீங்கள் சிங்கங்கள்; தூய்மையான, எல்லையற்ற, முழுமை யான ஆன்மாக்கள். பிரபஞ்சத்தின் சக்தி முழுவதும் உங் களுக்குள் இருக்கிறது. 'நண்பா, நீ ஏன் அழுது புலம்புகிறாய்? உனக்குப் பிறப்போ இறப்போ இல்லை. நீ ஏன் அழ வேண்டும்? உனக்கு நோயோ துன்பமோ கிடையாது. நீ எல்லையற்ற ஆகாயம் போன்றவன். பல வண்ண மேகங்கள் அதன்மீது வரு கின்றன. கணநேரம் உலவிவிட்டு மறைந்து விடுகின்றன. ஆனால் ஆகாயம் எப்பொழுதும் மாறாத, மாசற்ற நீல நிறமாகவே இருக்கிறது.'[1]

---

1. கிம் நாம ரோதிஷி ஸகே ந ஜரா ந ம்ருத்யு:
கிம் நாம ரோதிஷி ஸகே ந ச ஜன்ம துக்கம் ।
கிம் நாம ரோதிஷி ஸகே ந ச தே விகாரோ
ஜ்ஞானாம்ருதம் ஸமரஸம் ககனோபமோऽஹம் ॥
—அவதூத கீதை, 3. 34

தீமையை நாம் ஏன் காண்கிறோம்? இருட்டில் ஓர் அடிமரம் நிற்கிறது. அந்த வழியே வந்த ஒரு திருடன் அதைப் பார்த்து விட்டு, அது ஒரு போலீஸ்காரன் என்று நினைத்தான். காதலிக் காகக் காத்துக்கொண்டிருந்த ஓர் இளைஞன், அந்த மரத்தைத் தன் காதலி என்று நினைத்தான். பேய்க் கதைகளைக் கேட்டிருந்த ஒரு குழந்தை, அதே மரத்தைப் பேய் என்று நினைத்துப் பயத்தில் அலற ஆரம்பித்தது. எல்லோரும் பார்த்தது என்னவோ அடிமரத்தைத்தான். அதுபோலவே நம் எண்ணங்களின்படியே உலகம் நமக்குத் தோன்றுகிறது.

ஓர் அறையில் ஒரு குழந்தையும் பொற்காசுகள் நிறைந்த ஒரு பையும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். திருடன் ஒருவன் அங்கே வந்து பொற்காசுகளைத் திருடிச் செல்கிறான். பொற்காசுகள் திருட்டுப் போனது குழந்தைக்குத் தெரியுமா? நம் உள்ளே என்ன இருக்கிறதோ அதையே வெளியிலும் காண் கிறோம். குழந்தையின் உள்ளே திருடன் என்ற எண்ணமே கிடையாது. ஆகவே அது வெளியிலும் திருடனைக் காண வில்லை. எல்லா அறிவும் இதே போன்றதுதான். உலகின் தீமை களையும் பாவங்களையும்பற்றிப் பேசாதீர்கள். உங்கள் கண் களுக்கு இன்னும் தீமை தெரிகிறதே என்பதற்காக அழுங்கள். இன்னும் எங்கும் பாவத்தையே பார்க்கின்ற நிலையில் இருக் கிறீர்களே என்பதை நினைத்து அழுங்கள்.

உலகத்திற்கு உதவி செய்ய விரும்பினால், உலகத்தின் மீது பழிபோடாதீர்கள். உலகை இன்னும் பலவீனப் படுத்தாதீர்கள். பாவம், துன்பம் என்று நீங்கள் இங்கே காணும் எல்லாமே பல வீனத்தின் விளைவுகளே அல்லாமல் வேறு என்ன? இத்தகைய உபதேசத்தால் உலகம் மேன்மேலும் பலவீனம்தான் அடை கிறது. தாங்கள் பாவிகள், பலவீனர்கள் என்றுதான் மனிதர்கள் குழந்தைப் பருவத்திலிருந்தே கற்பிக்கப்படுகிறார்கள். மிகவும் பலவீனமானவர்கள் முதல் எல்லோருமே மரணமிலாப் பெருநிலையின் பெருமைமிகு வாரிசுகள் என்றே அவர்களுக்கு உபதேசம் செய்யுங்கள். குழந்தைப் பருவத்திலிருந்தே மனிதர் களின் மனத்தில் நல்ல ஆக்கபூர்வமான, உறுதியான, உதவுகின்ற எண்ணங்களே தோன்றட்டும். இப்படிப்பட்ட உறுதியான எண்ணங்களுக்கே உங்கள் மனத்தில் இடம் கொடுங்கள். உங்கள் சக்தியைப் பறித்து உங்களைப் பலவீனமாக்கும் எண்ணங் களுக்கு இடமே கொடுக்காதீர்கள். 'நானே பரம்பொருள், நானே பரம்பொருள்' என்று உங்கள் மனத்திற்கு எப்போதும்

சொல்லுங்கள். இரவுபகலாக உங்கள் மனத்தில் அந்த எண்ணம் ஒரு பாடலாக ஒலித்துக்கொண்டே இருக்கட்டும். மரணத்தின் தறுவாயில்கூட, 'நானே பரம்பொருள்' என்று முழங்குங்கள். அதுதான் உண்மை; உலகின் எல்லையற்ற சக்தி உங்களுக்கே சொந்தமானது. உங்கள் மனத்தை மறைத்துக் கொண்டிருக்கும் மூடநம்பிக்கைகளை விரட்டி அடியுங்கள். நாம் துணிவுடன் இருப்போம். உண்மையை அறியுங்கள், உண்மையையே கடைப் பிடியுங்கள். குறிக்கோள், தூரத்தில் இருக்கலாம். ஆனால், விழித்திருங்கள், எழுந்திருங்கள், லட்சியத்தை அடையும்வரை, நிற்காதீர்கள்.

## 3. வேத மத லட்சியங்கள்

13 அக்டோபர் 1896

நம் கவனத்தை மிகவும் அதிகமாகக் கவர்வது, மதக் கருத்துக்கள், அதாவது ஆன்மா, கடவுள் மற்றும் மதம் சம்பந்த மான அனைத்தும். சம்ஹிதைகளை எடுத்துக் கொள்வோம். ஆரியர்களின் மிகப் பழைய இலக்கியத்தில் உள்ள துதிப் பாடல்களின் தொகுப்பு இது. ஆரிய இலக்கியம் என்றல்ல, உலகிலேயே மிகப் பழைய இலக்கியம் இது. இவற்றைவிடப் பழைய சில இலக்கியத் துண்டுதுணுக்குகள் இருக்கலாம். ஆனால் நூல்களாகச் சரியாகத் தொகுக்கப்பட்ட இலக்கியமாக வேறு எவையும் இல்லை. உலகிலேயே மிகப் பழைய நூல் இந்தத் தொகுப்பு நூல்தான். அன்றைய ஆரியர்களின் உணர்ச்சிகள், அவர்களது நோக்கங்கள், அவர்களுடைய பழக்கவழக்கங்கள் பற்றி இவற்றில் நாம் காண்கிறோம்.

ஆரம்பத்திலேயே ஒரு வினோதமான கருத்து காணப்படு கிறது. இந்தத் துதிப்பாடல்கள் ஒளிமயமான பல தேவர்களைப் புகழ்வதாக உள்ளன. இவர்கள் ஏராளம் பேர் உள்ளனர்—இந்திரன், வருணன், மித்திரன், பர்ஜன்யன் இப்படிப் பலர்.

இவர்களைப் பற்றிய புராணக் கதைகளும் உருவகக் கதை களும் ஒவ்வொன்றாக நம் நினைவிற்கு வருகின்றன. பூமியில் மழை பெய்ய விடாமல் தடுத்த பாம்பைத் தன் வஜ்ராயுதத்தால் கொன்று வீழ்த்தியவன் இந்திரன். பாம்பு மடிந்ததும் மழை பொழிகிறது. மக்கள் மகிழ்ந்து இந்திரனுக்கு ஆஹுதி அளித்து வழிபடுகிறார்கள். வேள்வித் தீயை வளர்த்து, சில மிருகங்களைப் பலியிடுவார்கள். ஈட்டியில் அதனைக் குத்தி, மாமிசத்தை வாட்டி அதனை இந்திரனுக்கு ஆஹுதியாக அளிப்பார்கள்.

சோமா என்றொரு செடி இருந்தது. அது என்ன செடி என்பது இப்போது யாருக்கும் தெரியாது. தற்போது அது அடியோடு மறைந்துவிட்டது. அதைப்பற்றிய விவரங்கள் நூல் களில் காணப்படுகின்றன. அதைக் கசக்கினால் ஒருவிதப் பால் கிடைத்தது. அதைப் புளிக்க வைத்தால் கிடைத்த சோமரசம்

போதையை உண்டாக்கக்கூடிய பானமாக இருந்தது. அதை இந்திரனுக்கும் மற்ற தேவர்களுக்கும் அர்ப்பித்தனர்; தாங்களும் அருந்தினர். சிலசமயம் அவர்கள் கொஞ்சம் அதிகமாக அருந்தி விடுவார்கள். தேவர்களும் அப்படியே. இந்திரன் சிலவேளை களில் மிதமிஞ்சிப் பருகிவிட்டு, உளறியதாகக்கூட நூலில் காண்கிறோம்.

வருணனும் இப்படித்தான். அவன் மிகவும் சக்திவாய்ந்த தேவன். இந்திரனைப் போலவே தன் பக்தர்களைக் காப் பவன். அவர்களும் சோமரசத்தை அவனுக்கு அளித்துத் துதிக் கிறார்கள். இப்படியே ஒவ்வொரு தேவனைப் பற்றியும் காணப் படுகிறது.

ஆனால் சம்ஹிதையிலுள்ள கதைகள் மற்ற புராணங் களிலிருந்து ஒரு கருத்தில் முற்றிலும் வேறுபட்டு நிற்கிறது. அது என்னவெனில் இந்தத் தேவர்களுடன் எல்லையற்ற தன்மைக் கருத்தும் இணைந்திருப்பதுதான். இந்த எல்லையற்ற தன்மை உருக் கொடுக்கப்பட்டு சிலவேளைகளில் ஆதித்தன் என்று சித்தரிக்கப்படுகிறது. இன்னும் சில வேளைகளில் எல்லா தேவர்களும் எல்லையற்ற தன்மையுடன் இணைத்துப் பேசப் பட்டிருக்கின்றனர். சான்றாக, இந்திரனை எடுத்துக் கொள்ளுங் கள். சில நூல்களில் இந்திரனுக்கு உடல் இருப்பதாகச் சொல்லப் படுகிறது. அவன் ஆற்றல் படைத்தவனாக இருக்கிறான். தங்கக் கவசமணிந்து பூமிக்கு வந்து பக்தர்களுடன் உண்டுகளிக்கிறான். அசுரர்களையும் நாகங்களையும் வெல்கிறான். ஒரு பாடல் இந்திரனை மிக உயர்ந்த இடத்தில் வைத்து, எல்லாம் அறிந்தவ னாக, எல்லாம் வல்லவனாக, எல்லா உயிர்களின் உள்ளங்களை யும் அறிந்தவனாகப் போற்றுகிறது.

வருணதேவனும் இம்மாதிரிதான். இவன் காற்றிற்கும் நீருக்கும் தலைவன். ஆரம்பத்தில் இந்திரனைப் போலவே புகழப் படுகின்ற இவன், திடீரென்று உயர்ந்த நிலையில் வைக்கப்பட்டு எல்லாம் அறிந்தவன், எல்லாம் வல்லவன் என்றெல்லாம் போற்றப்படுகிறான். வருணனைப் பற்றிய ஒரு பகுதியைப்படிக் கிறேன். நான் கூறியது, அப்போது உங்களுக்கு விளங்கும். அது ஆங்கிலக் கவிதையாக மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறது. அதை அப்படியே படிக்கிறேன்—

விண்ணில் உறையும் மாதேவன் நம் செயலை
அருகில் இங்கிருந்து பார்ப்பதுபோல் பார்க்கிறான்.
மக்கள் தங்கள் செயலை மறைத்தே வைத்தாலும்

மாதேவன் அச்செயல்களை அறிந்துள்ளான்.
நின்றாலும் நடந்தாலும் இடம்இடமாக ஒளிந்தாலும்,
ரகசிய அறைக்குள் உன்னை அடைத்துக் கொண்டாலும்
அவன் அந்த இடத்தைக் கண்டுகொள்கின்றான்.
சதிசெய்யும் இருவர் தனித்தே இருந்தாலும்
வருணன் அங்கு சென்று மூன்றாமவன் ஆகின்றான்.
அதனாலே அந்தச் சதி அம்பலமாகி விடுகிறது.
விண்ணும் மண்ணும் அவனுக்கே சொந்தமாக இருந்தாலும்,
கடலும்கூட அவனுக்கே சொந்தமாக இருந்தாலும்
சின்னஞ்சிறு குட்டையே அவன் உறையும் இடமாகும்.
உயர உயரப் பறந்து வெளியே செல்ல முயன்றாலும்
அவன் வருணனின் பார்வையிலிருந்து தப்ப முடியாது.
விண்ணிலிருந்து வருகின்ற அவனது தூதர்கள் உலகெங்கும்
சஞ்சரிக்கிறார்கள்.
ஆயிரம் கண்கொண்டு உலகெல்லாம் பார்க்கின்றார்கள்.[1]

மற்ற தேவர்களையும் இதுபோலவே நாம் புரிந்து கொள்ள லாம். ஒவ்வொருவராக வருகின்றனர். முதலில் அவர்கள் தேவர்களாக இருக்கிறார்கள்; பிறகு, இந்தப் பிரபஞ்சம் யாரிடம் நிலைபெறுகிறதோ, யார் அனைவர் உள்ளத்தையும் அறிகி றாரோ, யார் இந்தப் பிரபஞ்சத்திற்குத் தலைவராக இருக் கிறாரோ அவரது இடத்திற்கு உயர்த்தப்படுகிறார்கள்.

வருணதேவன் விஷயத்தில் மற்றொரு கருத்தும் தோன் றியது. ஆனால் முளைவிடுவதற்குள் ஆரிய மனம் அதை அடக்கி விட்டது. அதுதான் பயம். பாவம் செய்துவிட்டோம் என்று பயந்து அவர்கள் வருணனிடம் மன்னிப்புக் கேட்பதாக ஓரிடத் தில் காணப்படுகிறது. இத்தகைய கருத்துக்கள் இந்திய மண் ணில் வளர முடியவில்லை. ஏன் என்பது பிறகு உங்களுக்கு விளங்கும். ஆனால் பயம், பாவம் இவற்றின் விதைகள் முளை விடத் தொடங்கிவிட்டன. இந்தக் கருத்துதான் ஒரேகடவுள்- கொள்கை (Monotheism) என்று சொல்லப்படுகிறது. அது உங்கள் அனைவருக்கும் தெரியும். நெடுங்காலத்திற்கு முன்பே இந்தக் கருத்து இந்தியாவில் தோன்றிவிட்டது. சம்ஹிதை களிலும், ஆரம்பமும் மிகமிகப் பழையதும் ஆகிய பகுதிகளி லேயே இந்தக் கருத்து உள்ளது. ஆனால் ஆரியர்களுக்கு அது திருப்தி அளிக்கவில்லை. அது ஒரு பக்குவப்படாத கருத்து

1. அதர்வண வேதம், 4-ஆம் காண்டம், 16-ஆம் பாடல்.

என்று ஒதுக்கிவிட்டு, இந்துக்களாகிய நாம் நினைப்பதுபோல் இன்னும் மேலாகச் சிந்திக்கத் தொடங்கினார்கள்.

வேதங்களைப்பற்றி ஐரோப்பியர்கள் எழுதிய நூல்களையும், ஆய்வுகளையும் படிக்கும்போது இந்துவால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. நாம் மேலே கண்ட பழைய கருத்துக்கள்தான் வேதங்களில் முழுவதுமாக உள்ளன என்று அவர்கள் கூறுகிறார்கள். கடவுளைப் பற்றிய மிக உயர்ந்த கருத்து சகுணக் கடவுள் கருத்தே என்று தங்கள் தாய்ப்பாலுடனேயே பருகிய இவர்களுக்குப் பண்டைய இந்தியாவின் சிந்தனைச் சிற்பிகள் சிந்தித்த வழியில் சிந்திக்கத் துணிச்சல் எங்கே? சம்ஹிதைகளில் நிறைந்துள்ள ஒரேகடவுள்-கருத்து பயனற்றது, தத்துவ ஞானிகளுக்கும் சிந்தனையாளர்களுக்கும் தகுதியற்றது என்று விலக்கிவிட்டு, அதைவிட அதிகத் தத்துவ ஞானம் உள்ளதும், அப்பாற்பட்டதுமான ஒரு கருத்தைப் பெற ஆரியர்கள் கடுமையாகப் போராடியது தெரிந்தும், அதைப் பாராட்டும் துணிச்சல் இந்த ஐரோப்பியர்களுக்கு இல்லை, இருக்காதுதான்!

ஆனால் பிரபஞ்சம் முழுவதும் அவனிலேயே நிலைபெறுகிறது, 'எல்லா இதயங்களையும் நீதான் வைத்துக் கொண்டிருக்கிறாய்' என்றெல்லாம் விவரித்தாலும் ஒரேகடவுள்-கருத்து அந்தப் பண்டைய ஆரியர்களுக்கு மிகவும் சாதாரணமாகப் பட்டது. இந்துக்கள் துணிச்சலானவர்கள். தங்கள் கருத்துக்களை வெளியிட அவர்கள் துளிகூடத் தயங்கியதில்லை என்று அவர்களைப்பற்றிப் பெருமையாகச் சொல்ல வேண்டும். அவர்களின் ஒரு சிறு சிந்தனைப் பொறிகூட மேலை நாடுகளின் துணிச்சல் மிக்கவர்கள் என்று கருதப்படுகின்ற சிந்தனையாளர்களை நடுங்கச் செய்கிறது. இந்த ஆரிய சிந்தனையாளர்களைப் பற்றிப் பேராசிரியர் மாக்ஸ்முல்லர், 'இவர்கள் மிக உயர்ந்த இடத்திற்குப் போய்விட்டார்கள். அங்கு இவர்களின் சுவாசப் பைகள்தாம் மூச்சுவிட முடியும். மற்றவர்களின் சுவாசப்பைகள் வெடித்துவிடும்' என்று சரியாகத்தான் சொன்னார்.

தங்கள் பகுத்தறிவு எங்கெல்லாம் இவர்களை அழைத்துச் சென்றதோ, அங்கெல்லாம் இந்தத் தைரியசாலிகள் சென்றார்கள். அதன் காரணமாகத் தங்களுக்கு ஏற்பட்ட கஷ்டங்களைப் பற்றியோ, தங்கள் மூடக்கொள்கைகள் பொடிப்பொடியாக உடைந்ததைப் பற்றியோ, சமுதாயம் தங்களைப்பற்றி என்ன நினைக்கும், என்ன பேசும் என்பதைப் பற்றியோ கவலைப் படவில்லை. தாங்கள் எதைச் சரியானது, உண்மையானது

என்று எண்ணினார்களோ, அதைப் பிரச்சாரம் செய்தார்கள், அதையே பேசினார்கள்.

பண்டைய வேத ரிஷிகளின் இந்தச் சிந்தனைகளைப்பற்றிப் பேசுவதற்கு முன்னர், வேதங்களின் ஒன்றிரண்டு விசித்திரமான அம்சங்களைக் குறிப்பிட வேண்டும். இந்தத் தேவர்கள் ஒவ்வொருவராக எடுத்துக்கொள்ளப்பட்டு, உயர்த்தப்பட்டு, கடைசியில் பிரபஞ்சத்தின் எல்லையற்ற சகுணக் கடவுள் என்ற அளவிற்குக் கொண்டுசெல்லப் படுகிறார்கள். இதற்கு என்ன விளக்கம்? இது இந்துக்களுக்கே உரிய ஒரு தனி அம்சம். ஆதலால் பேராசிரியர் மாக்ஸ்முல்லர் இதற்கு ஒரு புதிய சொல்லையே படைக்கிறார். இதை அவர் ஹெனோதீசம் (Henotheism) என்கிறார். நாம் அதற்கு விளக்கம் தேடி எங்கும் போக வேண்டியதில்லை. அது வேதங்களிலேயே உள்ளது. இந்தத் தேவர்கள் உயர்த்தப்பட்டு ஒரே கடவுளாக ஆக்கப்படும் இடத்திற்குப் பக்கத்திலேயே விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்துப் புராணங்கள் மற்ற நாட்டுக் கதைகளைவிட ஏன் இப்படி தனிப் பெருமையுடன் விளங்க வேண்டும் என்ற கேள்வி எழுகிறது. பாபிலோனிய, கிரேக்க புராணங்களில் ஒரு தேவன் முயன்று உயர்ந்த இடத்தை அடைகிறான், உடனே மற்ற தேவர்கள் மறைந்துவிடுகிறார்கள். மொலாக்குகள் அனைவரிலும் ஜெஹோவா உயர்ந்து முதன்மையானவுடன் மற்ற எல்லா மொலாக்குகளும் அடியோடு மறக்கப் பட்டுவிடுகிறார்கள்.

கிரேக்க தேவர்கள் விஷயத்திலும் இப்படியேதான். ஸ்யூஸ் பெரியவனாகி உயர் நிலையை அடைந்து பிரபஞ்சத்திற்கு ஒரே கடவுளாகிவிடுகிறான். மற்றத் தேவர்கள் அனைவரும் தேவதூதர்கள் என்னும் தாழ்ந்த நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள். பிற்காலத்திலும் இப்படியே நடந்தது.

பௌத்தர்களும் சமணர்களும் தங்கள் தீர்க்கதரிசிகளுள் ஒருவரைக் கடவுள் நிலைக்கு ஏற்றிவைத்து விட்டு, மற்ற தேவர்களைப் புத்தருக்கோ மகாவீரருக்கோ கட்டுப்பட்டவர்களாகச் செய்துவிட்டார்கள். உலகம் முழுவதும் இப்படியேதான் நடந்து வந்திருக்கிறது.

இதற்கு ஒரே ஒரு விதிவிலக்கு வேதங்களில்தான் காணப்படுகிறது என்று சொல்ல வேண்டும். ஒரு தேவன் உயர்நிலையில் வைத்துப் புகழப்படுகிறான். அந்த நேரத்திற்கு மற்ற தேவர்கள் அவனுக்கு அடங்கி நடக்கின்றனர். வருணன் ஒரு

தேவனைத் துதித்து மேல் இடத்தில் ஏற்றி வைக்கிறான். அந்த வருணனே அந்த உயர்ந்த இடத்தில் இருப்பதாக மற்றொரு பகுதியில் காண்கிறோம். அவர்கள் ஒருவர்பின் ஒருவராக சகுணக் கடவுள்நிலையில் வைக்கப்படுகிறார்கள். இதற்கான விளக்கமும் வேதங்களில் காணப்படுகிறது. அது மிகவும் உன்னத மான விளக்கம். அதுதான் தொடர்ந்த இந்தியச் சிந்தனைகளுக் கெல்லாம் பொருளாக இருக்கிறது. உலக மதங்களுக்கே பொரு ளாகின்ற ஒன்று என்றுகூட அதனைக் கூறலாம். அதுதான் 'ஏகம்; ஸத் விப்ரா பஹுதா வதந்தி—உள்ளது ஒன்றுதான்; மகான்கள் அதைப் பல பெயர்களால் வழங்குகிறார்கள்.' இந்தத் துதிப் பாடல்களில் எல்லாம் போற்றப்படுவது ஒரே கடவுளே. துதித்தவர்கள்தான் வேறுபாடுகளைக் கண்டவர்கள். துதித் தவர்கள் ரிஷிகள், கவிஞர்கள். அவர்களே வெவ்வேறு மொழி களில், வெவ்வேறு சொற்களில் ஒரே கடவுளைப் போற்றிப் பாடினார்கள்.

'உள்ளது ஒன்றுதான். மகான்கள் அதைப் பல பெயர் களால் வழங்குகிறார்கள். இந்த ஒரு வாக்கியத்திலிருந்து பெரிய விளைவுகள் ஏற்பட்டிருக்கின்றன. இந்திய நாடு ஒன்றில் தான் மத சம்பந்தமான கொடுமைகள் நடக்கவில்லை, மத நம்பிக்கைகளுக்காக யாரும் தொந்தரவு செய்யப்படவில்லை என்பதைக் கேட்க உங்களுள் சிலருக்குத் திகைப்பாக இருக்க லாம். ஆத்திகன், நாத்திகன், அத்வைதி, துவைதி எல்லோரும் அங்கே ஒரு தீங்கும் இல்லாமல் இன்பமாக வாழ்ந்து வருகிறார் கள். கோயில்களின் படிகளில் நின்று, தேவர்களுக்கு எதிராக, ஏன், கடவுளுக்கு எதிராகவே பேச உலோகாயதர்கள் அனு மதிக்கப்பட்டார்கள். 'கடவுள் என்பதே ஒரு மூட நம்பிக்கை. தேவர்கள், வேதங்கள், மதம் எல்லாமே தங்கள் நலத்திற்காகப் புரோகிதர்கள் புனைந்த கதைகள்' என்றெல்லாம் நாடு முழு வதும் அவர்கள் பேசினார்கள். அவர்களை யாரும் ஒன்றும் செய்யவில்லை. புத்தர், தாம் சென்ற இடமெல்லாம் இந்துக் களுக்குப் புனிதமான ஒவ்வொன்றையும் பழித்துக் கீழே தள்ள முயன்றார். ஆயினும் நீண்ட ஆயுள் வாழ்ந்துதான் புத்தர் இவ்வுலகம் நீத்துச் சென்றார். கடவுள் என்றால் சிரித்துப் பரிகசித்த சமணர்களும் அப்படித்தான். 'கடவுள் என்று ஒருவர் எப்படி இருக்க முடியும்? அது வெறும் மூட நம்பிக்கை!' என்றார்கள் அவர்கள். இப்படி எவ்வளவோ உதாரணங்கள் உள்ளன.

முகமதியர்கள் இந்தியாவிற்கு வருவதற்கு முன்பு மத சம்பந்தமான கொடுமை என்றால் என்ன என்பது அங்கே யாருக்கும் தெரியாது. அன்னியர் அங்கு வந்து அதைச் செய்த பின்தான் இந்துக்களுக்கு அது பற்றியே தெரிய வந்தது. கிறிஸ்தவர்கள் சர்ச்சுகளைக் கட்டுவதற்கு இந்தியர்கள் எவ்வளவு ஆர்வத்துடன் உதவி செய்தார்கள், இப்பொழுதும் எவ்வளவு தயாராக இருக்கிறார்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அங்கு ஒருபோதும் ரத்தம் சிந்தப்பட்டதில்லை; வைதீக மதத்திற்குப் புறம்பாகவுள்ள பௌத்தம் போன்ற மதங்கள்கூடத் தாக்கப் பட்டதில்லை.

புத்த மதத்தைப் பார்ப்போம். சில விஷயங்களில் புத்த மதம் மிகவும் உன்னதமானது. ஆனால் அதையும் வேதாந்தத்தையும் குழப்பிக்கொள்ளக் கூடாது. கிறிஸ்தவ மதத்திற்கும், ரட்சணிய சேனைக்கும் (Salvation Army) உள்ளது போன்ற வேற்றுமையே இவை இரண்டிற்கும் என்று யாரும் கண்டு கொள்ளலாம். புத்த மதத்தில் மிகச் சிறந்த கருத்துக்கள் இருக்கின்றன. ஆனால் அவை தக்க முறையில் பேணிக் காப்பாற்ற முடியாதவர்களின் கைகளைச் சேர்ந்தன. தத்துவ ஞானிகளிடமிருந்து கிடைத்த மாமணிகள் பாமரர்களின் கையில் சிக்கின; பாமரர்கள் அதை மேற்கொண்டனர். அந்தக் கருத்துக்களில் புத்துணர்வு இருந்தன. சில கருத்துக்கள் மகோன்னதமானவை, மனிதநேயம் மிக்கவை. ஆனால் எதையும் விழிப்புடன் காக்கக் கூடிய அறிவும் சிந்தனையும் கூட இருக்க வேண்டும் அல்லவா? எங்கானாலும் சரி, மனிதநேயக் கருத்துக்கள் சாதாரண மக்களிடம் சிக்கிவிட்டால், உடனடியாக நாம் காண்பது, சீரழிவு. கல்வியும் அறிவும்தான் எதையும் அழியாமல் காக்கின்றன.

உலகின் அப்போதைய நாகரீக நாடுகளில் எல்லாம் முதன் முதலாகப் புகுந்து பரவிய பிரச்சார மதம் புத்தமதம்தான். அங்கெல்லாம் ஒரு துளி ரத்தமும் சிந்தப்படவில்லை. சீன நாட்டில் புத்தமதப் பிரச்சாரகர்கள் எவ்வளவு கொடுமைக்கு உள்ளானார்கள், தொடர்ந்து இரண்டு மூன்று தலைமுறைச் சக்கரவர்த்திகள் ஆயிரக்கணக்கான பிரச்சாரகர்களை எப்படிக் கொன்று குவித்தார்கள் என்பதை நாம் படிக்கிறோம். அதன் பின் பௌத்தர்களுக்குச் சிறிது நல்ல காலம் பிறந்தது. சீனச் சக்கரவர்த்தி ஒருவர் பௌத்தர்களைத் துன்புறுத்தியவர்களைப் பழிவாங்கப் போவதாகக் கூறியபோது, 'பௌத்தப் பிரச்சாரகர்கள் அதை மறுத்துவிட்டார்கள்.

எல்லாம் இந்த ஒரு வாக்கியத்தின் பயன்தான். அதனால் தான் நீங்கள் அதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். 'இந்திரன், மித்திரன், வருணன் என்றெல்லாம் அழைக்கப்படுவது, உள்ளது, ஒன்றே; மகான்கள் அவரைப் பல பெயர்களிட்டு வழங்குகிறார்கள்.'[1]

அது எப்போது எழுதப்பட்டது என்பது ஒருவருக்கும் தெரியாது. இக்கால ஆராய்ச்சியாளர்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். இது எட்டாயிரம் அல்லது ஒன்பதாயிரம் வருடங்களுக்கு முன்பு எழுதப்பட்டதாக இருக்கலாம். இந்த மதச் சிந்தனைகளுள் ஒன்றுகூட சமீப காலத்தைச் சேர்ந்தவை அல்ல. ஆனால் எழுதப்பட்ட அன்று போலவே இன்றும் அவை புதுமை மாறாமல் இருக்கின்றன; ஏன், முன்னைவிடப் புதுப் பொலிவுடன் திகழ்வதாகவே கூறலாம். அந்தப் பண்டைய காலத்தில் இன்றுபோல் மனிதன் அவ்வளவு நாகரீகம் படைத்தவனாக இருக்கவில்லை; தான் நினைத்ததிலிருந்து சிறிது வேறாக நினைத்தான் என்பதற்காகச் சகோதரனின் தலையை வெட்ட வேண்டும் என்று மனிதன் எண்ணம் கொள்ளவில்லை. அவன் உலகை ரத்தத்தில் மூழ்கடிக்கவில்லை. தன் சகோதரனுக்கே அவன் அசுரனாக மாறவில்லை. மனித சமுதாயத்தின் பெயரால் மக்களை வெட்டிக் குவிக்கவில்லை. அதனால்தான் இந்த வாக்கியம் அன்றைவிட இன்று இன்னும் புத்துணர்வுடன் வாழ்வளிக்கும் ஒன்றாக நம்முன் வருகிறது: 'இருப்பது ஒன்றே; மகான்கள் அதைப் பல பெயர்களால் வழங்குகிறார்கள்.' உலகிலுள்ள எல்லா மதங்களும், அது இந்து மதமோ, புத்த மதமோ, முகமதிய மதமோ, கிறிஸ்தவ மதமோ, எந்த மதமாயினும் சரி, அனைத்திற்கும் கடவுள் ஒருவரே; இந்த மதங்களுள் எந்த மதத்தையும் பழிப்பவன் தனது கடவுளைப் பழிப்பவனே—இது நாம் கற்க வேண்டியவற்றுள் ஒன்றாகும்.

அவர்கள் கண்ட முடிவு இதுதான். நான் சொன்னதுபோல், ஒரேகடவுள்-கருத்து இந்துவின் மனத்திற்குத் திருப்தி அளிக்கவில்லை. அது ஆழமானதாக இல்லை. அது நாம் காணும் உலகை விளக்கவில்லை. உலகத்தை ஆளும் ஒருவர் இருக்கிறார்

---

1. இந்த்ரம் மித்ரம் வருணமக்னி மாஹுரதோ திவ்ய: ஸ ஸுபர்ணோ கருத்மான் ।
ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்த்யக்னிம் யமம் மாதரிச்வானமாஹு: ॥
—ரிக்வேதம், 1. 164. 46

என்று கூறுவது உலகத்திற்கான விளக்கம் ஆகாது, ஒருபோதும் ஆகாது. பிரபஞ்சத்திற்கு ஒரு தலைவர் இருக்கிறார் என்பது பிரபஞ்சத்திற்கு விளக்கமாகாது. அதுவும் அவர் பிரபஞ்சத் திலிருந்து வேறானவர் என்று கூறும்போது அதை ஒரு விளக்கம் என்றே சொல்ல முடியாது. அவர் நமக்கு நல்வழி காட்டுபவராக இருக்கலாம், புவனத்திலேயே மிக அதிக சக்தி படைத்தவராக இருக்கலாம். ஆனால் அது பிரபஞ்சத்திற்கு விளக்கம் ஆகாது.

ஆகவே பிரபஞ்சத்தைப் பற்றிய கேள்விதான் இப்பொழுது பெரிய அளவில் நம்முன் நிற்கிறது: 'இது எங்கிருந்து வந்தது? எப்படி வந்தது? எப்படி நிலைத்து நிற்கிறது?'[1] இதற்கு விளக்க மாக எத்தனையோ பாடல்கள் எழுந்தன. ஆனால் கீழே கொடுக்கப்பட்டுள்ளதைப் போன்று அவ்வளவு கவிநயத்துட னும் அழகாகவும் வேறு எங்கும் சொல்லப்படவில்லை.

'அப்போது அங்கே ஒன்றும் இல்லை. ஒன்றும் இல்லாம லும் இல்லை. காற்று இல்லை, வானம் இல்லை. எதுவுமே இல்லை. அனைத்தையும் எது மூடியிருந்தது? எல்லாம் எங்கே நிலைபெற்றிருந்தன? அப்பொழுது இறப்பு இல்லை; இறவாத நிலையுமில்லை. பகல் இரவாகி, இரவு பகலாகும் மாற்றமும் இல்லை.' மொழிபெயர்ப்பில் கவிதையின் அழகு குன்றிவிடு கிறது. 'இறப்பு இல்லை. இறவாத நிலையுமில்லை. பகல், இரவு என்ற மாறுதலும் இல்லை'. சம்ஸ்கிருதத்தின் ஒலியே இன்னிசை யாக உள்ளது. 'அது இருந்தது. அந்த இறைவனின் இருப்பையே மறைப்பதுபோல் அந்த மூச்சு இருந்தது. ஆனால் அது இயங்கத் தொடங்கவில்லை.'

அது இயக்கமற்றிருந்தது என்ற கருத்தை நாம் நினைவில் வைத்துக்கொள்வது நல்லது. ஏனெனில் இந்தக் கருத்துதான் பிறகு வளர்ந்து இந்தப் பிரபஞ்சம் முழுவதும் அதிர்வுகளின் தொகுதி மட்டுமே, அதாவது இயக்கங்களின் தொகுதி போன் றதே என்னும் இந்துக்களின் தத்துவக் கோட்பாட்டிற்குக் காரண மாக அமைந்தது. இந்த இயக்கத் தொகுதி முழுவதும் குறைந்து கொண்டே வந்து, நுட்பமாகி, மிகவும் நுட்பமாகி, அந்த நிலை யிலேயே இருக்கின்ற காலகட்டங்களும் உண்டு. அந்த நிலை தான் மேற்கூறிய பாடலில் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. அது இயங்காமல் இருக்காது, அதிர்வுகளின்றி இருந்தது. படைப்பு

---

1. கிம் ஸ்விதாஸீததிஷ்டானமாரம்பணம் கதமத்ஸ்வித் கதாஸீத்?
—ரிக்வேதம், 10. 81. 2.

தொடங்கியபோது அது அதிர ஆரம்பித்தது. இந்தப் படைப்பு முழுவதும் அதிலிருந்து வெளிவந்தது. அந்த ஒரு மூச்சு, அமைதியுடன், தன்னைத்தானே தாங்கிக்கொண்டு இருந்தது. வேறு ஒன்றுமில்லை.

'முதலில் எங்கும் இருளே இருந்தது.' இந்தியாவிலோ மற்ற வெப்ப நாடுகளிலோ திடீரென்று வானம் இருண்டு மழை பொழிவதை உங்களுள் யாராவது பார்த்திருந்தால் இந்தச் சொற்களின் ஆழம் புரியும். மூன்று பெரிய கவிஞர்கள் இதைச் சித்தரிக்க முயன்றது என் நினைவிற்கு வருகிறது. 'வெளிச்சம் இல்லை. ஆனால் கண்ணுக்குப் புலனாகின்ற இருள் உண்டு' என்கிறார் மில்டன். 'ஊசியினால் துளைக்கக்கூடிய இருள்' என்று காளிதாசர் கூறுகிறார். ஆனால் வேதத்தில் காணும் இந்த வர்ணனைக்கு ஒன்றும் ஒப்பாகாது—'இருளில் மறைந்து கிடக்கும் இருள்.' எங்கும் வறண்டு கிடக்கின்றது. உலகம் முழுவதும் வெப்பத்தால் அல்லல்பட்டுக் கொண்டிருக்கிறது. இப்படியே பல நாட்கள் செல்கின்றன. ஒருநாள் பிற்பகலில் வானத்தின் எங்கோ ஒரு மூலையில் சிறு மேகம் தோன்றுகிறது. சிறிது நேரத்திற்குள் அது வானம் முழுவதும் பரவுகின்றது. இருண்ட முகில்கள் ஒன்றன்மேல் ஒன்று வந்து குவிந்து வெள்ளமாய்ப் பொழிகின்றன.

படைப்பு என்பதற்கான காரணம் சங்கல்பம் என்று கூறப்படுகிறது. முதலில் எது இருந்ததோ, அது சங்கல்பமாக மாறிற்று. சங்கல்பம் ஆசையாக வெளிப்பட்டது. இந்த ஆசை என்பது தான் எல்லாவற்றிற்கும் காரணம் என்று கூறப்படுவதால், நாம் இதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்தச் சங்கல்பம் என்பதுதான் பௌத்த மதத்திற்கும் வேதாந்த நெறிக்கும் மையக் கருத்தாக இருக்கிறது. இது பிறகு ஜெர்மானியர்களின் தத்துவ நூல்களில் புகுந்து, ஷோபனேரின் கருத்துக்களுக்கு ஆதாரமாக விளங்கியது. இங்குதான் முதலில் நாம் அதைப் பற்றிக் கேள்விப்படுகிறோம்.

'மனத்தின் ஆதி விதையான ஆசை என்பது முதன் முதலில் எழுந்தது. ரிஷிகள் தங்கள் உள்ளத்தில் ஞானத்தின் மூலம் தேடி, இருப்பு, இல்லாமை இரண்டிற்கும் இடையே உள்ள பந்தத்தைக் கண்டுகொண்டார்கள்.'[1]

---

1. காமஸ்ததக்ரே ஸமவர்த்ததாதி மனஸோ ரேத: ப்ரதமம் யதாஸீத் |
ஸதோ பந்துமஸதி நிரவிந்தன் ஹ்ருதி ப்ரதீஷ்ய கவயோ மனீஷா ||
—ரிக்வேதம், 10. 129. 8

'அந்தப் பரமபுருஷன்கூட ஒருவேளை அறியமாட்டான்'[1] என்ற வினோதமான கருத்துடன் அந்தக் கவிஞர் முடிக்கிறார்.

இதில் காணும் கவிதைநயம் ஒருபுறம் இருக்கட்டும். இந்தக் கவிதையிலிருந்துதான், பிரபஞ்சத்தைப் பற்றிய கேள்வி தீவிரமாக உருவெடுத்தது. ரிஷிகளின் சிந்தனையும் வளர்ந்து கொண்டே வந்தது. எந்தச் சாதாரண விடைகளும் அவர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. பிரபஞ்சத்தைக் காக்கக் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்ற கருத்துகூட அவர்களுக்குத் திருப்திகரமாக இல்லை. இந்தக் கருத்துடன்கூடிய வேறு சில பாடல்களும் இருக்கின்றன. இந்தப் பிரபஞ்சம் எப்படி உண்டாயிற்று என்பதும், இதற்குத் தலைவன் ஒருவனை, ஒரு சகுணக் கடவுளைத் தேடியபோது ஒவ்வொரு தேவனாக அந்த உயர்ந்த இடத்தில் ஏற்றி வைக்கப்பட்டான் என்பதெல்லாம் அந்தப் பாடல்களில் காணப்படுகின்றன.

அதுபோலவே ஒரு கருத்தை எடுத்துக்கொண்டு, அதை விரித்துக்கொண்டே போய் முடிவில் அதுவே பிரபஞ்சம் முழுவதற்கும் காரணம் என்று கூறும் பாடல்களையும் காண்கிறோம். ஏதாவது ஒரு கருத்தை ஆதாரமாக எடுத்துக்கொண்டு பிறகு உலகம் முழுவதும் அதில் நிலைத்திருப்பதாக அவை கூறுகின்றன. பிறகு இந்த ஆதாரமே எல்லாமாக ஆகியிருக்கிறது என்பது ஏற்படுகின்றது. பல்வேறு கருத்துக்களையும் அவர்கள் இந்த முறையிலேயே ஆராய்ந்தார்கள். வாழ்க்கைத் தத்துவமாகிய பிராணனை ஆராய்வதிலும் அவர்கள் இந்த முறையையே கையாண்டார்கள். பிராணன் என்ற கருத்து விரிவாக்கப்பெற்று, முடிவில் எங்கும் நிறைந்ததாகவும் எல்லையற்றதாகவும் கொள்ளப்பட்டது. இந்தப் பிராணன்தான் மனித உடலை மட்டும் அல்ல, எல்லாவற்றையும் தாங்குகிறது. சூரியன், சந்திரன்—இவற்றிலுள்ள ஒளியும் இதுதான். அனைத்தையும் இயக்கும் சக்தி இதுவே. சில பகுதிகள் மிகவும் அழகாக கவிதை நயத்துடன் திகழ்கின்றன. 'வனப்பு மிக்க காலைப்பொழுதை அவனே நமக்கு அனுப்புகிறான்' என்பது போன்ற வரிகள் ஓர் இனிய கீதம் போலவே ஒலிக்கின்றன.

---

1. இயம் விஸ்ருஷ்டிர்யத ஆபபூவ யதி வா ததே யதி வா ந।
யோ அஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமன் ஸோ அங்க வேத யதி வா ந வேத ॥
—ரிக்வேதம், 10. 129. 7

நாம் முன்பு கண்டதுபோல் இந்தக் கருத்து, அதாவது படைப்பிற்குக் காரணமான முதல் ஆசை என்னும் கருத்து விரிவடைந்து, எங்கும் நிறைந்த கடவுளாக நிறைவுற்றது. ஆனால் இந்தக் கருத்துக்கள் எதுவும் முழுத் திருப்தியை அளிக்கவில்லை.

இந்தக் கருத்தை மேலும்மேலும் உயர்த்தி மேலான உருவத்தையும் அளித்தார்கள். 'முதலில் அந்தப் பரமாத்மா ஒருவரே இருந்தார். அவரே இந்தப் பிரபஞ்சம் அனைத்திற்கும் தலைவர். இந்தப் பிரபஞ்சத்தைத் தாங்கி நிற்பவர் அவரே. ஆன்மாக்களைப் படைத்தவர் அவரே. ஆற்றலுக்குக் காரணமானவர் அவர். அவரையே எல்லா தேவர்களும் வழிபடுகிறார்கள். அவரது நிழலே வாழ்வு, அவரது நிழலே மரணம். அவரைத் தவிர வேறு யாரை நாம் வழிபட முடியும்? யாருடைய மகிமையைப் பனி படர்ந்த இமயச் சிகரங்கள் விளக்குகின்றனவோ, அலை பொங்கும் கடல்கள் யாருடைய மகிமையை முழங்குகின்றனவோ, அவரைத் தவிர வேறு யாரை நாம் வழிபட முடியும்?' இப்படியே போகிறது. ஆயினும் நான் சற்று முன்பு கூறினேனே அதுதான்—அவர்களுக்குத் திருப்தி ஏற்படவில்லை.

கடைசியில் ஒரு விசித்திரமான நிலையைக் காண்கிறோம். ஆரியர்கள் நீண்ட காலமாக, இந்தப் பிரச்சினைக்கு, வெளியில் விடை தேடினார்கள். சந்திரன், சூரியன், விண்மீன்கள் என்று அவர்கள் அறிந்த அனைத்தையும் ஆராய்ந்தார்கள். அப்படி ஆராய்ந்ததில் இயற்கை முழுவதும் சேர்ந்துகூட அவர்களுக்குக் கற்பித்தது ஒரு சகுணக் கடவுளையே; பிரபஞ்சத்தை ஆள்கின்ற ஒருவரையே; அதற்குமேல் எதுவும் அல்ல. சிற்பி ஒருவன், அவனது கைகளிலிருந்து உருப்பெற்றது இந்தப் பிரபஞ்சம் என்ற கருத்து (Design Theory) ஒன்றுதான் அவர்கள் இயற்கையிலிருந்து அறியக்கூடியது. அது தர்க்கரீதியாக இல்லை; சற்று குழந்தைத்தனமாகத்தான் உள்ளது. வெளியுலகிலிருந்து கடவுளைப்பற்றி நாம் அறிய முடிகின்ற ஒரே கருத்து, இந்தப் பிரபஞ்சத்தை உண்டாக்க ஒருவர் வேண்டும் என்பதுதான். ஆனால் இது பிரபஞ்சத்திற்கு விளக்கமாகாது.

இந்தப் பிரபஞ்சத்தைப் படைப்பதற்கு வேண்டிய சாதனங்கள் கடவுளுக்கும் முன்பே இருந்திருக்கின்றன. அந்தக் கடவுளுக்கும் உலகத்தைப் படைப்பதற்கு அவை தேவையாக இருந்திருக்கின்றன. எனவே அவர் அந்தச் சாதனங்களால் கட்டுப்படுத்தப்பட்டவர், அதாவது எல்லைக்கு உட்பட்டவர் என்ற பெரிய

மறுப்பு எழுகிறது. வீடு கட்டுபவன், கட்டுவதற்கு வேண்டிய பொருட்கள் இல்லாமல் எப்படி வீடு கட்டுவான்? ஆகையால் அவன் அந்தச் சாதனங்களுக்குக் கட்டுப்பட்டவனாகிறான். அவற்றைக் கொண்டு என்ன செய்ய முடியுமோ, அதை மட்டும் தான் அவன் செய்யக்கூடும். ஆகவே ஒழுங்குமுறை படைப்புத் திட்டத்திலிருந்து கிடைக்கும் கடவுள் மிஞ்சிப்போனால் ஒரு சிற்பி, அதிலும் கட்டுக்கு உட்பட்ட சிற்பி மட்டும்தான். அவர் பிரபஞ்ச மூலப் பொருட்களால் கட்டுண்டு எல்லைக்கு உட்பட்டவராக இருக்கிறார். அவருக்குச் சுதந்திரம் இல்லை. இது வரை அவர்கள் ஏற்கனவே கண்டுபிடித்துவிட்டனர். பலர் இத்துடன் நிறுத்தியிருப்பார்கள். ஆனால் அவர்கள் நிறுத்தவில்லை.

மற்ற நாடுகளிலும் இம்மாதிரியேதான் நடந்தது. மனித மனம் அவ்வளவு எளிதாக நின்றுவிடாது அல்லவா! நல்ல சிந்தனைச் சக்தி வாய்ந்தவர்கள் மேலும்மேலும் ஆராய்ந்து பார்க்க விரும்பினார்கள். ஆனால் அவ்விதச் சக்தியில்லாதவர்கள் அவர்களை மேலே செல்லவிடாமல் தடுத்தார்கள். நல்ல காலமாக இந்த இந்து ரிஷிகளை அப்படித் தலையில் அடித்து யாரும் நிறுத்திவிட முடியாது. அவர்கள் தங்கள் கேள்விக்கு விடை கண்டே தீர வேண்டும் என்று விரும்பினார்கள். இப்பொழுது அவர்கள் புற உலகை விட்டு அகவுலகில் புகுவதைக் காண்கிறோம்.

அவர்கள் கண்ட முதற் கருத்து, புற உலகை அறிகின்ற கண்களாலோ புலன்களாலோ மதத்தைப்பற்றி எதுவும் அறிந்து கொள்ள முடியாது என்பதுதான். அந்தக் குறையை முதலில் கண்டுபிடிக்க வேண்டும். அந்தக் குறை, உடலையும் ஒழுக்கத்தையும் பற்றியதாக இருந்தது. இந்த ரிஷிகளில் ஒருவர் கூறினார்: 'இந்தப் பிரபஞ்சத்தின் காரணம் உங்களுக்குத் தெரியாது. உங்களுக்கும் எனக்கும் ஒரு பெரிய வித்தியாசம் எழுந்துவிட்டது. ஏன்? ஏனெனில் நீங்கள் புலன் நுகர்ச்சிப் பொருட்களைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறீர்கள். அவற்றுடனும் மதச் சடங்குகளுடனும் திருப்தி அடைந்து விடுகிறீர்கள். ஆனால் நானோ அப்பால் உள்ள புருஷனைக் கண்டுவிட்டேன்.'

உங்களிடம் நான் விவரித்துக் கொண்டிருக்கும் ஆன்மீகக் கருத்துக்களின் வளர்ச்சியோடு கூடவே வளர்ச்சியுற்ற இன்னொரு விஷயத்தைப் பற்றியும் கூற வேண்டும். ஆனால் நான் சுட்டிக்காட்டத்தான் முடியும். ஏனெனில் அதற்கும் நாம் எடுத்துக்கொண்ட தலைப்பிற்கும் சம்பந்தமில்லை. ஆகவே

அதை நான் அதிகம் விவரிக்கப் போவதில்லை. அதுதான் சடங்குகளின் வளர்ச்சி. ஆன்மீகக் கருத்துக்கள் கூட்டல் விகிதத்தில் வளரவளர, சடங்குகளைப் பற்றிய கருத்துக்கள் பெருக்கல் விகிதத்தில் வளர்ந்தன. பழைய மூடநம்பிக்கைகள் சடங்குத் தொகுதிகளாக உருவெடுத்து, அதிகரித்துக்கொண்டே போய், கடைசியில் இந்துவின் வாழ்க்கையைக் கிட்டத்தட்ட அழிக்கும் அளவுக்கு வளர்ந்துவிட்டன. அவை இன்னும் இருக்கின்றன. அவை நம் வாழ்க்கையின் எல்லா பகுதிகளுக் குள்ளும் புகுந்து நம்மைப் பிறப்பிலிருந்தே அடிமைகள் ஆக்கிவிட்டன.

இருந்தும் மிகப் பழங்காலத்திலிருந்தே, இதற்கு எதிராகப் போர் தொடுக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். இவற்றிற்கு எதிராக உள்ள ஒரு மறுப்பு இது: சடங்குகளின்மீது மோகம், சில நேரங்களில் குறிப்பிட்ட ஆடைகளை அணிவது, குறிப் பிட்ட வழியில் உண்பது, பகட்டான பூஜைகள் போன்ற கேலிக்கூத்துகள் எல்லாம் மதத்தின் புறப்பகுதி மட்டுமே. இங்கு, நீங்கள் புலன் நுகர்ச்சியோடு திருப்தியடைந்து விடுகிறீர்கள். அதற்குமேல் செல்வதில்லை.

நம்மிடமுள்ள ஒரு பெரிய குறைபாடு இது: ஆன்மீக விஷயங்களையும் புலன்களைக் கொண்டுதான் அளக்கிறோம். தத்துவம், கடவுள், அப்பாற்பட்ட விஷயங்கள் என்பதைப் பற்றியெல்லாம் ஒருவன் கேட்கிறான். எத்தனையோ நாள் கேட்டபின், கடைசியில் அவனது கேள்வி எதுவாக இருக்கும் தெரியுமா? 'இந்த ஆன்மீகம் எனக்கு எவ்வளவு பணம் தரும்? எவ்வளவு புலனின்பத்தைத் தரும்?' ஏனெனில் அவனது இன் பங்கள் எல்லாம் புலன்களிலேயே. அது இயல்புதான். ஆனால் உண்மைக்கும் நமக்கும் நடுவில் உள்ள திரைக்கான காரணங் களுள் ஒன்று இந்தப் புலனின்பங்கள் தாம் என்கிறார் எங்கள் ரிஷி ஒருவர். சடங்குகளின்மீது மோகம், புலனுகர்ச்சி, பல்வேறு கொள்கைகளை வகுத்தல்—இவை நமக்கும் உண்மைக்கும் இடையில் ஒரு திரையைப் போட்டுவிட்டது. திரை என்கின்ற இந்தக் கருத்து ஒரு மாபெரும் மைல்கல். இதை நாம் கடைசி வரையில் கொண்டு செல்ல வேண்டும். இதுதான் கடைசியில் வேதாந்தம் கூறும் மாயை என்னும் அற்புதமான கொள்கையாக உருவெடுத்தது. இந்தத் திரைதான் வேதாந்தத்தின் விளக்கமாக இருக்கப்போகிறது—உண்மை எப்போதும் இருந்தது, இந்தத் திரை அதை மறைத்துக் கொண்டிருந்தது.

இவ்வாறு இந்தப் பண்டைய ஆரிய சிந்தனையாளர்கள் புதிய விஷயம் ஒன்றைச் சிந்தனைக்கு எடுத்துக்கொள்வதைக் காண்கிறோம். புற உலகில் எவ்வளவு ஆராய்ந்தாலும் தங்கள் கேள்விக்கு விடை கிடைக்காதென்று அவர்கள் தெரிந்து கொண் டார்கள். ஊழிக்காலம்வரை தேடினாலும் பலன் இல்லை என்பது அவர்களுக்கு விளங்கியது. ஆகவே அவர்கள் இந்த வேறு முறையைப் பின்பற்றினார்கள். புலன்களின் ஆசைகள், சடங்குகளிலுள்ள பற்றுதல்—இவை யாவும் உண்மைக்கும் தங்களுக்கும் இடையே ஒரு திரையைப் போட்டுவிட்டன. அந்தத் திரையை எந்தச் சடங்காலும் விலக்க முடியாது என்பதை அவர்கள் அறிந்து கொண்டார்கள். சொந்த மனத்தையே ஆராய வேண்டும், தங்கள் உள்ளேயே உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பது புலனாயிற்று. புறஉலகம் பயனற்றுப் போகவே அவர்கள் அக உலகத்தை நாடினார்கள். அதுதான் உண்மையான வேதாந்தத் தத்துவம் ஆயிற்று.

வேதாந்தத்தின் அடிக்கல் இதுவே. வேதாந்தத் தத்துவம் இங்கிருந்துதான் தொடங்குகிறது. இங்கே எல்லா கேள்விகளும் ஆராய்ச்சிகளும் அகத்திலேயே நடைபெறுவதைப் போகப் போகக் காண்கிறோம். உண்மையை எந்த மதத்திலும் தேட வேண்டாம். அது இங்கே, மனித ஆன்மாவில், அற்புதங்களுக்கு எல்லாம் அற்புதமான மனித ஆன்மாவில் இருக்கிறது; அறிவுக் களஞ்சியமும், வாழ்க்கையின் சுரங்கமுமான மனித ஆன்மாவில் இருக்கிறது. அதை இங்கே தேடுங்கள் என்று தொடக்கத் திலேயே அவர்கள் பிரகடனம் செய்ததுபோல் தோன்றியது.

இங்கே இல்லாதது அங்கே இருக்க முடியாது, வெளியே தெரிவது உள்ளே இருப்பதன் மங்கலான பிரதிபலிப்பே என் பதைப் படிப்படியாக ஆராய்ந்து அவர்கள் கண்டார்கள். பிர பஞ்சத்திற்கு வெளியே உள்ள கடவுள் என்ற பழமையான கருத்தை அவர்கள் எடுத்துக்கொண்டு, கடவுளைப் பிரபஞ்சத் திற்குள் வைத்தார்கள். பின்னர், அவர் பிரபஞ்சத்திற்கு வெளியே உள்ளவர் அல்ல, பிரபஞ்சத்திற்குள் உள்ளேயே இருப்பவர் என்றாகியது. இறுதியில் அவரை அங்கிருந்து அகற்றித் தங்கள் இதயத்தில் நிறுவினார்கள். அவர் மனித இதயத்தில் அவனது ஆன்மாவிற்கு ஆன்மாவாக மெய்ப்பொருளாக விளங்குகிறார்.

வேதாந்தத் தத்துவத்தை உணர்ந்துகொள்ள வேண்டும் என்றால், பல உயர்ந்த கருத்துக்களை அறிய வேண்டும். முதலில், அது கான்ட், ஹெகல் போன்றோர் கூறுகின்ற பொருளில்

உள்ள தத்துவம் அல்ல. அது ஒரு புத்தகம் அல்ல, ஒருவர் எழுதியது அல்ல. தொடர்ந்து பலர் எழுதியவையே வேதாந்தம். சிலவேளைகளில் ஒரு நூலில் ஐம்பது விஷயங்கள் இருக்கும். அவை சரியாக வரிசைப்படுத்தப் பட்டிருக்கவும் செய்யாது. எண்ணங்கள் அங்கங்கே குறித்து வைக்கப்பட்டிருக்கும், அவ்வளவுதான். சிலவேளைகளில் பல பிற விஷயங்களுக்கு இடையில் ஓர் அற்புதமான கருத்தைக் காண்கிறோம். ஆனால் ஒன்று, உபநிடதக் கருத்துக்கள் தொடர்ந்து வளர்ச்சியடைந்து கொண்டே போகின்றன. ஒவ்வொரு ரிஷியின் மனமும், அது எப்படி இயங்கிற்றோ, அப்படியே, அந்தப் பழைய பண்படாத மொழியில் வர்ணத்தினால் தீட்டப்பட்டதுபோல் உள்ளது. மிகவும் பண்படாமல் இருந்த கருத்துக்கள், வரவர நுட்பமாகி, வேதாந்தத்தின் குறிக்கோளை அடைகின்றன. இந்தக் குறிக் கோளுக்கு ஒரு தத்துவப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. முதலில் அது ஒளிமிக்க தேவர்களைத் தேடுவதாக ஆரம்பித்தது. பிறகு பிரபஞ்சத்தின் ஆரம்பத்தைத் தேடுவதாக ஆயிற்று. கடைசியில் அந்தத் தேடலே வேறு பெயர் பெற்றது; தத்துவ ரீதியாகப் பார்க்கப்பட்டது; 'எதைத் தெரிந்துகொண்டால் எல்லாம் தெரிந்தது ஆகுமோ' அதை அந்த அனைத்தின் ஒரு மையைத் தெரிந்துகொண்டார்கள்.

## 4. மாயையும் பொய்த் தோற்றமும்

15 அக்டோபர் 1896

அனேகமாக நீங்கள் எல்லோரும் 'மாயை' என்ற வார்த்தையைக் கேள்விப்பட்டிருப்பீர்கள். பொதுவாக பொய்த்தோற்றம் (Illusion), மனமயக்கம் (Delusion) போன்றவற்றைக் குறிக்கவே இந்தச் சொல் வழங்கப்பட்டு வருகிறது. ஆனால் மாயைக் கோட்பாடு வேதாந்தத்தைத் தாங்கும் தூண்களுள் ஒன்றாகும். அதைச் சரியாகப் புரிந்துகொள்வது மிகவும் அவசியம். நீங்கள் சிறிது பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஏனெனில் இதைத் தவறாகப் புரிந்துகொள்ளும் ஆபத்து இருக்கிறது.

மாயைபற்றி வேதங்களில் நாம் காணும் கருத்து, மன மயக்கம் என்ற பொருளில் அது பயன்படுத்தப் பட்டிருப்பது தான். அப்பொழுது மாயையைப் பற்றிய உண்மையான கருத்து உருவாகவில்லை. 'இந்திரன் தனது மாயையின் மூலம் பல உருவங்களை எடுத்துக்கொண்டான்'[1] என்பது போன்ற செய்திகளையே காண்கிறோம். இந்த இடத்தில் மாயாஜாலம் போன்ற ஒரு பொருளில்தான் அது பயன்படுத்தப்பட்டிருப்பது உண்மை தான். வேறு பல இடங்களிலும் மாயை இதே பொருளில் பயன்படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம்.

பிறகு மாயை என்ற சொல், இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. ஆனால் அந்தக் கோட்பாடு உருவாகிக் கொண்டே வந்தது. 'இந்தப் பிரபஞ்சத்தின் ரகசியத்தை நாம் ஏன் அறிந்துகொள்ள முடியவில்லை?' என்ற கேள்வி பின்பு எழுந்தது. இதற்குக் கிடைத்த பதில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது: 'ஏனெனில் நாம் வீண்பேச்சுப் பேசுகிறோம். புலனின்பத்தில் திருப்தி அடைகிறோம். ஆசைகளைப் பின் தொடர்ந்து ஓடுகிறோம். எனவே ஒரு பனிப்படலத்தால்

---

1. இந்த்ரோ மாயாபி: புருருப ஈயதே ॥

—ப்ருஹதாரண்யக உபநிடதம், 2. 5. 19.

மறைப்பதுபோல் உண்மையை மறைத்துவிடுகிறோம்'[1] என்பதே அந்தப் பதில். இந்த இடத்தில் மாயை என்ற சொல்லே பயன் படவில்லை. நம் அறியாமைக்குக் காரணம் நமக்கும் உண்மைக் கும் இடையே தோன்றியுள்ள ஒரு படலமே என்ற கருத்து நமக்கு இதிலிருந்து கிடைக்கிறது.

மிகவும் பிற்கால உபநிடதம் ஒன்றில் மாயை என்ற சொல் மறுபடியும் தோன்றுவதைக் காண்கிறோம். இப்பொழுது இந்தச் சொல்லிற்கே ஒரு மாற்றம் ஏற்பட்டுவிட்டது. அதற்கு எத்தனையோ அர்த்தங்களும் உண்டாகிவிட்டன. அதைப் பற்றிய பல கொள்கைகளும் தோன்றி அவை மீண்டும்மீண்டும் சொல்லப்பட்டன. வேறு கொள்கைகளும் தோன்றின. கடைசி யில், மாயை என்பதற்கு நிச்சயமான ஒரு பொருள் நிர்ணய மாயிற்று. 'இயற்கையே மாயை என்பதையும், அதை ஆள்பவன் பரம்பொருளே என்பதையும் அறிந்துகொள்.'[2] என்று சுவே தாஸ்வதர உபநிடதத்தில் காண்கிறோம். நமது தத்துவ ஞானி களை எடுத்துக்கொண்டால் ஆதிசங்கரர் காலம்வரை மாயை என்ற இந்தச் சொல்லைப் பலர் பலவிதமாகப் பொருள்படுத்தி வந்ததைக் காண்கிறோம்.

பௌத்தர்களும் மாயைக் கொள்கையைக் கையாண் டார்கள். அவர்கள் பெருமளவில் இதனை, லட்சியவாதத்தைப் (Idealism) போன்ற ஒரு கருத்தாகவே பயன்படுத்தியிருக்கிறார் கள். இப்பொழுதும் மாயை என்ற சொல்லிற்குப் பொதுவாக இந்தப் பொருள்தான் நிலவுகிறது.

உலகம் மாயை என்று இந்துக்கள் சொல்லும்போது இந்த உலகம் ஒரு பொய்த் தோற்றம் என்று அவர்கள் குறிப்பிடு வதாகவே மற்றவர்கள் நினைக்கிறார்கள். பௌத்தர்கள் கொண்ட பொருளே இந்தக் கருத்திற்கு ஓரளவு அடிப்படை யாகும். ஏனென்றால் பௌத்தத் தத்துவ ஞானிகளுள் ஒரு பிரிவினர் புறவுலகம் என்பதே இல்லை என்று நம்புபவர்களாக இருந்தார்கள்.

வேதாந்தத்தில் மாயை என்ற சொல்லின் பொருள் இறுதிப் பரிணாமத்தை அடைந்துள்ளது. இங்கே மாயை என்பது லட்சியவாதமோ பிரத்தியட்சவாதமோ (Realism) அல்ல; அது

---

1. ஒப்பிடுக:
நீஹாரணே ப்ராவ்ருதா ஜல்ப்யா சாஸுத்ருப்த உக்தசாஸச்சரந்தி ॥
—சுக்லயஜுர் வேதம், 17. 31.
2. மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாத் மாயினம் ச மஹேச்வரம் ॥ —4. 10.

ஒரு கொள்கையும் அல்ல. அது நிஜங்களின் ஒரு தெளிவான சித்திரம்; நம்மையும் நம்மைச் சுற்றி நாம் காண்பவற்றையும் பற்றிய ஒரு சித்திரமே அது.

வேதங்களை வெளிப்படுத்திய ரிஷிகளின் மனத்தில், கோட்பாடுகளைக் கண்டுபிடிக்க வேண்டும், அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் பலமாக வேரூன்றி இருந்தது என்பதை நான் உங்களுக்கு ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். கருத்துக்களின் விளக்கத்திற்காகக் காத்திருக்கவோ, அவற்றை ஆராய்ச்சி செய்யவோ அவர்களுக்கு நேரம் இருக்கவில்லை. அவர்கள் பொருட்களின் மையத் தத்துவத்திற்கே செல்லும் விருப்பம் உடையவர்களாக இருந்தார்கள். அப்பாலுள்ள ஏதோ ஒன்று அவர்களை அழைப்பதுபோல் அவர்கள் உணர்ந்தார்கள்; வேறு எதற்காகவும் காத்திருக்க அவர்களால் முடியவில்லை.

தற்காலத்தில் விஞ்ஞானம் என்று நாம் கூறுகின்ற துறையில் காணப்படும் விவரங்களை உபநிடதங்களில் நாம் காணவே செய்கிறோம். ரிஷிகள் இந்த விளக்கங்களைப்பற்றிக் கவலைப் படாததால் பல இடங்களில் இவை தவறாக இருக்கின்றன. ஆனால் அவற்றின் மையத் தத்துவங்கள் சரியாகவே இருக்கின்றன. உதாரணமாக, ஆகாசத் தத்துவம். இது தற்கால விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களில் புதிய ஒன்றாகும். இந்தத் தத்துவத்தைப் பற்றி இன்றைய விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருப்பதைவிட அதிக வளர்ச்சியுற்ற நிலையை உபநிடதங்களில் நாம் காண்கிறோம். இங்கே அது கருத்தளவில் இருக்கிறது. அதன் செயல் முறை விளக்கங்களைக் காட்ட முயன்றபோது, அவர்கள் தவறு செய்துவிட்டார்கள்.

எங்கும் நிறைந்துள்ள உயிர்ச்சக்தியைப் பற்றிய கருத்தும் அதுபோல்தான். எங்கும் உயிர்ச்சக்தி ஒன்று நிறைந்திருக்கிறது. இந்தப் பிரபஞ்சத்திலுள்ள உயிர்கள் எல்லாமே அந்தச் சக்தியின் பல்வேறு வெளிப்பாடுகளே. இதனையும் வேதகால ரிஷிகள் அறிந்திருந்தார்கள். பிராம்மணங்களில் இது காணப்படுகிறது. இதனை அவர்கள் பிராணன் என்று அழைத்தார்கள். உயிர்கள் எல்லாம் பிராணனின் வேறுபட்ட வெளிப்பாடுகளே என்பதைக் கூறி, இந்தப் பிராணனைப் புகழும் நீண்டதொரு துதிப் பாடல், சம்ஹிதைகளில் இருக்கிறது.

இதற்கிடையில் ஒரு வார்த்தை. ஐரோப்பிய விஞ்ஞானிகளுள் சிலர், பூமியில் உயிர் எவ்வாறு உண்டாயிற்று என்பதைப் பற்றிக் கொண்டுள்ள கோட்பாடுகளைப் போன்ற கருத்துக்கள்,

வேதகால தத்துவங்களில் உள்ளன என்பதை அறிவதில் உங்களில் சிலருக்கு விருப்பம் இருக்கலாம். உயிர், வேறு கிரகங்களிலிருந்து வந்தது என்ற ஒரு கொள்கை இருப்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். சந்திரனிலிருந்தே உயிர்கள் வந்தன என்பது சில வேத தத்துவ ஞானியரின் உறுதியான கொள்கை.[1]

கொள்கைகளைப் பொறுத்தவரையில், பொதுப்படையான விரிவான கொள்கைகளை உருவாக்குவதில் வேதச் சிந்தனையாளர்கள் துணிவு மிக்கவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது. புறவுலக நோக்கிலிருந்து பிரபஞ்சத்தின் மர்மத்தை ஆராயப் புகுந்தால், எவ்வளவு திருப்திகரமான தீர்வு கிடைக்குமோ அவ்வளவு திருப்தியான தீர்வை அவர்கள் கண்டிருக்கவே செய்தார்கள்.

தற்கால விஞ்ஞானங்களின் பிரபஞ்சம் பற்றிய அடிப்படைக் கோட்பாடுகளில் தவறு இருக்கிறது. அதனால் பிரபஞ்சத்தைப்பற்றிய விரிவான விஞ்ஞான விளக்கங்கள் சரியான தீர்வின் அருகில்கூடச் செல்ல முடியவில்லை. பிரபஞ்ச மர்மத்திற்கு, ஆகாசத் தத்துவத்தைப் பற்றிய கொள்கையால் பழங்காலத்தில் தீர்வு காண முடியவில்லையென்றால், அது பற்றிய தற்கால விளக்கங்களால் மட்டும் உண்மைத் தீர்வை எப்படித் தர முடியும்? எங்கும் நிறைந்திருக்கும் உயிர்ச் சக்தியைப் பற்றிய கொள்கையே ஒரு பிரபஞ்சக் கொள்கையாக ஆக முடியாதபோது, அதையே விரிவாக விளக்குவதால் எதைச் சாதிக்க முடியும்? விளக்கங்களால் அடிப்படைக் கோட்பாட்டை மாற்ற முடியாது அல்லவா?

தத்துவ ஆராய்ச்சி என்று வரும்போது இந்தச் சிந்தனையாளர்கள் நவீன சிந்தனையாளர்களைப் போல் இருப்பது மட்டுமல்லாமல், சிலவேளைகளில் இவர்களைவிடத் துணிச்சல் மிக்கவர்களாக இருக்கிறார்கள் என்பதை எடுத்துக்காட்டுவதே எனது நோக்கம். அவர்கள் சில மகத்தான பொதுவிதிகளைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அவற்றில் சில, இன்னும் கொள்கை அளவிலேயே இருக்கின்றன. அந்தக் கொள்கையளவில்கூட அவற்றைத் தற்கால விஞ்ஞானம் இதுவரை உருவாக்கவில்லை.

உதாரணமாக, இந்துத் தத்துவ ஞானிகள், ஆகாசத் தத்துவத்தைக் கண்டுபிடித்தது மட்டுமல்லாமல் இன்னும்

---

1. பிருஹதாரண்யக உபநிடதம், 6. 2. 16 மற்றும் சாந்தோக்கிய உபநிடதம், 5. 10. 4. பார்க்க.

மேலே சென்று மனத்தையே ஒரு நுட்பமான ஆகாசத் தத்துவம் என்று பாகுபடுத்தியிருக்கிறார்கள். இன்னும் மேலே சென்று, மனத்திற்கும் அப்பால் இன்னும் நுட்பமான ஆகாசத் தத்துவம் ஒன்றைக் கண்டுபிடித்தார்கள். அதுவும் முடிவல்ல, பிரச்சினைக்கு அதுவும் தீர்வு காணவில்லை. புறவுலகத்தைப் பற்றி எவ்வளவு அறிவும் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியாது.

ஆனால் விஞ்ஞானிகள், 'நாங்கள் இப்போதுதானே இந்தப் பிரச்சினையைப்பற்றி ஏதோ சிறிது தெரிந்துகொள்ள ஆரம்பித்திருக்கிறோம்; இன்னும் சில ஆயிரம் வருடங்கள் காத்திருங்கள்; நாங்கள் நிச்சயமாகத் தீர்வு கண்டுவிடுகிறோம்' என்று கூறுகிறார்கள். வேதாந்தியோ, அது முடியவே முடியாது என்கிறான். ஏனெனில் மனம் எல்லைக்கு உட்பட்டது, சில குறிப்பிட்ட எல்லைகளுக்கு அப்பால், காலம், இடம், காரணகாரியம் என்ற எல்லைகளைக் கடந்து மனம் செல்ல முடியாது என்பதை அவன் சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபித்துவிட்டான். எப்படித் தன்னைவிட்டு மனிதன் வெளியே குதிக்க முடியாதோ அதைப் போலவே, காலம், இடம் முதலியவை வகுத்துள்ள நியதிகளுக்கு அப்பாலும் யாரும் போக முடியாது. காரணகாரியம், காலம், இடம் இவற்றின் எல்லையை மீறிப் போவதற்காகச் செய்யும் ஒவ்வொரு முயற்சியும் வீணே. ஏனெனில் இந்த மூன்றையும் ஆதாரமாகக் கொண்டுதான் இந்த முயற்சிகளையே ஆரம்பிக்க முடியும்.

அப்படியானால் உலகம் இருக்கிறது என்று கூறுவதற்கு என்ன பொருள்? 'இந்த உலகம் இல்லை' என்பதன் பொருள் என்ன? உலகத்திற்குத் தனியான இருப்பு இல்லை என்பதுதான். என் மனம், உங்கள் மனம் என்று எல்லோருடைய மனங்களையும் சார்ந்துதான் உலகம் இருக்கிறது. நாம் இந்த உலகத்தை ஐம்புலன்களால் அறிகிறோம். நமக்கு ஆறாவது புலன் ஒன்று இருந்தால், நாம் இந்த உலகில் இன்னும் அதிகமான சிலவற்றைக் காண்போம். மேலும் ஒரு புலன் அதிகமாக இருக்குமானால், அது இன்னும் மாறுபட்டுத் தெரியும். ஆகவே அதற்கு உண்மையான இருப்பு ஒன்று இல்லை. மாறுதலற்ற, அசைவற்ற, எல்லையற்ற இருப்பு உலகிற்குக் கிடையாது. அதேவேளையில் அது இல்லை என்றும் சொல்லிவிட முடியாது. ஏனெனில் அது இருப்பதை நாம் பார்க்கிறோம். அதிலும் அதன் வழியாகவும் நாம் இயங்க வேண்டியிருக்கிறது. இருப்பு, இல்லாமை என்ற

இரண்டின் கலப்பே உலகம். தத்துவங்களிலிருந்து நமது அன்றாட வாழ்க்கைக்கு வந்தால், வாழ்க்கையே இந்த இருப்பு, இல்லாமை என்ற இரண்டு முரண்பாடுகள் கலந்ததாக இருப்பதைக் காண்கிறோம்.

அறிவிலும் இந்த முரண்பாடு உண்டு. மனிதன் எதை அறிய விரும்பினாலும் அவனால் அதை அறிந்துகொள்ள முடியும் என்று தோன்றுகிறது. ஆனால் சில அடிகள் எடுத்து வைப்பதற்கு முன்பே, தனக்கு முன்னால், கடக்க முடியாதபடி ஒரு பெரிய சுவர் இருப்பதை அவன் காண்கிறான். அவன் ஒரு வட்டத்திற்குள்ளேயே சுழன்று கொண்டிருக்கிறான். அந்த வட்டத்திலிருந்து அவனால் வெளியேற முடிவதில்லை. மிகவும் நெருக்கமான, பிரியமான பிரச்சினைகளுக்குத் தீர்வு காண அவன் இரவும் பகலும் உழைக்க வேண்டியிருக்கிறது. அறிவின் எல்லையைத் தாண்டி அவனால் போக முடியாததால், அந்தப் பிரச்சினைகளுக்கு அவனால் தீர்வு காண முடிவதில்லை. அறிவைக் கடந்து செல்ல வேண்டும் என்ற ஆசை மட்டும் மனிதனின் மனத்தில் உறுதியாகப் பதிந்திருக்கிறது. அதேவேளை யில் அறிவைக் கட்டுப்படுத்துவதாலும் அடக்குவதாலும்தான் நமக்கு நன்மை கிடைக்கும் என்பதும் நமக்கு நன்றாகத் தெரியும். சுயநலமாயிரு என்றே மூச்சுக்கு மூச்சு நமது இதயம் துடிக்கிறது. அதேவேளையில், நம்மை மீறிய சக்தி ஒன்று, சுயநலமின்மை மட்டுமே நன்மை தரும் என்பதை நம்மிடம் கூறிக்கொண்டே இருக்கிறது.

ஒவ்வொரு குழந்தையும் இன்பநோக்குடன்தான் பிறக் கிறது; பொற்கனவுகளையே காண்கிறது. வாலிபத்தில் அவன் மேலும் இன்பநோக்குக் கொண்டவனாகிறான். மரணம் என்ற ஒன்று உள்ளது என்பதை ஒரு வாலிபன் நம்புவதே இல்லை. தோல்வி, தாழ்வு போன்ற சொற்களுக்கு இளைஞனின் அகராதி யில் இடமில்லை. வயதாகும்போதோ அவனது வாழ்வே நரகமாகி விடுகிறது. கனவுகள் எல்லாம் காற்றில் கரைந்து விடுகின்றன. அவன் துன்பநோக்குக் கொண்டவனாகி விடுகிறான்.

இவ்வாறு இயற்கையின் சுழற்சியில் சிக்கிச் சுழன்று எங்கே போகிறோம் என்பது தெரியாமல் இந்த எல்லைக்கும் அந்த எல்லைக்குமாக அல்லாடுகிறோம். புத்தரின் வரலாறான 'லலித விஸ்தாரம்' என்ற நூலிலுள்ள ஒரு புகழ்பெற்ற பாடலையே எனக்கு இது நினைவூட்டுகிறது. அது சொல்கிறது—

புத்தர் மனித குலத்தை உய்விப்பதற்காகப் பிறந்தார், ஆனால் அரச போகத்தில் தன்னையே மறந்துவிட்டார். சில தேவதைகள் வந்து அவரை விழிப்புணர்த்துவதற்காக ஒரு பாட்டுப் பாடின. இடையீடற்று மாறியவாறே ஓடிக் கொண் டிருக்கும் வாழ்க்கை ஆற்றில், அதன் போக்கிலேயே நாம் மிதந்து சென்று கொண்டிருக்கிறோம்.

இதுவே அந்தப் பாட்டின் சாரம். நம்முடைய வாழ்க்கையும் இப்படி எந்த ஓய்வுமே இல்லாமல் ஓடிக் கொண்டிருக்கிறது.

நாம் செய்ய வேண்டியது என்ன? உண்ணவும் உடுக்கவும் போதிய வசதி படைத்தவன் இன்பநோக்கு உள்ளவனாக இருக் கிறான். துன்பத்தைப் பற்றிய பேச்சு அவனை நடுங்கச் செய்கிறது. அத்தகைய பேச்சைக் கேட்கவே அவன் விரும்புவதில்லை. உலகத்தின் துன்பங்களையும் கஷ்டங்களையும் அவனிடம் பேசவே கூடாது. எல்லாம் இன்பமே என்றுதான் அவனிடம் சொல்ல வேண்டும். 'நான் பத்திரமாகவே இருக்கிறேன். என் னைப் பாருங்கள்! எனக்கு அழகான வீடுவாசல் இருக்கிறது. குளிரையும் பசியையும் எண்ணி நான் பயப்படுவதில்லை. இந்த மாதிரியான பயங்கரச் செய்திகளை என்னிடம் கொண்டு வராதீர்கள்' என்கிறான் அவன்.

ஆனால் மறுபக்கமோ குளிராலும் பசியாலும் எத் தனையோ பேர் செத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் போய் உலகம் இன்பமானது என்று சொன்னால், அவர்கள் அந்தப் பேச்சிற்கு மதிப்புக் கொடுக்க மாட்டார்கள். தாங்கள் துன்பத்தில் உழன்றுகொண்டிருக்கும்போது, மற்றவர்கள் இன்ப மாக இருக்க வேண்டும் என்று அவர்கள் எப்படி விரும்ப முடியும்? இவ்வாறு இன்பநோக்கிற்கும் துன்பநோக்கிற்கும் இடையே நாம் ஊசலாடிக் கொண்டிருக்கிறோம்.

பிறகு மரணம் என்னும் மகத்தான உண்மை இருக்கிறது. உலகமே மரணத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது. எல்லாமே அழிந்துகொண்டிருக் கின்றன. நமது முன்னேற்றங் கள், நமது கர்வங்கள், நமது சீர்திருத்தங்கள், நமது ஆடம் பரங்கள், நமது செல்வங்கள், நமது அறிவு எல்லாவற்றிற்கும் ஒரே முடிவுதான், அது மரணம். அது ஒன்றுதான் சர்வ நிச்சய மானது. நகரங்கள் தோன்றி மறைகின்றன, பேரரசுகள் எழு கின்றன, வீழ்கின்றன, கிரகங்கள் உடைந்து தூள்தூளாகி, மற்றக் கிரகங்களின் ஈர்ப்புச் சக்தியால் அங்குமிங்கும் அலைக் கழிக்கப்படுகின்றன. இவ்வாறு அனாதி காலம் முதல் நடந்து

கொண்டே இருக்கிறது. மரணமே எல்லாவற்றிற்கும் முடிவு. வாழ்க்கையின், அழகின், செல்வத்தின், அதிகார பலத்தின், ஏன், நற்பண்பின் முடிவுகூடமரணம் தான். மகான்கள் இறப்பார்கள், பாவிகளும் இறப்பார்கள்; அரசர்கள் இறப்பார்கள், ஆண்டிகளும் இறப்பார்கள். எல்லோருமே மரணத்தை நோக்கித்தான் போய்க் கொண்டிருக்கிறார்கள். ஆனாலும் அவர்கள் வாழ்க்கையில் வைத்திருக்கும் உடும்புப்பிடியை மட்டும் விடுவதே இல்லை. காரணம் தெரியாமலேயே வாழ்க்கையை நாம் இறுக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறோம். அந்தப் பிடியை நாம் விட முடிவதில்லை, இதுதான் மாயை.

தாய், குழந்தையைப் போற்றி வளர்க்கிறாள். உயிரையே அந்தக் குழந்தையின்மீது வைத்திருக்கிறாள். குழந்தை வளர்கிறான், பெரியவனாகிறான்; சந்தர்ப்ப வசத்தால் தீயவனாக, கொடியவனாக மாறுகிறான். தாயையே தினமும் அடித்து உதைக்கிறான். ஆனாலும் அவள் தன் மகன்மீது வைத்துள்ள பாசத்தை விடுவதில்லை. அவளது அறிவு விழித்துக் கொள்ளும் போது, அன்பு என்ற போர்வையால் அதை மறைத்துவிடுகிறாள். அது அன்பு அல்ல; அது அவளது நாடிநரம்புகளைப் பற்றிக் கொண்டுள்ள ஏதோ ஒன்று, உதறித் தள்ள முடியாத உணர்ச்சி அது என்பதை அவள் நினைத்துப் பார்ப்பதில்லை. எவ்வளவு தான் முயன்றாலும் அந்தப் பந்தத்திலிருந்து அவளால் விடுபட முடிவதில்லை. இதுதான் மாயை.

நாம் எல்லோரும் தங்கமுடிப் போர்வையைத்[1] தேடி அலைகிறோம். அது தனக்குக் கிடைக்கும் என்றே ஒவ்வொருவரும் நினைக்கிறோம். கோடியில் ஒருவருக்குத்தான் அதற்கான வாய்ப்பு உண்டு என்பது அறிவுள்ள ஒவ்வொருவனுக்கும் தெரியும். இருந்தாலும் ஒவ்வொருவரும் அதை அடைவதற்காகத் தீவிரமாக முயல்கிறார்கள். இதுதான் மாயை.

பகலும் இரவும் நமது இந்தப் பூமியின்மீது மரணம் பீடு நடை போட்டுக் கொண்டிருக்கிறது. அதேவேளையில் நாமோ நிரந்தரமாக வாழப் போகிறோம் என்றே நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஒருமுறை யுதிஷ்டிரரிடம் கேள்வியொன்று கேட்கப்பட்டது. 'இந்த உலகத்தில் மிகவும் அதிசயமானது எது?' என்பதே அந்தக் கேள்வி. 'தினந்தோறும் நம்மைச் சுற்றி

---

1. Golden Fleece; கிரேக்கப் புராணங்களில் குறிப்பிடப்படுகின்ற ஒரு போர்வை. அடைய முடியாத ஒன்று என்பது பொருள்.

மக்கள் இறந்துகொண்டே இருக்கிறார்கள். என்றாலும் மனிதர்கள் தங்களுக்கு மரணமே வராது என்றே நினைக்கிறார்கள்'[1] என்பதே அந்தக் கேள்விக்கான விடை. இதுதான் மாயை.

நமது புத்தியிலும் அறிவிலும் என்று மட்டுமல்ல, வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் இத்தகைய முரண்பாடுகளை நாம் சந்திக்கிறோம். சீர்திருத்தவாதி ஒருவர் தோன்றுகிறார். நாட்டிலுள்ள தீமைகளைக் களைய அவர் விரும்புகிறார். அந்தத் தீமைகளைச் சரிசெய்வதற்கு முன்னால், வேறோரிடத்தில் ஆயிரம் வேறு சீர்கேடுகள் தோன்றிவிடுகின்றன. இடிந்து விழுந்து கொண்டிருக்கும் ஒரு பழைய வீட்டைப் போன்ற நிலை இது. ஓரிடத்தில் அதைச் சரிசெய்தால் மற்றோரிடத்தில் இடிந்து விழுகிறது.

இந்தியாவில் எங்கள் சீர்திருத்தவாதிகள், கட்டாயமாகத் திணிக்கப்படும் விதவை வாழ்க்கையை எதிர்த்துத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்கிறார்கள். திருமணம் செய்து கொள்ள முடியாமல் இருப்பதே மேலைநாடுகளில் பெரிய தீமையாகும். ஒரு பக்கம் மணமாகாதவர்களுக்கு உதவி செய்ய வேண்டும், அவர்கள் கஷ்டப்படுகிறார்கள். மறுபக்கம் விதவைகளுக்கு உதவ வேண்டும், அவர்களும் கஷ்டப்படுகிறார்கள். இந்த நிலை, குணப்படுத்த முடியாத வாதநோய் போன்றது. தலையிலிருந்து விரட்டினால் அது உடம்பிற்குப் போகிறது; உடம்பிலிருந்து விரட்டினால் பாதங்களுக்குப் போகிறது.

சீர்திருத்தவாதிகள் தோன்றி, கல்வியும் செல்வமும் பண்பாடும் குறிப்பிட்ட சிலரிடம் மட்டுமே இருப்பது சரியல்ல என்று பிரச்சாரம் செய்கிறார்கள். இவை எல்லோருக்கும் கிடைப்பதற்காகத் தங்களாலான முயற்சிகளைச் செய்கிறார்கள். இதனால் ஒருவேளை ஏதோ சிலருக்கு அதிக இன்பம் கிடைக்கலாம். ஆனால் பண்பாடு உதிக்கும்போது லௌகீக இன்பம் குறைகிறது.

இன்பத்தைப் பற்றிய அறிவும், துன்பத்தைப் பற்றிய அறிவும் சேர்ந்தே தோன்றுகின்றன, அப்படியானால் நாம் எந்த வழியில் போவது? நாம் அனுபவிக்கும் குறைந்த அளவு லௌகீக இன்பம் கூட, வேறோர் இடத்தில் அதே அளவு துன்பம் ஏற்படுவதற்குக் காரணமாக இருக்கிறது. இதுதான் நியதி.

---

1. மகாபாரதம், வன பர்வம் 313. 115.

இளைஞர்களுக்கு இது புரியாமல் இருக்கலாம். ஆனால் வெகுநாள் வாழ்ந்தவர்களுக்கும், வெகுநாள் வாழ்க்கையில் போராடியவர்களுக்கும் இந்த உண்மை நன்கு புரியும். இதுதான் மாயை.

இவை இரவும்பகலும் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பது முடியாத காரியம். ஏன் இவ்வாறு இருக்க வேண்டும்? இந்தக் கேள்விக்குப் பதில் காண முடியாது. இது தர்க்கரீதியானது அல்ல. எனவே ஏன், எப்படி என்ற கேள்விகளுக்குச் சாத்தியமே இல்லை. இவை இருக்கின்றன, இவற்றை நாம் தவிர்க்க முடியாது—இதுதான் நமக்குத் தெரிந்தது. இதைப் புரிந்துகொள்வதும், இதைப் பற்றிய தெளிவான கருத்தை நம் மனத்தில் உருவாக்கிக் கொள்வதும் நம் சக்திக்கு மீறியதாகும். அப்படியானால் இந்தப் பிரச்சினைக்கு எப்படித்தான் தீர்வு காண்பது?

இந்தப் பிரபஞ்சத்திலுள்ள நிஜங்களின் ஒரு சித்திரமே மாயை. இது போன்ற விஷயங்களைச் சொன்னாலே மனிதர்களுக்குப் பயம் ஏற்படுகிறது. நாம் தைரியத்தைக் கைவிடக் கூடாது. நிஜங்களை மறைப்பது தீர்வு காணும் வழியல்ல. நாய்கள் ஒரு முயலைத் துரத்தும்போது, முயல் தன் முகத்தைத் தரையோடு தரையாக வைத்துக்கொண்டு, தான் பாதுகாப்பாக இருப்பதாக நினைத்துக் கொள்கிறது. மனிதர்கள் இன்ப நோக்குக் கொண்டவர்களாக இருக்கும்போது, இந்த முயலைப் போலவே இருக்கிறார்கள். ஆனால் அது ஒரு பரிகாரம் ஆகாது.

இந்தக் கருத்திற்கு எதிர்க் கருத்துக்களும் உள்ளன. வாழ்க்கையில் சுகத்தை அனுபவிப்பவர்கள் மட்டுமே இந்த எதிர்ப்பைத் தெரிவிக்கிறார்கள் என்று நீங்கள் சொல்லலாம். இந்த நாட்டில் (இங்கிலாந்தில்) துன்பநோக்கு உடையவர்களாக ஆவது கடினம். உலகம் மிகவும் அற்புதமாக இருக்கிறது என்றும், வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறது என்றும் எல்லோரும் என்னிடம் சொல்கிறார்கள். ஆனால் ஒவ்வொருவரும் தாங்கள் எதுவோ அதையே தங்கள் உலகமாக நினைக்கிறார்கள். பழைய கேள்விகள் திரும்பவும் எழுகின்றன. கிறிஸ்தவ நாடுகள் செழிப்பாக இருப்பதால், கிறிஸ்தவ மதம் மட்டுமே உலகின் உண்மையான மதமாக இருக்க வேண்டும். ஆனால் இந்த வாதம் முரணானது. ஏனெனில் கிறிஸ்தவரல்லாத நாடுகளின் துரதிர்ஷ்டம் அல்லவா கிறிஸ்தவ நாடுகளின் செழிப்பிற்குக் காரணமாக இருக்கிறது! அனுபவிப்பவனுக்கு, தான் அனுபவிக்க ஏதாவது

வேண்டும். உலகம் முழுவதுமே கிறிஸ்தவ நாடுகளாக மாறி விட்டால், கொள்ளையடிப்பதற்குக் கிறிஸ்தவர் அல்லாதவர்கள் வசிக்கும் நாடுகள் இல்லாததால், எல்லா கிறிஸ்தவ நாடுகளும் ஏழை நாடுகளாகிவிடும். ஆகவே இந்த வாதம் தன்னையே அழித்துக் கொள்வதாகிறது.

மிருகங்கள் தாவரங்களை அழித்து வாழ்கின்றன. மனிதர்கள் மிருகங்களை அழித்து வாழ்கிறார்கள். இன்னும் மோசமானது எதுவென்றால் வலியவர் எளியவரை அழித்து வாழ்வதுதான். இது உலகம் முழுவதும் நடைபெறுகிறது. இதுதான் மாயை.

இந்தப் பிரச்சினைக்கு நீங்கள் என்ன தீர்வு காண்கிறீர்கள்? காலப்போக்கில் எல்லாம் நன்மையாகவே இருக்கும் என்றெல்லாம் எத்தனையோ விளக்கங்கள் தினந்தோறும் நம் காதில் விழுகின்றன. இது சரி என்றே வைத்துக் கொண்டாலும், நல்லது செய்வதற்கு இதைப் போன்ற காட்டுமிராண்டித்தன மான வழி ஏன் இருக்க வேண்டும்? இதைப் போன்ற கொடூர மான வழிகளை விட்டு, நல்ல வழியிலேயே நன்மை செய்ய ஏன் முடியாது? இன்றைய மக்களின் பரம்பரை இன்பமாக இருக்கும். அதற்காக இப்பொழுது இந்தப் பரம்பரை ஏன் கஷ்டப்பட வேண்டும்? இந்தப் பிரச்சினைக்குத் தீர்வே இல்லை. இதுதான் மாயை.

பரிணாமத்தின் ஓர் அம்சம் தீமைகளை ஒழிப்பதே என்றும், கடைசியில் தீமைகள் எல்லாம் அழிந்து, நன்மையே மிஞ்சும் என்றும் சொல்லப்படுகிறது.[1] கேட்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. உலகில் இன்று சுகமாக வாழும் சிலர் பெருமைப் பட்டுக் கொள்வதற்கு மட்டுமே இது உதவும். வாழ்க்கையுடன் ஒவ்வொரு நாளும் போராடும் அவசியம் அவர்களுக்கு இல்லை. பரிணாமம் என்று சொல்லப்படும் சக்கரத்திற்கு அடியில் அவர்கள் நசுக்கப்படுவதில்லை. அத்தகைய அதிர்ஷ்டக்காரர் களுக்கு இந்தக் கருத்து நல்லதுதான், ஆறுதல் அளிப்பது தான். மற்றவர்கள் நசுங்கிக் கசங்கட்டுமே அவர்களுக்கென்ன கவலை! மற்றவர்கள் இருந்தாலும் இறந்தாலும் இவர்கள் அதைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. மிகவும் சரி. ஆனால் இந்த வாதம் ஆரம்பம் முதல் முடிவுவரை தவறாகவே இருக்கிறது.

---

1. டார்வினின் பரிணாம வாதம் இங்கே குறிப்பிடப்படுகிறது.

உலகில் நாம் காணும் நன்மையும் தீமையும், வேறுபட்ட இரண்டு தனி உண்மைகள் என்பதே இந்த வாதத்தின் அடிப் படை. இரண்டாவதாக, இதைவிட மோசமான ஊகம் என்ன வென்றால், நன்மைகள் அதிகரித்துக்கொண்டே போகின்றன, தீமைகள் குறைந்துகொண்டே போகின்றன என்பதுதான். அப் படியானால் பரிணாமம் என்று அவர்கள் சொல்லும் தத்துவத் தால் இவ்வுலகிலுள்ள தீமைகள் எல்லாம் அழிந்து, நன்மை மட்டுமே மிஞ்சும் காலம் ஒன்று வரும். சொல்வது மிகவும் எளிது. ஆனால் தீமை குறைந்துகொண்டே போகிறது என்பதை நிரூபிக்க முடியுமா? ஒரு காட்டு மனிதனை எடுத்துக் கொள் வோம். அவனுக்கு மனத்தைப் பண்படுத்தத் தெரியாது, அவனால் ஒரு புத்தகத்தைப் படிக்க முடியாது, எழுதுவது என்ற ஒரு சமாச்சாரத்தையே அவன் கேள்விப்பட்டதில்லை. கடுமையாகக் காயப்பட்டாலும் அவன் சீக்கிரமாகக் குணமடைந்து விடுகிறான். ஆனால் நாம் சாவதற்கு ஒரு சிராய்ப்பு போதும்.

எந்திரங்கள் பொருட்களை மலிவாக்குகின்றன. முன்னேற் றத்திற்கும் பரிணாம வளர்ச்சிக்கும் இவை உதவுகின்றன. ஒருவன் பணக்காரனாவதற்குக் கோடிக் கணக்கானோர் நசுக்கிப் பிழியப்படுகிறார்கள். ஒருவன் பணக்காரனாகும் அதேசமயத் தில், பல்லாயிரக் கணக்கானோர் ஏழைகள் ஆகிறார்கள்; பல்லாயிரக் கணக்கானோர் அடிமைகளாக்கப் படுகிறார்கள். இப்படித்தான் உலகம் சென்று கொண்டிருக்கிறது.

மிருக குணம் கொண்ட மனிதன் புலன் வாழ்க்கை வாழ் கிறான். போதுமான உணவு கிடைக்காவிட்டால் அவன் நிலை குலைந்து விடுகிறான். உடம்புக்கு ஒன்று நேர்ந்துவிட்டால் அவன் துன்பத்தில் மூழ்குகிறான். அவனுடைய இன்ப துன்பங்கள் புலன்களில் ஆரம்பித்துப் புலன்களிலேயே முடிவடைகின்றன. இந்த மனிதன் முன்னேற ஆரம்பித்த உடனே, அவனது இன்பங்கள் அதிகரிக்கத் தொடங்கிய உடனே, அதே விகிதத்தில் அவனுடைய துன்பங்களும் அதிகரிக்கின்றன.

பொறாமை, நீதிமன்றங்களில் ஏறி இறங்குவது, வரிகள் செலுத்துவது, சமூகத்தில் பழிச்சொல் ஏற்பது, கொடூர மான கொடுங்கோலாட்சியின் கீழ் நசுக்கப்படுவது, மனிதனின் காட்டுமிராண்டித்தனம் இதுவரை கண்டுபிடித்துள்ள கொடுமைகளுள் மிகவும் கொடியதாகிய பிறரது மன ரகசியங்களை அறிவதில் நாளைச் செலவிடுவது—இதெல்லாம்

காட்டுமனிதனுக்குத் தெரியாது. பயனற்ற அறிவும் தற்பெருமையும் உடையவனாய், வேறு எந்த மிருகத்தையும்விட எப்படி மனிதனால் ஆயிரம் மடங்கு கொடூரமாக மாறிவிட முடிகிறது என்பதும் அவனுக்குப் புரிவதில்லை.

இவ்வாறு நாம் புலனின்பங்களிலிருந்து விடுபட்டு, உயர்ந்த இன்பங்களை அனுபவிக்கும் சக்தியைப் பெறும்பொழுது, அதே விகிதத்தில் துன்பங்களை அனுபவிக்கும் சக்தியையும் பெற வேண்டியுள்ளது. நம் நரம்புகள் நுண்மை பெறுந்தோறும் அவை துன்பத்தை அனுபவிக்கும் அளவும் அதிகமாகிறது. எந்தச் சமுதாயத்தில் ஆனாலும், கல்வியறிவற்ற பாமரனை எவ்வளவு திட்டினாலும் அவன் அதிகமாக உணர்ச்சிவசப் படுவதில்லை; ஆனால் அவனை நையப்புடைத்தால் வேதனையடைகிறான். பண்பட்ட மனிதனால், ஒரு சாதாரண வசை மொழியைக்கூடப் பொறுக்க முடியாது. அவனுடைய நரம்புகள் அவ்வளவு நுண்மையாகிவிட்டன. அவனுடைய இன்ப அனுபவம் அதிகரித்துவிட்டதால், துன்ப அனுபவமும் அதிகரித்துவிடுகிறது. பரிணாமவாதிகளின் கூற்றை நிரூபிக்க, இந்த உண்மைகள் பயன்படுவதில்லை. நம் இன்ப அனுபவசக்தி அதிகமாகும் விகிதத்தில், துன்ப அனுபவசக்தியும் அதிகரிக்கிறது. நம் இன்ப அனுபவசக்தி கூட்டல் விகிதத்தில் (Arithmetic Progression) அதிகரித்தால், துன்ப அனுபவசக்தி பெருக்கல் விகிதத்தில் (Geometric Progression) அதிகமாகிறதோ என்று சிலவேளைகளில் நான் நினைக்கிறேன். நாம் முன்னேறிக் கொண்டிருக்கிறோம். நமது முன்னேற்றம் அதிகமாக அதிகமாக, துன்ப அனுபவசக்தியும், அதுபோலவே இன்ப அனுபவசக்தியும் அதிகரிக்கிறது என்பது நமக்குத் தெரியும். இதுதான் மாயை.

ஆகவே மாயை என்பது பிரபஞ்சத்தின் விளக்கத்திற்கான கொள்கையல்ல என்பதை நாம் அறிந்து கொள்கிறோம். நம் வாழ்வின் அடிப்படையே முரண்பாடுகள் நிறைந்தது. இந்தத் தீவிர முரண்பாடுகளின் ஊடேதான் நாம் செயல்பட வேண்டியிருக்கிறது. நன்மை இருக்குமிடத்தில் தீமையும் இருந்தேயாக வேண்டும். தீமை இருக்குமிடத்தில் நன்மையும் சிறிதாவது இருக்க வேண்டும். வாழ்க்கை இருக்குமிடத்தில் மரணம் அதை நிழல்போல் தொடர வேண்டும். சிரிப்பவர்கள் அழ வேண்டும். அழுபவர்கள் சிரிக்க வேண்டும். இந்த நிலைமையை மாற்ற முடியாது—இப்படி உள்ளதை உள்ளபடித் தெரிவிக்கின்ற நிஜங்களின் ஒரு சித்திரமே மாயை.

நன்மையைத் தவிர தீமையே இல்லாத, சிரிப்பைத் தவிர அழுகையே இல்லாத ஓர் இடம் இருப்பதாக நாம் வேண்டு மானால் கற்பனை செய்து கொள்ளலாம். இயற்கையில் அப்படி இருக்கவே முடியாது. ஏனெனில் இவற்றை உண்டுபண்ணும் சூழ்நிலைகள் ஒன்றாகத்தான் இருக்கின்றன. சிரிப்பை உண்டு பண்ணும் சக்தி எங்கே இருக்கிறதோ, அங்கே அழுகையை உண்டாக்கும் சக்தியும் மறைந்திருக்கிறது. இன்பத்தை உண் டாக்கும் சக்தி இருக்குமிடத்தில் துன்பத்தை உண்டாக்கும் சக்தியும் இருக்கிறது.

இவ்வாறு, வேதாந்தத் தத்துவம் இன்பநோக்கு, துன்ப நோக்கு இரண்டுமே அற்றதாக இருக்கிறது; இரண்டு நிலை களையும் பற்றிப் பேசுகிறது; உள்ளதை உள்ளபடியே ஏற்றுக் கொள்கிறது. நன்மை, தீமை, இன்பம், துன்பம் இவற்றின் கலப்பே உலகம் என்பதையும், ஒன்று அதிகரித்தால் இன்னொன் றும் அதிகமாகியே தீரும் என்பதையும் வேதாந்தம் ஒப்புக் கொள்கிறது.

முழுவதும் நன்மை அல்லது தீமை மட்டுமே நிறைந்த உலகம் ஒன்று இருக்க முடியாது. அப்படி இருக்கிறது என்று சொல்வதே முரண்பாடானது. நன்மை, தீமை இரண்டும் ஒன்றுக்கொன்று எதிரான, தனித்தனியான குணங்கள் அல்ல என்ற உன்னதமான ரகசியத்தை இந்த ஆராய்ச்சி வெளிப் படுத்துகிறது. இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள எதையுமே முற்றிலும் நல்லது என்றோ, முற்றிலும் தீயது என்றோ நம்மால் சொல்ல முடியாது. இன்று நல்லது என்று படுவது, நாளைக்குத் தீமை யாகப் படலாம். ஒருவனுக்குத் துன்பத்தை அளிக்கின்ற அதே பொருள் மற்றொருவனுக்கு இன்பத்தை அளிக்கலாம். ஒரு குழந்தையை எரித்துக் கொல்லும் அதே நெருப்பு, பட்டினியால் வாடும் ஒருவனுக்கு நல்ல உணவைச் சமைத்துக் கொடுக்கலாம். துன்ப உணர்ச்சிகளை மூளைக்கு எடுத்துச் செல்லும் அதே நரம்புகள்தான் இன்ப உணர்ச்சிகளையும் எடுத்துச் செல்கின் றன.ஆகவே தீமையை ஒழிக்க ஒரே வழி, நன்மையையும் ஒழிப்பதே ஆகும். இதைத் தவிர வேறு வழியே இல்லை. மரணத்தைத் தடுக்க வேண்டுமானால் வாழ்வையும் தடுத்தாக வேண்டும். மரணமற்ற வாழ்வு, துன்பமற்ற இன்பம் என்பவை முரண்பாடுகள். இவற்றுள் எதையும் தனித்துக் காண முடியாது. ஏனெனில் இவை ஒரே தத்துவத்தின் வெவ்வேறு வெளிப்பாடுகள்.

நேற்று நல்லது என்று நினைத்ததையே இன்று நல்லதல்ல என்று நினைக்கிறேன். நான் எனது வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கும்போது, எனக்கு ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு குறிக்கோள் இருந்தது தெரியவருகிறது. வலிமை வாய்ந்த ஒரு ஜோடிக் குதிரைகள் பூட்டிய வண்டியை நானே ஓட்டிச் செல்ல வேண்டும் என்பதே ஒரு காலத்தில் என் லட்சியமாக இருந்தது. வேறொரு சமயத்தில், ஒரு குறிப்பிட்ட இனிப்புப் பண்டத்தைச் செய்ய முடிந்தால், நான் பூரண மகிழ்ச்சியில் திளைப்பேன் என்று எண்ணினேன். இன்னொரு சமயத்தில், மனைவி, குழந்தைகள், அளவற்ற செல்வம் இவை இருந்தால் திருப்தி அடைவேன் என்று நான் கற்பனை செய்து கொண்டேன். அந்த லட்சியங்கள்எல்லாம் சிறுபிள்ளைத் தனமானவை என்று அவற்றை எண்ணி இன்று நான் சிரிக்கிறேன்.

நம் தனித்துவத்தைக் கைவிடுவதைப்பற்றி நினைத்தபோது நம்மைப் பயப்படச் செய்த லட்சியங்களைப் பார்த்து, நாம் சிரிக்கும் நாள் வரும் என்று வேதாந்தம் கூறுகிறது. எல்லையில் லாத ஆயுளைப் பெற்றால் இன்பமாக இருப்போம் என்று நாம் ஒவ்வொருவரும் நினைக்கிறோம். ஆனால் இந்த எண்ணத்தை நினைத்து நாம் சிரிக்கும் நாள் வரும். உண்மை இதுவானால், நாம் முரண்பாடுகளில் சிக்கிக் கொண்டிருக்கிறோம் என்பது தான் பொருள். இந்த நிலை இருப்பும் அல்ல, இல்லாமையும் அல்ல; இன்பமும் அல்ல, துன்பமும் அல்ல; இவை இரண்டும் கலந்த ஒரு கலப்பே ஆகும்.

அப்படியானால் வேதாந்தத்தாலும் பிற தத்துவங்களாலும் மதங்களாலும் என்ன பயன்? எல்லாவற்றிற்கும் மேலாக நல்ல காரியங்களைச் செய்வதால் ஏற்படும் பயன் என்ன? இந்தக் கேள்விதான் மனத்தில் எழுகிறது.

தீமை செய்யாமல் நன்மை செய்ய முடியாது என்பதும், இன்பத்தை உண்டாக்க முயலும்போது துன்பமும் கூடவே தோன்றும் என்பதும் உண்மையானால், 'நல்ல காரியங்களைச் செய்வதால் என்ன பயன்?' என்று கேட்கலாம். முதலாவதாக, நாம் இன்பமாக இருப்பதற்கு ஒரே வழி துன்பத்தைக் குறைப் பதற்குப் பாடுபடுவதே. இந்த உண்மையை நாம் ஒவ்வொரு வரும் வாழ்க்கையில் ஏதாவது ஒருசமயத்தில் புரிந்துகொள் கிறோம். அறிவாளிகள் சீக்கிரமாகவும், மந்தமானவர்கள் சற்றுத் தாமதமாகவும் புரிந்து கொள்கிறார்கள். மந்தமானவர்கள் பல கஷ்டங்களை அனுபவித்த பின்னர் இதை உணர்கிறார்கள்.

அறிவாளிகள் அவ்வளவு கஷ்டப்படாமலே உணர்கிறார்கள். இரண்டாவதாக, நாம் நமது கடமைகளைச் செய்ய வேண்டும். அதுதான் இந்த முரண்பாடான வாழ்க்கையிலிருந்து தப்பிப்பதற்கு ஒரே வழி.

கனவுகளையும் மணல்வீடு கட்டுவதையும் விட்டுவிட்டு நாம் விழித்துக் கொள்ளும் வரையில் நன்மை, தீமை ஆகிய இரண்டு சக்திகளும் பிரபஞ்சத்தை நமக்காக இயக்கிக் கொண்டிருக்கும். நாம் அந்தப் பாடத்தைக் கற்றுக்கொள்ளத்தான் வேண்டும்; ஆனால் அதற்கு வெகுகாலம் பிடிக்கும்.

எல்லையற்றது எல்லைக்கு உட்பட்டதாக ஆகிவிட்டது என்ற அடிப்படையில் ஒரு புதிய தத்துவத்தை உருவாக்குவதற்கு ஜெர்மானியர்கள் முயன்று வருகின்றனர். இங்கிலாந்திலும் இத்தகைய முயற்சிகள் நடைபெறுகின்றன. எல்லையற்றது, பிரபஞ்சத்தின் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள முயன்று கொண்டிருக்கிறது; அந்த முயற்சியில் அது வெற்றி பெறும் நாள் வந்தே தீரும் என்பது அந்தத் தத்துவ அறிஞர்களின் கருத்து. இவையெல்லாம் கேட்பதற்கு நன்றாக இருக்கின்றன. எல்லையற்றது, வெளிப்பாடு, தோற்றம் போன்ற சொற்றொடர்களை நாம் பயன்படுத்தியிருக்கிறோம். ஆனால் எல்லைக்கு உட்பட்ட ஒன்றால் எல்லையற்றதை முழுவதுமாக வெளிப்படுத்த முடியும் என்பதற்கு நியாயபூர்வமான அடிப்படை என்ன என்று தத்துவ மேதைகள் கேட்பது இயல்பே.

தனிப்பொருளும் எல்லையற்றதும் ஆன ஒன்று எல்லைக்கு உட்படும்போதுதான் பிரபஞ்சமாக வெளிப்பட முடியும். புலன்கள், மனம், புத்தி இவற்றின் மூலமாக வருவது எல்லைக்கு உட்பட்டதாகத்தான் இருக்க முடியும். எல்லைக்கு உட்பட்டதை எல்லையற்றது என்று சொல்வது அறிவுக்குப் பொருந்தாததும் சாத்தியமற்றதும் ஆகும். எல்லைக்கு அப்பாற்பட்டது, எல்லைக்கு உட்பட்டதன்மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள முயற்சி செய்கிறது என்பது உண்மைதான்; ஆனால் அது முடியாது என்று அது உணர்ந்து கொள்ளும் நாள் வரும்; அப்பொழுது அந்த முயற்சியில் பின்வாங்க நேர்கிறது என்றும், அந்தப் பின்வாங்குதலே துறவு என்றும், அதுதான் மத உணர்வின் உண்மையான ஆரம்பம் என்றும் வேதாந்தம் கூறுகிறது.

இந்தக் காலத்தில் துறவு என்பதைப்பற்றி பேசுவதே கடினமாகிவிட்டது. ஐயாயிரம் வருடங்களாகப் புதைந்து கிடந்த ஒரு நாட்டிலிருந்து வந்து துறவைப்பற்றிப் பேசியவன் என்று

என்னைப்பற்றி அமெரிக்காவில் பேசிக் கொண்டார்கள். ஆங்கிலத் தத்துவ அறிஞர்களும் ஒருவேளை அப்படித்தான் பேசிக் கொள்வார்களோ என்னவோ? ஆனாலும் துறவுதான் மத உணர்வுக்கு ஒரே வழி என்பது உண்மை. துறவு பூணுங்கள்; பற்றை விடுங்கள். ஏசு என்ன சொன்னார்? 'எனக்காக வாழ்க்கையைத் துறப்பவன் அதை அடைவான்' என்றுதானே! நிறை நிலையை அடைவதற்கு ஒரே வழி துறவுதான் என்று அவர் அடிக்கடி வலியுறுத்தியிருக்கிறார்.

இந்த நீண்ட துன்பமிக்க வாழ்க்கைக் கனவிலிருந்து மனம் விழித்தெழும் நாள் ஒன்று வரும். குழந்தை, தன் விளையாட்டை விட்டுவிட்டுத் தாயை நாடி ஓடும் நாள் ஒன்று வரும். 'அனுபவிப்பதால், ஒருபோதும் ஆசைகள் பூர்த்தி அடைவதில்லை. நெருப்பில் நெய் ஊற்றுவதால் நெருப்பு தீவிரமாக எரிவதுபோல், அனுபவிப்பதால் ஆசைகளின் தீவிரம் அதிகரிக்கிறது'[1] என்ற உண்மையை மனம் அப்போது புரிந்து கொள்கிறது. மனித மனம் அனுபவிக்கக்கூடிய புலனின்பங்கள், அறிவாற்றல் மூலம் பெறும் இன்பங்கள் மற்றும் எல்லா இன்பங்களுக்கும் இது பொருந்தும். ஆனால் உண்மையில் அவற்றிற்கெல்லாம் மதிப்பே இல்லை. அவை மாயைக்குக் கட்டுப்பட்டவை. கடக்க முடியாத மாயை என்ற வலைக்குள் அவை சிக்கியிருக்கின்றன. நாம் இந்த நிலையிலேயே முடிவில்லாமல் உழன்று கொண்டிருக்கலாம். எப்போதாவது ஒரு துளி இன்பத்தைப் பெற நாம் போராடினால், மலை போன்ற துன்பம் வந்து நம்மேல் விழுந்து அழுத்துகிறது. இது எவ்வளவு பரிதாபத்திற்கு உரியது! இதை நினைத்துப் பார்க்கும்போது, எல்லாமே மாயை என்ற இந்தச் சித்திரம் ஒன்றுதான் சிறந்த ஒரே விளக்கமாக இருக்க முடியும் என்று தோன்றுகிறது.

இந்த உலகத்தில்தான் எவ்வளவு துன்பம் நிறைந்திருக்கிறது! பல நாடுகளையும் சுற்றிப் பார்த்தீர்களானால் இந்தத் துன்பங்களை ஒழிப்பதற்கு ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு விதமான முயற்சியைச் செய்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளலாம். பல இனத்தினர் தீமையைப் போக்குவதற்கு முயல்கிறார்கள். பல வழிகளில் இந்தத் தீமையைத் தடுப்பதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டாலும், எந்த நாடும் இதுவரை வெற்றி

---

1. ந ஜாது காம: காமானாமுபபோகேன சாம்யதி।
ஹவிஷா க்ருஷ்ணவர்த்மைவ பூய ஏவாபிவர்த்ததே॥
—விஷ்ணு புராணம், 4. 10. 9

பெறவில்லை. ஓர் இடத்தில் தீமை குறைந்தால், மற்றோர் இடத்தில் அதிகமாகத் தலைதூக்குகிறது. இப்படியே நடந்து கொண்டிருக்கிறது.

தங்கள் இனத்தில் உயர்ந்த கற்புநெறியை நிலைப்படுத்துவதற்காக, இந்துக்கள் இளமை மணத்தை அனுமதித்தனர். நாளடைவில் இந்தப் பழக்கம் அவர்கள் இனத்திற்கே தாழ்வை உண்டாக்கிவிட்டது. அதேவேளையில், ஓர் இனத்தின் கற்பு நிலையை இளமை மணம் உயர்த்துகிறது என்பதையும் நான் மறுக்க முடியாது. நீங்கள் எதை விரும்புகிறீர்கள்? நாடு, கற்பில் உயர வேண்டுமானால், மக்களை இளமை மணத்தின் மூலம் பலவீனப்படுத்த வேண்டியது அவசியமாகிறது. இங்கிலாந்திலுள்ள நீங்கள் எந்த விதத்தில் முன்னேறியிருக்கிறீர்கள்? எவ்விதத்திலும் இல்லை. ஏனெனில் கற்புதான் ஒரு நாட்டின் உயிர்நிலை.

ஒரு நாட்டின் வீழ்ச்சிக்கு முதல் அறிகுறி கற்புநெறி நிலை பிறழ்தலே என்பதை வரலாறு காட்டவில்லையா? கற்புநெறி நிலைபிறழத் தொடங்கிவிட்டால் அந்த இனத்தின் அழிவு ஆரம்பித்துவிட்டது. இந்தத் துன்பங்களுக்கு எங்கே போய் நாம் தீர்வு காண்பது? பெற்றோர் பார்த்துச் செய்து வைக்கும் திருமணத்தால் இந்தத் தீமை பெருமளவு குறைகிறது. இந்தியப் பெண்கள் உணர்ச்சி வசப்படுபவர்களாக இருப்பதைவிட செயல்முறை நோக்கு அதிகம் உடையவர்களாக இருக்கிறார்கள். இதனால் அவர்களது வாழ்க்கையில் கற்பனை வளம் குறைவாகத்தான் இருக்கிறது.

இனி, மனிதர்கள் தாங்களே தங்கள் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதாலும் பெரிய இன்பம் அடைந்துவிடுவதாகத் தெரியவில்லை. இந்தியப் பெண்கள் பொதுவாக மிகவும் மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறார்கள்; கணவன்-மனைவி சண்டையும் மிகவும் குறைவுதான். மாறாக அதிகச் சுதந்திரமுள்ள அமெரிக்காவில் சந்தோஷமில்லாத குடும்பங்களும் திருமணங்களும் அதிகமாக இருக்கின்றன. இங்கே, அங்கே என்று எங்குமே சந்தோஷமின்மை நிலவுகிறது. இது எதைக் காட்டுகிறது? இந்தக் குறிக்கோள்களால் எல்லாம் அதிக இன்பம் கிடைப்பதில்லை என்பதைத்தான். நாம் எல்லோரும் இன்பத்திற்காகத்தான் போராடுகிறோம். ஒரு பக்கம் ஏதோ ஒரு துளி இன்பம் கிடைத்தால் மற்றொரு பக்கம் துன்பம் தோன்றிவிடுகிறது.

அப்படியானால் நல்ல காரியங்களைச் செய்யவே கூடாதா? நிச்சயமாகச் செய்ய வேண்டும். முன்பைவிட ஊக்கத்துடன் செய்ய வேண்டும். இந்த அறிவு நம் கொள்கைவெறியை நீக்க உதவுகிறது. இந்த அறிவால், ஆங்கிலேயன் கொள்கைவெறியை விட்டுவிடுவான்; இந்துவைச் சபிக்க மாட்டான்; பல நாடுகளின் பழக்க வழக்கங்களை மதிக்கக் கற்றுக் கொள்வான்; கொள்கை வெறி குறைந்து, உண்மையான வேலை நடைபெறும். கொள்கை வெறியர்களால் வேலை செய்ய முடியாது. அவர்கள் தங்கள் சக்தியில் முக்கால் பங்கை வீணடித்துவிடுகிறார்கள். நிதான புத்தியுள்ள, அமைதியான, செயல்முறை அறிவுள்ள மனிதனால் தான் வேலை செய்ய முடியும். வேலை செய்வதற்கான சக்தி இந்தக் கருத்தினால் அதிகமாகும். நிலைமை இதுதான் என்று புரிந்துகொள்வதால், பொறுமை அதிகரிக்கிறது; துன் பத்தையோ தீமையையோ கண்டாலே நிலைகுலைந்துவிட மாட்டோம்; வெறும் நிழல்களின் பின்னால் ஓட மாட்டோம். இந்த உலகம் தன் போக்கில்தான் போகும் என்று தெரிந்துகொள் வதால் நம்மிடம் பொறுமை வரும்.

மனிதர்கள் எல்லோரும் நல்லவர்களாகிவிட்டதாக வைத்துக்கொள்வோம். அந்த இடைக்காலத்தில், மிருகங்களும் செடிகொடிகளும் பரிணாம வளர்ச்சியால் மனிதர்களாக மாறி யிருக்கும். முன்பு மனிதர்கள் தீயவர்களாக இருந்தபோது இருந்த நிலையை இவை கடக்க வேண்டியிருக்கும். ஆகவே உலகத்தின் போக்கு எப்போதும் ஒரே மாதிரிதான் இருக்கும்.

ஆனால் ஒன்று மட்டும் உறுதி. கம்பீரமான ஆறு கடலை நோக்கியே பாய்ந்து கொண்டிருக்கிறது. காலப்போக்கில், இந்த ஆற்றின் ஒவ்வொரு துளியும் எல்லையற்ற கடலுடன் கலந்தே தீரும். துன்பங்களும் துயரங்களும் இன்பங்களும் சிரிப்புகளும் அழுகைகளும் இவை எல்லாவற்றுடனும் இந்த வாழ்க்கையும் எல்லா பொருட்களுமே தத்தம் குறிக்கோளை நோக்கியே பாய்ந்து சென்று கொண்டிருக்கின்றன. மனிதர்கள், செடி கொடிகள், மிருகங்கள், ஏன், உயிர் என்று சொல்லப்படும் அனைத்துமே இன்றோ நாளையோ கடவுள், சுதந்திரம், முக்தி என்று பலவாறாக வழங்கப்படும் அந்த முழுமையான, எல்லை யற்ற கடலில்தான் போய்க் கலந்தாக வேண்டும்.

எனவே வேதாந்தத்தின் நிலை, இன்பநோக்கோ துன்ப நோக்கோ அல்ல என்பதை மீண்டும் வலியுறுத்திச் சொல்ல நான் விரும்புகிறேன். உலகம் முழுவதுமே தீமையானது

என்றோ, இல்லை, உலகம் முழுவதுமே நன்மையானது என்றோ அது சொல்லவில்லை. நமது நல்ல தன்மைகளைவிடத் தீய தன்மைகள் குறைந்த மதிப்பு உள்ளவை அல்ல; தீய தன்மைகளைவிட நல்ல தன்மைகள் அதிக மதிப்பு உள்ளவை அல்ல என்கிறது வேதாந்தம். அவை ஒன்றோடொன்று பின்னப்பட்டிருக்கின்றன.

இதுதான் உலகம். இதைத் தெரிந்துகொண்டு, நாம் பொறுமையாக வேலை செய்ய வேண்டும். எதற்காக நாம் வேலை செய்ய வேண்டும்? இதுதான் உலகின் நிலை என்றால், நாம் என்னதான் செய்வது? ஏன் பேசாமல் ஆஜ்ஞேயவாதிகளாகக் கூடாது? நாம் மாயை என்று சொல்லும் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு இல்லை என்பது தற்கால ஆஜ்ஞேயவாதிகளுக்கும் நன்றாகத் தெரியும். ஆகவே இந்த உலக வாழ்க்கையிலேயே திருப்தியடைந்து அதை அனுபவிக்கும்படி அவர்கள் சொல்கிறார்கள். இப்படிச் சொல்வதிலும் ஒரு தவறு, மிகப் பெரிய தவறு இருக்கிறது; நியாயத்திற்கு ஒவ்வாத தவறு அது. இதுதான் அந்தத் தவறு— வாழ்க்கை என்பதற்கு நீங்கள் கொள்ளும் பொருள் என்ன? புலனின்ப வாழ்க்கையைத்தான் நீங்கள் குறிப்பிடுகிறீர்களா? அப்படியானால் மிருகங்களுக்கும் நமக்கும் வேறுபாடு மிகக் குறைவே. புலன்களைச் சார்ந்த வாழ்வை மட்டுமே வாழ்க்கையாகக் கொண்ட யாருமே இங்கே இல்லை என்று நான் உறுதியாக நம்புகிறேன். நாம் வாழும் வாழ்க்கை, புலன்வாழ்க்கையைவிட உயர்ந்த நோக்கம் கொண்டதாகத்தான் இருக்க வேண்டும். நமது உணர்ச்சிகள், எண்ணங்கள், ஆசைகள் எல்லாமே நம் வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்துதான் இருக்கின்றன. ஆகவே பூரணத்துவம் என்ற உயர்ந்த குறிக்கோளை அடைவதற்காக நாம் மேற்கொள்ளும் போராட்டம், வாழ்க்கை என்று நாம் கூறுவதன் முக்கிய அம்சங்களுள் ஒன்றே அல்லவா? ஆஜ்ஞேயவாதிகளின் கொள்கைப்படி, வாழ்க்கையை உள்ளது உள்ளபடிதான் நாம் அனுபவிக்க வேண்டும். ஆனால் இந்த வாழ்க்கை என்பது மற்ற எல்லாவற்றையும்விட உயர்ந்த குறிக்கோளைத் தேடுவதே அல்லவா! பூரணத்துவத்தை நோக்கிப் போவதே அல்லவா வாழ்க்கையின் சாரம்! அந்தக் குறிக்கோளை நாம் மேற்கொண்டேயாக வேண்டும். எனவே நாம் ஆஜ்ஞேயவாதிகளாகவும் முடியாது, உலகத்தை அது உள்ளவாறே அனுபவிக்கவும் முடியாது.

உயர்ந்த குறிக்கோள் நீங்கலாக, நாம் காணும் அனைத்தும்தான் வாழ்க்கை என்பது ஆஜ்ஞேயவாதிகளின் வாதம்.

இந்தக் குறிக்கோளை அடைய முடியாது, ஆகவே அதைத்தேடு வதை விட்டுவிட வேண்டும் என்று அவர்கள் சொல்கிறார்கள். இந்த இயற்கை, இந்தப் பிரபஞ்சம், இதுதான் மாயை.

ஏறக்குறைய மதங்கள் எல்லாமே இந்த இயற்கையைக் கடந்து செல்லும் முயற்சிதான். அவை வளர்ச்சி அடையாத வையாகவோ மிகவும் வளர்ச்சி அடைந்தவையாகவோ இருக்க லாம்; புராணங்கள், சின்னங்கள், வழிபாடு, தேவாசுரர்களைப் பற்றிய கதைகள், பக்தர்கள், ரிஷிகள், மகான்கள், ஆச்சாரி யர்கள், தீர்க்கதரிசிகள் இவர்களைப் பற்றிய கதைகள், அல்லது நுட்பமான வேதாந்தத் தத்துவங்கள்—இவற்றுள் எதன்மூல மாகவும் வெளிப்பட்டவையாக இருக்கலாம். ஆனால் அனைத் தின் நோக்கமும் ஒன்றே, எல்லைகளைக் கடந்து செல்லவே இவையனைத்தும் முயல்கின்றன. ஒரே வார்த்தையில் சொல் வதானால், இவை எல்லாம் முக்திக்காகவே போராடுகின்றன.

அறிந்தோ அறியாமலோ தான் கட்டுப்பட்டிருப்பதை மனிதன் உணர்கிறான். அவன் என்னவாக இருக்க விரும்பு கிறானோ, அப்படி அவன் இல்லை. தன்னைச் சுற்றிப் பார்க்கத் தொடங்கிய உடனேயே, அது அவனுக்குத் தெரிந்துவிடுகிறது. அந்தக் கணத்திலேயே தான் கட்டுப்பட்டிருப்பதை அவன் உணர்கிறான். தன் உடல் போக முடியாத எல்லையற்ற நிலைக்கு, தனக்கு உள்ளே உள்ள ஏதோ ஒன்று பறந்து போக விரும்பு கிறது என்பதையும் அதன்கூடவே உணர்கிறான். அந்த ஏதோ ஒன்று, உடல் என்ற எல்லைக்குள் உட்பட்டிருப்பதும் அவனுக் குத் தெரிகிறது.

முன்னோர் வழிபாடு உள்ளது. அதனுடன் ஆவி வழி பாட்டையும் காண்கிறோம். ஆவிகள் மிகவும் கொடூரமானவை, தீங்கிழைக்கும் நோக்கம் கொண்டவை. உற்றார் உறவினரின் வீடுகளை எப்போதும் சுற்றிக் கொண்டிருப்பவை, ரத்தத்தையும் மதுவகைகளையும் மிகவும் விரும்புபவை என்றெல்லாம் கருதி, அவற்றையும் வழிபட்டனர். மதக் கருத்துக்களில், மிகத் தாழ்ந்த இவற்றில்கூட முக்தி, சுதந்திரம் பெறுவது என்ற நோக்கமே அடிப்படையாக இருப்பதை நாம் காண்கிறோம்.

தேவதைகளை வழிபட விரும்பும் மனிதன், தன்னைவிட அந்தத் தேவதைகள் அதிக சுதந்திரம்பெற்றிருப்பதைக் காண்கிறான். மூடிய கதவுகளும் சுவர்களும்கூட அவர்களைத் தடை செய்ய முடியாது என்று கருதுகிறான். சுதந்திரத்தைப் பற்றிய கருத்து வளர்ந்து கொண்டேபோய் சகுணக்கடவுள்

லட்சியத்தில் நிறைவடைகிறது. இயற்கையின் எல்லைகளைக் கடந்து நிற்பவர், மாயைக்கு அப்பாலுள்ள ஒருவர்—அவரே சகுணக் கடவுள்.

இந்தியாவின் அடர்ந்த காடுகளுக்கு நடுவே பழங்கால ரிஷிகள், இந்தப் பிரச்சினையை அலசி ஆராய்வதை என் கண்முன் காண்பதுபோல் காண்கிறேன். அப்படிப்பட்ட ஓரிடத்தில், கூடியிருந்த ரிஷிகள் கூட்டத்தில், மிகவும் வயதானவர்களாலும் புனிதமானவர்களாலும்கூடக் கண்டுபிடிக்க முடியாத தீர்வை ஓர் இளைஞன் கண்டுபிடித்து விடுகிறான். அவன் எழுந்து, 'மரணமிலாப் பெருநிலையின் குழந்தைகளே, உயர்ந்த உலகங்களில் வசிப்பவர்களே! கேளுங்கள். நான் வழியைக் கண்டுபிடித்துவிட்டேன். இருளுக்கு அப்பால் ஒளிவீசும் அவனை அறிவதன்மூலம் மரணத்தை நாம் வென்றுவிடலாம்'[1] என்று முழங்குகிறான்.

இந்த மாயை எங்கும் நிறைந்திருக்கிறது. இது மிகவும் பயங்கரமானது. அதற்கிடையில்தான் நாம் இயங்கியாக வேண்டும். 'உலகம் முழுவதும் நன்மையால் நிறைந்த பிறகுதான் நான் வேலை செய்வேன்; இன்பம் அடைவேன்' என்று ஒரு மனிதன் சொல்வதாக வைத்துக் கொள்வோம். கங்கைக் கரையில் அமர்ந்துகொண்டு 'கங்கை முழுவதும் கடலை அடைந்த பிறகு தான் நான் அதைக் கடந்து போவேன்' என்று சொல்வதைப் போன்றதுதான் அது.

நமது வழி மாயையை அனுசரித்துப் போவதல்ல, அதை எதிர்த்துப் போவதே. இதுவும் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய மற்றோர் உண்மையாகும். இயற்கைக்குத் துணைபுரிய நாம் பிறக்கவில்லை; இயற்கையுடன் போட்டியிடவே நாம் பிறந்திருக்கிறோம். நாம் இயற்கையின் எஜமானர்கள்; ஆனால் இயற்கைக்குக் கட்டுப்பட்டுக் கிடக்கிறோம். இந்த வீடு எப்படி இங்கு வந்தது? இயற்கை இதைக் கட்டவில்லை. 'போ, போய் காட்டில் வாழ்' என்றுதான் இயற்கை சொல்கிறது. ஆனால்

---

1. ச்ருண்வந்து விச்வே அம்ருதஸ்ய புத்ரா:
ஆ யே தாமானி திவ்யானி தஸ்து: ||

வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் |
தமேவ விதித்வாऽதிம்ருத்யுமேதி
நான்ய: பந்தா வித்யதேऽயனாய ||
—சுவேதாஸ்வதர உபநிடதம் 2. 5 & 3 .8.

மனிதனோ, 'நான் ஒரு வீட்டைக் கட்டி, இயற்கையுடன் போராடுவேன்' என்கிறான்; அப்படியே செய்யவும் செய்கிறான். மனித வரலாறே இயற்கையின் விதிகள்என்று கூறப்படுபவை களோடு, மனிதன் நடத்தும் தொடர்ந்த போராட்டம்தான். கடைசியில் மனிதனே வெல்லவும் செய்கிறான்.

அகவுலகிற்கு வந்தால், அங்கேயும் போராட்டமே நடந்து கொண்டு இருக்கிறது. மிருக மனிதனுக்கும் ஆன்மீக மனிதனுக்கும், இருளுக்கும் ஒளிக்கும் தொடர்ந்து போராட்டம் நடைபெறுகிறது. இங்கும் மனிதன்தான் வெற்றி பெறுகிறான். இயற்கையின் வழியாகவே பாதையை ஏற்படுத்தி அவன் முக்தி பெற்றுவிடுவது போலுள்ளது.

ஆகவே மாயைக்குக் கட்டுப்படாமல் மாயையைக் கடந்து நிற்கும் ஏதோ ஒன்றை வேதாந்தத் தத்துவ ஞானிகள் உணர்ந் திருக்கிறார்கள். நாமும் அந்த நிலையை அடைய முடிந்தால், மாயையில் கட்டுப்பட மாட்டோம். இந்தக் கருத்து ஏதோ ஒரு வகையில் எல்லா மதங்களுக்கும் பொதுவானது. வேதாந்தத்தைப் பொறுத்தவரை இந்தக் கருத்து, மதத்தின் ஆரம்பமே தவிர முடிவு அல்ல. இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்து, இதை ஆட்சி புரிபவரான, மாயை அல்லது இயற்கையின் தலைவர் என்று நாம் கூறுகின்ற சகுணக் கடவுள்கருத்து வேதாந்தத்தின் முடி வல்ல; அது வெறும் ஆரம்பமே. இந்தக் கருத்து வளரவளர, யார் வெளியே இருக்கிறார் என்று நினைத்தோமோ, அவர் உண்மையில் நமக்குள்ளேயே இருக்கிறார், அவரே நாம் என்பதை உணர்வோம். நாம் எல்லைக்கு உட்பட்டுவிட்டதால் கட்டுப்பட்டிருப்பதாக நினைக்கிறோம். நாம் உண்மையில் முக்த புருஷர்களே, சுதந்திரர்களே.

## 5. மாயையும் கடவுள் தத்துவத்தின் வளர்ச்சியும்

20 அக்டோபர் 1896

மாயை பற்றிய கொள்கையை அத்வைத வேதாந்தத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுள் ஒன்று எனலாம். இந்தக் கொள்கையின் வித்து எவ்வாறு சம்ஹிதையில் காணப்படுகிறது என்பதை ஏற்கனவே கண்டோம். உண்மையில், உபநிடதங்களில் விரிவாகக் காணப்படும் எல்லா கருத்துக்களுமே சம்ஹிதைகளில் ஏதோ ஒருவிதத்தில் இருக்கவே செய்கின்றன. இப்போது உங்களில் பலரும் மாயைபற்றி அறிந்து விட்டீர்கள்.

மாயை என்பது பொய்த் தோற்றம் என்று சிலவேளைகளில் விளக்கப்படுகிறது. இது தவறு. பிரபஞ்சம்தான் மாயை என்னும்போது, இந்த விளக்கத்தின்படி பிரபஞ்சமே பொய்த் தோற்றம் என்று பொருள் கொள்ள வேண்டியிருக்கும். மாயையின் இந்த விளக்கம் சிறந்ததல்ல, சரியானது அல்ல. மாயை என்பது ஒரு கொள்கையல்ல; உலகம் உள்ளபடியே எப்படி இருக்கிறது என்பதைப் பற்றிய நிஜங்களின் ஒரு சித்திரமே மாயை. மாயையைப்பற்றிப் புரிந்து கொள்வதற்கு, சம்ஹிதைகளுக்கே நாம் போக வேண்டும், அந்தக் கருத்தின் வித்துநிலையிலிருந்தே தொடங்க வேண்டும்.

தேவர்களைப் பற்றிய கருத்து மக்களிடையே எப்படி வந்தது என்பதை நாம் பார்த்தோம். ஆரம்பத்தில் இந்தத் தேவர்கள் மிகவும் சக்தி வாய்ந்த உயிர்களாக மட்டுமே கருதப் பட்டார்கள் என்பதும் நமக்குத் தெரியும்.

கிரேக்கர்கள், ஹீப்ரூக்கள், பாரசீகர்கள் முதலிய எல்லோருடைய புராணங்களிலும், அவரவர்களுடைய தெய்வங்கள் செய்திருப்பதாகச் சொல்லப்படும் செயல்கள் நமக்கு மிகவும் அருவருப்பையும் திகிலையும் தருவனவாக இருக்கின்றன. ஆனால் இந்தக் கதைகளைப் படிக்கும்போது, நாம் பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள் என்பதையும், இந்தத் தெய்வங்கள் பல்லாயிரம் வருடங்களுக்கு முற்பட்டவர்கள் என்பதையும் நாம் மறந்துவிடுகிறோம்.

இன்னொரு விஷயத்தையும் நாம் மறந்துவிடுகிறோம். அதாவது, இந்தத் தெய்வங்களை வழிபட்ட மக்கள் அந்தத் தெய்வங்களின் செயலிலோ இயல்பிலோ எந்த முரண்பாட்டையும் பயமளிக்கும் தன்மையையும் காணவில்லை. இதற்குக் காரணம், தங்களைப் போலவே அவர்கள் அந்தத் தெய்வங்களை உருவகித்ததுதான். நாம் நம் வாழ்க்கையில் கற்றுக்கொள்ள வேண்டிய ஒரு முக்கியமான பாடம் இது என்பதை நான் இங்குச் சொல்ல வேண்டியிருக்கிறது. நம்மை உதாரணமாக வைத்தே நாம் மற்றவர்களை எடைபோடுகிறோம். அது சரியல்ல. ஒவ்வொருவரையும் அவர்களுடைய குறிக்கோளை வைத்தே எடைபோட வேண்டும்; ஒருவருடைய குறிக்கோளை வைத்து மற்றொருவரை எடைபோடக் கூடாது. பிறரிடம் பழகும்போது, நாம் எப்போதும் இந்தத் தவறையே செய்து வருகிறோம்.

பிறருடைய தெய்வங்களை நமது தெய்வங்களை வைத்தும், பிறருடைய லட்சியங்களை நமது லட்சியங்களை வைத்தும், பிறருடைய நோக்கங்களை நமது நோக்கங்களை வைத்தும் எடைபோடுவதுதான், நம்மிடையே நிலவுகின்ற பெருமளவு சண்டைகளுக்கும் காரணம் என்றே நான் எண்ணுகிறேன். சில சூழ்நிலைகளில் நான் ஒரு காரியத்தைச் செய்யலாம்; வேறு ஒருவர் அதே காரியத்தைச் செய்யும்போது, அவரைத் தூண்டிய நோக்கம், என்னைத் தூண்டிய நோக்கம் போன்றதே என்று நான் நினைத்துவிடுகிறேன். ஒரே காரியத்திற்குப் பல காரணங்கள் இருக்கலாம். மற்றொருவரைத் தூண்டிய நோக்கம், என்னைத் தூண்டிய நோக்கத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக இருக்கலாம். ஆகவே பழைய மதங்களை மதிப்பிடும் விஷயத்தில், இப்பொழுது நாம் கொண்டிருக்கும் கருத்துக்களைப் பயன்படுத்தக் கூடாது. அதற்குப் பதிலாக, பழங்காலத்தினரின் நிலையிலும், அவர்களின் சிந்தனைகளிலும் வாழ்க்கையிலும் நம்மை வைத்துப் பார்க்க வேண்டும்.

பைபிளின் பழைய ஏற்பாட்டிலுள்ள கொடூரமான, இரக்கமில்லாத ஜெஹோவா என்ற கடவுளைப் பற்றிய கருத்து பலருக்குப் பயத்தைக் கொடுக்கிறது. ஏன் அப்படி? கடவுளைப் பற்றிய இந்தக் காலத்துக் கருத்தோடு, பழங்கால யூதர்களின் தெய்வமான ஜெஹோவாவை ஒப்பிடுவதற்கு அவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? நாம் எப்படி நம்முடைய முன்னோர்களின் மதம் மற்றும் தெய்வக் கருத்துக்களைப் பார்த்துச்

சிரிக்கிறோமோ, அதேபோல் நம் சந்ததியினரும், நமது மதம் மற்றும் தெய்வக் கருத்துக்களைக் கேலி செய்து சிரிப்பார்கள் என்பதை நாம் மறக்கக் கூடாது.

இவ்வளவு வேறுபட்ட கருத்துக்களுக்கு இடையேயும் அந்த ஒருமை என்ற தங்க நூலிழை ஓடிக்கொண்டிருக்கிறது. வேதாந்தத்தின் குறிக்கோள், இந்த நூலிழையைக் கண்டு பிடிப்பதுதான். 'இந்தப் பலவிதக் கருத்துக்களாகிய முத்துக் களைக் கோர்த்து நிற்கின்ற நூலிழையாக நான் இருக்கிறேன்'[1] என்று பகவான் ஸ்ரீகிருஷ்ணர் சொல்கிறார். இன்றைய கருத்துக் களுடன் ஒப்பிடும்போது, பண்டைய கருத்துக்கள் எவ்வளவு தான் பொருத்தம்அற்றவையாக, அருவருப்பு ஊட்டுபவையாக இருந்தாலும் இவற்றையெல்லாம் இணைக்கின்ற நூலிழையைக் கண்டுபிடிப்பது வேதாந்தத்தின் கடமை. பண்டைய கருத்துக் களைப் பண்டைய சூழ்நிலையுடன் இணைத்துப் பார்க்கும் போது அவை பொருத்தமாக, இயைபாகவே இருந்தன; இன்றைய கருத்துக்களைவிட பயங்கரமானவையாக இருக்க வில்லை என்பது தெரிய வரும். அவற்றை அவற்றின் சூழ்நிலை யிலிருந்து அகற்றி, தற்காலச் சூழ்நிலைக்குப் பயன்படுத்தும் போதுதான் அவற்றின் பயங்கரம் வெளிப்பட்டுத் தெரிகிறது. ஏனெனில் பண்டைய சூழ்நிலைகள் இன்று இல்லை.

பழைய யூதர்கள் புதிய, நாகரீகம் வாய்ந்த, அறிவுமிக்க யூதர்களாகவும், பழைய ஆரியர்கள் அறிவுக்கூர்மை மிக்க இந்துக்களாகவும் பரிணமித்துள்ளனர். அதுபோலவே ஜெஹோவாவும் தேவர்களும் பரிணமித்துள்ளனர். வழிபாடு செய்பவர்களின் வளர்ச்சியை ஏற்றுக் கொள்வதுபோல் வழிபடு கடவுளரின் வளர்ச்சியை நாம் கருத்தில் கொள்வதில்லை. இது மிகப் பெரிய தவறாகும். வழிபடுபவர்கள் முன்னேறியிருப்பது போல் தெய்வம் பற்றிய கருத்தும் முன்னேறியிருப்பதை நாம் நினைத்துப் பார்ப்பதில்லை. அதாவது நாம் கருத்துரீதியாக வளர்ந்திருக்கிறோம்; அதுபோலவே தெய்வங்களும் கருத்துரீதி யாக வளர்ந்திருக்கின்றன.

கடவுள் வளர்ச்சியடைகிறார் என்றால் உங்களுக் கெல்லாம் வேடிக்கையாக இருக்கும். அவர் வளர முடியாது. அவர் மாற்றமில்லாதவர். அதேநோக்கில் உண்மையான மனிதனும் ஒருபோதும் வளர்வதில்லை. ஆனால் மனிதர்கள்

1. மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥ —கீதை, 7.7.

கடவுளைப்பற்றிக் கொண்டிருக்கும் கருத்துக்கள், தொடர்ந்து மாறிக் கொண்டிருக்கின்றன, விரிவடைந்து கொண்டிருக்கின் றன. ஒவ்வொரு மனிதனுள்ளும் உள்ள உண்மையான மனிதன் அசைவற்றவன்; மாற்றமற்றவன்; தூயவன்; எப்போதும் பரி பூரணன். இதனைப் பின்னால் நாம் பார்க்கலாம். அதுபோலவே கடவுளைப் பற்றிய நமது கருத்து நமது அறிவின் ஒரு வெளிப் பாடு மட்டுமே, நமது படைப்பு மட்டுமே. இதற்குப் பின்னால் தான் ஒருபோதும் மாறாத, எப்போதும் தூய்மையான, அசை வற்ற கடவுள் இருக்கிறார். வெளிப்பாடுகள் தங்கள் பின்னால் உள்ள மாறாத உண்மையை மேலும்மேலும் வெளிப்படுத்திய வாறே தொடர்ந்து மாறிக் கொண்டிருக்கின்றன. இந்த உண்மையை அதிகமாக வெளிப்படுத்தும்போது, முன்னேற்றம் என்றும், அதிகமாக மறைக்கும்போது பின்னோக்கிச் செல்வ தாகவும் கூறுகிறோம். ஆகவே தெய்வங்களின் வளர்ச்சி நம் வளர்ச்சியோடு தொடர்புடையதாகவே இருக்கிறது. பரிணாம வளர்ச்சியின்மூலம் நம்மை நாம் வெளிப்படுத்திக் கொள்வது போல் தெய்வங்களும் பரிணாம வளர்ச்சியின் மூலம் தங்களை வெளிப்படுத்திக் கொள்வதாகத்தான், சாதாரணமாகப் பார்ப் பவர்களுக்குத் தெரிகிறது.

இப்போது மாயைத் தத்துவத்தைப் புரிந்துகொள்ளும் நிலையில் நாம் இருக்கிறோம். பிரபஞ்சத்தில் ஏன் இந்த முரண்பாடுகளும் தீமைகளும் நிறைந்திருக்கின்றன என்ற பிரச்சினையைப்பற்றி விவாதிக்கவே உலகத்திலுள்ள எல்லா மதங்களும் முயல்கின்றன. ஆரம்பக்கால மனிதனின் மதக் கருத்துக்களில் இந்தப் பிரச்சினை இல்லை. ஏனெனில் அவனுக்கு இந்த உலகம் முரண்பாடு உடையதாகத் தெரியவில்லை; சூழ்நிலைகளில் முரண்பாட்டை அவன் காணவில்லை; கருத்து வேற்றுமைகள் இல்லை; நன்மை, தீமைகளுக்கு இடையில் போராட்டமில்லை. இதைச் செய், இதைச் செய்யாதே என்று கட்டளையிட்டுக் கொண்டிருந்த ஏதோவொரு உணர்ச்சி மட்டுமே அவனிடம் இருந்தது. ஆரம்பக்கால மனிதன் அகத் தூண்டுதலால் மட்டுமே இயங்கி வந்தான். அவனுக்குத் தோன் றியதைச் செய்தான், தோன்றிய எண்ணங்களை உடலின்மூலம் செயலாக்க முனைந்தான். நன்மை தீமைகளை ஆராய்ந்து நடக் கவோ, அகத் தூண்டுதலை அடக்கவோ அவன் முயலவில்லை.

ஆரம்பக்கால மக்களுடைய தெய்வங்களும் இவ்வாறு இயல்புணர்ச்சியின்படி நடப்பவர்களாகவே இருந்தார்கள்.

இந்திரன் வருகிறான், அசுரப்படைகளை அழிக்கிறான். ஜெஹோவாவுக்கு ஒருவரைப் பிடிக்கிறது, ஒருவரைப் பிடிப் பதில்லை. அது ஏன் என்பது யாருக்கும் தெரியாது, யாரும் அதைக் கேட்பதில்லை. ஆராய்ச்சி என்ற ஒன்று அப்போது தோன்றாததால் ஜெஹோவா செய்ததெல்லாம் சரியென்றே அவர்களுக்குப் பட்டது. நன்மை தீமைகளைப் பற்றிய கருத்தே அப்போது இல்லை.

நம்முடைய நோக்குப்படி பார்த்தால், தேவர்கள் பல அக்கிரமங்களைச் செய்திருக்கிறார்கள். இந்திரனும் தேவர் களும் அடிக்கடி பல அக்கிரமங்களைச் செய்திருந்தாலும், இந்திரனை வழிபட்டவர்களுக்கு அவை தீமைகளாக, அக்கிரமங் களாகத் தோன்றவில்லை. ஆகவே அவர்கள் அதைப்பற்றிச் சர்ச்சை செய்யவில்லை.

நீதிநெறிக் கருத்துக்களின் முன்னேற்றத்திற்குப் பிறகுதான் சண்டையே தொடங்கியது. பல்வேறு நாடுகளில், பல்வேறு மொழிகளில், பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்ட ஓர் உணர்ச்சி மனிதனுள் தோன்றியது. அந்த உணர்ச்சியைக் கடவுளின் குரல், சம்ஸ்காரத்தின் விளைவு என்று எப்படி வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். அந்த உணர்ச்சிக்கு, மனிதனின் இயற்கையான அகத் தூண்டுதல்களை அடக்கும் சக்தி இருந்தது.

நம் மனத்தில் இருக்கும் ஓர் உணர்ச்சி செய் என்கிறது. அதற்குப் பின்னால் மற்றொரு குரல் எழுந்து, செய்யாதே என்கிறது. புலன்களின் மூலமாக வெளியே செல்வதற்காக எப் போதும் போராடிக் கொண்டிருக்கின்ற ஒரு கருத்துக் குவியல் நம் மனத்தில் இருக்கிறது. அதற்குப் பின்னால், ஒருவேளை மிக மெல்லியதான, பலவீனமான, மிகமிகச் சன்னமான ஒரு குரல் இருந்துகொண்டு, வெளியே செல்லாதே என்கிறது. இந்த நிகழ்ச்சிகளைக் குறிக்க, சம்ஸ்கிருதத்தில் இரண்டு அழகான வார்த்தைகள் இருக்கின்றன—பிரவிருத்தி, நிவிருத்தி; அதாவது புறத்தை நோக்கிய சுழற்சி, அகத்தை நோக்கிய சுழற்சி.

சாதாரணமாக, புறத்தை நோக்கிய சுழற்சிதான் நம்முடைய செயல்பாடுகளுக்குக் காரணமாக இருக்கிறது. அகத்தை நோக்கிய சுழற்சியுடன்தான் மத உணர்வு ஆரம்பிக்கிறது. 'செய்யாதே' என்ற இதனுடன்தான் மதவுணர்வு தொடங்கு கிறது. 'செய்யாதே' என்பதுடன்தான் ஆன்மீகம் ஆரம்பிக்கிறது. இந்த 'செய்யாதே' என்பது தோன்றாவிட்டால் மத உணர்வு

தோன்றுவதில்லை. மனிதர்கள் அதுவரை வழிபட்டு வந்த, போரிடும் தெய்வங்களைப் பற்றிய கருத்தையும் மீறி 'செய்யாதே' என்ற இந்த உணர்வு வந்தது. அதனால்தான் அவர்களது கருத்துக்கள் வளர்ந்தன.

மனிதர்களுடைய இதயத்தில் துளி அளவு அன்பு துளிர்க்க ஆரம்பித்தது; அது சிறு அளவுதான் இருந்தது; இப்பொழுதும் அதிக அளவு வளர்ந்துவிடவில்லை. முதலில் அன்பு என்பது ஓர் இனத்தைச் சேர்ந்த மக்களுக்கிடையில் மட்டுமே பரவி யிருந்தது. ஒவ்வோர் இனத்தையும் காப்பாற்ற ஒவ்வொரு தெய்வம் இருந்தார். இந்தத் தெய்வங்கள் தங்கள் இனத்திடம் மட்டுமே அன்பு செலுத்தினர். பல நாடுகளிலுள்ள பல இன மக்கள், தாங்கள், தங்கள் இனத்தைத் தோற்றுவித்தவரின் சந்ததிகள் என்று நம்புவதைப்போல், குறிப்பிட்ட இனங்களைச் சேர்ந்த மக்கள், தாங்கள், தங்கள் தெய்வங்களின் சந்ததிகள் என்று நம்பினார்கள். பழங்காலத்தில் ஏன், தற்காலத்திலும் கூட, சிலர் தங்களைத் தங்கள் இனத் தெய்வத்தின் சந்ததிகள் என்பதுடன் சூரிய சந்திரர்களின் சந்ததிகளும்கூட என்றும் சொல்லிக் கொள்கிறார்கள். பண்டைய சம்ஸ்கிருத நூல்களில் சூரிய சந்திர வம்சங்களில் வந்த வீரம் மிக்க சக்கரவர்த்தி களைப்பற்றிப் படிக்கிறோம். அவர்கள் முதலில் சூரிய சந்திரர் களை வழிபடுபவர்களாக இருந்தார்கள். நாளடைவில், தாங்கள் சூரிய சந்திரர்களின் சந்ததிகள் என்று நினைக்கத் தொடங்கி விட்டார்கள்.

இந்த இனக் கருத்துக்கள் வளரத் தொடங்கியவுடனே சிறிதளவு அன்பும் பிறந்தது. மற்றவர்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமைகள் இருக்கின்றன என்ற உணர்வு தோன்றி யது. ஒருவாறான சமூக அமைப்பு உருவாகியது. பிறகு இயற்கையாகவே, 'பொறுமையும் சகிப்புத்தன்மையும் இல்லாமல் நாம் எப்படி ஒன்றுசேர்ந்து வாழ்வது?' என்ற கருத்துத் தோன்றியது. அகத் தூண்டுதல்களைக் கட்டுப்படுத்த என்றாவது கற்றுக்கொள்ளாமல், தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாமல், மனம் போனபடி காரியங்களைச் செய்யாமல் இருக்காதவரை எப்படி ஒருவரோடொருவர் சேர்ந்து வாழ முடியும்? அது முடியாது. கட்டுப்பாடு என்ற கருத்து இப்படித்தான் வந்தது. கட்டுப்பாடு என்ற இந்தக் கருத்தின் அடிப்படையில்தான் சமுதாய அமைப்பே நிலைத்து நிற்கிறது. பொறுமை, சகிப்புத்தன்மை என்ற பாடங்களைக்

கற்றுக் கொள்ளாதவர்கள் ஆணானாலும் பெண்ணானாலும், அவர்கள் துன்பம் நிறைந்த வாழ்க்கையையே நடத்த வேண்டியிருக்கிறது என்பது நம் எல்லோருக்கும் தெரியும்.

மதத்தைப் பற்றிய இந்தக் கருத்துக்கள் தோன்றியதும் அவற்றைத் தொடர்ந்து, அவற்றைவிட உயர்ந்த, அவற்றைவிட ஒழுங்குமுறை மிக்க ஏதோ ஒரு கருத்து மக்களின் மனத்தில் தோன்றியது. முன்னோர் வழிபட்ட பழைய தெய்வங்கள் மூர்க்கத்தனமானவர்களாக இருந்தனர். தங்களுக்குள் சண்டை யிட்டனர், குடித்துக் கும்மாளமிட்டனர். மாட்டிறைச்சி உண்டனர். எரிகின்ற மாமிசத்தின் வாசனையிலும் மதுபானங் களிலும் இன்பம் கண்டனர். இவர்கள் பொருந்தாதவர்களாக மனித மனத்திற்குப் பட்டது. இந்திரன் சிலவேளைகளில் நன்றாகக் குடித்துவிட்டுத் தரையில் விழுந்து புரண்டு கண்டபடி உளறிக் கொண்டிருந்தான். அந்தத் தெய்வங்களை அதற்கு மேலும் பொறுத்துக் கொள்ளும் மனப்பான்மை போய்விட்டது. செயல்களின் உள்நோக்கங்களை ஆராயும் மனப்பான்மை தோன்றியது.

ஆகவே தெய்வங்களும் ஆராய்ச்சிக்கு உட்பட்டாக வேண்டியிருந்தது. தெய்வங்களின் செயல்களுக்குக் காரணம் கேட்டான் மனிதன். சரியான காரணங்கள் கிடைக்கவில்லை. எனவே தெய்வங்களை விட்டுவிட்டான்; தெளிவாகச் சொல் வதானால், தெய்வங்களைப் பற்றிய இன்னும் உயர்ந்த கருத்துக் களை வளர்த்துக் கொண்டான். தெய்வங்களின் செயல்களையும் தன்மைகளையும் ஆராய்ந்து ஒரு புள்ளிவிவரக் கணக்கெடுத் தான் என்றுதான் சொல்ல வேண்டும். அவற்றுள் ஒருங் கிணைக்க முடியாதவற்றை விலக்கினான்; புரிந்த தன்மைகளை எடுத்துக்கொண்டு, அவற்றை ஒன்றுசேர்த்து தேவதேவன், தெய்வங்களுக்கெல்லாம் தெய்வம் என்று அழைத்தான். இந்தத் தெய்வம் ஆற்றலின் ஓர் எளிய சின்னமாக மட்டுமல்லாமல் அதைவிட உயர்ந்தவராக இருந்தார், தார்மீக புருஷர் ஆனார். அவர் மனிதகுலத்தை நேசித்தார், மனித குலத்திற்கு நன்மை செய்தார்.

ஆனால் கடவுள்கருத்து இன்னும் பூர்த்தியாகவில்லை. தெய்வத்தின் தார்மீக முக்கியத்துவத்தை அதிகரித்தனர், ஆற்றலை உயர்த்தினர். தெய்வம் பிரபஞ்சத்திலேயே மிக வுயர்ந்த தர்மவானாக, ஏறக்குறைய எல்லாம் வல்லவராக ஆனார். ஆனால் இந்த ஒட்டுவேலைகளெல்லாம் பெரிய பயன்

தரவில்லை. விளக்கங்கள் விரிவடைந்த அதே விகிதத்தில், அந்த விளக்கங்களுக்குத் தீர்வு காண்பதில் கஷ்டங்களும் அதிகரித்தன. தெய்வங்களின் தன்மைகள் கூட்டல் விகிதத்தில் அதிகரித்தால் கஷ்டங்களும் சந்தேகங்களும் பெருக்கல் விகிதத்தில் அதிகரித்தன.

ஜெஹோவாவை விளக்குவதில் இருந்த கஷ்டத்தைவிட, பிரபஞ்சத் தலைவனான கடவுளை விளக்குவதில் இருந்த கஷ்டங்களே அதிகமாக இருந்தன. இன்றும் இந்தப் பிரச்சினை நீடிக்கிறது. எல்லாம் வல்ல, எல்லாரையும் நேசிக்கின்ற கடவுளின் ஆட்சியில் ஏன் காட்டுமிராண்டித்தனம் இருக்க வேண்டும்? இன்பத்தைவிடத் துன்பமே அதிகமாக இருப்பது ஏன்? நன்மையைவிடத் தீமையே ஏன் மிக அதிகமாக இருக்கிறது?

இந்த விஷயங்களையெல்லாம் பார்க்காமல் நாம் கண்களை மூடிக் கொள்ளலாம். ஆனால் உலகம் பயங்கரமானது என்ற உண்மை அப்படியேதான் இருக்கும்; மிஞ்சிப்போனால், டன்டாலஸின் நரகம்[1] என்று வேண்டுமானால் சொல்லலாம். நமக்கோ தீவிரமான உள்ளுந்தல்களும் புலனின்ப அனுபவத்திற்கான உணர்ச்சிகளும் இருக்கின்றன. ஆனால் நம்மால் அவற்றைத் திருப்தி செய்ய முடிவதில்லை. நம்முடைய சங்கல்பத்தையும் மீறி உணர்ச்சி அலை எழுந்து நம்மை முன்னே தள்ளுகிறது; ஓர் அடி எடுத்து வைத்தால் உடனேயே அடி விழுகிறது. டன்டாலஸின் நரகத்தில் வாழ்பவர்களைப் போல்தான் இங்கே வாழ வேண்டும் என்று நாம் விதிக்கப்பட்டு விட்டோம். புலன்களின் எல்லைகளைக் கடந்த எவ்வளவோ உயர்ந்த குறிக்கோள்கள் நம் மனத்தில் தோன்றுகின்றன. ஆனால் நாம் அவற்றை நோக்கிச் செல்ல முயன்றால், அது முடியாமல் போகிறது; அதற்குப் பதிலாகச் சுற்றுச் சூழ்நிலை அப்படியே நம்மை நசுக்குகிறது. அதற்காகக் குறிக்கோளை விட்டுவிட்டு, இந்த உலகத்தில் வாழ்வதற்காகப் போராடுவோமானால், அது நம்மையே தாழ்த்திக்கொண்டு, கேவலம் ஒரு மிருகத்தைப் போலாவதுதான். எந்த வழியுமே இன்பம் அளிப்பதாக இல்லை.

---

1. Tantalus's Hell; கிரேக்கக் கடவுளான ஸ்யூஸின் மகன் டன்டாலஸ். அமுதைத் திருடிய குற்றத்திற்காக அவன் நரகிற்கு அனுப்பப்பட்டான். அங்கே அவன் கழுத்தளவு நீரில் நிற்க வேண்டும். தாகத்தினால் நீரைக் குடிக்கக் குனிந்தால் நீர்மட்டம் குறைந்து போய்விடும். அழகிய இனிய பழங்கள் பழுத்துக் தொங்கும். பறிக்கச் சென்றால் காற்றடித்து அது கிடைக்காமல் போய்விடும். பொருட்கள் இருந்தும் அனுபவிக்க முடியாத நிலைக்கு இது உருவகமாகச் சொல்லப்படுகிறது.

இந்த உலகத்தில் குறிக்கோள்களே இல்லாமல் ஏனோ தானோ என்று வாழ்பவர்களின் விதி துன்பமே. அதேவேளை யில் வெறும் மிருக வாழ்க்கை வாழாமல், உண்மைக்காகவும் உயர்ந்த குறிக்கோள்களுக்காகவும் வாழத் துணிந்தவர்களின் வாழ்க்கையோ பல்லாயிரம் மடங்கு துன்பம் மிகுந்ததாக இருக் கிறது. இவை உண்மைகள். ஏன் இப்படி என்பதற்கு விளக்கம் இல்லை; இருக்கவும் முடியாது. இதிலிருந்து விடுபட வேதாந்தம் வழி காட்டுகிறது. ஒரு விஷயத்தை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். நான் சொல்வது சிலவேளைகளில் உங்களுக்குப் பயத்தை உண்டாக்கலாம். ஆனால் அதை நீங்கள் நினைவில் கொண்டு, சிந்தித்து, ஜீரணித்தால், அது உங்களுடையதாகும்; உங்களை உயர்த்தி, உண்மையைப் புரிந்துகொண்டு, உண்மை யில் வாழச் செய்யும்.

இந்த உலகம் டன்டாலஸின் நரகம் என்பது ஒரு நிஜமான சித்திரம். இந்தப் பிரபஞ்சத்தைப்பற்றி நமக்கு எதுவும் தெரியாது, ஆனால் எதுவுமே தெரியாது என்றும் ஒரேயடியாகச் சொல்லிவிடவும் முடியாது. எனக்குத் தெரியாது என்று நான் நினைக்கும் பட்சத்தில் இங்கே ஒரு சங்கிலி இருக்கிறது என்று நான் சொல்ல முடியாது. இந்தச் சங்கிலி முற்றிலுமாக என் மன மயக்கமாக இருக்கலாம். நான் எப்போதும் கனவுலகிலேயே இருக்கலாம். நான் உங்களிடம் பேசுவதாகவும் நீங்கள் கேட்டுக் கொண்டிருப்பதாகவும் நான் கனவு கண்டு கொண்டிருக்கலாம். இது கனவல்ல என்று யாராலும் நிரூபிக்க முடியாது. யாரும் தங்கள் மூளையைத் தாங்களே பார்த்தது கிடையாது. ஆகவே மூளை இருக்கிறது என்று சொல்வதே ஒரு கனவாக இருக்கலாம். இவையெல்லாம் உண்மை என்றே நாம் இயல்பாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். எல்லாவற்றைப் பற்றியும் இப்படித்தான் நாம் எண்ணுகிறோம். எனக்கு உடம்பு இருப்பதாக நான் நினைக்கிறேன்; அது என்க்குத் தெரியாது என்று சொல்ல முடியாது. இவ்வாறு அறிவு, அறியாமை இரண்டும் சந்திக்கும் இடத்தில் நாம் நிற்கிறோம். உண்மை, பொய் இரண்டும் சந்திக் கும் இடத்தில், அவை எங்கே சந்திக்கின்றன என்று அறிய முடியாத ஒரு மர்மமான சந்தியில் நாம் நிற்கிறோம். பாதி தூக்க மும் பாதி விழிப்புமான ஒரு கனவில் நாம் மிதந்து கொண்டிருக் கிறோம். தெளிவற்ற ஒரு கனவில்தான் நம் வாழ்க்கை செல்கிறது. நம் ஒவ்வொருவரின் விதியும் இதுதான். எல்லா புலனறிவின் விதியும் இதுவே. தத்துவம், தற்பெருமை அடித்துக்கொள்ளும்

விஞ்ஞானம், மனித அறிவு எல்லாவற்றின் விதியும் இதுவே. இதுதான் பிரபஞ்சம்.

ஜடப்பொருள், உணர்வு, மனம் என்று எப்படி வேண்டு மானாலும் வைத்துக் கொள்ளுங்கள், விஷயம் இதுதான்—இவை உள்ளன என்றும் சொல்ல முடியாது, இல்லை என்றும் சொல்ல முடியாது. அவை ஒன்று என்றும் சொல்ல முடியாது, பல என்றும் சொல்ல முடியாது. பிரித்துப் பார்க்க முடியாத, தனித்தனியாகப் பொருள் காண முடியாமல் சேர்ந்திருக்கின்ற, ஒளியும் இருளும் கலந்த இந்த முடிவற்ற நாடகம் நடந்து கொண்டே இருக்கிறது. இது உண்மை, அதேவேளையில் உண்மை இல்லை. இது விழிப்பு நிலை, அதேவேளையில் தூக்க நிலை. இது நிஜங்களின் ஒரு சித்திரம். இதுதான் மாயை. நாம் இந்த மாயையிலேயே பிறந்துள்ளோம், அதிலேயே வாழ் கிறோம். அதிலேயே சிந்திக்கிறோம், அதிலேயே கனவு காண் கிறோம். இந்த மாயையில் நாமே தத்துவ மேதைகள், நாமே ஆத்ம ஞானிகள், இல்லை இல்லை, இந்த மாயையில் நாமே பேய்கள், நாமே தெய்வங்கள்.

உங்கள் கருத்துக்களை முடிந்தவரை நீட்டுங்கள், உயர உயரக் கொண்டு செல்லுங்கள். அவற்றை எல்லையற்றவை என்றோ, நீங்கள் விரும்புகின்ற வேறு ஏதாவது பெயராலோ அழையுங்கள். ஆனால் இந்தக் கருத்துக்கள் அனைத்தும் மாயை யில் அடங்கியவையே. இது வேறுவிதமாக இருக்கவும் முடி யாது. மனித அறிவு முழுவதுமே இந்த மாயையைப் பொதுமைப் படுத்துவதுதான்; இந்த மாயையை உள்ளது உள்ளபடி அறி வதற்கான ஒரு முயற்சிதான். இது நாமரூபத்தின் ஒரு செயல் பாடே. உருவம் உள்ள எதுவும், நம் மனத்தில் ஒரு கருத்தை ஏற்படுத்துகின்ற எதுவும் மாயைக்குக் கட்டுப்பட்டதுதான். ஏனெனில் காலம், இடம் மற்றும் காரணகாரியங்களுக்குக் கட்டுப்பட்ட எதுவும் மாயைக்கும் கட்டுப்பட்டதே.

கடவுளைப் பற்றிய பழைய கருத்துக்களுக்கே திரும்பவும் சென்று, அவை எப்படி மாறியுள்ளன என்பதைக் காண்போம்.

நம்மீது எப்போதும் அன்பு செலுத்துகின்ற, சிறிதும் சுய நலம் இல்லாத, சர்வ வல்லமையுள்ள, பிரபஞ்சத்தை ஆள்கின்ற ஒரு கடவுள்கருத்து எடுத்தஎடுப்பிலேயே நமக்குத் திருப்தி அளிக்கவில்லை. நியாயமான, கருணையுள்ள கடவுள் எங்கிருக் கிறார் என்று தத்துவவாதி கேட்கிறார். மிருகங்களும் மனிதர் களுமான அவரது பல கோடிக் குழந்தைகள் அழிந்து

கொண்டிருப்பதை அவர் பார்க்கவில்லையா? பிறரை அழிவுக்கு உள்ளாக்காமல் ஒருவர் ஒரு கணமேனும் வாழ முடியுமா? பல்லாயிரம் உயிர்களை அழிக்காமல் நாம் ஒருமுறையாவது மூச்சை உள்ளே இழுக்க முடியுமா? கோடிக்கணக்கான உயிர்கள் அழிவதால்தான் நாம் வாழ்கிறோம். நம் வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும், நாம் விடும் ஒவ்வொரு மூச்சும், பல்லாயிரம் உயிர்களின் அழிவிற்குக் காரணமாக இருக்கிறது. நமது ஒவ்வோர் அசைவும் பல கோடி உயிர்களின் அழிவிற்குக் காரணமாக இருக்கிறது. நாம் உண்ணும் ஒவ்வொரு கவளமும் பலகோடி உயிர்களின் அழிவிற்குக் காரணமாக இருக்கிறது. அந்த உயிர்கள் ஏன் அழிய வேண்டும்? அவை கீழ்நிலைப் பிறவிகள் என்று சாதுரியமாக அந்தப் பழைய பதிலைச் சொல்லலாம். அப்படியே வைத்துக் கொள்வோம். ஆனால் எறும்பைவிட மனிதன் உயர்ந்தவனா, மனிதனைவிட எறும்பு உயர்ந்ததா என்பது யாருக்குத் தெரியும்? இப்படியோ அப்படியோ யார் நிரூபிப்பது? எனவே இந்தக் கருத்து ஏற்கத் தக்கதல்ல.

இந்தக் கேள்வியை விட்டுவிட்டு, அவை கீழ்நிலை உயிர்கள் என்றே வைத்துக்கொண்டாலும், அவை எதற்காக அழிய வேண்டும்? அவை கீழ்நிலை உயிரினங்களானால், வாழ்வதற்கு அவற்றிற்குத்தான் அதிக உரிமை இருக்கிறது. ஏன் அவை வாழக் கூடாது? அவை புலன்களையே அதிகமாகச் சார்ந்து வாழ்வதால், இன்ப துன்ப அனுபவங்கள், நம்மைவிடப் பல் லாயிரம் மடங்கு அவற்றிற்கு அதிகம். ஒரு நாயோ ஓநாயோ உண்பது போன்ற அவ்வளவு ரசனையோடு நம்முள் யார் உண்கிறோம்? யாருமில்லை. இதற்குக் காரணம், நம் சக்திகள் புலன்களில் இல்லை; அவை அறிவிலும் உணர்விலும் இருக் கின்றன. ஆனால் மிருகங்களைப் பொறுத்தவரையில், அவற்றின் உயிரே புலன்களில்தான் உள்ளது. நம்மால் கனவுகூடக் காண முடியாத அளவுக்கு அவை புலன்களில் இன்பம் காண்கின்றன. ஆனால் இன்பத்தின் அதே விகிதத்தில் துன்பத்தையும் அனு பவிக்கின்றன. இன்ப துன்பங்களைச் சமமாகத்தான் அனுபவிக்க முடியும். ஆகவே மனிதனைவிட மிருகங்களுக்கு இன்ப அனு பவம் அதிகம் என்றால், துன்ப அனுபவமும் அதிகமாகத்தான் இருக்க வேண்டும்; அதிகமாக இருக்காது என்று வேண்டு மானால் சொல்லலாம். மனிதர்கள் இறக்கும்போது அவர் களுக்கு ஏற்படும் துன்பத்தைவிடப் பல்லாயிரம் மடங்கு

துன்பத்தை, மிருகங்கள் இறக்கும்போது அனுபவிக்கின்றன. ஆனாலும் அவற்றின் துன்பத்தைப்பற்றிக் கவலைப்படாமல் அவற்றை நாம் கொல்கிறோம். இதுதான் மாயை.

எல்லாவற்றையும் படைத்த, மனிதனைப் போன்ற சகுணக் கடவுள் ஒருவர் உண்டு என்று வைத்துக் கொண்டோமானால், தீமையிலிருந்து நன்மை பிறக்கிறது என்று நிரூபிக்க முயலும் கொள்கைகளும் விளக்கங்களும் போதாமல் போய்விடும். பல்லாயிரம் நன்மைகள் வரட்டும். அவை ஏன் தீமையிலிருந்து வர வேண்டும்? அந்த நோக்கில் பார்த்தால், என்னுடைய ஐம் புலன்களுக்கும் முழுமையான இன்ப அனுபவம் வேண்டும் என்பதற்காக, நான் மற்றவர்களுடைய தலைகளை வெட்டலாம். எனவே அது ஒரு காரணமாக முடியாது. தீமையிலிருந்து ஏன் நன்மை பிறக்க வேண்டும்? இந்தக் கேள்விக்கு இன்னும் யாரும் பதில் சொல்லவில்லை; சொல்லவும் முடியாது. இந்தியத் தத்துவம் இந்தக் கருத்தை ஒப்புக்கொண்டேயாக வேண்டியிருந்தது.

வேதாந்தம் ஒன்றுதான் உலக மதங்களுள் துணிச்சல் மிகுந்த ஒன்றாக இருந்தது; இருக்கிறது. அது எதற்கும் தயங்கவே இல்லை. மேலும், அதற்கு ஒரு வசதி இருந்தது. அதாவது, உண்மையைச் சொல்ல முயலும் ஒவ்வொருவரையும் அடக்கி வைக்கும் புரோகிதக் கூட்டங்களுக்கு வேதாந்தத்தில் இடம் இல்லை. மத உணர்வுகளை வெளிப்படுத்துவதற்குப் பூரண சுதந்திரம் அதில் இருந்தது.

இந்தியாவைப் பொறுத்தவரை மூடநம்பிக்கை, சமூக விஷயங்களில் மட்டுமே இருக்கிறது. மேலைநாடுகளில் சமூகத் திற்கு நிறையச் சுதந்திரம் இருக்கிறது. இந்தியாவில் சமூகக் கட்டுப்பாடு மிகவும் அதிகம். ஆனால் மதக் கருத்துக்களுக்குப் பரிபூரண சுதந்திரம் உள்ளது. இங்கிலாந்தில் யாரும் எப்படி வேண்டுமானாலும் உடுக்கலாம், உண்ணலாம். அதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். ஆனால் யாராவது சர்ச்சுக்குப் போகாவிட்டால், சமுதாயமே அவனைச் சாடுகிறது. சமுதாயம் மதத்தைப்பற்றி என்ன சொல்கிறதோ, அதை அவன் முதலில் கடைப்பிடிக்க வேண்டும். அதற்குப் பிறகு வேண்டுமானால் உண்மை என்ன என்பதைப்பற்றி யோசிக்கலாம்.

இந்தியாவிலோ ஒரு ஜாதிக்காரன், இன்னொரு ஜாதிக் காரனோடு சாப்பிட்டால் போதும், உடனே சமுதாயம் முழுவதுமே அவனுக்கு எதிராக எழுந்து அவனை அங்கேயே

நசுக்கி எறிந்துவிடும். யுகங்களுக்கு முன்னால் தன் முன்னோர்கள் உடுத்த மாதிரியே ஒருவன் உடுக்காவிட்டால் அவன் தொலைந்தான்! இந்தியாவில் முதன்முறையாக ரயில் விடப்பட்ட போது, அதைப் பார்ப்பதற்காகப் பல மைல் தூரம் நடந்து சென்ற ஒருவனைச் சமுதாயத்திலிருந்தே விலக்கி வைத்த சம்பவத்தைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இது உண்மையாக இருக்க முடியாது என்று நாம் நினைத்துக் கொள்வோம்!

ஆனால் மதத்தைப் பொறுத்தவரையில் இந்தியாவில் நாத்திகர்கள், உலோகாயதர்கள், பௌத்தர்கள் மற்றும் பலவிதப் பிரிவுகள், பல விதக் கருத்துக்கள், பல வகையான ஊகங்கள், மிகக் கொடூரமான சில நெறிகள் இவையெல்லாம் சண்டையின்றி ஒன்றாக வாழ்ந்து வருகின்றன, பல பிரிவுகளின் ஆச்சாரியர்களும் தங்கள் கருத்துக்களைப் போதித்து தங்களுக்கென்று ஒரு கூட்டத்தைச் சேர்த்துக் கொள்கிறார்கள். உலோகாயதர்கள் தங்கள் கருத்துக்களைத் தெய்வசன்னிதானத்திலேயே எடுத்துச் சொல்வதற்கு அனுமதிக்கப் பட்டிருக்கிறார்கள். இதற்கான பெருமை அந்தணர்களையே சாரும்.

புத்தர் மிகவும் வயதான பின்னரே இறந்தார். எனது நண்பரான ஒரு பிரபல அமெரிக்க விஞ்ஞானி, புத்தரின் வாழ்க்கைச் சரித்திரத்தைப் படிப்பதில் மிகவும் விருப்பம் கொண்டிருந்தார். புத்தர் சாதாரணமாக இறந்தது அவருக்குப் பிடிக்கவில்லை; ஏனெனில் அவர் சிலுவையில் அறையப் படவில்லையாம். என்ன தவறான எண்ணம்! ஒருவன் மகத்தானவனாக இருக்க வேண்டுமானால் அவன் கொல்லப்பட்டிருக்க வேண்டுமாம்! இந்தியாவில் இதுபோன்ற கருத்துக்கள் ஒருபோதுமே நிலவியதில்லை. மகானாகிய இந்த புத்தர் இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார். இந்தியர்களின் தெய்வங்களை, ஏன், பிரபஞ்சம் முழுவதும் நிறைந்திருப்பதாகச் சொல்லப்படும் கடவுளைக்கூட மறுத்துப் பேசினார். ஆனாலும் அவர் பல ஆண்டுகள், எண்பது வருடங்கள் உயிர் வாழ்ந்தார்; நாட்டில் பாதிப் பேரைப் பௌத்தர்களாக மாற்றினார்.

பிறகு சார்வாகர்கள் வந்தார்கள். பயங்கரமானவற்றை உலோகாயதத்தை மிக மோசமாகவும் வெளிப்படையாகவும் அவர்கள் பிரச்சாரம் செய்தார்கள். அதைப் போன்ற லௌகிகக் கருத்துக்களை இன்று பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள்கூடப் பிரச்சாரம் செய்யப் பயப்படுகிறார்கள். மதம் என்பது அர்த்தமற்றது. அது புரோகிதர்களின் சதி.

முட்டாள்களும் அயோக்கியர்களும் பிசாசுகளும் எழுதியவையே வேதங்கள். கடவுள் என்பவரோ, அழிவில்லாத ஆன்மா என்பதோ இல்லவே இல்லை என்றெல்லாம் கோயில்கள்தோறும், நகரங்கள்தோறும் பிரச்சாரம் செய்ய இந்தச் சார்வாகர்கள் அனுமதிக்கப்பட்டார்கள். ஆன்மா என்ற ஒன்று இருந்தால், மனிதன் இறந்த பின்னால், மனைவி, குழந்தைகள் ஆகியோரின் அன்புக்குக் கட்டுப்பட்டு அது ஏன் திரும்பி வருவதில்லை? ஆன்மா என்று ஒன்று இருந்தால், உடல் இறந்த பிறகும், அது வாழ வேண்டும்; அது அன்புடையதாக இருக்க வேண்டும், நல்ல உணவுக்கும் உடைக்கும் அது ஆசைப்பட வேண்டும் என்பது சார்வாகர்களின் கருத்தாக இருந்தது. இந்தச் சார்வாகர்களையும் இந்தியாவில் யாரும் துன்புறுத்தவில்லை.

இவ்வாறு, இந்தியாவில் மத விஷயங்களில் பரிபூரண சுதந்திரம் இருந்து வருகிறது. சுதந்திரம்தான் வளர்ச்சிக்கு முதல் நிபந்தனை என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். சுதந்திரம் இல்லாதது, வளர்ச்சி அடையாது.

நாம் மற்றவர்களின் வளர்ச்சிக்கு உதவி செய்ய முடியும்; அவர்களுக்கு வழிகாட்டியாக இருந்து வழிநடத்திச் செல்ல முடியும். நான் எப்போதுமே குருவாக இருப்பேன் என்ற கருத்து முட்டாள்தனமானது. ஆபத்தை விளைவிக்கக் கூடிய பொய் இது. பல கோடி மனிதர்களின் வளர்ச்சியைத் தடை செய்தது இந்தக் கருத்துதான். மக்களிடையே சுதந்திர ஒளி வீசட்டும். அது ஒன்றுதான் வளர்ச்சிக்கு உரிய ஒரே வழி.

இந்தியாவில் ஆன்மீக விஷயங்களுக்கு நிறைய சுதந்திரம் இருக்கிறது. அதனால் மதச் சிந்தனைகளில் அளவற்ற ஆன்மீகச் சக்தியை இன்றும் அங்கே காண்கிறோம். இதைப் போன்ற சுதந்திரத்தை நீங்கள் உங்கள் சமூக விஷயங்களுக்கு அளித்திருக்கிறீர்கள். ஆகவே உங்கள் சமூக அமைப்பு மிகவும் சிறப்புடையதாக இருக்கிறது. நாங்கள் சமூக வளர்ச்சிக்கு எந்தவிதமான சுதந்திரமும் கொடுக்காததால், எங்கள் சமூகம் குறுகியதாக இருக்கிறது. மத விஷயங்களில் நீங்கள் எந்தவிதச் சுதந்திரத்தையும் கொடுக்கவில்லை; நெருப்பாலும் வாளாலும் உங்கள் நம்பிக்கைகளைத் திணித்தீர்கள். அதன் பலனாகத்தான் ஐரோப்பிய மக்களிடையே மத வளர்ச்சி மிகவும் சீர்குலைந்து, குன்றிப்போய் இருக்கிறது.

இந்தியாவில் சமுதாயத் தளைகளை நீக்க வேண்டும். ஐரோப்பாவில் மதத் தளைகளை நீக்க வேண்டும். அப்போது மனிதகுலம் அற்புதமாக முன்னேறும், வளர்ச்சி காணும். ஆன்மீக, தார்மீக, சமூக வளர்ச்சிகளுக்கு ஊடே ஓர் ஒருமை இழை யோடிக் கொண்டிருக்கிறது என்பதை நாம் கண்டுபிடிக்கும் போதுதான், இவையெல்லாம் ஒரே பொருளின் பல்வேறு விளக்கங்களே என்பதை அறியும்போதுதான் உண்மையான மதம் நம் சமூக வாழ்க்கையிலும் தினசரி வாழ்க்கையிலும் நன்கு புக முடியும். வேதாந்தரீதியாகப் பார்த்தால், எல்லா விஞ்ஞானங் களும் என்றல்ல, இந்த உலகில் உள்ள எல்லாமே மதத்தின் வெளிப்பாடுகள்தாம் என்பதை நாம் புரிந்துகொள்ளலாம்.

சுதந்திரத்தின் மூலமாகத்தான் விஞ்ஞானங்கள் வளர்ந்தன என்பதை நாம் காண்கிறோம். விஞ்ஞானத் துறையில் இரண்டு வகையான கருத்துக்கள் இருக்கின்றன. ஒன்று, ஜடவாதமும் ஆன்மீக மறுப்பும் கொண்டது. மற்றொன்று, ஆக்கபூர்வமான நோக்கமும் உறுதியான கொள்கையும் கொண்டது.

ஒவ்வொரு சமுதாயத்திலும் இந்த வினோத உண்மையை நாம் காண்கிறோம். ஒரு சமுதாயத்தில் ஏதோ ஒரு தீமை இருக் கிறது என்று வைத்துக்கொள்வோம். அதை மறுத்து, எதிர்ப் பதற்கென்று ஒரு கூட்டம் தோன்றுகிறது. சில நேரங்களில் இந்த எதிர்ப்பு ஒரு வெறியாகவே மாறிவிடுகிறது. ஒவ்வொரு சமுதாயத்திலும் இந்த மாதிரி வெறியர்கள் இருக்கிறார்கள். பலவேளைகளில் பெண்களும் இந்தக் கூட்டங்களில் சேர்ந்து விடுகிறார்கள். அதற்குக் காரணம், அவர்கள் இயற்கையாகவே உணர்ச்சி வசப்படுபவர்கள் என்பதுதான். எதையாவது மறுக் கும் வெறியர்களால், தங்களை ஆதரிக்கும் ஒரு கூட்டத்தைச் சேர்த்துக்கொள்ள முடிகிறது. எதையாவது உடைப்பது மிகவும் சுலபம். ஒரு பைத்தியக்காரனால் எதை வேண்டுமானாலும் அழிக்க முடியும்; அவனால் எதையும் ஆக்க முடியாது. இந்த வெறியர்கள் அவர்களது நோக்கில் சில நன்மைகளைச் செய்ய லாம். ஆனால் அவர்களின் செயலால் தீமையே அதிகம் விளை கிறது. சமுதாய அமைப்புகள் ஒருநாளில் தோன்றியவையல்ல, அவற்றை மாற்றி அமைப்பது என்றால், அவற்றின் அடிப்படைக் காரணத்தையே மாற்ற வேண்டியிருக்கிறது. ஒரு தீமை இருப்ப தாக வைத்துக் கொள்வோம். அதை மறுப்பதால் மட்டுமே அந்தத் தீமையை அழித்துவிட முடியாது. அதன் ஆணி வேரையே பிடுங்கி எறிய வேண்டும். முதலில் அதன்

காரணத்தைக் கண்டுபிடித்து அழித்துவிட்டால் காரியமும் அழிந்துவிடும். கூச்சல் போடுவதால் மட்டும் எந்தக் காரியத்தையும் சாதிக்க முடியாது என்பது மட்டுமல்ல, அதனால் தீமைகள் தான் அதிகமாகும்.

மனத்தில் உண்மையான இரக்கம் உள்ள சிலர், தீமைகளின் காரணத்தை அடியாழம்வரை சென்று ஆராய வேண்டும் என்ற கருத்தைப் புரிந்து கொண்டிருந்தார்கள். இவர்கள்தாம் மகான்கள். உலகத்தின் சிறந்த ஆச்சாரியர்கள் அனைவருமே தாங்கள் எதையும் அழிக்க வரவில்லை என்றும், நிறைவு செய்யவே வந்திருப்பதாகவும் கூறியுள்ளார்கள் என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். பல நேரங்களில் இதனை மக்கள் புரிந்து கொள்ளவில்லை. அவர்களுடைய பொறுமையைக் கண்ட மக்கள், அவர்கள் வழக்கத்திலுள்ள பிரபலமான கருத்துக்களோடு தகுதியற்ற விதத்தில் ஒத்துப்போகின்றனர் என்றே நினைத்தனர். மேலான இந்த ஆச்சாரியர்கள், கோழைகளாகவும் தைரியமாக எடுத்துச் சொல்லும் உறுதியற்றவர்களாகவும் இருந்தார்கள் என்று இன்றும் சிலர் சொல்வது நம் காதில் விழுகிறது. ஆனால் உண்மை அதுவல்ல. இந்த உலக மக்களைத் தங்கள் குழந்தைகளாகவே நினைத்த அந்த உயர்ந்த ரிஷிகளுடைய எல்லையற்ற அன்பின் சக்தியை மதவெறியர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. பொறுமையும் எல்லோரிடமும் இரக்கமும் நிறைந்த உண்மையான தந்தையாகவும் உண்மையான தெய்வமாகவும் அவர்கள் இருந்தார்கள். பொறுத்துக் கொள்ளவும் மன்னிக்கவும் அவர்கள் தயாராக இருந்தார்கள். மனித சமூகம் எப்படி வளர வேண்டும் என்பது அவர்களுக்குத் தெரியும். எனவே பொறுமையுடனும் நிதானத்துடனும் உறுதியுடனும் அவர்கள் தங்கள் பரிகார முறைகளைச் சமுதாயத்தில் பரப்பினார்கள். மக்களைப் பயமுறுத்தவோ, மற்றவர்களின் கொள்கைகளை மறுத்துப் பேசவோ செய்யாமல், மிகவும் அன்புடனும் மென்மையாகவும் படிப்படியாக மக்களை உயர்த்துவதன் மூலமே அவர்கள் இதனைச் செய்தார்கள்.

உபநிடதங்களை எழுதியவர்கள் இப்படிப்பட்டவர்கள் தாம். கடவுளைப் பற்றிய பழைய கருத்துக்கள், புதிய, முன்னேற்றமடைந்த, தார்மீகக் கருத்துக்களுடன் ஒத்துப்போக முடியாது என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. நாத்திகர்களின் பிரச்சாரங்களில் பெருமளவு உண்மை நிறைந்திருக்கிறது, ஏன், உண்மை ஒளிவீசவே செய்கிறது என்பது

அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. அதே வேளையில் மணிகளைக் கோர்த்து நிற்கும் நூலை அறுத்தெறிந்துவிட்டு, ஆகாயத்தில் ஒரு புதிய சமுதாயத்தை அமைத்து விடலாம் என்று நினைப்பவர்கள் தோல்வி அடைவார்கள் என்பதையும் அவர்கள் நன்கு புரிந்து கொண்டிருந்தார்கள்.

நாம் எதையும் புதிதாகத் தோற்றுவிப்பதில்லை; இருப்பதை இடம் மாற்றுகிறோம், அவ்வளவுதான். புதிய பொருட்கள் எதையும் உண்டாக்க முடியாது. இருக்கும் பொருட்களின் நிலையை மாற்றலாம், அவ்வளவுதான். விதை, பொறுமையாக, மெதுவாக மரமாக வளர்கிறது. ஏற்கனவே இருக்கும் உண் மையை நிறைவு செய்வதற்கே நமது சக்திகளை நாம் செலுத்த வேண்டும்; புதிய உண்மைகளை உண்டாக்குவதற்கு அல்ல.

இவ்வாறு, கடவுளைப் பற்றிய பழைய கருத்துக்கள் தற் காலத்திற்குப் பொருந்தாதவை என்று மறுத்துப் பேசாமல், அவற்றிலுள்ள உண்மைகளை ஆராய்ந்து கண்டுபிடிப்பதற்கே பழங்கால ரிஷிகள் முயன்றார்கள். இதன் பலன்தான் வேதாந் தத் தத்துவம். பழைய, பல்வேறு தெய்வங்கள், பிரபஞ்சத்தை ஆளும் ஒரே தெய்வம் போன்ற கருத்திலிருந்து, நிர்க்குண பிரம் மம் என்ற மிக உயர்ந்த கருத்தை அவர்கள் கண்டுபிடித்தார்கள். பிரபஞ்சம் முழுவதிலும் ஒருமை நிறைந்திருப்பதைக் கண்டு பிடித்தார்கள்.

வேறுபாடுகள் நிறைந்த இந்தப் பிரபஞ்சத்தில், எல்லா வற்றுள்ளும் ஊடுருவி நிற்கும் ஒன்றைக் காண்பவன் யாரோ, மரணம் நிறைந்த இந்த உலகத்தில் முடிவற்ற வாழ்க்கையான ஒன்றைக் காண்பவன் யாரோ, அறியாமை நிறைந்த இந்த ஜட வுலகில் ஒளியாகவும் ஞானமாகவும் உள்ள ஒன்றை உணர்பவன் யாரோ அவனுக்கே அழியாத அமைதி கிட்டுகிறது. வேறு யாருக்கும் கிட்டாது; கிட்டவே கிட்டாது.

## 6. மாயையும் முக்தியும்

22. அக்டோபர் 1896

'புகழ்மேகங்களின்மீது கோடு கிழித்தவாறுதான் நாம் தோன்றுகிறோம்'[1] என்று ஒரு கவிஞர் பாடினார். ஆனால் நாம் எல்லோரும் என்னவோ அப்படி புகழ்க்கோடுகள் மீதொன்றும் தோன்றிவிடவில்லை. பலர் கருமேகங்களின் மூடலுடன்தான் பிறக்கிறோம். இதில் சந்தேகம் இல்லை. போர்க்களத்தில் போரிடுவதற்கே போன்றுதான் நாம் ஒவ்வொருவரும் இந்த உலகத்தில் வந்துள்ளோம். இந்த உலகத்தில் போராடுவதற்காக நாம் அழுதுகொண்டே பிறக்கிறோம். நம்மால் முடிந்தவரை போராடி, இந்த எல்லையற்ற வாழ்க்கைக் கடலில் நமக்கென்று ஒரு பாதையை வகுத்துக்கொள்ள முயல்கிறோம். யுகயுகங்களாக நாம் முன்னே சென்று கொண்டிருக்கிறோம். கடக்க வேண்டிய தூரமோ எல்லையற்று விரிந்து பரந்து கிடக்கிறது. மரணம் நம்மை இந்தப் போர்க்களத்திலிருந்து நீக்கும்வரை இவ்வாறு சென்று கொண்டிருக்கிறோம். தோல்வியுடன் வெளியேறுவோமா, வெற்றியுடன் வெளியேறுவோமா என்பது நமக்குத் தெரியாது. இதுதான் மாயை.

குழந்தையின் உள்ளத்தில் நம்பிக்கை பிரகாசமாக ஒளி வீசுகிறது. அவன் கண்ணைத் திறக்கும்போது, அவனுக்கு இந்த உலகம் முழுவதும் தங்கமயமாக ஜொலிக்கிறது. தன்னால் சாதிக்க முடியாதது எதுவும்இல்லை என்றே அவன் நினைக்கிறான். அவன் பெரியவனாகி முன்னேறிச் செல்லும்போது, ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும்போதும் இயற்கை ஒரு கடக்க முடியாத சுவர்போல் அவன் முன்னால் நின்று, அவனுடைய முன்னேற்றத்தைத் தடுக்கிறது. அந்தச் சுவரில் திரும்பத்திரும்ப எவ்வளவுதான் முட்டிக்கொண்டாலும், அதை உடைத்துக் கொண்டு முன்னே செல்ல அவனால் முடிவதில்லை. அவன்

---

1. ...'trailing clouds of glory do we come'

—William Wordsworth, *Ode, Imitations of Immortality.*

முன்னே செல்லச்செல்ல, அவனது குறிக்கோளும் அவனை விட்டு விலகிச் சென்றுகொண்டே இருக்கிறது. கடைசியில் மரணம் வந்து ஒருவேளை அவனை விடுதலை செய்யலாம். இதுதான் மாயை.

விஞ்ஞானி தோன்றுகிறான். அவனுக்கு அறிவுப்பசி அதிக மாக இருக்கிறது. எந்தத் தியாகமும் அவனுக்குப் பெரிதல்ல. எந்தப் போராட்டமும் அவன் நம்பிக்கையைத் தகர்ப்பதில்லை. அவன், இயற்கையின் ரகசியங்களை ஒவ்வொன்றாகக் கண்டு பிடித்துக்கொண்டே முன்னேறுகிறான். இயற்கையின் அடி யாழத்திலுள்ள ரகசியங்களை ஆராய்ந்து கண்டுபிடிக்கிறான். ஏன்? இதெல்லாம் எதற்காக? அவனை நாம் ஏன் பெருமைப் படுத்த வேண்டும்? அவன் ஏன் புகழ் பெற வேண்டும்? எந்த மனிதனையும்விடப் பலமடங்கு அதிகமான விஷயங்களை இயற்கை செய்யவில்லையா? இயற்கை மந்தமானது; உணர் வற்றது என்பதும் ஒருபுறம் இருக்கிறது. அப்படி மந்தமான, உணர்வற்ற இயற்கையைப் போலவே செயல்படுவது, புகழுக் குரிய விஷயமா என்ன? எவ்வளவு சக்தி வாய்ந்த இடியையும் எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் செலுத்த இயற்கையால் முடியும். இயற்கை செய்வதில் ஒரு துளி அளவு மனிதன் செய் தாலும், அவனை வானளாவப் புகழ்கிறோம். ஏன்? இயற் கையைக் காப்பியடிப்பதற்காக, மரணத்தைக் காப்பியடிப்பதற் காக, மந்தநிலையைக் காப்பியடிப்பதற்காக, உணர்வின்மையைக் காப்பியடிப்பதற்காக அவனை ஏன் புகழ வேண்டும்? ஈர்ப்புச் சக்தி, எவ்வளவு பெரிய பொருளையும் தூள்தூளாக்கிவிடும் வல்லமை படைத்தது. ஈர்ப்புச்சக்தி உணர்வற்றதே. உணர் வற்றதைப் பின்பற்றுவதில் என்ன பெருமை இருக்க முடியும்? என்றாலும், நாம் எல்லோரும் அதைக் குறித்தே போராடு கிறோம். இதுதான் மாயை.

புலன்கள் நம்மை வெளியே இழுக்கின்றன. இன்பம் என் பதே கிடைக்காத இடத்தில், மகிழ்ச்சி என்பதே கிடைக்காத இடத்தில் மனிதன் இன்பத்தைத் தேடுகிறான், மகிழ்ச்சியைத் தேடுகிறான். இந்தத் தேடல் பயனற்றது, வீண், இன்பம் இங்கே இல்லை என்று பல காலமாக நமக்குப் போதிக்கப்பட்டுள்ளது. ஆனால் நாம் பாடம் படிக்கவில்லை. நாமே அனுபவிக்காமல் நம்மால் அதைக் கற்றுக்கொள்ள முடியாது. நாம் முயற்சிக் கிறோம். அடி ஒன்று விழுகிறது. அப்போதாவது புத்தி வரு கிறதா? இல்லை. விட்டில்பூச்சிகள் தாங்களாகவே சென்று

விளக்கில் விழுந்து சாவதுபோல், புலனின்பத்தில் திருப்தி கிடைக்கும் என்ற நம்பிக்கையில் மீண்டும்மீண்டும் அதில் ஈடு படுகிறோம். புதிய சக்தியுடன் திரும்பத்திரும்ப அதில் மூழ்கு கிறோம். நம் சக்திகளெல்லாம் ஒடுங்கி, ஏமாற்றமடைந்து, இறக்கும்வரை, இதே காரியத்தில் ஈடுபட்டுக்கொண்டே இருக்கிறோம். இதுதான் மாயை.

நம் அறிவைப் பற்றிய விஷயமும் இப்படியே. பிரபஞ் சத்தைப் பற்றிய மர்மங்களை அறிந்துகொள்ளும் ஆசையில், நிறுத்தாமல் கேள்வி கேட்கிறோம். நிச்சயமாக அதற்குப் பதில் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினைக்கிறோம். நமக்குப் பதில் கிடைக்காது என்பதை நம்மால் நம்ப முடிவதில்லை. சில அடிகள்தான் எடுத்து வைத்திருப்போம், உடனேயே, ஆதி யும் அந்தமும் அற்ற, கடக்க முடியாத காலம் என்னும்சுவர் நம் முன்னே எழுகிறது. இன்னும் சில அடிகள், எல்லையற்ற இடம் என்ற கடக்க முடியாத சுவர் நம்முன் தோன்றுகிறது. மேலும், இவையனைத்துமே காரணம், காரியம் என்ற சுவர்களுக்குள் விடுபட முடியாதவாறு கட்டுப்பட்டுக் கிடக்கின்றன. அவற்றைக் கடந்து போக முடியாது. என்றாலும், நாம் போராடுகிறோம்; போராட வேண்டித்தான் இருக்கிறது. இதுதான் மாயை.

நம் ஒவ்வொரு மூச்சிலும் நம் இதயத்தின் ஒவ்வொரு துடிப்பிலும் நம் ஒவ்வோர் அசைவிலும் நாம் சுதந்திரமாக இருப்பதாக நினைக்கிறோம். அந்தக் கணமே நாம் அவ்வாறு சுதந்திரமாக இல்லை என்பது நமக்கு உணர்த்தப்படுகிறது. உடலாலும் மனத்தாலும் எண்ணங்களாலும் உணர்ச்சிகளாலும் நாம் இயற்கையின் அடிமைகளாக, கொத்தடிமைகளாகத்தான் இருக்கிறோம். இதுதான் மாயை.

தன்னுடைய குழந்தை மிகவும் அசாதாரணமானது, பிறவி மேதை என்று நினைக்காத எந்தத் தாயுமில்லை. அந்தக் குழந்தையை அவள் சீராட்டிப் பாராட்டி வளர்க்கிறாள். அந்தக் குழந்தையிடம் தன் உயிரையே வைக்கிறாள். குழந்தை வளர்ந்து பெரியவனாகிறான், ஒருவேளை அவன் குடிகாரனாக, ஒரு மிருகம்போல் வளரலாம். தாயையே கொடுமைப்படுத்த லாம், அவன் துன்புறுத்துந்தோறும் அவளுக்கு அவன்மீதுள்ள பாசம் அதிகரித்துக்கொண்டே போகிறது. அந்தத் தாய், பிறவி யிலேயே பாசத்திற்கு அடிமையாக இருக்கிறாள், அதை அவ ளால் மாற்றிக்கொள்ள முடியாது என்பதைப் புரிந்து கொள் ளாத உலகம், சுயநலமற்ற அன்பு என்று அவளுடைய செயலைப்

பாராட்டிப் புகழ்கிறது. அந்தக் கொடுமையிலிருந்து விடுபட அவள் பல்லாயிரம் முறை முயல்கிறாள். என்றாலும் அவளால் அது முடிவதில்லை. ஆகவே தன்னுடைய இயலாமையை அற்புதமான அன்பு என்ற மலர்க் குவியலால் மறைத்து விடுகிறாள். இதுதான் மாயை.

நாம் எல்லோருமே இப்படித்தான் இந்த உலகத்தில் நடந்து கொள்கிறோம்.

புராணக் கதை ஒன்று இருக்கிறது. ஒருமுறை நாரதர், ஸ்ரீகிருஷ்ணரைப் பார்த்து, 'பகவானே, மாயையை எனக்குக் காட்டுங்கள்' என்று கேட்டார். சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் கிருஷ்ணர் நாரதரைத் தன்னோடு ஒரு பாலைவனப் பயணத்திற்கு வருமாறு அழைத்தார். பல காத தூரம் நடந்தபிறகு அவர் நாரதரைப் பார்த்து, 'நாரதா, எனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது. சிறிது தண்ணீர் கொண்டு வர முடியுமா?' என்று கேட்டார். 'பகவானே, உடனே கொண்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டு நாரதர் புறப்பட்டார்.

சிறிது தூரத்தில் ஒரு கிராமம் இருந்தது. அவர் அந்தக் கிராமத்தில் சென்று ஒரு வீட்டின் கதவைத் தட்டினார். அழகான இளமங்கை ஒருத்தி கதவைத் திறந்தாள். அவளைப் பார்த்த மாத்திரத்தில், ஸ்ரீகிருஷ்ணர் தண்ணீருக்காகக் காத்துக் கொண் டிருப்பதையும், தண்ணீர் கிடைக்காவிட்டால் தாகத்தால் ஒரு வேளை அவர் இறந்துவிடக்கூடிய சூழ்நிலையில் இருப்பதையும் நாரதர் மறந்தார். எல்லாவற்றையும் மறந்துவிட்டு அந்தப் பெண் ணோடு பேசத் தொடங்கினார். அன்று அவர் திரும்பிப் போக வில்லை. அடுத்த நாளும் அந்தப் பெண்ணோடு பேசிக் கொண்டே இருந்தார். அவர்கள் பேச்சு காதலாக மலர்ந்தது. இறுதியில் அந்தப் பெண்ணைத் தனக்குத் திருமணம் செய்து கொடுக்குமாறு அவளது தந்தையிடம் நாரதர் கேட்டார். அவர்கள் திருமணம் செய்துகொண்டு குழந்தைகளையும் பெற் றார்கள். இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் ஓடி மறைந்தன. நாரதருடைய மாமனார் இறந்தார். அவரது சொத்திற்கு நாரதர் வாரிசானார். மனைவி, மக்கள், நிலபுலங்கள், ஆடு மாடுகள் இவற்றோடு மிகவும் இன்பமான வாழ்க்கை வாழ்வதாகத்தான் நாரதர் நினைத்துக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் திடீரென்று பெரிய வெள்ளம் வந்தது. பொங்கி வந்த ஆற்று வெள்ளம் கரையை உடைத்துக்கொண்டு கிராமத் திற்குள் புகுந்தது. வீடுகள் இடிந்து விழுந்தன. மனிதர்களும்

மிருகங்களும் இழுத்துச் செல்லப்பட்டனர். வெள்ள வேகத்தில் எல்லாம் மிதந்து சென்று கொண்டிருந்தன. நாரதர் தப்பிக்க வேண்டியிருந்தது. மனைவியை ஒரு கையிலும், இரண்டு குழந்தைகளை மற்றொரு கையிலும் பிடித்துக்கொண்டு, தோளில் ஒரு குழந்தையைச் சுமந்துகொண்டு, அந்தப் பயங்கர வெள்ளத்தைக் கடக்க முயன்றார். சில அடிகள் எடுத்து வைத்தவுடனேயே வெள்ளத்தின் வேகம் மிகவும் அதிகமாக இருப்பதை உணர்ந்தார். அவரது தோளில் இருந்த குழந்தை வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டது. நாரதர் துயரத்தால் கதறினார். அந்தக் குழந்தையைக் காப்பாற்றும் முயற்சியில், கையில் பிடித்திருந்த குழந்தைகளிலும் ஒன்று வெள்ளத்தில் சென்று விட்டது.

கடைசியில், அவர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்த அவருடைய மனைவியையும் வெள்ளம் அடித்துச் சென்றது; அவரைக் கரையில் ஒதுக்கியது. துயரத்தால் கதறினார் அவர். அப்போது, 'மகனே தண்ணீர் எங்கே? நீ தண்ணீர் எடுத்துவரப் போனாய்; நான் உனக்காகக் காத்துக் கொண்டிருந்தேன்; நீ போய் அரைமணி நேரம் ஆகிவிட்டது' என்று ஒரு மெல்லிய குரல் அவருக்குப் பின்னால் கேட்டது. 'அரைமணி நேரமா!' என்று நாரதர் அதிர்ச்சியோடு கேட்டார். பன்னிரண்டு நீண்ட ஆண்டுகள் அவர் மனத்தில் ஓடி மறைந்துவிட்டன. ஆனால் இந்த நிகழ்ச்சிகளெல்லாம் அரைமணி நேரத்திற்குள் நடந்து முடிந்துவிட்டன! இதுதான் மாயை.

நாம் எல்லோரும் ஏதாவது ஒருவிதத்தில் இந்த மாயையில் சிக்கியிருக்கிறோம். இது புரிந்துகொள்வதற்கு மிகவும் சிரமமான, கஷ்டமான விஷயம். இது எல்லா நாடுகளிலும் எல்லா இடங்களிலும் போதிக்கப்பட்டுள்ளது. ஆனாலும் இதை நம்பியவர் சிலரே. நாமே எதையும் அனுபவித்தறியாமல் நம்மால் எதையும் நம்ப முடியாது. இது எதைக் காட்டுகிறது? மிகவும் பயங்கரமான ஒன்றைத்தான். எல்லாமே பயனற்றது. எல்லாவற்றிற்கும் முடிவுகட்டும் காலம் என்ற ஒன்று வருகிறது. அது எதையும் விட்டு வைப்பதில்லை. புண்ணியவான், பாவி, அரசர், ஆண்டி, அழகன், அழகற்றவன் என்று எல்லோரையும் விழுங்கி அது ஏப்பம் விடுகிறது. அது எதையுமே விட்டு வைப்பதில்லை. அழிவு என்ற ஒரே குறிக்கோளை நோக்கியே எல்லாம் ஓடிக்கொண்டிருக்கின்றன. நம் அறிவு, நம் கலைகள், நமது விஞ்ஞானங்கள் எல்லாமே அழிவை நோக்கித்தான் சென்று

கொண்டிருக்கின்றன. இந்த அலையைத் தடுக்கவோ, கணநேரம் பிடித்துவைக்கவோ யாராலும் முடியாது. ப்ளேக் நோய் பரவி விட்டால் மது, நடனம் என்று பல்வேறு வீணான முயற்சிகளால் அந்த நோயை மறப்பதற்கு மக்கள் முயல்வதுபோல், நாமும் காலத்தின் சுழற்சியை மறப்பதற்கு முயலலாம். எல்லா வகையான புலனின்பங்களிலும் ஈடுபடுவதன்மூலம், காலத்தின் சுழற்சியை மறப்பதற்கு நாம் முயல்கிறோம். இதுதான் மாயை.

இதற்கு இரண்டு வழிகள் கூறப்பட்டுள்ளன. ஒரு வழி எல்லோருக்கும் தெரிந்தது; மிகவும் சாதாரணமானது. அதாவது 'நீங்கள் சொல்வதெல்லாம் உண்மைதான். ஆனால் அதைப்பற்றி நினைக்காதீர்கள்' என்பதுதான். 'காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்' என்ற பழமொழியும் இதைப் பின்பற்றி வந்ததுதான். எல்லாம் உண்மை, எல்லாம் நிஜம், ஆனால் அதை லட்சியம் செய்யாதீர்கள். உங்களால் முடிந்த அளவு இன்பங்களை அனுபவியுங்கள். உங்களால் முடிந்ததைச் செய்யுங்கள். வாழ்க்கையின் இருண்ட பக்கத்தைப் பார்க்காதீர்கள். நம்பிக்கை மிக்க வெளிச்சமான பக்கத்தைப் பாருங்கள் என்பதுதான் இந்த வழி. இதில் சிறிதளவு உண்மை இருக்கிறது. ஆனால் கூடவே ஆபத்தும் இருக்கிறது. இது நல்ல ஒரு தூண்டு சக்தியாக இருக்கிறது என்பது உண்மை. நம்பிக்கையும் ஆக்கபூர்வமான லட்சியமும் வாழ்க்கைக்கு நல்ல தூண்டுகோல்களே. ஆனால் இந்த முறையில் ஓர் ஆபத்து இருக்கிறது. வாழ்க்கையில் போராடிப் போராடி, கடைசியில் நம்பிக்கையையே இழந்து முயற்சியைக் கைவிடுவது தான் அந்த ஆபத்து.

'உலகத்தை, அது இருக்கின்றவாறே பாருங்கள். உங்களால் முடிந்தவரை அமைதியாக, வசதியாக இருந்து கொள்ளுங்கள். எல்லா துன்பங்களையும் பொறுத்துக் கொள்ளுங்கள். அடி விழும்போது அது அடியல்ல, மலர் அர்ச்சனையே என்று சொல்லிக் கொள்ளுங்கள். அடிமைகளாக விரட்டப்படும் போது, நீங்கள் சுதந்திரமாக இருப்பதாக நினைத்துக் கொள் ளுங்கள். இரவும் பகலும் பொய் சொல்லி உங்களையும் மற்றவர் களையும் ஏமாற்றிக் கொள்ளுங்கள். ஏனென்றால் அது ஒன்று தான் இன்பமாக வாழ்வதற்கு ஒரே வழி' என்று இந்த வழியைப் போதிப்பவர்கள் சொல்கிறார்கள். இதுதான் நடைமுறைக்கு ஏற்ற அறிவாம்! இந்தக் கருத்து இந்தப் பத்தொன்பதாம் நூற் றாண்டைவிட அதிகமாக எப்போதும் உலகில் பரவியிருக்க வில்லை. ஏனென்றால் இப்போதைப்போல் அடிகள் இவ்வளவு

பலமாக முன்பு எப்போதும் விழுந்ததில்லை, இவ்வளவு தீவிரமான போட்டியும் இருந்ததில்லை, மனிதனுக்கு மனிதன் இவ்வளவு கொடூரமாக நடந்து கொண்டதில்லை. ஆகவே இந்த ஆறுதலை மட்டும்தான் சொல்ல முடியும். இந்தக் காலத்தில் இது மிகவும் தீவிரமாக வற்புறுத்தப்படுகிறது. இந்த வழி தோல்வியைத்தான் தரும். அப்படியேதான் நடந்துகொண்டும் இருக்கிறது. பிணத்தை மலர்களால் மறைக்க முடியாது; அது முடியாத காரியம். அது பலநாள் தாங்காது. மலர்கள் சீக்கிரம் வாடி உதிர்ந்துவிடும்; பிணம் முன்பைவிட அதிகமாக அழுகி நாற்றமெடுக்கும். நம் வாழ்க்கையும் இப்படித்தான். நாறுகின்ற நமது புண்களைத் தங்கக் கவசத்தால் மறைக்க முயலலாம். அந்தத் தங்கக் கவசத்தை நீக்கும் நாள் வரும்போது, புண்கள் இன்னும் துர்நாற்றத்தோடு வெளிப்படுகின்றன.

அப்படியானால் நம்பிக்கையே கிடையாதா? நாம் எல்லோரும் மாயையிலே பிறந்து அதிலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறோம், நாம் அதன் அடிமைகள் என்பது உண்மைதான். அப்படியானால் இதிலிருந்து வெளியேற வழியே இல்லையா? விடிவே கிடையாதா?

நாம் துன்பத்தில் உழல்கிறோம், இந்த உலகம் உண்மையில் ஒரு சிறைச்சாலை. அழகு என்று நாம் சொல்வதெல்லாம் உண்மையில் ஒரு சிறைச்சாலையே. நம் அறிவு, மனம் எல்லாம் கூட உண்மையில் சிறைச்சாலைகளே. இவையெல்லாம் பல காலமாக அறிந்த விஷயங்கள்தான். எப்படிப் பேசினாலும், என்ன பேசினாலும் இந்த உண்மையை எப்போதாவது ஒரு முறை உணர்ந்திராத மனிதனே இருக்க முடியாது. வயதானவர்கள் இதை அதிகமாக உணர்கிறார்கள். அதற்குக் காரணம் அவர்களுக்கு ஒரு முழு வாழ்க்கையில் அனுபவம் இருப்பதும், இயற்கையால் அவர்களைச் சுலபமாக ஏமாற்ற முடியாது என்பதுமே ஆகும். இதிலிருந்து தப்ப வழியே இல்லையா? நிலைமை இப்படியெல்லாம் இருந்தாலும், கண் முன்னாலுள்ள உண்மை பயங்கரமானதாக இருந்தாலும், இந்தத் துன்பதுயரங்களின் நடுவில், வாழ்வும் சாவும் ஒரே அர்த்தமுடையவையாக (synonymous) இருக்கின்ற இந்த உலகில் காலங்காலமாக எல்லா நாடுகளிலும் எல்லா இதயங்களிலும் ஒரு சிறிய குரல் ஒலித்துக் கொண்டே இருக்கிறது: 'எனது இந்த மாயை தெய்வீகமானது. குணங்களால் ஆக்கப்பட்டது. கடக்க மிகவும் கடினமானது. ஆனாலும் என்னிடம் வருபவர்கள் பிறவிக் கடலைக் கடந்து

விடுகிறார்கள்.'[1] 'பெரும் சுமையைத் தாங்கித் துன்பப் படுபவர்களே, என்னிடம் வாருங்கள். நான் உங்களுக்கு ஓய்வு அளிக்கிறேன்.' இந்தக் குரல்தான் நம்மை வழிகாட்டி, முன்னே அழைத்துச் செல்கிறது. மனிதன் இந்தக் குரலை முன்பே கேட்டிருக்கிறான்; காலங்காலமாகக் கேட்டுக் கொண்டும் இருக்கிறான். மனிதனுக்கு எல்லாமே இழந்தது போலாகி, எல்லா நம்பிக்கைகளும் அற்றுப்போய், தன் சக்தியில் வைத்திருக்கும் அனைத்து நம்பிக்கைகளும் அழிந்து, எல்லாமே கைவிரல்களுக்கிடையே கரைந்துபோவது போல் மறைந்து போய், வாழ்க்கையே பாழான நிலையில் இந்தக் குரலைக் கேட்கிறான். இதைத்தான் மதஉணர்வு என்று சொல்கிறார்கள்.

ஒரு பக்கத்தில், இவையெல்லாம் பொருளற்றவை, எல்லாம் மாயை என்ற துணிச்சலான கருத்து உள்ளது; அதே நேரத்தில், மாயைக்கு அப்பால் அதிலிருந்து வெளியேற வழி இருக்கிறது என்ற நம்பிக்கை தருகின்ற கருத்தும் இருக்கிறது. இன்னொரு பக்கத்தில் லௌகிக மக்கள், 'மதம், தத்துவம் போன்ற முட்டாள் தனமான கருத்துக்களுக்காக உங்கள் மூளையைக் குழப்பிக் கொள்ளாதீர்கள். உலகத்தில் வாழுங்கள். இந்த உலகம் தீமை யானதுதான். முடிந்த அளவு இதிலேயே சிறப்பாக வாழ முய லுங்கள்' என்று சொல்கிறார்கள். சாதாரண வார்த்தைகளில் சொல்வதானால், புண்களையெல்லாம் இயன்ற அளவு சாமர்த் தியமாக மறைக்கும் வண்ணம் ஒரு கபட வாழ்க்கை வாழுங்கள், பொய் வாழ்க்கை வாழுங்கள். ஏமாற்று வாழ்க்கையையே தொடர்ந்து வாழுங்கள். உண்மை மறைந்து போகும்வரை, ஒட்டுக்குமேல் ஒட்டாகவே போட்டு, ஒட்டுமயமாகவே ஆகி விடுங்கள். இதுவே அவர்கள் கூறும் நடைமுறை வாழ்க்கை.

இந்த ஒட்டுவேலையில் திருப்தி அடைபவர்களுக்கு மதம் ஒரு தேவையாக இருப்பதில்லை. இப்போதைய நமது நிலை மற்றும் நமது வாழ்க்கையில் ஏற்படும் அதிருப்தி, ஒட்டுமயமான இந்த வாழ்க்கையின்மீது ஏற்படும் தீவிர வெறுப்பு, ஏமாற்று வேலைகள் மற்றும் பொய்களின்மீது ஏற்படும் எல்லையற்ற அரு வருப்பு—இவையே மத உணர்வு தோன்றக் காரணமாகின்றன.

நாம் மேலே கண்ட இந்த நடைமுறைக் கருத்து போதி மரத்தடியில் அமர்ந்திருந்தபோது, புத்தருக்குத் தோன்றியது. அது அர்த்தமற்றது என்பதை அவர் உணர்ந்தார் என்றாலும்

1. தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥ —கீதை, 7. 14

வழி அவருக்குத் தெரியவில்லை. உண்மையைத் தேடும் முயற்சியைக் கைவிடு, உலகிற்கே திரும்பிச் சென்று ஏமாற்று வாழ்க்கை வாழ், எல்லா பொருட்களையும் தவறான பெயரிட்டு அழை, எல்லோரிடமும் பொய்களையே சொல்லிக்கொண்டு திரி—என்று ஆசை அவரைத் தூண்டியது. ஆனால் அந்த மாமனிதரான புத்தர் மிகவும் தீரத்துடன் அதை வென்றார். 'மரங்களைப் போன்ற அஞ்ஞான வாழ்க்கையைவிட மரணமே மேலாகும். தோல்வியுடன் வாழ்வதைவிட வீர மரணமே மேலாகும்' என்று அறிவித்தார். மதவுணர்வுக்கு இதுவே அடிப்படை.

ஒரு மனிதன் இந்தக் கருத்தில் நிலைபெறும்போது, உண்மையை அறிவதற்கும், கடவுளை உணர்வதற்கும் உரிய வழியில் அவன் போய்க் கொண்டிருக்கிறான் என்று பொருள். இந்தத் தீர்மானம்தான் மதஉணர்வு எழுவதற்கு முதல் தூண்டு கோலாக இருக்கிறது. நானே எனக்காக ஒரு பாதையை வகுத்துக் கொள்வேன். உண்மையை அறிவேன்; அல்லது அந்த முயற்சி யில் உயிரையே விடுவேன்.

உலகியலின் பக்கத்திலோ எல்லாம் வெறுமை, எதுவும் இல்லை. எல்லாம் மறைந்துகொண்டே இருக்கின்றன. அழகு, இளமை, நம்பிக்கை இவை நிறைந்த இன்றைய மனிதன், நாளைய அனுபவசாலியாக ஆகிறான். இன்று பூத்த மலர்களாகிய நம் பிக்கையும் இன்பங்களும் சுகங்களும் எல்லாம் நாளைய உறை பனியில் வாடிக் கருகிவிடும். ஒரு பக்கம் இப்படி இருக்கிறது. மற்றொரு பக்கத்தில், வெற்றியின் மேல் மனிதனுக்கு உள்ள ஆசை, வாழ்க்கையின் தீமைகளை வெல்ல ஆசை, வாழ்க்கையை வெற்றிகொள்ள ஆசை, பிரபஞ்சத்தையே கீழடக்க ஆசை—இவை உள்ளன. இந்தப் பக்கத்தில்தான் மனிதர்கள் உறுதியாக நிற்க முடியும். எனவே வெற்றிக்காக, உண்மைக்காக மதஉணர் வுக்காகத் துணிச்சலாகப் போராடுபவர்கள் சரியான வழி யிலேயே போகிறார்கள். அதையே வேதங்களும் போதிக்கின்றன. 'மனம் சோர்ந்து விடாதீர்கள். பாதை மிகவும் கடினமானது; கத்திமுனையில் நடப்பது போன்றது. ஆனாலும் சோர்வடை யாதீர்கள். எழுந்திருங்கள், விழித்திருங்கள், குறிக்கோளை, லட்சியத்தை அடைந்தே தீருங்கள்.'[1]

---

1. உத்திஷ்டத் ஜாக்ரத் ப்ராப்ய வரான் நிபோதத।
க்ஷுரஸ்ய தாரா நிசிதா துரத்யயா துர்கம் பதஸ்தத் கவயோ வதந்தி।
—கட உபநிடதம், 1. 3. 14

மத உணர்வின் இந்தப் பல்வேறு வெளிப்பாடுகள், அவை எந்த உருவத்தில் மனிதர்களுக்குத் தோன்றினாலும் சரி, அவற்றின் மையக் கருத்து என்னவோ ஒன்றுதான். அவை எல்லாமே இந்த உலக வாழ்க்கை என்னும் பந்தத்திலிருந்து விடுபட்டு முக்தி பெறும் வழியைத்தான் போதிக்கின்றன. உலகிற்கும் மதத்திற்கும் சமரசம் ஏற்படுத்துவதற்காக அவை தோன்றவில்லை. மாறாக, பலமான கட்டை அறுத்து, மதத்தை அதன் சொந்த லட்சியத்தில் நிலைநிறுத்தத்தான் மதங்கள் தோன்றியுள்ளனவே தவிர உலகத்தை அனுசரித்துப் போவதற்காக அல்ல. எல்லா மதங்களும் போதிப்பது இதைத்தான். வேதாந்தத்தின் கடமை எல்லா மதங்களின் கருத்துக்களையும் ஒருங்கிணைத்து, மிகவுயர்ந்தது முதல் மிகத் தாழ்ந்தது வரையுள்ள எல்லா மதங்களின் பொதுவான கருத்தை வெளிப்படச் செய்வதே.

வடிகட்டின மூடநம்பிக்கை என்று நாம் சொல்லும் கருத்திற்கும், மிகவும் உன்னதமான தத்துவம் என்று நாம் சொல்வதற்கும் நோக்கம் ஒன்றாகத்தான் இருக்கிறது. அதாவது, இரண்டும் துன்பத்திலிருந்து வெளியேறும் வழியைக் காட்ட முயல்கின்றன. பல நேரங்களில் இந்த வழியைக் காட்டுபவர், இயற்கையின் நியதிகளால் கட்டுப்படாதவராக, ஒரே வார்த்தையில் சொல்லப் போனால் சுதந்திரராக இருக்கிறார். சுதந்திரரான இந்த வழிகாட்டி யார்? அவர் எப்படிப்பட்டவர் என்பதில் எத்தனையோ பிரச்சினைகளும் கருத்துவேற்றுமைகளும் இருந்தாலும், அவர் சகுணக் கடவுளாகவோ, மனிதனைப் போன்ற உணர்வுப் பொருளாகவோ, ஆணாகவோ, பெண்ணாகவோ, அஃறிணைப் பொருளாகவோ இருக்கலாம். இப்படிப் பலவாறாக இருப்பதாக முடிவில்லாத தர்க்கம் இருந்தாலும், அடிப்படைக் கருத்து ஒன்றுதான்.

பல்வேறு பிரிவுகளுக்கிடையே நிலவுகின்ற, ஏறக்குறைய நம்பிக்கையற்றவையான இந்த வாதப் பிரதிவாதங்களின் இடையிலும், அவற்றின் ஊடேயும் ஒருமையின் தங்க இழை ஓடிக்கொண்டிருப்பதைக் காணலாம். வேதாந்தத் தத்துவத்தில் இந்த இழை கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது. அது சிறிது சிறிதாக நமக்கு வெளிப்படுத்தப்படுகிறது. இந்த வெளிப்பாட்டின் முதல் படி, எல்லா மதங்களும் சுதந்திரத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கின்றன என்ற பொதுவான கருத்தே ஆகும்.

நமது இன்பங்கள், துன்பங்கள், கஷ்டங்கள், போராட்டங்கள் எல்லாவற்றின் இடையிலேயும் ஒரு விநோதமான நிஜம் என்னவென்றால் நாம் எல்லோரும் நிச்சயமாக சுதந்திரத்தை நோக்கியே பயணம் செய்து கொண்டிருக்கிறோம் என்பதே. உண்மையில் கேள்வி இதுதான்— 'இந்தப் பிரபஞ்சம் என்பது என்ன? இதுஎதிலிருந்து தோன்றியுள்ளது? எதில் போய் முடிகிறது?' 'அது சுதந்திரத்திலிருந்து எழுகிறது, சுதந்திரத்தில் நிலைபெறுகிறது, சுதந்திரத்திலேயே மறையவும் செய்கிறது' என்பதுதான் பதில்.

சுதந்திரம் என்ற கருத்தை நாம் விடவே முடியாது. சுதந்திரம் பற்றிய கருத்தில்லாத நமது செயல்கள், ஏன், நமது வாழ்க்கையே பயனற்றதுதான். நாம் அடிமைகளே, சுதந்திரர்கள் அல்ல என்பதையே ஒவ்வொரு கணமும் இயற்கை நிரூபித்துக் கொண்டிருக்கிறது. அதன்கூடவே நாம் சுதந்திரர்கள் என்ற கருத்தும் தோன்றவே செய்கிறது. ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும்போதும், மாயை நம்மை அடித்து வீழ்த்தி, நாம் அதற்குக் கட்டுப்பட்டவர்கள் என்பதைக் காண்பிக்கிறது. அதே வேளையில், இந்த அடி, கட்டுப்பட்ட உணர்ச்சி இவற்றுடன் நாம் சுதந்திரர்களே என்ற உணர்ச்சியும் தோன்றுகிறது.

நமக்கு உள்ளே இருக்கும் ஏதோ ஒரு குரல், நாம் சுதந்திரர்கள் என்று சொல்கிறது. ஆனால் அந்தச் சுதந்திரத்தை உணர்வதற்கும் வெளிப்படுத்துவதற்கும் முயன்றாலோ கடக்க முடியாத கஷ்டங்கள் நம்மை எதிர்நோக்கி நிற்கின்றன. இந்த எதிர்ப்புகளை மீறி, உள்ளே இருக்கும் அந்தக் குரல், 'நான் சுதந்திரன், நான் சுதந்திரன்' என்று ஆணித்தரமாகச் சொல்லிக் கொண்டே இருக்கிறது.

உலகத்தின் பல்வேறு மதங்களையும் நாம் ஆராய்ந்தால், எல்லாவற்றிலும் சுதந்திரம் என்ற இந்தக் கருத்து இருப்பதைக் காணலாம். சுதந்திரக் கருத்தை உறுதிப்படுத்துவது மதங்கள் மட்டும் அல்ல. இந்த வார்த்தையை அதனுடைய குறுகிய நோக்கத்தில் பார்க்கக் கூடாது. சமுதாய வாழ்க்கை முழுவதுமே சுதந்திரம் என்ற இந்த ஒரு கருத்தையே உறுதிப்படுத்துகின்றன. எல்லா இயக்கங்களும் இந்தக் கருத்தை வற்புறுத்துபவைதாம். 'சுமைகளைத் தாங்குபவர்களே, துன்பப்படுபவர்களே, எல்லோரும் என்னிடம் வாருங்கள்' என்று அழைக்கும் அந்தக் குரலை, அறிந்தோ அறியாமலோ நாம் ஒவ்வொருவரும் கேட்டிருக்கிறோம். அந்தக் குரல் ஒருவேளை ஒரே மொழியாக

இருக்காது, ஒரே நடையாக இருக்காது. ஆனால் சுதந்திரத்தை உணர்த்தி நிற்கின்ற அந்தக் குரல் ஏதோ ஓர் உருவத்தில் நம்முள் ஒலித்துக்கொண்டே இருக்கிறது. ஆம், அந்தக் குரலின் அழைப்பைக் கேட்டுதான் நாம் இங்கே பிறந்திருக்கிறோம். நம்முடைய ஒவ்வோர் அசைவும் அதற்காகத்தான். நாம் அறிந்தோமோ அறியவில்லையோ நாம் எல்லோரும் அந்தக் குரலைப் பின்பற்றி, சுதந்திரத்தை நோக்கியே விரைந்து கொண்டிருக்கிறோம். கிராமக் குழந்தைகள் அனைவரும் புல்லாங்குழல் ஊதுபவனின் குழலிசையில் மயங்கி அவனைப் பின்தொடர்ந்து சென்றதுபோல்,[1] அந்தக் குரலின் இசையில் மயங்கி, நம்மை அறியாமலேயே நாம் அதைப் பின்பற்றிச் சென்று கொண்டிருக்கிறோம்.

அந்தக் குரலைத் தொடரும்போதுதான் நாம் அறநெறி நிற்பவர்களாக இருக்கிறோம். மனிதன் மட்டுமல்ல, மிகத் தாழ்ந்தது முதல் மிக உயர்ந்தது வரையிலுள்ள எல்லா உயிர்களும் இந்தக் குரலைக் கேட்டு, அதை நோக்கித்தான் வேகமாக ஓடிக் கொண்டிருக்கின்றன. இந்தப் போராட்டத்தில் அவை ஒன்றோடொன்று சேர்கின்றன; அல்லது ஒன்றையொன்று வழியிலிருந்து விலக்கித் தள்ளுகின்றன. போட்டி, இன்பங்கள், போராட்டங்கள், வாழ்வு, சாவு என்று பிரபஞ்சத்தில் நடைபெறும் எல்லாமே இந்தக் குரலை அடைவதற்காக நடக்கும் வெறிப் போராட்டமே. இப்படித்தான் இயற்கை தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது.

பிறகு என்ன? காட்சி மாறுகிறது. அந்தக் குரலை அறிந்து, அது என்னவென்று புரிந்துகொண்ட பிறகு, காட்சி அடியோடு மாறிவிடுகிறது. மாயையின் கொடூரமான போர்க்களமாக இருந்த அதே உலகம் நல்லதாக அழகியதாக மாறிவிடுகிறது. அதன்பின் இயற்கையை நாம் சபிப்பதில்லை; உலகம் கொடியது, எல்லாம் வீண் என்று சொல்வதில்லை. அதன்பின் நாம் அழுது கதற வேண்டிய அவசியம் இல்லை. அந்தக் குரலைப் புரிந்து கொண்டவுடன், இந்தப் போராட்டம், சண்டை, போட்டி, துன்பம், கொடுமை, அற்ப சந்தோஷங்கள், மகிழ்ச்சி இவையெல்லாம் இந்தப் பிரபஞ்சத்தில் ஏன் இருக்க வேண்டும் என்பதற்கானகாரணம் நமக்குத் தெரிந்துவிடுகிறது. பொருட்களின் இயல்பே அதுதான் என்பது நமக்குத் தெரிகிறது. அப்படி

1. Robert Browning எழுதிய 'The Pied Piper of Hamelin' என்ற கவிதை இங்கே குறிப்பிடப் படுகிறது.

இல்லாவிட்டால், நாம் அறிந்தும் சரி, அறியாமலும் சரி அடைந் தேயாக வேண்டிய இந்தக் குரலை நோக்கி நாம் போக முடியாது. மனித குலமும் இயற்கையும் அனைத்தும் சுதந்திரம் அடைவதற் காகத்தான் போராடுகின்றன. சூரியன் அந்த லட்சியத்தை நோக்கியே போய்க் கொண்டிருக்கிறது. பூமி அதற்காகவே சூரியனைச் சுற்றுகிறது, சந்திரன் அதற்காகவே பூமியைச் சுற்று கிறது. கோள்கள் சுற்றுவதும் காற்று வீசுவதும் அந்தக் குறிக் கோளை அடைவதற்காகத்தான். எல்லாமே அதை அடைவதற் காகத்தான் போராடிக் கொண்டிருக்கின்றன. மகான் அதை நோக்கித்தான் போய்க் கொண்டிருக்கிறார். அவரால் போகாம லிருக்க முடியாது. இதற்காக அவரை பெருமைப்படுத்த வேண் டியதில்லை. பாவியின் நிலையும் அதுதான். வள்ளலும் நேராக அந்தக் குரலை நோக்கித்தான் போகிறான். அவனைத் தடுக்க முடியாது. கருமியும் அதே பாதையில்தான் போகிறான். நன்மைக்காக எப்போதும் உழைப்பவனும் இந்தக் குரலையே தன்னுள் கேட்கிறான். அந்தக் குரலை நோக்கி அவன் போய்த் தானாக வேண்டும். போகாமலிருக்க முடியாது. சோம்பேறியாக இருப்பவனின் நிலையும் இதுவே. ஒருவன் மற்றவனைவிட அதிகமாகத் தடுக்கி விழுகிறான். அதிகமாகத் தடுக்கி விழு பவனைக் கெட்டவன் என்றும், குறைவாகத் தடுக்கி விழுபவனை நல்லவன் என்றும் நாம் அழைக்கிறோம். நன்மையும் தீமையும் இருவேறு பண்புகள் அல்ல; அவை ஒன்றேதான். வேறுபாடு, அளவில்தான் இருக்கிறதே தவிர தரத்தில் அல்ல.

சுதந்திரம் என்ற இந்தச் சக்தியின் வெளிப்பாடுதான் உண்மையிலேயே பிரபஞ்சத்தை ஆள்கிறது என்றால், நமது சிறப்புப் பிரிவான மத விஷயத்திலும் இந்தக் கருத்து உறுதியாகச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. முன்னோர் வழிபாடு, சக்தி வாய்ந்த கொடிய தேவதைகளின் வழிபாடு போன்றவற்றைக் கொண்ட மிகத் தாழ்ந்த மதங்களை எடுத்துக் கொள்வோம். இந்தத் தெய்வங்கள் அல்லது முன்னோர்களைப் பற்றிய முக்கிய மான கருத்து என்னவாக இருக்கிறது? அவர்கள் இயற்கையை விடச் சக்தி மிக்கவர்கள், இயற்கையின் விதிகளுக்குக் கட்டுப் படாதவர்கள் என்பதுதான். இதுபோன்ற வழிபாட்டில் ஈடு படுபவர்கள் இயற்கையைப்பற்றி மிகவும் எல்லைக்கு உட்பட்ட கருத்து உடையவர்களாக இருக்கிறார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. மனிதனால் சுவரைத் துளைத்துச் செல்லவோ வானத் தில் பறக்கவோ முடியாது. ஆனால் அந்தத் தெய்வங்களுக்கு

இந்தச் சக்தி உண்டு. தத்துவரீதியாக இதற்கு என்ன பொருள்? அதாவது சுதந்திரக் கருத்து இங்கே உறுதியாக இருக்கிறது. இங்கே மனிதனுக்குத் தெரிந்தவரையில் அவனது தெய்வங்கள், இயற்கையைவிடச் சக்தி வாய்ந்தவர்களாக இருக்கிறார்கள். இன்னும் உயர்ந்த தெய்வங்களை வழிபடுபவர்களின் நிலையும் இப்படியேதான்.

இயற்கையைப் பற்றிய கருத்து விரிவடைய விரிவடைய, இயற்கைக்கு மேலான ஆன்மாவைப் பற்றிய கருத்தும் விரிவடைகிறது. இது கடைசியில், ஒரேகடவுள் கருத்தில் (Monotheism) நிறைவடைகிறது. மாயை (இயற்கை) இருக்கிறது. அதை அடக்கி யாளும் ஒரு தெய்வமும் இருக்கிறார் என்பதே அந்தக் கருத்து.

இந்த ஒரேகடவுள்-கருத்து ஆரம்பிக்கும் இடத்தில்தான் வேதாந்தமும் ஆரம்பிக்கிறது. ஆனால் வேதாந்தத் தத்துவத்திற்கு இன்னும் அதிகமான விளக்கம் தேவைப்படுகிறது. மாயையின் வெளிப்பாடுகளுக்கெல்லாம் அப்பால், மாயையை ஆள்கின்ற, மாயையைச் சாராத ஒரு கடவுள் இருக்கிறார்; அவர் நம்மை யெல்லாம் தம்மிடம் கவர்ந்திழுக்கிறார்; நாம் எல்லோரும் அவரை நோக்கியே போய்க் கொண்டிருக்கிறோம் என்ற கருத்து மிகவும் சிறந்ததாகத்தான் இருக்கிறது. இந்தக் கருத்து, பகுத் தறிவுக்கு நேரடியாக முரண்பாடாக இல்லாவிட்டாலும், தெளி வற்று மங்கலாக இருக்கிறது என்று வேதாந்தம் கூறுகிறது. உங்களுடைய தோத்திரத்தில், 'இறைவா, நான் இன்னும் உனக்குப் பக்கத்தில்' என்று சொல்லியிருக்கிறது. வேதாந்தி களுக்கு இது உடன்பாடானதே. ஆனால் அவர்கள் ஒரேயொரு வார்த்தையை மட்டும் மாற்றி, 'இறைவா, நீ இன்னும் எனக்குப் பக்கத்தில்' என்று சொல்வார்கள்.

லட்சியம் மிகவும் தூரத்தில், இயற்கைக்கு அப்பால் இருந்து கொண்டு நம்மையெல்லாம் தன்னிடம் இழுத்துக் கொண்டி ருக்கிறது என்னும் கருத்தை இழிவாக்காமலும், சீர்குலைக்காம லும் மேலும்மேலும் நமக்கு அருகே கொண்டு வர வேண்டும். வானத்திலிருந்த கடவுள், இயற்கையில் இருக்கும் கடவுளா கிறார். இயற்கையில் இருக்கும் கடவுள், இயற்கையாகிறார். இயற்கையாகவே ஆன கடவுள், இந்த உடலாகிய கோயிலுக்குள் உறையும் கடவுளாகிறார். இந்தக் கோயிலுக்குள் உறையும் கடவுள் இறுதியில் கோயிலாகவே ஆகிறார்; ஆன்மாவாகவும் மனிதனாகவும் ஆகிவிடுகிறார். வேதாந்தத்தின் கடைசிவார்த்தை இதுதான். ரிஷிகள் பிரபஞ்சம் எங்கும் தேடிய கடவுள்

நம்முடைய இதயங்களிலேயே இருக்கிறார். நீங்கள் கேட்ட குரல் சரியானதுதான். ஆனால் அந்தக் குரல் வந்த திசையைத் தான் தவறாகப் புரிந்துகொண்டுவிட்டீர்கள் என்கிறது வேதாந்தம். நீங்கள் கண்ட சுதந்திர லட்சியம் சரியானதுதான். அது உங்களுக்கு வெளியே இருப்பதாக நினைத்ததுதான் நீங்கள் செய்த தவறு. அந்தக் குறிக்கோளை உங்களுக்கு நெருக்கமாக, மிகவும் நெருக்கமாகக் கொண்டு வாருங்கள். அப்போது அது என்றென்றும் உங்களுக்குள்ளேயே, உங்கள் ஆன்மாவின் ஆன்மாவாகத்தான் இருந்தது என்பதை உணர்வீர்கள்.

அந்தச் சுதந்திரம் உங்கள் சொந்த இயல்பு. மாயை ஒரு போதும் உங்களைக் கட்டவே இல்லை. இயற்கை உங்களை ஆள முடியாது. இயற்கை உங்கள் கழுத்தை நெரிப்பதாகக்கனவு கண்டு நீங்கள் ஒரு குழந்தையைப் போல் பயந்தீர்கள். உங்கள் குறிக்கோள் இந்தப் பயத்திலிருந்து விடுபடுவதுதான். இந்தக் குறிக்கோளை அறிவுபூர்வமாக மட்டுமல்லாமல், உண்மை யிலேயே பார்த்து, இந்த உலகத்தை உணர்வதைவிட நிச்சய மாக அதை நாம் உணர வேண்டும். அப்போதுதான் நாம் சுதந்திரர்கள் என்பதை உணர்வோம். அப்போது, அப்போது மட்டுமே எல்லா துன்பங்களும் மறையும். அப்போதுதான் இதயத்திலுள்ள குழப்பங்களெல்லாம் நீங்கி இதயம் அமைதி பெறும். எல்லா கோணல்களும் நேராக்கப்படும். பல்வேறு வெளிப்பாடுகள், இயற்கை போன்ற மன மயக்கங்கள் எல்லாம் மறையும். மாயை இப்போது இருப்பதைப்போல் ஒரு பயங்கரக் கனவாக இல்லாமல், அழகு மிகுந்ததாக மாறிவிடும். இந்தப் பூமி இப்போது உள்ளதைப்போல் சிறைச்சாலையாக இல்லா மல் விளையாட்டு மைதானமாக மாறிவிடும். அபாயங்கள், துன்பங்கள், கஷ்டங்கள் எல்லாம் தெய்வீகமாகித் தங்கள் உண்மை இயல்பை நமக்குக் காட்டும்; எல்லாவற்றிற்கும் பின்னால், எல்லாவற்றின் உள்ளும் புறமுமாக நிற்பது ஒரே உண்மைப் பரம்பொருள்தான் என்பதை அப்போதுதான் நாம் உணர்வோம். ❖

# 7. எங்கும் இறைவன்

27 அக்டோபர் 1896

நாம் எவ்வளவுதான் தடுத்தாலும் நமது வாழ்க்கையில் பெரும் பகுதி தீமை நிறைந்ததாகத்தான் இருக்கும். நடைமுறையில் இந்தத் தீமை ஏறக்குறைய எல்லையற்றதாக இருக்கிறது என்பதை நாம் பார்த்தோம். ஆதிகாலம் முதல் இதற்குப் பரிகாரம் காண்பதற்காகப் போராடிக் கொண்டிருக்கிறோம். ஆனால் அது என்னவோ அப்படியேதான் இருக்கிறது. அதிகமாகப் பரிகாரங்களைக் கண்டுபிடிக்கின்ற அளவிற்கு மேன்மேலும் நுட்பமான தீமைகள் நம்மைச் சூழ்கின்றன.

இந்தத் துன்பங்களிலிருந்து விடுதலை பெறுவதற்காகவே ஒவ்வொரு மதமும் ஒரு கடவுளைப் படைத்துள்ளது. இதையும் நாம் ஏற்கனவே கண்டோம். உலகம் எப்படித் தென்படுகிறதோ, அப்படியே அதை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று லௌகீக மக்கள் கூறுவதுபோல் செய்தால், தீமையைத் தவிர வேறு எதுவுமே உலகத்தில் இருக்காது என்று எல்லா மதங்களும் கூறுகின்றன.

இந்த உலகத்திற்கு அப்பால், ஏதோ ஒன்று இருக்கிறது என்று எல்லா மதங்களும் வற்புறுத்துகின்றன. ஐந்து புலன்களில் அடங்கும் வாழ்க்கையிலேயே, ஜடவுலக வாழ்க்கையிலேயே எல்லாம் முடிந்துவிடவில்லை. இது ஒரு பகுதி மட்டுமே, மேலோட்டமானது மட்டுமே. இதற்குப் பின்னால் எல்லாவற்றிற்கும் அப்பால், தீமையே இல்லாத எல்லையற்றது இருக்கிறது. சிலர் அதைக் கடவுள் என்றும் சிலர் அல்லா என்றும், சிலர் ஜெஹோவா என்றும், சிலர் யோவான் என்றும் பலவிதமாக வழங்குகிறார்கள். வேதாந்தி அதைப் பிரம்மம் என்று சொல்கிறான்.

மதங்களின் போதனைகளைப் பார்க்கும்போது முதலில் நமக்குத் தோன்றுவது, நாம் வாழ்க்கைக்கு முடிவுகட்டுவதே

---

இந்தச் சொற்பொழிவு, 'ஈசாவாஸ்ய உபநிடதம்'பற்றி சுவாமிஜி ஆற்றிய உரையாகும். அவர் மேற்கோள் காட்டுகின்ற சுலோகங்களின் எண்களை அடைப்புக்குறிக்குள் தந்துள்ளோம்.

மேல் என்பதுதான். வாழ்க்கையின் தீமைகளுக்கு எப்படிப் பரிகாரம் காண்பது என்ற கேள்விக்கு, வாழ்க்கையை முடித்து விடலாம் என்பதுதான் உடனே தோன்றும் பதிலாக இருக்கிறது. இது எனக்கு ஒரு பழைய கதையை நினைவூட்டுகிறது. ஒரு மனிதனின் தலையில் ஒரு கொசு உட்கார்ந்தது. கொசுவைக் கொல்ல விரும்பிய அவனுடைய நண்பன் ஒரு பலத்த அடி கொடுத்தான். கொடுத்த அடியில் கொசு, மனிதன் இரண்டு பேருமே காலி! தீமைக்குப் பரிகாரமும் இது போன்றதாகத்தான் தோன்றுகிறது. வாழ்க்கை தீமை நிறைந்தது, உலகம் தீமை நிறைந்தது. உலகைப்பற்றி அறிந்த அனுபவசாலிகள் யாரும் இதை மறுக்க முடியாது.

மதங்கள் இதற்குச் சொல்லும் பரிகாரம் என்ன? இந்த உலகம் பயனற்றது என்பதுதான். இந்த உலகிற்கு அப்பால் உண்மையான ஏதோ ஒன்று இருக்கிறது. இங்கேதான் பிரச்சினை ஆரம்பமாகிறது. மதங்கள் சொல்லும் பரிகாரம், எல்லாவற்றையும் அழிப்பதாகவே தோன்றுகிறது. அழிவு எப்படி ஒரு பரிகாரமாக இருக்க முடியும்? அப்படியானால் வேறு வழியே இல்லையா? மதங்கள் சொல்வதெல்லாம் சரிதான், ஆனால் அவற்றைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்கிறது வேதாந்தம். மதங்களின் கருத்து தெளிவாக இல்லாத தால் மக்கள் அவற்றைத் தவறாகப் புரிந்துகொள்ள நேர்கிறது.

அறிவு மற்றும் இதயத்தின் சங்கமம்தான் நமக்கு வேண்டும். இதயம் மிகவும் உன்னதமானதுதான். அதன் வழியாக வாழ்க்கை யின் சிறந்த அகத் தூண்டுதல்கள் பிறந்துள்ளன. கருணையே இல்லாமல் அறிவு மட்டுமே நிறைய இருப்பதைவிட, அறிவே சிறிதும் இல்லாமல் கருணை சிறிதேனும் இருப்பதையே நான் விரும்புகிறேன். நெஞ்சில் ஈரமுள்ளவனுக்குத்தான் வாழ்க்கையும் முன்னேற்றமும் எல்லாம் உரியவை. அறிவு மிகுந்த, ஆனால் நெஞ்சில் ஈரமே இல்லாதவனின் வாழ்வே வறண்டு போய் அவன் அழிகிறான். அதேவேளையில் இதயத்தின் போக்கிலேயே செல்பவன் பல கஷ்டங்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கும் என்பதும், அடிக்கடிச் சறுக்கி விழ நேரலாம் என்பதும் நமக்குத் தெரிகிறது. இதயமும் அறிவும் இணைந்த ஒரு நிலையே நமக்குத் தேவை. அறிவையும் கருணையையும் ஒன்றுக்கொன்று பணயம் வைக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை. எல்லையற்றுப் பரந்த இதயமும் உணர்ச்சியும் அதேவேளையில் எல்லையற்ற அறிவும் நமக்கு இருக்க வேண்டும்.

ஆசைக்கு ஓர் எல்லையிருக்கிறதா என்ன? உலகம் எல்லை யற்றது அல்லவா? எல்லையற்ற உணர்ச்சிப் பெருக்கிற்கு இங்கே இடம் இருக்கிறது. அதே அளவு பண்பாட்டிற்கும் அறிவிற்கும் இடம் இருக்கிறது. கருணையும் அறிவும் இணைந்து அளவில் லாமல் நம்மிடம் இருக்கட்டும். இரண்டும் இணையாகச் செயல்படட்டும்.

அனேகமாக எல்லா மதங்களும் இந்த உண்மையைப் புரிந்து கொண்டிருக்கின்றன. ஆனால் அவை எல்லாமே ஒரே விதமான தவறு செய்கின்றன. அதாவது கருணைக்கும் உணர்ச்சி களுக்கும்தான் அவை மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கின்றன. உலகம் தீமை நிறைந்தது, எனவே உலகத்தைத் துறந்து விடுங்கள் என்பது மிகச் சிறந்த போதனை, ஒரே போதனை— சந்தேகமில்லை. உலகத்தைத் துறந்துவிடுங்கள். உண்மையை அறிந்துகொள்ள வேண்டுமானால், உண்மையற்றதை விட வேண்டும் என்பதில் கருத்து வேற்றுமை இருக்க முடியாது. நன்மை வேண்டுமானால் நாம் எல்லோருமே தீமையை விட வேண்டும் என்பதிலும் வேறுபட்ட கருத்து இருக்க முடியாது. வாழ்க்கை வேண்டுமானால், மரணத்தை விடவேண்டும் என்பதிலும் கருத்து வேற்றுமை இருக்க முடியாது.

வாழ்க்கையைத் துறந்துவிடு என்ற கொள்கை இருக் கிறதே, அதன் பொருள் நமக்குத் தெரிந்த இந்தப் புலனின்ப வாழ்க்கையைத் துறந்துவிடுவது என்றால், நமக்கு என்ன மிஞ்சும்? இதைத் தவிர வேறு என்ன இருக்கிறது? வாழ்க்கை என்பதற்கு வேறு என்னதான் பொருள்? இதைத் துறந்தால் வேறு என்ன இருக்கிறது? வேதாந்தத்தின் இன்னும் ஆழ்ந்த தத்துவப் பகுதிக்கு வரும்போது, நாம் இதைப்பற்றி இன்னும் நன்றாகப் புரிந்துகொள்ள முடியும். வேதாந்தத்தில் மட்டுமே இந்தப் பிரச்சினைக்கு அறிவுபூர்வமான தீர்வு இருக்கிறது என்பதை மட்டுமே இப்போது நான் சொல்ல விரும்புகிறேன். வேதாந்தம் போதிக்க விரும்புவதை மட்டுமே நான் இங்கே உங்கள் முன் குறிப்பிட முடியும். அது என்னவென்றால் உலகத்தையே தெய்வீகமாக்கி விடுவதுதான்.

உண்மையில் வேதாந்தம் உலகத்தைத் தாழ்த்திப் பேச வில்லை. துறவு லட்சியம், வேதாந்தப் போதனைகளில் உள்ளது போல் வேறெங்கும் இவ்வளவு உயர்ந்த நிலையை அடைய வில்லை. ஆனால் வேதாந்தம் வறட்டு அழிவு போதனையைச் செய்யவில்லை. அது துறவு என்று கூறுவதன் உண்மைப்

பொருள், உலகை தெய்வீகமாக்குதல். அதை எப்படி நாம் உணர்கிறோமோ, அது எப்படி நமக்குத் தோற்றமளிக்கிறதோ அதை விட்டுவிட வேண்டும்; அது உண்மையில் எதுவோ அதை அறிய வேண்டும் என்பதுதான் அதன் பொருள். உலகைத் தெய்வீகமாக்குங்கள். அது கடவுளே. 'பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமே இறைவனால் சூழப்பட வேண்டும்'[1] என்று மிகவும் பழைய ஓர் உபநிடதத்தின் ஆரம்பத்தில் காண்கிறோம்.

அனைத்தையும் இறைவனால் மூட வேண்டும்; ஒருவகை போலியான இன்ப நோக்காகவோ இல்லை, துன்பங்களைக் கண்டும் காணாததுபோல் இருக்கும் பாசாங்காகவோ அல்ல. உண்மையிலேயே எல்லாவற்றிலும் இறைவனைக் காண்பதன் மூலம் இதைச் செய்ய வேண்டும். இவ்வாறு உலகத்தைத் துறக்க வேண்டும். உலகத்தைத் துறந்த பிறகு எஞ்சுவது என்ன? கடவுள் தான். இதன் பொருள் என்ன? நீ உன் மனைவியோடு வாழலாம்; அவளைக் கைவிட வேண்டும் என்பதல்ல. ஆனால் அவளிடம் கடவுளைக் காண வேண்டும். குழந்தைகளைத் துறந்து விடுங்கள். இதன் பொருள் என்ன? எல்லா நாடுகளிலும் சில மனித மிருகங்கள் செய்வதைப்போல் குழந்தைகளை வீட்டைவிட்டுத் துரத்திவிடுவதா? இல்லவே இல்லை. அது கொடுமை; அரக்கத் தனம். அது ஆன்மீக உணர்வு அல்ல. ஆனால் உங்கள் குழந்தை களில் இறைவனைக் காணுங்கள். எல்லாவற்றிலும் இப்படியே. வாழ்விலும் சாவிலும் இன்பத்திலும் துன்பத்திலும் எல்லா வற்றிலுமே இறைவன் சமமாக நிறைந்திருக்கிறார். உலகம் முழுவதும் இறைவன்தான் நிறைந்திருக்கிறார். கண்களைத் திறவுங்கள், அவரைப் பாருங்கள். வேதாந்தம் இதைத்தான் போதிக்கிறது.

நாம் நமது கற்பனையால், நமது அனுமானத்தால் உரு வாக்கிக் கொண்டிருக்கும் உலகத்தைத் துறந்துவிட வேண்டும். ஏனென்றால் இந்த அனுமானம் முழுமையற்ற அனுபவத்தை, ஆழமற்ற அறிவை நமது சொந்த பலவீனத்தை அடிப்படை யாகக் கொண்டது. இதைத் துறந்துவிடுங்கள். நாம் இதுவரை நினைத்துவந்த, எல்லோரும் உடும்புப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கின்ற உலகம் நம்முடைய கற்பனையில் தோன்றிய பொய்யான உலகம். அதை விட்டுவிடுங்கள். நன்றாகக் கண்களைத் திறந்து பாருங்கள். இப்படிப்பட்ட ஓர் உலகம்

1. ஈசாவாஸ்யமிதம் ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத்।

—ஈசாவாஸ்ய உபநிடதம், 1.

எப்போதுமே இருக்கவில்லை என்பதை உணர்ந்து கொள் ளுங்கள். அது ஒரு கனவு, மாயை. இருந்தது கடவுள் மட்டுமே. குழந்தையில், மனைவியில், கணவனில் எல்லாவற்றிலும் இருப்பவர் அவரே. நல்லவரில் இருப்பதும் அவரே, தீயவரில் இருப்பதும் அவரே. பாவத்தில் இருப்பதும் அவரே, பாவியாக இருப்பதும் அவரே. வாழ்விலும் அவரே இருக்கிறார். சாவிலும் அவரே இருக்கிறார்.

உண்மையிலேயே துணிச்சலான கருத்துதான். ஆனாலும் வேதாந்தம் இந்தக் கருத்தைத்தான் பிரச்சாரம் செய்ய, செயலில் காட்ட விரும்புகிறது, போதிக்க விரும்புகிறது. இது வெறும் ஆரம்பம் மட்டுமே. இவ்வாறு நாம் வாழ்க்கையின் அபாயங் களையும் தீமைகளையும் விலக்குகிறோம்.

எதற்கும் ஆசைப்படாதீர்கள். நம்மைத் துன்புறச் செய்வது எது? நமது துன்பங்கள் அனைத்திற்கும் காரணம் ஆசையே. நாம் ஒன்றை விரும்புகிறோம்; அதை அடைய முடியவில்லை. விளைவு? துன்பம். ஆசை இல்லாவிட்டால் துன்பமும் இல்லை. இங்கேயும் நான் சொல்வதைத் தவறாகப் புரிந்துகொள்வதற்கு வாய்ப்பிருக்கிறது. ஆகவே ஆசையைத் துறப்பது துன்பங்களி லிருந்து விடுதலை பெறுவது என்று நான் எதைக் குறிப்பிடு கிறேன் என்பதை இங்கே விளக்குவது அவசியம்.

சுவர்களுக்கு ஆசை கிடையாது, அவை துன்புறுவதும் இல்லை. உண்மைதான். ஆனால் அவை வளர்ச்சி அடைவதும் இல்லை. இந்த நாற்காலிக்கு ஆசைகள் இல்லை; அது துன்பம் அடைவதில்லை. ஆனால் அது ஒரு நாற்காலியாகத்தான் எப்போதும் இருக்கிறது. இன்பத்தில் ஒரு மகிமை இருக்கிறது; துன்பத்திலும் ஒரு மகிமை இருக்கிறது. ஏன், தீமையினால் பயன்கூட இருக்கிறது என்று நான் துணிந்து சொல்வேன். துன்பத்தால் நாம் பெறும் பாடம் நம் எல்லோருக்கும் தெரிந் ததே. நாம் செய்யாமல் இருந்திருக்கக் கூடாதா என்று பின்னால் நாம் வருத்தப்படும் பலநூறு காரியங்களைச் செய்து விடு கிறோம். ஆனால் அந்தக் காரியங்கள் நமக்கு எத்தனை உயர்ந்த பாடங்களைக் கற்பிக்கின்றன.

என்னைப் பொறுத்தவரையில், நான் சில நல்ல காரியங் களைச் செய்திருக்கிறேன் என்பதில் மகிழ்கிறேன். பல தீய காரியங்களைச் செய்திருக்கிறேன் என்பதிலும் மகிழ்கிறேன். சில காரியங்களைச் சரியாகச் செய்ததற்காக மகிழ்கிறேன். அதேவேளையில் பல தவறுகள் செய்ததற்காகவும் மகிழ்கிறேன்.

ஏனென்றால், என் தவறு ஒவ்வொன்றும் ஓர் உயர்ந்த பாடத்தை எனக்குக் கற்பித்திருக்கிறது. நான் இதுவரை செய்த செயல்கள், எனது எண்ணங்கள் அனைத்தின் பலனே இப்போதைய நான். எனது ஒவ்வொரு செயலும் ஒவ்வோர் எண்ணமும் அவற்றின் பலனைத் தந்திருக்கின்றன. இந்தப் பலன்கள் அனைத்தின் ஒட்டுமொத்தமே என் முன்னேற்றமாக அமைந்தது.

ஆசைகள் தவறானவை என்பது நம் எல்லோருக்கும் புரிகிறது. ஆனால் ஆசைகளைத் துறப்பது என்றால் என்ன? ஆசையில்லாவிட்டால் வாழ்க்கை எப்படி நடைபெறும்? ஆசையை அழித்துவிடு—துன்பத்தைத் தீர்ப்பதற்கு இதுதான் வழி என்பது மனிதனையே கொன்றுவிடுவதற்குச் சமமாகும். தீர்வு இதுதான்: உங்களுக்குச் சொத்து கூடாது என்பதல்ல, உங்கள் தேவைக்குரியவற்றை வைத்துக்கொள்ளக் கூடாது என்பதல்ல. ஏன், ஆடம்பரமானவற்றைக்கூட அனுபவிக்கக் கூடாது என்பது அல்ல. வேண்டியதை வைத்துக் கொள்ளுங்கள், அதற்கு மேலேயும் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் உண்மையை அறிந்து கொள்ளுங்கள், உணர்ந்து கொள்ளுங்கள். செல்வம் யாருக்கும் சொந்தமானது அல்ல. சொந்தக்காரர்கள், முதலாளிகள் என்ற கருத்தைக் கைவிட வேண்டும். நீங்களும் ஒன்றுமில்லை, நானும் ஒன்றுமில்லை, யாராயிருந்தாலும் வெறும் பூஜ்யமே. எல்லாம் இறைவனுக்கே சொந்தம். ஏனென்றால் முன்பு நாம் பார்த்த உபநிடதத்தின் ஆரம்ப மந்திரம் எல்லாவற்றிலும் இறைவனை வைக்கச் சொல்கிறது. நாம் அனுபவிக்கும் செல்வத்தில் இறைவன் இருக்கிறார். நம் மனத்தில் எழும் ஆசைகளில் அவர் இருக்கிறார். ஆசைகளைத் திருப்தி செய்வதற்காக நாம் வாங்கும் பொருட்களில் இருப்பதும் அவரே. நமது அழகான ஆடை அணிகளிலெல்லாம் இருப்பதும் அவரே. இப்படித்தான் நம் எண்ணம் இருக்க வேண்டும். இந்தக் கோணத்திலிருந்து உலகத்தைப் பார்க்க ஆரம்பித்தால், எல்லாமே வேறுவிதமாகத் தோன்றத் தொடங்கிவிடும். நமது ஒவ்வோர் அசைவிலும் ஒவ்வொரு பேச்சிலும் உருவத்திலும், ஏன், எல்லாவற்றிலுமே இறைவனை இணைத்துக் கொள்வோமானால் காட்சியே மாறிவிடும். உலகம் துன்பமும் துயரமும் நிறைந்த இடமாக இல்லாமல் சொர்க்கமாகத் தோன்ற ஆரம்பித்துவிடும்.

'பரமண்டலம், உனக்குள்தான் இருக்கிறது' என்று ஏசு கூறினார். அதையே வேதாந்தம் கூறுகிறது; ஒவ்வொரு மகான்களும் கூறியிருக்கிறார்கள். 'கண் இருப்பவர்கள் காணட்டும்;

காது இருப்பவர்கள் கேட்கட்டும்.' நாம் காலங்காலமாகத் தேடிக் கொண்டிருக்கும் உண்மை எப்போதும் நமக்குள்தான் இருக்கிறது, எப்போதும் நம்முள்தான் இருந்தது என்பதை வேதாந்தம் நிரூபிக்கிறது. அறியாமை காரணமாக நாம் அதை இழந்துவிட்டதாக நினைத்து, அழுது, கதறி, உலகமெங்கும் அலைந்து திரிந்து, இந்த உண்மையைக் கண்டுபிடிப்பதற்காகப் போராடிக் கொண்டிருந்தோம். ஆனால் அது எப்போதும் நம் இதயத்திலேயே இருந்திருக்கிறது. நம் இதயத்தில் மட்டுமே அந்த உண்மையை நாம் காண முடியும்.

உலகத்தைத் துறப்பது என்பதை, அதனுடைய பழைய வளர்ச்சியுறாத பொருளில் புரிந்துகொண்டால், அது இப்படித் தான் இருக்கும்: வேலை செய்யக் கூடாது; சோம்பேறிகளாக இருக்க வேண்டும்; எதையும் சிந்திக்காமல், எதையும் செய்யாமல், பிடித்துவைத்த களிமண்போல் இருக்க வேண்டும்; விதியின்மீது பாரத்தைப் போட்டுவிட வேண்டும். ஒவ்வொரு சூழ்நிலையிலும் அதன் கைதியாக இருக்க வேண்டும்; இயற்கையின் விதிகளால் இடத்திற்கு இடம் பந்தாடப்பட வேண்டும். இது தான் பொருள்.

உலகத்தைத் துறப்பது என்பதற்கு அது பொருளல்ல. நாம் வேலை செய்ய வேண்டும். பொய்யான ஆசைகளால் அலைக்கழிக்கப்படுகின்ற சாதாரண மனித குலத்திற்கு செயல் என்பது பற்றி என்ன தெரியும்? உணர்ச்சிகளாலும் புலன்களாலும் ஆட்டி வைக்கப்படுகின்ற மனிதனுக்குச் செயல் என்பதுபற்றி என்ன தெரியும்? சொந்த ஆசைகளால் தூண்டப்படாதவன் தான், சுயநலம் துளியும் இல்லாதவன்தான் செயல்புரிய முடியும். தனக்கென்று சுய நோக்கம் எதுவும் இல்லாதவன்தான் வேலை செய்ய முடியும். லாபம் கருதாதவன்தான் வேலை செய்ய முடியும்.

ஓவியத்தை ரசிப்பது யார்? விற்பவனா, பார்க்க வந்தவனா? விற்பவன், அந்தப் படத்தை விற்பதால் தனக்கு எவ்வளவு லாபம் கிடைக்கும் என்று கணக்கு வழக்குகளில் மூழ்கிக் கிடக்கிறான்; அதை ஏலத்திற்கு விடலாமா, விலை எப்படி ஏறுகிறது, எந்த இடத்தில் மூன்றாம் தரம் கூறினால் லாபம் அதிகமாகும் என்பதில் கவனமாக இருக்கிறான். அவனது மனம் முழுவதிலும் அந்த எண்ணமே நிறைந்திருக்கிறது. அந்தப் படத்தை வாங்கும் எண்ணமோ விற்கும் எண்ணமோ இல்லாமல் அங்கே போயிருக்கும் ஒருவன்தான் அந்தப் படத்தைப் பார்த்து ரசிக்க முடியும்.

அவனே அந்தப் படத்தை அனுபவிக்கிறான். அதைப் பார்த்து மகிழ்ச்சி அடைகிறான்.

இந்தப் பிரபஞ்சமே ஓர் ஓவியம். ஆசைகள் மறையும்போது மனிதன் உலகை அனுபவிக்கிறான். வாங்குவது, விற்பது, சொந்தம் கொண்டாடுவது போன்ற முட்டாள்தனமான கருத்துக்கள் எல்லாம் அப்போது மறைந்துவிடுகின்றன. கடன் கொடுப்பவன், வாங்குபவன், விற்பவன் எல்லோரும் மறைந்து, உலகம் மட்டுமே ஒரு சித்திரமாக ஓர் அழகிய ஓவியமாக எஞ்சி நிற்கிறது.

'கடவுள் ஒரு மகாகவிஞர்; புராதன கவிஞர். பிரபஞ்சம் தான் அவர் எழுதிய கவிதை; எதுகை மோனைகளுடன் எல்லையற்ற ஆனந்தத்தில் தோய்ந்து அவர் எழுதியிருக்கிறார்.' கடவுளைப்பற்றிய இதைவிட அழகிய கருத்தை நான் படித்த தில்லை.

ஆசைகளை ஒழித்தால்தான் இறைவனின் இந்த அழகிய பிரபஞ்சத்தை புரிந்துகொண்டு, அதில் நாம் ஆனந்தமாகத் திளைக்க முடியும். அப்போது எல்லாம் தெய்வீகமாகிவிடும். மூலைமுடுக்குகள் மற்றும் தீய, தூய்மையற்ற இடங்களும்கூட தெய்வீகமாகிவிடும். எல்லாமே அவற்றின் உண்மை இயல்பை வெளிப்படுத்தும். நமது அழுகையும் கதறலும் எல்லாமே குழந்தைத்தனமானவை. நாம் இவற்றிற்கெல்லாம் வெறும் சாட்சியாக மட்டுமே இருந்து வந்திருக்கிறோம் என்பதை அப் போது புரிந்துகொள்வோம், நம்மைப் பார்த்து நாமே சிரித்துக் கொள்வோம்.

ஆகவே உங்கள் வேலையைச் செய்யுங்கள் என்கிறது வேதாந்தம். எப்படி வேலை செய்வது என்பதை அது முதலில் போதிக்கிறது. எப்படி? துறப்பதன் மூலம், பொய்த் தோற்றமான இந்த உலகை விட்டுவிடுவதன் மூலம். இதன் பொருள் என்ன? எங்கும் இறைவனைக் காணல் என்பதுதான். அப்படித்தான் நாம் செயல்புரிய வேண்டும். நூறு வருடங்களாக வாழ ஆசைப் படலாம். விரும்பினால்எல்லா உலக ஆசைகளுக்கும் நம் மனத் தில் இடம் கொடுக்கலாம். ஆனால் எல்லாவற்றையும் தெய்வீக மாக்கிவிடுங்கள், சொர்க்கமாக்கிவிடுங்கள், அவ்வளவுதான். பிறருக்கு உதவி செய்துகொண்டு ஆனந்தமான நீண்ட வாழ்க்கை வாழ வேண்டுமென்று நாம் ஆசைப்படலாம். இவ்வாறு செயல் புரிந்தபடிதான் முக்திக்கான வழியைத் தேட முடியும். இதைத் தவிர வேறு வழியே இல்லை.

உண்மையை அறிந்துகொள்ளாமல், ஒருவன் உலக போகங்களில் முட்டாள்தனமாக மூழ்கினால் அவன் வழி தவறிவிட்டான், அவனால் லட்சியத்தை அடைய முடியாது. இனி, உலகைச் சபித்துக்கொண்டு அதை விட்டுவிட்டுக் காட்டிற்குப் போய், உடலை ஒடுக்கி, பட்டினியால் உடலை அணு அணுவாகக் கொன்று, நெஞ்சை ஈரமற்ற கல்லாக்கிக் கொண்டு, கடின சித்தமுள்ளவனாக ஆகின்றவனும் வழி தவறியவனே. இவை இரண்டும் இரண்டு துருவங்கள். இரண்டுமே தவறான நோக்குடையவை. இருவரும் வழி தவறியவர்களே. இருவருமே லட்சியத்தை அடைய முடியாது.

எனவே எல்லாவற்றிலும் இறைவனை இணைத்துச் செயல் புரியுங்கள் என்று வேதாந்தம் சொல்கிறது. வாழ்க்கையைத் தெய்வீகமாக்கி, தெய்வமாக ஆக்கி, இடைவிடாமல் வேலை செய்யுங்கள். நாம் செய்ய வேண்டியதும், கேட்டுப் பெற வேண்டியதும் இவ்வளவுதான் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். எங்கும் இறைவன் இருக்கிறார். அவரைத் தேடி நாம் எங்கே போவது? ஒவ்வொரு செயலிலும் ஒவ்வோர் எண்ணத்திலும் ஒவ்வோர் உணர்ச்சியிலும் அவர் ஏற்கனவே உள்ளார். இதை உணர்ந்து செயல்புரிய வேண்டும். அது ஒன்றுதான் வழி. வேறு வழியே இல்லை. அப்போதுதான் நமது கர்மபலன்கள் நம்மைக் கட்டுப்படுத்தாது.

போலி ஆசைகள்தான் நமது எல்லா தீமைகளுக்கும் துன்பங்களுக்கும் காரணம் என்பதைப் பார்த்தோம். அந்த ஆசைகளையே இறைவனின்மூலம் தெய்வீகமாக்குங்கள், தூய்மைப் படுத்துங்கள். அதன்பின் அவை துன்பத்தையோ தீமையையோ கொண்டு வராது. இந்த ரகசியத்தை அறியாதவர்களுக்கு, அதை அறிந்துகொள்ளும்வரை, உலக வாழ்க்கையே நரகமாகத்தான் இருக்கும். தங்களுக்கு உள்ளும், தங்களைச் சுற்றியும், எல்லா இடங்களிலும் எல்லையற்ற ஆனந்தச் சுரங்கம் இருக்கிறது என்பது பலருக்குத் தெரியாது. அவர்கள் இன்னும் அதைக் கண்டுபிடிக்கவில்லை. நரக வாழ்க்கை என்பது என்ன? அறியாமைதான் நரகம் என்கிறது வேதாந்தம்.

பெரிய ஆற்றின் கரையில் உட்கார்ந்துகொண்டு தாகத்தால் நாம் இறந்து கொண்டிருக்கிறோம். உணவுக் குவியல்களுக்கு அருகே அமர்ந்துகொண்டு பசியால் செத்துக் கொண்டிருக்கிறோம். இதோ ஆனந்தமயமான பிரபஞ்சம் உள்ளது, ஆனால் நாம் அதைக் காணவில்லை. நாம் எப்போதும் அதற்குள்தான்

இருக்கிறோம். ஆனால் எப்போதும் அதைத் தவறாகவே புரிந்து கொள்கிறோம். இந்த ஆனந்தமயமான பிரபஞ்சத்தை நமக்குக் காட்ட முயல்வதாகத்தான் எல்லா மதங்களும் கூறுகின்றன.

ஆனந்தமயமான இந்தப் பிரபஞ்சத்தைக் காண்பதற்கான ஏக்கம் எல்லோருடைய இதயத்திலும் இருக்கிறது. எல்லா நாடுகளும் இதைத்தான் தேடிக் கொண்டிருக்கின்றன. மதத்தின் ஒரே லட்சியம் இதுதான். இந்த லட்சியம், வெவ்வேறு மதங் களில், வெவ்வேறு விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சொல் கின்ற விதத்தில் காணப்படும் வேறுபாடுதான் நாம் காண்கின்ற இந்த வேறுபாடுகளையெல்லாம் உண்டாக்கியுள்ளது. ஒரு கருத்தை ஒரு மதம் ஒருவிதமாக வெளிப்படுத்துகிறது. மற் றொன்று சற்று வித்தியாசமாகச் சொல்லலாம். ஆனால் ஒவ் வொன்றும், ஒருவேளை, ஒரே விஷயத்தையே வெவ்வேறு மொழிகளில் வெளிப்படுத்துகின்றன.

இது விஷயமாக மேலும் கேள்விகள் எழுகின்றன. பேசுவது சுலபம். எங்கும் எதிலும் இறைவனையே பார்க்க வேண்டும், அப்போதுதான் உலகை உண்மையாக அனுபவிக்க முடியும் என்று என் இளமைப் பருவத்திலிருந்தே கேள்விப்பட்டு வரு கிறேன். ஆனால் உலகத்தில் புகுந்து, ஓரிரு அடிகள் பெற்றதும் இந்தக் கருத்து பறந்துவிடுகிறது. கடவுளே ஒவ்வொரு மனித னிலும் இருக்கிறார் என்று நினைத்துக்கொண்டே நான் தெரு வில் நடந்துபோய்க் கொண்டிருக்கிறேன். வாட்டசாட்டமான ஒருவன் என்னை இடித்துக் கீழே தள்ளிவிடுகிறான். என் ரத்தம் தலைக்கேற, முஷ்டியைத் தயாராக வைத்துக்கொண்டு, எல்லாம் இறைவன் என்ற கருத்தையே மறந்துவிட்டு, அவனை அடிப் பதற்காகக் கோப வெறியோடு எழுந்திருக்கிறேன். எல்லாமே மறந்துபோய்விடுகிறது. கடவுளைப் பார்ப்பதற்குப் பதில் சாத்தானைத்தான் நான் அப்போது பார்க்கிறேன்.

நாம் பிறந்தது முதற்கொண்டே, எல்லாவற்றிலும் கடவுளைப் பார்க்கும்படிதான் நமக்குப் போதிக்கிறார்கள். எங்கும் எதிலும் கடவுளையே பார்க்குமாறுதான் ஒவ்வொரு மதமும் போதிக்கிறது. புதிய ஏற்பாட்டில் ஏசுவின் போதனை உங்களுக்கு நினைவில்லையா? நம் எல்லோருக்குமே அந்தப் போதனையைத்தான் செய்து வந்திருக்கிறார்கள். ஆனால் நடைமுறை உலகிற்கு வரும்போதுதான் கஷ்டம் ஆரம்பிக்கிறது.

ஈசாப்பின் கதைகளில் ஒன்று உங்களுக்கு நினைவிருக் கலாம். ஏரியில் தன்னுடைய பிரதிபலிப்பைப் பார்த்துக்

கொண்டது ஒரு கலைமான். அதைத் தன் குட்டியிடம் காட்டி, 'நான் எவ்வளவு ஆற்றல் வாய்ந்தவன்! என்னுடைய அழகான தலையைப் பார். உரம்மிக்க வலுவான என் உடம்பைப் பார். அது மட்டுமா? என்னால் எவ்வளவு வேகமாக ஓட முடியும் தெரியுமா?' என்று பெருமையடித்துக் கொண்டிருந்தது. அப்போது சற்று தொலைவில் வேட்டை நாய்கள் குரைக்கும் சத்தம் கேட்டது. அவ்வளவுதான், எடுத்தது ஓட்டம். பல மைல் தூரம் ஓடிவிட்டு, மூச்சுத் திணறத் திரும்பி வந்தது. எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த குட்டி அதனிடம், 'நீ மிகவும் சக்தி வாய்ந்தவன் என்று இப்போதுதான் என்னிடம் சொன்னாய்! நாய் குரைக்கும் சத்தம் கேட்டதும் இப்படி ஓடிவிட்டாயே. அது எப்படி?' என்று கேட்டது. 'நீ சொல்வதெல்லாம் சரி, மகனே; ஆனால் நாய் குரைக்கும் சத்தம் கேட்டால் என் தைரியமெல்லாம் பறந்துவிடுகிறது' என்று பதிலளித்தது அந்தக் கலைமான். நம் நிலையும் அதுபோல்தான் இருக்கிறது.

நாம் மனித குலத்தைப்பற்றி உயர்வாக நினைக்கிறோம். நாம் மிகவும் பலமும் தைரியமும் வாய்ந்தவர்கள் என்று நினைக்கிறோம். பல அரிய தீர்மானங்களைச் செய்து கொள்கிறோம். ஆனால் துன்பம் மற்றும் ஆசைகளாகிய நாய்களின் குரைப்புச் சத்தம் கேட்கும்போது, கதையில் கண்ட மானைப் போலவே நடந்து கொள்கிறோம். நிலைமை இதுவானால், இந்தப் போதனைகளால் எல்லாம் என்ன பயன்? நிச்சயம் பெரும் பயன் இருக்கிறது. விடாமுயற்சி கடைசியில் வெற்றி தரும் என்பதே அது. ஒரே நாளில் எதையும் சாதிக்க முடியாது.

'ஆன்மாவைப்பற்றி முதலில் கேள்விப்பட வேண்டும். பிறகு அதைப்பற்றிச் சிந்திக்க வேண்டும். பிறகு அதைத் தியானம் செய்ய வேண்டும்.'[1]

தரையில் ஊர்ந்து செல்லும் புழு முதற்கொண்டு எல்லோருடைய கண்ணிற்கும் நீலவானம் தெரிகிறது. ஆனால் அது எவ்வளவோ தூரத்தில் இருக்கிறது! நாம் அடைய வேண்டிய லட்சியமும் அப்படித்தான். அது வெகுதூரத்தில் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனாலும் அதை நாம் அடைந்தே தீரவேண்டும். ஏன், மிகவும் உயர்ந்த லட்சியத்தையே நாம் கொள்ள வேண்டும். துரதிர்ஷ்டவசமாக, பெரும்பாலோர்

---

1. ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: ||

—பிருஹதாரண்ய உபநிடதம், 2. 4. 5. & 4. 5. 6

எந்தவொரு லட்சியமும் இல்லாமல் இருட்டு வாழ்க்கையில் தான் தடுமாறிக் கொண்டிருக்கிறார்கள். லட்சியம் உள்ளவன் ஆயிரம் தவறுகளைச் செய்வானானால், லட்சியம் இல்லாதவன் ஐம்பதாயிரம் தவறுகள் செய்வான் என்பது நிச்சயம். எனவே ஒரு லட்சியம் இருப்பது சிறந்தது. இந்த லட்சியம் நமது இதயத்தில் புகும்வரை, நமது மூளையில் புகும்வரை, நமது நாடி நரம்புகளில் புகும்வரை, நமது ரத்தத்தின் ஒவ்வொரு துளியுடனும் கலந்து துடிக்கும்வரை, நமது உடலின் அணுக்கள் தோறும் கலந்து ஊடுருவும்வரை நாம் அதைப்பற்றிக் கேட்க வேண்டும். அதையே சிந்திக்க வேண்டும். 'உள்ளம் நிறையும் போது வாய் பேசுகிறது'. அது மட்டுமல்ல; உள்ளத்தின் நிறைவுதான் கைகளை வேலை செய்யத் தூண்டுகிறது.

எண்ணமே நம்மிலுள்ள தூண்டும் சக்தி. மனத்தை உயர்ந்த எண்ணங்களினால் நிரப்புங்கள். நாட்கணக்காக அதைக் கேளுங்கள். மாதக்கணக்காகச் சிந்தியுங்கள். தோல்விகளைப் பொருட்படுத்தாதீர்கள். தோல்விகள் இயற்கையானவை. வாழ்க்கைக்கு அழகு சேர்ப்பவை அவை. தோல்விகள் இல்லாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா? போராட்டம் இல்லாத வாழ்க்கை வாழ்க்கையே அல்ல. அப்படிப்பட்ட வாழ்க்கையில் என்ன இனிமை இருக்கிறது! போராட்டங்களையும் தவறு களையும் பொருட்படுத்தாதீர்கள். ஒரு பசு பொய் சொல்வதை நான் கேட்டதில்லை, ஆனால் அது வெறும் பசுதான்; மனிதன் அல்ல! ஆகவே தோல்விகளை, சறுக்கல்களைப்பற்றிக் கவலைப் படாதீர்கள். ஆயிரம் தடவை லட்சியத்திலிருந்து வழுவ நேர்ந்தாலும் திரும்பத்திரும்ப அந்த லட்சியத்தைப் பிடித்துக் கொள்ளுங்கள். ஆயிரம் தடவை தவறினாலும் இன்னொரு முறை முயலுங்கள்.

எல்லாவற்றிலும் கடவுளைக் காண்பதுதான் மனிதனின் லட்சியம். எல்லாவற்றிலும் பார்க்க முடியாவிட்டால், நாம் மிகவும் நேசிக்கும் ஒன்றிலாவது பார்க்க வேண்டும். பிறகு இன்னொன்றில் பார்க்க வேண்டும். இப்படியே இந்தக் கருத்தை விரிவுபடுத்திக்கொள்ள வேண்டும். ஆன்மாவின் முன்னால் எல்லையற்ற வாழ்க்கை உள்ளது. எவ்வளவு காலம் வேண்டு மானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் லட்சியத்தை அடைவது உறுதி.

'ஒன்றேயான இறைவன் மனத்தைவிட வேகமாக இயங்கு பவர், மனத்தைவிட அதிவிரைவாகச் செயல்படக்கூடியவர்.

தேவர்களாலும் அடையப்பட முடியாதவர். சிந்தனைக்கு எட்டாதவர். அவர் இயங்குவதாலேயே எல்லாம் இயங்கு கின்றன. எல்லாமே அவருள்தான் இருக்கின்றன. அவர் இயங்கு கிறார், இயக்கம் அற்றவராகவும் இருக்கிறார்; பக்கத்திலும் இருக்கிறார், தூரத்திலும் இருக்கிறார்; எல்லாவற்றின் உள்ளேயும் இருக்கிறார். எல்லாவற்றையும் ஊடுருவியபடி புறத்திலும் அவரே இருக்கிறார். எல்லாவற்றிலும் அதே ஆன்மாவையும் ஆன்மாவில் எல்லாவற்றையும் காண்பவன் ஆன்மாவிலிருந்து ஒருபோதும் விலகுவதில்லை. உயிர்கள் அனைத்தையும் பிரபஞ்சம் முழுவதையும் ஆன்மாவில் காணும்போது, காணும்போது மட்டுமே மனிதன் ரகசியத்தை அடைந்தவனாகிறான். அதன்பின் அவனுக்குப் பொய்த் தோற்றம் இல்லை. பிரபஞ்சம் முழுவதிலும் ஒன்றைக் காண்பவனுக்குத் துன்பம் ஏது?'(4–7)

வாழ்வின் ஒருமை, அனைத்தின் ஒருமை—இது வேதாந் தத்தின் மற்றுமோர் உயர்ந்த கருத்தாகும். அறியாமைதான் எல்லா துன்பங்களுக்கும் காரணம் என்பதை வேதாந்தம் எப்படி விளக்குகிறது என்பதைப் பார்ப்போம். பன்மைக் கருத்துதான் இந்த அறியாமை. மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையில், நாட்டிற்கும் நாட்டிற்கும் இடையில், சந்திரனுக்கும் பூமிக்கும் இடையில், சந்திரனுக்கும் சூரியனுக்கும் இடையில் வேறு பாடு காண்பதுதான் இந்த அறியாமை. ஓர் அணுவிற்கும் மற் றோர் அணுவிற்கும் இடையில் வேறுபாட்டை ஏற்படுத்தும் இந்த உணர்ச்சிதான் எல்லா துன்பங்களுக்கும் மூலகாரண மாக இருக்கிறது. இந்த வேறுபாடுகள் இல்லை, அவை உண்மை யல்ல என்று வேதாந்தம் கூறுகிறது. பார்வைக்கு அப்படித் தெரிகிறது. அது வெறும் தோற்றமே. எல்லாவற்றின் அடிப் படையில் அந்த ஒருமை இருக்கவே செய்கிறது. மேல்மட்டத் திற்குக் கீழே சென்று பார்ப்போமானால் மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையில், இனங்களுக்கு இடையில், உயர்ந்தவனுக்கும் தாழ்ந்தவனுக்கும் இடையில், பணக்கார னுக்கும் ஏழைக்கும் இடையில், தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் இடையில், மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் இடையில் அந்த ஒருமை நிலவுவதைக் காணலாம். இன்னும் ஆழமாகப் போனால், எல்லாம் ஒரே பரம்பொருளின் வேறுபாடுகளே என்பது தெரியும். எல்லாம் ஒன்றே என்ற இந்த ஞானம் பெற்றவனுக்கு மனமயக்கம் இல்லை. எது அவனை மதிமயங்கச்

செய்ய முடியும்? அவன் எல்லாவற்றின் உண்மையையும் அறிகிறான், எல்லாவற்றின் ரகசியத்தையும் அறிகிறான், அதன்பின் அவனுக்கு ஏது துன்பம்? அவனுக்கு ஏது ஆசை? எல்லாவற்றின் உண்மை, எல்லாவற்றின் மையம், எல்லாவற்றின் ஒருமை இறைவனே, நிலையான சச்சிதானந்தப் பரம்பொருளே என்பதை அவன் ஆராய்ந்து உணர்ந்துவிட்டான். அங்கே நோய் இல்லை. மரணம் இல்லை. துன்பமோ துயரமோ இல்லை, அதிருப்தி இல்லை. அங்கே முழுமையான இரண்டற்ற நிலையும், முழுமையான ஆனந்தமும்தான் இருக்கின்றன. அவன் யாருக் காக வருந்த வேண்டும்? அந்த உண்மை நிலையில் மரணம் இல்லை, துன்பம் இல்லை. கவலைப்படுவதற்கோ, கலங்கு வதற்கோ அங்கே காரணம் இல்லை. தூயவனான, உருவமற்ற, உடலற்ற, மாசற்ற, எல்லாம் அறிந்த, மகோன்னதமான கவிஞனான, எதன் சார்புமில்லாமல் தானாகவே விளங்குகின்ற அந்த இறைவனே எல்லாவற்றையும் ஊடுருவியிருக்கிறார். யாருக்கு எந்தத் தகுதி உண்டோ அதை அவரே அவர்களுக்கு அளிக்கிறார்.(8)

அஞ்ஞானத்திலிருந்து தோன்றிய இந்த அஞ்ஞான உலகை எல்லாமாக நினைத்துக்கொண்டு, அதிலேயே மூழ் கியிருப்பவர்கள் இருளில் தடுமாறுபவர்கள். இனி, இந்த உலக வாழ்க்கையைத்தவிர வேறு உயர்ந்த வாழ்க்கையைப்பற்றி நினைக்காதவர்களோ அதைவிடக் காரிருளில் தட்டுத்தடுமாறி கொண்டிருக்கிறார்கள்.(9–12)

இயற்கையின் ரகசியத்தை அறியும்போது, மனிதன் இயற்கையின் உதவியாலேயே இயற்கைக்கு அப்பாற்பட்ட பரம்பொருளை உணர்கிறான். அவன் மரணத்தை வெல்கிறான். இயற்கையைக் கடந்த அந்தப் பொருளின் உதவியால் அவன் எல்லையற்ற ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

‘ஓ சூரியதேவனே, உனது தங்கத் தகட்டால், நீ உண்மையை மறைத்துக் கொண்டிருக்கிறாய்; உன்னுள்ளிருக்கும் உண்மையை நான் காண்பதற்காக நீ அந்தத் தகட்டை விலக்குவாயாக! உன்னுள்ளிருக்கும் உண்மையை இப்போது நான் உணர்ந்து கொண்டேன்; உனது கிரணங்களின் உண்மையான பொரு ளையும் மகிமையையும் உணர்ந்து கொண்டேன். உனக்குள் பிரகாசிப்பது எது என்பதையும் கண்டு கொண்டேன்; உன்னுள் ளிருக்கும் உண்மையை நான் காண்கிறேன்; உன்னுள் இருப்பதே என்னுள்ளும் இருக்கிறது; நானே அது.’(15–16)

# 8. ஆன்ம அனுபூதி

29 அக்டோபர் 1896

உபநிடதங்களுள் மிகவும் எளிமையானதும், மிகவும் கவிதை நயம் செறிந்ததாகவும் நான் கருதுகின்ற கடோபநிடதத்திலிருந்து ஒரு பகுதியைப் படித்துக் காட்டுகிறேன். சர் எட்வின் ஆர்னால்ட் கடோபநிடதத்தை, 'மரணத்தின் ரகசியம்' (Secret of Death) என்ற பெயரில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். அதை உங்களுள் சிலர் படித்திருக்கலாம்.

உலகம் முதலில் எப்படித் தோன்றியது என்று ஆரம்பித்து, பிரபஞ்சத்தின் படைப்புவரை சென்ற ஆராய்ச்சி, புற நோக்கில் திருப்திகரமான பதில் கிடைக்காததால், எவ்வாறு அகமுகமாகத் திரும்பியது என்பதைப்பற்றி முந்தைய சொற்பொழிவில் பார்த்தோம். கட உபநிடதம் மனஇயல் ரீதியாக இந்தப் பிரச்சினையை அணுகி, மனிதனின் அக இயற்கையைப்பற்றி அறிய முயல்கிறது.

புறவுலகை யார் படைத்தது, அது எப்படி உருவாகியது, என்பதே முதலில் கேள்வியாக இருந்தது. பிறகு கேள்வி வேறாக மாறியது: மனிதனை வாழவும் இயங்கவும் வைப்பது எது? அவன் இறக்கும்போது அது என்ன ஆகிறது? என்பதே அந்தக் கேள்வி.

முதலில் தோன்றிய தத்துவ மேதைகள் பௌதீக மூலக் கூறுகளை ஆராய்ந்து அதன்மூலமாக அதன் இறுதி உண்மையைக் கண்டுபிடிக்க முயன்றார்கள். கடைசியில், இந்தப் பிரபஞ்சத்தை ஆள்கின்ற பெரும் சக்திகொண்ட ஆட்சியாளர் ஒருவர் இருக்கிறார் என்ற எல்லைவரையே அவர்களால் செல்ல முடிந்தது. அந்த ஆட்சியாளர் மிகப் பேராற்றல் படைத்த ஒரு மனிதன் மட்டுமே என்ற ரீதியில்தான் அவர்களின் முடிவு

---

இந்தச் சொற்பொழிவும், இதற்கு அடுத்ததும் 'கடோபநிடதம்'பற்றி சுவாமிஜி ஆற்றிய உரைகள். அவர் மேற்கோள் காட்டுகின்ற சுலோகங்களின் எண்களை அடைப்புக்குறிக்குள் தந்துள்ளோம்.

இருந்தது. ஆனால் அது முழு உண்மையாக இருக்க முடியாது, மிஞ்சிப் போனால் அதில் ஓரளவு உண்மை இருக்கிறது எனலாம். இந்தப் பிரபஞ்சத்தை நாம் மனித நிலையிலேயே பார்க்கிறோம். எனவே நம் கடவுளும் நமக்கு மனித உருவாகத் தோன்றுகிறார்.

ஒரு பசு தத்துவம் பேசுவதாகவும் அதற்கு மத உணர்வு இருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அதன் பிரபஞ்சம் பசுப் பிரபஞ்சமாகவும், பிரச்சினைக்கு உரிய தீர்வு பசு சம்பந்த மான தீர்வாகவுமே இருக்கும். நாம் காண்கின்ற கடவுளை அத னால் காண முடியாது. பூனைகள் தத்துவ ஞானிகளானாலும் இது போல்தான் ஆகும்; அதாவது, பூனைப் பிரபஞ்சம், பூனைத் தீர்வு, பூனைக் கடவுள்! ஆகவே பிரபஞ்சத்தைப் பற்றிய நம் முடைய விளக்கம், முழு உண்மையாக இருக்க முடியாது என்பது தெரிகிறது. அது மட்டுமல்ல. நம் கருத்து பிரபஞ்சம் முழுவதையும் தழுவியதாகவும் இல்லை. பிரபஞ்சம் முழுவதை யும் தழுவாத கருத்து சுயநலக் கருத்தே ஆகும். அத்தகைய சுயநலக் கருத்தை ஏற்றுக்கொள்வது மாபெரும் தவறு.

பிரபஞ்சத்தைப்பற்றி புறத்திலிருந்து நமக்குக் கிடைக்கும் கருத்தில் குறைபாடு உள்ளது. முதலாவது, நாம் பார்க்கும் பிர பஞ்சம் நமது பிரபஞ்சம்; உண்மையைப் பற்றிய நமது நோக்கு அது. ஆனால் உண்மையைப் புலன்களின் மூலம் நாம் அறிய முடியாது; புரிந்துகொள்ள முடியாது. ஐம்புலன்களைக் கொண்ட உயிர்களின் நோக்கில்தான் நாம் பிரபஞ்சத்தை அறிகிறோம். நமக்கு இன்னுமொரு புலன் கிடைக்குமானால், நம்மைப் பொறுத்தவரை பிரபஞ்சமே மாறிவிடும். நமக்குக் காந்தசக்திப் புலன் இருப்பதாக வைத்துக் கொள்வோம். நம் புலன்களால் இப்போது உணர முடியாத கோடிக்கணக்கான சக்திகளை அப்போது நாம் ஒருவேளை உணரக்கூடும். நமது புலன்கள் எல்லைக்கு உட்பட்டவை; மிகவும் குறுகிய எல்லைக்கு உட்பட்டவை. இந்த எல்லைகளுக்குள்தான் நாம் பிரபஞ்சம் என்று சொல்வது இருக்கிறது. அந்தப் பிரபஞ்சப் பிரச்சினைக்கு, நம்முடைய சிற்றறிவுக்கு எட்டிய கடவுள்கருத்துதான் சமாதான மாக இருக்கிறது. ஆனால் முழுப் பிரச்சினைக்கும் அது தீர் வாகாது.

மனிதன் அந்த நிலையிலேயே நின்றுவிட முடியாது. அவன் ஒரு சிந்தனை ஜீவி. எல்லா பிரபஞ்சங்களையும் முற்றி லுமாக விளக்குவதான ஒரு தீர்வையே அவன் விரும்புகிறான்.

மனிதர்கள், கடவுள், மற்றுமுள்ள உயிர்கள் எல்லாவற்றையும் உள்ளடக்கிய ஓர் உலகத்தைக் காணவும், எல்லா நிகழ்ச்சிகளையும் விளக்குகின்ற ஒரு தீர்வைப் பெறவும்தான் அவன் விரும்புகிறான்.

முதலில் வேண்டுவது, எல்லா பிரபஞ்சங்களையும் உள்ளடக்கிய ஒரு பிரபஞ்சத்தைக் கண்டடைவதே. அதைப் புலன்களால் உணர முடிந்தாலும் இல்லையென்றாலும், இருப்பின் இந்த எல்லா நிலைகளின் (Various Planes of Existence) ஊடேயும் ஊடுருவிச் செல்வதான, தன்னளவில் தனிப்பொருளான ஒன்றை நாம் கண்டுபிடிக்க வேண்டும். கீழுலகம் மற்றும் மேலுலகங்கள் அனைத்திற்கும் பொதுவான ஒன்றை நாம் கண்டுபிடித்துவிட்டால் நமது பிரச்சினை தீர்ந்துவிடும். எல்லா இருப்புக்கும் அடிப்படை ஒன்று உண்டு என்பதை வெறும் தர்க்கரீதியாக நாம் புரிந்துகொள்ள முடிந்தாலும்கூட இந்தப் பிரச்சினைக்கான தீர்வை ஓரளவு நெருங்கிவிடுவோம். ஆனால் இந்தத் தீர்வு, நாம் காண்கின்ற, அறிகின்ற இந்த உலகின் வழியாகவே மட்டும் கிடைக்க முடியாது. ஏனெனில் நாம் காணும் உலகம் எல்லைக்கு உட்பட்டதே அல்லவா!

இன்னும் ஆழ்ந்து சிந்திப்பதன் மூலமே, நாம் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும். மையத்திலிருந்து எவ்வளவு தூரம் விலகி இருக்கிறோமோ, அவ்வளவு அதிகமாக வேறுபாடுகளும் மாறுபாடுகளும் தோன்றுகின்றன என்பதையும், மையத்தை நெருங்கநெருங்க ஒருமையை நெருங்குவதையும் ஆரம்பகாலச் சிந்தனையாளர்கள் கண்டுபிடித்தார்கள். ஒரு வட்டத்தின் மையத்தை நெருங்கநெருங்க, ஆரங்கள் ஒன்றுசேரும் இடமும் நெருங்குகிறது. மையத்திலிருந்து விலகவிலக, ஆரங்களின் இடைவெளியும் அதிகரித்துக் கொண்டே போகிறது. புறவுலகம் மையத்திலிருந்து வெகுதூரத்தில் இருப்பதால், எல்லா நிகழ்ச்சிகளும் ஒன்றுசேர்வதற்கான ஒரு பொது இடம் அதில் இல்லை. மிஞ்சிப்போனால் புறவுலகம் என்பது நிகழ்ச்சிகளில் ஒரு பகுதி என்று மட்டும்தான் சொல்ல முடியும். இருப்பின் பல்வேறு நிலைகளான மன உலகம், அற உலகம், அறிவு உலகம் என்று வேறு பகுதிகளும் இருக்கின்றன. இவற்றுள் ஒன்றை மட்டும் ஆராய்ந்து, பிரச்சினைக்கு முழுத் தீர்வையும் காண முயல்வது என்பது முடியாத காரியம்.

எனவே வாழ்க்கையின் எல்லா நிலைகளும் எந்த மையத்திலிருந்து கிளம்புகின்றனவோ, அந்த மையத்தில் நின்றுகொண்டு,

பிரச்சினைக்குத் தீர்வு காண முயல வேண்டும். அது தான் சரி. அந்த மையம் எங்கே இருக்கிறது? அது நம்முள்தான் இருக்கிறது. பழங்கால ரிஷிகள் ஆழமாக, இன்னும் ஆழமாக ஆராய்ந்து, கடைசியில், மனித ஆன்மாவின் மையம்தான் பிரபஞ்சத்தின் மையமும் ஆகும் என்று கண்டறிந்தனர். எல்லா நிலைகளும் மனித ஆன்மா என்ற அந்த ஒரு மையத்தை நோக்கியே சென்று கொண்டிருக்கின்றன. அதுதான் பொது இடம், அங்கே நின்றுகொண்டுதான் பொதுவான தீர்வை நாம் காண முடியும்.

ஆகவே இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தது யார் என்ற கேள்வி, தத்துவரீதியாகப் பொருளற்றது. அந்தக் கேள்விக்குக் கிடைக்கும் பதிலும் பயனற்றதாகவே இருக்கிறது.

இந்தப் பிரச்சினையைக் கடோபநிடதம் உருவகத்தின் மூலம் விளக்கியிருக்கிறது. பழங்காலத்தில் ஒரு பெரிய பணக்காரன் இருந்தான். அவன் ஒரு யாகம் செய்தான். அந்த யாகத்தில் அவன் தனது உடைமைகளையெல்லாம் தானம் செய்ய வேண்டியிருந்தது. அவன் மனப்பூர்வமாக இந்த யாகத்தைச் செய்யவில்லை. புகழையும் பெருமையையும் அடைவதற்காக மட்டுமே செய்தான். அதனால் தனக்குப் பயனில்லாதவற்றை அவன் தானம் செய்தான்; அதாவது, குருடான, நொண்டியான, மலடான, வயதான பசுக்களையே தானமாகக் கொடுத்தான்.

அந்தப் பணக்காரனுக்கு நசிகேதன் என்றொரு மகன் இருந்தான். தன்னுடைய தந்தை நியாயமற்றதைச் செய்வதையும், தாம் எடுத்துக்கொண்ட விரதத்தை மீறுவதையும் அவன் கண்டான். ஆனால் தந்தையிடம் என்ன பேசுவது என்று அவனுக்குத் தெரியவில்லை. இந்தியாவில், குழந்தைகளுக்கு அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். ஆகவே நசிகேதன் மிகுந்த மரியாதையுடனும் பணிவுடனும் தந்தையை அணுகி, ‘அப்பா, உங்கள் யாகத்தில் நீங்கள் எல்லாவற்றையுமே தானமாகக் கொடுக்க வேண்டியிருக்கிறது. என்னை யாருக்குத் தானமாகக் கொடுக்கப் போகிறீர்கள்?’(1. 1. 4) என்று கேட்டான்.

இந்தக் கேள்வியால் மிகவும் வெறுப்படைந்த தந்தை, ‘மகனே, நீ என்ன சொல்கிறாய்? தந்தை, மகனைத் தானமாகக் கொடுப்பதா?’ என்று கேட்டான். நசிகேதன் விடாமல் மேலும் இரண்டு முறை அதே கேள்வியைத் திரும்பத்திரும்பக்

கேட்டான். அதனால் கோபமடைந்த தந்தை, 'உன்னை நான் எமனுக்குக் கொடுக்கிறேன்' என்று பதிலளித்தான். நசிகேதன் மரண தேவனான எமனிடம் போனான் என்று கடோபநிடதத்தில் கதை தொடர்கிறது.

முதலில் மரணமடைந்த மனிதனே எமன் ஆனான். அவன் சொர்க்கத்திற்குச் சென்று, பித்ருக்களுக்கு அதிபதியானான். நல்லவர்கள் இறந்தபின் எமனிடம் சென்று அவனுடன் நீண்ட காலம் வாழ்கிறார்கள். எமன் என்ற பெயருக்குத் தகுந்தாற் போல்[1] அவன் மிகவும் தூய்மை, புனிதம், ஒழுக்கம் எல்லாம் நிறைந்த நல்லவன்.

நசிகேதன் எமனுலகம் சென்றான். தேவர்களும் சிலவேளைகளில் வெளியே போவதுண்டு. எனவே நசிகேதன் மூன்று நாட்கள் காத்திருக்க நேர்ந்தது. மூன்று நாட்களுக்குப் பின் எமன் திரும்பி வந்தான். நசிகேதன் காத்திருப்பதைக் கண்ட அவன், 'அறிவில் சிறந்த, மதிப்பிற்குரிய விருந்தாளியான நீ உணவொன்றும் இல்லாமல் மூன்று நாட்களாக இங்கே காத்துக் கொண்டிருக்கிறாயே! ஓ பிராமணனே! உனக்கு என் நமஸ்காரங்கள்; எனக்கு நன்மை உண்டாகட்டும். நீ வந்த சமயம் நான் இங்கே இல்லாததற்கு மிகவும் வருந்துகிறேன். அதற்குப் பரிகாரம் செய்துவிடுகிறேன். ஒரு நாளைக்கு ஒரு வரமாக மூன்று நாட்களுக்கு மூன்று வரங்கள் உனக்குத் தருகிறேன்; கேள்'(1. 1. 9) என்று அன்போடு நசிகேதனிடம் கூறினான். நசிகேதனும், 'என் தந்தைக்கு என் மீதுள்ள கோபம் மறைய வேண்டும்; நீங்கள் என்னை இங்கிருந்து போக அனுமதித்தவுடன் அவர் என்னை அன்புடன் வரவேற்க வேண்டும்; இதுவே என் முதல் வரம்'(1. 1. 10) என்று கேட்டான். எமன் இந்த வரத்தை முழுவதும் அளித்தான்.

மனிதர்களைச் சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும் ஒரு யாகத்தைப்பற்றி அறிய வேண்டும் என்பதே நசிகேதனின் இரண்டாவது வரமாக இருந்தது. வேதங்களின் சம்ஹிதைப் பகுதியில் காணப்படும் மிகப் பழைய கருத்து சொர்க்கத்தைப் பற்றியதே என்பதைக் கண்டோம். அந்தச் சொர்க்கத்தில் உள்ளவர்கள் ஒளிபொருந்திய உடலுடன் பித்ருக்களோடு வாழ்வதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. காலப்போக்கில் இன்னும் பல்வேறு கருத்துக்கள் வந்தன. அவையும் திருப்தி அளிப்பனவாக இல்லை.

---

1. எமன் என்பது வடமொழியில் யம: என்று எழுதப்படுகிறது. இந்தச் சொல் நற்பண்புகளுக்கு உறைவிடம் என்று பொருள்படுகிறது.

இன்னும் உயர்ந்த ஏதோ ஒன்று தேவையாக இருந்தது. சொர்க்க வாழ்க்கை இந்த உலக வாழ்க்கையிலிருந்து அதிகம் வேறுபட்டதாக இருக்காது. மிஞ்சிப்போனால், சொர்க்க வாழ்க்கை என்பது ஆரோக்கியமான செல்வந்தன் ஒருவனுடைய வாழ்க்கையைப் போல்தான் இருக்கும். அங்கே அளவற்ற புலனின்பங்களும் நோய் அறியாத திடமான உடலும் எல்லோருக்கும் கிடைக்கும், அவ்வளவுதான். அது நமது இந்த உலகம் போலவேதான் இருக்கும்; இன்னும் கொஞ்சம் நேர்த்தியானதாக இருக்கும். ஜடமான புற உலகம் பிரச்சினையைத் தீர்க்காது என்பது நாம் அறிந்த விஷயம். ஆகவே எந்தச் சொர்க்கத்தாலும் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியாது. ஜடப்பொருள் என்பது இயற்கையின் மிகமிகச் சிறிய ஒரு பகுதியே என்பதை நாம் எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும். ஆகவே இந்த உலகத்தால் தீர்க்க முடியாத பிரச்சினையை, இந்த உலகத்தைப் போல் பன்மடங்கு உலகங்களாலும் தீர்க்க முடியாது. நமக்குத் தெரிந்த இயற்கையின் மிக அதிகமான பகுதி ஜடப்பொருள் அல்ல.

உதாரணமாக, புற உலகின் ஜடப்பொருட்களோடு ஒப்பிட்டால், நம் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் நம்முடைய எண்ணங்களும் உணர்ச்சிகளும் அல்லவா பெரும் பங்கு வகிக்கின்றன! இப்படித் தீவிரமாகச் செயல்படும் இந்த உள்ளுலகம் எவ்வளவு பிரம்மாண்டமானது! இதனுடன் ஒப்பிடும்போது புலனுலகம் மிகவும் சிறியது! தொடு உணர்ச்சி, சுவை, காட்சி என்று புலனின்பமே எல்லாம் என்று சாதிப்பதுதான் இந்தச் சொர்க்கக் கருத்தின் தவறு. ஆகவே சொர்க்கத்தைப் பற்றிய இந்தக் கருத்து எல்லோருக்கும் முழுத் திருப்தியை அளிக்கவில்லை. உண்மை இப்படி இருந்தாலும், மனிதர்களைச் சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும் ஒரு யாகத்தைப்பற்றித் தெரிந்து கொள்வதையே நசிகேதன் இரண்டாவது வரமாகக் கேட்டான். இப்படிப்பட்ட யாகங்கள் தேவர்களைத் திருப்திப்படுத்தி, இவற்றைச் செய்யும் மனிதர்களைச் சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும் என்ற கருத்து வேதங்களில் இருந்தது.

எல்லா மதங்களையும் ஆராய்ந்து பார்த்தால், பழமையானது என்றால் அது புனிதமானது என்ற கருத்து அவை எல்லாவற்றுள்ளும் பரவி நிற்பதைக் காணலாம். உதாரணமாக, இந்தியாவில் எங்கள் முன்னோர்கள் எழுதுவதற்குப் பூர்ஜ மரத்தின் மெல்லிய பட்டைகளைப் பயன்படுத்தி வந்தார்கள்.

காலப்போக்கில் காகிதம் செய்யக் கற்றுக்கொண்டார்கள். ஆனால் இன்னும் பூர்ஜ பட்டைகள் புனிதமாகவே கருதப்பட்டு வருகின்றன. பழங்காலத்தில் சமைக்க உபயோகித்த பாத்திரங்கள் பல மாறுதல்களை அடைந்தபோது, பழைய பாத்திரங்கள் புனிதமானவை ஆகிவிட்டன. இந்தியாவைத் தவிர வேறு எந்த நாட்டிலும் இந்த எண்ணம் இவ்வளவு இல்லை. உலர்ந்த மரக் குச்சிகளை ஒன்றோடொன்று உரசித் தேய்த்து நெருப்பை உண்டாக்கும் பழக்கம் பல்லாயிரம் வருடங்களுக்கும் முற்பட்டது. இருந்தாலும், யாகங்கள் செய்வதற்குத் தீ உண்டாக்க இன்றும் இந்த முறையைத் தவிர வேறு முறைகளைப் பயன் படுத்துவதே இல்லை.

ஆசிய ஆரியரின் மற்றொரு கிளையினரும் இப்படிப்பட்ட எண்ணங்களைக் கொண்டவர்களாகவே இன்றும் இருக் கிறார்கள். ஆசிய ஆரியர்கள் மின்னலில் இருந்து நெருப்பை உண்டாக்குவதைப் பழக்கமாகக் கொண்டிருந்தார்கள். இந்தப் பழக்கத்தைக் காட்டுவதற்காக, இவர்களுடைய தற்காலச் சந்ததி யினர் இன்னும் இதே முறையில் நெருப்பு உண்டாக்குவதையே விரும்புகின்றனர். பல புதுப் பழக்கங்களை அவர்கள் கற்றுக் கொண்டாலும், பழைய பழக்கங்களை அப்படியே வைத்திருக் கிறார்கள், அவை புனிதமாகி விடுகின்றன. ஹீப்ருக்களின் விஷயமும் இப்படியே. அவர்கள் பாடம்செய்யப் பெற்ற மிருகத் தோலில் எழுதிக் கொண்டிருந்தார்கள். இப்போது காகிதத்தில் எழுதுகிறார்கள். ஆனாலும் மிருகத் தோலை மிகவும் புனிதமாக நினைக்கிறார்கள். எல்லா நாடுகளுமே இப்படித்தான்.

இப்போது நாம் புனிதமாக நினைக்கும் ஒவ்வொரு சடங் கும் வெறும் பழைய பழக்கம்தான். வேத யாகங்களும் இந்த வகையைச் சேர்ந்தவையே. காலப்போக்கில் புதிய வாழ்க்கை முறைகளைக் கண்டுபிடித்ததால் கருத்துக்களில் மிகவும் முன் னேற்றம் ஏற்பட்டது. ஆனாலும் பழைய பழக்கங்கள் போக வில்லை. அவ்வப்போது மக்கள் அவற்றைச் செய்து வந்தனர், அவை புனிதம் வாய்ந்தவை ஆயின.

நாளடைவில், ஒரு குழுவினர் இந்த யாகங்களை நடத்து வதைத் தங்கள் தொழிலாகக் கொண்டனர். இவர்களே புரோகிதர்கள். இவர்கள் யாகத்தைப்பற்றிச் சிந்தித்தனர். அவர்களுக்கு யாகமே எல்லாமாக இருந்தது. தேவர்கள் இந்த யாகங்களின் நறுமணங்களை நுகர்வதற்காக வந்தனர், யாகங் களின் சக்தியால் இந்த உலகில் எதையும் சாதிக்க முடியும்

என்று கருதப்பட்டது. சில குறிப்பிட்ட ஆஹுதிகளை அளிப்பதாலும், சில தோத்திரங்களை ஓதுவதாலும், குறிப்பிட்ட வகையில் ஹோம குண்டங்களை அமைப்பதாலும் தேவர்கள் எல்லா வரங்களையும் அளிப்பார்கள். ஆகவே எந்த வகையான யாகத்தைச் செய்வதன் மூலம் ஒருவன் சொர்க்கத்தை அடைய முடியும் என்று நசிகேதன் கேட்டான். இந்த இரண்டாவது வரத்தையும் எமன் உடனடியாக அளித்தான். அத்துடன், அந்த யாகம் அதற்குப் பின்னர் நசிகேதனின் பெயராலேயே வழங்கும் என்ற வாக்குறுதியையும் அளித்தான்.

இப்போதுதான் மூன்றாவது வரம் வருகிறது. இங்கிருந்து தான் சரியாக உபநிடதம் ஆரம்பிக்கிறது. 'எனக்கு ஒரு விஷயம் புரியவில்லை; மனிதன் இறந்த பின் சிலர், அவன் இருக்கிறான் என்கிறார்கள், வேறு சிலர், அவன் இல்லை என்று கூறு கிறார்கள். இதை உங்களிடமிருந்து இதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்'(1.1.20) என்று கேட்டான் நசிகேதன். எமனைப் பயம் பிடித்துக்கொண்டது. மற்ற இரண்டு வரங்களை யும் அவன் மிகவும் சந்தோஷமாகவே அளித்தான். ஆனால் இப்போதோ நசிகேதனிடம், 'நசிகேதா, பண்டைய தேவர் களாலேயே இந்த ரகசியத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்த நுண்ணிய ரகசியம், புரிந்துகொள்வதற்கு அவ்வளவு சுலபமானதல்ல. வேறு ஏதாவது கேள்; இந்த விஷயத்தில் என்னை வற்புறுத்தாதே, விட்டுவிடு' (1.1.21) என்று வேண் டினான்.

நசிகேதன் இந்த விஷயத்தில் மிகவும் உறுதியாக இருந் தான். 'காலதேவனே! ''இந்த விஷயத்தில் தேவர்களுக்கே சந்தேகம் இருக்கிறது; இதைப் புரிந்துகொள்வது அவ்வளவு சுலபமல்ல'' என்று நீங்கள் கூறுவது உண்மைதான். ஆனால் இந்த விஷயத்தைத் தெளிவாக உபதேசிப்பதற்கு உங்களைவிட வேறு யாரும் எனக்குக் கிடைக்க மாட்டார்கள். அது மட்டு மல்லாமல் இந்த வரத்திற்கு ஈடான வேறு வரமும் இல்லை' (1.1.22) என்று அவன் எமனிடம் கூறினான்.

அதற்கு எமன், 'நசிகேதா, நூறு வருடங்கள் வாழக்கூடிய பிள்ளைகள், பேரப் பிள்ளைகள், பசுக்கள், யானைகள், குதிரைகள், தங்கம் இவை எல்லாவற்றையும் கேள். பூலோகத்தில் சக்கரவர்த்தியாக இருந்து, விரும்பும் காலம்வரை வாழ வேண் டும் என்று கேள். செல்வத்திற்கும் நீண்ட ஆயுளுக்கும் இணை யாக நீ நினைக்கும் எந்த வரத்தை வேண்டுமானாலும் கேள்.

இந்தப் பரந்த பூமியில் ஓர் அரசனாக இரு. உனது எல்லா ஆசைகளையும் நான் நிறைவேற்றி வைக்கிறேன். உலகில் நிறைவேற்றிக்கொள்ள முடியாத ஆசைகளை நிறைவேற்றும் படிக் கேள். சாதாரண மனிதனால் பெற முடியாத இந்த தேவ கன்னிகள், இந்த ரதங்கள், தேவ கானங்கள் எல்லாவற்றையும் நீ பெறுமாறு செய்கிறேன். நசிகேதா, இவற்றையெல்லாம் அடைந்து இன்புறுவாய்; மரணத்திற்குப் பின் என்ன ஆகிறது என்பதை மட்டும் கேட்காதே'(1. 1. 23–25) என்று வேண்டினான்.

நசிகேதன் அதற்கு விடையாக, 'ஓ மரண தேவனே, இந்த இன்பங்கள் எல்லாம் புலன்களின் சக்தியை அரித்து விடுகின்றன. நீண்ட ஆயுள் என்பதுகூட மிகக் குறுகிய காலந்தான். இந்தக் குதிரைகள், ரதங்கள், கானங்கள், நாட்டியங்கள் எல்லாம் உங்களிடமே இருக்கட்டும். செல்வத்தால் மட்டுமே மனிதன் திருப்தி அடைய மாட்டான். சாகும்போது செல்வம் கூடவா வருகிறது? எங்கள் ஆயுளின் அளவு நீங்கள் விதித்தபடிதான். எனவே நான் கேட்ட வரத்தையே நான் வேண்டுகிறேன்' (1. 1. 26,27) என்று தீர்மானமாகக் கூறினான்.

இந்தப் பதிலால் எமன் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். 'நசிகேதா, பூரணத்துவம் வேறு, இன்பங்களை அனுபவிப்பது வேறு. இவை இரண்டும் வெவ்வேறு லட்சியங்கள் உடையவை. ஆகவே மனிதர்களை வெவ்வேறு பாதைகளில் இவை செலுத்து கின்றன. பூரணத்துவத்தைத் தேர்ந்தெடுப்பவன் தூய்மை அடை கிறான். இன்பங்களை நாடுபவன் உண்மையான லட்சியத்தை இழக்கிறான். மனிதனின் முன் பூரணத்துவம், இன்பம் ஆகிய இரண்டு லட்சியங்களும் வருகின்றன. அறிவாளி இரண்டையும் ஆராய்ந்து, ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்தி அறி கிறான். இன்பத்தைவிடப் பூரணத்துவமே உயர்ந்தது என்று அறிந்து, பூரணத்துவத்தையே அவன் தேர்ந்தெடுக்கிறான். முட்டாளோ உடல்சுகத்தை விரும்பி, இன்பத்தைத் தேர்ந்தெடுக் கிறான். வெளிப் பார்வைக்கு மட்டுமே விரும்பத் தக்கவையாகத் தோன்றும் பொருட்களைப்பற்றி யோசித்து, புத்திசாலித் தனமாக அவற்றை நீ ஒதுக்கிவிட்டாய்'(1. 2. 1–3) என்று நசிகேதனைப் பாராட்டினான். பிறகு நசிகேதனுக்கு உபதேசிக்க ஆரம்பித்தான்.

துறவு மற்றும் வைதிக தர்மம் பற்றிய மிகவும் வளர்ச்சி யடைந்த கருத்து இங்கே நமக்குக் கிடைக்கிறது. இன்பங்களை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசைகளை வெற்றி கொள்ளாமல்

உள்ளத்தில் உண்மை பிரகாசிக்காது. புலனின்பங்கள் ஒவ்வொரு கணமும் ஆர்ப்பரித்து, நம்மை வண்ணங்கள், சுவை, தொடு உணர்ச்சி போன்ற இந்தப் பயனற்ற புலனின்பங்கள் மற்றும் புறப் பொருட்களுக்கு அடிமையாக்கி, புறவுலகிற்கு இழுத்துச் செல்கின்றன. இவற்றிற்கு நாம் அடிமையாகாதது போல் எவ்வளவு பாசாங்கு செய்தாலும், இவற்றை நம்மால் விட முடிவதில்லை. இந்த நிலை நீடிக்கும்வரை நம் உள்ளங்களில் உண்மை எவ்வாறு பிரகாசிக்க முடியும்?

எமன் கூறினான்: 'செல்வங்களின் மயக்கத்தில் முட்டாள் தனமாக மூழ்கியிருக்கும் அறிவிழந்தவனின் மனத்தில், எல்லாவற்றிற்கும் அப்பாலுள்ளதன் சிந்தனை எழாது. ''இந்த உலகம் இருக்கிறது; மறு உலகம் இல்லை'' என்று எண்ணியவாறு அவர்கள் மீண்டும்மீண்டும் என் கீழ் வருகின்றனர். இந்த உண்மை, புரிந்து கொள்வதற்கு மிகவும் கடினமானது. இடைவிடாமல் கேட்டாலும் பலரால் இதைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. இதைப் புரிந்துகொள்வதற்கு, சொல்பவனும் சிறந்தவனாக இருக்க வேண்டும், கேட்பவனும் சிறந்தவனாக இருக்க வேண்டும். குருவும் சிறந்தவராக இருக்க வேண்டும். சீடனும் தகுதி படைத்தவனாக இருக்க வேண்டும். இது உணர வேண்டிய உண்மையே தவிர, வாதப் பிரதிவாதங்களுக்கு இங்கே இடமில்லை. ஆகவே வீண் தர்க்கத்தால் மனத்தைக் குழப்பிக் கொள்ளக் கூடாது.'(1. 2. 6)

ஒவ்வொரு மதமும் நம்பிக்கையை வற்புறுத்துகிறது என்பது நாம் அறிந்ததே. கண்மூடித்தனமாக நம்பு என்றே நமக்குப் போதிக்கப்படுகிறது. இந்தக் கண்மூடித்தனமான நம்பிக்கை, சந்தேகமில்லாமல் ஆட்சேபத்திற்கு உரியதுதான். ஆனால் இதை ஆராய்ந்து பார்த்தால், இதற்குப் பின்னால் ஒரு மகத்தான உண்மை மறைந்திருப்பது நமக்குத் தெரிய வருகிறது. அந்த உண்மையைப் பற்றித்தான் இப்போது இந்த உபநிடதத்தில் நாம் படிக்கப் போகிறோம்.

வீண் தர்க்கங்கள் கடவுளை அறிய நமக்கு உதவி புரிவதில்லை. ஆகவே வீண் தர்க்கங்களால் மனத்தைக் குழப்பிக் கொள்ளக் கூடாது. அவர் உணரக் கூடியவரே தவிர, தர்க்கங்களால் அறியக் கூடியவர் அல்ல. வாதம், தர்க்கம் எல்லாம் சில அனுபவங்களையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. இந்த அனுபவங்கள் இல்லாமல் தர்க்கம் இருக்க இடமில்லை. நாம் ஏற்கனவே அனுபவித்த சில உண்மைகளை ஒப்பிடுவதே

தர்க்கம். இப்படி அனுபவித்த இந்த உண்மைகள் ஏற்கனவே இல்லையென்றால் தர்க்கத்திற்கு இடமில்லை. புற விஷயங்களைப் பொறுத்தவரையில் இது உண்மையானால் அக விஷயங்களிலும் இது ஏன் உண்மையாகக் கூடாது? வேதியியல் நிபுணர், சில ரசாயனப் பொருட்களைக் கலந்து, சில முடிவுகளைக் காண்கிறார். இது ஓர் உண்மை. நாம் இதைப் பார்க்கிறோம், உணர்கிறோம். ரசாயன சம்பந்தமான நம்முடைய தர்க்கங்களுக்கு இதையே அடிப்படையாகவும் பயன்படுத்திக் கொள்கிறோம். பௌதீகமும் மற்ற விஞ்ஞானங்களிலும்கூட இதே முறைதான் பின்பற்றப்படுகிறது.

சில உண்மைகளை அனுபவிப்பதே, உணர்வதே எல்லா அறிவுக்கும் அடிப்படையாக இருக்கிறது. இந்த அடிப்படையின் மீதுதான் நாம் நமது தர்க்கங்களையும் வாதங்களையும் அமைக்க வேண்டியிருக்கிறது. ஆனால் பெரும்பாலோர், குறிப்பாக தற்காலத்தில், ஆன்மீக விஷயங்களில் அத்தகையதோர் அனுபவ அடிப்படை சாத்தியமில்லை, வீண் தர்க்கங்களால்தான் ஆன்மீகத்தையும் புரிந்துகொள்ள வேண்டும் என்று நினைக்கிறார்கள். விந்தையான விஷயம்!

ஆன்மீகம் என்பது அனுபவித்தறிய வேண்டிய உண்மையே தவிர, வெறும் வார்த்தை ஜாலமல்ல. நாம் நமது ஆன்மாவை ஆராய்ந்து உண்மை என்ன என்பதைக் காண வேண்டும்; புரிந்து கொள்ள வேண்டும், புரிந்துகொண்டதை அனுபவத்தில் உணரவும் வேண்டும். அதுவே ஆன்மீகம். எவ்வளவு பேசினாலும் அது ஆன்மீகம் ஆகாது. கடவுள் என்ற ஒருவர் இருக்கிறாரா, இல்லையா என்பதைத் தர்க்கத்தால் நிரூபிக்க முடியாது. ஏனெனில் இரு பக்கத்திற்கும் சம அளவில் வாதங்கள் உள்ளன.

ஆனால் கடவுள் என்று ஒருவர் இருந்தால், அவர் நம்முடைய இதயங்களில்தான் இருக்கிறார். நீங்கள் எப்போதாவது அவரைப் பார்த்திருக்கிறீர்களா? இந்த உலகம் இருக்கிறதா இல்லையா என்ற பிரச்சினையே இன்னும் தீர்ந்தபாடில்லை. லட்சியவாதிகளுக்கும் பிரத்தியட்சவாதிகளுக்கும் இடையே இந்த விஷயத்தைப்பற்றி நடக்கும் வாக்குவாதம் முடிவில்லாமல் போய்க்கொண்டே இருக்கிறது. இருந்தாலும், உலகம் இருக்கிறது என்பதும், அது இயங்கிக் கொண்டே இருக்கிறது என்பதும் நமக்குத் தெரிகிறது. நாம் வெறும் வார்த்தை ஜாலங்களிலேயே உழன்று கொண்டிருக்கிறோம்.

ஆகவே வாழ்க்கையைப் பொறுத்தவரை, எல்லா விஷயங்களிலும் உண்மையைப் பார்க்கவே நாம் முயல வேண்டும். விஞ்ஞானத்தில் உள்ளதுபோல், ஆன்மீகத்திலும் உள்ள உண்மைகளை நாம் உணர வேண்டும். அவற்றை அடிப்படையாக வைத்துத்தான் மதவுணர்வை நாம் உருவாக்க முடியும். ஒரு மதத்திலுள்ள எல்லா கொள்கைகளையும் நம்ப வேண்டும் என்று கண்மூடித்தனமாக வற்புறுத்துவது மனித குலத்தையே இழிவுபடுத்துவதாகும். எல்லாவற்றையும் நம்பும்படி, நம்மை வற்புறுத்தும் ஒரு மனிதன் தன்னை இழிவுபடுத்துவதுடன், அப்படி நாம் நம்பினால், நம்மையும் இழிவுபடுத்துகிறான்.

தங்கள் மனத்தை ஆராய்ந்து, உண்மைகளைக் கண்டதைப் பற்றிக் கூற மட்டுமே உலகிலுள்ள ஞானியருக்கு உரிமை உள்ளது. நாமும் அதுபோல் ஆராய்ச்சி செய்து அந்த உண்மையைக் கண்டால் அவர்கள் சொல்வதை நம்புவோம்; அதற்கு முன் அல்ல. மதம் என்பதன் உண்மை இதுதான். ஆனால் மதங்களைத் தாக்கிப் பேசுவோரில் 99.9 சதவீதம் பேர் சுய ஆராய்ச்சி செய்யவோ, உண்மைகளை உணரவோ எந்த முயற்சியும் செய்யாதவர்கள். இதை நாம் எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும். இவர்கள் சொல்வதெல்லாம், 'சூரியனை நம்பும் நீங்கள் எல்லோரும் முட்டாள்கள்' என்று ஒரு குருடன் சொல்வதைப்போல் இருக்கிறது. ஆகவே இவர்கள் சொல்வது மதத்தை எந்த விதத்திலும் பாதிக்க முடியாது.

அனுபூதி என்ற இந்தக் கருத்து, நாம் புரிந்துகொள்ள வேண்டியதும் எப்போதும் மனத்தில் கொள்ள வேண்டியதுமான ஒன்றாகும். ஆன்மீகம் என்பது சாஸ்திரங்களிலும் கோயில்களிலும் இல்லை என்பதை நாம் புரிந்துகொள்ளும் போதுதான் மதங்களிடையே நிலவுகின்ற சண்டைகளும் பூசல்களும் கருத்து வேறுபாடுகளும் மறையும். அது ஓர் நிஜமான அனுபவம். கடவுளை, ஆன்மாவைக் கண்ட ஒருவனுக்கு மட்டுமே ஆன்மீகம் என்பது உள்ளது. சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்துத் தலைகீழாக ஒப்பிக்கக்கூடிய பண்டிதர்களுக்கும், சுகபோகங்களில் மூழ்கித் திளைக்கும் அறிவற்ற மூடனுக்கும் இடையே உண்மையில் எந்த வித்தியாசமும் இல்லை. நாம் எல்லோரும் நாத்திகர்களே. இதை ஒப்புக் கொள்வோம்! வெறும் மதப் புலமை நம்மை ஆன்மீகவாதிகள் ஆக்காது. கிறிஸ்தவர்கள், முகமதியர்கள் அல்லது வேறு எந்த மதத்தைச் சேர்ந்தவர்களை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள். ஏசு கிறிஸ்துவின்

மலை உபதேசத்தின் உண்மையை அனுபவத்தில் உணர்ந்த ஒருவன் உடனே பூரணனாகிறான்; தெய்வமாகிறான். உண்மை இப்படியிருக்க, உலகில் கோடிக்கணக்கான கிறிஸ்தவர்கள் இருப்பதாக வேறு சொல்லிக் கொள்கிறார்கள். மலை உபதேசத்தின் உண்மையை உணர்ந்து கொள்ள மனிதகுலம் எப்போதாவது முயலும் என்பதே இதன் பொருள். உண்மையில் பார்த்தால் கோடியில் ஒருவன்கூட உண்மையான கிறிஸ்தவன் கிடையாது.

இதைப் போலவே இந்தியாவில் முப்பது கோடி வேதாந்திகள் இருப்பதாகச் சொல்கிறார்கள். ஆனால் ஆயிரத்தில் ஒருவன் ஆன்ம அனுபூதி பெற்றால்கூட, இந்த உலகம் சீக்கிரமே பெரிய மாறுதலை அடையும். நாம் எல்லோரும் நாத்திகர்களே. ஆனாலும், 'நான் நாத்திகன்' என்று ஒப்புக் கொள்பவனோடு நாம் சண்டை போடுகிறோம். நாம் எல்லோரும் அஞ்ஞான இருளில் மூழ்கியிருக்கிறோம். நம்மைப் பொறுத்தவரையில் ஆன்மீகம் என்பதெல்லாம் வெறும் சாஸ்திர அறிவு, வெறும் வாய் ஜம்பம், வெறும் வெறுமை மட்டுமே. ஒருவனுக்கு நன்றாகப் பேசத் தெரிந்தால் போதும், அவனை ஆன்மீகவாதி என்று கூறிவிடுகிறோம். இது ஆன்மீகமும் அல்ல, மதமும் அல்ல. 'வார்த்தைகளை அற்புதமாக ஒன்றுசேர்க்கும் திறமை, பேச்சாற்றல், புத்தகங்களுக்குப் பலவிதங்களில் விளக்கங்கள் எழுதும் ஆற்றல் இவை எல்லாம் பண்டிதர்களுக்கு மகிழ்ச்சி தர மட்டுமே பயன்படும்; ஆனால் இவை மதம் ஆகாது.'[1]

உண்மையான ஆன்ம அனுபூதி ஆரம்பிக்கும்போதுதான் மதம் தொடங்குகிறது. அதுதான் மதத்தின் உதயம். அப்போதுதான் நாம் அறநெறியில் ஒழுக முடியும். நாம் இப்போது மிருகங்களைவிட ஒன்றும் அதிக ஒழுக்கமாக இல்லை! சமூகத்தின் சாட்டை ஒன்றுதான் நம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறது. 'திருடுவதற்குத் தண்டனை கிடையாது' என்று சமூகம் இன்று சொல்லட்டும், அவ்வளவுதான், ஒவ்வொருவரும் மற்றவர்களுடைய சொத்துக்களின்மீது அப்படியே பாய்ந்துவிடுவோம்! நம்மை ஒழுக்கம் உடையவர்களாக வைத்திருப்பவர்கள் போலீஸ்காரர்களே! சமூகத்தின் கருத்துக்களே நம்மை ஒழுக்கம் உடையவர்களாக வைத்திருக்கின்றன. உண்மையில்,

---

1. வாக்வைகரீ சப்தஜரீ சாஸ்த்ர வ்யாக்யான கௌசலம் ।
வைதுஷ்யம் விதுஷாம் தத்வத் புக்தயே ந து முக்தயே ॥
—விவேக சூடாமணி, 58.

மிருகங்களைவிட நாம் எந்தவிதத்திலும் உயர்ந்தவர்கள் அல்ல. இது எவ்வளவு அப்படியே உண்மை என்பது நம் உள்மனத்திற்குத் தெரியும். ஆகவே நாம் ஆஷாடபூதிகளாக இருக்க வேண்டாம். நாம் மதவாதிகள் அல்ல, மற்றவர்களைக் கேவலமாக மதிக்க நமக்கு உரிமை கிடையாது என்ற உண்மையை ஒப்புக் கொள்வோம். நாம் அனைவரும் சகோதரர்கள். ஆன்ம அனுபூதி அடைந்த பின்தான் நாம் உண்மையான ஒழுக்கத்தோடு வாழ முடியும்.

நீங்கள் ஒரு நாட்டைப் பார்த்திருக்கிறீர்கள். நீங்கள் அதைப் பார்க்கவில்லை என்று சொல்லச் சொல்லி யாராவது உங்களை வற்புறுத்தினாலும்கூட, உங்கள் உள்மனத்தில் அதைப் பார்த்த உணர்வு அப்படியே இருக்கும். இந்த உலகத்தை நீங்கள் எந்த உணர்வோடு பார்க்கிறீர்களோ, அதைவிட அழுத்தமான உணர்வோடு கடவுளை நீங்கள் உணர்ந்திருந்தால் உங்கள் நம்பிக்கையை எந்தச் சக்தியாலும் அசைக்க முடியாது. அப்போதுதான் உங்கள் நம்பிக்கை உண்மையானதாக ஆகிறது. 'கடுகளவு நம்பிக்கை உள்ளவன்கூட' என்று பைபிளில் சொல்லியிருப்பது இந்தப் பொருளில்தான். அப்போது நீங்கள் உண்மை உருவாகவே ஆகிவிடுவதால் நீங்கள் உண்மையை அறிவீர்கள்.

ஆன்மீகத்தை உணருங்கள், வெறும் பேச்சால் பயனில்லை என்பதுதான் வேதாந்தத்தின் அடிப்படைக் கருத்து. ஆனால் அது அவ்வளவு சுலபம் அல்ல. ஒவ்வொரு மனித இதயத்தின் அடியாழங்களில் உறைகின்ற அந்தப் பழம்பொருளான இறைவன், அணுவிற்குள் தன்னை மறைத்துக் கொண்டிருக்கிறான். அகத்தினுள் ஆழ்ந்ததால் பெற்ற ஆற்றலின்மூலம் ரிஷிகள் அவனை உணர்ந்திருக்கிறார்கள். அவனை உணர்வதன் மூலம் அவர்கள் இன்ப-துன்பங்கள், பாவ-புண்ணியங்கள் என்று நாம் சொல்லும் செயல்கள், நன்மை-தீமைகள், இருப்பு-இல்லாமை எல்லாவற்றையும் கடந்துவிட்டார்கள். அவனை உணர்ந்தவன் உண்மையைக் கண்டவனே. அப்படியானால் சொர்க்கம் என்ன ஆயிற்று? துன்பங்களற்ற இன்பமே சொர்க்கக் கருத்தாகும். அதாவது, இந்த வாழ்க்கையின் துன்பங்கள் இல்லாமல் அதன் இன்பங்களை மட்டுமே விரும்புகிறோம் என்பதே பொருள். இது சந்தேகமில்லாமல் நல்ல கருத்துதான். இயற்கையாகவே நம் மனத்தில் இது எழுகிறது. ஆனால் இந்தக் கருத்து அடியோடு தவறானது. ஏனெனில் முழுமையான நன்மை அல்லது முழுமையான தீமை என்று எதுவுமே இல்லை.

ரோமாபுரிப் பணக்காரனைப்பற்றி நீங்கள் எல்லோரும் கேள்விப்பட்டிருப்பீர்கள். தன் சொத்தில் பத்து லட்சம் பவுன் களே எஞ்சியிருந்தன என்பதை ஒருநாள் அவன் கண்டான்; 'நாளைக்கு என்ன செய்வது?' என்று திகைத்துப்போய்த் தற் கொலை செய்து கொண்டான். பத்து லட்சம் பவுன்கள்கூட அவனுக்கு ஏழ்மைதான். எனவே எது இன்பம்? எது துன்பம்? இவற்றின் மதிப்பு எப்போதும் மாறிக்கொண்டே இருக்கிறது. நான் சிறுவனாக இருந்தபோது, வண்டி ஓட்டுபவனாக, எப் போதும் வண்டியை ஓட்டிக்கொண்டு திரிவதுதான் என்னை இன்பத்தின் உச்சிக்குக் கொண்டு செல்லும் என்று நான் நினைத்ததுண்டு. ஆனால் இப்போது அப்படி நினைக்கவில்லை. நாம் எந்த இன்பத்தை நிலையாகப் பற்றிக்கொள்ள முடியும்? இந்த ஓர் அம்சத்தை நாம் முதலில் புரிந்துகொள்ள வேண்டும். இதுதான் நம்மைவிட்டு இறுதியாக அகன்று செல்லும் மூடநம்பிக்கைகளில் ஒன்றும் ஆகும்.

இன்பத்தைப்பற்றி எல்லோருக்கும் ஒரேமாதிரி கருத்து இருப்பதில்லை. எனக்கு ஒரு மனிதனைத் தெரியும். ஓர் உருண்டை அபினை விழுங்காத நாளெல்லாம் அவனுக்கு இன்ப நாளே அல்ல. எங்கும் அபின் நிறைந்த சொர்க்கத்தையே அவன் கனவு காண்பானோ என்னவோ! ஆனால் அந்தச் சொர்க்கம் எனக்கு மிகவும் துன்பம் அளிப்பதாக இருக்கும். ஆறுகள் ஓடும் அழகான தோட்டங்கள் நிறைந்த சொர்க்கத்தைப் பற்றி அரபுக் கவிதைகளில் அடிக்கடிச் சொல்லியிருப்பதைக் காணலாம். அளவுக்கு அதிகமான நீர் நிறைந்த ஒரு நாட்டில் நான் என் வாழ்நாளில் பெரும்பகுதியைக் கழித்திருக்கிறேன். ஒவ்வொரு வருடமும் பல கிராமங்கள் வெள்ளக்காடாகின்றன; ஆயிரக் கணக்கான உயிர்கள் பலியாகின்றன. எனவே என் னுடைய சொர்க்கம் ஆறுகள் ஓடும் தோட்டங்கள் நிறைந்ததாக இருக்காது. என்னுடைய சொர்க்கம் மிகக் குறைவான மழை யுள்ள பூமியாக இருக்கும். இன்பங்களைப் பற்றிய நமது கருத்து எப்போதும் மாறிக் கொண்டே இருக்கிறது. இளைஞன் சொர்க்கத்தைப்பற்றிக் கனவு காண்பானானால், அங்கே தனக்கு ஓர் அழகான மனைவி இருப்பதாகக் காண்பான். அவனுக்கே வயதானபின் மனைவி தேவையில்லை.

நம்முடைய தேவைகளே நமது சொர்க்கங்களை உருவாக்கு கின்றன. நம் தேவைகளின் மாறுதலுக்கேற்ப நமது சொர்க்கங் களும் மாறுகின்றன. புலனின்பத்தையே வாழ்க்கையின்

எல்லாமாகக் கொண்டவர்கள் விரும்புகின்ற சொர்க்கத்தைப் போன்ற சொர்க்கம் நமக்கு இருந்தால், நாம் முன்னேறவே முடியாது. ஆன்மாவிற்கு நாம் கொடுக்கும் மிகப் பெரிய சாபம் அதுவாகத்தான் இருக்கும். நாம் அடையக்கூடியது இவ்வளவு தானா? சிறிதுகாலம் கதறுகிறோம்; சிறிதுகாலம் கேளிக்கை களில் ஈடுபடுகிறோம். கடைசியில் கேட்பாரற்று ஒரு நாயைப் போல் சாகிறோம். இந்த அற்ப விஷயங்களுக்காக ஏங்கும்போது மனித குலத்திற்கே ஒரு பெரிய சாபக்கேட்டை உண்டாக்கி விடுகிறோம்! உலக இன்பங்களை நாம் துரத்திக் கொண்டு போகும்போது, நாம் இதைத்தான் செய்கிறோம். ஏனென்றால் உண்மையான இன்பம் எது என்று நமக்குத் தெரியாது.

இன்பத்தை விட்டுவிடச் சொல்லி தத்துவம் நம்மை வற் புறுத்துவதில்லை; மாறாக உண்மையான இன்பத்தை அறிந்து கொள் என்றே அது வற்புறுத்துகிறது.

நார்வே நாட்டினரின் சொர்க்கம் ஒரு மிகப் பெரிய போர்க்களமாக இருக்கும். அங்கே எல்லோரும் ஓடின் (Odin) என்ற தெய்வத்தின் முன்னால் உட்கார்ந்திருப்பார்கள். அவர்கள் வேட்டையாட ஒரு காட்டுப் பன்றி இருக்கும். போருக்குச் சென்று தங்களுக்குள்ளேயே சண்டையிட்டு அவர்கள் ஒரு வரை ஒருவர் வெட்டி மாய்த்துக் கொள்வார்கள். ஆனால் சண்டை முடிந்த சிறிது நேரத்திற்குள் இறந்தவர்களெல்லாம் எப்படியோ பிழைத்துக் கொள்வார்கள். பிறகு அவர்கள் ஒரு விசாலமான கூடத்திற்குள் செல்வார்கள். அங்கே பன்றியைச் சுட்டு வைத்திருப்பார்கள். எல்லோரும் சேர்ந்து அதை உண்டு களிப்பார்கள். அதன்பிறகு அந்தக் காட்டுப் பன்றிக்கு உயிர் வந்து, மறுபடியும் வேட்டையாடப் படுவதற்குத் தயாராக இருக்கிறது. ஒவ்வொரு நாளும் இதே கதைதான். இது ஏறக் குறைய எங்கள் சொர்க்கத்தைப் போல்தான் உள்ளது; துளியும் மாறுதலில்லை. எங்கள் கருத்துக்கள் வேண்டுமானால் சற்று நாகரீகமாக இருக்கலாம். காட்டுப் பன்றி வேட்டையாடப்பட்டு, சாப்பிடப்பட்டு, ஒவ்வொரு நாளும் மறுபடியும் உயிர் பெற்று, இதே கதையைத் தொடர்வதாக அவர்கள் கற்பனை செய்வது போல், நாமும் காட்டுப் பன்றிகளை வேட்டையாடுவதற்கும், எப்போதும் புலனின்பம் கிடைத்துக் கொண்டே இருக்கும் சொர்க்கத்திற்குப் போவதற்கும் விரும்புகிறோம்.

எப்போதும் மாறாத இன்பம் ஒன்று உள்ளது என்றுதான் தத்துவ சாஸ்திரம் வற்புறுத்துகிறது. அந்த இன்பம், நாம்

உலக வாழ்க்கையில் பெறும் சுகங்களையோ, அனுபவிக்கும் இன்பங்களையோ போன்றதல்ல. உலக வாழ்க்கையின் இன்பங்களெல்லாம், அந்த உண்மையான இன்பத்தின் மிகச் சிறு துளி என்று வேதாந்தம் கூறுகிறது. ஏனென்றால் உண்மையில் உள்ளது அந்த இன்பம் மட்டுமே. அந்த இன்பம் மூடப்பட்டு, தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டு, கேலிக்கு உட்பட்டிருந்தாலும், ஒவ்வொரு கணமும் நாம் உண்மையில் அந்த இன்பத்தை அனுபவித்துக் கொண்டுதான் இருக்கிறோம். எந்த இடத்தில் ஓர் ஆசியோ ஆனந்தமோ இன்பமோ இருந் தாலும் சரி—அது திருடனுக்குத் திருடுவதில் கிட்டும் இன்பமாகக்கூட இருக்கலாம்—அது அந்தப் பேரின்பத்தின் வெளிப்பாடே. ஆனால் அது மாயையால் மறைந்து, பல்வேறு புறச் சூழ்நிலைகளால் பலவகையாகக் குழம்பியதுபோல் தவறாகப் புரிந்துகொள்ளப் பட்டிருக்கிறது, அவ்வளவுதான். அதைப் புரிந்துகொள்ள, அது அல்லாத மற்றவற்றை விலக்குவதால்தான் முடியும். அதன் பிறகுதான், 'இதுதான்' என்று உணரும் முயற்சி ஆரம்பிக்கிறது. அறியாமையையும் பொய்யையும் விட்டொழித்த பின்தான், உண்மை நமக்குத் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளத் தொடங்குகிறது.

உண்மையை உணர்ந்த பின்னர், நாம் அதுவரை விலக்கி யிருந்த பொருட்கள், புதிய உருவம் பெற்றுவிடும்; தெய்வீகத் தன்மை பெற்றுவிடும். அவற்றை நாம் புதிய கோணத்திலிருந்து பார்க்க ஆரம்பித்துவிடுவோம். அவை புனிதத்தன்மை பெற்று விடும். அப்போதுதான் நாம் அவற்றின் உண்மையைப் புரிந்து கொள்வோம். ஆனால் அவற்றைப் புரிந்துகொள்வதற்கு, உண்மையின் சிறு அளவையாவது முதலில் அறிந்துகொள்ள வேண்டும். முதலில் அவற்றை விட்டுவிடுகிறோம். பிறகு அவை தெய்வீகத் தன்மை பெற்று நம்மிடமே திரும்பி வருகின்றன. நம்முடைய துன்பம், துக்கம், நமது அற்பச் சந்தோஷங்கள் எல்லாவற்றையும் விடவேண்டும்.

'வேதங்கள் எல்லாம் எதைப்பற்றிப் பேசுகின்றனவோ, தவத்திற்கெல்லாம் குறிக்கோளாக இருப்பது எதுவோ, எதை அடைவதற்காக மனிதர்கள் துறவு பூண்கிறார்களோ, அதை நான் ஒரே வார்த்தையில் சொல்லிவிடுகிறேன், அதுதான் ஓம்.'(1.2.15) வேதங்களில் 'ஓம்' என்ற இந்த வார்த்தை மிகவும் உயர்த்திப் பேசப்படுகிறது. மிகவும் புனிதமானதாகக் கருதப் படுகிறது.

'உடல் இறந்தபின் மனிதன் என்ன ஆகிறான்?' என்ற கேள்விக்கு எமன் இப்போது பதிலளிக்கிறான். 'ஞானபரமான அந்த ஆன்மா இறப்பதில்லை, பிறப்பதும் இல்லை. அது எதிலிருந்தும் தோன்றுவதில்லை; அதிலிருந்தும் எதுவும் தோன்றுவதில்லை. பிறப்பற்ற, நிரந்தரமான, எப்போதும் நிலைத் திருக்கின்ற அந்த ஆன்மா, உடல் அழிந்த பின்னும் அழிவ தில்லை. ஆன்மா கொல்வதுமில்லை; கொல்லப்படுவதும் இல்லை. ஆகவே கொல்பவன், தான் கொல்வதாகவும், கொல்லப் படுபவன், தான் கொல்லப்படுவதாகவும் நினைத்தால், அவர்கள் இருவரும் உண்மையை அறியாதவர்களே.' (1. 2. 18,19) என்ன வொரு மகோன்னதமான நிலை!

முதல் வரியிலுள்ள 'ஞானபரமான' என்ற வார்த்தைக்கு உங்கள் கவனத்தைத் திருப்புங்கள். எல்லா ஞானமும் எல்லா தூய்மையும் ஆன்மாவில் ஏற்கனவே இருக்கின்றன. ஆனால் அவை சிலவேளைகளில் மங்கலாக, சிலவேளைகளில் பிரகாச மாக வெளிப்படுகின்றன, அவ்வளவுதான் வேறுபாடு. இது வேதாந்தத்தின் அடிப்படைக் கருத்து என்பதைப் போகப்போக நாம் புரிந்துகொள்வோம். மனிதர்களுக்கு இடையேயும், படைப்பிலுள்ள எல்லாவற்றிற்கும் இடையேயும் உள்ள வேறு பாடு அளவில்தானே தவிர, தன்மையில் இல்லை. எப்போதும் நிலைத்திருக்கின்ற, எப்போதும் ஆனந்தமயமான, எப்போதும் தூய்மையான, எப்போதும் முழுமையான பரம்பொருளே எல்லாவற்றிற்கும் பின்னணியாகவும், எல்லாவற்றின் உண்மை வடிவமாகவும் இருக்கிறது. புண்ணியவான்கள், பாவிகள், இன்பம் அனுபவிப்பவர்கள், துன்பம் அனுபவிப்பவர்கள், அழ கானவர்கள், அழகற்றவர்கள், மனிதர்கள், மிருகங்கள் என்று எல்லாவற்றிலும் இருக்கும் ஒரே பொருள் ஆன்மாதான். அது ஒளிமயமானது. வெளிப்பாட்டு ஆற்றலினால்தான் வேறுபாடு தோன்றுகிறது. சிலவற்றில் இந்த வெளிப்பாடு அதிகமாகவும், சிலவற்றில் குறைவாகவும் காணப்படுகிறது. இது ஆன்மாவை எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. ஆடை அணிவதில், ஒரு வனைவிட மற்றொருவன் தன் உடலை அதிகமாக வெளிக் காட்டினால், அந்த வெளிப்பாடு அவர்கள் உடலில் எந்த வேறுபாட்டையும் ஏற்படுத்துவதில்லை. ஆடையில்தான் வித்தியாசம் இருக்கிறது.

வேதாந்தத் தத்துவம் முழுவதிலுமே, நன்மையை வேறாக, தீமையை வேறாகச் சொல்வதில்லை என்பதை நாம் நினைவில்

கொள்ள வேண்டும். அவை இரண்டும் வெவ்வேறானவை அல்ல. ஒரே பொருள் நல்லதாகவோ தீயதாகவோ இருக்கிறது. வேறுபாடு, அளவில்தான் இருக்கிறது. இன்பமளிப்பதாக இன்று நான் கருதுவது, சிறப்பான நாளைய சூழ்நிலையில் துன்பமளிப்பதாக மாறிவிடலாம். இதமளிக்கும் அதே நெருப்பு நம்மை அழிக்கவும் செய்யலாம். அது நெருப்பின் குற்றமல்ல. அதேபோல் ஆன்மா தூய்மையானது, முழுமையானது. தீமை செய்பவன் தனது இந்த இயல்பை உணராமல், தன்னையே ஏமாற்றிக் கொள்கிறான். கொலையாளியிடம்கூடத் தூய ஆன்மா இருக்கிறது. அது இறப்பதில்லை. அதை மூடி மறைத்து, வெளிப்படாமல் செய்தது அவனுடைய தவறு. தான் கொலை செய்யப்பட்டதாக நினைக்கும் மனிதனிலும் ஆன்மா அழிவ தில்லை. அது என்றென்றும் உள்ளது. அதைக் கொல்லவோ அழிக்கவோ ஒருபோதும் முடியாது. அணுவிலும் அணுவாக, பெரியதிலெல்லாம் பெரியதாக உள்ள இந்த இறைவன் எல்லா மனித இதயங்களின் ஆழத்திலும் இருக்கிறார். துன்பங்களைக் கடந்தவர்கள், மாசற்றவர்கள், சோகமற்றவர்கள் அவரது கருணையால் அவரைக் காண்கிறார்கள். உடல் இல்லாத ஆனால் உடலுள் உறைகின்ற, இடத்தைக் கடந்த ஆனால் இடத்தை நிறைத்திருக்கின்ற, எல்லையற்ற, அங்கிங்கெனாத படி எங்கும் நிறைந்த பொருளே ஆன்மா என்பதை உணர்கின்ற ரிஷிகள் என்றும் துன்பம் அடைவதில்லை.

'இந்த ஆன்மாவைப் பேச்சாற்றல் மூலமோ, பரந்த அறி வின் மூலமோ, வேதங்களைப் படிப்பதன் மூலமாகவோ கூட உணர முடியாது.' (1.2.23) இவை மிகவும் தைரியமான வார்த்தைகள். ரிஷிகள் துணிவுமிக்க சிந்தனையாளர்கள் என்று நான் ஏற்கனவே சொன்னேன் அல்லவா! அவர்கள் எதற்கும் தயங்கவில்லை.

கிறிஸ்தவர்கள் பைபிளுக்கு அளிக்கும் இடத்தைவிட மேலானதோர் இடம் இந்தியாவில் வேதங்களுக்குக் கொடுக் கப்படுகிறது. அருளுணர்வு வெளிப்பாடு (Revelation) என்றால், இறைவன், ஒருவனின் உள்ளத்தில் மேலான உணர்வை, மேலான ஞானத்தை வெளிப்படுத்துகிறார், அதனால் அவர் அதனை எழுதினார் என்பதுதானே உங்கள் கருத்து! ஆனால் இந்தியா விலோ, எல்லா பொருட்களும் இருப்பதற்குக் காரணமே அவை வேதங்களில் சொல்லப்பட்டுள்ளன என்பதால்தான். எல்லா படைப்புமே வேதங்களிலிருந்தும் வேதங்களின்

மூலமாகவும்தான் வந்திருக்கின்றன. அறிவு என்று சொல்லப்படு பவை அனைத்தும் வேதங்களில் உள்ளன. அவற்றிலுள்ள ஒவ்வொரு வார்த்தையும் புனிதமானது. ஆன்மாவைப்போல் நிரந்தரமானது, ஆதி அந்தமற்றது. படைத்தவரின் மனமே வேதங்களில் உள்ளது என்று சொல்லலாம். இதுதான் வேதங்களைப்பற்றிய கருத்தாக இருக்கிறது. ஒரு செயலை ஏன் ஒழுக்கம் என்று சொல்கிறோம்? வேதம் சொல்வதால். மற்றொன்றை ஏன் தீயொழுக்கம் என்று சொல்கிறோம்? வேதங்கள் சொல்வதால்தான். இப்படியிருந்தும் வேதங்களை அதிகம் படிப்பதால் உண்மையை அடைந்துவிட முடியாது என்று தீர்மானமாகக் கூறிய ரிஷிகளின் துணிச்சலைப் பாருங்கள். 'இறைவன் யாரிடம் அருள் கொள்கிறாரோ அவருக்கே தம்மை வெளிப்படுத்துவார்.' (1. 2. 23) இவ்வாறு சொல்வது, இறைவன் பாரபட்சம் காட்டுபவர் என்றல்லவா ஆகும் என்று சொல்லலாம். அதனை எமன் விளக்குகிறான்: 'தீய காரியங்களைச் செய்தவர்களால், மனம் அமைதி பெறாதவர்களால் ஒருபோதும் உண்மையின் ஒளியைக் காண முடியாது. யாருடைய இதயத்தில் உண்மை இருக்கிறதோ, செயலில் தூய்மை இருக்கிறதோ, புலன்கள் கட்டுப்பாட்டில் இருக்கின்றனவோ அவர்களுக்குத்தான் ஆன்மா தன்னை வெளிப்படுத்தும்.'(1. 2. 24)

இதோ ஓர் அற்புதமான உருவகம்! உடலைத் தேராகவும், ஆன்மாவைச் சவாரி செய்பவராகவும், புத்தியைத் தேரோட்டி யாகவும், மனத்தைக் கடிவாளமாகவும், புலன்களைக் குதிரை களாகவும் கற்பனை செய்து கொள்ளுங்கள். யாருடைய குதிரை கள் நன்கு பழக்கப்பட்டு இருக்கின்றனவோ, கடிவாளம் உறுதி யாக உள்ளதோ, தேரோட்டி அதை நன்றாகப் பிடித்திருக் கிறானோ, அவனே எங்கும் நிறைந்திருக்கின்ற நிலையான தன் குறிக்கோளை அடைவான். யாருடைய குதிரைகள் அடக் கப்படாமலும், கடிவாளம் உறுதியாகப் பிடிக்கப்படாமலும் இருக்கின்றனவோ, அவன் அழிவை நோக்கிப் போகிறான். (1. 3. 3–8) எல்லாவற்றிலும் உள்ள இந்த ஆன்மா, கண்களுக்கோ புலன்களுக்கோ புலனாவதில்லை. ஆனால் தூய்மையுற்ற, பக்கு வம் பெற்ற மனம் உடையவர்கள் அவரை உணர்கிறார்கள். ஒலி, ஒளி, உருவம், சுவை, தொடுஉணர்ச்சி அனைத்தையும் கடந்து, இயற்கையையும் கடந்து, தனிப்பொருளாக, எல்லை யற்றதாக, ஆதிஅந்தம் இல்லாததாக, மாறுதலே அடையாததாக

உள்ள பரம்பொருளை உணர்பவனே, மரணத்தின் பிடியிலிருந்து விடுதலை பெறுகிறான். இது மிகவும் கடினம்; கத்தி முனையில் நடப்பதைப் போன்றதே ஆகும். பாதை, நீண்டதும் அபாயங்கள் நிறைந்ததுமாகும். ஆனால் போராடுங்கள், மனம் தளராதீர்கள். எழுந்திருங்கள், விழித்திருங்கள், குறிக்கோளை அடையும்வரை முயற்சியை நிறுத்தாதீர்கள்.

எல்லா உபநிடதங்களின் ஊடேயும் இழைகின்ற மையக் கருத்து, அனுபூதி என்பதுதான். அவ்வப்போது கேள்விகள் பல எழுகின்றன, தற்காலத்தில் அதிகமாக எழுகின்றன. இதனால் என்ன பயன், என்பது போன்ற கேள்விகளும் எழுகின்றன. இந்தக் கேள்விகள் எல்லாமே நமது பழைய தொடர்புகளால் தூண்டப்பட்டே எழுகின்றன என்பதைக் காண்கிறோம். கருத்துக்களின் தொடர்பு, மனத்தின்மீது அளவில்லாத ஆதிக்கம் செலுத்துகிறது. குழந்தைப் பருவத்திலிருந்தே சகுணக் கடவுள் கருத்தையும், மனத்தின் தனித் தன்மையையும் பற்றியே கேள்விப்பட்டு வந்தவர்களுக்கு, இந்த வேதாந்தக் கருத்துக்கள் கடினமானவையாக, புரியாதவையாகத் தோன்றுகின்றன. ஆனால் அவர்கள் இந்தக் கருத்துக்களை உன்னிப்பாகக் கேட்டு, அவற்றைச் சிந்தித்து வந்தால், அவை அவர்களது வாழ்க்கையுடன் ஒன்றிவிடும்; அதன்பின் அவர்களைப் பயமுறச் செய்யாது.

சாதாரணமாக எழும் பெரிய கேள்வி தத்துவத்தின் பயன் என்ன என்பதுதான். அந்தக் கேள்விக்கு ஒரேயொரு பதில்தான் இருக்க முடியும். பயன்நோக்கு வாதத்தின்படி, இன்பம் தேடுவதே மனிதர்களுக்கு நல்லது என்றால், மத விஷயங்களில் இன்பம் காண்பவர்கள், ஏன் அவற்றை நாடிப் போகக் கூடாது? புலனின்பங்கள் பலருக்கு மகிழ்ச்சியைத் தருவதால் அவர்கள் அவற்றை நாடிப் போகிறார்கள். ஆனால் புலனின்பங்களில் நாட்டம்இல்லாமல், அவற்றைவிட உயர்ந்த இன்பங்களை நாடிச் செல்பவர்கள் இருக்கிறார்கள். உண்பதிலும் குடிப்பதிலும்தான் ஒரு நாய் இன்பம் அடைகிறது. எல்லாவற்றையும் துறந்து, ஒருவேளை ஏதோ மலை உச்சியில் அமர்ந்து, வானத்திலுள்ள நட்சத்திரங்களை ஆராயும் விஞ்ஞானியின் இன்பத்தை நாயால் புரிந்துகொள்ள முடியாது. அவன் ஒரு பைத்தியம் என்று நினைத்து அந்த நாய் சிரிக்கலாம். ஒருவேளை திருமணம் செய்துகொள்வதற்குக்கூட அந்த விஞ்ஞானியிடம் பணம் இல்லாமல் இருக்கலாம். அவன் மிக எளிய வாழ்க்கை

வாழ்கிறான். நாய் அவனைப் பார்த்துக் கேலியாகச் சிரிக்கலாம். ஆனால் விஞ்ஞானி அதைப் பார்த்து, 'அன்புள்ள நாயே, நீ அனுபவிக்கும் புலனின்பத்தைப்பற்றி மட்டுமே உனக்குத் தெரியும். அதற்கு அப்பாலுள்ள இன்பத்தைப்பற்றி உனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு இதுதான் மிகவும் இன்பம் தரும் வாழ்க்கை. உன் வழியில் இன்பம் தேட உனக்கு உரிமை இருந்தால், அதே உரிமை, என் வழியில் இன்பம் தேட எனக்கும் இருக்கிறது' என்று கூறுகிறான்.

நம்முடைய சிந்தனையைப் போல்தான் உலகிலுள்ள அனைவரின் சிந்தனையும் இருக்க வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். நம் மனத்தையே பிரபஞ்சத்தில் உள்ள அனைவரின் மனத்திற்கும் அளவுகோலாகக் கொள்கிறோம். இது நாம் செய்யும் தவறு. உங்களைப் பொறுத்தவரை புலனின்பமே மிகப் பெரிய இன்பமாக இருக்கலாம். ஆனால் என் இன்பமும் அப்படியே இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. நீங்கள் அதை வற்புறுத்தினால் நான் உங்கள் கருத்திலிருந்து வேறுபடுகிறேன். பயன்நோக்குவாதிக்கும், ஆன்மீகவாதிக்கும் உள்ள வேற்றுமை இதுதான். 'நான் எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறேன், பார். எனக்குப் பணம் கிடைக்கிறது. மதத்திற்காக நான் மண்டையை உடைத்துக்கொள்ளப் போவதில்லை. அது அறிவதற்கு எளிதான ஒன்றல்ல. மதம் இல்லாமலேயே நான் சந்தோஷமாக இருக்கிறேன்' என்று பயன்நோக்குவாதி சொல்கிறான். சரி, நல்லதுதான்; பயன்நோக்குவாதிகளைப் பொறுத்தவரை இது நல்லதுதான். ஆனால் இந்த உலகம் பயங்கரமானது. தன்னைச் சுற்றி இருப்பவர்களுக்குக் கஷ்டம் உண்டாகாமல் ஒருவன் இன்பம் அடைய முடியுமானால், கடவுள் அவனுக்குத் துணை நிற்கட்டும்! ஆனால் அவன் என்னிடம் வந்து, 'நான் செய்வதைப் போல்தான் நீயும் செய்ய வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் நீ ஒரு முட்டாள்' என்று சொன்னால் நான் அவனைப் பார்த்து, 'நீ சொல்வது தவறு. ஏனெனில் உனக்கு இன்பமளிக்கும் பொருட்கள் என்னைத் துளியும் கவர்வதில்லை. கையளவு பணத்திற்காக அலைவேனானால் என் வாழ்க்கை பயனற்றது. அதைவிட நான் இறப்பதே மேல்' என்று சொல்வேன். ஆன்மீகவாதி அளிக்கும் பதில் இதுவாகத்தான் இருக்கும். உண்மை என்னவென்றால், இந்தக் கீழான புலனின்பங்களை அனுபவித்து ஒழித்தவனுக்குத்தான் மத உணர்வு உண்டாகும். நாம் அனுபவிக்க வேண்டியதையெல்லாம் அனுபவித்தாக

வேண்டும், முழுமையாக அனுபவித்துத் தீர்க்க வேண்டும். அதன்பின்னரே அடுத்த உலகக் கதவு திறக்கிறது.

புலனின்பங்கள் சிலவேளைகளில் உருமாறி வருகின்றன. இது அபாயமானது, ஆசையைத் தூண்டுவது. பழங்கால மதங்கள் எல்லாவற்றிலுமே ஒரு பொதுவான கருத்தைக் காணலாம். இந்த வாழ்க்கையின் துன்பங்கள் எல்லாமே மறைந்து, இன்பங்களே மிஞ்சும் ஒரு காலம் வரும், அப்போது இந்தப் பூமியே சொர்க்கமாக மாறிவிடும் என்பதே அந்தக் கருத்து. எனக்கு இதில் நம்பிக்கை இல்லை. இந்த உலகம் எப்போதும் இப்படியேதான் இருக்கும். நான் சொல்வது பயங்கரமான விஷயம்தான். ஆனால் சொல்லாமல் வழியில்லை. உலகின் துன்பம், குணப்படுத்த முடியாத மூட்டுவாதம் போன்றது. உடம்பில் ஓர் இடத்தில் இதைக் குணப்படுத்தினால் வேறிடத்திற்குச் செல்லும். அங்கிருந்து துரத்துங்கள், வேறு ஓர் இடத்தில் அதை உணர்வீர்கள். என்ன செய்தாலும், அது இடத்திற்கு இடம் தாவிக்கொண்டே இருக்குமே தவிர உடம்பைவிட்டுப் போகாது.

மிகப் பழங்காலத்தில் மனிதர்கள் காடுகளில் வாழ்ந் தார்கள்; ஒருவரை ஒருவர் சாப்பிட்டார்கள். இன்று அவர்கள் ஒருவரை ஒருவர் சாப்பிடுவதில்லை, ஆனால் ஏமாற்றிக்கொள் கிறார்கள். நாடுகளும் நகரங்களுமே இதனால் அழிந்து போகின் றன. இது ஒரு முன்னேற்றமாகத் தெரியவில்லை. இந்த உலகில் முன்னேற்றம் என்று நீங்கள் சொல்வதெல்லாம், ஆசைகளைப் பெருக்கிக் கொள்வதே தவிர வேறெதுவுமாக எனக்குத் தெரிய வில்லை. எனக்குத் தெளிவாகத் தெரிவதெல்லாம் ஆசைகளே துன்பம் அனைத்தையும் கொண்டு வருகின்றன என்பதுதான். இந்த நிலை, எப்பொழுதும் எதையாவது யாசித்துக் கொண் டிருக்கும் பிச்சைக்காரனின் நிலைதான். பார்ப்பதையெல்லாம் சொந்தமாக்கிக் கொள்ள அவன் விரும்புகிறான். அந்த விருப்பம் இல்லாமல் அவனால் எதையும் பார்க்க முடியாது. இன்னும் அதிகம் வேண்டும் என்று ஏங்குகிறான். நம் ஆசைகளைத் திருப்திப்படுத்தும் சக்தி கூட்டல் விகிதத்தில் அதிகரித்தால், ஆசைகளின் சக்தி பெருக்கல் விகிதத்தில் அதிகரிக்கிறது. உல கிலுள்ள இன்ப துன்பங்களின் மொத்த அளவு அதிகரிக்கவோ குறையவோ செய்யாமல் எப்போதும் அப்படியேதான் இருக் கிறது. கடலில் ஓர் இடத்தில் அலை எழுந்தால் அது மற்றோ ரிடத்தில் பள்ளத்தை உண்டாக்குகிறது. ஒருவனுக்கு இன்பம்

வந்தால், மற்றொருவனுக்கோ, ஒருவேளை மற்றொரு பிராணிக்கோ துன்பம் வருகிறது. மனிதர்களின் தொகை பெருகு கிறது, ஆனால் சில மிருகங்களின் தொகை குறைகிறது. நாம் அந்த மிருகங்களைக் கொன்று, அவை வசிக்கும் இடத்தை ஆக்கிரமித்துக் கொள்கிறோம். நாம் வாழ்வதற்கான வழிகளை அவற்றிடமிருந்தே பெறுகிறோம். உலகில் இன்பம் அதிகரிக்கிற தென்று நாம் எப்படிச் சொல்ல முடியும்? வலிமை மிக்க இனங்கள் எளிய இனங்களை அழித்தே வாழ்கின்றன. ஆனால் இந்த வலிமைமிக்க இனம் சந்தோஷமாக இருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இல்லை. அவர்கள் ஒருவரை ஒருவர் கொல்ல ஆரம்பித்து விடுவார்கள். நடைமுறையில் இந்த உலகம் எப்படிச் சொர்க்கமாக முடியும் என்பது எனக்குத் தெரிய வில்லை. நடவடிக்கைகள் அதற்கு எதிராகவே இருக்கின்றன. கொள்கையளவில்கூட இது நடக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை.

நிறைநிலை என்பது எப்போதும் எல்லையற்றதாகவே இருக்கிறது. நாம் ஏற்கனவே இந்த எல்லையற்றதாகத்தான் இருக்கிறோம். அதை வெளிப்படுத்தவே முயன்று கொண்டி ருக்கிறோம். நீங்களும், நானும், ஏன், எல்லா உயிர்களுமே அதற்காகத்தான் முயன்று கொண்டிருக்கின்றன. இந்த அளவில் இது சரிதான். ஆனால் இந்த உண்மையை அடிப்படையாகக் கொண்டு, சில ஜெர்மானியத் தத்துவவாதிகள், ஒரு விசித்திர மான கொள்கையை உருவாக்கியிருக்கிறார்கள். இந்த வெளிப் பாடு மேன்மேலும் உயர்ந்துகொண்டே போய் இறுதியில் நாம் முழுமை பெற்றுவிடுவோம், பூரணத்துவம் அடைந்து விடு வோம் என்பதுதான் அது. முழுமையான வெளிப்பாடு என்பது என்ன? முழுமையடைவது என்றால் எல்லையற்றதாக ஆவது, வெளிப்பாடு என்றால் எல்லைக்கு உட்படுவது. ஆகவே நாமெல் லோரும் எல்லைக்கு உட்பட்ட எல்லையற்றதாகி விடுவோம் என்றாகிறது. இது முன்னுக்குப்பின் முரணானது. இத்தகைய கருத்து குழந்தைகளுக்குச் சந்தோஷம் அளிக்கலாம். அதே வேளையில் அவர்களின் மனங்களில் அது பொய் என்ற விஷத்தையும் செலுத்துகிறது. மத உணர்வுக்கு இது மிகவும் கேடு விளைவிக்கக் கூடியது. ஆனால் இந்த உலகம் இப்போது இருக்கும் நிலை, அதன் உண்மை நிலையிலிருந்து தாழ்வடைந்த நிலைதான் என்பதும், கடவுள் நிலையிலிருந்து வீழ்ச்சியடைந்த வனே மனிதன் என்பதும், ஆதாம் தன்னுடைய நிலையிலிருந்து

வீழ்ச்சி அடைந்துவிட்டான் என்பதும் நமக்குத் தெரியும். மனிதன் தன் உன்னத நிலையிலிருந்து வீழ்ச்சி அடைந்தவனே என்று போதிக்காத ஒரு மதம்கூட இன்று உலகில் கிடையாது. நாம் மிருகநிலைக்கு வீழ்ச்சியடைந்து, மறுபடியும் உயர்ந்து, இந்தக் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலை பெற முயன்று கொண்டிருக்கிறோம். ஆனால் எல்லையற்றதை முழுமையாக வெளிப்படுத்த இங்கே நம்மால் முடியாது. நாம் கடுமையாகப் போராடலாம். ஆனால் புலன்களுக்குக் கட்டுப்பட்டிருக்கின்ற நிலையில், இங்கே நிறைநிலை அடைய முடியாது என்பதை நாம் உணரும் காலம் வந்தே தீரும். அப்போது நமது பழைய, உண்மையான, எல்லையற்ற நிலைக்குத் திரும்பிப் போகின்ற பயணத்தை ஆரம்பிப்போம்.

இதுதான் துறவு. நாம் உள்ளே வந்த பாதையிலேயே திரும்பி மேலே போக ஆரம்பிப்பதுதான் துன்பத்திலிருந்து விடுபடும் வழியாகும். அப்போதுதான், ஒழுக்கம் மற்றும் அறநெறிக் கோட்பாடுகள் உருவாகத் தொடங்கும். எல்லா நீதி நெறிக் கோட்பாடுகளுக்கும் நிரந்தர அடிப்படை எது?' 'நானல்ல, நீயே' என்பதுதான். இந்த 'நான்' என்பது, எல்லாவற்றையும் கடந்த எல்லையற்ற பரம்பொருள், தன்னைப் பிரபஞ்சத்தில் வெளிப்படுத்திக் கொள்ளச் செய்யும் முயற்சியே ஆகும். அதன் பலன்தான் இந்தச் சிறிய 'நான்'. இது திரும்பிப் போய், தன் உண்மை நிலையாகிய எல்லையற்ற தன்மையை அடைய வேண்டும். 'சகோதரா! நான் முக்கியமல்ல, நீதான் முக்கியம்' என்று நாம் சொல்லும் ஒவ்வொரு முறையும் அவ்வாறு திரும்பிச் செல்வதற்கு முயல்கிறோம். 'நான்தான், நீயல்ல' என்று நாம் சொல்லும் ஒவ்வொரு முறையும், இந்தப் புலனுலகின் மூலம் எல்லையற்ற பரம்பொருளை வெளிப்படுத்த முயல்வதான தவறான பாதையில் அடியெடுத்து வைக்கிறோம். இதுதான் உலகில் போராட்டங்களையும் தீமைகளையும் ஏற்படுத்துகிறது. ஆனால் சில காலத்திற்குப் பின் நிலையான துறவு வந்தே தீரும். சிறிய-நான் இறந்து, அழிந்து விடுகிறது. இந்த அற்பமான வாழ்விற்காக ஏன் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டும்? இங்கும் சரி, மறு உலகங்களிலும் சரி, இந்த வாழ்வை அனுபவிக்க வேண்டும் என்ற வீணான ஆசைகள் மரணத்திலேயே கொண்டுபோய்விடும்.

மிருகங்களின் பரிணாம வளர்ச்சிதான் நாம் என்றால், மிருகங்கள் என்பவை வீழ்ச்சிபெற்ற மனிதர்களாக இருக்கலாம்.

அப்படி இல்லை என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? மிகவும் எளிய முறையில் அமைந்த உடல்களிலிருந்து, மிகவும் சிக்கலான முறையில் அமைந்த உடல்கள்வரை, கீழிருந்து மேலே போகும் அமைப்புத்தான் பரிணாமக் கொள்கையின் நிரூபணம் என்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். ஆனால் அதை மட்டும் வைத்துக்கொண்டு, இந்த அமைப்பு கீழிருந்து மேலேதான் போகிறது, மேலிருந்து கீழே வருவதில்லை என்று எப்படிச் சொல்ல முடியும்? இரண்டு பக்கங்களுக்கும் ஆதாரமாக வாதங்கள் இருக்கின்றன. இந்தக் கொள்கையில் ஏதாவது உண்மை இருக்குமானால்—இருக்கும் என்றே நான் நம்புகிறேன்—இந்த அமைப்பு மாறிமாறி மேலேயும் கீழேயும் போய் வருகிறது என்பதே உண்மை. ஒடுக்கம் இல்லாமல் விரிவு எப்படி இருக்க முடியும்? உயர்ந்த நிலைக்கான நமது போராட்டம், நாம் உயர்ந்த நிலையிலிருந்து வீழ்ச்சி அடைந்தவர்கள் என்பதையே காட்டுகிறது. உண்மை அப்படித்தான் இருக்க வேண்டும். விவரங்கள் வேண்டுமானால் வேறுபடலாம்.

ஏசுவும் புத்தரும் சொல்வதும் வேதாந்தம் சொல்வதும் நாம் எல்லோரும் ஒருநாள் நிச்சயமாக நிறைநிலையை அடைவோம், ஆனால் முழுமையடையாத இந்த நிலையை விட்டால்தான் அது முடியும், என்பதுதான். நான் அந்தக் கருத்தைத்தான் எப்போதும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறேன். இந்த உலகம் ஒன்றுமே இல்லை. மிஞ்சிப் போனால், இது ஓர் அருவருப்பான கேலிச் சித்திரம், உண்மையின் நிழல், அவ்வளவுதான். நாம் உண்மையை நோக்கித்தான் போக வேண்டும். துறவு அங்கு நம்மை அழைத்துச் செல்லும். நமது உண்மையான வாழ்க்கையின் அடிப்படையே துறவுதான். நாம் நம்மைப்பற்றி எண்ணாத நேரங்களில் மட்டுமே நன்மையையும், உண்மையான வாழ்க்கையையும் அனுபவிக்கிறோம். நம்முடைய சிறிய-நான் அழிய வேண்டும். அப்போதுதான், நாம் உண்மைப் பொருள், அந்த உண்மையே கடவுள், அதுதான் நமது உண்மையான இயல்பு, அது எப்போதும் நமக்கு உள்ளேயும் நம்மோடு கூடவேயும் இருக்கிறது என்பதை உணர முடியும். நாம் அவரிலேயே வாழ்வோம், அவரிலேயே நிற்போம். அந்த நிலை ஒன்றுதான் இன்பமான நிலை. ஆன்ம நிலையில் வாழ்வதுதான் உண்மையான வாழ்க்கை. நாம் எல்லோரும் அந்த அனுபூதி நிலையை அடைவதற்கு முயல்வோமாக!

## 9. பன்மையில் ஒருமை

3 நவம்பர் 1896

'புலன்களைப் புறநோக்கு உள்ளவையாகவே இறைவன் படைத்துள்ளார். அதனால் மனிதர்கள் புறமுகமாகப் பார்க் கிறார்கள். தங்களுக்கு உள்ளே பார்ப்பதில்லை. அவர்களுள் யாரோ ஒரு தீரன் மரணமிலாப் பெருநிலையை விரும்பி புலன் களை அகமுகமாகத் திருப்பி, உள்ளே ஆன்மாவை உணர் கிறான்'(2. 1. 1) நான் ஏற்கனவே கூறியதுபோல் நாம் வேதங் களில் காணும் முதல் ஆராய்ச்சி, புறப்பொருட்களைப் பற்றிய தாக இருந்தது. பிறகு, புற உலகில் பொருட்களின் உண்மையைக் கண்டுபிடிக்க முடியாது; வெளியில் பார்ப்பதால் அல்ல, பார்வையை உள்ளே திருப்புவதால் மட்டுமே அது முடியும் என்ற கருத்துத் தோன்றியது.

ஆன்மாவைக் குறிக்கும் வார்த்தை மிகவும் பொருள் செறிந்தது. 'அகத்துள் போயிருப்பவர்' (ப்ரத்யகாத்மன்) என்பதே அந்த வார்த்தை. அவர் நமது உயிருக்கு உயிர், நம் இதய மையம், நமது அடிப்படை உண்மை, எல்லாம் எங்கிருந்து வருகின்றனவோ அந்த மையம். மனம், புலன்கள் மற்றும் நாம் பெற்றிருக்கும் எல்லாமே அந்த மையச் சூரியனிலிருந்து வெளிவரும் கிரணங்கள்தான்.

'அறிவில் சிறியோரும் அஞ்ஞானிகளும் புற இன்பங் களைத் தேடி ஓடுகிறார்கள். விரிந்து கிடக்கும் மரண வலையில் அவர்கள் விழுகிறார்கள். அறிவாளிகள் மரணமிலாப் பெரு நிலையைப் புரிந்துகொண்டு, எல்லைக்கு உட்பட்ட பொருட் களில் எல்லையற்றதைத் தேடுவதில்லை.'(2. 1. 2) முதலில் சொன்ன கருத்தே இங்கே தெளிவாக்கப்படுகிறது. எல்லைக்கு உட்பட்ட பொருட்கள் நிறைந்த இந்தப் புறவுலகில், எல்லை யற்றதைக் காண்பது முடியாத காரியம். எல்லையற்றதை எல்லையற்றதில் மட்டுமே தேட வேண்டும். நம்மிடம் எல்லை யற்றதாக இருக்கும் ஒரே பொருள் நம்முள் இருப்பதான நமது ஆன்மாதான். உடல், மனம், எண்ணங்கள், நம்மைச் சுற்றி

நாம் காணும் உலகம் எதுவுமே எல்லையற்றது அல்ல. காண் பவன் அதாவது மனிதனின் ஆன்மாவிற்குத்தான் இவையெல் லாம் சொந்தம். மனிதனுக்கு உள்ளே எப்போதும் விழித்திருக் கின்ற அந்த ஆன்மா மட்டுமே எல்லையற்றது. பிரபஞ்சத்தின் தோற்றத்திற்குக் காரணமான எல்லையற்ற பரம்பொருளைத் தேட வேண்டுமானால் நாம் அங்குதான் தேட முடியும். எல்லை யற்ற ஆன்மாவிலேயே அதை நாம் காண முடியும். 'இங்கே இருப்பது அங்கேயும் இருக்கிறது; அங்கே இருப்பதுதான் இங்கேயும் இருக்கிறது. பன்மையைக் காண்பவன் மரணத் திலிருந்து மரணத்திற்குப் போய்க்கொண்டே இருக்கிறான்.' (2. 1. 10)

சொர்க்கத்திற்குப் போகும் ஆசை முதலில் எவ்வாறு இருந்தது என்பதைப் பார்த்தோம். பழங்கால ஆரியர்கள், தங்களைச் சுற்றியுள்ள உலகில் அதிருப்தி அடைந்தவுடன், இறந்தபின் வேறு ஓர் உலகிற்குப் போவோம், அங்குத் துன்பமே இருக்காது, இன்பம் மட்டுமே நிறைந்திருக்கும் என்று இயற்கை யாகவே நினைத்தார்கள். இந்த உலகங்களைத் தங்கள் கற்பனை யில் பலவாகப் பெருக்கிக்கொண்டு, அவற்றைச் சொர்க்கங்கள் என்று அழைத்தார்கள். அங்கே எப்போதும் இன்பமே இருக்கும்; உடல், மனம் எல்லாமே பூரணத்துவம் பெற்று விடும்; பித்ருக்களோடு அங்கே வாழலாம் என்றெல்லாம் அவர்கள் நம்பினார்கள். ஆனால் தத்துவ சாஸ்திரம் தோன்றிய வுடனேயே, இந்தக் கருத்து முட்டாள்தனமானது, சாத்திய மற்றது என்று உணர்ந்தார்கள். எல்லையற்ற இடம் என்ற கருத்தே முன்னுக்குப்பின் முரணானதாகும். ஏனெனில் இடம் என்பது காலத்தில் ஆரம்பித்து, காலத்திலேயே தொடர்ந்து இருப்பது. ஆகவே அவர்கள் அந்தக் கருத்தைக் கைவிட நேர்ந் தது. சொர்க்கத்திலுள்ள இந்தத் தேவர்களெல்லாம் ஒரு காலத்தில் பூமியில் மனிதர்களாக இருந்தவர்கள், தங்கள் நல்ல காரியங்களால் தேவர்களாக உயர்ந்தவர்கள். தேவத்துவம் என்பது உண்மையில் வெவ்வேறு நிலைகளே, வெவ்வேறு பதவிகளே. வேதங்களில் காணப்படும் தேவர்கள் யாருமே நிலையாக உள்ளவர்கள் அல்ல என்று கண்டார்கள்.

உதாரணமாக இந்திரன், வருணன் என்பவையெல்லாம் குறிப்பிட்ட சிலரின் பெயர்கள் அல்ல. அவை, பதவிகளின் பெயர்கள் மட்டுமே. முன்பு இருந்த இந்திரன் இப்போது உள்ள இந்திரன் அல்ல. பழைய இந்திரன் இறந்து, அந்தப்

பதவி, பூமியிலிருந்த மனிதன் ஒருவனுக்குக் கிடைத்து விட்டது. எல்லா தேவர்களின் நிலையும் இதுவே. தேவர்களின் நிலைக்குத் தங்களை உயர்த்திக்கொண்ட மனித உயிர்கள் ஒவ் வொன்றாக அடுத்தடுத்து வகித்து வரும் பதவிகளே இவை. இந்தத் தேவர்களுக்கும் மரணம் உண்டு. மரணமில்லாத நிலையை இந்தத் தேவர்களோடு தொடர்புபடுத்திப் பேசியிருப் பதைப் பழைய ரிக் வேதத்தில் நாம் காண்கிறோம். பின்னால் இந்தக் கருத்து முற்றிலுமாகக் கைவிடப்பட்டது. மரணமற்ற நிலை என்பது காலம், இடம் இவற்றிற்கெல்லாம் அப்பாற் பட்டது. ஆகவே எவ்வளவு நுண்ணியதாக இருந்தாலும் பௌதீக உருவம் எதனுடனும் இந்த நிலையைத் தொடர்புபடுத்த முடியாது என்று அவர்கள் கண்டார்கள். பௌதீக உருவம் எவ்வளவு நுட்பமாக இருந்தாலும், அவை காலம், இடம் இவற்றிற்குக் கட்டுப்பட்டதே. ஏனென்றால் பௌதீக உருவத்தின் மூலக்கூறுகள் இடம் என்பதிலிருந்தே வர வேண்டும். இடத் திற்குள் கட்டுப்படாத உருவத்தைக் கற்பனை செய்து பாருங்கள். முடியாது. உருவத்தை உருவாக்கும் மூலப் பொருட்களில் இடமும் ஒன்றாகும். இதுவும் இடைவிடாமல் மாறிக்கொண்டே இருக்கிறது.

இடமும் காலமும் மாயையின் உள்ளேயே உள்ளதாகும். ‘இங்கே இருப்பது அங்கேயும் இருக்கிறது’ என்ற வாக்கியம் இந்தக் கருத்தைத்தான் வெளிப்படுத்துகிறது. தேவர்கள் இருப் பார்களானால் அவர்களும் இந்த உலக விதிகளுக்குக் கட்டு பட்டேயாக வேண்டும். இனி, எல்லா விதிகளுமே மீண்டும் மீண்டும் அழிந்து தோன்றுவதை இயல்பாகக் கொண்டவை. இந்த விதிகள் ஜடப்பொருளை வெவ்வேறு உருவங்களாக வார்க்கின்றன, பின்னர் அழிக்கின்றன. பிறந்ததெல்லாம் இறக்கத் தான் வேண்டும். ஆகவே சொர்க்கங்கள் இருந்தால் அவற்றையும் இந்த விதிகள் கட்டுப்படுத்தவே செய்யும்.

இந்த உலகில், இன்பத்தைத் தொடர்ந்து அதன் நிழலாகத் துன்பம் வருவதைக் காண்கிறோம். வாழ்க்கையின் நிழல் மரணமாக உள்ளது. அவை சேர்ந்தே இருக்கும். ஏனெனில் அவை ஒன்றுக்கொன்று முரணானவை அல்ல, தனித்தனி யானவை அல்ல. வாழ்வு-சாவு, இன்பம்-துன்பம், நன்மை-தீமை இவை எல்லாமே ஒரே பொருளின் வேறுபட்ட வெளிப்பாடுகள் மட்டுமே. நன்மையும் தீமையும் தனித்தனி யானவை என்பதும், இப்படியே கால வரம்பின்றி இவை

இருந்துகொண்டிருக்கின்றன என்பதும் முற்றிலும் தவறானவை. அவை ஒரே உண்மையின் வேறுபட்ட வெளிப்பாடுகள்; ஒருசமயத்தில் தீமையாகவும் மற்றொரு சமயத்தில் நன்மை யாகவும் தெரிகிறது. வித்தியாசம் தன்மையில் இல்லை, அளவில்தான் இருக்கிறது. அளவின் தீவிரத்தில்தான் ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபடுகிறது. ஒரே நரம்பு மண்டலம் தான் இன்ப உணர்ச்சிகள், துன்ப உணர்ச்சிகள் இரண்டையும் கொண்டு செல்கிறது என்பது நமக்குத் தெரிந்த உண்மை. அந்த நரம்புகள் சேதமடைந்தால் இரண்டையுமே நாம் உணர்வதில்லை. ஒரு குறிப்பிட்ட நரம்பு செயலற்றுவிட் டால், அதன்மூலம் கிடைத்து வந்த இன்ப அனுபவம் நமக்குக் கிடைப்பதில்லை; அதேபோல் துன்ப அனுபவமும் கிடைப் பதில்லை. அவை ஒருபோதும் இரண்டல்ல, ஒன்றுதான்.

ஒரே பொருள், வாழ்க்கையில், ஒருசமயத்தில் இன்பமும் மற்றொரு சமயத்தில் துன்பமும் அளிப்பதாக இருக்கிறது. ஒரே நிகழ்ச்சி ஒருவருக்கு இன்பத்தையும் மற்றொருவருக்குத் துன்பத்தையும் அளிக்கிறது. இறைச்சியை உண்பவன் இன்பம் அடைகிறான். அந்த இறைச்சிக்காகக் கொல்லப்படும் பிராணி துன்பம் அடைகிறது. எல்லோருக்கும் ஒரேபோல் இன்பம் அளிக்கும் பொருள் என்று ஒன்று உலகத்தில் இல்லவே இல்லை. சிலருக்கு இன்பமும் வேறு சிலருக்குத் துன்பமும் கிடைக்கிறது. இப்படியேதான் நடந்து கொண்டிருக்கும். ஆகவே இரண்டு என்ற இந்த வேறுபாட்டிற்கே இடமில்லை. தொடர்வது என்ன? உலகில், தீமையே கலக்காத நன்மை மட்டுமே இருக்கும் காலம் என்றுமே வராது என்பதை இதற்கு முந்திய சொற்பொழிவில் நான் உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன். இது உங்களில் சில ருக்கு ஏமாற்றத்தையும் பயத்தையும் அளித்திருக்கும். ஆனால் அதை நான் சொல்லாமல் இருக்க முடியாது. மாறான கருத்தை நிரூபித்தால் என் கருத்தை மாற்றிக்கொள்ள நான் தயாராக இருக்கிறேன். ஆனால், மாறான அந்தக் கருத்து நிரூபணமாகி, நானும் அதை உண்மை என்று அறியாமல், என் கருத்தை மாற்றிக்கொள்ள மாட்டேன்.

என்னுடைய கருத்திற்கு எதிரான வாதம் வெளிப் பார்வைக்கு மிகவும் திருப்திகரமாகத்தான் தோன்றுகிறது. அந்த வாதம் இதுதான்: பரிணாம வளர்ச்சியில், நம்மைச் சுற்றி நாம் காணும் தீமைகள் குறைந்துகொண்டே வருகின்றன. இவ் வாறு கோடிக்கணக்கான வருடங்களுக்குக் குறைந்துகொண்டே

போகுமானால், உலகில் தீமையே இல்லாமல் நன்மை மட்டுமே எஞ்சியிருக்கும் காலம் ஒன்று வரும். இது மிகவும் சிறந்த வாத மாகத்தான் தோன்றுகிறது. இது உண்மையாக இருக்குமானால் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் இந்த வாதத்தில் ஒரு குறை இருக்கிறது. ஆரம்பத்திலிருந்தே நன்மை தீமை இரண்டும் ஒரு குறிப்பிட்ட அளவு இருக்கின்றன என்று நாம் கொள்வதுதான் இந்தக் குறைபாடு. குறிப்பிட்ட அளவு தீமையும், அதேபோல் குறிப்பிட்ட அளவு நன்மையும் ஏற்கனவே இருப்பதாகவும், தீமை நாளுக்குநாள் குறைந்துகொண்டே வந்து, கடைசியில் நன்மை மட்டுமே மிஞ்சி இருப்பதாகவும்தான் இந்த வாதம் சொல்கிறது.

இது உண்மையா? தீமை, நன்மை இரண்டுமே தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே போவதாக அல்லவா உலக வரலாறு காட்டுகிறது! காட்டில் வசிக்கும் மிகத் தாழ்ந்த மனிதனை எடுத்துக் கொள்வோம். அவனுடைய இன்பமனுபவிக்கும் சக்தி மிகக் குறைவு. அதேபோல், துன்பமனுபவிக்கும் சக்தியும் மிகவும் குறைவுதான். அவனுடைய துன்பம் புலன்நிலைக்கு அப்பால் போவதில்லை. வயிறு நிறைய உணவு கிடைக்காவிட்டால் அவன் துன்பம் அடைகிறான். நிறைய உணவும், காட்டில் விருப்பம்போல் சுற்றி வேட்டையாடும் சுதந்திரமும் கிடைத்து விட்டால் அவனைப்போல் இன்பம் அடைபவர்கள் வேறு யாரும் இருக்க முடியாது. அவனுடைய இன்பம், துன்பம் இரண்டுமே புலனளவில்தான் இருக்கின்றன. அதே மனிதன், தன் அறிவை வளர்த்துக் கொண்டால், அவனது இன்ப அனுபவம் அதிகரிக்கிறது. அறிவுச் சுரங்க வாசல் அவனுக்குத் திறக்கிறது. அவனுடைய புலனின்பம் அறிவின்பமாக வளர்ச்சி யடைகிறது. ஓர் அழகிய கவிதையைப் படிப்பதில் அவன் இன்பம் காண்கிறான். ஒரு கணிதப் பிரச்சினையில் அவன் தன்னை மறந்து ஈடுபடுகிறான். ஆனால் அதனுடன் கூடவே நுட்பமடைந்த நரம்புகள், மனத் துன்பத்திற்கு மிகவும் சுலபமாக அடிமைப்படுகின்றன. காட்டு மனிதனுக்கோ மனத்துன்பம் என்பதே இல்லை.

மிகவும் சாதாரணமான உதாரணம் ஒன்றைப் பார்ப்போம். திபெத்தில் திருமணச் சடங்கு இல்லை, அதனால் பொறாமையும் இல்லை. திருமணம் ஓர் உயர்ந்த நிலை என்பது நம் எல்லோ ருக்கும் தெரியும். கற்பு, பதிவிரதையான மனைவியால் ஏற்படும் இன்பம், பிற பெண்டிரை மனத்தாலும் நினைக்காத கணவனால்

ஏற்படும் இன்பம் இவற்றைப் பற்றியெல்லாம் திபெத்தியர்களுக்கு ஒன்றும் தெரியாது. அவர்களால் இதை உணர முடியாது. அதைப் போலவே, கற்புள்ள மனைவி, கணவன் இவர்களுக்குத் தோன்றும் தீவிரமான பொறாமை உணர்ச்சி, இவர்கள் செய்யும் நம்பிக்கைத் துரோகம், இதனால் ஏற்படும் துன்பங்கள், மனப்புண் இவையெல்லாமும் திபெத்தியர்களுக்கு இல்லை. பின்னவர்கள், ஒரு பக்கத்தில் இன்பம் அடைகிறார்கள்; மறு பக்கத்தில் துன்பம் அடைகிறார்கள்.

உலகத்திலேயே மிகவும் பணக்கார நாடான உங்கள் நாட்டையே எடுத்துக் கொள்வோம். உங்கள் நாடு மற்ற நாடுகளைவிடப் போகம் மிகுந்தது. அதேவேளையில் இங்கே உள்ள துன்பத்தின் தீவிரம் எவ்வளவு அதிகமாக இருக்கிறது என்பதையும் பாருங்கள். மற்ற இனங்களோடு ஒப்பிட்டால், உங்கள் நாட்டில்தான் பைத்தியக்காரர்கள் அதிகம். ஆசைகள் தீவிரமாக இருப்பதுதான் இதற்குக் காரணம். இங்கே, மனிதன் தன் வாழ்க்கைத் தரத்தை மிகவும் உயர்த்திக்கொள்ள வேண்டும். இங்கே ஒருவன் ஒரு வருடத்தில் செலவழிக்கும் பணம், இந்தியாவிலுள்ள ஒரு மனிதனுக்கு ஒரு பெரும் சொத்தாகும். இங்கே உள்ளவனுக்கு, எளிய வாழ்க்கையைப்பற்றி உபதேசம் செய்ய முடியாது. ஏனெனில் இங்கே உள்ள சமுதாயம், மனிதனை ஆடம்பர வாழ்க்கைக்குத்தான் கட்டாயப்படுத்துகிறது. சமுதாயத்தின் சக்கரம் சுழன்றுகொண்டே இருக்கிறது. விதவைகளின் கண்ணீரையும் அனாதைகளின் அழுகையையும் அது பொருட்படுத்துவதில்லை. எங்கு பார்த்தாலும் இதே நிலைதான் இருக்கிறது. உங்களுடைய இன்பம் அனுபவிக்கும் உணர்ச்சி வளர்ச்சி அடைந்திருக்கிறது. மற்ற சில சமுதாயங்களைவிட உங்கள் சமுதாயம் மிகவும் அழகானதாகவும் இருக்கிறது. நீங்கள் அனுபவிப்பதற்கு மற்றவர்களைவிட அதிகமான விஷயங்கள் இருக்கின்றன.

உங்களைவிடக் குறைவான இன்பம் அனுபவிப்பவர்களுக்குத் துன்ப அனுபவமும் குறைவாகவே இருக்கிறது. இவ்வாறு வாதம் செய்துகொண்டே போகலாம். குறிக்கோள் உயர்ந்ததாக இருக்கும் அளவிற்கு இன்ப அனுபவம் அதிகமாக இருக்கும், அதேபோல் துன்ப அனுபவமும் அதிகமாக இருக்கும். ஒன்று மற்றொன்றின் நிழல்போல் இருக்கிறது. தீமைகள் குறைந்து கொண்டே வருகின்றன என்பது உண்மையாக இருக்கலாம். அது உண்மையானால் நன்மைகளும் குறைந்து கொண்டுதான்

வர வேண்டும். ஆனால் எனக்குத் தெரிந்த அளவில், நன்மைகள் குறைந்துகொண்டும், தீமைகள் வேகமாக அதிகமாகிக் கொண்டும் அல்லவா வருகிறது! நன்மை கூட்டல் விகிதத்தில் அதிகரித்தால், தீமை பெருக்கல் விகிதத்தில் அல்லவா அதிகரிக்கிறது! இதுதான் மாயை. இது இன்பநோக்குமல்ல; துன்ப நோக்குமல்ல. உலகம் வெறும் துன்பமயமானது மட்டுமே என்பது வேதாந்தத்தின் கருத்தல்ல. அது உண்மையாக இருக்காது. அதேவேளையில் இன்பமும் வாழ்த்துக்களும் நிறைந்ததுதான் உலகம் என்று சொல்வதும் தவறாகும்.

ஆகவே இந்த உலகம் நன்மை நிறைந்தது, மலர்கள் பூத்துக் குலுங்குவது, பாலும் தேனும் ஆறாகப் பாய்வது என்று குழந்தைகளிடம் சொல்வதால் பயனில்லை. நாமும் அப்படித்தான் கனவு கண்டு வந்திருக்கிறோம். அதேவேளையில் ஒருவன் மற்றொருவனைவிட அதிகத் துன்பத்தை அனுபவிப்பதால், உலகமே தீமை நிறைந்தது என்று நினைப்பதும் தவறு. இந்த நன்மை தீமைகளாகிய இருமைகளின் விளையாடல்தான், நாம் அனுபவிக்கும் இந்த உலகத்தையே ஆக்குகின்றன. அதே வேளையில் 'நன்மையும் தீமையும் வெவ்வேறானவை, தனிப்பட்டவை என்று நினைக்காதீர்கள்; அவை ஒன்றேதான்; வெவ்வேறு அளவிலும், வெவ்வேறு வகையிலும் தோன்றி, ஒரே மனத்தில் வெவ்வேறு உணர்ச்சிகளை ஏற்படுத்துகின்றன' என்று வேதாந்தம் கூறுகிறது.

ஆகவே புற உலகத்தில் ஒருமையைக் காண்பதுதான் வேதாந்தத்தின் முதல் காரியமாகும். அந்த ஒரே பொருள் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதில் வேறுபாடுகளைக் காட்டினாலும் அது ஒன்றேதான். பாரசீகர்களுடைய பழைய பண்படாத கொள்கையைப் பாருங்கள். இரு தெய்வங்கள் உலகைப் படைப்பதாகவும், நல்ல தெய்வம் நன்மையே செய்வதாகவும், தீய தெய்வம் தீமையே செய்வதாகவும் அது கூறுகிறது. இது அறிவுக்குப் பொருந்தாது என்பது வெளிப்படை. ஏனென்றால், உலகம் இவ்வாறு நடைபெற்றால், இயற்கையின் ஒவ்வொரு விதிக்கும் இரண்டு பகுதிகள் இருக்க வேண்டும்; அதில் ஒரு தெய்வம் ஒரு பகுதியில் நன்மை செய்துவிட்டுத் தன் வழியே போய்விடுவார். பின்னர் மற்ற தெய்வம் வந்து மறு பகுதியைக் கவனிக்க வேண்டும். ஆனால் இரண்டு தெய்வங்களும் ஒரே உலகத்தில் வேலை செய்கின்றனர். இந்த இரு தெய்வங்களும் ஒரு பகுதிக்குத் தீமையையும், மற்றொரு பகுதிக்கு

நன்மையும் செய்தும் தங்களுக்குள் ஒற்றுமையாக இருக்கின்றனர் என்பதுதான் சிக்கலான பகுதி.

இது வாழ்க்கையின் இருமையைக் காட்டுகின்ற, பக்குவம் பெறாத முறையாகும். உலகத்தில் சிறிது நன்மை உண்டு, சிறிது தீமையும் உண்டு என்பது சிறிது முன்னேற்றமடைந்த கருத்து. முன்சொன்ன நிலையிலிருந்து பார்க்கும்போது இந்தக் கருத்தும் அறிவுக்குப் பொருந்தாததுதான். ஒருமை விதிதான் (Law of Unity) நமக்கு உணவு அளிக்கிறது; அதே விதிதான் விபத்துக்கள் மற்றும் ஆபத்துக்கள் மூலமாக எத்தனையோ பேரை மரணத்திலும் ஆழ்த்துகிறது.

ஆகவே உலகம் இன்பநோக்கு உடையதும் அல்ல. துன்ப நோக்குக் கொண்டதும் அல்ல. அது இரண்டும் கலந்த ஒன்று. அது மட்டுமல்ல இன்னும் ஆராய்ந்தால், மொத்தத் தவறும் இயற்கையில் இல்லை, நம்மிடம்தான் இருக்கிறது என்பதையும் நாம் உணர்வோம். இந்தச் சிக்கலிலிருந்து விடுபடும் வழியை வேதாந்தம் காட்டுகிறது. அந்த வழி தீமையை மறுப்பதல்ல. ஏனெனில் அது உண்மையை உள்ளபடியே துணிவுடன் ஆராய்கிறது, எதையும் அது மறைக்க முயல்வதில்லை. அது நம்பிக்கையை இழக்கவில்லை. கடவுளைப்பற்றிச் சந்தேகம் கொள்வதில் அது ஒரு பரிகாரத்தைக் கண்டுபிடித்திருக்கிறது. ஆனால் அதனை உறுதியானதோர் அஸ்திவாரத்தின்மீது வைக்க விரும்புகிறது. குழந்தையின் கண்களையும் வாயையும் உண்மையல்லாத ஒன்றால் கட்டிவிட்டு எதையும் செய்ய வேதாந்தம் முயல்வதில்லை. ஏனெனில் குழந்தை சில நாட்களில் உண்மையை அறிந்துகொள்ளும் என்பது வேதாந்தத்திற்குத் தெரியும்.

நான் இளைஞனாக இருந்தபோது நடந்த ஒரு நிகழ்ச்சி நினைவிற்கு வருகிறது. ஒரு வாலிபனின் தந்தை, சொத்தில்லாத நிலையில் பெரிய குடும்பத்தை அவன் தலையில் கட்டிவிட்டு இறந்துவிட்டார். அவனுடைய தந்தையின் நண்பர்கள், அவனுக்கு உதவி செய்ய முன்வரவில்லை. தன் கஷ்டத்தை ஒரு மதப்பிரச்சாரகரிடம் அவன் சொன்னபோது, 'ஓ, எல்லாம் நன்மைக்கே, நடப்பதெல்லாம் நன்மைக்கே' என்று அவர் உபதேசம் செய்தார். பழுத்த புண்ணின்மீது தங்க இலையை வைத்து மறைப்பது போன்ற பழைய பரிகாரம் இது. பலவீனத்தையும் முட்டாள்தனத்தையும் ஒத்துக்கொள்வதே இது. வாலிபன் அங்கிருந்து போய்விட்டான். ஆறுமாதத்திற்குப் பின்னால்

அந்தப் பிரச்சாரகருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. கடவுளுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில், அவர் ஒரு விருந்து வைத்தார். அதற்கு அந்த வாலிபனையும் அழைத்திருந்தார். 'கடவுளின் கருணைக்கு நன்றி' என்று அவர் பிரார்த்தனை செய்தார். வாலிபன் எழுந்து நின்று, 'நிறுத்துங்கள்; இதெல்லாம் துன்பம்' என்று கூறினான். 'ஏன்?' என்று அவர் கேட்டார். 'என் தந்தை இறந்தபோது, வெளிப்படையாகத் தீமையாகத் தோன்றினாலும், உண்மையில் அது நன்மையே என்று கூறினீர்கள். அதன்படி பார்த்தால் உங்களுக்குக் குழந்தை பிறந்திருப்பது தீமைதானே' என்று வாலிபன் கூறினான். இதுதான் உலகின் துன்பத்தைத் துடைக்கும் வழியா? நல்லவர்களாக இருங்கள். துன்புறுவோருக்குக் கருணை காட்டுங்கள். அதை மூடி மறைக்க முயலாதீர்கள். அது இந்த உலகத்தின் துன்பத்தைத் தீர்க்காது. அதற்கும் அப்பால் செல்லுங்கள்.

நன்மையும் தீமையும் கலந்தது உலகம். நன்மை இருக்கும் இடமெல்லாம் தீமை தொடர்கிறது. இந்த வெளிப்பாடுகள், முரண்பாடுகள் அனைத்தையும் கடந்து, அனைத்திற்கும் அப்பால் ஒருமையை வேதாந்தம் காண்கிறது. 'தீமையை விடுங்கள், நன்மையையும் விடுங்கள்' என்று அது கூறுகிறது. எஞ்சியிருப்பது என்ன? நன்மை, தீமை இரண்டிற்கும் பின்னால்தான், ஒவ்வொரு தீமைக்கும், அதுபோல் ஒவ்வொரு நன்மைக்கும் அப்பால்தான் உங்களுக்குச் சொந்தமான ஏதோ ஒன்று இருக்கிறது, உண்மையான நீங்கள் இருக்கிறீர்கள். நன்மையாகவும் தீமையாகவும் அந்த ஒன்றுதான் வெளிப்படுகிறது. அதை முதலில் அறிந்து கொள்வோம். அப்போது, அப்போது மட்டுமே நாம் உண்மையான இன்பநோக்குவாதிகள் ஆவோம், அதற்கு முன்னால் அல்ல. ஏனெனில் அப்போதுதான் நம்மால் எல்லாவற்றையும் அடக்கியாள முடியும். இந்த வெளித்தோற்றங்களை அடக்கியாளும்போது உண்மையான 'நாம்' என்பதை வெளிப்படுத்துவதற்கு நமக்குச் சுதந்திரம் இருக்கும். முதலில் உங்களுக்கே நீங்கள் எஜமானர்களாக இருங்கள். எழுந்து நில்லுங்கள், சுதந்திரர்களாக இருங்கள். இயற்கையின் விதிகளுக்கு அப்பால் செல்லுங்கள். ஏனெனில் இந்த விதிகள் உங்களை ஒருபோதும் ஆளவில்லை. அவை உங்களில் ஒரு பகுதி மட்டுமே. முதலில் நாம் இயற்கையின் அடிமைகள் அல்ல என்பதை உணர்வோம். இயற்கையின் அடிமைகளாக நாம் இருந்ததுமில்லை; இருக்கப் போவதுமில்லை. இந்த

இயற்கை எல்லையற்றது என்று நாம் நினைக்கிறோம். ஆனால் அது எல்லைக்கு உட்பட்டது. நமது ஆன்மா என்னும் கடலில் அது ஒரு துளி மட்டுமே. சந்திர சூரியர்களை, நட்சத்திரங்களை எல்லாம் கடந்தவர்கள் நாம். நமதுஎல்லையற்ற ஆன்மாவோடு ஒப்பிடும்போது, அவையெல்லாம் வெறும் நீர்க்குமிழி போன்றவை. இதை அறிந்தால், நன்மை, தீமை இரண்டையும் நம்மால் அடக்கியாள முடியும். அப்போது மட்டுமே காட்சி முழுவதும் மாறும். துடிப்புடன் எழுந்து நின்று, 'நன்மை எவ்வளவு அழகாக இருக்கிறது! தீமை எவ்வளவு அற்புதமாக இருக்கிறது!' என்று கூறுவோம்.

வேதாந்தம் போதிப்பது இதுவே. புண்களைத் தங்க இலை யால் மறைத்து, புண்கள் இன்னும் மோசமானவுடன், இன்னும் அதிகமான தங்க இலைகளால் மறைப்பதைப் போன்ற பொய் யான பரிகாரத்தை வேதாந்தம் கூறுவதில்லை. இந்த வாழ்க்கை ஒரு கடினமான உண்மை. அது வலிமை பெற்றதாக இருந் தாலும், அதன்மூலம் வழியைக் கண்டுபிடித்துத் தைரியமாகச் செல்லுங்கள். எதையும் பொருட்படுத்தாதீர்கள். ஆன்மா வலிமை வாய்ந்தது. சாதாரண தெய்வங்களின்மீது அது பொறுப்பைச் சுமத்துவதில்லை. நம்முடைய அதிர்ஷ்டங்களுக்கு நாமே காரணம். நாமே நம்முடைய துன்பங்களுக்கும் காரணம். நமது நன்மை தீமைகளை நாமே உண்டாக்கிக் கொள்கிறோம். நாமே நம் கைகளால் கண்களை மறைத்துக்கொண்டு, 'இருட்டாக இருக்கிறதே' என்று கதறுகிறோம். கைகளை விலக்கிவிட்டு ஒளியைப் பாருங்கள். நீங்கள் ஏற்கனவே முழுமை பெற்றவர்கள், ஒளி பெற்றவர்கள். 'இங்கே பன்மையைப் பார்ப்பவன், மரணத்திலிருந்து மரணத்திற்குப் போய்க் கொண்டேதான் இருக்கிறான்' என்ற பாடலின் பொருளை இப்போது நாம் உணர்கிறோம். அந்த ஒன்றைப் பாருங்கள், சுதந்திரர்களாக இருங்கள்.

அதை நாம் எப்படிக் காண்பது? பொய்த் தோற்றங்களால் ஏமாற்றப்பட்ட, பலவீனமான, எளிதாக ஏமாறக்கூடியதான மனம்கூட உறுதி பெற்று, அந்த ஒன்றேயான அறிவுப் பொரு ளின் கணநேரக் காட்சி பெறக்கூடும். அது ஒன்றுதான் நாம் மீண்டும்மீண்டும் மரணமடைவதிலிருந்து நம்மைக் காப்பாற்ற முடியும். மலை உச்சியில் பெய்யும் மழை, நாலா பக்கங்களிலும் வழிந்து ஓடுவதுபோல், இந்த உலகில் காணும் எல்லா சக்திகளும் அந்த ஒருமையிலிருந்துதான் பிறக்கின்றன.(2. 1. 14) மாயைக்கு

உட்பட்டு, அது பலவாகத் தோற்றமளிக்கிறது. பன்மையைப் பின்தொடர்ந்து ஓடக் கூடாது; ஒருமையை நோக்கியே போக வேண்டும். 'இயங்குவதில் எல்லாம் அவன் இருக்கிறான்; தூய்மையானவற்றில் எல்லாம் அவன் இருக்கிறான். பிரபஞ்சத்தில் நிறைந்திருப்பவன் அவனே; யாகத்தில் இருப்பது அவனே; விருந்தாளியும் அவனே; மனிதர்களில், நீரில், மிருகங்களில், சத்தியத்தில் எல்லாவற்றிலும் இருப்பவன் அவனே. அவனே மகத்தானவன். இந்த உலகிற்குள் வரும் நெருப்பு, பல்வேறு உருவங்களில் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதுபோல் பிரபஞ்சத்தின் ஆன்மாவான, ஒன்றேயான இறைவனும் இந்தப் பல்வேறு உருவங்களாகத் தம்மை வெளிப்படுத்திக் கொள்கிறார். இந்த உலகிற்குள் வரும் காற்று, பல்வேறு உருவங்களில் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதுபோல், எல்லா உயிரினங்களுக்கும் எல்லா ஆன்மாக்களுக்கும் ஒரே ஆன்மாவான இறைவன் பல உருவங்களாகத் தம்மை வெளிப்படுத்திக் கொள்கிறார்.' (2. 2. 2, 9,10)

இந்த ஒருமையை உணரும்போதுதான், இந்த உண்மை நமக்கு உண்மையாகும். அதற்குமுன் அல்ல. அப்போது எல்லாமே இன்பநோக்குத்தான். ஏனென்றால் எங்கும் இறைவனே தெரிவான். அந்தத் தூய்மையான, ஒன்றேயான, எல்லையற்றதான பரம்பொருள்தான் எல்லாவற்றிலும் நிறைந்திருக்கிறார் என்றால், எவ்வாறு அவர் துன்பம் அனுபவிப்பதாக, துயரில் உழல்வதாக, தூய்மையற்றவராக ஆனார் என்பதுதான் கேள்வி. 'அவர் மாறவில்லை' என்கிறது உபநிடதம். 'எல்லா உயிர்களின் பார்வைக்கும் சூரியனே காரணம். ஆனால் எந்தக் கண்களில் உள்ள குறைபாடும் சூரியனை எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. அதைப் போலவே, உடல் படும் துன்பங்களாலோ சுற்றியுள்ள துயரங்களாலோ ஆன்மா பாதிக்கப்படுவதில்லை.' (2. 2. 11) வியாதி காரணமாக எனக்கு எல்லாமே மஞ்சளாகத் தோன்றலாம்; அதனால் சூரியனுக்கு எந்தப் பாதிப்பும் இல்லை.

'அவர் ஒன்றேயானவர், எல்லாவற்றையும் படைத்தவர், எல்லோரையும் ஆட்சி புரிபவர், எல்லா உயிர்களின் அந்தராத்மா அவர். அவர் தமது ஒருமையைப் பன்மையாக்குகிறார். இவ்வாறு இறைவனையே தங்கள் ஆன்மாவின் ஆன்மாவாக உணரும் ரிஷிகளுக்கே நிலையான அமைதி உரித்தாகும்; வேறு யாருக்கும் இல்லை, வேறு யாருக்கும் இல்லை. நிலையற்ற இந்த உலகத்தில் ஒருபோதும் மாறாமல் நிலையாக இருக்கும்

ஒருவரை, மரணம் நிறைந்த இந்தப் பிரபஞ்சத்தில் ஒரே வாழ்க்கையாக இருப்பவரைக் காண்பவனுக்கு, பன்மையுள் ஒருமையைக் காண்பவனுக்கு, ஒருமையான அந்த இறைவனே தன் ஆன்மாவின் ஆன்மாவாக உணர்ந்தவனுக்கு மட்டுமே அமைதி உரித்தாகும்; வேறு யாருக்கும் அல்ல, வேறு யாருக்கும் அல்ல. இந்தப் புற உலகில் அவரை எங்கே காண்பது? சூரியர்களிலும் சந்திரர்களிலும் நட்சத்திரங்களிலும் அவரை எங்கே காண்பது? அங்கே சூரியனோ சந்திரனோ நட்சத்திரங் களோ மின்னலோ தங்கள் ஒளியை வெளிப்படுத்த முடியாது. சாதாரண நெருப்பைப்பற்றி என்ன சொல்வது? அந்த இறைவனின் ஒளியில்தான் எல்லாமே ஒளி பெறுகின்றன. எல்லாமே அந்த இறைவனிடமிருந்துதான் ஒளி பெறுகின்றன. எல்லாவற்றின் மூலமாகவும் ஒளி வீசுவது அந்தப் பரம்பொருள் தான்.' *(2. 2. 12,13,15)*

இதோ, மற்றோர் அருமையான உவமை. ஆலமரம் எப்படி ஒரே வேரிலிருந்து முளைத்து வெகுதூரம் பரவுகிறது என்பது, உங்களில் இந்தியாவுக்கு வந்தவர்களுக்குத் தெரிந்திருக்கும். இறைவன்தான் ஆலமரம் என்று வைத்துக்கொள்வோம். அனைத்தின் வேர் அவரே. பல கிளைகளாகப் பிரிந்து பிரபஞ்சம் முழுவதும் வியாபித்திருப்பது அவர்தான். எவ்வளவு தூரம் பரவினாலும், எல்லா கிளைகளும் விழுதுகளும் ஒன்றோ டொன்று தொடர்பு உடையனவே. *(2. 3. 1.)*

வேதங்களின் பிராம்மணப் பகுதியில் பலவகையான சொர்க்கங்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஆனால் உபநிடதங் களின் தத்துவக் கருத்துக்களில் சொர்க்கத்திற்குப் போவதைப் பற்றிய பேச்சே இல்லை. இன்பம் இந்தச் சொர்க்கத்திலோ அந்தச் சொர்க்கத்திலோ இல்லை; அது ஆன்மாவில் உள்ளது. இடங்களுக்கு எந்த முக்கியத்துவமும் இல்லை.

அனுபூதியின் பலவகைகளைப்பற்றிப் பேசும் ஒரு பகுதி யைக் காண்போம். 'மனிதன் கனவில் பொருட்களைக் காண்பது போல், பித்ருலோகத்தில் உண்மையைக் காண்கிறான்'. கனவில் பொருட்கள் தெளிவற்று மங்கலாகத் தெரிவது போல்தான் பித்ருலோகத்தில் உண்மையைக் காண்கிறோம். கந்தர்வலோகம் என்னும் இன்னொரு சொர்க்கத்தில் இன்னும் மங்கலாகத் தெரிகிறது. தண்ணீரில் தோன்றும் பிம்பத்தைப்போல் அங்கே உண்மை தெரிகிறது. இந்துக்கள் கற்பித்துள்ள சொர்க்கங் களில் மிக உயர்ந்தது பிரம்மலோகம். இங்கே உண்மை இன்னும்

தெளிவாக, ஒளியும் நிழலும்போல் தெரிகிறது. ஆனாலும் முற்றிலும் தெளிவாகத் தெரிவதில்லை. முகம் பார்க்கும் கண்ணாடியில், முகம் முழுமையாகத் தெளிவாகத் தெரிவது போல், நம் ஆன்மாவில்தான் மெய்ப்பொருள் தெளிவாக ஒளிவிடுகிறது. (2. 3. 5)

ஆகவே மிக உயர்ந்த சொர்க்கம் நம்முடைய ஆன்மாவில் தான் இருக்கிறது. அனைத்து சொர்க்கங்களிலும் உயர்ந்ததாக, நாம் வழிபட வேண்டிய பெரும் கோயிலாக இருப்பது மனித ஆன்மாதான் என்று வேதாந்தம் கூறுகிறது. ஏனென்றால் இந்த வாழ்க்கையில், நம்முடைய ஆன்மாவில் போல் வேறு எந்தச் சொர்க்கத்திலும் உண்மையை அவ்வளவு தெளிவாகவும் சிறப் பாகவும் நாம் அறிந்துகொள்ள முடியாது. இடத்தை மாற்றிக் கொள்வதால் எந்தப் பயனும் இல்லை. இந்தியாவில் இருந்த போது, குகையில் வசித்தால் உண்மை தெளிவாகிவிடும் என்று நான் நினைத்தேன். அது தவறு என்று தெரிந்தது. பிறகு, காடுகள் அதை எனக்குத் தரும் என்று எண்ணினேன். பின்னர் காசியில் எல்லாம் கிடைக்கும் என்று நினைத்தேன். ஆனால் எல்லா இடங்களிலும் விஷயம் ஒரேபோல்தான் இருந்தது. ஏனெனில் நம் உலகத்தை நாம்தாம் உருவாக்கிக் கொள்கிறோம். நான் தீயவனாக இருந்தால், உலகமே என் கண்ணுக்குத் தீயதாகத் தெரியும். உபநிடதம் இதைத்தான் சொல்கிறது. இந்த உண்மை எல்லா உலகங்களுக்கும் பொருந்தும். நான் இறந்து சொர்க்கங் களுக்குப் போனாலும் என் நிலை இப்படியேதான் இருக்கும். நான் தூய்மை பெறும்வரை குகைகளுக்கோ, காடுகளுக்கோ, காசிக்கோ, சொர்க்கத்திற்கோ போவதால் பயனில்லை. ஆனால் கண்ணாடியைத் தூய்மையாக வைத்துக்கொண்டால், நான் எங்கு வாழ்கிறேன் என்பது முக்கியமல்ல; மெய்ப்பொருளின் தரிசனம் உள்ளது உள்ளதுபடியே அதில் தெரியும். ஆகவே இங்கும் அங்கும் ஓடி ஆற்றலை வீணாக்காமல், கண்ணாடியைத் தூய்மையாக வைத்துக் கொள்வதில் ஆற்றலைச் செலவழிப்பதே மேலாகும். அதே கருத்தை மறுபடியும் பார்ப்போம். ‘அவனை யாரும் பார்ப்பதில்லை. கண்களால் அவன் உருவத்தை யாரும் பார்ப்பதில்லை. மனத்தில் தூய மனத்தில்தான் அவன் காணப் படுகிறான். இவ்வாறுதான் மரணமிலாப் பெருநிலை அடையப் படுகிறது.’ (2. 3. 9)

ராஜயோகத்தைப் பற்றிய எனது கோடைக்காலச் சொற் பொழிவுகளைக் கேட்டவர்களுக்கு, அந்த யோகத்திற்கும் இந்த

யோகத்திற்கும் வித்தியாசம் இருப்பது வியப்பைத் தரும். நாம் இப்போது விவாதித்துக் கொண்டிருக்கும் யோகம் முக்கியமாகப் புலனடக்கத்தைப் பற்றியதாக உள்ளது. புலன்கள், ஆன்மாவிற்கு அடிமையாகி, மனத்தை எந்த விதத்திலும் சலனப்படுத்த முடியாத நிலைக்குப் போகும்போதுதான் யோகி தன் குறிக்கோளை அடைந்தவன் ஆகிறான். 'மனத்தின் வீணான ஆசைகளைவிட்ட பின்னர், மரணத்திற்கு உள்ளாகின்றவனான இந்த மனிதனே மரணமிலாப் பெருநிலையை அடைந்தவன் ஆகிறான். இந்த உலகத்திலேயே அவன் இறைவனுடன் ஒன்றுபடுகிறான். இதயத்தின் முடிச்சுகளெல்லாம் அறுபட்டால் மனிதன் மரணத்தை வென்றவன் ஆகிறான். அவன் இங்கேயே பிரம்மத்தை அனுபவிக்கிறான்;'(2. 3. 14,15) இங்கேயே, இந்தப் பூமியிலேயே அனுபவிக்கிறான், வேறு எங்கும் இல்லை.

இங்கே சில வார்த்தைகள் சொல்வது அவசியம் ஆகிறது. வேதாந்தமும் பிற கீழை நாட்டுத் தத்துவ சாஸ்திரங்களும் இந்த உலகிற்கு அப்பாலுள்ள ஒன்றைப்பற்றித்தான் பேசுகின்றனவே தவிர, இந்த வாழ்க்கையின் இன்பங்கள், போராட்டங்கள் இவற்றைக் கருத்தில் கொள்வதே இல்லை என்று பொதுவாக நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். இது முற்றிலும் தவறு. கீழைச் சிந்தனைகளைப்பற்றி எதுவுமே தெரியாதவர்களும் அவற்றின் உண்மையான போதனைகளைப் புரிந்துகொள்ளும் அளவிற்குப் புத்தி இல்லாதவர்களும்தான் இவ்வாறு சொல்கிறார்கள். இதற்கு மாறான கருத்தையே எங்கள் சாஸ்திரங்களில் படிக்கிறோம். எங்கள் தத்துவ ஞானிகள் மற்ற உலகங்களுக்குப் போக விரும்பவில்லை; அந்த உலகங்களில் மனிதர்கள், சிறிதுகாலமே அழுகையும் சிரிப்புமாக இருந்துவிட்டு, மரணத்தின் வாய்ப்படுகின்றனர் என்றே கருதுகிறார்கள். நாம் பலவீனமாக இருக்கும்வரை, இந்த அனுபவங்களையெல்லாம் நாம் பெற்றேயாக வேண்டும். ஆனால் உண்மையென்று ஏதாவது உண்டானால் அது இங்கேதான் இருக்கிறது, அதுவே மனித ஆன்மா. தற்கொலை செய்துகொள்வதால் நாம் எதையும் தவிர்க்க முடியாது; எதிலிருந்தும் தப்ப முடியாது என்பதையும் எங்கள் தத்துவ ஞானிகள் வலியுறுத்துகிறார்கள். சரியான பாதையை அறிவதுதான் கடினம். மேலை நாட்டினரைப்போல் இந்துக்களும் நடைமுறை வாழ்க்கையில் வல்லவர்களே. வாழ்க்கையைப்பற்றிக் கொண்டுள்ள கருத்தில்தான் இருவருக்கும் வேறுபாடு உள்ளது.

நல்ல வீடு, உடை, உணவு, அறிவு, பண்பாடு இவற்றையெல்லாம் பெறுவோம்; இதுதான் வாழ்க்கை என்கின்றனர் மேலைநாட்டினர். அதையே நடைமுறையிலும் சிறப்பாகக் கடைப்பிடிக்கின்றனர். ஆனால் ஆன்மாவைப் பற்றிய அறிவு, தத்துவம் இவைதான் உலகத்தை உண்மையாகப் புரிந்துகொள்வதாகும் என்று இந்துக்கள் கருதுகிறார்கள். அந்த ஆன்மீக வாழ்க்கையை அனுபவிக்கவே அவர்கள் விரும்புகிறார்கள்.

சிறந்த ஆஜ்ஞேயவாதி ஒருவர் அமெரிக்காவில் இருந்தார்.[1] அவர் பண்பாடு மிக்கவர், நல்லவர், சிறந்த பேச்சாளர். மதத்தினால் பயன் ஒன்றும் இல்லை என்று சொல்லிவந்தார். மற்ற உலகங்களைப்பற்றிச் சிந்தனை செய்து, நாம் ஏன் நம் மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டும், என்ற கருத்தை வலியுறுத்துவதற்குக் கீழ்க்கண்ட உவமையைப் பயன்படுத்தினார்: இதோ ஓர் ஆரஞ்சுப் பழம் இருக்கிறது. அதில் உள்ள சாறு முழுவதையும் பிழிந்தெடுக்க நாம் விரும்புகிறோம்.

நான் அவரை ஒருமுறை சந்தித்தேன். அப்போது அவரிடம் சொன்னேன்: நீங்கள் சொல்வதை நான் முற்றிலுமாக ஒப்புக்கொள்கிறேன். என்னிடமும் பழம் இருக்கிறது. நானும் சாறு முழுவதையும் பிழிந்தெடுக்கவே விரும்புகிறேன். பழங்களைத் தேர்தெடுப்பதில்தான் நம்முடைய வேறுபாடு இருக்கிறது. நீங்கள் ஆரஞ்சை விரும்புகிறீர்கள்; நான் மாம்பழத்தை விரும்புகிறேன். இந்த உலகத்தில், சாப்பிட்டு, குடித்துச் சிறிதளவு விஞ்ஞான அறிவோடு வாழ்ந்தால் போதுமானது என்று நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் எல்லோருக்கும் இந்தக் கருத்து பிடிக்க வேண்டும் என்று சொல்ல உங்களுக்கு உரிமை இல்லை. அத்தகைய கருத்து எனக்கு ஒன்றுமே இல்லை. ஓர் ஆப்பிள் எப்படித் தரையில் விழுகிறது, அல்லது ஒரு மின்னோட்டம் எப்படி என் நரம்புகளைப் பாதிக்கிறது என்பதைப்பற்றி மட்டுமே அறிய வேண்டுமென்றால், அதைவிட நான் தற்கொலை செய்துகொள்வேன். பொருட்களின் மையத்திற்குச் செல்லவே நான் விரும்புகிறேன்; அவற்றின் உட்கருத்தைத் தெரிந்துகொள்ளவே விரும்புகிறேன். வாழ்க்கையின் வெளிப்பாட்டை நீங்கள் ஆராய்ச்சி செய்கிறீர்கள். ஆனால் நானோ வாழ்க்கையையே ஆராய்கிறேன். அதைத்தான் தெரிந்து கொள்ள வேண்டும்.

---

1. ராபர்ட் இங்கர்சால் (Robert Ingersoll).

இந்த உலகம் இருக்கிறது என்று எப்படிச் சொல்கிறோமோ, அதே பொருளில் சொர்க்கம், நரகம் போன்றவை இருக்கவே செய்தாலும், சொர்க்கம் நரகம் போன்ற எல்லா மூடநம்பிக்கைகளையும் மனத்திலிருந்து வெளியேற்றிவிட வேண்டும் என்று எங்கள் தத்துவ சாஸ்திரம் வலியுறுத்துகிறது. இந்த வாழ்க்கையின் மையத்தை, அதன் சாரத்தை நான் அறிந்து கொள்ள வேண்டும். அது என்ன, எப்படி வேலை செய்கிறது, அதனுடைய வெளிப்பாடுகள் என்ன என்பன போன்ற எல்லாவற்றையுமே அறிந்துகொள்ள வேண்டும். எல்லாவற்றின், 'ஏன்' என்ற கேள்விக்கு நான் விடையறிய வேண்டும். எப்படி என்ற கேள்வியைக் குழந்தைகளுக்கு விட்டுவிட வேண்டும்.

'நான் சிகரெட் பிடித்துக்கொண்டே ஒரு புத்தகம் எழுதினால், அது சிகரெட்டைப் பற்றிய விஞ்ஞானமாகத்தான் இருக்கும்' என்று உங்கள் நாட்டுக்காரர் ஒருவர் சொல்லியிருக்கிறார். விஞ்ஞானபூர்வமான அறிவு பெற்றிருப்பது நன்மையும் பெருமையும் தரக்கூடிய விஷயம்தான். அதைத் தேடுபவர்களுக்குக் கடவுள் உதவி செய்யட்டும். வாழ்க்கையின் இன்றியமையாத விஷயத்தைப் பொருட்படுத்தாமல், வாழ்க்கை என்பதையே புரிந்து கொள்ளாமல், விஞ்ஞானமே எல்லாம் என்று ஒருவன் சொன்னால், அது முட்டாள்தனம். உங்கள் அறிவெல்லாம் ஆதாரமற்றது, பொருளற்றது என்று நான் தர்க்கம் செய்யலாம். வாழ்க்கையின் வெளிப்பாடுகளை ஆராய்ச்சி செய்கிறீர்கள், ஆனால் வாழ்க்கை என்றால் என்ன என்று கேட்டால் தெரியவில்லை என்கிறீர்கள். நீங்கள் உங்கள் ஆராய்ச்சியை நடத்துங்கள்; எங்களை, எங்கள் ஆராய்ச்சியை நடத்த விடுங்கள்.

நான் என் வழியில் செயல்முறைவாதி, சிறந்த நடைமுறைவாதி. ஆகவே மேலைநாட்டினர் மட்டுமே நடைமுறையில் சிறந்தவர்கள் என்ற உங்கள் கருத்து முட்டாள்தனமானது. நீங்கள் ஒருவிதத்தில் நடைமுறையில் சிறந்தவர்களென்றால், நாங்கள் மற்றொரு விதத்தில் சிறந்தவர்கள். உலகத்தில் பலவிதமான மனிதர்கள் உள்ளனர், மனங்கள் இருக்கின்றன. கீழை நாடுகளைச் சேர்ந்தவர்களிடம் போய், வாழ்நாள் முழுவதும் ஒரு காலிலேயே நின்று தவம் செய்தால் உண்மையை அறியலாம் என்று சொன்னால் அவர்கள் அதைத் தயக்கமின்றிப் பின்பற்றுவார்கள். மேலைநாடுகளில் உள்ளவர்களிடம் போய், நாகரீகம்

தொடாத ஒரு நாட்டில், எங்கேயோ ஓரிடத்தில் தங்கச் சுரங்கம் இருப்பதாகக் கூறினால், உடனே அவர்கள் தங்கம் தேடுவதற்காக ஆயிரக்கணக்கில் கிளம்பி, எந்த ஆபத்தையும் சந்திக்கத் தயாராகிவிடுவார்கள்; அவர்களுள் யாராவது ஒருவன் இந்த முயற்சியில் வெற்றி பெறலாம். அதே மனிதர்கள் தங்கள் ஆன்மாவைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பார்கள்; ஆனால் அதனைச் சர்ச்சின் கவனிப்பில் விடுவதுடன் திருப்தியடைந்து விட்டார்கள். கீழைநாட்டு மனிதன் காட்டுவாசிகளின் அருகில் போக மாட்டான். அவர்கள் ஆபத்தானவர்கள் என்று கூறி ஒதுங்கிவிடுவான். ஆனால் அதே மனிதனிடம் ஓர் உயரமான மலை உச்சியில் ஆன்ம ஞானத்தை உபதேசிக்கும் ஓர் அற்புதத் துறவி இருக்கிறார் என்று சொன்னால் போதும், உயிர் போனாலும் பரவாயில்லை என்று துணிந்து கிளம்பிவிடுவான்.

இருசாராரும் நடைமுறையில் வல்லவர்களே. வாழ்க்கை என்பதே இந்த உலகம்தான் என்று நினைப்பதில்தான் தவறு இருக்கிறது. உங்கள் வழி, புலனின்ப அனுபவங்கள் என்ற கானல் நீர். அது நிலையானதல்ல; மேன்மேலும் துன்பங்களையே அது கொண்டுவரும். ஆனால் எங்கள் வழி நிலையான அமைதியைத் தருவதாகும்.

உங்களுடைய நோக்கு தவறு என்று நான் சொல்லவில்லை. நீங்கள் அதைத் தாராளமாகப் பின்பற்றலாம். அது மிகவும் நன்மையையும் இன்பங்களையும் கொடுக்கிறது. ஆனால் அதற்காக என்னுடைய நோக்கு தவறு என்று சொல்லாதீர்கள். என்னுடைய நோக்கும் தன் போக்கில் நடைமுறைக்கு ஒத்ததுதான். நாம் நமது சொந்தத் திட்டங்களின்படியே உழைப்போம். இரண்டிலும் சம அளவில் நாம் செயல்முறை வழி காண கடவுள் அருள் புரிவாராக! விஞ்ஞானம், ஆன்மீகம் இரண்டு துறைகளிலுமே சமமான வல்லமை பெற்ற சில விஞ்ஞானிகளை நான் பார்த்திருக்கிறேன். அவர்களைப் போல் காலப்போக்கில் மனித குலம் முழுவதுமே ஆக வேண்டும் என்பது என் ஆழ்ந்த விருப்பம்.

ஒரு பாத்திரத்தில் வைத்திருக்கும் நீர் கொதிநிலையை அடையும்போது கவனித்தால், முதலில் ஒரு குமிழி, பிறகு மற்றொன்று, என்று பல குமிழிகள் தோன்றி, கடைசியில் ஓர் அமர்க்களமே நடப்பதை நீங்கள் பார்த்திருக்கலாம். இந்த உலகமும் கிட்டத்தட்ட அதைப் போன்றதுதான். ஒவ்வொரு மனிதனும் ஒரு குமிழி, நாடுகளெல்லாம் பல குமிழிகள்.

இந்த நாடுகளெல்லாம் சிறிதுசிறிதாக ஒன்றுசேர்ந்து கொண்டிருக்கின்றன. இவற்றிற்கு இடையே இருக்கும் வேறுபாடுகள் எல்லாம் மறைந்து, எந்த ஒருமையை நோக்கி நாம் எல்லோரும் போய்க் கொண்டிருக்கிறோமோ, அது தன்னையே வெளிப்படுத்திக் கொள்ளும் நாள் வரும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

விஞ்ஞானம், ஆன்மீகம் ஆகிய இரு துறைகளிலும் ஒவ்வொரு மனிதனும் சமமான செயல்முறை அறிவு பெறும் நாள் வந்தே தீரும். அப்போது அந்த ஒருமையின் இயைபு உலகம் முழுவதும் பரவும். எல்லா மனிதர்களுமே ஜீவன்முக்தர்களாகி விடுவார்கள். அதாவது, இந்த வாழ்விலேயே முக்தி பெற்றவர்களாகி விடுவார்கள். நம்முடைய பொறாமை, வெறுப்பு, அன்பு, ஒற்றுமை இவற்றின் மூலமாக அந்த ஒரே குறிக்கோளை நோக்கித்தான் நாம் எல்லோரும் போராடியவாறே போய்க் கொண்டிருக்கிறோம். ஒரு பெரிய ஆறு, நம்மையெல்லாம் அடித்துக் கொண்டு, கடலை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது. போகும் வழியில், வைக்கோல், காகிதம் இவற்றைப்போல் குறிக்கோளில்லாமல், ஆற்றின் போக்குப்படி இங்குமங்கும் அலைக்கழிக்கப்பட்டாலும்கூட, கடைசியில் சச்சிதானந்த நிலையாகிய அந்தப் பெருங்கடலை அடைந்தே தீருவோம்.

## 10. ஆன்ம சுதந்திரம்

5 நவம்பர் 1896

நாம் இப்போது சாந்தோக்கிய உபநிடதத்தைப்பற்றிப் பார்ப்போம். நாம் இதுவரை பார்த்த கடோபநிடதம் சாந்தோக்கிய உபநிடதத்திற்கு மிகவும் பிற்காலத்தது. கடோபநிடதத்தின் மொழியில் புதுமையும், சிந்தனையில் ஒழுங்குமுறையும் காணப்படுகிறது. பழைய உபநிடதங்களின் மொழி, வேதங்களிலுள்ள பாடல் பகுதிகளைப்போல் மிகவும் பழமையானதாக இருக்கிறது. அவற்றின் முக்கியக் கோட்பாடுகளைப் புரிந்துகொள்வதற்குள், சிலவேளைகளில், எவ்வளவோ தேவையற்ற பகுதிகளைக் கிளற வேண்டியிருக்கிறது. வேதங்களின் இரண்டு பகுதிகளுள் ஒன்று சடங்குகளைப்பற்றி விரிவாகச் சொல்கிறது என்பதை ஏற்கனவே கூறினேன். இதனுடைய மணம் சாந்தோக்கிய உபநிடதத்தில் அதிகமாக வீசுகிறது. இந்த உபநிடதத்தில் பாதிக்குமேல் சடங்குகள் சம்பந்தப்பட்டதாகவே இருக்கிறது. எது எப்படியானாலும் சரி, பழைய உபநிடதங்களைப் படிப்பதில் ஒரு பெரிய லாபம் இருக்கிறது. அதன்மூலம், ஆன்மீகக் கருத்துக்களுடைய வளர்ச்சியின் வரலாற்றை நாம் காண முடிகிறது.

மிகவும் அண்மைக்கால உபநிடதங்களில் ஆன்மீகக் கருத்துக்களை ஒன்றுசேர்த்து, ஒரே இடத்தில் மொத்தமாகக் கொடுத்திருக்கிறார்கள். உதாரணமாக, உபநிடதங்களில் கடைசியானது என்று ஒருவேளை நாம் சொல்லக்கூடிய பகவத்கிதையில் சடங்குகளைப் பற்றிய பேச்சே இல்லை. உபநிடதங்களிலிருந்து திரட்டிய ஆன்மீக உண்மைகளாகிய அழகிய மலர்களால் ஆன செண்டுதான் பகவத்கீதை. ஆனால் ஆன்மீகக் கருத்துக்களின் வளர்ச்சியையோ தோற்றுவாயையோ கிதையிலிருந்து ஒன்றுமே அறிய முடியாது. அவ்வாறு அறிய வேண்டுமானால், பலர் சொல்லியிருப்பதுபோல், வேதங்களைத்தான் ஆராய வேண்டும். வேதங்கள் எப்போதும் புனிதத்துடன் இணைத்தே மதிக்கப்பட்டு வந்தன. இதனால் அவை உலகின்

வேறு எந்த நூல்களையும்விட கேடுறாதவையாக இன்றும் இருந்து வருகின்றன. வேதங்களில் மிக உயர்ந்த சிந்தனைகளும் மிகத் தாழ்ந்த சிந்தனைகளும், முக்கியமான சிந்தனைகளும் முக்கியமற்ற சிந்தனைகளும் உள்ளன. சாதாரணமான விளக்கங்களும் மகோன்னதமான கருத்துக்களும் ஒன்றையடுத்து மற்றொன்றாக இருப்பதை நாம் வேதங்களில் காணலாம். அவற்றில் மாற்றம் செய்வதற்கு யாருக்கும் இதுவரை தைரியம் ஏற்படவில்லை. விளக்கவுரை ஆசிரியர்கள் வந்தார்கள், அவர்கள் அந்தக் கருத்துக்களைச் சற்று எளிமைப்படுத்தி, அவற்றிலிருந்து புதிய கருத்துக்களை உருவாக்கிக் கொடுக்க முயன்றார்கள். மிகச் சாதாரணமான பகுதிகளிலிருந்தும் கூட ஆன்மீகக் கருத்துக்களைக் கண்டுபிடிக்க முயன்றார்கள். ஆனாலும் மூலப்பகுதிகள் எந்த மாற்றமும் இன்றி அப்படியே இருந்தன. அவை அற்புதமான ஆராய்ச்சிக் குறிப்பேடுகளாகப் பயன்படுகின்றன.

பிற்காலங்களின் ஆன்மீக வளர்ச்சிக்கேற்ப எல்லா மதங்களின் நூல்களிலும் மாற்றங்கள் செய்யப்படுவது நமக்குத் தெரியும். இங்கே ஒரு வார்த்தையை மாற்றுவது, அங்கே ஒரு வார்த்தையைச் சேர்ப்பது போன்ற மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. வேத இலக்கியத்தில் இத்தகைய மாறுதல்கள் அனேகமாகச் செய்யப்படவே இல்லை. அப்படியே செய்யப்பட்டிருந்தாலும், அது கவனத்தை ஈர்க்கும் அளவிற்குரியதாக இல்லை. ஆகவே சிந்தனைகளின் உண்மையான ஆரம்ப முக்கியத்துவம் என்ன, அவை படிப்படியாக எவ்வாறு வளர்ந்தன, லெளகீகக் கருத்துக்கள் எவ்வாறு படிப்படியாக நுட்பமான ஆன்மீகக் கருத்துக்களாகப் பரிணமித்து, இறுதியில் வேதாந்தத் தத்துவத்தில் மகோன்னத நிலையை அடைந்தன என்பதைப் பற்றியெல்லாம் நாம் அறிய முடிகிறது. இவ்வாறு ஆரம்பம் முதலே அறிவதற்கான வாய்ப்பு ஒரு பெரும் நன்மையாகும். பழங்காலப் பழக்கவழக்கங்களைப் பற்றிய சில விவரங்களும் வேதங்களில் உள்ளன. உபநிடதங்களில் அவற்றைப் பற்றிய அதிகமான பேச்சு இல்லை. அவற்றில் கையாளப்பட்டிருக்கும் மொழி சுருக்கமாக, எளிதில் நினைவில் வைத்துக் கொள்ளக்கூடிய விதத்தில் உள்ளது.

இந்த நூல்களை எழுதியவர்கள், சில உண்மைகளை நினைவில் வைத்துக் கொள்வதற்கான வசதிக்காகச் சில குறிப்புகளை மட்டுமே எழுதி வைத்தார்கள். இந்த உண்மைகள் ஏற்கனவே

எல்லோருக்கும் தெரிந்தவை என்று அவர்கள் முடிவு செய்து விட்டார்கள். ஒரு விஷயத்தைச் சொல்லும்போது, அதைக் கேட்பவர்களுக்கு அந்த விஷயம் ஏற்கனவே தெரியும் என்ற முடிவுடனேயே சொல்கிறார்கள். ஆகவே இதில் ஒரு பெரிய சிரமம் வருகிறது. இப்போது பழைய வழக்கங்களெல்லாம் அனேகமாக மறைந்து, மீதி இருப்பவையும் மிகைப்படுத்தி சொல்லப்பட்டிருப்பதால், இந்தக் கதைகளின் உண்மையான அர்த்தங்கள் நமக்குத் தெரிவதில்லை. இந்தக் கதைகளுக் கெல்லாம் பல புதிய விளக்கங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. அதனால் புராணங்களில் இவை வெறும் உணர்ச்சிப் பரவசப் பாடல்களாக மாறிவிட்டன.

மேலைநாடுகளின் அரசியல் வளர்ச்சியைப் பார்த்தால் சர்வாதிகாரத்தை அவர்களால் தாங்க முடியவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. ஒரு தனிமனிதன் தங்களை ஆட்சி செய்வதற்கு இடம் கொடுக்காமலிருக்கவே எப்போதும் அவர் கள் முயன்று வந்திருக்கிறார்கள். இவ்வாறு படிப்படியாக, அவர்களுடைய ஜனநாயக மற்றும் லௌகிக சுதந்திரக் கருத்துக் கள் முன்னேற்றம் பெற்று வந்திருக்கின்றன. இந்தியத் தத்துவத் தின் வளர்ச்சியிலும் அதைப் போலவே முன்னேற்றப் போக்கு தான் தெரிகிறது. பலதெய்வக் கருத்து போய், ஒரேதெய்வக் கருத்து நிலைபெற்றது. உபநிடதங்களிலோ, அந்த ஒரே கடவுள் கருத்திற்கு எதிராகக்கூடப் புரட்சி நடந்திருக்கிறது.

பிரபஞ்சத்தின் தலைவிதியைப் பல ஆட்சியாளர்கள் நிர்ணயிக்கிறார்கள் என்ற கருத்து மட்டுமல்ல, ஒரே ஒருவர் ஆட்சி செய்கிறார் என்பதுகூட ஒப்புக்கொள்ளப் படவில்லை. இந்தக் கருத்துதான் முதலில் நம்மைக் கவர்கிறது. இது மேலும் மேலும் வளர்ந்து சிகரத்தையே எட்டிவிட்டது. அனேகமாக எல்லா உபநிடதங்களிலும் இந்த உச்சக்கட்டம் கடைசியில் வருகிறது. அதாவது, பிரபஞ்சத்தை ஆளும் கடவுள் யாரும் இல்லை என்ற முடிவே அது. இங்கே சகுணக் கடவுள் மறைந்து நிர்க்குண பிரம்மத் தத்துவம் நிலைபெறுகிறது. கடவுள் பிரபஞ்சத்தை ஆள்கின்ற ஒருவர் அல்ல, எவ்வளவோ மேலான ஆற்றல் பெற்ற மானிடர் அல்ல; பிரபஞ்சம் முழுவதும் நிறைந்து ஒவ்வோர் உயிரினுள்ளும் உள்ள ஒரு தத்துவமே அவர் என்ற கருத்து நிலைபெற்றது. கடவுள்கருத்து, சகுணத்திலிருந்து நிர்க் குணத்திற்குச் செல்கின்ற அதேவேளையில் மனிதனை மட்டும் சகுணமாகக் கொள்வது தர்க்கரீதியாகத் தவறான ஒன்று.

ஆகவே மனிதன் என்பவன் பெயரும் உருவமும் உடையவன் என்ற கருத்து அழிந்து, அவனும் ஒரு தத்துவமே என்ற கருத்து உருவாகி வளர்ந்தது. பெயரும் வடிவமும் தாங்கிய மனிதன் வெறும் தோற்றம் மட்டுமே, அந்தத் தோற்றத்திற்குப் பின்னாலிருக்கும் தத்துவமே உண்மை மனிதன். ஆகவே மனிதன், கடவுள் என்ற இரண்டு பக்கங்களிலுமே சகுணக் கருத்து மறைந்து, தத்துவக் கருத்தை அணுகுவதைக் காண்கிறோம். சகுணக் கடவுள் நிர்க்குணத் தத்துவம் ஆகிறது; பெயரும் வடிவமும் தாங்கியவன் மனிதன் என்ற கருத்து மறைந்து, அவன் ஒரு தத்துவம் என்ற கருத்து வளர்கிறது.

இதன்பிறகு நிர்க்குணப் பிரம்மக் கருத்தும், பெயர் மற்றும் வடிவமற்ற மனிதத் தத்துவக் கருத்தும் படிப்படியாக இணைந்து ஒரே தத்துவமாகப் பரிணமிப்பதைக் காண்கிறோம். இந்த இரண்டு கருத்துக்களும் எவ்வாறு படிப்படியாக இணைந்து, ஒரே கருத்தாகப் பரிணமிக்கின்றன என்பதை உபநிடதங்கள் விளக்குகின்றன. எல்லா உபநிடதங்களும் முடிவாகச் சொல்லும் கருத்து, 'நீயே அது' என்பதுதான். நிலையான ஆனந்தப் பொருள் ஒன்றேதான். அதுவே பல்வேறாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது.

பிறகு தத்துவஞானிகள் தோன்றினர். உபநிடதங்களின் வேலை அந்த இடத்தில் நிறைவுற்றுவிட்டதாகத் தோன்றுகிறது. அடுத்தகட்ட வேலைகளைத் தத்துவ ஞானிகள் மேற்கொண்டார்கள். வடிவ அமைப்பை உபநிடதங்கள் கொடுத்துவிட்டன, இவர்கள் உள்விவரங்களை நிரப்ப வேண்டியிருந்தது. இங்குப் பல கேள்விகள் எழுவது இயல்பே. இருப்பது ஒரே நிர்க்குணத் தத்துவம், அதுவே பல்வேறாக வெளிப்படுகிறது என்றால், ஒன்று பலவாக ஆனது எப்படி? இது பக்குவமுறாத அந்தப் பழைய கேள்வியான தீமையின் மூல காரணம் என்ன என்பதன் வேறோர் உருவம்தான். உலகில் தீமை ஏன் இருக்கிறது, அதற்குக் காரணம் என்ன என்கின்ற அதே கேள்வி இப்பொழுது பண்பட்டதாகவும் தத்துவரீதியாகவும் கேட்கப்படுகிறது. நாம் ஏன் துன்பம் அடைகிறோம் என்று புலன்களின் அடிப்படையில் கேட்பது மறைந்து, இப்போது தத்துவ அடிப்படையில் அதே கேள்வியைக் கேட்க ஆரம்பித்திருக்கிறோம். ஒருமையான தத்துவம் எப்படிப் பன்மையாகியது? இந்தியா இந்தக் கேள்விக்கு மாயைத் தத்துவத்தின் மூலம் மிகச் சிறந்த பதிலைக் கொடுத்திருக்கிறது. அது உண்மையில் பன்மையாக ஆகவில்லை;

தன் உண்மை இயல்பில் எதையும் அது இழக்கவும் இல்லை என்பதே அந்தப் பதில். பன்மை என்பது வெறும் வெளித் தோற்றம் மட்டுமே. மனிதன் வெளித் தோற்றத்திற்குத்தான் பெயரும் உருவமும் உடையவனாகத் தோன்றுகிறான். உண்மையில் அவன் நிர்க்குணப் பிரம்மமே. அதேபோல், கடவுளும் வெளித் தோற்றத்திற்குத்தான் சகுணமாக இருக்கிறார்; உண்மையில் அவர் நிர்க்குணப் பிரம்மமே.

இந்தப் பதிலில்கூடத் தொடர்ச்சியான பல நிலைகள் இருந்திருக்கின்றன. தத்துவ ஞானிகள் இதைப் பற்றிய கருத்தில் வேறுபட்டிருக்கிறார்கள். எல்லா இந்தியத் தத்துவ ஞானிகளும் மாயாவாதத்தை ஒப்புக்கொள்ளவில்லை. நிச்சயமாகப் பலர் ஒப்புக்கொள்ளவில்லை. பண்படாத துவைதக் கருத்துக்களைப் பின்பற்றும் துவைதிகள் இருக்கிறார்கள். அவர்கள் இந்தக் கேள்வியை முளையிலேயே கிள்ளிவிடுகிறார்கள். இதைப் போன்ற கேள்வியைக் கேட்பதற்கு உங்களுக்கு உரிமையில்லை, இதற்கு விளக்கம் கேட்கவும் உங்களுக்கு உரிமையில்லை. அது கடவுளின் சித்தம். நாம் அமைதியாக அதற்குப் பணிந்தேயாக வேண்டும். மனித ஆன்மாவிற்குச் சுதந்திரமே இல்லை. நாம் என்ன செய்ய வேண்டும், நம்மிடம் என்ன இருக்கும், நமக்கு என்னென்ன இன்பதுன்ப அனுபவங்கள் வரப்போகின்றன என்பவையெல்லாம் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டுவிட்டன. துன்பம் வந்தால், அதைப் பொறுமையோடு சகிப்பதுதான் நமது கடமை. அப்படிச் செய்யாவிட்டால் நமது தண்டனை மேலும் அதிகரிக்கும். ஆமாம், இதெல்லாம் எப்படித் தெரியும்? வேதங்கள் சொல்வதால்தான் என்று அவர்கள் கூறுகிறார்கள். இவ்வாறு கூறுகின்ற சாஸ்திரங்களும், அவற்றிற்கு அவர்கள் தரும் விளக்கங்களும் உள்ளன. அவர்கள் தங்கள் கருத்துக்களைத் திணிக்க விரும்புகிறார்கள்.

வேறு சிலர் இருக்கிறார்கள். இவர்கள் மாயாவாதத்தை ஒப்புக் கொள்வதில்லை; ஆனால் துவைதத்திற்கும் அத்வைதத்திற்கும் இடையில் நிற்கிறார்கள். படைப்பு முழுவதுமே கடவுளுக்கு உடம்புபோல் அமைந்துள்ளது என்பது அவர்கள் கருத்து. கடவுள்தான் எல்லா ஆன்மாக்களுக்கும் அந்தராத்மா. இயற்கைக்கும் அவரே அந்தராத்மாவாக இருக்கிறார். தனி ஆன்மா தீமை செய்யும்போது சுருங்க ஆரம்பிக்கிறது. ஒருவன் பாவம் செய்தால், அவனுடைய ஆன்மா சுருங்க ஆரம்பிக்கிறது. அவனுடைய சக்தி சிறிதுசிறிதாகக் குறைந்துகொண்டே

போகிறது. புண்ணியம் செய்யத் தொடங்கும்போது அது விரிவடைய ஆரம்பிக்கிறது.

இந்திய மதங்கள் எல்லாவற்றிலும், ஏன், உலக மதங்கள் எல்லாவற்றிலுமே தெரிந்தோ தெரியாமலோ, ஒரு பொதுவான கருத்து உள்ளது. என்னைப் பொறுத்தவரை, மனிதன் தெய்விகத் தன்மை உடையவன் என்பதே அது. மனித ஆன்மா என்பது எதுவாக இருந்தாலும் சரி, அது எந்தவிதத்தில் கடவுளோடு சம்பந்தப்பட்டிருந்தாலும் சரி, புராணங்கள், உருவகங்கள், தத்துவங்கள் என்று எதன் மூலம் வெளிப்படுத்தப் பட்டிருந்தாலும் சரி, அது இயல்பிலேயே தூய்மையானது, பூரணமானது என்ற கருத்தைக் கொள்ளாத ஒரு நெறியோ, ஓர் உண்மையான மதமோ உலகில் இல்லை. நன்மையும் ஆற்றலுமே ஆன்மாவின் உண்மை இயல்பு; பலவீனமோ துன்பமோ அல்ல. இந்தத் துன்பம் என்பதெல்லாம் எப்படியோ தோன்றிவிட்டது. அது எப்படி வந்தது என்பதை விளக்குவதற்காக அதைத் தீமையின் உரு, பேய், அஹ்ரிமான் என்றெல்லாம் உருவகப் படுத்த, பண்படாத நெறிகள் பலவும் முயல்கின்றன. இனி சில நெறிகள், கடவுளும் பிசாசும் ஒருவரே, எந்தக் காரணமுமே இல்லாமல் அவர் சிலருக்கு இன்பமும் சிலருக்குத் துன்பமும் கொடுக்கிறார் என்கின்றன. அதிகச் சிந்தனைத் திறனுடைய நெறிகளோ, மாயாவாதம் போன்ற கொள்கைகளால் இதை விளக்க முயல்கின்றன. ஆனால் ஓர் உண்மை தெளிவாகத் தெரிகிறது. நாம் ஆராய வேண்டியது அதைத்தான். பார்க்கப் போனால், இந்தத் தத்துவக் கருத்துக்கள், கோட்பாடுகள் எல்லாமே மனத்திற்கு ஒரு பயிற்சி, அறிவுக்கு ஒரு பயிற்சி, அவ்வளவுதான். உலகிலுள்ள எல்லா மதங்களுடைய மூடநம்பிக்கைகளின் ஊடேயும் எனக்குப் புலப்படுகின்ற ஓர் உன்னதமான கருத்து மனிதன் தெய்வீகமானவன், நமது இயல்பு தெய்வீகம் என்பதுதான்.

வேறு எந்தத் தன்மை வந்தாலும் அது வெறும் ஏற்றுச் செயலே (Superimposition) என்கிறது வேதாந்தம். இருக்கின்ற ஒன்றின்மீது இல்லாத ஒன்று ஏற்றப்பட்டிருக்கிறது, அவ்வளவு தான். ஆனால் தெய்வீகத் தன்மை அழிவதில்லை. கொடுமை யான பாவியிடமும் சரி, பெரிய மகானிடமும் சரி, இந்தத் தன்மை எப்போதும் இருக்கிறது. அதை விழிப்புணர்த்துவது தான் நம் வேலை. அது தானாகவே வெளிப்பட்டு, தன்னைச் செயல்படுத்திக் கொள்ளும். நாம் அதை உணர்த்த வேண்டும்.

அது தானாகவே வெளிப்படும். சிக்கிமுக்கிக் கல்லிலும் விறகிலும் நெருப்பு இருப்பதும், அதை வெளிப்படுத்த உராய்வு அவசியம் என்பதும் பழங்கால மக்களுக்குத் தெரிந்திருந்தது. சுதந்திரமும் தூய்மையுமான நெருப்பு ஒவ்வோர் ஆன்மாவின் இயல்பு. இவை ஆன்மாவின் பண்பு அல்ல. ஏனெனில் பண்பு களை நாம் வளர்த்துக்கொள்ளவும் சேர்த்துக்கொள்ளவும் முடி யும். எனவே அவற்றை இழக்கவும் வாய்ப்பு உண்டு. ஆன்மாவோ சுதந்திரத்துடன் ஒன்றுபட்டது; இருப்புடன் ஒன்றுபட்டது, அறிவுடன் ஒன்றுபட்டது. ஆனந்தம் ஆன்மாவின் இயல்பு, உரிமை. நாம் காண்பவை எல்லாம் அதன் மங்கலான அல்லது பிரகாசமான வெளிப்பாடுகளே. மரணம்கூட அந்த உண்மைப் பொருளின் வெளிப்பாடே. பிறப்பு-இறப்பு, வாழ்வு-சாவு, வீழ்ச்சி-புத்துயிர்ப்பு எல்லாமே அந்த ஒருமையின் பல்வேறு வெளிப்பாடுகள்தான்.

அறிவின்மையாகவோ அறிவாகவோ எப்படி அறிவு தன்னை வெளிப்படுத்திக் கொண்டாலும், அது எல்லா அறிவின் சாரமான 'சித்' என்பதன் வெளிப்பாடே. வேறுபாடு, அள வில்தானே தவிர, தன்மையில் இல்லை. நிலத்தில் ஊர்ந்து செல் லும் மிகத் தாழ்ந்த புழுவின் அறிவுக்கும், உலகின் மிக உயர்ந்த மேதையின் அறிவுக்கும் உள்ள வேறுபாடு அளவில்தானே தவிர, தன்மையில் இல்லை. வாழ்வின் இன்பங்களெல்லாம், அவை எவ்வளவு கீழ்த் தரமானவையாக இருந்தாலும்கூட, அவையெல்லாமே ஆன்மாவின் இயல்புகளில் ஒன்றான ஆனந்தத்தின் வெளிப்பாடுகளே என்று வேதாந்தி தைரியமாகச் சொல்கிறான்.

இந்தக் கருத்துதான் வேதாந்தத்தின் மிகவும் பிரபலமான கருத்து என்று தோன்றுகிறது. நான் முன்னரே சொன்னது போல், எல்லா மதங்களிலும் இந்தக் கருத்து இருப்பதாகத் தான் தெரிகிறது. இந்தக் கருத்து இல்லாத மதம் இருப்பதாக இதுவரையில் எனக்குத் தெரியவில்லை. உலகம்தழுவிய இந்தக் கருத்துதான் எல்லா மதங்களின் வாயிலாகவும் செயல்படுகிறது. பைபிளை எடுத்துக் கொள்வோம். முதல் மனிதனாகிய ஆதாம் முற்றும் தூய்மையானவனாக இருந்தான், பின்னர் தீய செயல் களால் தூய்மையை இழந்துவிட்டான் என்று அதில் உருவ கமாகச் சொல்லப்பட்டிருப்பதைக் காண்கிறோம். ஆதி மனித னின் இயல்பு தூய்மையாக இருந்ததாக நினைத்தார்கள் என் பதையே இந்த உருவகம் காட்டுகிறது. நாம் காணும் மாசுகளும்,

நாம் உணரும் பலவீனங்களும் அந்தத் தூய்மையான இயல்பின் மீது ஏற்றப்பட்டவை. மறுபடியும் மனிதன் தன் பழைய தூய்மையான நிலையை அடைவதற்கான வாய்ப்பு உண்டு, இல்லை யில்லை, அடைய முடியும் என்று நம்புவதையே தொடர்கின்ற கிறிஸ்தவ மத வரலாறு காட்டுகிறது.

பழைய மற்றும் புதிய ஏற்பாடுகள் இரண்டின் மொத்த வரலாறும் இதுதான். முஸ்லீம்களின் விஷயமும் இப்படித் தான். அவர்களும், ஆதாமையும் அவனுடைய தூய்மையையும் நம்பினார்கள். இழந்த அந்த நிலையை அடைவதற்கான வழியை முகமது அவர்களுக்குக் காட்டினார். பௌத்தர்கள் விஷயமும் இதுதான். இந்த உலகைக் கடந்துதான் நிர்வாணம் என்ற நிலையை அவர்கள் கூறுகிறார்கள். வேதாந்திகள் கூறும் பிரம்மம் என்பதே இந்த நிர்வாணம். இழந்த இந்த நிர்வாண நிலையைத் திரும்பவும் அடைய வேண்டும் என்ற கருத்தின் அடிப்படையிலேயே புத்த மதம் அமைந்துள்ளது. நமக்கு ஏற்கனவே உரிமை இல்லாத ஒன்றை நாம் பெற முடியாது என்ற கருத்தை எல்லா மத நெறிகளிலும் நாம் காண்கிறோம். இந்தப் பிரபஞ்சத்தில் யாருக்குமே நாம் கடன்பட்டவர்கள் அல்ல. ஒரு பெரிய வேதாந்தத் தத்துவ ஞானி தமது புத்தகம் ஒன்றின் தலைப்பில், கவிதைநயத்துடன், 'நமது பேரரசைப் பெறுதல்'[1] என்று சொல்லியிருப்பதுபோல், நாம் நம் பிறப்புரிமையைத்தான் கேட்கிறோம். அந்தப் பேரரசு நம்முடையது. அதை இழந்துவிட்டோம்; திரும்பப் பெற்றாக வேண்டும். மாயாவாதியோ, பேரரசை இழந்ததாக நினைப்பதே பொய்த் தோற்றம், நாம் அதை இழக்கவே இல்லை என்கிறான். இரண்டு தரப்பு வாதங்களுக்கும் இதுதான் வேறுபாடு.

பேரரசு நம்முடையது, அதை இழந்துவிட்டோம் என்பது வரை எல்லா மதங்களும் ஒப்புக்கொள்கின்றன. ஆனால் அதைத் திரும்பப் பெறுவது எப்படி என்பதற்குப் பல்வேறு வழிகளைக் கூறுகின்றன. சில சடங்குகளைச் செய்யுங்கள், சில தெய்வங் களுக்கு வேண்டுதல் செலுத்துங்கள், சில உணவுகளை உண் ணுங்கள், இன்னவிதமாக வாழ்க்கை நடத்துங்கள்; அப்போது அந்தப் பேரரசைத் திரும்பப் பெற முடியும் என்கிறது ஒரு மதம். இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒரு சக்திக்கு முன் நெடுஞ் சாண் கிடையாக வீழ்ந்து, அழுது, கதறி, மன்னிப்புக் கேட்பதால்

1. 'ஸ்வாராஜ்ய ஸித்தி:' என்ற வேதாந்த நூல். ஆதி சங்கரரின் சீடர்களுள் ஒருவரான கரேஸ்வரர் இயற்றியது.

அந்தப் பேரரசைப் பெறலாம் என்று இன்னொரு மதம் உபதேசிக்கிறது. அத்தகைய ஒரு சக்தியிடம் மனமார அன்பு செலுத்துவதால் இதனைச் சாதிக்கலாம் என்று வேறொரு மதம் கூறுகிறது. இந்த எல்லா உபதேசங்களும் உபநிடதங் களில் இருக்கின்றன. போகப்போக நீங்கள் இதைப் புரிந்து கொள்வீர்கள்.

ஆனால் நீங்கள் அழுது கதறவே தேவையில்லை என்பது தான் உயர்ந்ததும் இறுதியானதுமான உபதேசம். இந்தச் சடங்குகளையெல்லாம் செய்ய வேண்டாம், பேரரசை எப்படித் திரும்பப் பெறுவது என்ற எண்ணமே உங்களுக்குத் தேவை யில்லை. ஏனெனில் நீங்கள் அதை இழக்கவே இல்லை. இழக்காத ஒன்றை ஏன் தேடிப் போக வேண்டும்? நீங்கள் ஏற்கனவே தூய வர்களாக இருக்கிறீர்கள், சுதந்திரமானவர்களாக இருக்கிறீர்கள். நீங்கள் சுதந்திரமாக இருப்பதாக நினைத்தால் அந்தக் கணமே சுதந்திரம் அடைகிறீர்கள். கட்டுண்டவர்கள் என்று எண்ணி னால் கட்டுண்டவர்களாக இருக்கிறீர்கள். இவை மிகவும் தைரிய மான வார்த்தைகள். முதலில் நான் சொன்னபடி, நான் துணிச்ச லாகத்தான் பேசியாக வேண்டும். இது இப்போது உங்களுக்கு பயத்தைத் தரலாம். ஆனால் சிந்தித்து, இதை உங்கள் வாழ்க்கை யில் அனுபவிக்கும்போது என் வார்த்தையின் உண்மை உங்களுக்குப் புலப்படும். சுதந்திரம் என்பது உங்கள் இயல்பு இல்லை என்று வைத்துக் கொள்வோம். நீங்கள் தலைகீழாக நின்றாலும் உங்களால் சுதந்திரம் பெற முடியாது. சுதந்திரமாக இருந்தீர்கள், எப்படியோ அதை இழந்துவிட்டீர்கள் என்று சொன்னால், முதலிலும் நீங்கள் சுதந்திரராக இல்லை என்று தான் ஆகும். நீங்கள் உண்மையில் சுதந்திரராக இருந்திருந்தால், அந்தச் சுதந்திரத்தை இழக்கச் செய்ய எதனால் முடிந்திருக்கும்? கட்டுப்படாத இயல்புள்ள ஒன்றைக் கட்டுப்படுத்தவே முடியாது. அது உண்மையில் கட்டுப்பட்டிருந்தால், அதன் சுதந்திரம் ஒரு பொய்த்தோற்றம்.

இந்த இரண்டுள் நீங்கள் எதை எடுப்பீர்கள்? ஆன்மா இயல்பாகவே தூய்மையாகவும் சுதந்திரமாகவும் உள்ளது என்று சொன்னால், பிரபஞ்சத்திலுள்ள எதனாலும் அதைக் கட்டுப் படுத்தவோ, எல்லைக்குள் அடக்கவோ முடியாது என்பதுதான் பொருள். ஆன்மாவைக் கட்டுப்படுத்தும் சக்தி ஒன்று இயற்கை யில் இருந்தால், அப்போது ஆன்மா சுதந்திரமானது அல்ல. அது சுதந்திரமானது என்று நாம் கூறியது வெறும் மனமயக்கம்.

---

ஆகவே சுதந்திரம் அடைவது சாத்தியம் என்றால், ஆன்மா இயல்பாகவே சுதந்திரமானது என்ற முடிவுக்குத்தான் வர வேண்டியிருக்கிறது. வேறுவிதமாக இருக்க முடியாது. சுதந்திரம் என்றால், வெளியிலுள்ள எதையும் சாராதது என்பதுதான் பொருள். அதாவது அதற்கு வெளியிலுள்ள எதுவுமே அதை மாற்றமடையச் செய்ய முடியாது.

ஆன்மா ஆதியந்தமற்றது. இந்தக் கருத்திலிருந்துதான் உயர்ந்த கருத்துக்கள் அனைத்தையும் நாம் பெற்றுள்ளோம். ஆன்மா இயல்பாகவே சுதந்திரமானது, அதாவது வெளியிலுள்ள எதுவும் அதைப் பாதிக்க முடியாது என்று வைத்துக் கொண்டால்தான் ஆன்மா மரணமற்றது என்பதை உறுதிப் படுத்த முடியும். ஏனெனில் மரணம் என்பதற்குப் புறக் காரணங்கள் அவசியம். நான் விஷத்தைக் குடித்தால் இறந்து விடுவேன். ஆகவே விஷம் என்ற புறப் பொருள் என் உடலைப் பாதிக்கிறது என்பது தெளிவாகிறது. ஆன்மா சுதந்திரமானது என்பது உண்மையானால் அதை எதுவும் பாதிக்க முடியாது. அதற்கு மரணமே இல்லை என்றுதான் ஆகிறது. இந்தக் காரணகாரிய விதியை, இந்த மாயையை, கடந்து நின்றால்தான், ஆன்மா சுதந்திரமானது, மரணமற்றது, ஆனந்தமயமானது என்பதெல்லாம் உண்மையாக முடியும். இந்த இரண்டுள் நீங்கள் எதை எடுப்பீர்கள்? முதலாவது உள்ளது மனமயக்கம் என்று சொல்லுங்கள், இல்லை இரண்டாவது உள்ளது மனமயக்கம் என்று சொல்லுங்கள். நான் இரண்டாவதையே சொல்வேன். எனது உணர்ச்சிகளுக்கு, நோக்கங்களுக்கு அதுதான் மிகவும் பொருத்தமாகத் தோன்றுகிறது. நான் இயல்பாகவே சுதந்திரமானவன் என்பதை நன்கு உணர்ந்திருக்கிறேன். இந்தத் தளைதான் உண்மை, எனது சுதந்திரம் மனமயக்கம் என்பதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்.

எல்லா தத்துவங்களிலும் இந்த விவாதம் ஏதாவது ஒரு விதத்தில் நடந்துகொண்டுதான் இருக்கிறது. மிகவும் அண்மைக் காலத் தத்துவங்களில்கூட இதே விவாதம் எழுவதைக் காண்கிறோம். இதில் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. ஆன்மா என்பது இல்லை; உடல், மூளை என்று நாம் சொல்லும் பொருட்களை உருவாக்குகின்ற ஜடப்பொருளிலுள்ள மூலக்கூறுகளின் தொடர்ந்த சுழற்சியே ஆன்மா இருப்பதைப் போன்ற மனமயக்கத்தை ஏற்படுத்துகிறது. இந்த மூலக்கூறுகளின் அதிர்வும் இயக்கமும் இடைவிடாத சுழற்சியும்தான்

சுதந்திரம் என்ற எண்ணத்திற்குக் காரணமாக இருக்கிறது என்று ஒரு பிரிவு சொல்கிறது. இதே கருத்துள்ள பௌத்த மதப் பிரிவுகள் சில இருந்தன. கீழ்க்கண்ட உதாரணத்தால் இந்தக் கருத்தை அவை விளக்கின: ஒரு தீப்பந்தத்தை வேகமாகச் சுழற்றினால் ஓர் ஒளிவட்டம் தோன்றுகிறது. தீப்பந்தம் கணத்துக்குக் கணம் இடம் மாறுவதால் ஏற்படும் தோற்றமே இது. மற்றபடி உண்மையான ஒளிவட்டம் ஒன்றும் இல்லை. நாம் எல்லோரும் நுண் மூலக்கூறுகளின் சேர்க்கை. அவற்றின் வேகமான சுழற்சியால் நிரந்தரமான ஆன்மா ஒன்று இருப்பது போன்ற மயக்கம் உண்டாகிறது.

மற்றொரு பிரிவு சொல்கிறது: எண்ணங்கள் தொடர்ந்து வேகமாக எழுவதால்தான் ஜடப்பொருள் இருப்பது போன்று தோன்றுகிறது. உண்மையில் ஜடப்பொருள் என்பதே இல்லை. ஆகவே ஒரு பிரிவு, ஆன்மா என்பது தோற்றம் என்றும், மற்றொரு பிரிவு, ஜடப்பொருளே தோற்றம் என்றும் சொல்வதைக் காண்கிறோம். நீங்கள் எந்தப் பக்கம்? நிச்சயமாக, ஆன்மா உண்மை, பொருட்கள் தோற்றம் என்று கூறுகின்ற பக்கம் தான்.

வாதங்கள் இரண்டு பிரிவுகளுக்கும் ஒரே மாதிரிதான் இருக்கின்றன. ஆனால் ஆன்மா உண்டு என்கின்ற பிரிவின் வாதம், சிறிது அதிக வலுவுள்ளதாக இருக்கிறது. ஜடப்பொருள் என்பது என்ன என்பதை உண்மையில் யாரும் பார்த்ததில்லை. நாம் நம்மைத்தான் உணர்ந்துகொள்ள முடியும். தனக்கு வெளியே ஜடப்பொருளை உணரவல்ல ஒருவரைக்கூட நான் இதுவரை பார்த்ததில்லை. தன்னைவிட்டு வெளியே குதிக்க யாராலும் இதுவரை முடிந்ததில்லை. எனவே ஆன்மா உண்டு என்று கூறும் பிரிவின் வாதம், சிறிது அதிக வலுவுள்ளதாகவே இருக்கிறது. இரண்டாவதாக, ஆன்மவாதம் பிரபஞ்சத்திற்கு விளக்கம் அளிக்கிறது. ஆனால் ஜடப்பொருள் வாதமோ அப்படிச் செய்வதில்லை. ஆகவே ஜடப்பொருள் வாதம் தர்க்கரீதியானது அல்ல.

எல்லா தத்துவங்களையும் அலசி ஆராய்ந்தால், அவை இந்த இரண்டு பிரிவுகளுள் ஏதாவது ஒன்றில் அடங்குவதைக் காண்போம். இயல்பான தூய்மை மற்றும் சுதந்திரம் பற்றிய கேள்விகள் இங்கேயும் எழுகின்றன. இங்கே, அது மேலும் சிக்கல் நிறைந்ததாக, மேலும் தத்துவரீதியாக உள்ளது. ஆன்மாவே தோற்றம் என்று ஒரு பிரிவும், ஜடப்பொருளே தோற்றம் என்று

மற்றொரு பிரிவும் வாதிக்கின்றன. நாம் இரண்டாவது பிரிவையே ஆதரிக்கிறோம். நமது தளைகள்தாம் தோற்றம் என்று நாம் நம்புகிறோம்.

நாம் கட்டுப்படவே இல்லை. ஏற்கனவே நாம் சுதந்திரர்களாகத்தான் இருக்கிறோம் என்பதே இந்தப் பிரச்சினைக்கு வேதாந்தம் காணும் தீர்வு. அது மட்டுமல்ல, நாம் கட்டுப்பட்டிருக்கிறோம் என்று சொல்வதும், ஏன், நினைப்பதும்கூட ஆபத்துதான். அது பெரும் தவறு; அத்துடன் தன்னைத் தானே மனவசியத்திற்கு உட்படுத்திக் கொள்வதும் ஆகும். 'நான் கட்டுண்டவன்', 'நான் பலவீனன்', 'நான் உதவியற்றவன்' என்றெல்லாம் சொல்லும் அந்தக் கணமே நாம் நம் நிலையிலிருந்து தாழ்வடைகிறோம்; நம்மைப் பிணைத்திருக்கும் சங்கிலிகளின் எண்ணிக்கையில் ஒன்றை அதிகரிக்கிறோம். அவ்வாறு சொல்லாதீர்கள், அவ்வாறு நினைக்காதீர்கள்.

காட்டிலேயே வாழ்ந்து 'சிவோஹம்—நானே ஆனந்த மயமான ஆன்மா' என்று இடைவிடாமல் சொல்லிக்கொண்டிருந்த ஒருவரைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருநாள் ஒரு புலி அவர்மேல் பாய்ந்து, அவரை இழுத்துக் கொண்டு போயிற்று. ஆற்றிற்கு அக்கரையில் இருந்தவர்கள் அதைப் பார்த்தார்கள். புலியின் வாயில் சிக்கி, மரணத்தை நெருங்கிக் கொண்டிருந்தபோதும், குரல் இருந்ததுவரை 'சிவோஹம்' என்று அவர் சொல்லிக்கொண்டே இருந்தது அவர்கள் காதில் விழுந்தது. அத்தகையோர் பலர் இருந்திருக்கின்றனர். துண்டுதுண்டாகப் பகைவர்கள் வெட்டியபோதும் அவர்களை வாழ்த்திய மகான்கள் இருந்திருக்கிறார்கள். 'நானே அவன்; நானே அவன்.' அப்படியே நீங்களும். நான் தூயவன், பூரணமானவன். எனது எல்லா பகைவர்களும் அப்படியே. நீயும் அவனே, நானும் அவனே.' அதுதான் வலிமை என்பது.

துவைத நெறிகளிலும் சிறந்த, அற்புதமான கருத்துக்கள் இருக்கின்றன. இயற்கைக்கு அப்பால், நாம் அன்பு செலுத்தி, வழிபடும் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்ற கருத்து எவ்வளவு சிறந்தது! சிலநேரங்களில் இந்தக் கருத்து இதமளிப்பதாக இருக்கிறது. ஆனால் இந்த இதமான நிலை, ஒரு போதைநிலை போன்றதே தவிர, இயற்கையானதல்ல என்று வேதாந்தம் கூறுகிறது. காலப்போக்கில் இது பலவீனத்தையே ஏற்படுத்தும். உலகத்திற்கோ முன்பு எப்போதையும்விட அதிகமாக இப்போது தேவைப்படுவது வலிமைதான். உலகில் காணப்படும்

துன்பங்கள் அனைத்திற்கும் மூலகாரணம் பலவீனம்தான் என்று வேதாந்தம் சொல்கிறது. நாம் துன்புறுவதற்கு பலவீனம்தான் ஒரே காரணம். நாம் பலவீனர்களாக இருப்பதால்தான் துன்ப மடைகிறோம். பலவீனர்களாக இருப்பதால்தான் பொய் சொல் கிறோம், கொள்ளை அடிக்கிறோம், கொலை செய்கிறோம், மற்ற குற்றங்களையும் செய்கிறோம். நாம் பலவீனர்களாக இருப்பதால்தான் துன்பப்படுகிறோம். நாம் பலவீனர்களாக இருப்பதால்தான் மரணம் அடைகிறோம். நம்மைப் பலவீனப் படுத்துவதற்கு எதுவும் இல்லாதபோது நமக்கு மரணமோ துன்பமோ இல்லை. மனமயக்கமே நமது துன்பங்களுக்குக் காரணம். அந்த மனமயக்கத்தை விடுங்கள். துன்பங்களெல்லாம் பறந்துவிடும். இது மிகவும் தெளிவானது, எளிதானது. தத்துவ வாதங்கள், அறிவு ஜாலங்கள் இவை எல்லாவற்றின் மூலமாக நாம் அடையும் முடிவான மதக்கருத்து, உலகிலேயே மிகவும் எளிய கருத்து இதுதான்.

உண்மையை வெளிப்படுத்துவதற்கான மிகவும் எளிய வழி அத்வைத வேதாந்தம். இந்தியாவிலும் வேறு எங்கேயும் துவைதத் தத்துவ உபதேசம் பெருந்தவறாகவே இருந்திருக்கிறது. ஏனெனில் மக்கள் அறுதித் தத்துவங்களை அறிய விரும்பு வதில்லை; வழிகளை மட்டுமே மனத்தில் கொள்கிறார்கள். அந்த வழிகள் மிகவும் சிக்கலானவை என்பதில் சந்தேகமில்லை. வேதாந்தத்தின் சிக்கலான, தத்துவரீதியான, தர்க்கபூர்வமான விளக்கங்கள் பலருக்குப் பெரும் பயத்தையே அளித்தன. இந்தத் தத்துவ விளக்கங்கள் உலகம்தழுவியவையாக இருக்க முடியாது, தினசரி வாழ்க்கையில் இவற்றைப் பின்பற்ற முடியாது என்று மக்கள் நினைத்தார்கள். இந்தத் தத்துவம் மந்த நிலையை வளர்க்கும் என்றே அவர்கள் கருதினார்கள்.

ஆனால் அத்வைதக் கருத்துக்கள் தீயொழுக்கத்தையும் பலவீனத்தையும் தோற்றுவிக்கும் என்பதை நான் சிறிதும் நம் பவில்லை. மாறாக, ஒழுக்கமின்மைக்கும் பலவீனத்திற்கும் இந்தக் கருத்துக்கள் மட்டுமே பரிகாரமாக இருக்க முடியும் என்றே நான் நம்புகிறேன். அதற்கான காரணமும் இருக்கிறது. உண்மை இதுவானால், வாழ்க்கை என்னும் நல்ல நீரோடை அருகில் ஓடிக் கொண்டிருக்கும்போது, மக்கள் சாக்கடைத் தண்ணீரைக் குடிப்பதை எப்படிப் பார்த்துக்கொண்டிருக்க முடியும்? எல்லோரும் தூயவர்களே என்பது உண்மையானால், அதை ஏன் இப்போதே உலகத்திற்குப் போதிக்கக் கூடாது?

இடி போன்ற குரலுடன், அதை மகான்கள், பாவிகள், ஆண், பெண், குழந்தை என்று எல்லோருக்கும், தோட்டி முதல் தொண்டைமான்வரை அனைவருக்கும் ஏன் உபதேசிக்கக் கூடாது?

இது மிகப் பெரிய, அசாதாரணமான முயற்சிபோல் இப்போது தோன்றுகிறது. பலருக்கு இது அதிர்ச்சி அளிக்கிறது. இதற்குக் காரணம் மூட நம்பிக்கையே தவிர வேறு எதுவுமில்லை. செரிக்க முடியாத, கண்ட உணவுகளைச் சாப்பிடுகிறோம், அல்லது முழுப்பட்டினி கிடக்கிறோம். இதனால் நல்ல உணவை உண்ணும் தகுதியை இழந்துவிடுகிறோம். குழந்தைப் பருவத்திலிருந்தே பலவீனமான வார்த்தைகளே நம் காதில் விழுந்து வருகின்றன. பேய்பிசாசுகளை நம்பவில்லை என்று சொல்கிறார்கள். ஆனால் இருட்டு என்று வரும்போது அச்சத்துடன் அங்குமிங்கும் பார்க்காதவர்கள் மிகச் சிலரே. வெறும் மூட நம்பிக்கை. எல்லாவிதமான மத மூடநம்பிக்கைகளும் இது போன்றவைதான். சாத்தான் என்ற ஒன்று கிடையாது என்று நான் சொன்னால், மதமே அழிந்துவிட்டதாகப் பதறுகின்ற சிலர் இந்த நாட்டில் இருக்கவே செய்வார்கள். சாத்தான் இல்லாமல் மதம் எப்படி இருக்க முடியும்? யாராலும் ஆளப்படாமல் நாம் எப்படி வாழ முடியும்? நம்மை யாராவது ஆள்வதே நமக்குப் பழக்கமாகிவிட்டது. எனவே அப்படியே நடத்தப்பட விரும்புகிறோம். தினமும் யாரிடமாவது குட்டு வாங்காமல் இருந்தால், நமக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. அதே மூட நம்பிக்கை!

வேதாந்தக் கருத்து இப்போது பயங்கரமாகத் தோன்றலாம். ஆனால் ஒரு காலம் வரும். அப்போது நாம் ஒவ்வொருவரும் பின்னால் திரும்பிப் பார்த்து, அதுவரை நம்முடைய தூயநிலையான ஆன்மாவை மறைத்துக் கொண்டிருந்த மூடநம்பிக்கைகளை நினைத்துச் சிரிப்போம்; நான் சுதந்திரமானவனாக இருக்கிறேன், இருந்தேன், இருப்பேன் என்று மகிழ்ச்சியுடனும் உண்மையாகவும் புதிய பலத்துடனும் சொல்வோம். வேதாந்தத்திலிருந்து இந்த அத்வைதக் கருத்து புறப்பட்டு வெளிவரும்; நிலைத்து நிற்கத் தகுதியுள்ளது இந்த ஒரு கருத்து மட்டுமே. சாஸ்திரங்கள் நாளையே அழிந்துவிடலாம். இந்தக் கருத்து, முதலில் ஹீப்ருக்களின் மூளையில் தோன்றியதா, துருவப் பிரதேசங்களில் வசித்த மக்களின் மனத்தில் எழுந்ததா என்பது பற்றி நமக்குக் கவலையில்லை. ஏனெனில் இதுதான் உண்மை.

உண்மை அழிவற்றது. அது மட்டுமல்லாமல் உண்மை எந்தத் தனி மனிதனுக்கோ, நாட்டிற்கோ மட்டுமே சொந்தமல்ல என்பதை அதுவே போதிக்கிறது. மனிதர்கள், மிருகங்கள், தேவர்கள் எல்லோருக்கும் இந்த ஒரே உண்மை பொதுவானது. எல்லோரும் இதைப் பெறட்டும். வாழ்க்கையை ஏன் துன்பமயமாக ஆக்கிக் கொள்ள வேண்டும்? மக்கள் ஏன் எல்லா வகையான மூட நம்பிக்கைகளுக்கும் ஆட்பட வேண்டும்? இருபது பேர் தங்கள் மூட நம்பிக்கைகளை விட்டுவிடச் சம்மதித்தால் அதற்கு ஈடாக நான் பத்தாயிரம் தடவைகூட என் உயிரைவிடத் தயாராக இருக்கிறேன். இந்த நாட்டில் மட்டுமல்ல, வேதாந்தம் பிறந்த இந்திய மண்ணில்கூட, இந்த உண்மையை எடுத்துக் கூறினால் மக்கள் பயப்படுகிறார்கள். 'இந்தக் கருத்து, உலகத்தைத் துறந்து, காடுகளில் வசிக்கும் சன்னியாசிகளுக்கு உரியது. அவர்களுக்கு இது சரியாக இருக்கலாம். பலவீனமான இல்லறத்தார்களாகிய எங்களுக்குக் கடவுளிடம் பயம் இருக்க வேண்டும். சடங்குகள் வேண்டும்' என்றெல்லாம் அவர்கள் சொல்கிறார்கள்.

துவைதக் கருத்துக்கள் வெகுகாலமாக உலகை ஆட்சி புரிந்துள்ளன. அதன் பலன் இதுதான். ஏன் ஒரு புதிய பரிசோதனையைச் செய்யக் கூடாது? அத்வைதக் கருத்தை உலகம் ஒப்புக்கொள்வதற்குப் பல யுகங்கள் ஆகலாம். ஆனால் அதை ஏன் இப்போதிலிருந்தே தொடங்கக் கூடாது? நம் வாழ்க்கையில் இருபது பேருக்காவது இந்தக் கருத்தை எடுத்துச் சொல்ல முடிந்தால், அதுவே ஒரு பெரும் சாதனையாகும்.

இந்தக் கருத்திற்கு எதிராக ஒரு வலுவான கருத்து இருக்கிறது. அது இதுதான்: 'நான் தூயவன், ஆனந்த மயமானவன்' என்றெல்லாம் சொல்வது சுலபம்தான். ஆனால் நடைமுறையில் இவ்வாறு இருப்பது மிகவும் கடினம். இது உண்மை, இந்த லட்சியம் மிகவும் கடினமானதுதான். பிறக்கின்ற ஒவ்வொரு குழந்தைக்கும் ஆகாயம் என்பது தலைக்குமேல் வெகு தூரத்திலேயே உள்ளது. ஆனால் அதற்காக நாம் ஆகாயத்தையே பார்க்கக் கூடாது என்பது எப்படிச் சரியாகும்?. மூட நம்பிக்கைகளின் மூலம் எல்லாவற்றையும் சீராக்கிவிட முடியுமா? அமுதம் கிடைக்கவில்லை என்பதற்காக விஷத்தைக் குடிக்கலாமா? உண்மையை உடனே உணர முடியவில்லை என்பதற்காக இருட்டில் உழன்றுகொண்டு, பலவீனத்திற்கும் மூட நம்பிக்கைகளுக்கும் அடிமையாவதால் ஏதாவது நன்மை விளையுமா?

துவைதத்தின் பல விஷயங்களில் எனக்கு ஆட்சேபம் இல்லை. அவற்றில் பலவற்றை எனக்குப் பிடிக்கும். ஆனால் பலவீனத்தை வளர்க்கும் எந்த முறையையும் நான் ஆட்சேபிக் கிறேன். உடல், மனம் மற்றும் ஆன்மீகப் பயிற்சியில் ஈடுபட்டி ருக்கின்ற ஒவ்வோர் ஆண், பெண், மற்றும் குழந்தையிடமும் நான் கேட்கும் ஒரே கேள்வி இதுதான்: உன்னிடம் வலிமை இருக்கிறதா? வலிமையை நீ உணர்கிறாயா? ஏனெனில் உண்மை ஒன்றுதான் வலிமையைத் தர முடியும் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். உண்மை ஒன்றுதான் வாழ்க்கையைத் தர முடியும். உண்மையை நோக்கிச் செல்வதுதான் நமக்கு வலிமை தர முடியும். வலிமை படைத்தவர்களாக ஆகும்வரை உண்மையை அறிய முடியாது. ஆகவே நமது மனத்தைப் பலவீனமாக்கி, மூட நம்பிக்கையில் ஆழ்த்தி, மந்தமானவர்களாக்கி, சாத்திய மில்லாதவற்றை ஆசையுறச் செய்பவர்களாகவும் அற்புதச் செயல்களை நம்புபவர்களாகவும் நம்மை ஆக்குகின்ற எந்த நெறியையும் நான் விரும்பவில்லை. அவற்றின் பலன் அபாயகர மானது. அத்தகைய நெறிகள் ஒருபோதும் நன்மை செய் வதில்லை. அவை மனத்தை மந்த நிலையில் ஆழ்த்தி காலப் போக்கில் உண்மையை உணர, உண்மைவழியில் வாழ முடியாத அளவுக்கு மனத்தைப் பலவீனப்படுத்தி விடுகின்றன.

வலிமையே தேவையான ஒன்று. உலகின் நோய்க்கு வலி மையே சரியான மருந்து. பணக்காரன் ஏழையைக் கொடுமைப் படுத்தும்போது ஏழைக்கு வேண்டிய மருந்து வலிமை. படித்த வன் பாமரனை நசுக்கும்போது பாமரனுக்கு வேண்டிய மருந்து வலிமை. பாவிகள், வேறு பாவிகளால் நசுக்கப்படும்போது, நசுக்கப்படுபவர்களின் மருந்து வலிமை. அந்த வலிமையை அத் வைதத்தைப்போல் வேறெந்த நெறியும் அளிப்பதில்லை. இந்தக் கருத்தைப்போல் வேறு எதுவும் மனிதனை நல்லொழுக்கம் உடையவனாக ஆக்குவதில்லை.

இங்கே எல்லா பொறுப்பையும் நாமே சுமக்க நேர்வதால் நாம் சிறந்த முறையில், நம்முடைய எல்லா சக்தியையும் திரட்டி இயங்குகிறோம். நம்மை இவ்வளவு சிறப்பாகச் செயல்பட வைக்க வேறெந்தக் கருத்தாலும் முடியாது. உங்கள் எல்லோ ருக்கும் நான் ஒரு சவால் விடுகிறேன். ஒரு சிறு குழந்தையை உங்கள் கையில் கொடுத்தால், நீங்கள் எப்படி நடந்து கொள் வீர்கள்? அந்தக் கண நேரத்திற்கு உங்கள் வாழ்க்கையே மாறிவிடும். நீங்கள் எப்படிப்பட்டவராக இருந்தாலும், அந்த

நேரத்திற்கு, சுயநலமற்றவர்களாக ஆகியே தீர வேண்டும். பொறுப்பு திணிக்கப்பட்டால் உங்கள் தீய எண்ணங்கள் எல்லாம் மறைந்துவிடும், உங்களுடைய குணம் முழுவதுமே மாறிவிடும். பொறுப்பு முழுவதும் நம் தலையில் விழும்போது நமது சிறந்த தன்மைகளெல்லாம் வெளிப்படத் தொடங்கி விடும். இருட்டில் தடுமாறிக்கொண்டு நாம் தேடிச் செல்வதற்கு ஒருவர் இல்லாதபோது, நாம் குற்றம் சாட்டுவதற்கு ஒரு சாத்தான் இல்லாதபோது, நம்முடைய சுமைகளைச் சுமப்பதற்கு ஒரு சகுணக் கடவுள் இல்லாதபோது எல்லாவற்றிற்கும் நாமே பொறுப்பாளியாக இருக்கும் அந்த நிலையில்தான், நாம் மிக உயர்ந்த, மிகச் சிறந்த நிலைக்கு உயரத் தொடங்குவோம். என்னுடைய விதிக்கு நானே காரணமாகிறேன். எனக்கு நன்மையை நானேதான் தேடிக் கொள்ள வேண்டும். எனக்குத் தீமை விளைவித்துக் கொள்பவனும் நானேதான். நான் தூய்மையும் ஆனந்தமும் நிறைந்தவன். இதற்கு மாறான முடிவை வலியுறுத்தும் எண்ணங்களை நாம் ஒதுக்கிவிட வேண்டும்.

'எனக்கு மரணமோ பயமோ இல்லை; ஜாதிமத பேத மில்லை; தந்தை, தாய், சகோதர சகோதரிகள், நண்பன், பகைவன் என்று யாரும் எனக்கு இல்லை. நானே சச்சிதானந்த சொரூபம். நானே ஆனந்தமயமான ஆன்மா, நானே ஆனந்த மயமானவன். புண்ணியமோ பாவமோ இன்பமோ துன்பமோ என்னைக் கட்டுப்படுத்துவதில்லை. தீர்த்த யாத்திரைகளுக்கோ சாஸ்திரங் களுக்கோ சடங்குகளுக்கோ நான் கட்டுப்பட்டவனல்ல. எனக்குப் பசியோ தாகமோ இல்லை. உடல் எனக்குச் சொந்தம் இல்லை. உடலைப் பாதிக்கும் கேடுகளுக்கோ மூடநம்பிக்கை களுக்கோ நான் கட்டுப்பட்டவனல்ல. நானே சச்சிதானந்த சொரூபம். நானே ஆனந்த மயமானவன்; நானே ஆனந்த மய மானவன்.'[1]

இந்த ஒரு பிரார்த்தனையை மட்டும்தான் நாம் செய்ய வேண்டும் என்று வேதாந்தம் சொல்கிறது. நாம் தெய்வீகமான வர்கள் என்று நமக்கும் மற்றவர்களுக்கும் உபதேசிப்பதன்மூலம் தான் நாம் குறிக்கோளை அடைய முடியும். இதைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே இருந்தால் நமக்கு வலிமை வந்துவிடும். முதலில் தடுமாறுபவர்கள் சிறிதுசிறிதாக அதிக உறுதி பெறுவார்கள். உண்மை, நம் இதயத்தில் இடம்பிடித்து,

---

1. ஆதி சங்கரர் எழுதிய நிர்வாண ஷட்கத்திலிருந்து.

ரத்தத்தோடு ரத்தமாகக் கலந்து, நம் உடல் முழுவதும் பரவும் வரையிலும் வலிமை அதிகரித்துக்கொண்டே போகும். ஒளியின் பிரகாசம் அதிகமாக அதிகமாக, மன மயக்கங்கள் மறைந்து விடும். சுமை சுமையாக இருக்கும் நம் அறியாமை மறைந்துவிடும். அதன்பிறகு எல்லாமே மறைந்து, ஆன்மாவாகிய உண்மை மட்டுமே ஒளிரும் காலமும் வரும்.

# 11. பகுத்தறிவும் மதமும்

18 நவம்பர் 1896

ஒருநாள் நாரத மகரிஷி உண்மையைப்பற்றி அறியும் பொருட்டு, சனத்குமாரர் என்னும் முனிவரிடம் வந்தார். சனத் குமாரர் நாரதரிடம், 'நீங்கள் என்னவெல்லாம் கற்றிருக் கிறீர்கள்?' என்று கேட்டார். வேதங்கள், வானியல் என்று பல வற்றைத் தாம் கற்றுள்ளதாகவும், இருந்தும் தமக்கு மனநிறைவு ஏற்படவில்லையென்றும் நாரதர் சொன்னார். உரையாடல் தொடர்ந்தது. அப்பொழுது சனத்குமாரர் 'வேதங்கள், வானியல், தத்துவ இயல்—இந்த அறிவெல்லாம் இரண்டாம் பட்ச மானவை, எது நாம் பிரம்மத்தை உணரும்படிச் செய்கிறதோ, அதுதான் மிக உயர்ந்த அறிவு என்பதை எடுத்துக் கூறினார்.

இந்தக் கருத்தை நாம் எல்லா மதங்களிலும் காண்கிறோம். அதனால்தான் மதம் மிகச் சிறந்த அறிவு என்று கொண்டாடப் படுகிறது. விஞ்ஞான அறிவு நம் வாழ்க்கையின் ஒரு பகுதியைத் தான் தொடுகிறது; ஆனால் மதம் நமக்குக் கொடுக்கும் ஞானமோ என்றும் உள்ளது; அது போதிக்கும் உண்மையைப் போலவே எல்லையற்றது. இப்படி உயர்வு கொண்டாடியதன் காரணமாக மதங்கள் துரதிர்ஷ்டவசமாக, சாதாரண அறிவை எல்லாம் துச்சமாகக் கருதுகின்றன. அது மட்டுமல்ல, உலக அறிவின்மூலம் தங்களை மெய்ப்பிக்கவும் மறுக்கின்றன. இதன் விளைவாக உலகம் முழுவதும், உலக அறிவிற்கும் மத அறிவிற்கும் இடையே சண்டைகள் நிகழ்கின்றன. உலக அறிவு சொல்கின்ற எதையும் ஏற்றுக்கொள்ளாமல் தனக்குப் பிழையற்ற தனி அதிகாரம் உள்ளது என்று மதஅறிவு கூறுகிறது. உலக அறிவோ, மதஅறிவு கொண்டுவரும் எதையும் பகுத்தறிவு என்னும் தனது பளிச்சிடும் வாளால் துண்டுதுண்டாக வெட்ட முயல்கிறது.

இந்தச் சண்டை எல்லா நாடுகளிலும் நடந்தது, நடக்கிறது. ஆனால் மீண்டும்மீண்டும் மதங்கள்தான் தோல்வியுற்றன; ஏறக்குறைய அறிவின் விளிம்பிற்குத் தள்ளப்பட்டுவிட்டன.

பிரெஞ்சுப் புரட்சியின்போது பகுத்தறிவு தேவதை வழிபடப் பட்டாளே, அது மனித வரலாற்றில் முதன்முறை நடந்த ஒன்று அல்ல. அன்று நடந்தது மீண்டும் அரங்கேறியிருக்கிறது, ஆனால் இன்று அது சற்று பெரிய அளவில் நடக்கிறது, அவ்வளவுதான். விஞ்ஞான அறிவுக்கு, முன்னைவிட அதிக சாதனங்கள் கிடைத் துள்ளன. மதங்களின் விஷயத்தில் அப்படியில்லை, அடித்தளம் தகர்ந்துவிட்டது. இன்றைய மனிதன் வெளியே என்ன சொன் னாலும் சரி, தன்னால் இனி எதையும் 'நம்ப' முடியாது என்று அந்தரங்கத்தில் அவனுக்குத் தெரியும். புரோகிதர் கூட்டம் நம்பச் சொல்வதாலோ, சில நூல்களில் எழுதப்பட்டுள்ளது என்பதற்காகவோ, தன்னைச் சேர்ந்தவர்கள் சொல்கிறார்கள் என்பதற்காகவோ எதையும் நம்புவது தற்கால மனிதனுக்கு இயலாத காரியம். எல்லோரும் நம்புவதை மறுப்பின்றி ஏற்றுக் கொள்கின்ற பலர் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் சிந்திப்பதில்லை என்பது நமக்கு நிச்சயமாகத் தெரியும். நம்பிக்கையைப் பற்றிய அவர்களின் கருத்தை 'சிந்திக்காத அக்கறையற்ற தன்மை' என்று மொழிபெயர்க்கலாம். மதத் தின் எல்லா கட்டிடங்களையும் தகர்க்காமல் இந்தச் சண்டை தொடர்ந்து நடக்க முடியாது.

இதைத் தீர்க்க வழி உள்ளதா என்பதுதான் கேள்வி. இன் னும் தெளிவாகச் சொல்ல வேண்டுமானால், மற்ற விஞ் ஞானங்கள் பகுத்தறிவு முறையில் நிரூபிக்கப்படுவதுபோல் மதத்தை நிரூபிக்க முடியுமா என்பதுதான் கேள்வி. விஞ்ஞானம் மற்றும் புற அறிவு விஷயங்களில் நாம் பயன்படுத்தும் அதே ஆராய்ச்சி முறைகளை மத விஞ்ஞானத்திலும் பயன்படுத்த முடியுமா? என் கருத்துப்படி, இதைச் செய்யத்தான் வேண்டும்; எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் செய்வது நல்லது. இத்தகைய ஆராய்ச்சியால் ஒரு மதம் அழியுமானால், இத்தனை நாளும் அது பயனற்றதாக இருந்தது என்றுதான் பொருள். அது வெறும் மூட நம்பிக்கை. எவ்வளவு விரைவாக அது ஒழிகிறதோ, அவ்வளவு நல்லது. அத்தகைய மதத்தின் அழிவைவிடச் சிறந்த காரியம் எதுவும் இருக்காது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். இத்தகைய ஆராய்ச்சியின் காரணமாக அழுக்கெல்லாம் அகற்றப்பட்டு, மதத்தின் சாரப் பகுதிகள் வெற்றியுடன் வெளிப்படும்; இயற்பியல், வேதியியல் இவற்றின் முடிவுகளைப் போல் மதமும் விஞ்ஞானபூர்வமாகத் திகழும். அது மட்டுமல்ல, அவற்றைவிட வலிமை வாய்ந்ததாகவும்

இருக்கும். ஏனெனில் இயற்பியலுக்கும் வேதியியலுக்கும் அவை உண்மை என்று நிரூபிக்க அக அளவு எதுவும் கிடையாது. ஆனால் மதத்திற்கு அது உண்டு.

மதத்தில் அறிவுபூர்வமான எந்த ஆராய்ச்சியையும் ஏற்றுக் கொள்ள மறுப்பவர்கள் தங்களுக்குள்ளேயே முன்னுக்குப்பின் முரணானவர்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. உதாரண மாக, கிறிஸ்தவன் தன்னுடையதுதான் உண்மையான மதம் என்கிறான். ஏனெனில் அது இன்னாருக்கு தெய்வீகமாக வெளிப் படுத்தப்பட்டது என்பது அவனது கருத்து. முகமதியனும் அவ் வாறே சொல்கிறான். ஆனால் கிறிஸ்தவன் முகமதியனிடம், 'உன் ஒழுக்க நெறிகளுள் சில சரியென்று தோன்றவில்லை. உதாரணமாக, என் முகமதிய நண்பரே! உன் நூல்கள், ''முகமதி யன் அல்லாதவனை முகமதிய மதத்தைத் தழுவும்படி வற்புறுத்த வேண்டும். அவன் மறுத்தால் அவனைக் கொல்லலாம், அப்படிக் கொல்கின்ற முகமதியன் எத்தனை பாவங்களையும், தீய செயல் களையும் செய்திருந்தாலும் அவன் மேலுலகத்திற்கு நிச்சயமாகச் செல்வான்'' என்று கூறுகின்றனவே' என்பான்.

அதற்கு முகமதியன், 'நான் அப்படிச் செய்வது எனக்குச் சரி; எங்கள் நூல்கள் அப்படிச் செய்யும்படிக் கட்டளையிடு கின்றன. அப்படிச் செய்யாமலிருப்பது குற்றம்' என்று பதில் சொல்வான். 'ஆனால் எங்கள் நூல் அப்படிச் சொல்ல வில்லையே!' என்பான் கிறிஸ்தவன்.

அதற்கு முகமதியன், 'எனக்குத் தெரியாது. உங்கள் நூல் என்னைக் கட்டுப்படுத்த முடியாது. முகமதியர் அல்லாதவர் களைக் கொல்லுங்கள்' என்று என்னுடைய நூல் கூறுகிறது! எது சரி, எது தப்பு என்று உனக்கு எப்படித் தெரியும்? நிச்சய மாக எனது நூலில் எழுதப்பட்டிருப்பதுதான் சரி. 'கொல் லாதே' என்று உன் நூலில் எழுதப்பட்டிருக்கிறதே, அது தவறு. என் கிறிஸ்தவ நண்பனே! நீயும் நான் சொல்வதைத்தான் சொல்கிறாய். எதைச் செய்வது சரி, எதைச் செய்வது தவறு என்று ஜெஹோவா யூதர்களுக்குச் சொன்னாரே அதை நீ சொல்கிறாய். அப்படியே நானும் சொல்கிறேன். இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்யாதே என்று என் நூலில் அல்லா சொல்லியிருக்கிறார். ஒன்றைச் செய்வது சரியா, தவறா என்பதற்கு அதுதான் உரைகல்.'

இருந்தும் கிறிஸ்தவனுக்குத் திருப்தி இல்லை. மலைச் சொற்பொழிவில் கூறப்பட்ட நல்வழியையும், குரான் கூறும்

நல்வழியையும் ஒப்பிடும்படி அவன் வற்புறுத்துகிறான். இதை எப்படித் தீர்மானிப்பது? அந்த நூல்களைக் கொண்டு தீர்மானிக்க முடியாது. ஏனெனில் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருக்கும் நூல்கள் நீதிபதிகளாக இருக்க முடியாது. எனவே இந்த நூல்களைவிடப் பரந்த, உலகின் எல்லா ஒழுக்க நெறிகளையும்விட உயர்ந்த ஒன்று நிச்சயமாக இருக்க வேண்டும். அது பல்வேறு நாட்டு மக்கள் சமுதாயங்களின் ஆன்மப் பேருணர்வுகளை ஒப்பிட்டுத் தீர்ப்பு சொல்லக் கூடியதாக இருக்க வேண்டும். அதை நாம் தைரியமாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறுகிறோமோ இல்லையோ, ஆனால் அது பகுத்தறிவுதான் என்பது தெளிவு.

இப்பொழுது ஒரு கேள்வி எழுகிறது. இந்தப் பகுத்தறிவு ஒளி, இரண்டு ஆன்மப் பேருணர்வுகளுக்கு இடையே தீர்ப்புச் செய்ய முடியுமா? தகராறு இரண்டு தீர்க்கதரிசிகளுக்கு இடையே எழுந்தால்கூட இந்த ஒளி தன் நிலையை நிலை நாட்டுமா? மதத்தைப்பற்றி ஏதாவது அறிந்துகொள்ளும் சக்தி அதற்கு உண்டா? இதுதான் கேள்வி. அதனால் முடியாது என்றால் நீண்ட நெடுங்காலமாக, நூல்களுக்கு இடையிலும், தீர்க்கதரிசிகளுக்கு இடையிலும் நடந்துகொண்டிருக்கும் பயனற்ற சண்டையை ஒருபோதும் தீர்த்து வைக்க முடியாது. இந்த நிலையில் மதங்கள் எல்லாம் வெறும் பொய்யானவை, சீர்படுத்த முடியாதபடி ஒன்றுக்கொன்று முரண்பட்டவை; நிலையான நீதிநெறி எதுவும் அவற்றில் இல்லை என்றுதான் ஆகும்.

மதம் உண்மை என்பதற்கு, மனித இயல்பிலேயே உள்ள உண்மைதான் சான்று, நூல்கள் அல்ல. இந்த நூல்கள் மனித இயல்பின் வெளிப்பாடு, அதன் பரிணாமம். மனிதனே நூல்களை உருவாக்கினான். நூல்கள் மனிதனை உண்டாக்கியதை நாம் இதுவரை காணவில்லை. பகுத்தறிவும் அந்தப் பொதுக் காரணமான மனித அமைப்பிலிருந்து உண்டானதுதான். நாம் அதைத்தான் அணுக வேண்டும். மனித இயல்புடன் பகுத்தறிவுக்கு மட்டும்தான் நேரடித் தொடர்பு உள்ளது. எனவே மன இயல்பைப் பின்பற்றுகின்றவரையில் நாம் அதைத்தான் பின்பற்ற வேண்டும்.

பகுத்தறிவு என்று எதை நான் சொல்கிறேன்? படித்த ஒவ்வொரு ஆணும் பெண்ணும் எதைச் செய்ய விரும்புகிறார்களோ, அதாவது விஞ்ஞான அறிவின் கண்டுபிடிப்புகளைக்

கொண்டு மதத்தைச் சீர்தூக்கிப் பார்க்க விரும்புகிறார்களே, அதைத்தான் சொல்கிறேன்.

பகுத்தறிவின் முதல் கோட்பாடு: தனித்த ஒன்றைப் பொது வான ஒன்றைக்கொண்டும், அதை இன்னும் அதிகப் பொது வானது ஒன்றைக் கொண்டும், கடைசியில் உலகப் பொது வானதைக் கொண்டும் விளக்குவதே. உதாரணமாக நியதி என்று ஒன்றிருக்கிறது. ஏதாவது நிகழ்ந்தால் இன்ன நியதி யின் காரணமாக இது நிகழ்ந்தது என்று தெரிந்தால் உடனே திருப்தி அடைகிறோம். அது நமக்கு ஒரு விளக்கமாக அமை கிறது. இந்த விளக்கத்திற்குப் பொருள் என்னவென்றால், நமக்குத் திருப்தி அளிக்காத ஒரு நிகழ்ச்சி நடக்க, அந்த நிகழ்ச்சி, நியதி என்று நாம் அழைக்கும் பல நிகழ்ச்சிகளின் தொகுப்பில் தனிப்பட்ட ஒன்று என்று நிரூபிக்கப்பட்டுவிட்டது என்பது தான். ஓர் ஆப்பிள் கீழே விழுந்தபோது நியூட்டன் மனம் குழம் பினார். ஆனால் எல்லா ஆப்பிள்களும் கீழே விழுகின்றன என்று கண்டறிந்ததும் அது புவியீர்ப்பு சக்தி என்று கண்டார், திருப்தி அடைந்தார். இது மனித அறிவின் கோட்பாடுகளுள் ஒன்று. நான் தெருவில் ஒரு மனிதனைப் பார்க்கிறேன். மனித இனம் என்னும் பெரிய கருத்துடன் அவனை இணைத்துப் பார்க்கிறேன். எனக்குத் திருப்தி ஏற்படுகிறது. பொது இயலைக் கொண்டு ஒப்பிடும்போது அவன் மனிதன் என்று எனக்குத் தெரிகிறது. ஆகவே தனி இயல் பொது இயலோடு ஒப்பிடப்பட வேண்டும். அது இன்னும் அதிகமான பொது இயலோடு ஒப்பிடப்பட வேண்டும். கடைசியில் அகில உலக இயலோடு ஒப்பிடப்பட வேண்டும். அது இன்னும் கடைசிக் கருத்து, அதாவது இருப்பு (Existence) என்னும் கருத்தோடு ஒப்பிடப்பட வேண்டும். இருப்பு என்பதுதான் உலகம் முழுவதும் ஒப்புக்கொள்ளப்பட்ட கருத்து.

நாம் மனிதர்கள். அதாவது நாம் ஒவ்வொருவரும் மனித இனம் என்னும் பொதுக் கருத்தின் ஒரு தனிப்பகுதி. மனிதன், பூனை, நாய் எல்லாம் மிருகங்கள். மனிதன், பூனை, நாய் என்று தனித்தனியாக சொல்லப்படுபவை, மிருகம் என்ற இன்னும் பெரிய, அதிகப் பொதுவான தொகுப்பின் பகுதிகளாகும். மனிதன், பூனை, நாய், செடி, மரம் எல்லாம் இன்னும் அதிகப் பொதுவான உயிரினத் தொகுதியின் பகுதிகள். எல்லா உயிரினங் களும், எல்லா பொருட்களும் இருப்பு என்கின்ற கருத்தில் அடங்கியுள்ளன. நாம் எல்லோரும் அதில் இருக்கிறோம்.

இந்த விளக்கத்தின் பொருள், ஒரு தனிக் கருத்தை இன்னொரு உயர்ந்த கருத்துடன் ஒப்பிடுவது, அதாவது இந்த தனிக் கருத்தைப் போன்ற பல கருத்துக்களைக் கண்டுபிடித்து அவற்றுடன் ஒப்பிடுவதாகும்.

இத்தகைய பல பொதுத் தொகுதிகளை மனம் தன்னுள் சேர்த்து வைத்திருக்கிறது. புறாக்கூடுகளைப் போன்ற தனித் தனி அறைகளில் இந்தத் தொகுப்புகளை வைத்திருக்கிறது என்று சொல்லலாம். ஏதாவது புதிய பொருளைப் பார்த்தால், அதைப் போன்ற பொருள் எந்த அறையில் இருக்கிறது என்று மனம் கண்டுபிடிக்க முயல்கிறது. கண்டுபிடித்தால் புதிய பொருளை அந்த அறையில் இணைக்கிறோம். நாம் அந்தப் புதிய பொருளை அறிந்துவிட்டோம் என்ற திருப்தி நமக்கு ஏற்படுகிறது. அறிவு என்பது இதுதான். அதற்குமேல் இல்லை. நம்மால் அதற்கு ஓர் அறையைக் கண்டுபிடிக்க முடியவில்லையானால், நமக்கு அதிருப்தி ஏற்படுகிறது. அதை நினைக்க ஓர் அறையைக் கண்டுபிடிக்கும்வரை காத்திருக்க வேண்டியிருக்கிறது.

ஆகவே நான் முன்பே கூறியதுபோல் அறிவு என்பது கிட்டத்தட்ட வகைப்படுத்துதல்தான்.

இன்னும் ஒன்று. அறிவு என்பதன் இரண்டாவது விளக்கம் என்னவென்றால், ஒரு பொருளின் விளக்கம் அதன் உள்ளேயிருந்து வர வேண்டும்; வெளியே இருந்து அல்ல. கல்லைத் தூக்கி மேலே எறிந்தால் ஏதோ ஒரு பூதம் அதைக் கீழே இழுக்கிறது என்று நம்பினர். இயற்கையாக நடக்கும் எத்தனையோ நிகழ்ச்சிகளுக்கு இயற்கைக்குப் புறம்பான காரணங்களைக் காட்டினர். கல்லை ஒரு பூதம் கீழே இழுத்தது என்னும் விளக்கம் கல்லில் இல்லை, அது கல்லிற்கு வெளியிலிருந்து வந்த விளக்கம். ஆனால் இரண்டாவது விளக்கமான புவியீர்ப்புச் சக்தி கல்லின் இயற்கையில் இருக்கிறது; இங்கே விளக்கம் உள்ளேயிருந்து வருகிறது.

தற்காலச் சிந்தனை முழுவதிலுமே இந்தப் போக்கை நீங்கள் காண முடியும். ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால், பொருட்களின் விளக்கம் அந்தப் பொருட்களின் இயல்பிலேயே உள்ளது. பிரபஞ்சத்தில் நடப்பதை விளக்க, வெளியில் உள்ள உயிர்களோ பொருட்களோ தேவையில்லை —இதுதான் விஞ்ஞானம். ஒரு வேதியியல் விஞ்ஞானி வேதியியல் நிகழ்ச்சிகளை விளக்க, பேயோ பூதங்களோ

வேண்டியதில்லை. இயற்பியல் அறிஞரும் தமக்குத் தெரிந்த வற்றை விளக்க இவற்றை நாடுவதில்லை. இவ்வாறே எல்லா விஞ்ஞானிகளும். விஞ்ஞானத்தின் இந்த அம்சத்தை நான் மதத்தில் பயன்படுத்த விரும்புகிறேன். இந்த விஷயத்தில் மதங்கள் தயாராக இல்லை. அதனால்தான் அவை உடைந்து சிதறிக்கொண்டிருக்கின்றன. தனது விளக்கம் உள்ளேயிருந்து வர வேண்டும்; பொருட்களின் இயல்பிலிருந்தே வர வேண்டும் என்று ஒவ்வொரு விஞ்ஞானமும் விரும்புகிறது. ஆனால் மதத்தினால் இத்தகைய விளக்கங்களைக் கொடுக்க முடிய வில்லை.

பிரபஞ்சத்திற்குப் புறம்பாக சகுணக் கடவுள் ஒருவர் இருக் கிறார் என்கிற கொள்கை மிகப் பழங்காலத்திலிருந்தே நம்பப் பட்டு வந்திருக்கிறது. பிரபஞ்சத்திலிருந்து முற்றிலும் வேறான இத்தகைய ஒரு கடவுள் இருப்பது எத்தனை அவசியம் என்று திரும்பத்திரும்ப வாதிக்கப்பட்டுள்ளது. அவர் தமது சங்கல் பத்திலிருந்து பிரபஞ்சத்தைப் படைத்தார், அவர்தான் அதனை ஆள்கிறார் என்று மதம் நம்புகிறது. இந்த வாதங்களைத் தவிர, எல்லாம் வல்ல அந்தக் கடவுள் கருணையே வடிவமானவர் என்று வர்ணிக்கப்படுகிறார். இருந்தும் உலகில் ஏற்றத் தாழ்வுகள் உள்ளன. தத்துவ அறிஞர்கள் இந்தக் கருத்துக்களைப் பொருட் படுத்துவதில்லை. அடிவேரிலேயே தவறு இருப்பதாக அவர்கள் கூறுகிறார்கள். ஏனெனில் இந்தக் கடவுள் பிரபஞ்சத்திற்கான புற விளக்கம் தவிர, அக விளக்கமல்ல. இந்தப் பிரபஞ்சத்திற்குக் காரணம் எது? அதற்குப் புறம்பாக, வேறாக உள்ள ஏதாவது ஒன்றா? அதுதான் இதை இயக்கிக் கொண்டிருக்கிறதா? கீழே விழுந்த கல்லிற்கு முதல் விளக்கம் சரியாக இல்லாததுபோல், மதத்தை விளக்க இது போதுமானதாக இல்லை. அதனால் மதங்கள் தூள்தூளாக நொறுங்கிக் கொண்டிருக்கின்றன. அவற் றால் சிறந்த விளக்கம் தர முடியவில்லை.

ஒவ்வொன்றின் விளக்கமும் அதற்கு உள்ளிலிருந்து வருகிறது என்னும் கருத்துடன் தொடர்பு உடையதுதான், அந்தக் கருத்தின் வெளிப்பாடுதான் இன்றைய பரிணாம வாதம். ஒரு பொருளின் இயல்புதான் மீண்டும் வெளிவருகிறது; 'காரியம் என்பது, காரணத்தின் இன்னோர் உருவம்'. காரியத் தின் எல்லா சாத்தியக்கூறுகளும் காரணத்தில் இருக்கின்றன. படைப்பு என்பது பரிணாமமே தவிர புதிதாக ஆவது அல்ல— இதுதான் பரிணாம வாதத்தின் முழுக் கருத்து. அதாவது

ஒவ்வொரு காரியமும், அதற்கு முந்தைய காரணத்தின் நகல்; சூழ்நிலைகளினால் மாறுதல் அடைந்த நகலே. பிரபஞ்சம் முழுவதிலும் இதுவே நடந்து கொண்டிருக்கிறது. இந்த மாறுதல்களுக்கு விளக்கம் தேட, நாம் பிரபஞ்சத்திற்கு வெளியே செல்ல வேண்டியதில்லை. விளக்கங்கள் உள்ளேயே உள்ளன. காரணத்தை வெளியே தேட வேண்டிய அவசியமில்லை. இந்த வாதமும் மதத்தை உடைத்துக் கொண்டிருக்கிறது. உடைத்துக் கொண்டிருக்கிறது என்று நான் சொல்வதன் பொருள் என்ன தெரியுமா? பிரபஞ்சத்திற்கு வெளியே ஒரு கடவுள் இருக்கிறார். அவர் மிகப் பெரியவர், அதற்குமேல் எதுவும் அல்ல--இத்தகைய கருத்துடைய மதங்கள் இனி நிலைத்து நிற்க முடியாது. அவை தகர்ந்து கொண்டிருக்கின்றன.

இந்த இரண்டு கோட்பாடுகளையும் திருப்தி செய்து வைக்கும் ஒரு மதம் இருக்க முடியுமா? இருக்க முடியும் என்று நான் கருதுகிறேன். முதலாவதாக, பொது இயல் கோட்பாட்டை நாம் திருப்தி செய்ய வேண்டும். அது பரிணாம வாதத்துடன் ஒத்துப்போக வேண்டும். எல்லாவற்றிற்கும் மிகப் பொதுவான கடைசி நிலைக்கு நாம் வர வேண்டும். அது பொதுவான எல்லாவற்றிற்கும் பொதுவாக இருப்பதுடன், அதிலிருந்துதான் எல்லாம் வெளிப்பட வேண்டும். மிகத் தாழ்ந்த காரியத்தின் இயல்புதான் அதற்கும் இருக்கும். மிக உயர்ந்த முதற் காரணம், மிகத் தாழ்ந்ததும், மிகத் தொலைவில் உள்ளதுமான அதன் காரியத்தைப் போலவே இருக்க வேண்டும். தொடர்ந்து நடக்கும் பரிணாமங்கள் நடுவில் இருக்கும்.

வேதாந்தத்தின் பிரம்மம் இந்த நிபந்தனையைத் திருப்தி செய்கிறது. ஏனெனில் பிரம்மம்தான் நாம் செல்லக்கூடிய கடைசிப் பொதுநிலை. அதற்குக் குணங்கள் கிடையாது. அது ஸத்-சித்-ஆனந்தமாக இருக்கிறது, பரிபூரணமாக இருக்கிறது. ஸத், அதாவது இருப்புதான் மனித மனம் எட்டக்கூடிய கடைசிப் பொது நிலை என்று கண்டோம். சித் என்பது நமக்குள்ள அறிவு அல்ல, அதன் சாரம் ஆகும்; பரிணாமத்தின்போது மனிதர்களிடமும் விலங்குகளிடமும் வெளிப்பட்டுக் கொண்டிருக்கும் அறிவாகும். அறிவின் சாரம் என்பது அனைத்தையும் கடந்து நிற்கும் கடைசி உண்மையாகும். என்னை அனுமதிப்பீர்களானால் அது உணர்வையும் கடந்து நிற்கிறது என்று சொல்வேன். அறிவு என்பது அதுதான். அதுதான் பிரபஞ்சத்தில் அனைத்திலும் ஒருமைத் தத்துவமாகத் திகழ்கிறது.

தற்கால விஞ்ஞானம் எதையாவது திரும்பத்திரும்ப நிரூபித்துக் கொண்டிருக்கிறது என்றால், அது இதுதான்—மன நிலையில், ஆன்மீக நிலையில், பௌதீக நிலையில் நாம் எல் லோரும் ஒன்று. பௌதீக நிலையில்கூட நாம் வெவ்வேறான வர்கள் என்று சொல்வது தவறு. வாதத்திற்காக, நாம் உலோ காயதர்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுதுகூட நாம் இந்த முடிவிற்குத்தான் வர வேண்டும்—பிரபஞ்சம் முழுவதுமே ஒரு ஜடப்பொருள் கடல். அதில் நீங்களும் நானும் சிறிய சுழல்கள். ஒவ்வொரு சுழலுக்குள்ளும் ஜடப்பொருளின் திரட்சிகள் புகுந்து, சுழலின் வடிவத்தை எடுத்துக்கொண்டு, பிறகு ஜடப்பொருளாக வெளிவருகின்றன. என் உடலில் உள்ள ஜடப்பொருள் சில ஆண்டுகளுக்கு முன் உங்கள் உடலில் இருந்திருக்கலாம். அல்லது சூரியனிலோ, ஒரு செடியிலோ, வேறு ஏதாவதிலோ இருந்திருக்கலாம். இவ்வாறு அது தொடர்ந்து மாறியவண்ணமே உள்ளது. என் உடல், உன் உடல் என்று சொல்வதில் என்ன பொருள்? எல்லா உடல் களும் ஒன்று.

எண்ணங்களின் விஷயமும் இதுதான். இது எண்ணப் பெருங்கடல். அதில் உங்கள் மனமும் என் மனமும் சிறிய சுழல் களைப்போல் உள்ளன. இப்போது நீங்களே பார்க்கவில்லையா? என் எண்ணங்கள் உங்கள் மனத்தில் புகுந்து கொண்டிருக் கின்றன, உங்கள் எண்ணங்கள் என் மனத்தில் புகுந்து கொண்டிருக்கின்றன! நம் வாழ்க்கையெல்லாம் ஒன்று. எண்ண நிலையிலும் நாம் எல்லோரும் ஒன்று.

இன்னும் பரந்த பொது நிலைக்கு வந்தால், ஜடப் பொருட்கள், எண்ணம் இவற்றின் சாரம் ஆன்மாவில் அடங்கி யுள்ளது என்று சொல்லலாம். இந்த ஒருமையிலிருந்துதான் எல்லாம் வந்துள்ளன. ஆகவே அது ஒருமையாகத்தான் இருக்க வேண்டும். நாம் எல்லோரும் முற்றிலும் ஒன்று—உடலால் ஒன்று; உள்ளத்தால் ஒன்று; நாம் ஆன்மாவை நம்புபவர் களானால் ஆன்மாவாலும் ஒன்று.

இந்த ஒருமைதான் தற்கால விஞ்ஞானம் தினமும் நிரூபித்து வருகின்ற ஒரு கருத்தாகும். கர்வம்மிக்க மனித னிடம் அது சொல்கிறது:‘நீயும் அதோ நெளியும் புழுவும் ஒன்றே, அதைவிட நீ பெரிதாக வேறுபட்டவன் என்று நினைக்காதே. நீ அதுவே. பழைய ஒரு பிறப்பில் நீ அதுவாக இருந்தாய். நீ மனிதன் என்று இன்று இவ்வளவு கர்வம்

கொள்கிறாயே, அந்த மனித நிலைக்கு, அந்தப் புழுதான் நகர்ந்து வந்துள்ளது.'

எல்லாம் ஒன்று என்கின்ற இந்த அற்புதமான போதனை, இருக்கின்ற அனைத்துடனும் நம்மை ஒன்றுபடுத்துகிறது. இது நாம் கற்க வேண்டிய மாபெரும் பாடம். நம்மைவிட உயர்ந்தவர்களுடன் நம்மை ஒன்றுபடுத்திக் காண்பதில் நம்மில் பெரும்பாலோருக்கு மகிழ்ச்சிதான். ஆனால் தன்னைவிடக் கீழான ஒன்றுடன் தன்னை ஒன்றாகக் காண யாரும் விரும்ப மாட்டார்கள். தங்களுடைய மூதாதையர் முரடர்களாகவோ, கொள்ளையர்களாகவோ, கொள்ளைக் கூட்டத் தலைவர் களாகவோ இருந்தாலும், சமுதாயம் அவர்களைப் பாராட்டு கிறது என்றால், நாம் அந்த வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளப் பெருமைப்படுகிறோம். ஆனால் நம் மூதாதையர்களுள் யாராவது ஏழைகளாக, நல்லவர்களாக இருந் திருக்கலாம். அந்த வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்ள யாரும் விரும்புவதில்லை. மனித அறிவீனம் அப்படி யுள்ளது. ஆனால் நம் கண்களை மறைத்த திரைகள் அகன்று கொண்டிருக்கின்றன. உண்மை மேன்மேலும் வெளிப்பட ஆரம்பித்திருக்கிறது. அதுவே மதத்திற்குப் பெருத்த லாபம்.

நான் இப்போது பேசிக் கொண்டிருக்கின்ற தலைப்பான அத்வைதம் கூறுவதும் இதுதான். அந்தப் பரமாத்மாவே பிர பஞ்சத்தின் சாரமும், எல்லா ஆன்மாக்களின் சாரமுமாக உள்ளார். உங்கள் வாழ்க்கையின் சாரமும் அவரே. ஏன், 'நீங்கள்தான் அவர்.' நீங்கள் பிரபஞ்சத்துடன் ஒன்றியிருக் கிறீர்கள். மற்றவர்களிடமிருந்து ஒரு மயிரளவேனும் மாறு பட்டு இருப்பதாகக் கூறுபவன், அந்தக் கணமே துன்பத்தை அனுபவிக்கிறான். இந்த ஒருமையை அறிந்தவனுக்குத்தான், பிரபஞ்சத்துடன் ஒன்றானவன் என்று தெரிந்தவனுக்கு மட்டும் தான் இன்பம் உரியது.

ஆகவே வேதாந்த மதத்தால் விஞ்ஞான உலகின் சவால் களை எதிர்கொள்ள முடியும். மிகப் பெரிய பொதுநிலை மற்றும் பரிணாம வாதத்துடன் அதனால் தன்னை ஒப்பிட முடியும். ஒரு பொருளின் விளக்கம் உள்ளிருந்து வருகிறது என்கிற நியதியையும் வேதாந்தம் திருப்தியாகப் பூர்த்தி செய்கிறது.

வேதாந்தத்தின் கடவுளான பிரம்மத்திற்குப் புறம்பாக எதுவும் இல்லை, எதுவுமே இல்லை. எல்லாமே அவர்தான்.

அவர் இந்தப் பிரபஞ்சத்தில் உள்ளார். அவரே இந்தப் பிரபஞ்சம். 'ஆணும் நீயே. பெண்ணும் நீயே. இளமைச் செருக்கில் உலவும் இளைஞனும் நீயே, தடுமாறி நடக்கும் கிழவனும் நீயே.'[1] அவர் இங்கு இருக்கிறார், அவ்வரை நாம் பார்க்கிறோம், தொடு கிறோம். அவரில் நாம் வாழ்கிறோம், இயங்குகிறோம். நம் இருப்பு அவரில் உள்ளது. புதிய ஏற்பாட்டில் இதே கருத்து உள்ளது. இறைவன் இந்தப் பிரபஞ்சத்தில் எங்கும் ஊடுருவி இருக்கிறார். அனைத்தின் சாரமும், இதயமும், ஆன்மாவும் அவரே. இந்தப் பிரபஞ்சத்தில் அவர் தம்மை வெளிப் படுத்துகிறார்.

நீங்களும் நானும் அந்த ஸத், சித், ஆனந்தம் என்னும் எல்லையற்ற கடலில் சிறு துளிகள்; சிறு புள்ளிகள்; சிறு வாய்க் கால்கள்; சிறிய தோற்றங்கள். மனிதனுக்கும் மனிதனுக்கும், தேவர்களுக்கும் மனிதனுக்கும், மனிதனுக்கும் மிருகங்களுக்கும், மிருகங்களுக்கும் செடிகளுக்கும், செடிகளுக்கும் கற்களுக்கும் உள்ள வித்தியாசம் பொருளில் இல்லை. ஏனெனில் மிக உயர்ந்த தேவர்களிலிருந்து மிகக் கீழ்நிலை ஜடப்பொருளான அணு வரை, அந்த எல்லையற்ற கடலின் வெளிப்பாடே. வேறுபாடு அளவில்தான். நான் ஒரு கீழ்நிலை வெளிப்பாடாக இருக்கலாம்; நீங்கள் உயர்ந்த வெளிப்பாடாக இருக்கலாம். ஆனால் நம்மில் உள்ள மூலப்பொருள் என்னவோ ஒன்றுதான். நீங்களும் நானும் கடவுள் என்னும் அதே வாய்க்காலின் வடிகால்கள். அதனால் உங்கள் இயல்பும் தெய்வீகம், என் இயல்பும் அதுவே. தெய்வீகம் உங்கள் பிறப்புரிமை, என் விஷயமும் அதுவே. நீங்கள் பரிசுத்த தேவதூதனாக இருக்கலாம், நான் கரும்பூதமாக இருக்கலாம். ஆனாலும் அந்த ஸத்-சித்-ஆனந்தப் பெருங்கடல் எனது பிறப் புரிமை; உங்களுக்கும் அதுவேதான். நீங்கள் இன்று உங்கள் தெய்வீகத்தைச் சற்று அதிகமாக வெளிப்படுத்தியிருக்கலாம். பொறுங்கள், நானும் அதிகமாக வெளிப்படுத்துவேன், அந்தத் தெய்வீகம் என்னுள்ளும் உள்ளது. இங்கே புற விளக்கம் எதுவும் கொடுக்கத் தேவையில்லை. யாரும் அதைக் கேட்கவும் இல்லை.

இந்தப் பிரபஞ்சத்தின் முழு அளவும் கடவுளே. அப்படி யானால் கடவுள் ஜடப்பொருளா? இல்லை, நிச்சயமாக இல்லை. ஐம்புலன்களால் அறியப்படும்போது கடவுள்

---

1. த்வம் ஸ்த்ரீ த்வம் புமானஸி த்வம் குமார உத வா குமாரீ |
த்வம் ஜீர்ணோ தண்டேன வஞ்சஸி த்வம் ஜாதோ பவஸி விச்வதோமுக: ||
—சுவேதாஸ்வதர உபநிடதம், 4. 3.

ஜடப்பொருளாகத் தோன்றுகிறார். புத்தியினால் அறியப்படும் போது அவரே மனமாகத் தெரிகிறார். ஆன்மா பார்க்கும்போது அவரை ஆன்மாவாகக் காண்கிறது. அவர் ஜடப்பொருள் அல்ல, ஆனால் ஜடப்பொருளில் உள்ள உண்மை அவர். இந்த நாற்காலியில் உள்ள உண்மை அவர். நாற்காலியை அறிய இரண்டு விஷயங்கள் தேவை. வெளியே ஏதோ ஒன்று இருந்தது. அதை என் புலன்கள் எனக்குக் கொண்டுவந்தன! அத்துடன் என் மனம் எதையோ சேர்த்தது. இந்த இரண்டும் சேர்ந்துதான் இந்த நாற்காலி.

புலன்களையோ, மனத்தையோ சாராமல் என்றென்றும் தனித்து நிற்பவர் கடவுள், அவர்மீதுதான் நாற்காலிகள், மேஜைகள், அறைகள், வீடுகள், உலகங்கள், சந்திரன்கள், சூரியன்கள், நட்சத்திரங்கள் இன்னும் மற்ற எல்லாவற்றையும் புலன்கள் ஓவியமாக வரைந்து கொண்டிருக்கின்றன. சரி, நாற்காலியை எப்படி எல்லோருமே நாற்காலியாகக் காண்கிறோம்? ஸத்-சித்-ஆனந்தமாகிய அவர்மீது எப்படி நாம் எல்லோருமே ஒரேமாதிரியாக வரைந்து கொண்டிருக்கிறோம்? எல்லோரும் ஒரேவிதமாகத்தான் வரைய வேண்டும் என்பதில்லை. ஆனால் ஒரேவிதமாக வரைபவர்கள் ஒரே இருப்புத்தளத்தில் (Plane of Existence) இருக்கிறார்கள். அதனால் ஒருவர் மற்றவர்களின் படங்களைப் பார்ப்பதுடன், தாங்களும் ஒருவரை ஒருவர் பார்க்கின்றனர். கடவுளை நாம் வரைவது போல் வரையாத கோடிக்கணக்கானோர் இருக்கலாம். அவர்களையோ, அவர்கள் வரைந்த படங்களையோ நாம் காண்பதில்லை.

இது இருக்கட்டும். மிகவும் சூட்சுமமாக இருப்பதுதான் உண்மையானது, தூலமாக இருப்பது வெறும் தோற்றமே என்பதைத் தற்கால இயற்பியல் விஞ்ஞானிகள் அனேகமாக நிரூபித்து விட்டார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். அது எப்படியிருந்தாலும், எந்த மதமாவது தற்காலப் பகுத்தறிவைத் திருப்தி செய்ய முடியும் என்றால் அது அத்வைதம்தான். அது தான் பகுத்தறிவின் இரண்டு நிபந்தனைகளையும் திருப்தி செய் கிறது. அது மிகப் பரந்த பொது நிலை. தனிமனித நிலையைக் கூடக் கடந்த பொது நிலை, எல்லோருக்கும் பொதுவாக உள்ள பொது நிலை அது. சகுணக் கடவுளில் நிறைகின்ற பொதுநிலை பிரபஞ்சம் தழுவியதாக இருக்க முடியாது. ஏனெனில் முதலில் ஒரு சகுணக் கடவுளை நினைத்துப் பார்க்க

வேண்டுமானால், அவர் கருணை வடிவினர், நல்லவர் என்று சொல்ல வேண்டும். ஆனால் இந்த உலகமோ ஒரு கலவை. கொஞ்சம் நல்லதும் கொஞ்சம் கெட்டதும் கலந்ததே உலகம். நாம் நமக்குத் தோன்றியதை விலக்கிவிட்டு, மீதியை ஒரு சகுணக் கடவுளாகப் பொதுமைப்படுத்துகிறோம். சகுணக் கடவுள் இப்படி இருக்கிறார், அப்படியிருக்கிறார் என்று சொல்லும் போது, அவர் இப்படியில்லை, அப்படியில்லை என்றும் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆகவே சகுணக் கடவுள்-கருத்துடன் ஒரு சகுணச் சாத்தானும் இருந்தேயாக வேண்டும் என்பதைக் காண்பீர்கள்.

அதனால்தான் சகுணக் கடவுள்-கருத்து உண்மையான பொதுமை ஆகாது. நாம் அதற்கு அப்பால் சென்று நிர்க்குணத்தை அதாவது குணமற்ற ஒன்றை அடைய வேண்டும். அதில் பிரபஞ்சம் உள்ளது. அதன் இன்ப துன்பங்களும் கூடவே உள்ளன. அதில் உள்ளவை எல்லாமே அந்த நிர்க்குணப் பொருளிலிருந்தே வந்திருக்கின்றன. தீய குணங்களையும் மற்றவற்றையும் கற்பிக்கின்ற ஒரு கடவுள் எப்படிப்பட்டவராக இருப்பார்? கருத்து என்னவென்றால் நன்மையும் தீமையும் ஒரே பொருளின் மாறுப்பட்ட வெளிப்பாடுகள், மாறுபட்ட அம்சங்கள் என்பதாகும்.

நன்மையும் தீமையும் இரண்டு தனிப்பட்ட விஷயங்கள், சரி என்பதும் தவறு என்பதும் இரண்டும் இரு வேறு விஷயங்கள், ஒன்றுக்கொன்று முற்றிலும் தொடர்பில்லாதவை, நன்மையும் தீமையும் என்றென்றும் தனித்தனியானவை, பிரித்தே காண வேண்டுபவை—இந்த கருத்துக்கள் ஆரம்பத்திலிருந்தே தவறாகும். உலகில் காணும் பேரளவு துன்பங்களுக்கு இதுதான் காரணம். எப்போதும் நல்லதாக இருக்கின்ற ஒன்றை, எல்லா காலத்திலும் கெட்டதாக இருக்கின்ற ஒன்றை ஒருவன் என்னிடம் காட்ட முடியுமானால் நான் மகிழ்ச்சியடைவேன். என்னவோ, வாழ்க்கையின் சில நிகழ்ச்சிகளை, இவை நல்லவை, நல்லவை மட்டுமே; வேறு சில நிகழ்ச்சிகளைக் கெட்டவை, முற்றிலும் கெட்டவை என்று பிரிக்க முடியும்போலும்! இன்று நல்லதாக இருப்பது நாளை தீயதாக மாறலாம். இன்று தீயதாக இருப்பது நாளை நல்லதாக மாறலாம். எனக்கு நல்லதாக இருப்பது உங்களுக்குக் கெட்டதாக இருக்கலாம்.

இதன் முடிவு என்ன? மற்ற எல்லாவற்றையும் போலவே, நன்மையிலும் தீமையிலும் பரிணாம மாற்றங்கள் உள்ளன

என்பதுதான். இந்தப் பரிணாமத்தின்போது, ஒரு நிலையை நல்லது என்றும், இன்னொரு நிலையைக் கெட்டது என்றும் கூறுகிறோம். என் நண்பனைக் கொல்லும் புயலை நான் கெட்டது என்கிறேன். ஆனால் அது காற்றில் உள்ள நச்சுக் கிருமிகளைக் கொன்று, லட்சக்கணக்கானோரின் உயிரைக் காப்பாற்றியிருக்கக்கூடும். அவர்கள் அதை நல்லது என்பார்கள். நான் அதைக் கெட்டது என்று கூறுகிறேன். ஆகவே நல்லதும் கெட்டதும் நிகழ்ச்சிகளைச் சார்ந்தவை, சார்பு உலகத்தைச் சார்ந்தவை. நான் கூறும் நிர்க்குணக் கடவுள் இத்தகைய ஒரு சார்புக் கடவுள் அல்ல. எனவே அவர் நல்லவர் என்றோ, கெட்டவர் என்றோ சொல்ல முடியாது. அவர் இவற்றைக் கடந்தவர். அவர் நல்லவரும் அல்ல, கெட்டவரும் அல்ல. ஆனால் கெட்டதைவிட அவர் நல்லதில்தான் அதிகம் வெளிப்படுகிறார்.

இத்தகைய ஒரு நிர்க்குணப் பொருளை, ஒரு குணமற்ற கடவுளை ஒப்புக்கொள்வதால் என்ன பயன்? அதனால் நமக்கு என்ன லாபம்? மதம் மனித வாழ்க்கையின் ஒரு பகுதியாக இருந்து நமக்கு ஆறுதல் அளிக்குமா? நமக்கு உதவி செய்யுமா? யாரோ ஒருவரிடம் உதவிநாடி, பிரார்த்தனை செய்கிறோமே, அந்த மனித இதயத்தின் ஆசை என்ன ஆகிறது? அவை எல்லாம் அப்படியே இருக்கும், சகுணக் கடவுளும் இருப்பார், ஆனால் முன்னைவிடச் சிறந்த அடிப்படையின்மீது இருப்பார். நிர்க்குணக் கடவுளின் பின்னணி அவரது நிலைமையை மேலும் வலுவாக்கிவிட்டது. நிர்க்குணக் கடவுள் இல்லாவிட்டால் சகுணக் கடவுள் இருக்க முடியாது என்று கண்டோம். இந்தப் பிரபஞ்சத்திற்கு வேறாக ஒருவர் உள்ளார். ஒன்றுமில்லாததிலிருந்து இந்தப் பிரபஞ்சத்தை அவர் தமது சங்கல்பமாத்திரத்தால் படைத்தார் என்று சொன்னால், அதை நிரூபிக்க முடியாது. இத்தகைய நிலை இருக்க முடியாது. ஆனால் நிர்க்குணக் கருத்தை நாம் புரிந்துகொண்டால் சகுணக் கருத்திற்கும் அங்கே இடமளிக்க முடியும்.

பல்வேறு நிலைகளிலும் இந்தப் பிரபஞ்சம் அந்த நிர்க்குணப் பொருளின் பல மாறுபாடுகளே. ஐம்புலன்களால் பார்க்கும்போது அதை ஜடப் பிரபஞ்சம் என்கிறோம். ஐம்புலன்களுக்கு அதிகமான புலன்களை உடையவர் ஒருவர் இருப்பாரானால், அவர் இதை வேறுவிதமாகக் காண்பார். நம்மில் ஒருவருக்கு மின்புலன் ஒன்று கிடைத்துவிட்டால், அவருக்குப்

பிரபஞ்சம் வேறுவிதமாகத் தெரியும். அந்த ஒருமைக்குப் பல வடிவங்கள் உள்ளன. இந்த உலகங்களின் பலவிதக் கருத்துக்கள் அந்த ஒருமையின் பலவித வேறுபாடுகளே. நிர்க்குணக் கடவுளைப்பற்றி மனித அறிவினால் அடையக்கூடிய மிக உயர்ந்த கருத்து சகுணக் கடவுளே ஆகும்.

இந்த நாற்காலி எவ்வளவு உண்மையோ, இந்த உலகம் எவ்வளவு உண்மையோ சகுணக் கடவுளும் அவ்வளவு உண்மை; அதற்கு மேல் அல்ல. அவரை அறுதி உண்மை என்று கூற முடியாது. அதாவது, அந்த நிர்க்குணக் கடவுளே சகுணக் கடவுளாக இருப்பதால், அதுவரையில் உண்மை. மனிதனாகப் பிறந்த நான் எப்படி ஒரேசமயத்தில் உண்மையானவனாகவும் உண்மையற்றவனாகவும் இருக்கிறேனோ அவ்வாறே அவர் உள்ளார்.

என்னை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்களோ, அப்படி நான் இருக்கிறேன் என்பது உண்மையல்ல. இதை நீங்களே சோதித்து அறிந்துகொள்ளலாம். நான் யார் என்று நீங்கள் நினைக்கிறீர்களோ, அது நான் அல்ல. உங்கள் பகுத்தறிவால் அதை ஆராய்ந்து பாருங்கள். ஒளி, பலவித அதிர்வுகள், வாயு மண்டலத்தில் உள்ள மாற்றங்கள், என் உள்ளே நடக்கும் பல வித இயக்கங்கள் எல்லாம் சேர்ந்துதான் நீங்கள் என்னை யார் என்று பார்க்கிறீர்களோ, அந்த உருவமாக என்னை உருவாக்கியுள்ளன. இவற்றில் ஏதாவது மாறுதல் ஏற்படட்டும், நான் மாறிவிடுவேன். பல்வேறு ஒளியமைப்புகளில் ஒருவனைப் புகைப்படம் எடுத்துப் பார்த்தீர்களானால் இதன் உண்மை உங்களுக்குப் புரியும். ஆகவே உங்கள் புலன்கள் உங்களுக்கு எப்படி என்னைக் காட்டுகின்றனவோ அதன்படி நான் இருக்கிறேன். என்னுள் இப்படி நான் எத்தனையோ பேராகத் தெரிந்தாலும் மாறாத ஒன்று உள்ளது. அந்த ஒன்றின், அதாவது குணமற்ற எனது பல்வேறு நிலைகளே இப்படி எத்தனையோ பேராகத் தோன்றுகின்றன. நான் குழந்தையாக இருந்தேன், இளைஞனாகத் திகழ்ந்தேன். இப்போது முதியவனாகிக் கொண்டிருக்கிறேன். வாழ்க்கையின் ஒவ்வொரு நாளும் என் உடலும் எண்ணங்களும் மாறிக் கொண்டிருக்கின்றன. இருந்தும், இவற்றின் மொத்தத் தொகுதி ஒரே அளவில் இருக்கிறது. அதுதான் குணமற்றவனாகிய நான்; மற்ற வெளிப்பாடுகள் எல்லாம் அதன் பகுதிகள்.

அதைப் போன்றே இந்தப் பிரபஞ்சத்தின் கூட்டுத் தொகுதியைப் பார்த்தால், அது அசைவற்றது. ஆனால் பிரபஞ்சத்தில்

ஒவ்வொன்றும் இயங்கிக்கொண்டே இருக்கிறது, தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கிறது. எல்லாமே மாறிக்கொண்டும் இயங்கிக்கொண்டும் உள்ளன. அதேவேளையில் பிரபஞ்சம் முழுவதையும் எடுத்துக்கொண்டால் அது அசைவற்றது. ஏனெனில் இயக்கம் என்பது சார்புச்சொல். அசைவற்ற நாற்காலியுடன் ஒப்பிடும்போதுதான் நான் அசைபவன். இயக்கம் அல்லது அசைவிற்கு, குறைந்தது இரண்டு விஷயங்களாவது தேவை. பிரபஞ்சம் முழுவதையும் ஒரு மொத்தத் தொகுதியாக எடுத்துக்கொண்டால் அதற்கு இயக்கம் கிடையாது. இது இயங்குகிறது என்று சொல்ல அதை எதனுடன் ஒப்பிட முடியும்? அதுபோல் அந்த அறுதிப் பரம்பொருள் மாறுதலற்றது, அசைவற்றது. அசைவுகளும் மாறுதல்களும் எல்லைக்கு உட்பட்ட இந்தத் தோற்ற உலகில்தான் உள்ளன. முழுமையான அந்தப் பொருள் குணமற்றது. அதனிடம் சாதாரணமான அணுவிலிருந்து கடவுள்வரை, அதாவது உருவமுடைய பிரபஞ்சத்தைப் படைத்து அதை ஆள்கின்ற, நாம் பிரார்த்திக்கின்ற, நாம் முழந்தாளிடுகின்ற கடவுள்வரை எல்லோரும் உள்ளனர். இத்தகைய ஒரு சகுணக் கடவுளைப் பகுத்தறிவால் விளக்க முடியும். நிர்க்குணக் கடவுளின் மிகப் பெரிய வெளிப்பாடே சகுணக் கடவுள் என்று விளக்க முடியும். நீங்களும் நானும் மிகச் சாதாரண வெளிப்பாடுகள்; சகுணக் கடவுள்தான் நம்மால் எண்ணிப் பார்க்க முடிந்த மிக உயர்ந்த வெளிப்பாடு.

நீங்களும் நானும் அந்த சகுணக் கடவுளாக ஆக முடியாது. நீங்களும் நானும் கடவுள் என்று வேதாந்தம் சொல்லும்போது, அது சகுணக் கடவுளைக் குறிப்பிடவில்லை. ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். களிமண்ணிலிருந்து யானை ஒன்று செய்யப்படுகிறது. அதே களிமண்ணிலிருந்து ஒரு சுண்டெலியும் செய்யப்படுகிறது. களிமண் சுண்டெலியால் என்றாவது களிமண் யானையாக முடியுமா! இரண்டையும் தண்ணீரில் போடுங்கள். இரண்டும் களிமண் ஆகிவிடுகின்றன. களிமண் நிலையில் இரண்டும் ஒன்று. ஆனால் சுண்டெலி மற்றும் யானை நிலையில் அவை என்றென்றும் வேறுபட்டவை. எல்லையற்றதும், நிர்க்குணமானதுமான பரம்பொருள், உதாரணத்தில் வரும் களிமண்ணைப் போன்றது. இந்த நிலையில் நாமும் பிரபஞ்சத்தை ஆள்பவரும் ஒன்று. ஆனால் வெளிப்பாட்டு நிலையில், மனிதர்களாகிய நாம் அவரது மீளாத அடிமைகள்;

அவரை வழிபடுபவர்கள். இங்கே சகுணக் கடவுள் இருக்கிறார், இந்த உலகில் உள்ள எல்லாம் அப்படியே இருக்கின்றன, மதம் இன்னும் வலுவான அஸ்திவாரத்தில் நிற்கிறது. ஆகவே சகுணக் கடவுளைத் தெரிந்துகொள்வதற்கு, முதலில் நிர்க்குணக் கடவுளைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

பொதுமையைக் கொண்டுதான் நாம் தனி ஒன்றை அறிய முடியும் என்கிறது பகுத்தறிவு நியதி. இதை முன்னரே பார்த்தோம். ஆகவே மனிதனிலிருந்து கடவுள்வரை எல்லா தனி விஷயங்களையும் மிகப்பெரிய பொதுமையான நிர்க்குணக் கடவுள் மூலமாகத்தான் அறிய முடியும். பிரார்த்தனைகள் இருக்கும். ஆனால் அவற்றிற்கு முன்னைவிடச் சிறப்பான அடிப்படை கிடைக்கும். பிரார்த்தனை என்றால் நாம் ஏதோ பொருளற்ற சில வேண்டுதல்கள் என்று கருதுகிறோம். அந்தப் பொருளற்ற கருத்துக்கள், பிரார்த்தனையின் கீழ்நிலைகள். நம் மனத்தில் உள்ள அசட்டு ஆசைகளுக்கு வார்த்தைகளாக உருக் கொடுக்கும் இத்தகைய பிரார்த்தனைகளை ஒருவேளை விட நேரும். அர்த்தமுள்ள மதங்கள் கடவுளிடம் பிரார்த்தனையை அனுமதிப்பதில்லை, தேவதைகளிடம் பிரார்த்தனை செய்ய அனுமதிக்கின்றன. இது இயற்கையானதே. ரோமன் கத்தோலிக்கர்கள் புனிதர்களை வேண்டிக் கொள்கிறார்கள். அது நல்லது. ஆனால் கடவுளை வேண்டுவது பொருளற்றது. காற்று வீச வேண்டும், மழை பொழிய வேண்டும், தோட்டங் களில் பழங்கள் உண்டாக வேண்டும் என்றெல்லாம் வேண்டிக் கொள்கிறார்களே, அது முற்றிலும் இயற்கைக்கு மாறானது. நம்மைப் போன்றே சாதாரண மனிதர்களான மகான்களும் புனிதர்களும் நமக்கு உதவக்கூடும். பிரபஞ்சத்தை ஆள்பவரான இறைவனிடம் நம்முடைய சிறிய தேவைகளையெல்லாம் வேண்டுவதும், குழந்தைப் பருவத்திலிருந்தே 'ஆண்டவா! எனக்குத் தலைவலி இருக்கிறது; அது போக வேண்டும்' என் றெல்லாம் பிதற்றுவதும் பரிகசிக்கத்தக்கது. உலகில் கோடிக் கணக்கானோர் இறந்திருக்கின்றனர். ஆனால் அவர்கள் இங்கேயே இருக்கிறார்கள்; அவர்கள் தேவர்களாகவும் தேவ தூதர்களாகவும் ஆகியுள்ளனர். அவர்கள் உங்கள் உதவிக்கு வரட்டும். ஆனால் கடவுள்! அவரிடம் வேண்டுவது கூடாது! அவரிடம் நாம் உயர்ந்த விஷயங்களுக்குத்தான் போக வேண்டும். கங்கைக்கரையில் உட்கார்ந்துகொண்டு, தண்ணீருக்காகக் கிணறு தோண்டுபவன் முட்டாள். வைரச்சுரங்கத்திற்குப்

பக்கத்தில் அமர்ந்துகொண்டு, படிகத் துண்டுகளுக்காகப் பூமியைத் தோண்டுபவன் பெரிய முட்டாள்.

கருணையே வடிவானவரும், அன்பே வடிவானவரு மான உலகத் தந்தையிடம், உலகத்தின் அற்பப் பொருட்களுக் காகப் போனால் நாம் முட்டாள்களே! ஒளியைத் தேடி, ஆற்றலைத் தேடி, அன்பைத் தேடி அவரிடம் செல்வோம். நம்மிடம் பலவீனமும் பிறரைச் சார்ந்திருக்கும் அடிமைத் தனமும் இருக்கும்வரை இந்தச் சகுணக் கடவுள் வழிபாடும் பிரார்த்தனைகளும் இருக்கவே செய்யும். ஆனால் மிகவும் உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் இந்தச் சிறிய உதவிகளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. அவர்கள் தங்களுக்கென்று எதையும் தேடுவதையோ, விரும்புவதையோ கிட்டத்தட்ட மறந்துவிட்டவர்கள். அவர்களுள் மேலோங்கி நிற்கும் கருத்து, 'நானல்ல, என் சகோதரா, நீ' என்பதுதான். நிர்க்குணக் கடவுளை வழிபட அவர்களே தகுதியானவர்கள்.

நிர்க்குணக் கடவுளை வழிபடுவது என்றால் என்ன? அங்கே அடிமைத்தனம் இல்லை—'இறைவா, நான் எந்தப் பயனும் அற்றவன், என்மீது கருணைகொள்' என்பது கிடையாது. பழைய இதோ, இந்தப் பாரசீகக் கவிதையின் ஆங்கில மொழி பெயர்ப்பைப் படித்திருப்பீர்கள்—

'என் காதலியைக் காண வந்தேன். கதவுகள் மூடியிருந்தன. கதவைத் தட்டினேன். உள்ளேயிருந்து ஒரு குரல் கேட்டது: 'நீ யார்?' 'நான் இன்னார்'. கதவு திறக்கப்படவில்லை. இரண்டாம் தடவை வந்து நான் கதவைத் தட்டினேன். அதே கேள்வி கேட்கப்பட்டது. அதே பதிலை நான் சொன்னேன். கதவு திறக்கப்படவில்லை. மூன்றாம் தடவையாக வந்தேன். அதே கேள்வி கேட்கப்பட்டது. 'நான் நீதான், என் அன்பே!' என்று பதில் சொன்னேன். கதவு திறந்தது.'

நிர்க்குணக் கடவுளை உண்மையின்மூலம் வழிபட வேண்டும். உண்மை எது? நானே அவன் என்பதே. 'நான் நீயல்ல' என்று சொல்வது உண்மையல்ல. 'நான் உன்னிலிருந்து வேறுபட்டவன்' என்று சொல்வது பொய், கொடிய பொய். நான் இந்தப் பிரபஞ்சத்துடன் ஒன்றுபட்டவன்; ஒன்றாகப் பிறந்தவன். நான் பிரபஞ்சத்துடன் ஒன்றானவன் என்பது என் புலன்களுக்குத் தானாகவே தெரிகிறது. நான் என்னைச் சூழ்ந்திருக்கும் காற்றுடன் ஒன்றானவன்; சூட்டுடன் ஒன்றானவன்; ஒளியுடன் ஒன்றானவன்; அந்தப் பிரபஞ்ச

நாயகனுடன் என்றென்றும் ஒன்றானவன். எல்லோரும் அவனையே தவறாகப் பிரபஞ்சமாகக் காண்கிறார்கள். ஆனால் அது அவன். உணர்வாக ஒவ்வோர் இதயத்திலும் அவன்தான் என்றென்றும் இருக்கிறான். அவன் அழிவற்றவன், தூங்காதவன், என்றும் விழித்திருப்பவன், அமரன், என்றும் மங்காத புகழ் உடையவன், என்றும் தவறாத சக்திகள் பெற்றவன். நான் அவனுடன் ஒன்றானவன்.

நிர்க்குணக் கடவுளை வழிபடுவது என்பது அவ்வளவு தான், அதனால் ஏற்படும் பயன் என்ன? மனிதனின் வாழ்க்கை மாறும். வலிமை, வலிமைதான் நமக்கு வாழ்க்கையில் மிகவும் தேவை. பாவம், துன்பம் என்றெல்லாம் சொல்கிறோமே, அவற் றின் ஒரே காரணம் பலவீனம்தான். பலவீனத்தால் அறியாமை ஏற்படுகிறது. அறியாமையால் துன்பம் விளைகிறது. அந்த வழி பாடு நமக்கு வலிமை தரும். அப்போது துன்பங்களைக் கண்டு சிரிப்போம், தீமையின் கொடுமைகளைக் கண்டு புன்முறுவல் பூப்போம், பயங்கரப் புலியின் இயல்பின் பின்னாலும் ஆன்மா இருப்பதைக் காண்போம். இதுதான் பலன்.

இறைவனுடன் ஒன்றுபட்டுவிட்ட ஆன்மா வலிமையாக இருக்கிறது. மற்றவை வலிமையாக இருக்காது. உங்கள் பைபிள் கூறும் நாசரேத் ஏசுவின் வலிமைக்கு—எந்த எல்லையற்ற, அளவற்ற வலிமை வஞ்சகர்களைக் கண்டு சிரித்ததோ, தம்மைக் கொல்ல வந்தவர்களையே வாழ்த்தியதோ அந்த வலிமைக்கு— என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்? 'நானும் என் பிதாவும் ஒன்று' என்று சொன்னாரே, அதுதான்; 'பிதாவே, நான் உம்முடன் ஒன்றாக இருப்பதுபோல், எல்லோரையும் என் னுடன் ஒன்றாக இருக்கச் செய்யும்' என்ற பிரார்த்தனைதான். இதுதான் நிர்க்குணக் கடவுள் வழிபாடு. பிரபஞ்சத்துடன் ஒன்றாகுங்கள், அவருடன் ஒன்றாகுங்கள்.

இந்த நிர்க்குணக் கடவுளை மெய்ப்பிக்க ஒரு சான்றும் தேவையில்லை, பரிசோதனைகளும் தேவை இல்லை. நம் புலன் களைவிட அவர் நமக்கு நெருக்கமாக இருக்கிறார். அவரில்தான், அவர்மூலமாகத்தான் நாம் பார்க்கிறோம், சிந்திக்கிறோம். எதைப் பார்க்க வேண்டுமானாலும், நான் முதலில் அவரைப் பார்க்க வேண்டும். இந்தச் சுவரைப் பார்க்கும்போது நான் முதலில் அவரைப் பார்க்கிறேன். பிறகுதான் சுவரைப் பார்க் கிறேன். பார்ப்பவராக என்றென்றும் நம் இதயத்தில் இருப்பவர் அவர். யார் யாரைப் பார்ப்பது? நமது இதயத்தின் இதயத்தில்

அவர் இருக்கிறார். உடல்களும் மனங்களும் மாறுகின்றன; இன்பம் துன்பம், நல்லது கெட்டது எல்லாம் வருகின்றன, போகின்றன; நாட்களும் ஆண்டுகளும் உருண்டோடுகின்றன; உயிர் வருகிறது, போகிறது. ஆனால் அவர் இறப்பதில்லை; 'நான் இருக்கிறேன்', 'நான் இருக்கிறேன்' என்ற அதே குரல் என்றென்றும் இருக்கிறது, மாறாமல் இருக்கிறது. அவரிலும், அவர்மூலமாகவும்தான் நாம் எல்லாவற்றையும் அறிகிறோம். அவரிலும், அவர் மூலமாகவும்தான் நாம் எல்லாவற்றையும் பார்க்கிறோம். அவரிலும், அவர் மூலமாகவும் நாம் உணர் கிறோம், எண்ணுகிறோம். நாம் வாழ்கிறோம். நாம் இருக் கிறோம். அந்த 'நான்' என்பதை எல்லைக்கு உட்பட்ட 'சிறிய நான்' என்று தவறாக நினைக்கிறோம். அந்த 'நான்' என்னுடைய 'நான்' மட்டும் அல்ல, அது உங்கள் 'நான்', மிருகங்கள், தேவர்கள், மிகவும் கீழ்நிலைப் பொருட்கள், இவை எல்லா வற்றின் 'நான்'. 'நான் இருக்கிறேன்' என்பது கொலைகார னிடமும் மகானிடமும் ஒரேவிதமாக இருக்கிறது, பணக்கார னிடமும் ஏழையிடமும் ஒரேவிதமாக இருக்கிறது, ஆணிடமும் பெண்ணிடமும் ஒரேவிதமாக இருக்கிறது, மனிதனிலும் மிருகங்களிலும் ஒரேவிதமாக இருக்கிறது. மிகச் சிறிய அமீபாவிலிருந்து மிக உயர்ந்த தேவதூதன்வரை அவர் எல்லா உயிர்களிலும் உறைகிறார். 'நானே அவன், நானே அவன்' என்று அவர் என்றென்றும் முழங்குகிறார். என்றுமுள்ள அந்தக் குரலை நாம் புரிந்துகொண்ட பிறகு, இந்தப் பாடத்தை நாம் கற்றுக்கொண்ட பிறகு, பிரபஞ்சம் தன் ரகசியம் முழுவதையும் நமக்கு அறிவித்துவிடும். இயற்கை தன் ரகசியத்தை நமக்கு வெளிப்படுத்திவிடும். அதற்குமேல் அறிவதற்கு ஒன்றும் இல்லை. எல்லா மதங்களும் தேடிக் கொண்டிருக்கும் உண்மையை இவ்வாறு கண்டுபிடிக்கிறோம். பௌதீக விஞ்ஞானங்களைப் பற்றிய அறிவு இரண்டாம் பட்சமாகத்தான் என்று தெரிந்து கொள்வோம். பிரபஞ்சத்தின் ஒரே கடவுளுடன் நம்மை ஒன்றாக இணைக்கும் அந்த அறிவுதான் உண்மையான அறிவு என்று தெரிந்துகொள்வோம்.

# 12. பரம்பொருளும் பிரபஞ்சமும்

11/12 டிசம்பர் 1896

அத்வைத வேதாந்தத்திலேயே புரிந்துகொள்வதற்கு மிகவும் கடினமான, மீண்டும் மீண்டும் கேட்கப்படுவதான, இனியும் எப்போதும் கேட்கப்படப் போகின்ற கேள்வி ஒன்று உண்டு: எல்லையற்ற பரம்பொருள், எல்லைக்கு உட்பட்ட பிரபஞ்ச மாக மாறியது எப்படி? இந்தக் கேள்வியை இப்போது நான் எடுத்துக் கொள்கிறேன். இதை விளக்குவதற்காக ஒரு வரை படத்தைப் பயன்படுத்துகிறேன்.

பரம்பொருள் இதோ இருக்கிறது (அ). பிரபஞ்சம் இதோ இருக்கிறது (ஆ). பரம்பொருள் பிரபஞ்சமாக ஆகியிருக்கிறது. பிரபஞ்சம் என்றால், ஜட உலகம் (Material world) மட்டுமன்றி, மன உலகம், ஆன்ம உலகம், சொர்க்கங்கள், பூமிகள், ஏன், இருப்பவை அனைத்துமே அடங்கும்.




ஒரு வகையான மாறுதலை மனம் என்றும், மற்றொரு வகை மாறுதலை உடல் என்றும் இப்படிப் பலவாறாகக் கூறுகிறோம். இத்தகைய மாறுதல்கள் எல்லாம் சேர்ந்ததே இந்தப் பிரபஞ்சம். பரம்பொருள் (அ), காலம், இடம் (space) மற்றும் காரணகாரியங்களுக்குள் (இ) தன்னை உட்படுத்திக் கொண்டதன் மூலம் பிரபஞ்சமாக (ஆ) மாறியிருக்கிறது. அத்வைதத்தின் மையக் கருத்து இதுதான்.

காலம், இடம், காரணகாரியங்கள் என்னும் கண்ணாடி வழியாகப் பரம்பொருள் பார்க்கப்படும்போது அது பிரபஞ்ச மாகத் தெரிகிறது. ஆகவே பரம்பொருளில் காலம், இடம், காரணகாரியங்கள் எதுவும் இல்லை என்பது இதன்மூலம் தெரிய வருகிறது. மனமோ எண்ணங்களோ இல்லாததால்,

அங்கே காலம் இருக்க முடியாது. புற மாற்றம் எதுவும் இல்லாத தால் இடம் என்ற கருத்தும் அங்கே இருக்க முடியாது. இனி, ஒரே பொருள் மட்டுமே இருக்கும்போது இயக்கமோ காரண காரியங்களோ இருக்க முடியாது. பரம்பொருள் தன் நிலை யிலிருந்து தாழ்வடைந்து (அப்படிச் சொல்ல நமக்கு அனுமதி இருக்குமானால்), பிரபஞ்சமாக ஆகும்போதுதான் காரண காரியங்கள் தொடங்குகின்றன என்பதை நாம் நன்கு புரிந்து கொண்டு, மனத்தில் பதித்துக்கொள்ள வேண்டும்.

நமது சங்கல்பம், ஆசைகள் போன்ற எல்லாமே பரம் பொருள் பிரபஞ்சமான பின்னரே வருகின்றன. ஷோபனேரின் தத்துவம் சங்கல்பமே எல்லாம் என்று சொல்வதால், அவர் வேதாந்தத்தைப் புரிந்துகொள்வதில் தவறு செய்துவிட்டார் என்றே நான் நினைக்கிறேன்.அவர் பரம்பொருளின் இடத்தில் சங்கல்பத்தை வைக்கிறார். ஆனால் சங்கல்பத்தைப் பரம்பொரு ளாகக் கொள்ள முடியாது. ஏனெனில் சங்கல்பம் மாறுதல் அடையக் கூடியதும், எல்லைக்கு உட்பட்டதும் ஆகும். காலம், இடம், காரணகாரியங்களுக்கு மேல் ஒரு கோடு உள்ளதே, அதற்கு மேற்பகுதியில் மாற்றங்களோ இயக்கங்களோ இல்லை. அதற்கும் கீழேதான் புற இயக்கங்களும், எண்ணம் எனப்படு கின்ற அக இயக்கமும் தொடங்குகின்றன. பரம்பொருள் நிலை யில் சங்கல்பம் இல்லாததால், பிரபஞ்சத்தின் தோற்றத்திற்குச் சங்கல்பம் காரணமாக இருக்க முடியாது. இன்னும் சிறிது ஆராய்ந்தால் நம் உடலில்கூட, எல்லா இயக்கங்களுக்கும் சங்கல்பமே காரணமாக இருக்க முடியாது என்பதைப் பார்க் கிறோம். நான் இந்த நாற்காலியை அசைக்கிறேன். இந்த அசைவிற்கு என் சங்கல்பம் காரணம். சங்கல்பம், மறுகோடியில் உடல் அசைவாக வெளிப்படுகிறது. ஆனால் இந்த நாற்காலியை அசைத்த அதே சக்திதான் இதயம், நுரையீரல்கள் ஆகியவற்றை யும் இயக்குகிறது; ஆனால் சங்கல்பத்தின்மூலமாக அல்ல. இந்த இரண்டு வகையான இயக்கங்களுக்கும் காரணமாக இருப்பது ஒரேசக்தி என்று வைத்துக்கொண்டாலும், உணர்வு நிலைக்கு உயரும் போதுதான் அது சங்கல்பமாகிறது. அதற்கு முன்னால், அதைச் சங்கல்பம் என்று சொல்வது தவறு. இதுதான் ஷோபனேரின் தத்துவத்தில் மிகுந்த குழப்பத்தை உண்டாக்கியுள்ளது.

ஒரு கல் விழுந்தால் அது ஏன் விழுகிறது என்று கேட்கிறோம். காரணமில்லாமல் காரியமில்லை என்று

எண்ணுவதால்தான் இந்தக் கேள்வியே எழ முடிகிறது. நீங்கள் இந்தக் கருத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஏன் ஒரு காரியம் நடக்கிறது என்று நாம் கேட்கும்போதே, நடப்பவை அனைத்திற்கும் ஒரு 'ஏன்' இருக்க வேண்டும் என்று முடிவுகட்டி விடுகிறோம், அதாவது அந்தக் காரியம் நடப்பதற்கு முன்னால், அதைத் தொடங்குவதற்கு ஒரு காரணம் இருந்திருக்க வேண்டும் என்று எண்ணுகிறோம். இந்த முன்னால் பின்னால் ஆகிய கருத்துக்களையே காரணகாரிய நியதி என்று அழைக்கிறோம். அதாவது, பிரபஞ்சத்திலுள்ள எல்லாமே, மாறிமாறி, காரண மாகவும் காரியமாகவும் இருக்கின்றன. அதாவது, சில பொருட் களின் காரணமே பின்னால் காரியமாக வருகிறது. அந்தக் காரணமும் ஏற்கனவே இருந்த ஏதோ ஒன்றின் காரியம் ஆகும். இதுதான் காரணகாரிய நியதி. நம்முடைய சிந்தனைக்கெல்லாம் இது மிகவும் அவசியமாக இருக்கிறது.

இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வோர் அணுவும், அது எதுவாக இருந்தாலும் சரி, மற்ற அணுக்களைச் சார்ந்தே இருக் கிறது என்று நாம் நம்புகிறோம். இந்தக் கருத்து எப்படித் தோன்றியது என்பது பற்றிப் பெரும் விவாதங்கள் நிகழ்ந்திருக் கின்றன. இது மனிதனோடு பிறப்பது என்று, உள்ளுணர்வு மிக்க ஐரோப்பியத் தத்துவ மேதைகள் சிலர் நம்பினார்கள். மற்றவர்கள், இது அனுபவத்தினால் வந்தது என்று நம்பி வந் திருக்கிறார்கள். ஆனால் கேள்விக்குப் பதில் கிடைக்கவில்லை. வேதாந்தம் இதற்கு என்ன பதில் சொல்கிறது என்பதை நாம் பின்னால் பார்ப்போம். நம்மைச் சுற்றி நடப்பவை எல்லா வற்றிற்கும் முன்னால் சில விஷயங்கள் இருக்க வேண்டும், பின் னால் சில விஷயங்கள் இருக்க வேண்டும் என்று கொள்வதால் தான் ஏன் என்ற கேள்வியையே கேட்கிறோம். இது நாம் புரிந்துகொள்ள வேண்டிய ஒன்று.

இந்தக் கேள்வியிலுள்ள மற்றொரு நம்பிக்கையைப் பார்ப் போம். எதையும் சாராமல் தனியாக இருப்பது என்று எதுவும் இந்தப் பிரபஞ்சத்தில் இல்லை, ஒவ்வொன்றின்மீதும் அதற்கு வெளியே உள்ள ஒன்று செயல்படுகிறது என்ற நம்பிக்கையே அது. ஒன்றையொன்று சார்ந்திருப்பது பிரபஞ்ச நியதி. 'பரம் பொருள் தோன்றியதற்கு எது காரணம்?' என்று நாம் கேட்பது எவ்வளவு பெரிய தவறு! பரம்பொருளும் எதனாலோ கட்டுப்பட்டிருக்கிறது, வேறு எதையோ சார்ந்திருக்கிறது என்று வைத்துக் கொண்டால்தான் இந்தக் கேள்வியையே கேட்க

முடியும். இப்படி நினைப்பதால் பரம்பொருளைப் பிரபஞ்ச நிலைக்குக் கொண்டுவந்து விடுகிறோம். பரம்பொருள்நிலையில் காலம், இடம், காரணகாரியம் எதுவுமே கிடையாது. அந்த நிலையில் எல்லாம் ஒன்றுதான். தனக்குத் தானாகவே தனியாக இருக்கும் ஒன்றிற்கு எதுவும் காரணமாக இருக்க முடியாது. சுதந்திரமாக இருக்கும் பொருளுக்கு எந்தக் காரணமும் இருக்க முடியாது. காரணம் இருந்தால் அது சுதந்திரமாக இருக்க முடியாது, கட்டுப்பட்டதாகத்தான் இருக்க முடியும். வேறு ஒன்றைச் சார்ந்திருப்பது சுதந்திரமாக இருக்க முடியாது. ஆகவே, எல்லையைக் கடந்து நிற்பது, எப்படி எல்லைக்கு உட்பட்டதாக ஆகியது என்ற கேள்வியே இருக்க முடியாது. அது முன்னுக்குப் பின் முரணானது. தத்துவ நுணுக்கங்களை விட்டுவிட்டு, நியாயபூர்வமாக, சாதாரணமாக, இந்தப் பிரச்சினையை அணுகினால், இதை வேறு ஒரு கோணத்திலிருந்து பார்க்கலாம். இந்தக் கேள்விக்கு விடை தெரிந்துவிட்டால், பரம்பொருள் பரம்பொருளாக எப்படி இருக்க முடியும்? அது வேறொன்றைச் சார்ந்திருப்பதாகிவிடும்!

நாம் சாதாரணமாக அறிவு என்று சொல்வதற்கு என்ன பொருள்? அறிவு என்பது, நம் மனத்தின் எல்லைக்கு உட்பட்டது, நாம் அறிவது. அது மனத்தைக் கடந்ததாக இருக்கும்போது அதை அறிவு என்று சொல்ல முடியாது. எனவே பரம்பொருள், மனத்தின் எல்லைக்குள் வந்துவிட்டால் அது பரம்பொருளாக இருக்க முடியாது, எல்லைக்கு உட்பட்டதாக ஆகிவிடும். மனத்தினால் கட்டுப்பட்டது எதுவுமே எல்லைக்கு உட்பட்டதாக ஆகிவிடுகிறது. ஆகவே பரம்பொருளை அறிவது என்று சொல்வதே முரணானது. அதனால்தான் இந்தக் கேள்விக்கு ஒருபோதும் பதிலே கிடைக்கவில்லை. பதில் கிடைத்துவிட்டால், பரம்பொருள் பரம்பொருளாக இருக்க முடியாது. கடவுளை அறிய முடியுமானால் அவர் கடவுள் அல்ல; அவரும் நம்மைப்போல் எல்லைக்கு உட்பட்டவராக ஆகிவிடுவார். அவரை அறிந்துகொள்ள முடியாது. அவர் அறிந்துகொள்ள முடியாதவராகவே என்றும் இருக்கிறார்.

கடவுள் அறிவுநிலைக்கு மேலானவர் என்று அத்வைதம் கூறுகிறது. இது நாம் தெரிந்துகொள்ள வேண்டிய மாபெரும் உண்மையாகும். ஆனால், கடவுளை அறிய முடியாது என்பதை ஆஜ்ஞேயவாதிகளின் பொருளில் புரிந்துகொண்டு நீங்கள் வீடு திரும்பாதீர்கள். உதாரணமாக, இதோ இங்கே ஒரு நாற்காலி

இருக்கிறது. இது நமக்குத் தெரியும். ஆனால் ஆகாசத்திற்குப் பின்னால் என்ன இருக்கிறது? அங்கே மனிதர்கள் இருக்கிறார்களா இல்லையா என்பனவெல்லாம் தெரிந்துகொள்ள முடியாதவையாக இருக்கின்றன. கடவுளை அறிவது, அறிய முடியாதது என்பது இத்தகைய பொருளில் அல்ல. அறியப்படுவதற்கெல்லாம் அப்பாற்பட்டவர் அவர். கடவுளை அறிய முடியாது, அவர் அறியப்பட முடியாதவர் என்றெல்லாம் சொல்வது இந்தப் பொருளில்தான். சில கேள்விகளுக்குப் பதில் தெரியாது, தெரிந்துகொள்ள முடியாது என்று நாம் சொல்வது போன்ற பொருளில் இதைப் பயன்படுத்தவில்லை. நாம் அறியக் கூடியவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டவர் கடவுள். இந்த நாற்காலியை நாம் அறிவோம். கடவுளோ இதைவிட மிகவுயர்ந்த நிலையில் அறியப்படக் கூடியவர். ஏனெனில் அவருள்ளும் அவர் மூலமாகவும்தான் நாம் இந்த நாற்காலியையே அறிய முடிகிறது. அவர் சாட்சிப் பொருள், எல்லா அறிவுக்கும் நிரந்தர சாட்சியாக அவர் இருக்கிறார். நாம் அறிவதையெல்லாம் அவருள்ளும் அவர் மூலமாகவும்தான் அறிய முடியும்.

நமது சொந்த ஆன்மாவின் சாரமாக இருப்பவர் அவர். நான்-உணர்வின் சாரமாக இருப்பவரும் அவரே. இந்த நான்-உணர்வின் உள்ளேயும் மூலமாகவும் அல்லாமல் நாம் எதையும் அறிய முடியாது. அதாவது, பரம்பொருளின் உள்ளேயும் அவர்மூலமாகவும்தான் நாம் எதையும் அறிய முடியும்.

இவ்வாறு கடவுள் இந்த நாற்காலியைவிட எல்லையற்ற மடங்கு நமக்கு அருகில் இருக்கிறார். அதேவேளையில் அதைவிடப் பல மடங்கு உயர்ந்த நிலையில் அவர் இருக்கிறார். அவர் அறியக் கூடியவரும் அல்ல; அறியப்பட முடியாதவரும் அல்ல. இந்த இரண்டு நிலைகளையும்விட எல்லையற்ற மடங்கு உயர்ந்த நிலையில் அவர் இருக்கிறார். அவரே நமது ஆன்மா. அந்தப் பரம்பொருள் நிறைந்திருக்காவிட்டால், இந்தப் பிரபஞ்சத்தில் ஒரு கணம்கூட யாரால் வாழ முடியும்? யாரால் மூச்சுவிட முடியும்?[1] ஏனென்றால் அவருள்ளும் அவர் மூலமாகவும்தான் நாம் மூச்சுவிடுகிறோம். அவருள்ளும் அவர் மூலமாகவும்தான் வாழ்கிறோம். அவர் எங்கேயோ நின்றுகொண்டு என் உடலில் ரத்தத்தை ஓடச் செய்கிறார் என்பது பொருளல்ல. எல்லாவற்றின்

---

1. கோ ஹ்யேவான்யாத் க: ப்ராண்யாத் யதேஷ ஆகாச ஆனந்தோ ந ஸ்யாத் ||

—தைத்திரீய உபநிடதம், 2.7

சாரமாகவும் ஆன்மாவின் ஆன்மாவாகவும் அவர் இருக்கிறார் என்பதே பொருள்.

எந்தக் காரணத்தைக் கொண்டும் கடவுளை அறிவதாக நாம் சொல்ல முடியாது. அப்படிச் சொல்வது அவரைத் தாழ்த்திப் பேசுவதே ஆகும். நாம் நம்மைவிட்டு வெளியே குதிக்க முடியாது. அதுபோல் நாம் கடவுளை அறியவும் முடியாது.

அறிவு என்றால், ஒன்றை நம்மிலிருந்து வேறுபடுத்தி அறிவது (Objectification). உதாரணமாக, நாம் ஒன்றை நினைக்க வேண்டுமானால் அதை மனத்திற்கு வெளியே கொண்டுவந்து, அதாவது அதை மனத்திலிருந்து வேறுபடுத்திதான் பார்க்க முடியும். நாம் பார்த்த, அறிந்த எல்லா விஷயங்களும் நம் மனத்தில்தான் இருக்கின்றன. அவை சித்திரங்களாக, சம்ஸ்காரங்களாக மனத்தில் உள்ளன. அவற்றைப்பற்றி நினைக்கவோ அறியவோ நாம் முயலும்போது, அவற்றை வெளியே கொண்டு வருவதுதான் அறிவின் முதல் வேலையாக இருக்கிறது. கடவுள் விஷயத்தில் இம்மாதிரி செய்ய முடியாது. ஏனெனில் அவர் நம் ஆன்மாவின் சாரமாக இருப்பவர். அவரை நமக்கு வெளியே கொண்டு நிறுத்த முடியாது.

வேதாந்தத்திலுள்ள மிக உன்னதமான கருத்துக்களில் ஒன்று இதோ இருக்கிறது: 'சுவேதகேதுவே, உன்னுடைய ஆன்மாவின் சாரமாக இருப்பவரே மெய்ப்பொருள். அவரே பரமாத்மா. நீயே அது.'[1] 'நீயே கடவுள்' என்பதன் பொருள் இதுவே. வேறு எப்படியும் பரம்பொருளை நாம் விளக்க முடியாது. தந்தை, சகோதரன், நண்பன் என்று எந்த உறவாலோ மொழியாலோ கடவுளை அழைக்க முயல்வது எல்லாம் அவரைப் புறத்தில் கொண்டு வருவதற்கான முயற்சிகளே. அது நடைபெற முடியாத ஒன்று. ஏனெனில் அவர் சாரத்தின் சாரமாக உள்ளே இருப்பவர்.

இந்த நாற்காலியை நான் பார்க்கிறேன். அது பார்க்கப்படும் பொருள்; நான் பார்ப்பவன். இதைப் போலவே பரம்பொருள் நம் ஆன்மாவைப் பார்ப்பவராக இருக்கிறார். அப்படி இருப்பவரை, நம் ஆன்மாவின் சாரமாகவும் மெய்ப்பொருளாகவும் இருப்பவரை, நம்மிலிருந்து நாம் எப்படிப் பிரித்துப் பார்க்க முடியும்? ஆகவே மீண்டும் சொல்கிறேன்;

---

1. ஸ ய ஏஷோऽணிமைததாத்ம்யமிதம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்வமஸி ச்வேதகேதோ ॥

—சாந்தோக்கிய உபநிடதம், 6. 13. 3

கடவுள் அறியப்படுபவரோ அறியப்படாதவரோ அல்ல; அவர் இந்த இரண்டு நிலைகளையும்விட எல்லையற்ற மடங்கு உயர்ந்த நிலையில் இருப்பவர்.

கடவுள் நம்மோடு இரண்டறக் கலந்தவர். நம்மோடு இரண்டறக் கலந்து நாமாகவே இருப்பவர் அறியப் படுபவ ராகவோ, அறியப் படாதவராகவோ இருக்க முடியாது. நம்மை நாமே புறத்தில் கொண்டுவந்து பார்க்க முடியாது. நம்மை வெளியே கொண்டு வந்து அறிய முடியாது. ஏனெனில் நாமே அதுவாக இருக்கிறோம். அதிலிருந்து நம்மைப் பிரிக்க முடியாது. இனி, அது அறிய முடியாததும் அல்ல. ஏனென் றால், நாம் நம்மைவிட நன்றாக வேறு எந்தப் பொருளையும் அறிந்திருக்க முடியாது, நமது அறிவின் மையமே நாம்தானே. இந்தப் பொருளில்தான் கடவுளும் அறியப்பட முடியாதவரும் அல்ல, அறியப்படக்கூடியவரும் அல்ல என்று நாம் கூறு கிறோம். அவர் இந்த இரண்டு நிலைகளையும்விட எல்லையற்ற மடங்கு உயர்ந்த நிலையில் இருக்கிறார். அவரே நம்முடைய உண்மையான ஆன்மா.

ஆகவே முதலாவதாக 'பரம்பொருளுக்குக் காரணம் எது?' என்ற கேள்வியே முன்னுக்குப்பின் முரணாக இருப்பதைக் காண்கிறோம். இரண்டாவதாக, அத்வைதத்திலுள்ள பரம் பொருள் தத்துவம் இரண்டற்ற ஒன்று என்பதையும் கண்டோம். ஆகவே, அறிந்தோ அறியாமலோ நாம் பரம்பொருளிலேயே வாழ்ந்து கொண்டும் இயங்கிக் கொண்டும் இருப்பதால் பரம்பொருளை நம் அறிவிற்கு இலக்காக்க முடியாது. நாம் எதைச் செய்ய வேண்டுமானாலும் அதைப் பரம்பொருளின் மூலமாகத்தான் செய்ய முடியும்.

காலம், இடம், காரணகாரியம் என்பவை என்ன என்பதை இப்போது ஆராய்வோம். அத்வைதம் என்றால் இரண்டற்றது; அதாவது இரண்டில்லை, ஒன்றுதான். இருந்தாலும், காலம், இடம், காரணகாரியம் என்ற திரையின்மூலம் பரம்பொருள் தன்னைப் பலவாக வெளிப்படுத்திக் கொள்கிறது என்ற கருத்தை நாம் காண்கிறோம். ஆகவே இங்கே இரண்டு இருப்பதாகத் தோன்றுகிறது; ஒன்று பரம்பொருள், மற்றொன்று மாயை (அதாவது காலம், இடம், மற்றும் காரணகாரியங்களின் மொத்தம்). இரண்டு இருப்பதாகச் சொல்வது மிகவும் சரி யாகத்தான் தோன்றுகிறது. ஆனால் அதை இரண்டு என்று சொல்ல முடியாது என்று அத்வைதி பதில் சொல்கிறான்.

இரண்டு என்பது இருக்க வேண்டுமானால் இரண்டு தனித்தனியான, ஒன்றையொன்று சாராத உண்மைகள் இருக்க வேண்டும். இது சாத்தியமல்ல. முதலாவதாக, காலம், இடம் மற்றும் காரணகாரியங்கள் எல்லாம் எதையும் சாராதவை என்று சொல்ல முடியாது. காலம் முற்றிலும் சார்புநிலை கொண்டது. நம் மனத்தின் ஒவ்வொரு மாறுதலுக்கு ஏற்ப அதுவும் மாறிக்கொண்டே இருக்கிறது. கனவில் சிலவேளை களில், சிறிது நேரத்திற்குள்ளேயே பல வருடங்கள் வாழ்ந்ததாகக் காண்கிறோம். வேறு சில நேரங்களில், பல மாதங்கள் ஒரே கணத்தில் ஓடிவிட்டதுபோல் நமக்குத் தோன்றும். ஆகவே காலம் முற்றிலுமாக நமது மனநிலையைச் சார்ந்ததாகவே உள்ளது. இரண்டாவதாக, காலம் என்ற கருத்தே சிலவேளை களில் முழுவதுமாக மறைந்துவிடுவதும் உண்டு.

இடமும் இதே போன்றதுதான். இடம் என்பது என்ன என்று நம்மால் அறிய முடியாது. ஆனாலும் அது இருக்கிறது. அதை விளக்க முடியாது. மற்ற எதையும் சாராமல் அது தனி யாக இருக்க முடியாது. காரணகாரியமும் அப்படியே.

காலம், இடம், காரணகாரியங்கள் ஆகியவற்றில் நாம் காணும் ஒரு தனிப்பட்ட அம்சம், அவை மற்றவற்றைச் சாரா மல் இருக்க முடியாது என்பதே. நிறம், எல்லைகள், அல்லது சுற்றியுள்ள எதனோடும் எந்தத் தொடர்பும் இல்லாத, வெறும் இடத்தை மட்டுமே நினைத்துப் பார்க்க முயலுங்கள். அது நம்மால் முடியாது. இரண்டு எல்லைகளுக்கு இடையில் அல் லது மூன்று பொருட்களுக்கு உட்பட்டதாகத்தான் அதைப்பற்றி நாம் நினைக்க முடியும். வேறு ஒரு பொருளோடு ஒப்பிட்டுத் தான் இடம் என்பது இருப்பதாகச் சொல்ல முடியும்.

காலத்திற்கும் இது பொருந்தும். காலம் என்பதைத் தனி யாக நினைத்துப் பார்க்க முடியாது. இரண்டு நிகழ்ச்சிகளை எடுத்துக் கொள்ள வேண்டும். ஒன்று முதலில் நடந்தது, மற் றொன்று அதைத் தொடர்ந்து நடப்பது. இந்த இரண்டு நிகழ்ச்சிகளையும் தொடர்ச்சி என்ற கருத்தால் இணைக்க வேண்டும். இடம், மற்ற பொருட்களைச் சார்ந்திருப்பதுபோல், காலமும் இரண்டு நிகழ்ச்சிகளைச் சார்ந்திருக்கிறது. காரண காரியக் கருத்து, காலம், இடம் இவற்றிலிருந்து பிரிக்க முடி யாததாக இருக்கிறது. சார்பில்லாமல் தனியாக இருக்க முடி யாது என்பதுதான் இவற்றின் முக்கியமான அம்சம். நாற்காலி, சுவர் இவற்றைப்போல்கூட அவற்றிற்கு இருப்பு கிடையாது.

கைக்கு அகப்படாததான நிழல்போல் அவை எல்லாவற்றையும் சூழ்ந்திருக்கின்றன. உண்மையான இருப்பு அவற்றிற்கு இல்லை. ஆனாலும் அவை இல்லை என்று சொல்ல முடியாது. ஏனெனில் எல்லாமே அவற்றின் மூலமாகத்தான் பிரபஞ்சமாக வெளிப் படுகின்றன.

ஆகவே முதலாவதாக, காலம், இடம், காரணகாரியம் இவற்றின் சேர்க்கையை, இருக்கிறது என்றோ, இல்லை என்றோ சொல்ல முடியாது என்பது தெரிகிறது. இரண்டாவதாக, இந்தச் சேர்க்கை சிலவேளைகளில் மறைந்தே விடுகிறது. உதாரணத் திற்கு, கடலில் உள்ள அலை ஒன்றை எடுத்துக்கொள்வோம். அலையும் கடலும் ஒன்றுதான் என்று நமக்கு நிச்சயமாகத் தெரியும். என்றாலும் அலை என்ற நிலையில் அது கடலிலிருந்து வேறுபட்டது என்றும் நாம் அறிகிறோம். இந்த வேறுபாட்டை உண்டாக்குவது எது? பெயரும் வடிவமும். அதாவது மனத்தில் நாம் கொண்டுள்ள கருத்தும் உருவமுமே. கடலிலிருந்து வேறு பட்டதாக அலை உருவத்தை மட்டும் தனியாக நினைத்துப் பார்க்க முடியுமா? நிச்சயமாக முடியாது. எப்போதுமே கட லோடு சேர்த்துத்தான் அலையைப்பற்றி நாம் நினைக்க முடியும். அலை அடங்கும்போது, அதன் உருவம் கண நேரத்தில் மறைந்து விடுகிறது. ஆனாலும் நாம் கண்ட அலை உருவம் பொய்த் தோற்றமல்ல. அலை இருந்தவரையில் உருவமும் இருந்தது, அதுவரை அலையுருவத்தைப் பார்க்காமல் இருக்க முடியாது. இதுதான் மாயை.

ஆகவே இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே ஒரு தனி உருவம் போல் உள்ளது. பரம்பொருளே கடல். நாமும் மற்றும் சூரியன், நட்சத்திரங்கள் என்று எல்லாமே அந்தக் கடலில் எழும் வெவ் வேறு அலைகள். அலைகளை வேறுபடுத்துவது எது? உருவம் மட்டுமே. அந்த உருவம் என்பது, அலைகளைச் சார்ந்திருப்பவை யான இடம் மற்றும் காரணகாரியங்களே! அலை மறைந்ததும் அவையும் மறைந்துவிடுகின்றன. இந்த மாயையை விட்டுவிடுப வனுக்கு மாயை மறைந்துவிடுகிறது. அவன் முக்தி பெறுகிறான்.

காலம், இடம், காரணகாரியங்களே எப்போதும் பெரும் தடைகளாக உள்ளன. இவற்றை நாம் உடும்புப் பிடி யாகப் பிடித்துக் கொண்டிருக்கிறோம். இந்தப் பிடியை விடுவதற் காகத்தான் இவ்வளவு போராட்டங்களும் நடக்கின்றன.

பரிணாமக் கொள்கை என்பது என்ன? அதற்கு அடிப்படை யான இரண்டு அம்சங்கள் என்ன? ஒடுங்கியிருந்து, தன்னை

வெளிப்படுத்திக் கொள்ள முயலும் அபாரமான வலிமை வாய்ந்த சக்தி ஒன்று. மற்றொன்று, அது வெளிப்படாத வண்ணம் அந்த முயற்சியைத் தடை செய்யும் சூழ்நிலை. இந்தச் சூழ்நிலையோடு போராடுவதற்காக அந்தச் சக்தி, மறுபடியும் மறுபடியும் புதிய உடல்களை எடுத்துக்கொண்டே இருக்கிறது. ஓர் அமீபாவுக்கு இந்தப் போராட்டத்தில், மற்றோர் உடல் கிடைக்கிறது. அதன்மூலம் அது சில தடைகளைக் கடக்கிறது. பின்னர் அதற்கு மற்றோர் உடல் கிடைக்கிறது. இப்படியே தொடர்கிறது. கடைசியில் மனிதனாகிறது. இந்தக் கருத்தை அதனுடைய நியாயபூர்வமான முடிவுவரை நாம் எடுத்துச் செல்வோம். அமீபாவிலிருந்து பரிணமித்து மனிதனாகிய அந்தச் சக்தி, இயற்கை அதன்முன் கொண்டுவருகின்ற தடைகளை யெல்லாம் வென்று எல்லா சூழ்நிலைகளிலிருந்தும் தப்பிக்கும் நேரம் வந்துதான் ஆக வேண்டும்.

தத்துவரீதியில் இந்தக் கருத்தைப் பின்வருமாறு சொல்லலாம்: ஒவ்வோர் இயக்கத்திற்கும் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று செய்பவர் (Subject); மற்றொன்று அந்தச் செயலுக்கு இலக்காகும் பொருள் (Object). வாழ்க்கையின் ஒரே லட்சியம், இந்த செய்பவர், இலக்குப் பொருளை அடக்கியாள்வதே ஆகும். உதாரணமாக, யாராவது நம்மைத் திட்டும்போது நாம் துன்பப்படுகிறோம். இந்த உதாரணத்தில் நம் போராட்டம் எல்லாம் மற்றவர் நம்மைத் திட்டும்போது, நாம் அதை லட்சியம் செய்யாமல் இருக்கும் வலிமை பெறுவதற்காகத்தான் இருக்கும். இப்படித்தான் நாம் எல்லோரும் வெற்றிக்காக முயல்கிறோம்.

ஒழுக்கம் என்பது என்ன? நம்மைப் பரம்பொருளுடன் இணைத்துக் கொண்டு வலிமை பெற்று, எல்லைக்கு உட்பட்ட இயற்கை நம்மீது ஆதிக்கம் செலுத்தாமல் செய்வதுதான். இயற்கை, எல்லைக்கு உட்பட்டதாகையால், நாம் நம் சூழ்நிலைகளை முழுவதுமாக வெல்கின்ற காலம் ஒன்று வரும் என்பது எங்கள் தத்துவத்தின் நியாயபூர்வமான முடிவாகும்.

இங்கே நாம் தெரிந்துகொள்ள வேண்டிய இன்னொரு விஷயம் இருக்கிறது. இயற்கை, எல்லைக்கு உட்பட்டது என்பது எப்படித் தெரியும்? தத்துவ அறிவுமூலமாக மட்டுமே இதை நாம் அறிய முடியும். எல்லையற்ற பொருளின் எல்லைக்கு உட்பட்ட வெளிப்பாடே இயற்கை. ஆகவே இயற்கை எல்லைக்கு உட்பட்டது. எனவே சூழ்நிலை அனைத்தையும் நாம் வெற்றி கொள்ளும் நேரம் வந்தே தீரும்.

சூழ்நிலைகளை வெற்றிகொள்வது எப்படி? புறச் சூழ்நிலைகள் எல்லாவற்றையும் வெற்றிகொள்வது என்பது இயலாத ஒன்றுதான். அது நம்மால் முடியாத காரியம்தான். மீன், நீரிலுள்ள தன் எதிரிகளிடமிருந்து தப்பிக்க விரும்புகிறது. அது எப்படித் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்கிறது? இறக்கைகளை வளர்த்துக்கொண்டு ஒரு பறவையாவதன்மூலம் தான். நீரையோ காற்றையோ அந்த மீன் மாற்றவில்லை; மாற்றம் அதனிடமே உண்டாகிறது. மாற்றம் எப்பொழுதும் அகச்சார்பு உடையது. பரிணாம வளர்ச்சியைப் பார்த்தால், எல்லா உயிர்களும் தங்களை மாற்றிக் கொள்வதன்மூலமே இயற்கையை வெல்கின்றன என்பதை அறிகிறோம். இந்த உண்மையை மத உணர்வுக்கும் ஒழுக்கக் கோட்பாட்டிற்கும் பொருத்திப் பார்த்தால், தன்னை மாற்றிக்கொள்வதன்மூலம் மட்டுமே ஒருவர் தீமையை வெல்ல முடியும் என்றாகிறது. மனிதனின் அகச் சார்பிலிருந்துதான் அத்வைத நெறிக்கு அதனுடைய முழுச் சக்தியும் கிடைக்கிறது. துன்பமும் தீமையும் வெளியே இல்லை; ஆகவே அவற்றைப்பற்றிப் பேசுவது பொருளற்றது. கோபத்தின் வசப்படாதிருக்கப் பழகிவிட்டால் எனக்குக் கோபம் வராது. வெறுப்பு என்னை அணுகாமல் பார்த்துக்கொண்டால் வெறுப்பே எனக்கு வராது. ஏனெனில் அவை என்னைத் தொடவே முடியாது. வெற்றியடைவதற்கு இதுதான் வழி; அதாவது அகச் சார்பின்மூலம் நம்மை நாமே முழுமையாக்கிக் கொள்வதுதான்.

பௌதீக விஞ்ஞானம் மற்றும் ஒழுக்கக் கோட்பாடு ஆகியவற்றின் தற்கால ஆராய்ச்சிகளுடன் ஒத்துப்போவது மட்டுமல்லாமல், அவற்றிற்கு ஒரு படி மேலேயும் போயிருக்கும் ஒரே நெறி அத்வைதம்தான் என்று நான் தைரியமாகச் சொல்வேன். அதனால்தான் தற்கால விஞ்ஞானிகளை அத்வைதம் கவர்கிறது. பழைய துவைதக் கருத்துக்கள் அவர்களுக்குப் போதவில்லை, திருப்தி அளிக்கவில்லை.

மனிதனுக்கு வெறும் நம்பிக்கை போதாது, அறிவுபூர்வமான நம்பிக்கை வேண்டும். இந்தப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், வழிவழியாகத் தாங்கள் பின்பற்றி வரும் மதக் கருத்துக்களைத் தவிர, மற்றவை எதுவும் சரியானவை அல்ல என்ற எண்ணம் இருப்பது, மனிதனின் மனத்தில் இன்னும் பலவீனம் எஞ்சியுள்ளதையே காட்டுகிறது. அத்தகைய கருத்துக்களை விட்டுவிட வேண்டும். இந்த நாட்டில் மட்டும்தான் அந்த

நிலை இருக்கிறது என்று நான் சொல்லவில்லை. எல்லா நாடுகளிலும் இருக்கிறது; எல்லா நாடுகளையும்விட என்னுடைய நாட்டில் மிகவும் அதிகமாக இருக்கிறது.

அத்வைதம் பொதுமக்களிடையே பரவுவதற்கு வாய்ப்பு அளிக்கப்படவே இல்லை. முதலில் சில துறவிகள் மட்டுமே அத்வைதத்தை அறிந்திருந்தார்கள். அவர்கள் அதனைக் காட்டிற்குக் கொண்டு சென்றுவிட்டார்கள். ஆகவே இதற்கு, 'வனத் தத்துவம்' அதாவது 'ஆரண்யகம்' என்ற பெயர் வழங்கலாயிற்று. இறையருளால் புத்தர் தோன்றி, எல்லா மக்களுக்கும் அதை எடுத்துக் கூறினார். நாடு முழுவதுமே பௌத்த மதத்தைத் தழுவியது. இதற்குப் பல காலத்திற்குப் பின், நாத்திகர்களும் ஆஜ்ஞேயவாதிகளும் மீண்டும் நாட்டைக் கெடுத்தபோது, இந்தியாவை உலோகாயதத்திலிருந்து காப்பாற்றக்கூடியது அத்வைதம் ஒன்றுதான் என்ற உண்மையை அனைவரும் உணர்ந்தார்கள்.

இவ்வாறு இந்தியாவை உலோகாயதத்திலிருந்து இரண்டு முறை அத்வைதம் காப்பாற்றியிருக்கிறது. அஞ்சக்கூடிய அளவுக்கு, உலோகாயதம், புத்தர் தோன்றுவதற்கு முன்னால் இந்தியாவில் பரவியிருந்தது. அன்று அது இப்போது இருப்பதைப் போன்ற தத்துவம் அல்ல; இதைவிட மிகவும் மோசமானதும் பயங்கரமானதுமாக இருந்தது.

இருப்பது ஒன்றே என்று நம்புவதால் நான் ஒருவகையில் உலோகாயதவாதிதான். உலோகாயதவாதிகள் நம்பச் சொல்வதும் அதைத்தான். அவர்கள் அதை ஜடப்பொருள் என்கிறார்கள்; நான் அதைக் கடவுள் என்கிறேன். நம்பிக்கை, மத உணர்வு மற்றும் எல்லாமே இந்த ஜடப்பொருளிலிருந்து வந்திருக்கின்றன என்று உலோகாயதவாதிகள் சொல்கிறார்கள். இவை எல்லாமே கடவுளில் இருந்து வந்திருக்கின்றன என்று நான் சொல்கிறேன்.

புத்தருக்கு முன்னால் இருந்த உலோகாயதம் வளர்ச்சியடையாத, பக்குவப்படாத ஒன்றாக இருந்தது—'நன்றாகச் சாப்பிடுங்கள், குடித்துக் கும்மாளமிடுங்கள். கடவுள், ஆன்மா, சொர்க்கம் என்றெல்லாம் எதுவும் இல்லை. தீய நோக்கம் கொண்ட புரோகிதர்களின் கட்டுக்கதையே மதம்' என்றெல்லாம் அவர்கள் பிரச்சாரம் செய்தார்கள். 'உயிருடன் இருக்கும் வரை சந்தோஷமாக வாழ வேண்டும்', 'கடன் வாங்கியாவது சாப்பிட வேண்டும். கடனைத் திருப்பிக் கொடுப்பதைப்பற்றிக்

கவலைப்பட வேண்டியதில்லை'— இதுதான் பழைய உலோகாயதக் கொள்கை. அன்று இந்தக் கொள்கை மிகவும் அதிகமாகப் பரவியிருந்தது. ஆகவே இன்றுகூட, 'ஜனரஞ்சகமான தத்துவம்' என்றே அதைப்பற்றிக் குறிப்பிடுகிறார்கள்.

புத்தர், வேதாந்தத்தை வெளியே கொண்டுவந்து, மக்களிடையே பரப்பி இந்தியாவைக் காப்பாற்றினார். அவர் மறைந்து ஆயிரம் வருடங்களுக்குப் பின், மீண்டும் எல்லாம் பழையபடியாயிற்று. பாமர மக்கள்கூட்டமும் பல்வேறு இன மக்களும் எல்லோரும் புத்த மதத்தைத் தழுவியிருந்தார்கள். மக்களில் பலர் அறிவற்றவர்களாக இருந்ததால் புத்தரின் போதனைகளுக்குக் காலப்போக்கில் வீழ்ச்சி ஏற்பட்டது.

கடவுள், பிரபஞ்சத் தலைவராகிய இறைவன் என்று எதையும் புத்தர் போதிக்கவில்லை. எனவே மக்கள் சிறிதுசிறிதாக, தங்கள் தெய்வம், பேய்பிசாசுகள் என்று பலவற்றை மறுபடியும் புத்த மதத்தில் புகுத்தி, அதை ஒரு குழப்பக் குட்டையாக்கி விட்டார்கள். அதன் காரணமாக உலோகாயதம் மீண்டும் தலைவிரித்தாடத் தொடங்கியது. அது உயர்வகுப்பினரிடையே தனியுரிமையாகவும் ஏழைகளிடையே மூட நம்பிக்கையாகவும் உலவியது.

அந்த வேளையில் ஆதிசங்கரர் தோன்றி வேதாந்தத் தத்துவத்திற்கு மீண்டும் புத்துயிர் ஊட்டினார்; அதைப் பகுத்தறிவுக்கு ஏற்புடைய ஒரு தத்துவமாகச் செய்தார். உபநிடதங்களில் உள்ள வாதங்கள் பல இடங்களில் சரியாகப் புரிவதில்லை. புத்தர் இந்தத் தத்துவத்தின் அறநெறிப் பகுதியையும், சங்கரர் அறிவுப் பகுதியையும் வற்புறுத்தினார்கள். சங்கரர் அத்வைதத்தின் அற்புதமான, கோர்வையான முறையை நன்கு ஆராய்ந்து, அறிவுபூர்வமாக மாற்றி மக்களுக்குக் கொடுத்தார்.

ஐரோப்பாவில் இன்று உலோகாயதம்தான் வழக்கில் இருக்கிறது. தற்காலத்தில் மத நம்பிக்கை இல்லாதவர்களுக்கு, ஆன்ம சிந்தனை வருவதற்காக நாம் பிரார்த்தனை செய்யலாம். ஆனால் இதையெல்லாம் பொருட்படுத்தாமல், அறிவுக்கு ஏற்புடைய காரணத்தை அவர்கள் கேட்கிறார்கள். ஐரோப்பாவின் ஆன்மீக விழிப்பிற்கு அறிவுபூர்வமான ஒரு மதம்தான் தேவை. இரண்டற்ற ஒன்றேயான நிர்க்குண பிரம்மக் கருத்தைப் போதிக்கும் அத்வைதம் ஒன்றுதான், அறிவுபூர்வமாகச் சிந்திக்கும் மக்களுக்குத் திருப்தி அளிக்கக்கூடியதாக இருக்கிறது. தர்மம் மறைந்தது போலாகி, அதர்மம் தலைதூக்குவதுபோல்

தோன்றும்போதெல்லாம் அத்வைதம் வருகிறது. அதனால் தான் அது ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் வேர் பிடித்திருக்கிறது.

இந்த அத்வைதத் தத்துவத்தைப்பற்றி நான் இன்னும் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். பழைய உபநிடதங்கள் நுண்மை செறிந்த கவிதைகளாக உள்ளன. அவற்றை இயற்றிய வர்கள் கவிஞர்களே. 'கவிதை வாயிலாக மக்களுக்கு அருளுணர்வு (Inspiration) உண்டாகிறது' என்கிறார் பிளேட்டோ. ஆகவே உண்மையை உணர்ந்தவர்களாகிய பழங்கால ரிஷிகள் சாதாரண மனித நிலையிலிருந்து உயர்நிலைக்குச் சென்று, இந்த உன்னதமான உண்மைகளைக் கவிதை வடிவமாக எடுத்துக் காட்டினார்கள் என்று தோன்கிறது. அவர்கள் போதிக்கவோ தத்துவம் பேசவோ எழுதவோ இல்லை. அவர்கள் இதயத் திலிருந்து இசை எழுந்தது.

புத்தரிடம் உலகத்தையே தழுவக்கூடிய இதயத்தையும் எல்லையற்ற பொறுமையையும் காண்கிறோம். மதத்தைச் செயல் முறைப்படுத்தி வீடுதோறும் கொண்டு சென்றவர் அவர். சங்கர ரிடம் மகத்தான அறிவுத்திறனைக் காண்கிறோம். எல்லாவற்றை யும் பகுத்தறிவு என்னும் தீவிர ஒளியினால் அவர் ஆராய்ந்தார். சங்கரரின் அத்தகைய அறிவுப் பேரொளியும், புத்தரின் அன்பும் கருணையும் நிறைந்து பொங்குகின்ற எல்லையற்றுப் பரந்த அந்த அற்புதமான இதயமும் இணைந்த நிலையே இன்று நமக்குத் தேவைப்படுகிறது. இந்த இணைப்பு நமக்கு மிக உயர்ந்த தத்துவத்தைக் கொடுக்கும். விஞ்ஞானமும் மதமும் அப்போது நட்புறவு கொள்ளும். கவிதையும் தத்துவமும் நண்பர் களாகிவிடும். எதிர்கால மதம் இப்படித்தான் இருக்க வேண்டும். அதற்கு மட்டும் நம்மால் ஓர் உருவம் கொடுக்க முடியுமானால் அது எக்காலத்திலும் எல்லா மக்களும் ஒப்புக் கொள்ளும் படியாகத்தான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இந்த ஒரு வழியில்தான் விஞ்ஞானமும் மதத்தை ஒப்புக்கொள்ளும். ஏனென்றால் விஞ்ஞானமும் ஏறக்குறைய அந்த நிலைக்கு இப்போது வந்துவிட்டது.

எல்லா பொருட்களும் ஒரே சக்தியின் வெளிப்பாடுகளே என்று விஞ்ஞானிகள் சொல்லும்போது, அது உங்களுக்கு உபநிடதங்கள் கூறும் கடவுளை நினைவுபடுத்தவில்லையா?— 'பிரபஞ்சத்திற்குள் நுழையும் ஒரே நெருப்பு, பல உருவங்களாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதைப்போல், பரம்பொருள்

ஒவ்வோர் ஆன்மாவின் மூலமாகவும் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதோடு, இன்னும் எல்லையற்றமடங்கு உயர்ந்த நிலையிலும் இருக்கிறார்'[1] என்று உபநிடதங்கள் கூறுகின்றனவே! விஞ்ஞானம் எந்தப் பக்கம் சாய்ந்து வருகிறது என்று உங்களுக்குப் புரியவில்லையா?

இந்துக்கள் மன ஆராய்ச்சியின்மூலமும் தத்துவ ஆராய்ச்சியின்மூலமும் நியாயபூர்வமான ஆராய்ச்சிமூலமும் முன்னேறினார்கள். ஐரோப்பியர்கள் புற இயற்கையிலிருந்து தொடங்கினார்கள். இப்போது அவர்களும் அதே முடிவுகளுக்குத்தான் வந்து கொண்டிருக்கிறார்கள்.

மனத்தின்மூலம் தேடும்போது, ஒன்றேயான, பிரபஞ்சப் பொருளான எல்லாவற்றிற்கும் உட்பொருளான, மெய்ப்பொருளான, எப்போதும் சுதந்திரமான, நிலையான ஆனந்த வடிவான, என்றென்றும் இருப்பதான அந்தப் பரம்பொருளை இறுதியில் நாம் அடைகிறோம். விஞ்ஞானத்தின் மூலமும் நாம் அதே ஒருமை நிலைக்குத்தான் வருகிறோம். எல்லா பொருட்களும், இருப்பவை அனைத்தின் ஒட்டுமொத்தமான ஒரு சக்தியின் வெளிப்பாடுகள்தான் என்று விஞ்ஞானம் கூறுகிறது.

மனிதர்கள் கட்டுப்பாட்டிற்குள் இருக்க விரும்பவில்லை, சுதந்திரமே அவர்களது நாட்டமாக இருக்கிறது. மனிதன் ஏன் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்? ஏனென்றால் ஒழுக்கம் தான் சுதந்திரத்திற்கு வழி; ஒழுக்கமின்மை பந்தத்தையே ஏற்படுத்துகிறது.

அத்வைதத் தத்துவத்தின் மற்றொரு சிறப்பான அம்சம் என்னவென்றால், இதில் ஆரம்பத்திலிருந்தே அழிவுபூர்வமான எதுவும் இல்லை என்பதுதான். 'அறியாமை காரணமாகத் தாழ்ந்த வழிபாட்டு முறைகளைப் பின்பற்றுபவர்கள் உட்பட யாருடைய நம்பிக்கையையும் குலைக்காதீர்கள்'[2] என்று தைரியமாகப் போதித்திருப்பது அத்வைதத்தின் மற்றொரு தனிப் பெருமையாகும். யாரையும் தொந்தரவு செய்யாதீர்கள்.

---

1. அக்னிர்யதைகோ புவனம் ப்ரவிஷ்டோ
ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ ।
ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா
ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பஹிச்ச ॥

—கட உபநிடதம், 2. 2. 9

2. ஒப்பிடுக:
ந புத்திபேதம் ஜனயேதஜ்ஞானாம் கர்ம ஸங்கினாம் ॥

—கீதை, 3. 26

மனிதகுலம் முழுவதுமே மேலும்மேலும் முன்னேறுவதற்கு உதவுங்கள் என்றுதான் அத்வைதம் கூறுகிறது. இந்தத் தத்துவம், முழுமையான, ஒட்டுமொத்தமான ஒரு கடவுளைப் போதிக்கிறது. எல்லோருக்கும் ஏற்புடையதான உலக மதம் ஒன்றை நீங்கள் உருவாக்க விரும்பினால் அதில் வெறும் மதப் பிரிவுகள் மட்டும் இருந்தால் போதாது. அதன் ஒட்டுமொத்தமாக அது இருக்க வேண்டும். மேலும், மத உணர்வின் வளர்ச்சியினுடைய எல்லா நிலைகளும் அதில் அடங்கியிருக்க வேண்டும்.

அத்வைதத்தைத் தவிர வேறு எந்த நெறியிலும் இந்தக் கருத்து தெளிவாக இல்லை. பிற நெறிகள் வெறும் அம்சங்கள் மட்டுமே. அவை ஒவ்வொன்றும் முழுமையை அடையத்தான் போராடிக் கொண்டிருக்கின்றன. அம்சம் என்ற ஒன்று இருப்பதே அது முழுமை பெறப் போராடுவதற்காகத்தான். ஆகவே இந்தியாவில் பழக்கத்தில் இருந்துவரும் பலவகையான மதப் பிரிவுகள் எதனிடமும் முதலிலிருந்தே அத்வைதத்திற்குப் பகைமை இல்லை.

இன்று இந்தியாவில் துவைதிகள் இருக்கிறார்கள். அவர்களின் தொகைதான் மிகவும் அதிகம். குறைந்த அளவு கல்வி பெற்ற மனங்களுக்கு அது ஏற்புடையதாக இருக்கிறது. பிரபஞ்சத்தைப்பற்றிய மிகவும் எளிதான, இயல்பான, பாமர மக்களுக்குச் சுலபமாகப்புரியும்படியான விளக்கமாக துவைதம் உள்ளது. ஆனால் அத்வைதத்திற்குத் துவைதிகளோடு எந்தச் சண்டையும்இல்லை.

கடவுள், பிரபஞ்சத்திற்கு வெளியே சொர்க்கத்தில் எங்கேயோ இருக்கிறார் என்று துவைதம் சொல்கிறது. நம்முடைய ஆன்மாதான் கடவுள் என்றும், அவர் நமக்கு வெளியே இருக்கிறார் என்று சொல்வது தெய்வநிந்தை என்றும் அத்வைதம் கூறுகிறது. கடவுள் தனி, நாம் தனி என்ற வாதம் அத்வைதிக்குப் பயங்கரமானதாக இருக்கிறது. அவர் நமக்கு நெருங்கியவற்றுள் எல்லாம் நெருங்கியவராக இருக்கிறார். இந்த நெருக்கத்தை விளக்க, 'ஒன்றாயிருப்பது' (Oneness) என்ற வார்த்தையைத் தவிர, வேறு எந்த வார்த்தையும் எந்த மொழியிலும் இல்லை. வேறு எந்தக் கருத்துமே அத்வைதிக்குத் திருப்தி அளிப்பதில்லை.

துவைதி, அத்வைதக் கருத்தைக் கேட்டு அதிர்ச்சி அடைகிறான். அது பெரும் அபசாரம் என்று அவன் நினைக்கிறான். துவைதக் கருத்துக்கள் இருந்தேயாக வேண்டும் என்பதை அத்வைதி அறிந்திருக்கிறான். ஆகவே சரியான

பாதையில் போகும் துவைதியோடு அவனுக்கு எந்தச் சண்டையும் இல்லை.

துவைதியைப் பொறுத்தவரை அவன் பன்மையைப் பார்த்தாக வேண்டும். அவனுடைய அமைப்பு அது, அவனுடைய நிலை அது. அவன் அப்படியே பார்க்கட்டும். துவைதியின் கொள்கைகள் எப்படி இருந்தாலும், தான் அடைய விரும்பும் அதே குறிக்கோளை நோக்கித்தான் அவனும் போய்க் கொண்டிருக்கிறான் என்பது அத்வைதிக்குத் தெரியும். துவைதியோ தன் கருத்திலிருந்து மாறுபடும் மற்ற எல்லா கருத்துக்களும் தவறானவை என்று கருதுகிறான். இந்த இடத்தில் துவைதியிடமிருந்து அத்வைதி வேறுபடுகிறான்.

உலகிலுள்ள துவைதிகள் அனைவரும் இயல்பாகவே சகுணக் கடவுளை நம்புகின்றனர். இந்தக் கடவுள் முற்றிலும் மனிதத் தன்மை கொண்டவராக உள்ளார். மண்ணுலக மன்னரைப்போல் அவர் சிலரை விரும்புகிறார், சிலரை வெறுக்கிறார். தன்னிச்சைப்படி, தனக்குப் பிடித்த மக்கள்மீது, பிடித்த இனத்தின்மீது அருளைப் பொழிகிறார். ஆகவே கடவுளுக்கு வேண்டியவர்கள் இருக்கிறார்கள் என்ற முடிவு, இயல்பாகவே துவைதிக்கு வருகிறது. அந்த வேண்டியவர்களின் பட்டியலில் தானும் சேர அவன் விரும்புகிறான். 'நாங்கள் கடவுளுக்கு மிகவும் வேண்டியவர்கள். நாங்கள் நம்புவதைப்போல் கடவுளை நம்பினால்தான், அவருக்கு வேண்டியவர்களின் பட்டியலில் உங்களால் இடம் பெற முடியும்' என்ற கருத்து, ஏறக்குறைய உலகின் எல்லா மதங்களிலுமே காணப்படுகிறது.

கடவுளின் தயவுக்குப் பாத்திரமாவதற்காக விதிக்கப்பட்ட சிலர் மட்டுமே காப்பாற்றப்படுவார்கள், மற்றவர்கள் எவ்வளவு தீவிரமாக முயன்றாலும் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டார்கள் என்று வற்புறுத்தும் அளவுக்குச் சில துவைதிகள் குறுகிய மனப்பான்மை கொண்டவர்களாக இருக்கிறார்கள். ஏறக்குறைய இத்தகைய கருத்துக்கள் இல்லாத எந்தத் துவைத நெறியையாவது உங்களால் காட்ட முடியுமா? எனவே இயற்கையாகவே துவைத நெறிகள் ஒன்றோடொன்று சண்டை போட்டுத்தான் ஆக வேண்டும்; அதைத்தான் செய்தும் வருகின்றன. சில விசேஷ சலுகைகளைக் காட்டும்போது கல்வியறிவற்றவர்களுக்கு ஒரு கர்வம் வருகிறதே, அந்தக் கர்வத்தை வளர்ப்பதன் மூலம் துவைதிகள் அவர்கள் மனத்தைக் கவர்ந்து விடுகிறார்கள். தங்களுக்குக் கடவுளிடமிருந்து தனிப்பட்ட சலுகைகள்

கிடைப்பதாக நினைக்க துவைதிகள் விரும்புகிறார்கள். தண்டிப் பதற்குத் தயாராகக் கையில் கோலை வைத்துக்கொண்டிருக்கும் ஒரு கடவுள் இல்லாமல் நாம் நன்னெறியைப் பின்பற்ற முடியாது என்பது அவர்களின் கருத்து.

சிந்தனைத் திறனற்ற மக்கள் பொதுவாக துவைதிகளாகத் தான் இருக்கிறார்கள். பாவம், அவர்கள் பல்லாயிரம் வருடங் களாக ஒவ்வொரு நாட்டிலும் கொடுமைப்படுத்தப்பட்டு வருகிறார்கள். ஆகவே தண்டனைப் பயத்திலிருந்து விடுதலை பெறுவதுதான் மோட்சம் என்பது அவர்களின் கருத்தாக இருக்கிறது. அமெரிக்காவில் ஒரு பாதிரி என்னிடம், 'என்ன! உங்கள் மதத்தில் சாத்தான் இல்லையா? அது எப்படி முடியும்?' என்று கேட்டார்.

உலகில் பிறந்த மேலான, மகோன்னதமான மனிதர்கள் எல்லோருமே அந்த உயர்ந்த, நிர்க்குணக் கருத்தின் பின்னணி யிலேயே செயல்பட்டிருக்கிறார்கள். 'நானும் என் பரமபிதாவும் ஒருவரே' என்று கூறியவரின் சக்தி பல கோடி மக்களிடம் புகுந்திருக்கிறது. அந்தச் சக்தி பல்லாயிரக் கணக்கான வருடங் களாக உலக நன்மைக்காகச் செயல்பட்டு வந்திருக்கிறது. அதே மனிதர், அத்வைதியாக இருந்ததால்தான் மற்றவர்களிடம் கருணை கொண்டவராக இருந்தார். சகுணக் கடவுளைத் தவிர வேறு உயர்ந்த கருத்தைப்பற்றி நினைக்கவே முடியாத மக்களுக்கு, 'பரமண்டலத்திலுள்ள பரமபிதாவிடம் பிரார்த் தனை செய்யுங்கள்' என்று அவர் உபதேசம் செய்தார். சற்று உயர்ந்த கருத்தைப் புரிந்துகொள்ளும் திறமை உள்ளவர்களுக்கு, 'கொடி நானே, கிளைகள் நீங்கள்' என்று கூறினார். தமது அந்தரங்கச் சீடர்களுக்குத் தம்மை முழுமையாக வெளிப் படுத்தி, 'நானும் என் பரமபிதாவும் ஒருவரே' என்ற மிக உயர்ந்த உண்மையைத் தெரிவித்தார்.

துவைதிகளின் தெய்வங்களைத் துளியும் லட்சியம் செய் யாதவர் புத்தர். நாத்திகர், உலோகாயதவாதி என்றெல்லாம் அவர் அழைக்கப்பட்டார். ஆனால் அவர் ஓர் ஆட்டிற்காகத் தம்மையே தியாகம் செய்யத் தயாராக இருந்தார். இதுவரை எந்த நாடும் போதித்துள்ளதில் மிக உயர்ந்த அறநெறிக் கருத்துக் களை அவர் போதித்தார். அறநெறி எங்கிருந்தாலும் அது புத்தர் என்னும் சூரியனிலிருந்து வந்த ஓர் ஒளிக் கிரணம்தான்.

மனித வரலாற்றிலேயே இப்பொழுதுதான் அறிவு வளர்ச்சி, நூறு வருடங்களுக்கு முன் கனவுகூடக் கண்டிருக்க

முடியாத அளவுக்கு இருக்கிறது. ஐம்பது வருடங்களுக்குமுன் கனவுகூடக் கண்டிடுக்க முடியாத அளவுக்கு விஞ்ஞான அறிவு இன்று வளர்ந்திருக்கிறது. இந்த வேளையில் உலகின் பரந்த இதயங்களைக் குறுகிய எல்லைக்குள் அடைத்து வைத்திருப்பது முடியாத காரியம். மனிதர்களைக் குறுகிய எல்லைக்குள் அடைக்க முயல்வதால் அவர்களை மிருகங்களாக்கி, சிந்திக்கும் திறனற்றவர்களாக்கி இழிவுபடுத்துகிறீர்கள். அவர்களின் அற வாழ்வை அழிக்கிறீர்கள்.

எல்லையற்ற அன்புகொண்ட மிகவுயர்ந்த இதயமும், எல்லையற்ற அறிவுப் பிரகாசமும் இணைந்த சேர்க்கையே இன்று தேவையாக இருக்கிறது. எல்லையற்ற இருப்பு, எல்லை யற்ற அறிவு, எல்லையற்ற ஆனந்தம்—இந்த மூன்றைத் தவிர வேறு எதையும், கடவுளைப்பற்றியதாக ஒரு வேதாந்தி கூறுவதில்லை. இந்த மூன்றையும் ஒன்றாகவே அவன் கருது கிறான். அறிவும் அன்புமற்ற இருப்பு இருக்க முடியாது. அறிவும் அன்பும், ஒன்றில்லாமல் மற்றொன்று இருக்க முடியாது. எல்லை யற்ற இருப்பு, எல்லையற்ற அறிவு மற்றும் எல்லையற்ற ஆனந்தத் தின் சேர்க்கையே இன்று நமக்கு வேண்டுவது. அதுதான் நமது லட்சியம். நமக்கு வேண்டுவது இவற்றின் இணைந்த சீரான வளர்ச்சியே தவிர ஒருபக்க வளர்ச்சியல்ல.

சங்கரரின் அறிவும் புத்தரின் இதயமும் இணைந்த உன்னத நிலையைப் பெறுவது சாத்தியம்தான். நாம் எல்லோருமே அந்த உயர்ந்த நிலையை அடைவதற்குப் பாடுபடுவோம் என்று நான் நம்புகிறேன்.

## 13. வேதாந்தமும் தனிச்சலுகையும்

11/12 டிசம்பர் 1896

அத்வைதத்தின் தத்துவப் பகுதியை ஏறக்குறைய பார்த்து விட்டோம். ஆனால் ஒரு விஷயம், ஒருவேளை புரிந்துகொள் வதற்கு மிகக் கடினமான பகுதி மட்டும் இன்னும் இருக்கிறது. அத்வைதத்தின்படி, நாம் நம்மைச் சுற்றிக் காணும் எல்லாம், உண்மையில், பிரபஞ்சம் முழுவதுமே ஒன்றேயான அறுதிப் பரம்பொருளின் பரிணாமமே என்பதை நாம் பார்த் தோம். அந்தப் பரம்பொருளே சம்ஸ்கிருதத்தில் பிரம்மம் என்று கூறப்படுகிறது. அதுவே இந்தப் பிரபஞ்சமாக மாறி யிருக்கிறது.

இங்கு ஒரு கேள்வி எழுகிறது: குறைவற்ற, மாறாத ஒன்று எப்படி மாற முடியும்? எது அதை மாறச் செய்தது? மாறாதது அதன் இயல்பாயிற்றே! மாற்றமே இல்லாத ஒன்று மாறியது என்று கூறுவது முரண்பாடல்லவா? சகுணக் கடவுளை நம்புப வர்களுக்கும் இதே பிரச்சினை எழுகிறது. எடுத்துக்காட்டாக, இந்தப் படைப்பு எவ்வாறு ஏற்பட்டது? சூன்யத்திலிருந்து ஏற் பட்டிருக்க முடியாது, அது முரண்பாடு. ஒன்றும் இல்லாத திலிருந்து ஒரு பொருள் தோன்ற முடியாது. காரியம் என்பது காரணத்தின் மறு உருவம். விதையிலிருந்து பெரிய மரம் உண் டாகிறது. விதையுடன் தண்ணீரும் காற்றும் சேர்ந்த கலவைதான் மரம். வளர்கின்ற மரம் எவ்வளவு காற்றையும் தண்ணீரையும் உட்கொண்டிருக்கிறது என்பதை அளக்க ஏதாவது வழி இருக்கு மானால், அது காரியம் அல்லது விளைவுக்கு, அதாவது மரத் திற்குச் சமமாக இருப்பதைக் காண முடியும். காரியம் என்பது காரணத்தின் மறு வடிவம் என்பதைத் தற்கால விஞ்ஞானம் நன்றாக விளக்கியுள்ளது. காரணத்தின் பாகங்களினுடைய சேர்க்கைநிலை மாறுவதால் அது காரியமாகிறது. எனவே காரணம் இல்லாமல் இந்தப் பிரபஞ்சம் தோன்றியது என்னும் பிரச்சினைக்கு இடம் தராமல் இருக்க வேண்டுமானால் இறைவனே பிரபஞ்சமாக மாறினார் என்பதை நாம் ஒப்புக் கொண்டாக வேண்டும்.

இங்கே நாம் ஒரு பிரச்சினையை விலக்கும் முயற்சியில் இன்னொன்றில் மாட்டிக் கொண்டோம். எந்தக் கொள்கையிலும் சரி, மாறுதலின்மை என்ற அடிப்படையிலேயே கடவுள்-கருத்து எழுகிறது. இறைவனைத் தேடும் முயற்சிக்கு ஒரே அடிப்படைக் கருத்து சுதந்திரம் என்பதுதான். இதனை நாம் வரலாற்று ரீதியாகவே ஆராய்ந்து கண்டோம். பண்படாத ஆரம்பநிலையிலுள்ள மதங்களில்கூட சுதந்திரம்தான் நோக்கமாக இருந்ததைக் காண்கிறோம். சுதந்திரம் என்பதும் மாறுதலின்மை என்பதும் ஒன்றே. சுதந்திரமானது ஒருபோதும் மாறுவதில்லை; மாறாதது, சுதந்திரத்தை இழப்பதில்லை. சூழ்நிலைகளைவிட ஆற்றல் மிக்கதும், உள்ளே அல்லது வெளியே உள்ளதுமான ஒன்றினாலேயே மாற்றம் என்பது ஏற்படுகிறது. மாறக்கூடிய பொருள் ஒவ்வொன்றும், சில அல்லது பல காரணங்களுக்குக் கட்டுப்பட்டே இருக்கிறது. இந்தக் காரணங்களும் மாறாத தன்மை உள்ளவை அல்ல. இறைவன் பிரபஞ்சம் ஆகிவிட்டார் என்பதை ஒப்புக்கொண்டால் 'அவர் மாறிவிட்டார், இங்கே இருக்கிறார்' என்பதே அதன் பொருள். எல்லையற்ற ஒன்று எல்லையுள்ள பிரபஞ்சமாக மாறிவிட்டது என்றால், பிரபஞ்ச அளவுக்கு அதன் எல்லையற்ற தன்மை குறைந்து விட்டது என்றாகிறது. அதாவது, இப்போது அந்தப் பொருள் குறையுடைய பொருள் ஆகிவிட்டது. மாறும் கடவுளை எப்படிக் கடவுள் என்று கூற முடியும்?

இறைவனே பிரபஞ்சம் என்ற இந்தக் கொள்கையைத் (Pantheism) தவிர்ப்பதற்காக வேதாந்தம் மிகவும் துணிச்சலாக ஒரு கொள்கையைச் சொல்கிறது: நாம் அறிகின்ற இந்தப் பிரபஞ்சம், நாம் நினைப்பது போன்ற ஒரு பிரபஞ்சம் அல்ல, மாறாத பொருள் மாறவில்லை. இந்தப் பிரபஞ்சம் வெறும் தோற்றமே, உண்மையில்லை. பகுதிகள், பிரிவுகள், வேறுபாடுகள் எல்லாம் வெறும் தோற்றம் மட்டுமே; உள்ளது உள்ளபடி அல்ல. கடவுள் மாறவே இல்லை. இந்தப் பிரபஞ்சமாக ஆகவே இல்லை. காலம், இடம், காரணகாரியம் இவற்றின் மூலம் பார்க்க வேண்டியிருப்பதாலேயே நாம் அவரைப் பிரபஞ்சமாகக் காண்கிறோம். இந்தக் காலம், இடம், காரண காரியங்கள்தான் வேறுபாடுகளைத் தோன்றச் செய்கின்றன. இது வெறும் தோற்றமே தவிர உண்மையில்லை. இது உண்மையிலேயே துணிச்சலான கொள்கைதான். இதனை இன்னும் சிறிது விளக்க வேண்டுவது அவசியம்.

பொதுவாக நாம் கருத்தில் கொண்டிருக்கும் லட்சிய வாதம் (Idealism) என்பதல்ல இது. இந்தப் பிரபஞ்சம் இல்லவே இல்லை என்று அது சொல்லவில்லை. பிரபஞ்சம் இருக்கிறது, ஆனால் அது நாம் நினைப்பதுபோல் இல்லை. இதை விளக்க அத்வைதம் நாம் அறிந்த உதாரணம் ஒன்றைக் காட்டுகிறது. இருளடர்ந்த இரவில் நிற்கின்ற ஒரு மரம் மூடநம்பிக்கை நிறைந்த ஒருவன் கண்ணுக்குப் பேயாகவும், திருடனின் கண் ணுக்குப் போலீசாகவும், நண்பனை எதிர்பார்க்கும் ஒருவனுக்கு நண்பனாகவும் தோன்றுகிறது. இந்த நிகழ்ச்சிகள் எதிலும் மரத்தில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. ஆனால் பார்ப்பவர் கண்களுக்கு மாறுதல் தெரிகிறது. இந்த மாறுதல்கள், பார்ப்பவர்கள் மனத்தில் உள்ளவையே ஆகும்.

பார்ப்பவர்களின் மனநிலையிலிருந்து, மன தத்துவ இயல் பின் உதவியால் இதனை நாம் நன்றாக அறிந்துகொள்ளலாம். நமக்குத் தெரியாத, தெரிந்துகொள்ளவும் முடியாத ஒன்று நமக்கு வெளியில் உள்ளது. அதை அ என்று வைத்துக்கொள் வோம். நமக்கு உள்ளேயும் ஒன்று இருக்கிறது, அதுவும் நமக்குத் தெரியாது; தெரிந்துகொள்ளவும் முடியாது. அதை இ என்று கொள்வோம். எனவே நமக்குத் தெரியும் காட்சி அ+இ. நமக்குத் தெரிகின்ற ஒவ்வொரு பொருளும் இரண்டு பகுதிகளால் ஆனது: வெளிப்பகுதியான அ வும் உட்பகுதியான இ யும். அ+இ தான் நாம் அறிகின்ற பொருள். எனவே பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு பொருளினுடையவும் ஒரு பகுதி நமது படைப்பு, ஒரு பகுதி வெளியே உள்ள ஏதோ ஒன்று. வேதாந்தம் இந்த அ, இ இரண்டும் ஒன்றே என்று சொல்கிறது.

மேலை நாட்டுத் தத்துவ அறிஞர்கள், குறிப்பாக ஹெர் பர்ட் ஸ்பென்சரும் பிற தற்காலத் தத்துவ அறிஞர்களும் இது போன்ற ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். மலரில் விளங்கும் அதே சக்திதான் என் உள்ளத்திலும் நிறைந்திருக்கிறது என் கிறார்கள். இதே கருத்தைத்தான் வேதாந்திகளும் விவரிக்க விரும்புகிறார்கள். அதாவது, புறவுலகிற்கு ஆதாரமான உண்மை யும், அகவுலகிற்கு ஆதாரமான உண்மையும் ஒன்றேதான். அகம், புறம் என்பவைகூட வேறுபாட்டளவில்தான் இருக்கிறதே தவிர, அந்தப் பொருட்களில் இல்லை. உதாரணமாக நமக்கு ஆறாவது புலன் ஒன்று ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். அப்போது உலகம் முழுவதுமே நமக்கு மாறிவிடும். அதாவது மாற்றம் என்பது பொருளில் இல்லை, பார்ப்பவனின் காரணமாகவே

பொருள் மாறுகிறது என்பது தெளிவாகிறது. நான் மாறினால் புறவுலகமும் மாறுகிறது.

எனவே வேதாந்தக் கொள்கையின் முடிவு இதுதான்: நீங்கள், நான், பிரபஞ்சப்பொருட்கள் எல்லாம் அந்தப் பரம் பொருளேதான்; அதன் பகுதிகள் அல்ல, முழுமையே ஆகும். நீங்கள் அந்தப் பரம்பொருளின் முழுமையே. இப்படியேதான் எல்லாரும், எல்லாமும். ஏனெனில் பகுதி என்ற கருத்து இங்கு எழ முடியாது. இந்த வேறுபாடுகள், இந்த எல்லைகள் எல்லாம் வெறும் தோற்றத்தில்தான்; பொருளில் இல்லை. நான் குற்றங் குறையற்ற முழுப்பொருள்; நான் ஒருபோதும் எதனாலும் கட்டுப்படவில்லை என்று மிகுந்த துணிவுடன் வேதாந்தம் முழங்குகின்றது. கட்டுப்பட்டவன் என்று உங்களை நீங்கள் எண்ணினால் நீங்கள் கட்டுப்பட்டேதான் இருப்பீர்கள். சுதந்திரர்கள் என்று எண்ணினால் முக்தராக இருப்பீர்கள். இவ்வாறு இந்தத் தத்துவத்தின் நோக்கமும் முடிவும் இதுதான்; நாம் என்றும் சுதந்திரர்களே, என்றும் அவ்வாறேதான் இருப் போம், நாம் மாறுவதில்லை, அழிவதும் இல்லை, என்றும் பிறப்பதும் இல்லை—இதை உணர்த்துவதுதான். அப்படி யானால் இந்த மாறுதல்கள் எல்லாம் என்ன? தோன்றும் இந்தப் பிரபஞ்சம் என்னவாகிறது? இடம், காலம், காரண காரியங்கள் என்ற எல்லைகளுக்குக் கட்டுப்பட்ட இந்த உலகம் வெறும் தோற்றம் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. இயற்கை யின் பரிணாமமே, பரம்பொருளின் வெளிப்பாடே இந்தப் பிரபஞ்சம். இந்தக் கருத்து சம்ஸ்கிருத மொழியில் விவர்த்த வாதம் எனப்படுகிறது. பரம்பொருள் மாறுவதில்லை; மறுபடி யும் பரிணமிப்பதில்லை. அமீபாவிலும் பரிபூரணமான எல்லை யற்ற தன்மை மறைந்து நிற்கிறது. அமீபா என்ற உறையின் காரணமாகவே அதை அமீபா என்கிறோம். அமீபா இந்த மனிதனாகப் பரிணமிக்கும்வரை ஏற்படும் மாறுதல்கள் எல்லாம் உள்ளேயிருக்கும் பொருளின் மாறுபாடுகள் அல்ல. அது மாறாமல் அப்படியேதான் இருக்கிறது. மாறுதல் உறையில் மட்டுமே.

இங்கே ஒரு திரை இருக்கிறது. அழகிய காட்சி ஒன்று வெளியே இருக்கிறது. திரையில் உள்ள ஒரு சிறு துவாரம் வழியாக மட்டுமே நாம் அந்தக் காட்சியைச் சிறிதளவு காண இயலும். இந்தத் துவாரத்தின் அளவு பெரிதாகிக் கொண்டே போவதாக வைத்துக்கொள்வோம். காட்சியின் அளவும்

பெரிதாகிச் செல்லும். திரையே மறைந்துபோகும் நிலை வரும்போது காட்சி முழுவதுமே நம் கண்முன் வருகிறது. வெளியே உள்ள காட்சிதான் ஆன்மா. அதற்கும் நமக்கும் இடையே உள்ள திரைதான் மாயை, அதாவது காலம், இடம், காரணகாரியம். இந்தத் திரையில் எங்கோ உள்ள ஒரு சிறு துவாரம் வழியே நாம் அந்தக் காட்சியின் ஒரு சிறு அளவை மட்டும் பார்க்க முடிகிறது. துவாரம் பெரிதாக ஆக, காட்சியில் நமக்குத் தெரியும் அளவும் மிகுதியாகிக்கொண்டே வருகிறது; திரையே மறைந்துவிட்டால் நாமே ஆன்மா என்னும் உண்மை விளங்குகிறது. எனவே பிரபஞ்சத்தில் ஏற்படும் மாறுதல்கள் பரம்பொருளில் ஏற்படுபவை அல்ல; அவை இயற்கையில் ஏற்படுபவை. பரம்பொருள் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் வரை இயற்கை பரிணமித்துக்கொண்டே போகிறது.

எல்லோரிடமும் பரம்பொருள் இருக்கிறார். அவர் சிலரிடம் அதிகமாகவும் சிலரிடம் குறைவாகவும் வெளிப்படு கிறார். பிரபஞ்சம் முழுவதுமே உண்மையில் ஒன்றுதான். ஆன்மாவைப் பற்றிப் பேசும்போது ஒன்று மற்றொன்றைவிட உயர்ந்தது என்று சொல்வதற்குப் பொருளே இல்லை. ஆன்மாவைப்பற்றிப் பேசும்போது மனிதன் மிருகங்களைவிட உயர்ந்தவன், தாவரங்களைவிட உயர்ந்தவன் என்று சொல்வதில் பொருளே இல்லை. பிரபஞ்சம் முழுவதும் ஒன்றுதான். தாவரங்களில் ஆன்ம விளக்கத்திற்குத் தடை அதிகமாயிருக் கிறது; மிருகங்களில் சற்றுக் குறைவாக இருக்கிறது; மனிதனில் இன்னும் குறைவாக இருக்கிறது; பண்பட்ட ஆன்மீக மனிதர் களிடம் இன்னும் குறைவாக இருக்கிறது; நிறைமனிதனிடம் தடையே இல்லை. நமது போராட்டங்கள், முயற்சிகள், துன் பங்கள், இன்பங்கள், கண்ணீர், புன்முறுவல் எல்லாமே, நமது எண்ணம், செயல் எல்லாமே அந்த ஒரு லட்சியத்தையே குறிக் கோளாகக் கொண்டுள்ளன. தோற்றத்திற்கும் உண்மைக்கும் இடையே நின்று மறைக்கும் திரையின் துவாரத்தைப் பெரிதாக்கு வதற்கும், திரைகளின் கனத்தைக் குறைத்துத் திரையை அழிப் பதற்கும்—இந்த லட்சியத்தை அடைவதற்காகவே உள்ளன.

எனவே நமது வேலை ஆன்மாவைச் சுதந்திரமுறச் செய்வது அல்ல; தளைகளை ஒழிப்பதுதான். சூரியனை மேகக் கூட்டங் கள் மறைக்கின்றன. ஆனால் அவற்றால் சூரியன் பாதிக்கப்படு வதில்லை. காற்றின் வேலை இந்த மேகங்களை விலக்குவது தான். மேகம் விலகும் அளவுக்குச் சூரியனின் ஒளி அதிகமாக

வெளிப்படுகிறது. குறைவும் அழிவும் அற்ற நிறைவாகிய உண்மை-அறிவு-இன்ப வடிவாகிய ஆன்மாவிற்கு ஒரு மாறுதலும் நேர்வதே இல்லை. அதற்குப் பிறப்போ இறப்போ கிடையாது. சாவது, பிறப்பது, மறுபிறவி எடுப்பது, சொர்க்கத் திற்குப் போவது ஆகிய இவையெல்லாம் ஆன்மாவுக்கு அல்ல. இவை பல்வேறு தோற்றங்கள், பல்வேறு பொய்த் தோற்றங்கள், பல்வேறு கனவுகள்.

இந்தப் பிரபஞ்சத்தைப்பற்றிக் கனவு காணும் ஒருவன், தீய எண்ணங்களையும் தீய செயல்களையும்பற்றிக் கனவு காண்பானானால், சிறிது காலத்திற்குப் பிறகு இந்தக் கனவின் நினைப்பே அடுத்த கனவைத் தூண்டிவிடும். தான் ஒரு பயங் கரமான இடத்தில் இருப்பதாகவும் சித்திரவதை செய்யப்படு வதாகவும் அவன் கனவு காண்பான். நல்ல கருத்துக்களையும் நல்ல செயல்களையும்பற்றிக் கனவு காண்பவன், அந்தக் கனவு முடிந்தவுடன், தான் நல்ல ஓர் இடத்தில் இருப்பதாகக் கனவு காண்பான். இப்படியே ஒரு கனவிலிருந்து இன்னொரு கனவு என்று சென்றுகொண்டே இருக்கிறான். ஆனால் கனவுகள் எல்லாமே மறைந்து போகும் காலம் ஒன்று வரும். பிரபஞ்சம் முழுவதுமே ஒரு கனவுதான் என்று உணரும் நிலை எல்லோ ருக்கும் வந்தே தீரும். அப்போது, சூழ்நிலை அல்லது பிரபஞ்ச அனுபவத்தைவிட ஆன்மாவே ஆயிரம் மடங்கு சிறந்தது என்பது நமக்குத் தெளிவாகும். நாம் சூழ்நிலை என்று அழைக் கிறோமே, அதனுடன் நாம் நடத்தும் போராட்டத்தின் விளை வாக, ஆன்மசக்திக்கு முன்னே சூழ்நிலைகள் என்பவை வெறும் சூன்யம் என்பதை நாம் உணரும் காலம் வருகிறது. எல்லாம் காலத்தைப் பொறுத்தது. ஆனால் எல்லையற்றதன் முன் காலம் என்பது வெறும் சூன்யம், அது கடலில் ஒரு துளி நீர் போன்றது. அதனால் நாம் பொறுமையோடு காத்திருக்கலாம்.

தெரிந்தோ தெரியாமலோ, பிரபஞ்சம் முழுவதும் அந்த லட்சியத்தை நோக்கியே சென்றுகொண்டிருக்கிறது. சந்திரன், மற்ற வானப் பொருட்களின் ஈர்ப்பாற்றலிலிருந்து விடுபட்டு விலகப் போராடிக் கொண்டிருக்கிறது; காலப்போக்கில் ஒரு நாள் அது விடுபட்டே தீரும். உணர்வுபூர்வமாகப் போராடுபவர் கள் விரைவில் விடுபடுவார்கள்.

வேதாந்தக் கருத்தால் நமக்கு நன்றாக விளங்கும் உண்மை ஒன்று உண்டு. அது இதுதான். இந்த நோக்கில் மட்டுமே பிர பஞ்சம்தழுவிய அன்பு என்பது உண்மையான ஒன்றாக ஆக

முடியும். எல்லோரும் அந்த ஒரே முடிவை நோக்கி நம்முடன் பயணம் செய்பவர்களே. மனிதன் மட்டும் அல்ல, மிருகங்கள், தாவரங்கள் அனைத்தும் அதை நோக்கியே செல்கின்றன. நல்ல சகோதரன் மட்டும் அன்றி, கெட்ட சகோதரனும், ஆன்மீக சகோதரனும், பாவியான சகோதரனும், தாவர சகோதரனும், மிருக சகோதரனும் எல்லோரும் ஒரே முடிவை நோக்கித்தான் போகின்றனர். எல்லோரும் ஒரே ஆற்றில்தான் மிதந்து போகின்றனர். ஒவ்வொருவரும் எல்லையற்ற அந்தச் சுதந்திரத்தை நோக்கியே விரைகின்றனர். இந்த ஓட்டத்தை நிறுத்த யாராலும் இயலாது; எவ்வளவு முயன்றாலும் பின்னோக்கிப் போகவும் இயலாது; முன்னோக்கிதான் தள்ளப்படுவர்; முடிவில் சுதந்திரம் அடைந்தே தீருவர். நாம் நமது மையமான சுதந்திரத்திலிருந்து தூக்கியெறியப்பட்டதுபோல் உள்ளோம். படைப்பு என்பது சுதந்திரத்தை மீண்டும் அடைவதற்கான போராட்டமே. நாம் இந்தப் பிரபஞ்சத்தில் இருக்கிறோம் என்ற உண்மையே நாம் அந்த மையத்தை நோக்கிச் சென்று கொண்டிருப்பதைத்தான் காட்டுகிறது. இப்படி நம்மை அந்த லட்சியத்தை நோக்கி இழுக்கும் சக்தியையே அன்பு என்கிறோம்.

இந்தப் பிரபஞ்சம் எதிலிருந்து வருகிறது, எதில் நிலை பெற்றுள்ளது, முடிவில் எங்கே போகிறது—என்று கேட்கப் படுகிறது. அது அன்பிலிருந்து வருகிறது, அன்பில் நிலைபெற் றுள்ளது, முடிவில் அன்புக்கே போகிறது என்பதுதான் பதில். விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், யாரும் பின்னோக்கிப் போக முடியாது என்பது நமக்கு இதனால் தெரிகிறது. பின் னோக்கிப் போக எவ்வளவுதான் முயன்றாலும், ஒவ்வொருவரும் லட்சியத்தை அடைந்தேயாக வேண்டும். நாம் உணர்வுபூர்வமாக முயற்சித்தால் வழி எளிதாக இருக்கும்; இடையில் உள்ள அதிர்ச்சி குறையும்; விரைவாக அங்கே போய்ச் சேர இயலும்.

இதிலிருந்து நாம் இயல்பாக வந்துசேரும் மற்றொரு முடி வும் உள்ளது: எல்லா அறிவும் எல்லா ஆற்றலும் நமக்கு உள்ளேயே இருக்கின்றன; வெளியில் இல்லை என்பதுதான் அது. நாம் இயற்கை என்று சொல்வது முகம்பார்க்கும் கண் ணாடி, அவ்வளவுதான். இயற்கையின் பயன் அது மட்டுமே. எல்லா அறிவும் இந்த இயற்கையாகிய கண்ணாடியில் அகவுணர் வின் பிரதிபலிப்பே. ஆற்றல்கள், இயற்கையின் ரகசியங்கள், இயக்கும் சக்தி என்றெல்லாம் நாம் கூறுகின்ற அனைத்தும் உள்ளேயே இருக்கின்றன. புறவுலகில் இருப்பது எல்லாம்

தொடர் மாறுதல்களே. இயற்கையில் அறிவு எதுவும் இல்லை. எல்லா அறிவும் மனித ஆன்மாவிலிருந்தே வருகிறது. என்றென்றும் அவனுள்ளே இருக்கின்ற அறிவை அவன் வெளிப்படுத்துகிறான்; தனக்குள்ளேயே கண்டறிகிறான். ஒவ்வொருவரும் எல்லையற்ற அறிவின் இருப்பிடம்; அழிவற்ற ஆனந்தத்தின் இருப்பிடம்; அழியாத் தன்மையின் இருப்பிடம். இதிலிருந்து கிடைக்கும் நீதி, சமத்துவம் என்பதுதான். அதை ஏற்கனவே நாம் பார்த்துவிட்டோம்.

தனிச்சலுகைக் கருத்து இருக்கிறதே அது மனித வாழ்வின் சாபம். இரண்டு சக்திகள் தொடர்ந்து வேலை செய்வதுபோல் உள்ளன. ஒன்று ஜாதிகளை உண்டாக்குகிறது, மற்றொன்று ஜாதிகளைத் தகர்க்கிறது. வேறுவிதமாகச் சொன்னால், ஒன்று சலுகைகளுக்குச் சாதகமானது; மற்றொன்று பாதகமானது. ஓர் இனத்தில் இந்தச் சலுகை தகர்க்கப்படும்போதெல்லாம் அந்த இனத்திற்கு அதிக அறிவும் முன்னேற்றமும் ஏற்படுகின்றன. நம்மைச் சுற்றிலும் எங்கும் இந்தப் போராட்டத்தைக் காண்கிறோம்.

எளியவனை வலியவன் நசுக்கும் மிருகத்தனமான சலுகை முதலில் நிற்கிறது. அடுத்தது பணத்தினால் வரும் சலுகை. பணம் அதிகம் உள்ளவன் பணம் குறைந்தவனை அடக்கியாளும் சலுகையை விரும்புகிறான். அடுத்ததாக, இன்னும் நுட்பமான அதிகச் சக்தி வாய்ந்த அறிவுச் சலுகை. சற்று அதிகம் தெரிந்தவன் தெரியாதவனைவிட அதிகச் சலுகையை விரும்புகிறான். கடைசியான, ஆனால் மிகவும் மோசமான, மிகக் கொடூரமான சலுகை ஆன்மீகம் சம்பந்தமானது. ஆன்மாவையோ கடவுளையோபற்றி அதிகம் தெரியும் என்று நினைக்கும் சிலர் பிறரைவிட அதிகச் சலுகையை உரிமை கொண்டாடுகின்றனர்; 'பாமர மக்களே, ஆட்டு மந்தைகளே, நீங்கள் எங்களை வழிபடுங்கள். நாங்கள் தேவதூதர்கள். நீங்கள் எங்களை வணங்கியே ஆக வேண்டும்' என்கின்றனர்.

வேதாந்தியாகவும் இருந்து, அதேவேளையில் மனம் சம்பந்தமான அல்லது பௌதீகரீதியான அல்லது ஆன்மீகரீதியான எந்தவகையான சலுகைகளையும் ஒப்புக்கொள்வதும் ஒருவரால் முடியாது. அனைவரிடமும் உள்ளது ஒரே சக்திதான். ஒருவரில் அது மிகுதியாகவும் இன்னொருவரிடம் குறைவாகவும் வெளிப்படுகிறது. ஆனால் உள்ளே இருக்கும் சக்தி ஒன்றுதான். இதில் சலுகை எங்கிருந்து வந்தது? எல்லா அறிவும் ஆன்மாவில்

உள்ளது. பாமரனின் ஆன்மாவிலும் அது இருக்கவே செய்கிறது. ஒருவேளை அவனுக்குச் சாதகமான வாய்ப்புகள் இருந்திருக்காது, சூழ்நிலை அனுகூலமாக இருந்திருக்காது, அதனால் அவனிடம் அது வெளிப்படவில்லை. சாதகமான வாய்ப்பு வரும்போது அவனும் அதை வெளிப்படுத்தவே செய்வான். ஒருவன் மற்றவனைவிடப் பிறப்பிலேயே உயர்ந் தவன் என்பதற்கு வேதாந்தத்தில் எந்த அர்த்தமும் இல்லை. ஒரு நாடு மற்ற நாட்டைவிட உயர்ந்தது என்பதற்கெல்லாம் வேதாந்தத்தில் இடமே இல்லை. அவற்றை ஒரே சூழ்நிலையில் வையுங்கள்; ஒரேவகையான அறிவு வெளிப்படுகிறதா இல்லையா என்பதைப் பாருங்கள். இப்படிச் சோதித்து அறியு முன் ஒரு நாடு மற்ற நாட்டைவிட உயர்ந்தது என்று சொல்லும் உரிமை நமக்கு இல்லை.

ஆன்மீக விஷயத்தில் எந்தத் தனிச்சலுகை கொண்டாட வும் இடமே இல்லை. மனிதகுலத்திற்குச் சேவை செய்வதே ஒரு சலுகைதான். ஏனெனில் அது இறைவழிபாடு. நம் கண்முன் காணும் எல்லா மனிதர்களிலும் கடவுள் இருக்கிறார். அவரே மனிதர்களின் ஆன்மாவாக விளங்குகிறார். எனவே மனிதன் எப்படி தனிச்சலுகை பாராட்ட முடியும்? இறைவனின் சிறப்புத் தூதர் யாரும் இல்லை; முன்பு இருந்ததும் இல்லை, இனி இருக்கப்போவதும் இல்லை. பெரியதோ சிறியதோ, எல்லாம் கடவுளின் வெளிப்பாடே. வெளிப்பாட்டின் அளவில்தான் வேறுபாடு இருக்கிறது. என்றென்றைக்குமாகக் கொடுக்கப் பட்டுள்ள, அழிவற்ற அதே செய்தி எல்லோரையும் சிறிதுசிறி தாக அடைந்தே தீர்கிறது. இந்த அழிவற்ற செய்தி எல்லா உயிர்களின் இதயத்திலும் பொறிக்கப்பட்டிருக்கிறது. அது அங்கே ஏற்கனவே இருக்கிறது. அதை வெளிப்படுத்தவே எல் லோரும் போராடிக் கொண்டிருக்கின்றனர். தகுந்த வாய்ப்பும் சூழ்நிலையும் உள்ள சிலர் மற்றவர்களைவிடச் சற்று சிறப்பாக வெளிப்படுத்துகின்றனர். ஆனால் அந்தச் செய்தியைத் தாங்கி யவர்கள் என்ற அளவில் எல்லோரும் சமமே. உயர்வு என்னும் உரிமைக்கு இங்கு ஏது இடம்? பாமரன் ஒருவனும் சரி, ஒன்றும் அறியாத சிறு குழந்தையும் சரி, இதுவரை வாழ்ந்த இறைவனின் தூதனைப் போன்ற பெருமை உடையவர்களே; இனி தோன்றப் போகும் தூதர்களைப் போன்ற பெருமை உடையவர்களே. ஏனெனில் அழிவில்லாத இந்தச் செய்தி ஒருபோதும் மங்காத வாறு ஒவ்வொருவர் உள்ளத்திலும் பொறிக்கப்பட்டிருக்கிறது.

யார் எங்கே இருந்தாலும், அங்கே அவர்களின் உள்ளத்தில் எல்லாம், மேலான இறைவனின் இந்தச் செய்தி திகழ்கிறது.

எனவே தனிச் சலுகைகளையெல்லாம் உடைத்தெறிவதே அத்வைதத்தின் பணி. இது மிகக் கடினமான பணி. இதில் வினோதம் என்னவென்றால் இந்தப் பணி மற்ற நாடுகளைவிட, அத்வைதம் பிறந்த நாட்டில்தான் மிகக் குறைவாக நடைபெறுகிறது. தனிச்சலுகைகளுக்கென்றே ஏதாவது நாடு இருக்குமானால், அது அத்வைதம் பிறந்த நாடுதான். அங்கேதான் ஆன்மீகச் சலுகைகளும், பிறப்பு காரணமான சலுகைகளும் மிகுதியாக இருக்கின்றன. ஆனால் பண விஷயத்தில் சலுகை இல்லை. இது நன்மைகளுள் ஒன்று என்று நான் நினைக்கிறேன். ஆனால் பிறப்பு, ஆன்மீகம் பற்றிய சலுகைகள் எங்கும் உள்ளன.

வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்ட நீதிநெறியைப் பரப்ப முன்பொரு முறை பலத்த முயற்சி செய்யப்பட்டது. பல நூற்றாண்டுகள்வரை இதற்குப் பலன் இருந்தது. அந்தக் காலமே அந்த நாட்டின் பொற்காலமாகத் திகழ்ந்ததை வரலாறு காட்டுகிறது. தனிச் சலுகைகளை உடைத்தெறிய பௌத்தர்கள் செய்த முயற்சியையே நான் குறிப்பிடுகிறேன். புத்தரைத் துதிப்பதற்காகப் பயன்பட்ட அழகிய தொடர்களுள் என் நினைவிலுள்ள சிலவற்றைக் கூறுகிறேன்: 'நீ ஜாதிக் கட்டுப்பாடுகளைத் தகர்ப்பவன், தனிச் சலுகைகளை அழிப்பவன், எல்லா உயிர்களும் சமம் என்று போதிப்பவன்.' அவர் உயிர்களின் சமத்துவம் என்ற ஒரு கருத்தை வற்புறுத்தினார். பௌத்த பிட்சுக்கள் இந்தப் போதனையைச் சற்றுத் தவறாகப் புரிந்து கொண்டனர். உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பிரிவினைகளுடன் கூடிய ஒரு சங்கத்தை உருவாக்குவதற்கு இந்தப் போதனைகளைப் பயன்படுத்த அவர்கள் பலமுறை முயன்றார்கள். ஆனால் மக்கள் எல்லோருமே தெய்வங்கள் என்று சொன்னபிறகு அந்தச் சமுதாயத்தில் மத இயக்கம் எதையும் உருவாக்க முடியாது. மத விஷயங்களில் சுதந்திரம் என்பது வேதாந்த போதனையின் நற்பலன்களுள் ஒன்றாகும். பல நூற்றாண்டுகளாகவே இந்தியர்கள் இந்தச் சுதந்திரத்தை அனுபவித்து வருகின்றனர். மதம் காரணமாகக் கொலை மற்றும் கஷ்டங்கள் இல்லாத நாடு அது, அங்கு மத விஷயங்களில் பரிபூரண சுதந்திரம் உள்ளது என்று பெருமையடையலாம்.

அன்றுபோலவே இன்றும் வேதாந்தத்தின் அடிப்படையிலுள்ள நல்லொழுக்க வழிகள் அவசியமாக இருக்கின்றன.

அறிவு வளர்ச்சி காரணமாக சலுகை பற்றிய கொண்டாட்டம் தலைவிரித்தாடுகின்ற இந்தக் காலத்தில் இவற்றின் தேவை அதிகரித்துவிட்டது என்றே சொல்ல வேண்டும். இறைவன்-சாத்தான், ஆஹுராமஸ்தா-அஹ்ரிமான் என்ற கருத்துக்களில் நல்ல கவிதை இருக்கிறது. கடவுளுக்கும் சாத்தானுக்கும் உள்ள வேற்றுமை சுயநலமின்மையும் சுயநலம் உடைமையுமே ஆகும். கடவுளுக்கு இணையான அறிவு சாத்தானுக்கும் உண்டு; கடவுளுக்கு இணையான ஆற்றலும் அவனுக்கு உண்டு. ஆனால் புனிதம் மட்டும் அவனிடம் இல்லை. அதனால்தான் அவன் சாத்தானாக இருக்கிறான். இதே கருத்தை இன்றைய உலகுடன் பொருத்திப் பாருங்கள். மிதமிஞ்சிய அறிவும் வரம்புகடந்த ஆற்றலும் இருந்து புனிதம் மட்டும் இல்லாவிட்டால் மனிதர்கள் சாத்தான்களாகத்தான் ஆவார்கள். எந்திரங்களும் பிறவும் செய்யப்படுவதால் அளவற்ற ஆற்றலை உண்டாக்கிக் கொண்டனர்; அதேவேளையில் உலக வரலாற்றிலேயே காணப்படாத அளவிற்கு இன்று தனிச்சலுகையும் கோரு கின்றனர். அதனால்தான் தனிச் சலுகைக்கு எதிராகப் பிரச்சாரம் செய்ய வேதாந்தம் விரும்புகிறது. மக்களுடைய மனங்களின் மீது ஆட்சிபுரியும் இந்தக் கொடுங்கோன்மையைத் தகர்த்து எறிவதே அதன் நோக்கம்.

கீதையைப் படித்தவர்களுக்கு, பின்காணும் சிறந்த பகுதிகள் நினைவில் இருக்கும்—'அறிவுமிக்க பிராமணனையும் பசுவை யும் யானையையும் நாயையும் சரி, தாழ்ந்த குலத்தவனையும் சரி, யார் சமமாகப் பார்க்கிறானோ அவரே முனிவர்; அவரே ஞானி. இந்தச் சமத்துவத்தில் யாருடைய மனம் திடமாகப் பதிந்திருக்கிறதோ, அவர் இந்தப் பிறவியை வென்ற ஜீவன் முக்தனே. எல்லோருக்கும் இறைவன் ஒருவனே, அவன் தூய்மையே உருவானவன். சம நோக்குடையவர். எனவே, சமநோக்குடன் தூயவர்களாகவும் இருப்பவர்கள் இறைவனில் வாழ்பவர்கள் என்று கூறப்படுகிறார்கள்'.[1] வேதாந்த நீதிநெறி யின் சாரம், எல்லோரும் சமம் என்பதே.

புறவுலகை ஆள்வது அகவுலகம்தான் என்பதை முன்பு கண்டோம். உள்ளம் மாறினால் உலகமும் மாறிவிடும். உங்கள் உள்ளம் தூய்மையானால் உலகமும் தூயதாகியே தீரவேண்டும். இந்த உண்மையை உலகுக்குக் கூற வேண்டிய அவசியம் முன்பு

---

1. கீதை, 5. 18,19.

என்றும் இல்லாத அளவுக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது. நாம் நம்மைச் சுற்றியுள்ளவர்களின் விவகாரங்களில் இப் பொழுது அதிக அக்கறைகொள்ளத் தொடங்கிவிட்டோம்; ஆனால் நம்மைப்பற்றிய விஷயங்களில் நமது கவனம் குறைந்து கொண்டே வருகிறது.

நாம் மாறினால் உலகம் மாறும். நாம் தூயவர்களானால் உலகமும் தூய்மையாகும். மற்றவர்களிடம் நான் ஏன் தீமையைக் காண்கிறேன் என்பதுதான் கேள்வி. நான் தீயவனாக இல்லாமல் பிறரிடம் தீமை காண முடியாது. நான் பலவீனனாக இல்லாமல் துன்பப்பட முடியாது. நான் குழந்தையாக இருக்கும்பொழுது எனக்குத் துன்பம் தந்தவை இப்போது துன்பம் தருவதில்லை. நான் மாறிவிட்டேன், புறப் பொருட்களும் மாறிவிட்டன. வேதாந்தம் இதைத்தான் சொல்கிறது. தீமைகளுக்கும் துன்பங்களுக்கும் காரணம் என்று இன்று நாம் நினைக்கும் பொருட்களெல்லாம் நாம் சமநோக்குப் பெற்ற பிறகு சிரிப்புக்கு உரியவை ஆகிவிடும். இதையே முக்தி, சுதந்திரம் என்று வேதாந்தம் கூறுகிறது. சமத்துவ உணர்வும் சமநோக்கும் நம்மில் மேன்மேலும் மிகும்போது நாம் முக்தியை நெருங்குகிறோம் என்பதற்கான அடையாளம் அது. இன்பத்தையும் துன்பத்தை யும், வெற்றியையும் தோல்வியையும் ஒன்றாகப் பார்க்கும் நிலை முதிரமுதிர, மனம் முக்திநிலையை நெருங்குகிறது என்பது பொருள்.

மனத்தை வெல்வது அவ்வளவு எளிதல்ல. சாதாரணச் சம்பவங்கள் ஆகட்டும், ஆபத்தைப் பற்றிய சிறுதூண்டுதல் ஆகட்டும் அலைஅலையாகக் கிளம்பும் மனம் எத்தகைய குழப்பநிலையில் இருக்க வேண்டும்! மனத்தை இத்தகைய மாறுதல்கள் ஆட்கொள்ளும்போது பொறுமை பற்றியோ, ஆன்மீகம் பற்றியோ பேசி என்ன பயன்? மனத்தின் இந்தச் சமநிலை குலைந்த நிலைமையை மாற்ற வேண்டும். புறச் சக்திகள் இவ்வளவு தாக்கும்போது, புறவுலகம் நம் உள்ளத்தை எவ்வளவு தூரம் பாதிக்க இயலும், அப்போதும் நாம் நம் இயல்பிலேயே காலூன்றி நிற்க முடியுமா என்று நம்மை நாமே ஆராய்ந்து பார்த்துக் கொள்ள வேண்டும். உலகத்தின் எல்லா சக்திகளும் சேர்ந்தாலும் நம்மை நிலைகுலைக்க முடியாத நிலையைச் சாதித்தால்தான் நாம் சுதந்திரம் பெற்றவர் ஆவோம், அதற்கு முன்பு அல்ல. இதுதான் முக்தி அல்லது மோட்சம். இது இங்கேயே இவ்வுலகிலேயே கிடைக்கக் கூடியது,

வேறெங்கும் அல்ல. அது இந்தக் கணத்திலேயே கிடைக்கக் கூடியது.

இந்தச் சமநோக்கு என்ற கருத்திலிருந்து, ஊற்றிலிருந்து தான் பல அழகிய எண்ணங்களாகிய ஆறுகள் உலகில் பாய்ந் திருக்கின்றன. இவற்றுள் பல தவறாகப் புரிந்து கொள்ளப் பட்டிருக்கின்றன; ஒன்றுக்கொன்று முரண்போலவும் தோன்றி யிருக்கின்றன. துணிவுமிக்க வியப்பைத் தருகின்ற மகான்கள் பலரை ஒவ்வொரு நாட்டிலும் நாம் காண்கிறோம். இவர்கள் புறவுலகத் தளைகளை அறுத்து எறிந்துவிட்டுக் காடுகளுக்கும் குகைகளுக்கும் தியானம் செய்யப் போய்விடுகிறார்கள். இது ஒரு கருத்து. மற்றொருபுறம் அறிவும் ஆற்றலும் மிக்க சிலர், சமுதாயத்தில் தோன்றித் தங்கள் சகோதரர்களான ஏழைகளை யும் துன்பப்படுபவர்களையும் நல்ல நிலைக்கு உயர்த்த முயல் வதைக் காண்கிறோம்.

மேற்பார்வைக்கு இந்த இரண்டும் ஒன்றுக்கொன்று முரணானவை போல் தோன்றுகின்றன. தன் சகோதரர்களை விட்டு விலகிக் குகைகளில் வாழ்பவன் தன் சகோதரர்களைச் சீர்திருத்த முயல்பவனைக் கண்டு சிரிக்கிறான். 'இந்த முயற்சி எவ்வளவு முட்டாள்தனமானது! நமக்கு அங்கே என்ன வேலை இருக்கிறது? மாய உலகம் எப்போதும் மாய உலகமாகவேதான் இருக்கும். அதனை மாற்ற இயலாது' என்கிறான் அவன்.

இந்தியாவில் உள்ள ஒரு புரோகிதரிடம், 'வேதாந்தத்தில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?' என்று கேளுங்கள். 'அதுதான் என் மதம்; அதுவே என் உயிர்; நான் எப்படி அதை நம்பாமல் இருக்க முடியும்!' என்று அவர் சொல்வார். 'அப்படியானால் சரி, எல்லா உயிர்களும் சமம், எல்லாம் சமம் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா?' என்று கேட்டால், 'நிச்சயமாக நான் ஒப்புக்கொள்கிறேன்' என்பார். அடுத்தகணமே, தாழ்ந்த குலத்தவன் ஒருவன் தெருவில் எதிர்ப்பட்டுவிட்டால் போதும், ஒரு பக்கமாகத் தாவிக் குதித்து அவனிலிருந்து விலகி ஓடுகிறார். 'ஏன் அப்படி ஓடுகிறீர்கள்?' என்றால், 'அவன் தொட்டால் எனக்குத் தீட்டு வந்துவிடும்' என்பார். 'இப்பொழுதுதானே நாம் எல்லோரும் ஒன்று என்று சொன்னீர்கள்! ஆன்மாக் களுக்குள் வேறுபாடு இல்லை என்பதை ஒப்புக்கொண்டீர்கள்' என்று கேட்டால், 'அதுவா? இல்லறத்தார்களுக்கு அந்தத் தத்துவம் கொள்கை அளவில்தான். நான் காட்டிற்குச் சென்று வாழும்போது எல்லோரையும் சமமாகப் பார்ப்பேன்' என்பார்.

பிறப்பாலும் செல்வத்தாலும் பெரிய மனிதரான ஆங்கிலேயர் ஒருவரைப் பார்த்து, 'கிறிஸ்தவரான நீர், மக்கள் சமுதாயத்தின் சகோதரத்துவத்தையும் எல்லோரும் இறைவனின் மக்களே என்பதையும் நம்புகிறீரா?' என்று கேளுங்கள். 'ஆம்' என்பார். ஆனால் ஐந்து நிமிடங்களுக்குள் சாதாரண மக்களைப்பற்றி இழிவாகப் பேசுவார்.

இவ்வாறு இந்தச் சமத்துவக் கருத்து பல்லாயிரம் ஆண்டுகளாக வெறும் கொள்கையளவில் நின்றிருக்கிறதே தவிர, நடைமுறைக்கு வரவே இல்லை. எல்லோரும் அதைப் புரிந்து கொள்கின்றனர், அது உண்மை என்பதை ஒப்புக்கொள்கின்றனர். ஆனால் அதைப் பின்பற்றச் சொன்னால் மட்டும் அதற்குப் பல லட்சம் ஆண்டுகள் ஆகும் என்கின்றனர்.

அரசன் ஒருவன் இருந்தான். அவனது சபையில் பல அலுவலர்கள் இருந்தார்கள். அவர்களுள் ஒவ்வொருவரும், தானே அரசனிடம் மிகுந்த ஈடுபாடு உள்ளவன் என்றும், அரசனுக்காக உயிரைக்கூட விட ஆயத்தமாக இருப்பதாகவும் சொல்லிவந்தனர். ஒருநாள் அரசவைக்கு ஒரு துறவி வந்தார். அரசன் அவரைப் பார்த்து, 'இத்தனை ஈடுபாடுமிக்க அலுவலர்களைப் பெற்ற அரசன் என்னைப்போல் வேறு யாரும் இருக்க இயலாது' என்றான். துறவி புன்சிரிப்புடன், 'நீ சொல்வதை நான் நம்பவில்லை' என்றார். 'நீங்கள் வேண்டுமானால் அதைச் சோதித்துக்கொள்ளலாம்' என்றான் அரசன்.

ஒரு சிறிய சோதனை வைத்தார் துறவி. அரசனின் ஆயுளும் ஆட்சியும் பல்லாண்டுகள் நீடிப்பதற்காகத் தாம் ஒரு பெரிய வேள்வி செய்யப் போவதாகவும், அதற்குத் தேவையான பாலுக்காக ஓர் அண்டா வைக்கப்படும் என்றும், அதில் ஒரு குடம் பாலை ஒவ்வோர் அலுவலரும் இரவில் ஊற்ற வேண்டும் என்றும் துறவி சொன்னார். அரசன் புன்முறுவலுடன், 'இது தானா சோதனை?' என்று இகழ்ச்சியாகக் கேட்டான்.

பின்னர் அரசன் அலுவலர்களை அழைத்து நடக்கப் போவதைக் கூறியபோது அவர்கள் எல்லோரும் அந்த யோசனைக்குத் தங்கள் மனப்பூர்வமான சம்மதத்தைத் தெரிவித்துத் திரும்பிவிட்டனர். நள்ளிரவில் எல்லோரும் அந்த அண்டாவின் அருகில் சென்று, தங்கள் குடங்களில் இருந்ததை அதற்குள் ஊற்றினர். மறுநாள் காலையில் பார்த்தபோது அண்டா நிறையத் தண்ணீர்தான் இருந்தது. துணுக்குற்ற அரசன் அலுவலர்களை அழைத்து விசாரித்தான். எல்லோரும்

பாலையே ஊற்றுவர், தாம் மட்டும் அதில் தண்ணீர் ஊற்றினால் எப்படித் தெரியப்போகிறது என்று ஒவ்வொருவரும் எண்ணி எல்லோரும் தண்ணீரையே ஊற்றினர் என்பது விளங்கியது.

துரதிர்ஷ்டவசமாக நம்முள் பலருக்கு இதே எண்ணம் தான் இருக்கிறது. கதையில் கண்ட அலுவலர்கள் செய்தது போலவே நாமும் நம் பங்கு வேலையைச் செய்து வருகிறோம். 'உலகத்தில் சமத்துவக் கருத்து நிறைந்திருக்கும்போது, நான் ஒருவன் மட்டும் கொண்டாடும் தனிச்சலுகை யாருக்குத் தெரியப்போகிறது?' என்கிறார் புரோகிதர். பணக்காரர்களும் கொடுங்கோலர்களும் எல்லோரும் இப்படியே சொல்கிறார் கள். நற்கதி அடைவதற்குக் கொடுங்கோலர்களைவிடக் கொடுமைக்கு உட்பட்டவர்களுக்கு அதிக வாய்ப்பு இருக்கிறது. கொடுங்கோலர்கள் முக்தி பெற நெடுங்காலம் ஆகும்; மற்றவர் களுக்கு அவ்வளவு நாள் தேவையில்லை. குள்ளநரியின் கொடுமை, சிங்கத்தின் கொடுமையைவிடத் தீவிரமானது. சிங்கம் ஓர் அறை அறைந்துவிட்டுச் சும்மா இருந்துவிடுகிறது. குள்ள நரியோ தான் கொல்ல விரும்பும் பிராணியை விடாமல் தொடர்ந்து சென்று சமயம் கிடைக்கும்போதெல்லாம் கடித்துக் கொண்டே இருக்கிறது. புரோகிதத் தொழிலில் இயற்கை யாகவே கொடுமையும் இரக்கமற்ற தன்மையும் கலந்திருக் கின்றன. புரோகிதர்களின் ஆதிக்கம் உயரும்போது மதம் சீரழி வதற்கு இதுதான் காரணம். தனிச்சலுகை என்னும் கருத்து ஒழிந்தால்தான் மதம் என்பதே தோன்றும் என்று வேதாந்தம் கூறுகிறது. அதற்கு முன் மதம் என்பதே இல்லை.

'உங்களிடம் உள்ளதை எல்லாம் விற்று ஏழைகளுக்குக் கொடுத்துவிடுங்கள்' என்று ஏசு போதித்ததை நீங்கள் நம்புகிறீர் களா? நடைமுறையில் செய்யக்கூடிய சமத்துவக் கருத்து இது. உபதேசங்களைச் சிதைத்துத் திரித்துப் பொருள்கொள்ளும் அவசியம் இங்கே இல்லை. உண்மையை உள்ளபடி அவர் கூறியுள்ளார். சாஸ்திரங்களைச் சிதைத்துப் பொருள்கொள்ள முயலாதீர்கள். அவர் கூறுவதைக் கேட்க வந்த சில யூதர்களுக் காகவே இந்த உபதேசம் வழங்கப்பட்டது என்று கூறுகிறார்கள். இதே நியாயம் மற்றவற்றுக்கும் பொருந்தும். சாஸ்திரங்களைச் சிதைக்காதீர்கள். துணிவுடன் உண்மையை உள்ளபடி எதிர் கொள்ளுங்கள். நாம் இதில் வெற்றி பெற முடியாவிட்டால் நமது பலவீனத்தை ஒப்புக் கொள்வோம்; அதற்காக லட்சியத்தை அழித்துவிடக் கூடாது. என்றாவது அதை அடைய முடியும்

என்ற நம்பிக்கையுடன் அதற்காக முயல்வோம். உபதேசம் இதோ இருக்கிறது; 'உங்களிடம் உள்ளதை எல்லாம் விற்று ஏழைகளுக்குக் கொடுத்துவிட்டு என் பின்னால் வாருங்கள்.'

இவ்வாறு ஒவ்வொரு சலுகையையும், அதற்குக் காரண மாக நம்முள் இருக்கும் ஒவ்வொன்றையும் தூக்கியெறிந்து விட்டு எல்லா மக்களையும் சமமாக நினைக்கும் ஞானத்தைப் பெற முயல்வோம்! நீங்கள் சிறிது நாகரீகமாகப் பேசுவதால், தெருவில் போகும் மனிதனைவிட உயர்ந்தவர்கள் என்று உங்களை எண்ணிக் கொள்கிறீர்கள். நீங்கள் இப்படி நினைக் கும்போது முக்தியை நோக்கி முன்னேறுவதில்லை; மாறாக உங்கள் விலங்கிற்கு இன்னொரு வளையத்தைத் தயாரித்துக் கொள்கிறீர்கள் என்பதை நினைவில் வையுங்கள். எல்லாவற்றிற் கும் மேலாக, 'ஆன்மீகத்தில் நான் உயர்ந்தவன்' என்ற அகங் காரம் மட்டும் உங்கள் உள்ளத்தில் புகுந்துவிட்டால், பிறகு உங்களுக்கு நேர்வது பெரும் கேடுதான். இந்த எண்ணம் மிகக் கடுமையான விலங்காக முடியும். பணமோ, வேறு எந்த வகைப் பற்றோ இவ்வளவு தூரம் மனிதனைப் பந்தப்படுத்த முடியாது. 'நான் மற்றவர்களைவிடத் தூய்மையானவன்' என்ற எண்ணம், ஒருவனுக்கு ஏற்படக்கூடிய கொடிய எண்ணங்களில் எல்லாம் கொடியது. எந்தவிதத்தில் நீங்கள் தூயவர்கள்? உங்களிடமுள்ள இறைவன் எல்லோரிலும் இருக்கிறார். இதை நீங்கள் அறியா விட்டால், நீங்கள் ஒன்றையும் அறிந்தவர்கள் ஆகமாட்டீர்கள். எப்படி வேறுபாடு இருக்க இயலும்? எல்லாம் ஒன்றுதான். ஒவ்வோர் உயிரும் பரமாத்மாவின் கோயிலே. இதை நீங்கள் உணர்ந்தால் சரி; இல்லையானால் இன்னும் ஆன்மீக விழிப்பு உங்களுக்கு உண்டாகவில்லை.

# III. சொற்பொழிவுக் குறிப்புகள்

## 1. ஞானயோகம்: சில் குறிப்புகள்

1895-ஆம் ஆண்டு நியூயார்க்கில் நடைபெற்ற சொற்பொழிவுகளிலிருந்து எடுக்கப்பட்ட குறிப்புகள்

### 1

ஓம் தத் ஸத்! ஓம் என்ற மந்திரத்தை அறிவது பிரபஞ்சத்தின் ரகசியத்தை அறிவதாகும். ஞானயோகத்தின் லட்சியம் பக்தி மற்றும் ராஜயோகங்களைப் போன்றதே, ஆனால் வழி மட்டும் வேறானது. இந்த யோகம் பலசாலிகளுக்கு உரியது; அறிவுபூர்வ மாகச் சிந்திப்பவர்களுக்கு உரியது; மென்மையானவர்களுக்கோ, அமானுஷ்யமானவற்றில் நாட்டம் உடையவர்களுக்கோ உரியது அல்ல.

பக்தியோகி அன்பின் மூலமாகவும், பக்தியின் வாயிலாக வும் எவ்வாறு இறைவனுடன் பூரண ஐக்கியத்தை அடைய விழைகிறானோ, அவ்வாறே ஞானயோகி பகுத்தறிவு ஆற்ற லின் துணையை மட்டும் கொண்டு இறையனுபூதி பெற விரும்பு கிறான். விக்கிரகங்கள், நம்பிக்கைகள், மூடநம்பிக்கைகள் என்று பழையவை அனைத்தையும், இந்த உலக மற்றும் மறு உலக ஆசைகளைத் தூக்கி எறிந்துவிட்டு, முக்தி ஒன்றையே நாட அவன் தயாராக இருக்க வேண்டும்.

ஞானம் இல்லாமல் முக்தி கிடையாது. நாம் உண்மையில் யார் என்பதை அறிவதே அந்த ஞானம். பயம், பிறப்பு, இறப்பு எல்லாவற்றையும் கடந்தவர்கள் நாம் என்பதை உணர்வதே அந்த ஞானம்.

ஆன்ம அனுபூதியே மிக மேலான நன்மை. அது புலன் களைக் கடந்தது, எண்ணங்களைக் கடந்தது. உண்மையான 'நான்' என்பதை அறிய முடியாது. அது என்றென்றைக்கும் அறிகின்ற பொருள், ஆதலால் அது அறிவதற்கான பொருள் ஆக முடியாது. சார்புப்பொருளைப் பற்றிய அறிவுதான் இருக்க முடியுமே தவிர, தனிப்பொருளைப் பற்றிய அறிவு இருக்க முடியாது. புலனறிவு எல்லாமே எல்லைக்கு உட்பட்டவை; காரணகாரியம் ஆகிய ஓர் எல்லையற்ற சங்கிலி அது. இந்த

உலகம் ஏதோவொன்றைச் சார்ந்தது, உண்மையின் நிழல். ஆனாலும் இது ஒரு சமநிலைத் தளம். இங்கே இன்பமும் துன்பமும் ஓரளவுக்குச் சமமாக உள்ளன. எனவே இங்கு மட்டும்தான் மனிதன் தன் உண்மையான ஆன்மாவை உணர முடியும், தான் பிரம்மம் என்பதை அறிய முடியும்.

இந்த உலகம் 'இயற்கையின் பரிணாமமும் இறைவனின் வெளிப்பாடும்' ஆகும். பிரம்மம் அல்லது உயர்தனிப்பொருளை மாயை அல்லது தோற்றம் என்னும் திரை வழியாக நாம் காண் கின்ற காட்சியே இந்த உலகம். இந்த உலகம் வெறும் சூன்யம் அல்ல, அதற்கென்று ஒரு குறிப்பிட்ட உண்மை இருக்கிறது. பிரம்மம் இருப்பதாலேயே அது தோற்றம் அளிக்கிறது.

அறிபவனை எப்படி அறிவது? 'நாமே அது. அதை நாம் ஒருபோதும் அறிய முடியாது. ஏனெனில் அது ஒருபோதும் அறிவதற்கான பொருள் ஆக முடியாது' என்கிறது வேதாந்தம். அது அறிய முடியாதது என்றே நவீன விஞ்ஞானமும் கூறு கிறது. அதன் கணநேரக் காட்சிகளை நாம் அவ்வப்போது காணவே செய்கிறோம். இந்த உலகைப் பற்றிய மனமயக்கம் மறைந்த பின்னரும் உலகம் அப்படியேதான் இருக்கிறது.ஆனால் நம்மைப் பொறுத்தவரை அது உண்மையானதாக இருக்காது. அது வெறும் கானல்நீர் என்பதை நாம் உணர்ந்துகொள்வோம். இந்தக் கானல்நீரைக் கடந்து செல்வதே எல்லா மதங்களின் நோக்கம். மனிதனும் கடவுளும் ஒன்றே என்பது வேதங்களின் மாறாத போதனை. ஆனால் மாயைத்திரையைக் கிழித்துச் சென்று உண்மையை உணர மிகச் சிலராலேயே முடியும்.

ஞானியாக விரும்புபவன் முதலில் விலக்க வேண்டியது பயம். நமது மிக மோசமான எதிரிகளுள் ஒன்று பயம். அடுத்து, நீயே உணராமல் எதையும் நம்பாதே. 'நான் உடம்பு அல்ல, நான் மனம் அல்ல, நான் எண்ணம் அல்ல, நான் உணர்வும் அல்ல, நான் ஆன்மா' என்று திரும்பத்திரும்ப உங்களுக் குள் சொல்லிக்கொள்ளுங்கள். இப்படி அனைத்தையும் உங் களால் தூக்கியெறிய இயலும்போது ஆன்மா மட்டுமே எஞ்சி யிருக்கும்.

ஞானியின் தியானம் இரண்டு வகைப்படும்: 1. நாம் அல் லாத அனைத்தையும் மறுத்து அவற்றை எண்ணாதிருப்பது. 2. நாம் யார் என்பதை, அதாவது நாம் ஆன்மா, நாம் உண்மை -அறிவு-இன்பப்பொருள், நாம் ஒன்றேயான பரம்பொருள் என்பதை மீண்டும்மீண்டும் வலியுறுத்துவது.

உண்மையான பகுத்தறிவுவாதி தனது பகுத்தறிவு எந்த எல்லைவரை இட்டுச் சென்றாலும் அதனைத் துணிவுடன் தொடர்ந்து செல்ல வேண்டும். வழியில் எங்கும் நிற்கக் கூடாது. நாம் மறுக்கத் தொடங்கும்போதும் அப்படித்தான். இறுதியாக எதையும் விலக்க முடியாத, மறுக்க முடியாத நிலை வரும் வரை, அதாவது உண்மையான 'நான்' என்பதை அடையும்வரை மறுத்துக்கொண்டே செல்ல வேண்டும். அந்த 'நான்'தான் பிரபஞ்சத்தின் சாட்சிப் பொருள். அது மாறாதது, என்றும் இருப்பது, எல்லையற்றது. இப்போது அஞ்ஞானத்தின் அடுக்குகள் அதனை நம் கண்களிலிருந்து மறைக்கின்றது. ஆனால் அது மாறாமல் எப்போதும் அப்படியே இருக்கிறது.

ஒரு மரத்தில் இரண்டு பறவைகள் உள்ளன. மேலே உள்ள பறவை அமைதியாக, கம்பீரமாக அமர்ந்திருக்கிறது. அது அழகானது, கம்பீரமானது. கீழ்ப்பறவை கிளைக்குக்கிளை தாவியவண்ணம் உள்ளது. ஒருகணம் இனிப்புப் பழங்களைத் தின்று மகிழ்கிறது, மறுகணம் கசப்புப் பழங்களை உண்டு வருந்துகிறது. ஒருநாள் அது வழக்கத்தைவிட மிகவும் கசப்பான ஒரு பழத்தைத் தின்ன நேர்ந்தது. அப்போது அது, மேலே அமர்ந்திருந்த அந்த அமைதியான, கம்பீரமான பறவையைப் பார்த்து, 'நானும் எப்படி அவனைப்போல் ஆவேன்' என்று தனக்குள் எண்ணியது. சிறிது குதித்து அந்தப் பறவையை நோக்கிப் போகவும் செய்தது. ஆனால் விரைவிலேயே மேல் பறவையைப்போல் ஆகும் ஆசையை மறந்தது, முன்போலவே இனிப்பு மற்றும் கசப்புப் பழங்களைத் தின்று, இன்பத்திலும் துன்பத்திலும் உழன்றது.

மீண்டும் மேலே பார்த்தது. இன்னும் சற்று அந்த மேற்பறவையை நெருங்கியது. அதன் கம்பீரத்தையும் அமைதியையும் கண்டு தன்னை மறந்தது. இவ்வாறு பலமுறை அதனை நெருங்கி, இறுதியில் மேற்பறவைக்கு மிகவும் அருகில் சென்றது. அந்த மேற்பறவையின் ஒளி அதன் கண்களைக் கூசச் செய்தது; அந்த ஒளி அப்படியே தன்னை முழுக்காட்டுவதுபோல் கீழ்ப் பறவை உணர்ந்தது. இறுதியில் பார்த்தால், இருந்தது ஒரு பறவை மட்டுமே. தான் எப்போதும் அந்த மேற்பறவையாகவே இருந்திருக்கிறோம், இப்போது அதனை உணர்ந்துள்ளோம் என்பதைக் கீழ்ப்பறவை அறிந்துகொண்டது.

மனிதன் அந்த கீழ்ப்பறவையைப் போலிருக்கிறான். தன்னால் கொள்ள முடிந்த மிக உயர்ந்த லட்சியத்தை அடைய

இடைவிடாமல் முயற்சி செய்தால் அவனும் உண்மையை உணர்வான். அவன் எப்போதும் ஆன்மாதான், ஆன்மா அல்லாததாக அவன் கண்டது வெறும் கனவு.

நம்மை முழுவதுமாக ஜடப்பொருளிலிருந்து பிரித்து, அது உண்மை என்ற நம்பிக்கையை முற்றிலுமாக விடுவதுதான் உண்மை ஞானம். ஞானி எப்போதும் 'ஓம் தத் ஸத்' என்பதை, அதாவது, ஓம் என்பது மட்டுமே உண்மை என்பதை மனத்தில் இருத்திக்கொள்ள வேண்டும். அறுதி ஒருமையே ஞான யோகத்தின் அடிப்படை. இதுவே அத்வைதம். வேதாந்தத்தின் உயிர்நாடியும் முதலும் முடிவும் இதுவே—'பிரம்மம் மட்டுமே உண்மை, மற்ற அனைத்தும் பொய். நானே அந்தப் பிரம்மம்'. இதனைத் திரும்பத்திரும்ப நமக்குநாமே சொல்லி, நம்மில் ஒரு பகுதி ஆக்கும்போதுதான் நாம் நன்மை-தீமை, சுகம்-துக்கம், இன்பம்-துன்பம் போன்ற எல்லா இருமைகளையும் கடந்து செல்ல முடியும்; நம்மை அழிவற்ற, மாறாத, எல்லையற்ற, 'இரண்டற்ற ஒன்றேயான' ஆன்மாவாக அறிய முடியும்.

ஞானயோகி, மிகக் குறுகிய ஒரு பிரிவினைவாதியைப் போன்ற தீவிரமும், அதேவேளையில், வானத்தைப்போல் பரந்த மனமும் உடையவனாக இருக்க வேண்டும். அவன் தன் மனத்தை முற்றிலும் கட்டுப்படுத்தியவனாக இருக்க வேண்டும். ஒரு பௌத்தனாக, ஒரு கிறிஸ்தவனாக அவனால் இருக்க முடிய வேண்டும். தன்னை உணர்வுபூர்வமாகப் பிரித்து, பல்வேறு கருத்துக்களுடன் ஒன்றுபடுத்திக் கொண்டு, அதேவேளையில், பரிபூரணமான இயைபில் நிலைநிற்கவும் வல்லவனாக இருக்க வேண்டும். இடைவிடாத பயிற்சி ஒன்றே நமக்கு இத்தகைய வல்லமையைத் தர முடியும். எல்லா வேறுபாடுகளும் ஒன்றி லிருந்தே உருவாகியுள்ளன. ஆனால் நாம் செயல்களுடன் நம்மை ஒன்றுபடுத்திக் கொள்ளாமல் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். நமக்கு முன்னால் இருக்கின்ற பொருளைத் தவிர வேறு எதையும் பார்க்காமலும், கேட்காமலும், சிந்திக்காமலும் இருக்கப் பயில வேண்டும். இதில் முழுமனத்தையும் செலுத்தித் தீவிரமாக இருக்க வேண்டும். 'நானே அவன், நானே அவன்' என்று இரவும்பகலும் உனக்குள் சொல்லிக்கொள்.

## 2

**வே**தாந்தத்தின் மாபெரும் ஆச்சாரியர் சங்கரர். அவர் ஆழ்ந்த தர்க்க அறிவின்மூலம் வேதங்களிலிருந்து வேதாந்த உண்மைகளைப் பிரித்தெடுத்தார். அதனை அடிப்படையாகக்

கொண்டு ஞானநெறியை வகுத்தார். அதனைத் தமது விளக்க வுரைகளின் வாயிலாகப் போதித்தார். பிரம்மத்தைப் பற்றிக் கூறப்படுகின்ற முரண்பட்ட விளக்கங்கள் அனைத்தையும் ஒன்றுபடுத்தி, இருப்பதெல்லாம் எல்லையற்ற உண்மை ஒன்றே என்பதைக் காட்டினார். மனிதன் முன்னேற்றப் பாதையில் மெதுவாகச் செல்லும்போது, பல்வேறு தகுதிகளுக்கு ஏற்பப் பல்வேறு நிலைகள் தேவையே என்பதைத் தெளிவாக்கினார்.

இத்தகைய பல்வேறு படித்தரங்களில் உள்ள உபதேசத்தை நாம் ஏசுவின் உபதேசங்களிலும் காண முடிகிறது. கட்டாயமாக, அவர் கேட்பவர்களின் தகுதிக்கு ஏற்பவே அவற்றைக் கூறியிருக்க வேண்டும். முதலில், பரமண்டலத்தில் இருக்கின்ற பிதாவைக் குறிப்பிட்டு அவரிடம் பிரார்த்திக்கும்படிக் கூறினார். பின்னர் ஒரு படி மேலே சென்று, 'நான் கொடி, நீங்கள் கிளைகள்' என்று போதித்தார். கடைசியாக அறுதி உண்மையைக் கூறி னார்: 'நானும் எனது பரமபிதாவும் ஒருவரே', 'விண்ணகப் பேரரசு உங்கள் உள்ளேயே இருக்கிறது'.

சங்கரர் இறைவனின் மாபெரும் கொடைகளாக மூன்று விஷயங்களைக் குறிப்பிடுகிறார்: 1. மனிதப் பிறவி, 2. இறை நாட்டம், 3. நமக்கு ஒளி தரவல்ல குரு. இந்த மூன்று விஷயங் களும் நமக்கு உரியவை ஆகும்போது நமது நற்கதி அருகிலேயே உள்ளது என்பதை அறிந்துகொள்ளலாம். ஞானம் மட்டுமே நமக்கு முக்தியைத் தர முடியும்; நம்மைக் காக்க முடியும். ஆனால் அந்த ஞானம் எப்போதும் தர்மத்தை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்.

இருப்பது ஒன்றே, ஒவ்வோர் ஆன்மாவும் அந்த ஒன்றால் பூரணமாக நிறைந்துள்ளது. அங்கு பகுதியோ அம்சமோ இல்லை. பனித்துளிகள் ஒவ்வொன்றிலும் சூரியன் முழுமை யாகத்தானே பிரதிபலிக்கிறது! ஒன்றேயான பரம்பொருள் காலம், இடம், காரணகாரியம் வழியாகத் தோன்றும்போது நாம் அவரை மனிதன் என்று அறிகிறோம். ஆனால் எல்லா தோற்றங்களுக்கும் பின்னால் நிற்பது அந்த ஒன்றேயான உண்மை.

நம்மைக் கீழான எதனுடனும் ஒன்றுபடுத்திக் கொள்வதை விடுவதுதான் தன்னலமின்மை என்பது. நாம் உடல்கள் என் கின்ற இந்தத் துன்பமயமான கனவிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ள வேண்டும். 'நானே அவன்' என்ற உண்மையை உணர வேண்டும். கடலில் வீழ்ந்து கரைந்துபோகின்ற வெறும் ஒரு

துளி அல்ல நாம்; நாம் ஒவ்வொருவரும் முழுமையான, பூரணமான கடலே. மாயையின் தளைகளிலிருந்து விடுபடும் போது இதனை நாம் உணர்ந்துகொள்வோம்.

எல்லையற்றதைப் பிரிக்க முடியாது. 'இரண்டற்ற, ஒன்றே யான' பொருளில் இரண்டாவது ஒன்று இருக்க முடியாது. எல்லாமே ஒன்றுதான். இந்த ஞானம் எல்லோருக்கும் கிடைக்கும். ஆனால் அதற்காக நாம் இப்போதே முயல வேண்டும். அந்த ஞானம் வரும்வரை நம்மால் மனிதகுலத்திற்கு மிகச் சிறந்த உதவியைச் செய்ய முடியாது. உண்மையான அன்பை, உண்மையான கருணையை, உண்மையான சத்தியப் பொருளை ஜீவன்முக்தர்கள் மட்டுமே தர முடியும். அந்த உண்மை மட்டுமே நம்மைச் சுதந்திரர்களாக்க முடியும். ஆசை நம்மை அடிமைகள் ஆக்குகிறது. திருப்திப் படுத்த முடியாத ஒரு கொடுங்கோலனே ஆசை என்பது. தன் வசப்பட்டவர்களை அது ஒருபோதும் ஓய்ந்திருக்க விடுவதில்லை. ஆனால் ஜீவன் முக்தன், தான் ஒன்றேயான பரம்பொருளே, தான் விரும்புவதற் கென்று எதுவுமே இல்லை என்னும் உயர்ந்த ஞானநிலைக்குச் செல்வதன்மூலம் ஆசைகள் அனைத்தையும் வெல்கிறான்.

உடம்பு, பால் வேறுபாடு, இனம், ஜாதி, பற்று என்று எல்லா மனமயக்கங்களையும் நம் முன் கொண்டு வருகிறது மனம். அந்த மனம் உண்மையை உணரும்வரைத் தொடர்ந்து அதனிடம் உண்மையைச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். பேரின்பமே நமது உண்மை இயல்பு. இந்த உலகில் நாம் காணும் சுகங்கள் அனைத்தும் வெறும் பிரதிபலிப்பே; நமது உண்மை இயல்பை அறிவதால் உண்டாகும் ஆனந்தத்தின் அணுஅளவே.

ஆன்மா இன்பதுன்பங்களைக் கடந்தது. பிரபஞ்சத்தின் சாட்சி அது. வாழ்க்கைப் புத்தகத்தின் ஏடுகளைப் புரட்டிப் படிக்கின்ற மாறாத பொருள் அது.

பயிற்சியின்மூலம் யோகம் வருகிறது. யோகத்திலிருந்து ஞானம் பிறக்கிறது. ஞானத்திலிருந்து அன்பு உதயமாகிறது. அன்பிலிருந்து ஆனந்தம் வாய்க்கிறது.

நான், எனது என்பதெல்லாம் மூடநம்பிக்கைகள். அவற்றை உதறித் தள்ள முடியாத அளவிற்கு நாம் அவற்றுடன் காலங்காலமாக ஒன்றுசேர்ந்து வாழ்ந்து வருகிறோம். ஆனால் உயர்ந்த நிலையை அடைய வேண்டுமானால் அவற்றை உதறியே தீர வேண்டும்.

நாம் எப்போதும் உற்சாகமாகவும் ஆனந்தமாகவும் இருக்க வேண்டும். முகத்தைத் தொங்கப்போட்டுக்கொள்வது மதம் ஆகாது. உலகிலேயே மிகவும் ஆனந்தமயமானது மதம்தான், ஏனெனில் அதுதான் மிகச் சிறந்தது. தேவையற்ற தவப் பயிற்சிகள் நம்மைப் புனிதப் படுத்துவதில்லை. இறைவனை நேசிப்பவன், தூயவன் ஏன் கவலைப்பட வேண்டும்? அவன் ஒரு குழந்தையைப்போல் ஆனந்தமாக இருக்க வேண்டும். உண்மையில் அவன் இறைவனின் குழந்தையே அல்லவா!

இதயத்தைத் தூய்மைப்படுத்துவதே மதத்தின் சாரம். விண்ணின் அரசு இதயத்திலேயே இருக்கிறது. இதயத் தூய்மை உடையவன் மட்டுமே இறைவனைக் காண்பான்.

பொதுவாக நாம் உலகை நினைக்கும்போது அது நமது உலகம் என்று கருதுகிறோம். ஆனால் அது இறைவனின் உலகம் என்ற எண்ணத்தோடு நாம் அதனை அணுக வேண்டும். அப்போது இறைவனை நாம் அடைவது நிச்சயம். பெற்றோர், குழந்தை, கணவன், மனைவி, நண்பன், பகைவன் என்று எல்லோரையும், எல்லாவற்றையும் இந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்க வேண்டும். இவ்வாறு உணர்வுபூர்வமாக உலகம் முழுவதையும் இறைவனால் நிறைக்கும்போது நமது உலகக் காட்சியே எப்படி மாறிவிடும் பாருங்கள்! கடவுளைத் தவிர வேறு எதையும் பார்க்காதே. அப்போது நமது கவலை, போராட்டம், வேதனை எல்லாம் பறந்துவிடும்!

ஞானம் என்பது பிரிவுகளுக்கு அப்பாற்பட்டது. ஆனால் அது மதப் பிரிவுகளைக் கண்டிப்பதில்லை; பிரிவுகளைக் கடந்த ஒரு நிலையை அது அடைந்துவிட்டது என்பதே உண்மை. ஞானி யாரையும் அழிப்பதில்லை. அவன் அனைவருக்கும் உதவுகிறான். எப்படி எல்லா ஆறுகளும் கடலில் கலந்து ஒன்றாகின்றனவோ அப்படியே எல்லா பிரிவுகளும் ஞானத்தை நோக்கிச் சென்று அங்கே ஒன்றாகின்றன.

இறைவன் இருப்பதாலேயே மற்றப் பொருட்கள் உண்மையாகத் தெரிகின்றன. இந்த உண்மையை நாம் உணரும்போதுதான் நாமும் உண்மையாக இருப்பவர்கள் ஆவோம். எப்போது நம்மால் எந்த வேறுபாடுகளையும் காண முடியவில்லையோ, அப்போது 'நானும் எனது தந்தையும் ஒருவரே' என்பது நமக்குப் புலப்படும்.

ஞானம் என்பதை பகவத்கீதையில் கிருஷ்ணர் தெளிவாக விளக்குகிறார். இந்திய இலக்கியங்களின் மணிமுடியாக

இந்த நூல் போற்றப்படுகிறது. இதனை ஒருவகையில் வேதங்களுக்கு விளக்கவுரை எனலாம். ஆன்மீகத்திற்கான நமது போராட்டத்தை இந்தப் பிறவியிலேயே முடித்துவிட வேண்டும் என்று அது கூறுகிறது. எனவே வாழ்க்கையிலிருந்து நாம் ஓடக் கூடாது. மாறாக, வாழ்க்கையின் சாரம் முழுவதையும் பெறு வதற்காக முயன்று பாடுபட வேண்டும். உயர் விஷயங்களுக் கான இந்தப் போராட்டத்தை விளக்கும்போது, கீதை அதனை ஒரு போர்க்களக் காட்சியாக, அற்புதமான கவிதைநயத்துடன் உருவகப் படுத்துகிறது. இரண்டு படைகளுள் ஒன்றின் தலைவன் அர்ஜுனன். அவனது சாரதி கிருஷ்ணர். அவர் அவனுக்குப் போதிக்கிறார்: நீ அழிவற்றவன் என்பதை உணர்ந்துள்ளாய். எனவே கவலை கொள்ளாதே, மரணத்தைக் கண்டு பயப் படாதே. மாறுகின்ற எதுவும் மனிதனின் உண்மை இயல்பாக இருக்க முடியாது.

மதம் மற்றும் தத்துவத்தின் உயர்ந்த உண்மைகளை கீதையின் ஒவ்வோர் அத்தியாயத்திலும் அர்ஜுனனுக்குப் போதிக்கிறார் கிருஷ்ணர். இந்த உபதேசங்கள்தாம் பகவத் கீதையை ஓர் அற்புத நூலாக ஆக்குகின்றன. ஏறத்தாழ வேதாந் தத்தின் முழுமையும் அதில் அடங்கியுள்ளது.

ஆன்மா எல்லையற்றது, உடம்பின் மரணத்தால் அது எந்தவிதத்திலும் பாதிக்கப்படுவதில்லை என்று வேதங்கள் கூறுகின்றன. ஆன்மா ஒரு வட்டம், அதன் பரிதி எங்கும் இல்லை, அதன் மையம் ஏதோ ஓர் உடம்பில் உள்ளது. மரணம் (என்று கூறப்படுகின்ற ஒன்று) இந்த மையத்தின் மாற்றம் மட்டுமே. கடவுளும் ஒரு வட்டம். அந்த வட்டத்தின் பரிதி எங்கும் இல்லை. ஆனால் அதன் மையம் எங்கும் உள்ளது. நாம் உடம்பு என்ற குறுகிய மையத்தைவிட்டு வெளி யேறும்போது நமது உண்மை இயல்பான இறைவனை அறிவோம்.

நிகழ்காலம் என்பது கடந்தகாலத்தையும் எதிர்காலத்தை யும் பிரிக்கின்ற ஒரு கோடு மட்டும்தான். எனவே நான் நிகழ் காலத்தைப்பற்றி மட்டுமே கவலைப்படுகிறேன் என்று சொல் வது அறிவுடைமை ஆகாது. ஏனெனில் கடந்தகாலம் மற்றும் எதிர்காலத்திலிருந்து தனியான நிகழ்காலம் என்ற ஒன்று கிடையாது. அது ஒரு முழுமை. காலம் என்று நாம் கொள்கின்ற கருத்து நமது மனம் கற்பித்தது மட்டுமே; நமது புரிந்துகொள் தலின் விளைவு மட்டுமே.

3

உலகை விட வேண்டும்; ஆனால், அதற்காக உலகைத் துறந்து செல்லக் கூடாது என்கிறது ஞானயோகம். உலகிலேயே வாழ வேண்டும், ஆனால் அதனால் பற்றப்படாமல் இருக்க வேண்டும்—இதுவே துறவியின் உண்மையான சோதனை. ஏறக் குறைய எல்லா மதங்களிலும் துறவுக் கருத்து ஏதாவது ஒரு வகையில் இருக்கவே செய்கிறது. எல்லோரையும் சமமாகக் காணவும், சமத்துவத்தை மட்டுமே எங்கும் பார்க்கவும் ஞான யோகம் நம்மை வற்புறுத்துகிறது. புகழ்ச்சி-இகழ்ச்சி, நன்மை-தீமை, ஏன், சூட்டையும் குளிரையும்கூட நாம் சமமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். இதனை அப்படியே வாழ்ந்து காட்டுகின்ற சான்றோர் பலர் இந்தியாவில் உள்ளனர். இமயத்தின் பனி மலைச் சிகரங்களிலும், பாலைவனத்தின் சுட்டெரிக்கும் மணல் வெளிகளிலும் உடம்பில் சிறு ஆடைகூட இன்றி, இந்த இரண் டிற்கும் எந்த வேற்றுமையையும் காணாமல் அவர்கள் அலைந்து திரிகிறார்கள்.

'நாம் உடம்பு' என்ற இந்த மூடக் கருத்து இருக்கிறதே, அதை முதலில் விட வேண்டும். நாம் உடம்பு அல்ல. அடுத்தது நாம் மனம் என்ற மூடக்கருத்தை விட வேண்டும். நாம் மனமும் அல்ல. மனம் என்பது ஆன்மாவிற்கு ஒரு 'பட்டுச்சட்டை' என்று வேண்டுமானால் சொல்லலாம், ஆனால் அது ஒரு போதும் ஆன்மாவின் ஒரு பகுதி ஆகாது. உடம்பு என்று சொல்லும்போதே அதற்குள் ஏதோ ஒன்று இருக்கிறது என்பது நமக்குப் புரிகிறது. அதுவே இருப்பு (Existence).

நமது உடல்கள், தங்களுக்குப் பின்னால் உள்ள எண்ணம் என்பதைச் சுட்டி நிற்கின்றன. எண்ணங்களும், தங்களுக்குப் பின்னால் ஏதோ ஒன்று இருப்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. அந்த ஏதோ ஒன்றுதான் ஆன்மாவிற்கெல்லாம் ஆன்மா, பிர பஞ்சத்தின் ஆன்மா, நமது வாழ்க்கைக்கெல்லாம் உயிர்நாடி, நமது உண்மையான ஆன்மா. அதுவே உண்மையில் உள்ளது.

இறைவனிலிருந்து நாம் வேறானவர்கள் என்ற எண்ணம் கடுகளவு இருக்கும்வரை நம்மிடம் பயம் இருந்தே தீரும். ஒன்றேயான பரம்பொருள் நாமே என்பதை உணரும்போது பயம் விலகும். ஒன்றேயான அந்த நிலையில் எதைக் கண்டு பயப்படுவது? ஞானி தனது சங்கல்ப ஆற்றல் ஒன்றினாலேயே பிரபஞ்ச உணர்வைக் கடந்து, உடல், மனம் எல்லாவற்றிற்கும் அப்பால் செல்கிறான். இவ்வாறு அஞ்ஞானத்தை அழித்து,

ஆன்மாவை உணர்கிறான். இன்பதுன்பங்கள் எல்லாம் புலன் களுக்கு மட்டுமே; அவை ஒருபோதும் உண்மையான ஆன்மா வைத் தொடுவதில்லை. ஆன்மா என்பது காலம், இடம், காரண காரியம் அனைத்தையும் கடந்தது. எனவே அது எல்லையற்றது, எங்கும் நிறைந்தது.

ஞானி எல்லா உருவங்களையும் கடந்தாக வேண்டும். எல்லா நியதிகளிலிருந்தும், எல்லா சாஸ்திரங்களிலிருந்தும்—அது தனது சொந்த சாஸ்திரமாக இருந்தாலும் சரி—விடுபட் டாக வேண்டும். இவற்றால் எல்லாம் கட்டுண்டு நாம் வெறும் ஜடமாகி அழிகிறோம். ஆனால் இவற்றிலிருந்து விடுபட முடி யாதவர்களை ஞானி ஒருபோதும் கண்டிக்கக் கூடாது. யாரைப் பார்த்தும், 'நான் உன்னைவிடப் புனிதமானவன்' என்ற எண்ணம் அவனுக்கு வரவே கூடாது.

உண்மையான ஞானயோகியின் அடையாளங்கள் இவை:

1. அவன் அனுபூதியைத் தவிர வேறு எதிலும் ஆசை வைக்க மாட்டான்.

2. புலன்கள் அனைத்தும் அவனுக்கு முழுமையாகக் கட்டுப்பட்டிருக்கின்றன. எந்தத் துன்பம் வந்தாலும் முணு முணுப்பின்றி ஏற்றுக்கொள்கிறான். விரிந்த வானத்தின்கீழ் வெறுந்தரையில் படுக்க நேர்ந்தாலும், மன்னனின் அரண்மனை மஞ்சத்தில் படுக்க நேர்ந்தாலும் அவன் இரண்டையும் சமமாக ஏற்றுக்கொள்கிறான். எந்தத் துன்பத்தையும் கண்டு அவன் ஓடுவதில்லை. அவற்றை எதிர்கொண்டு தாங்கிக் கொள்கிறான். ஆன்மாவைத் தவிர அனைத்தையும் அவன் துறக்கிறான்.

3. இறைவன் ஒருவனைத் தவிர மற்ற அனைத்தும் உண்மை யற்றவை என்பதை அவன் அறிந்திருக்கிறான்.

4. முக்தியை அவன் தீவிரமாக நாடுகிறான். உயர்ந்த விஷயங்களில் அவன் தன் மனத்தைத் திடமான சங்கல்பத் துடன் நிலைநிறுத்துகிறான். அதன் விளைவாக அமைதியை அடைகிறான்.

அமைதி என்பதை அறியாவிட்டால் நாம் மிருகங்களை விட எந்த விதத்தில் உயர்ந்தவர்கள்? அனைத்தையும் பிறருக்காக, இறைவனுக்காகச் செய்கிறான் ஞானி. தனது வேலைக்கான எந்தப் பலனையும் அவன் நாடுவதில்லை. இவ்வுலகத்திலோ மறுவுலகத்திலோ அவனுக்கு எதுவும் தேவையில்லை.

நமது ஆன்மாவைவிட உயர்ந்த எந்தப் பொருளை உலகம் நமக்குத் தர முடியும்? அது மட்டுமிருந்தால் எல்லாம்

இருப்பதாகவே ஆகும். அந்த ஆன்மாதான் இருக்கின்ற ஒரே பொருள், பகுக்க முடியாத ஒரே பொருள் என்று வேதங்கள் நமக்குக் கற்பிக்கின்றன. அது மனம், நினைவு, எண்ணம், உணர்வு (Consciousness) என்று நாம் எதைப் புரிந்து கொண்டிருக்கிறோமோ அது—இவை அனைத்தையும் கடந்தது. அதிலிருந்தே அனைத்தும் வந்துள்ளன. அதன்மூலமாகவே (அல்லது அதன் காரணமாகவே) நாம் பார்க்கிறோம், கேட்கிறோம், உணர்கிறோம், சிந்திக்கிறோம்.

ஓம் அல்லது ஒரே பரம்பொருளுடன் ஒன்றுபட்டிருப்பதை உணர்வதுதான் உலகின் லட்சியம்.

எல்லா பிணைப்புகளிலிருந்தும் ஞானி விடுபட்டவனாக இருக்க வேண்டும். அவன் இந்து அல்ல, பௌத்தன் அல்ல, கிறிஸ்தவனும் அல்ல. ஆனால் இந்த மூன்றுமே அவன்தான். அவன் எல்லா செயல்களையும் துறந்துவிட்டான்; இறைவனிடம் சமர்ப்பித்துவிட்டான். அந்த நிலையில் அவனைப் பிணைக்க எந்தச் செயலுக்கும் ஆற்றல் இல்லை. அவன் ஒரு தீவிரமான பகுத்தறிவுவாதியாக இருக்கிறான். அவன் அனைத்தையும் மறுக்கிறான். 'வெறுமனே நம்பு என்ற பேச்சு இல்லை, மந்திரங்கள் இல்லை, சொர்க்கம் இல்லை, நரகம் இல்லை, மதம் இல்லை, கோயில் இல்லை, ஆன்மா மட்டுமே உள்ளது' என்று இரவும்பகலும் தனக்குத்தானே கூறுகிறான். இவ்வாறு எல்லாவற்றையும் விலக்குகிறான். விலக்கியவாறே, இனி எதையும் விலக்க முடியாத நிலையை அடைகிறான். அந்த நிலையே ஆன்மா. எதையும் அவன் உடனடியாக ஏற்றுக் கொள்வதில்லை. பகுத்தறிவாலும் சங்கல்ப பலத்தாலும் அவன் ஒவ்வொன்றையும் பகுத்து ஆராய்கிறான். அதன் மூலமே எதையும் சாராததான நிர்வாண நிலையை அடைகிறான்.

இந்த நிலையை விளக்க முடியாது, ஏன், கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது.

உலகியல் விளைவுகளை வைத்து ஞானத்தை எடை போடக் கூடாது. கழுகு ஏறக்குறைய கண்ணுக்கு எட்டாத தொலைவில் பறக்கிறது. ஆனால் கீழே ஒரு மாமிசத்துண்டைக் கண்டால் உடனே பாய்ந்து கொத்தத் தயாராகிறது. அப்படி இருக்காதீர்கள். நோய் தீர வேண்டும் என்றோ, நீண்ட ஆயுள் வேண்டும் என்றோ, செல்வம் வேண்டும் என்றோ கேட்காதீர்கள். முக்தி ஒன்றையே கேளுங்கள்.

நாமே சச்சிதானந்தம்—ஸத்=இருப்பு, சித்=உணர்வு, ஆனந்தம். ஸத் என்பது உலகின் அறுதிப்பொதுமை. நாம் இருக்கிறோம், அதை நாம் உணர்கிறோம், நாம் இருக்கின்ற அந்தத் தூய தனிநிலையின் விளைவே ஆனந்தம். நாம் எதையும் கேட்காத, எதையும் கொடுக்காத சில கணங்களில், சில வேளைகளில், பரமானந்தத்தை உணர்கிறோம், அதனை மட்டுமே அறிகிறோம். ஆனால் அந்த அனுபவம் நிலைப்பதில்லை. மறுகணமே அது மறைந்து மீண்டும் இந்தப் பிரபஞ்சம் நம் கண்முன் தெரியத் தொடங்குகிறது. இந்த உலகம் 'இறைவன்மீது ஒரு பூச்சுவேலை (Mosaic work) மட்டுமே, அனைத்திற்கும் ஆதாரம் அவரே என்பது நமக்குப் புலப்படுகிறது.

நாம் உலக நிலைக்குத் திரும்பி, எதையும் சாராத பரம்பொருளைச் சார்புப் பொருளாகக் காணும்போது சச்சிதானந்தத்தை முப்பொருளாக (Trinity), அதாவது, பிதா, சுதன், பரிசுத்த ஆவி என்று காண்கிறோம். ஸத்=படைப்புத் தத்துவம்; சித்=வழிகாட்டும் தத்துவம்; ஆனந்தம்=உணரும் தத்துவம், அதாவது நம்மை ஒரே பரம்பொருளுடன் மீண்டும் இணைக்கின்ற தத்துவம். சித்தின் மூலமாக அல்லாமல் ஸத்தை யாரும் அறிய முடியாது. 'மகனின் (சுதன்) மூலமாக அல்லாமல் தந்தையைக் காண முடியாது' என்று ஏசு கூறியிருப்பதை இதன் மூலம் இன்னும் நன்றாகப் புரிந்துகொள்கிறோம்.

இங்கே, இப்போதே முக்தி பெறலாம், அதற்காக மரணம் வரை காத்திருக்க வேண்டாம் என்று வேதாந்தம் போதிக்கிறது. ஆன்ம அனுபூதியே முக்தி. ஒரு கணம் ஆயினும் அதனை அனுபவித்துவிட்டால் பின்னர் இந்த உலக மாயையில் ஒருவன் சிக்குவதில்லை; நமக்குக் கண்கள் இருப்பதால் இந்த உலகைக் கண்டுதான் தீர வேண்டும், ஆனால் அதன் உண்மை எப்போதும் நமக்குப் புரிந்திருக்கும். அதன் உண்மை இயல்பை நாம் உணர்ந்துவிட்டோம்.

மாறாத ஆன்மாவைத் 'திரை' மறைத்திருக்கிறது. திரை விலகுகிறது, நாம் அதன் பின்னால் இருக்கும் ஆன்மாவைக் காண்கிறோம். மாறுதல்கள் எல்லாம் திரையிலேயே. மகானில் இந்தத் திரை மெல்லியதாக உள்ளது. அவரிடம் உண்மை ஏறக்குறைய முழுமையாகப் பிரகாசிக்கிறது. பாவியில் இந்தத் திரை தடித்ததாக இருக்கிறது. அவன் பின்னாலும், மகானின் பின்னால் இருந்த அதே ஆன்மாதான் உள்ளது என்பதை

நாம் உணரத் தவறிவிடுகிறோம் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஒருமையை அடையும்போது எல்லா ஆராய்ச்சிகளும் நின்றுவிடுகின்றன. முதலில் நாம் பகுக்கிறோம், பின்னர் தொகுக்கிறோம். எல்லா சக்திகளுக்கும் பின்னால் இருக்கக் கூடிய ஒரே சக்தியை விஞ்ஞானம் தேடுகிறது. அந்த அறுதி ஒருமையைப் பௌதிக விஞ்ஞானம் முற்றிலுமாகக் கண்டு பிடிக்கும்போது அது முடிவை அடைகிறது. ஒருமையை அடைந்தபின் நாம் ஓய்வு கொள்கிறோம். அறிவே அறுதி யானது.

விஞ்ஞானங்களுக்கெல்லாம் தலைசிறந்ததாகிய மதம் நீண்ட நெடுங்காலத்திற்கு முன்னதாகவே இந்த அறுதி ஒருமையைக் கண்டுவிட்டது. அதனை அடைவதே ஞான யோகத்தின் லட்சியம். பிரபஞ்சத்தில் ஒரே ஆன்மாதான் உள்ளது. எல்லா ஜீவான்மாக்களும் அந்தப் பரமான்மாவின் வெளிப்பாடுகள் மட்டுமே. ஆனால் பரமான்மா அதன் வெளிப்பாடுகளைவிட எல்லையற்ற மடங்கு உயர்வானவர். எல்லாமே பரமான்மா அல்லது பிரம்மமே. மகான், பாவி, ஆடு, புலி, கொலைகாரன் என்று யாரிலும் சரி, உண்மை என்ற ஒன்று இருக்குமானால் அது ஆன்மாவே. ஏனெனில் அதைத் தவிர வேறு எதுவும் இல்லை. 'உண்மை ஒன்றே. மகான்கள் அதைப் பல்வேறாக அழைக்கிறார்கள்'. இதைவிட உயர்ந்த அறிவு ஒன்று இருக்க முடியாது. யோகத்தால் தூய்மைப் படுத்தப்பட்ட உள்ளத்தில் இந்த உண்மை பிரகாசிக்கிறது. யோகம், தியானம் இவற்றின்மூலம் உள்ளம் தூய்மையாகின்ற அளவிற்கு அனுபூதியின் பிரகாசமும் தெளிவாக இருக்கும். இது நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கண்டுபிடிக்கப் பட்டுவிட்டது. ஆனால் இன்னும் அது அந்த இனம் முழுவதன் சொத்து ஆகவில்லை; குறிப்பிட்ட சிலரின் உடைமையாகவே உள்ளது.

## 4

**ம**னிதர்கள் என்று நாம் சொல்கின்ற அனைவரும் உண்மை யில் இன்னும் மனிதர்கள் ஆகவில்லை. ஒவ்வொருவனும் தன் சொந்த மனத்தால் உலகை எடைபோட வேண்டும். உயர்ந்த விஷயங்களைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமானது. பெரும்பாலான மக்களைப் பொறுத்தவரையில் தனிக் கருத்துக் களைவிடச் சடங்குகளும் வழிபாடுகளுமே இன்றியமையாததாக

இருக்கிறது. உதாரணம் ஒன்றைப் பார்ப்போம். ஓர் இந்துவும் ஒரு சமணனும் பம்பாயில் ஒரு பணக்கார வணிகனின் வீட்டில் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தனர். அந்த வீடு கடலுக்கு அருகில் இருந்தது. விளையாட்டு நீண்டுகொண்டே போனது. அப்போது கடலில் நீரேற்றம் உண்டாயிற்று. மாடியில் விளையாடிக் கொண்டிருந்த அவர்கள் அதைக் கவனித்தனர். நீர்மட்டம் உயர்வதும் தாழ்வதும் ஆகிய இந்த நீரேற்றம் தேவர்களின் விளையாட்டு, கடலின் அடியில் உள்ள ஒரு மிகப்பெரிய குழியில் அவர்கள் தண்ணீரை விடுவதும் பின்னர் வெளியில் எடுப்பதும்தான் இவ்வாறு வெளிப்படுகிறது என்று ஒருவன் விளக்கினான். மற்றவன் சொன்னான்: இல்லை, தேவர்கள் தண்ணீரை எடுத்துத் தங்கள் உபயோகத்திற்காக ஒரு மலை உச்சிக்குக் கொண்டு செல்கிறார்கள். உபயோகம் முடிந்ததும் கொட்டிவிடுகிறார்கள்.

இவற்றை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான் ஓர் இளம் மாணவன். அவன் சிரித்துவிட்டு, 'இதோ பாருங்கள், சந்திரனின் ஈர்ப்பாற்றல்தான் கடல்நீரில் ஏற்ற இறக்கங்களை உண்டாக்குகின்றன.' என்று சொன்னான். இந்துவுக்கும் சமணனுக்கும் வந்ததே கோபம்! 'எங்களை முட்டாள் என்று நினைத்தாயா? தண்ணீரைக் கட்டியிழுக்கச் சந்திரன் என்ன கயிறும் வடமுமா வைத்திருக்கிறான்? அல்லது கயிறுதான் அவ்வளவு தூரம் எட்டிவிடுமா?' என்று அவர்கள் அந்த இளைஞன்மீது ஆத்திரப்பட்டனர். அவன் சொன்ன விளக்கம் முட்டாள் தனமானது என்று கூறி அதை ஏற்க மறுத்துவிட்டனர்.

அப்போது அந்த வீட்டிற்குச் சொந்தக்காரன் அங்கே வந்தான். அவன் இரு தரப்பினரையும் சமாதானப்படுத்தினான். அவன் படித்தவன். இளைஞன் கூறியதில் உள்ள உண்மை அவனுக்குத் தெரியும். ஆனால் அந்த இந்துவுக்கும் சமணனுக்கும் எதையும் புரியவைக்க முடியாது என்பதைப் புரிந்துகொண்ட அவன் சைகைமூலம் அந்த மாணவனைச் சற்று அமைதிப்படுத்திவிட்டு, அவர்கள் புரிந்து கொள்ளும் வகையில் ஒரு விளக்கம் கொடுத்தான். 'நண்பர்களே, அதோ கடலுக்கு நடுவில் ஒரு பெரிய மலைபோன்ற பஞ்சு இருக்கிறது. நீங்கள் பஞ்சைப் பார்த்திருப்பீர்கள் அல்லவா? எனவே நான் என்ன சொல்கிறேன் என்பது உங்களுக்குப் புரியும். அந்தப் பஞ்சுமலை கடல்நீரை உறிஞ்சுகிறது. அப்போது கடல்நீர் பின்வாங்க ஆரம்பிக்கும். உடனே தேவர்கள் வந்து, அந்தப் பஞ்சுமலைமீது ஆடிக்

களிக்கத் தொடங்குகிறார்கள். அவர்களின் எடை காரணமாக பஞ்சு உறிஞ்சிய நீர் வெளிவருகிறது. விஷயம் இவ்வளவுதான். இந்தத் தேவர்கள் இருக்கிறார்களே, அவர்கள்தான் கடல்நீரின் ஏற்ற இறக்கத்திற்குக் காரணம். பாருங்கள், இந்த விளக்கம் எவ்வளவு எளிமையாக, அறிவுபூர்வமானதாக இருக்கிறது! உங்களாலும் புரிந்துகொள்ள முடிகிறது' என்றான் அவன். சந்திரனின் ஈர்ப்பாற்றலைப் பரிகசித்த அந்த மேதாவிகளுக்குப் பஞ்சுமலையும், தேவர்களின் ஆட்டமும் உண்மையற்றதாகத் தோன்றவில்லை! அவர்களைப் பொறுத்தவரை தேவர்கள் உண்மை, பஞ்சும் உண்மை, இனி என்ன? இரண்டையும் இணைத்துக் கடலின் நீரேற்றத்திற்கு ஒரு விளக்கம் கொடுக்க வேண்டியதுதான்!

'வசதி' என்பது உண்மைக்கு உரைகல் ஆகாது. மாறாகப் பல நேரங்களில் உண்மை என்பது 'வசதி'யிலிருந்து வெகு தொலைவிலேயே இருக்கிறது. உண்மையை அடைய வேண்டும் என்று ஒருவன் உண்மையாகவே விரும்பினால் அவன் வசதியை நாடக் கூடாது. எல்லா வசதிகளையும் விடுவது அவ்வளவு சுலபமல்ல. ஆனால் ஞானி அவற்றை விட்டேயாக வேண்டும். அவன் தூயவனாக வேண்டும்; எல்லா ஆசைகளையும் கொன் றொழிக்க வேண்டும்; தன்னை ஒருபோதும் உடம்புடன் இணைத்துப் பார்க்கவே கூடாது. அப்போது, அப்போது மட்டுமே உண்மை அவனது இதயத்தில் ஒளிரும்.

தியாகம் தேவையான ஒன்று. ஜீவான்மாவை இல்லாமல் செய்வது என்ற இந்த உண்மைதான், தியாகம் என்பதை எல்லா மதங்களிலும் ஓர் அம்சமாக ஆக்கியுள்ளது. யாகங்களில் தேவர் களுக்குப் பல்வேறு பொருட்கள் சமர்ப்பிக்கப்படுகின்றன. இவை உண்மையான சமர்ப்பணம் அல்லது தியாகத்திற்கு ஓர் அடையாளமே ஆகும். ஆன்மாவாகத் தோன்றிக் கொண்டிருக் கின்ற ஜீவான்மாவைச் சமர்ப்பிப்பதே, அதனைத் தியாகம் செய்வதே உண்மையான தியாகம். இதன்மூலமே ஆன்மாவை அதாவது பரமான்மாவை அடைய முடியும்.

உடம்பைப் பாதுகாப்பதற்கு ஞானி முயலக் கூடாது, அப்படி நினைக்கவும் கூடாது. வானமே இடிந்து வீழ்ந்தாலும் அவன் நிலைகுலையாமல் வலிமையுடன் உண்மையைத் தொடர்ந்து செல்ல வேண்டும். பித்துக்குளித்தனமாக இருக்க விரும்புவோர் இதைச் செய்ய முடியாது. இது ஒரு வாழ்நாள் முழுவதும், இல்லையில்லை, நூற்றுக்கணக்கான பிறவிகளில்

செய்ய வேண்டிய வேலை. இறைவனை உள்ளே உணர்வதற்கும், சொர்க்கம் சகுணக் கடவுள் போன்றவற்றை விடுவதற்கும், எந்தப் பிரதிபலனையும் எதிர்பார்க்காமல் இருப்பதற்கும் உரிய துணிவு மிகச்சிலரிடமே இருக்கும். இதைச் சாதிக்க மிகவும் திடமான சங்கல்பம் வேண்டும். சிறிது சலனம்கூட பயங்கர பலவீனத்தின் அறிகுறியே.

மனிதன் எப்போதும் பூரணனாகவே இருக்கிறான். அவன் பூரணன் அல்ல என்றால் ஒருபோதும் அவனால் பூரணனாக முடியாது. ஆனால் அவன் அதை உணர வேண்டும். புறக் காரணங்களால் கட்டுப்படுகின்ற நிலையில் இருக்கும்போது அவன் அழியக்கூடிய ஒரு சாதாரண மனிதனாகவே இருப்பான். கட்டுப்பாடுகளைக் கடந்த நிலையில் மட்டுமே அழிவின்மை, மரணமின்மை என்பதெல்லாம் உண்மையாக இருக்க முடியும்.

ஆன்மாவில் எந்தச் செயல்பாடும் இல்லை. அப்படி இருப்ப தாக நினைப்பது வெறும் மனமயக்கம். மனிதன் எப்போதும் ஆன்மாவுடன் தன்னை ஒன்றுபடுத்திக் கொள்ள வேண்டுமே தவிர உடம்புடனும் மனத்துடனும் இணைத்துக் கொள்ளக் கூடாது. தன்னை ஒரு சாட்சியாக அவன் உணர வேண்டும். அப்போது அவன், தன்னைக் கடந்து செல்கின்ற இந்தப் பிரபஞ்ச நிகழ்ச்சிகளின் அழகைக் கண்டு ரசிக்க முடியும். 'நானே பிரபஞ்சம், நானே பிரம்மம்' என்றுகூட அவன் தனக்குள் அடிக்கடிச் சொல்லிக்கொள்ள வேண்டும். ஒன்றேயான ஆன்மா வுடன் மனிதன் தன்னை உண்மையாக ஒன்றுபடுத்திக் கொள்ள முடியுமானால் அவனால் எதையும் சாதிக்க முடியும்; ஜடப் பொருள் அனைத்தும் அவனுக்கு அடிமையாகும். 'வெண்ணை யைக் கடைந்தெடுத்தபின் அதைத் தண்ணீரிலோ பாலிலோ இடலாம். அது அவற்றுடன் கலக்காது. அதுபோல் மனிதன் ஆன்மாவை ஒருமுறை உணர்ந்துவிட்டால் அதன்பின் அவன் அதனால் கட்டுப்பட மாட்டான்' என்பார் ஸ்ரீராமகிருஷ்ணர்.

'[உயரப் பறக்கின்ற] ஒரு பலூனிலிருந்து பார்க்கும்போது சிறிய வேறுபாடுகள் எதுவும் தெரிவதில்லை. மனிதன் போதிய அளவு உயர்நிலையை அடையும்போது நல்லவன், தீயவன் போன்ற வேற்றுமைகள் தெரிவதில்லை'. 'பானை சுடப்பட்டு விட்டால் அதன்பிறகு அதன் வடிவத்தை மாற்ற முடியாது. அதுபோல் இறைவனால் தொடப்பட்டு, ஞானத்தீயில் சுடப் பட்ட மனம் மாறாது'.

தத்துவம் சம்ஸ்கிருதத்தில் 'தர்சனம்' (தெளிந்த காட்சி) என்று கூறப்படுகிறது. மதம் என்பது செயல்முறைத் தத்துவம். வெறும் கொள்கைகளுக்கும் கற்பனைத் தத்துவங்களுக்கும் இந்தியாவில் அதிக மதிப்பில்லை. அங்கே மத அமைப்பு இல்லை, மதப் பிரிவு இல்லை, கொள்கைகள் இல்லை.

துவைதிகள், அத்வைதிகள்—இவர்களே இரு பெரும் பிரிவுகள். 'முக்திக்கு வழி இறையருள். ஒருமுறை காரணகாரிய நியதி செயல்படத் தொடங்கிவிட்டால் அதை நிறுத்த முடியாது. அந்த நியதியால் கட்டுப்படாத இறைவன் மட்டுமே அதை நிறுத்த முடியும். அவனது அருளால் நாமும் அதைச் சாதிக்க முடியும்' என்று துவைதிகள் கூறுகிறார்கள். அத்வைதிகளோ, 'சுதந்திரமான ஏதோ ஒன்று இந்த இயற்கையின் பின்னால் உள்ளது. அனைத்து நியதிகளையும் கடந்த அதனை அறிவ தால்தான் நமக்குச் சுதந்திரம் வாய்க்கிறது. சுதந்திரமே முக்தி' என்கிறார்கள். துவைதம் ஒருபக்க உண்மை மட்டுமே, அத்வைதமோ அறுதி நிலைக்குச் செல்கிறது.

முக்திக்கான மிக எளிய பாதை தூய்மை அடைதல். நாம் சம்பாதிப்பதே நமக்கு உரியது ஆகிறது. எந்தச் சாஸ்திரங்களோ, எந்த நம்பிக்கைகளோ நம்மைக் காப்பாற்ற முடியாது. கடவுள் என்று ஒருவர் இருப்பாரானால் அவரை எல்லோரும் காண முடியும். சூடாக இருக்கிறது என்பதை யாரும் சொல்லித் தர வேண்டியதில்லை. எல்லோரும் அதைத் தனக்குத்தானே உணர்ந்துகொள்ள முடியும். கடவுள் விஷயமும் அதுபோலவே. எல்லா மனிதர்களின் உணர்விலும் அவர் ஓர் உண்மையாக ஒளிர வேண்டும்.

'பாவம்' என்பதை மேலைநாட்டினர் கருதும் பொருளில் இந்துக்கள் ஏற்றுக் கொள்வதில்லை. தீய செயல்கள் 'பாவங்கள்' அல்ல. அவற்றைச் செய்வதால் நாம் ஏதோ ஓர் அரசனை அவமதிக்கவில்லை; நமக்கு நாமே துன்பம் இழைத்துக் கொள் கிறோம், அவ்வளவுதான். அதற்கான தண்டனையை நாம் அனுபவித்தேயாக வேண்டும். தனது விரல்களைத் தீயில் விடுவது பாவம் அல்ல, ஆனால் தீயில் விரலை நீட்டியவன் சூட்டை அனுபவித்தே தீர வேண்டும்.

எல்லா செயல்களும் குறிப்பிட்ட விளைவுகளை உண் டாக்குகின்றன; 'ஒவ்வொரு செயலும் செய்தவனிடமே திரும்பி வருகின்றன'. மும்மை வாதம் (Trinitarianism), ஏக வாதத்தை விட(Unitarianism, இது துவைதக் கொள்கை. இதன்படி

இறைவனும் மனிதனும் நிரந்தரமாக வேறுபட்டவர்கள்.) உயர்ந்தது. நாம் உயர்நிலைக்குச் செல்வதில் முதல் படி நம்மை நாம் இறைவனின் குழந்தைகளாக உணர்வது, கடைசிப் படி நம்மை ஒன்றேயான ஆன்மாவாக உணர்வது.

## 5

அழியாமல் என்றென்றும் நிலைக்கக்கூடிய உடல்கள் இருக்க முடியாதா என்ற கேள்வி எழலாம். இந்தக் கேள்வி நியாயமற்றது. மாறக்கூடிய சில மூலகங்களின் குறிப்பிட்ட சேர்க்கையையே 'உடல்' என்கிறோம். எனவே, அழியக்கூடியது என்பது அதன் இயல்பிலேயே உள்ளது. நமக்கு மாற்றம் என்பதே இல்லாமல் போகும்போது, நாம் உடல் என்று அழைக்கின்ற ஒன்று நமக்கு இருக்காது. காலம், இடம், காரணகாரிய நியதி இவற்றின் எல்லையைக் கடந்த 'ஜடப்பொருள்' ஜடப்பொருளாக இருக்காது. காலமும் இடமும் நமக்குள்ளேயே இருக்கின்றன. நிலையான பொருள் நாம் மட்டுமே. உருவம் உடையவை அனைத்தும் நிலையற்றவை. அதனால்தான் எல்லா மதங்களும், 'கடவுளுக்கு உருவம் இல்லை' என்று கூறுகின்றன.

மனேந்தர் ஒரு கிரேக்க-பாக்ட்ரீய மன்னன். அவன் மிலிந்தர் என்னும் புத்த பிட்சுவால் கி.மு. 150-ஆம் ஆண்டுவாக்கில் புத்த மதத்திற்கு மாற்றப்பட்டான். அவன் இளம் பிட்சுவான தன் குருவிடம், '(புத்தரைப் போன்ற) ஒரு நிறை மனிதர் தவறு செய்ய முடியுமா, குற்றங்கள் புரிய முடியுமா?' என்று கேட்டான். அதற்கு அந்த இளம் பிட்சு கூறினார்: நிறை மனிதன், தான் அனுபவிக்காத சில சாதாரண விஷயங்களைப்பற்றி அறியாதவனாக இருக்கலாம். ஆனால் தனது உள்ளுணர்வால் அறிந்து அனுபவித்த ஒரு விஷயத்தில் அவன் ஒருபோதும் தவற முடியாது. அவன் இங்கேயே இப்போதே பூரணனாக இருக்கிறான். பிரபஞ்சத்தின் சாரத்தை, அதன் உண்மையை, அதன் முழு ரகசியத்தை அவன் அறிந்திருக்கிறான். ஆனால் அந்த உண்மை, காலம் மற்றும் இடத்தின்மூலம் வெளிப்படும்போது உண்டாகின்ற பல்வேறு புற வேறுபாடுகளை ஒருவேளை அவன் அறிந்திருக்க மாட்டான். அவனுக்குக் களிமண் தெரியும், ஆனால் அதிலிருந்து செய்யக்கூடிய எல்லா உருவங்களையும் அறிந்திருக்க மாட்டான். அவனுக்கு ஆன்மாவைத் தெரியும், ஆனால் அதன் வெளிப்பாடான ஒவ்வோர் உருவங்களையும் ஒவ்வொரு சேர்க்கைகளையும் அறிந்திருக்க மாட்டான். அதேவேளையில், நம்மைப்போல் அவன் சாதாரண அறிவுகளையும் பெற்றிருக்க

வேண்டும். அவன் நினைத்தால் நம்மைவிட மிக விரைவில் அவற்றை அறிந்துகொள்ள முடியும். ஏனெனில் அவன் அளவற்ற ஆற்றல் உடையவன்.

முற்றிலுமாகக் கட்டுப்படுத்தப்பட்ட மனத்தின் ஒளி எந்தப் பொருளின்மீது விழுகிறதோ, அது அந்தக் கணமே அதன் வசப்படுகிறது. இதைப் புரிந்துகொள்வது மிகவும் இன்றியமை யாதது. ஏனெனில் ஏசு, புத்தர் போன்றோருக்குச் சாதாரண அறிவைப் பொறுத்தவரையில் தவறுகள் நேர வாய்ப்பு உண்டா இல்லையா என்பதற்குச் சில முட்டாள்தனமான விளக்கங்கள் கொடுக்கப்படுகின்றனவே அவற்றை நாம் தவிர்க்க முடியும். அவர்களின் வாழ்வில் அத்தகைய சில தவறுகள் நேர்ந்திருப்பது உண்மை என்பது நமக்குத் தெரியும். அவர்களது உபதேசங் களைச் சீடர்கள் தவறாக எழுதி வைத்துவிட்டார்கள் என்று சீடர்களைக் குற்றம் சாட்டக் கூடாது. அவர்களது வார்த்தை களுள் சில உண்மை, சில தவறு என்று கொள்வது பொருத்த மற்றது. முழுமையாக ஏற்றுக்கொள்ள வேண்டும், அல்லது முழுமையாக விட வேண்டும். தவறானவற்றிலிருந்து சரியான வற்றைத் தேர்ந்தெடுக்க நம்மால் எப்படி முடியும்!

ஒருமுறை நடந்த நிகழ்ச்சி மறுமுறையும் நடக்கக்கூடும். ஏதாவது மனிதன் எப்போதாவது நிறைநிலையை அடைந்திருந் தான் என்றால் நம்மாலும் அடைய முடியும். இங்கே, இப்போதே நம்மால் அந்த நிலையை அடைய முடியவில்லை என்றால், சொர்க்கத்திலோ, நாம் கற்பனை செய்ய முடிந்த வேறெந்த உலகிலோ, வேறெந்த நிலையிலோ அதை அடைய முடியாது. ஏசுநாதர் நிறைநிலையை அடையாதவர் என்றால் அவரது பெயரைத் தாங்கி நிற்கின்ற மதம் வீழ்ந்துவிடும். அவர் அந்த நிலையை அடைந்திருந்தார் என்றால் நம்மாலும் அடைய முடியும்.

நிறைமனிதன் ஆராய்ச்சி செய்வதில்லை; 'அறிவது' என்று நாம் எதைச் சொல்கிறோமோ, அந்தப் பொருளில் எதையும் அவன் 'அறிவதும்' இல்லை. நமது அறிவு எல்லாம் வெறும் ஒப்பிடுதல் மட்டுமே. அந்த நிறைநிலையாகிய தனிநிலையில் ஒப்பிடுவதோ வகைப்படுத்துவதோ முடியாத காரியம்.

பகுத்தறிவை விடக் குறைவாகத் தவறக்கூடியது இயல் புணர்ச்சி. பகுத்தறிவு மேலானது, தன்னைவிட மேலான உள்ளுணர்வுக்கு இட்டுச்செல்லக் கூடியது. உள்ளுணர்வுக்கும் தந்தையாக இருப்பது ஞானம். இயல்புணர்ச்சி போலவே

ஞானமும் தவறாதது, ஆனால் இது உயர்ந்த தளத்தில் உள்ளது.

உயிர்ப்பிராணிகளில் மூன்று நிலை வெளிப்பாடுகள் உள்ளன—

1. ஆழ்ந்த உணர்வுநிலை (Sub-conscious): இது எந்திரத் தனமானது, தவறாதது.
2. உணர்வுநிலை (Conscious): சாதாரண அறிவு, தவறக் கூடியது.
3. உணர்வுகடந்த நிலை(Superconscious): உள்ளுணர்வு, தவறாதது.

இந்த மூன்று நிலைகளும் மிருகம், மனிதன், தெய்வம் என்று மூவரிலும் விளக்கம் பெறுகிறது. நிறைநிலை அடைந்த மனிதன், தான் பெற்ற அறிவைச் செயல்படுத்த வேண்டியது மட்டுமே எஞ்சியுள்ளது. அவன் தனக்கென எதையும் நாடா மல், உலகிற்கு நன்மை செய்வதற்காக மட்டுமே வாழ்கிறான். எதிர்மறையே வேறுபாடுகளை உண்டாக்குகிறது. நேரானது, அனைத்தையும் தன்னுள் அடக்கியவாறு விரிந்து செல்கிறது. இப்படி விரிந்து செல்வதன் மிகவும் பொதுமைப்படுத்தப்பட்ட ஒன்றுதான் ஸத் அல்லது இருப்பு.

'தொடர்ந்து நடைபெறும் நிகழ்ச்சிகளை விளக்குவதற்கு மனம் எழுதும் சுருக்கெழுத்தே நியதி.' ஆனால் நியதி என்ற தனியான ஒன்று கிடையாது. இந்த உலகில் தொடர்ந்து நடை பெறுகின்ற சில நிகழ்ச்சிகளின் ஒழுங்குமுறையை விளக்கு வதற்கு நாம் அந்தச் சொல்லைப் பயன்படுத்துகிறோம். இந்த நியதியை ஒரு மூடநம்பிக்கையாக, தவிர்க்க முடியாத ஒன்றாக, நாம் அடிபணிந்தே தீரவேண்டிய சட்டமாக உருவெடுக்கும் படி விட்டுவிடக் கூடாது. பகுத்தறிவைச் செலுத்தி ஆராயும் போது தவறு நேரத்தான் செய்யும். ஆனால் அந்தத் தவறுகளை வெற்றிகொள்வதற்காக நாம் நிகழ்த்தும் போராட்டம் நம்மைத் தேவர்கள் ஆக்குகிறது. தவறான ஒன்றை வெளியேற்றுவதற்கு இயற்கை செய்யும் போராட்டமே நோய். அதுபோல் நம்மிடம் உள்ள மிருகத்தை வெளியேற்றுவதற்கு தெய்வீகம் நடத்தும் போராட்டமே பாவம் எனப்படுகிறது. தெய்வ நிலைக்கு உயர வேண்டுமானால் நாம் 'பாவம்' செய்ய வேண்டும் (அதாவது தவறுகள் செய்ய வேண்டும்).

யாரையும் பார்த்து இரக்கப் படாதீர்கள், எல் லோரையும் சமமாகப் பாருங்கள். சமத்துவமின்மை என்ற

ஆதிபாவத்திலிருந்து உங்களைத் தூய்மைப்படுத்திக் கொள் ளுங்கள். நாம் எல்லோரும் சமம். 'நான் நல்லவன், நீ தீயவன், நான் உன்னைத் தீமையிலிருந்து மீட்கப் போகிறேன்' என்று நினைக்காதீர்கள். சமத்துவமே சுதந்திரத்தின் அடையாளம். பாவிகளுடனும் குடிகாரர்களுடனும் ஏசுநாதர் வாழ்ந்தார். அவர் ஒருபோதும் தன்னை ஒரு பீடத்தின்மீது நிறுத்திக் கொள்ளவில்லை. பாவிகள்தான் பாவத்தைக் காண்பார்கள். மனிதனைப் பார்க்காதே, இறைவனை மட்டுமே பார்.

நாமே நமக்குச் சொர்க்கத்தை உருவாக்கிக் கொள்கிறோம். நரகத்தில்கூடச் சொர்க்கத்தை உருவாக்க நம்மால் முடியும். பாவிகள் நரகத்தில் மட்டுமே இருப்பார்கள். நாம் அவர்களைக் காண்கிறோம் என்றால் நாம் இங்கே நரகத்தில் இருப்பதாகத் தான் அர்த்தம்.

காலத்திற்கோ இடத்திற்கோ கட்டுப்பட்டதல்ல ஆன்மா. 'நானே இருப்பவன், நானே அறிவுப் பொருள், நானே ஆனந்தம், நானே அவன், நானே அவன்' என்பதை அனுபூதியில் உணர். பிறப்பில் மகிழ்ச்சிகொள், இறப்பில் மகிழ்ச்சிகொள், இறையன் பில் மூழ்கி எப்போதும் மகிழ்ச்சியாக இரு.

உடம்பு என்னும் பந்தத்தை விடு. நாம் உடம்பின் அடிமை களாகிவிட்டோம், நம்மைக் கட்டுகின்ற சங்கிலிகளை முத்த மிடக் கற்றுக்கொண்டுள்ளோம், நமது அடிமைத்தனத்தை நேசிக்கிறோம். 'நாம் உடம்பு, உடம்பு' என்ற ஒரே மந்திரம்தான் நமக்கு. 'உடம்பு' என்ற கருத்தைப் பற்றிப்பிடிக்காதே. இப்போது நாம் வாழ்வதுபோன்ற ஒரு மறுவுலக வாழ்க்கையை எதிர்பார்க் காதே. நமக்கு எவ்வளவோ அன்பிற்கு உரியவர்கள் ஆயினும் அவர்களது உடம்பை நேசிக்காதே, உடம்பை விரும்பாதே.

இந்த வாழ்க்கை நமது ஆசிரியர். மரணம் என்பது மீண்டும் ஒருமுறை நாம் பாடத்தை ஆரம்பிப்பதற்கான ஒரு வாய்ப்பு மட்டுமே. உடம்பு நமது தலைமை ஆசிரியர். தற்கொலை செய்துகொள்வது தவறான ஒன்று, அது 'தலைமை ஆசிரி யரை'க் கொல்வதே ஆகும். அவர் இறந்தால் இன்னொருவர் அவரது பொறுப்பை ஏற்பார், அவ்வளவுதான். எனவே உடலுணர்வைக் கடந்துசெல்லக் கற்றுக்கொள்ளும்வரையில் நமக்கு உடம்பு தேவை. ஒன்று போனால் மற்றொன்று வருகிறது. உடம்புடன் நாம் நம்மை ஒன்றுபடுத்திக்கொள்ளக் கூடாது. நிறைநிலையை அடைவதற்கான ஒரு கருவியாக மட்டுமே அதைப் பார்க்க வேண்டும்.

ராம பக்தனான அனுமன் தமது தத்துவத்தை இவ்வாறு சுருக்கமாகக் கூறுகிறார்—

'எம்பெருமானே, உடம்புடன் என்னை ஒன்றுபடுத்திக் கொள்ளும்போது நான் உன் அடிமை, உன்னிலிருந்து என்றென்றும் வேறுபட்டவன். என்னை உயிருடன் ஒன்றுபடுத்திக் கொள்ளும்போது, தெய்வ ஜோதியாகிய உன்னில் நான் ஒரு பொறி. ஆனால் என்னை ஆன்மாவுடன் ஒன்றுபடுத்திக் கொள்ளும்போது நீயும் நானும் ஒன்றே.'

எனவே ஞானி ஆன்மாவை அடையவே பாடுபடுகிறான், வேறு எதுவும் அவனது நோக்கம் அல்ல.

6

'**எ**தை நினைக்கிறோமோ அது ஆகிறோம்'. எனவே எண்ணம் மிகவும் முக்கியமானது. ஒரு சாது இருந்தார். அவர் மரத்தடியில் வாழ்ந்து மக்களுக்கு உபதேசம் செய்துவந்தார். பாலும் பழமும் மட்டுமே சாப்பிடுவார். கணக்கில்லாமல் 'பிராணாயாமங்கள்' செய்வார். இவற்றால் எல்லாம் தன்னை ஒரு மகான் என்று அவர் கருதிக்கொண்டார். அந்தக் கிராமத்தில் விலைமகள் ஒருத்தியும் வாழ்ந்தாள். இந்தச் சாது தினமும் அவளிடம் சென்று, அவள் செய்வது பாவத் தொழில் என்றும், அதன் விளைவாக அவள் நரகத்திற்குச் செல்ல நேரும் என்றும் எச்சரிப்பார். பாவம், அந்தப் பெண்ணிற்கு அவளது இந்தத் தொழில் தான் வாழ்க்கையை நடத்தும் ஒரே வழியாக இருந்தது. அவளால் அதை விட முடியவில்லை. ஆனால் சாது வர்ணித்த நரகத்தைக் கேட்டு அவள் கதிகலங்கிவிட்டாள். எனவே கண்ணீருடன் இறைவனைப் பிரார்த்தித்து, தன்னைக் காக்குமாறு அழுது வேண்டினாள்.

காலப்போக்கில் அந்தப் பெண்ணும் சாதுவும் இறந்தனர். அவளை அழைத்துச் செல்ல தேவதூதர்கள் வந்தனர், சாதுவை அழைத்துச் செல்லவோ எமகிங்கரர்கள் வந்தனர். சாதுவால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை; 'என்ன இது! வாழ்நாள் முழுவதும் மிகமிகப் புனிதனாக வாழ்ந்தேன் நான், புனிதத்தையே அனைவருக்கும் உபதேசித்தேன். எனக்கு நரகம், இந்த விலைமகளுக்குச் சொர்க்கமா?' என்று அங்கலாய்த்தார். அதற்கு அந்த எமகிங்கரர்கள், 'அந்தப் பெண் இழிந்த செயலில் ஈடுபடுமாறு வற்புறுத்தப்பட்டாள். ஆனால் அவளது மனம் எப்போதும் இறைவனில் பதிந்திருந்தது. தனக்கு நல்ல கதி வேண்டும் என்று அவள் இடையறாமல் பிரார்த்தனை செய்தாள்.

அவள் கேட்டது இப்போது கிடைத்திருக்கிறது. நீ நல்ல காரியங்களைத்தான் செய்தாய். உன் மனமோ பிறரது தீமைகளைக் காண்பதிலேயே மூழ்கி இருந்தது. நீ பாவத்தைக் கண்டாய், பாவத்தையே சிந்தித்தாய், எனவே பாவம் மட்டும் உள்ள இடத்திற்கு நீ போயே தீர வேண்டும்' என்று கூறினர்.

கதையின் கருத்து தெளிவாக உள்ளது. புற வாழ்க்கை பெரிய விஷயமல்ல, இதயம் தூய்மையாக இருக்க வேண்டும். தூய இதயம் நல்லதை மட்டுமே காணும், தீயதைக் காணாது. மனித குலத்தின் பாதுகாவலர்களாக ஒருபோதும் நம்மை நாம் எண்ணிக்கொள்ளக் கூடாது. பாவிகளைக் கரையேற்ற வந்த புனிதர்களாக நம்மை எண்ணி, உயர்ந்த பீடத்தின்மீது நிற்கவும் கூடாது. மாறாக, நம்மை நாம் தூய்மைப்படுத்திக் கொள்வோம். அந்த முயற்சியின் விளைவாகப் பிறருக்கும் நம்மால் உதவி செய்ய முடியும்.

இரண்டுபுறமும் புலன்கடந்த தத்துவத்தால் பௌதீக இயல் எல்லைப்படுத்தப் பட்டுள்ளது. பகுத்தறிவும் அப்படியே. அது பகுத்தறிவின்மையில் தொடங்குகிறது, பகுத்தறிவின்மை யிலேயே முடிவடைகிறது. பகுத்தறிவைப் போதிய அளவு நீட்டும்போது அது அறிவைக் கடந்த ஒரு தளத்தை அடைந்தே யாக வேண்டும். சேகரிக்கப்பட்டு, பகுக்கப்பட்டு, நினைவால் சேமிக்கப்பட்ட அறிவே பகுத்தறிவு. புலன்கள் தரும் அறிவுக்கு அப்பாற்பட்ட ஒரு நிலையை நாம் கற்பனை செய்யவோ உணரவோ முடியாது. பகுத்தறிவைக் கடந்த எதையும் புலன் களால் அறிய முடியாது. பகுத்தறிவின் எல்லையை இங்கே நாம் காண்கிறோம். ஆனாலும், அனைத்தையும் கடந்த ஒரு நிலையின் கணநேர உணர்வை அது நமக்குத் தரவே செய்கிறது.

இப்போது ஒரு கேள்வி எழுகிறது: பகுத்தறிவைக் கடந்து செல்ல மனிதனுக்கு ஏதாவது கருவி இருக்கிறதா? அவனிடம் அத்தகைய ஓர் ஆற்றல் இருப்பதற்கான சாத்தியக்கூறுகள் உள்ளன. எல்லா காலத்திலும் வாழ்ந்த மகான்களும், அத்தகைய ஆற்றல் தங்களுக்கு இருப்பதாகவே கூறியுள்ளனர். ஆனால் ஆன்மீகக் கருத்துக்களையும் ஆன்மீக உணர்வுகளையும் பகுத் தறிவின் மொழியில் சொல்வது இயலாத காரியம், அது தெளி வாகத் தெரிந்த விஷயம். தாங்கள் பெற்ற ஆன்மீக அனுபவங் களை வெளியில் சொல்ல முடியவில்லை என்றே இந்த மகான்கள் கூறியுள்ளார்கள். மொழியால் அவற்றை விளக்க முடியாது. தாங்கள் பெற்ற அனுபவங்களை எல்லோரும்

பெற இயலும் என்பதை மட்டுமே அவர்களால் வற்புறுத்திப் பேச முடிந்தது. நாமும் அந்த அனுபவங்களைப் பெறமுடியுமே தவிர விளக்க முடியாது.

மனிதனிலுள்ள புலன்கடந்த ஒன்றின் வழியாக இயற்கையிலுள்ள புலன்கடந்ததை அறிய விழைகின்ற விஞ்ஞானமே மதம். மனிதனைப் பற்றியே நமக்கு ஏதோ கொஞ்சம்தான் தெரியும், எனவே பிரபஞ்சத்தைப் பற்றியும் அதிகமாக எதையும் நாம் அறியவில்லை. மனிதனைப்பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ளும்போது, ஒருவேளை பிரபஞ்சத்தைப் பற்றியும் அதிகமாக அறிந்துகொள்வோம். எல்லாவற்றிற்கும் மணி மகுடமாக இருப்பது மனிதனே, எல்லா அறிவும் அவனில் உள்ளது.

பிரபஞ்சம் எல்லையற்றது. அதில் நம் புலன்களுக்கு எட்டுவது மிகச்சிறிய அளவே. அந்தப் பகுதியை மட்டுமே நாம் ஏதோ காரணம் காட்டி விளக்க முடியும். எந்த அடிப்படைத் தத்துவத்தையும் நாம் அவ்வாறு விளக்க முடியாது. காரணம் காட்டி விளக்குவது என்பது என்ன? ஒன்றை வகைப்படுத்தி, அதை மனத்தில் உள்ள ஒரு சிற்றறையில் பொருத்துவதுதான் அது. ஒரு புதிய விஷயத்தைப் பார்க்கிறோம். உடனே அதை மனத்தில் ஏற்கனவே உள்ள விஷயங்களுடன் பொருத்திப் பார்க்க முயற்சிக்கிறோம். இந்த முயற்சியே, காரணம் காட்டி விளக்குவது எனப்படுகிறது. நம்மால் பொருத்த முடியும்போது, ஓரளவு திருப்தி அடைகிறோம். ஆனால் இந்த முறையில் நாம் தூல நிலையைக் கடந்து செல்ல முடியாது.

மனிதனால் புலன்களின் எல்லையைக் கடந்து செல்ல முடியும் என்பது கடந்த எல்லா காலங்களிலும் நிரூபிக்கப்பட்டு வந்துள்ளது. புலன்களின்மூலம் இறையனுபூதி பெற முடியாது என்று ஐயாயிரம் வருடங்களுக்கு முன்னரே உபநிடதங்கள் கூறிவிட்டன. இதுவரை நவீன ஆஜ்ஞேயவாதமும் ஏற்றுக்கொள்கிறது. ஆனால் வேதங்கள் இந்த எதிர்மறைப் பக்கத்தைக் கடந்து செல்கின்றன. மனிதனால் இந்தப் புலனுலகைக் கடந்து, தூலப் பிரபஞ்சத்தைக் கடந்து போக முடியும் என்பதைத் தெள்ளத் தெளிவான ஒரு மொழியில் அவை கூறுகின்றன. பனிமூடிக் கிடக்கின்ற கடல்போல் புலன்களில் கட்டுப்பட்டுக் கிடக்கிறான் மனிதன். இந்த வாழ்க்கையில் இருந்தவாறே, வாழ்க்கையைக் கடந்து செல்ல ஏதோ ஒரு வழி கண்டுபிடிக்க அவனால் முடியும். இவ்வாறு புலனுலகைக் கடந்து செல்வதால்

மட்டுமே அவனால் தன் உண்மை ஆன்மாவை அடைய முடியும், தான் உண்மையில் யார் என்பதை உணர முடியும்.

ஞானம் என்பது ஒருபோதும் புலனறிவு அல்ல. நாம் ஒருபோதும் பிரம்மத்தை அறிய முடியாது. நாமே பிரம்மம், அதன் முழுமை, அதன் பகுதி அல்ல. பரப்பு இல்லாத ஒன்றைப் பகுக்க முடியாது. பிரம்மத்தின் பிரதிபிம்பம் காலம் மற்றும் இடத்தின் வழியாகப் பார்க்கப்படும்போது பகுபட்டது போல் தெரிகிறது, அவ்வளவுதான். ஆயிரமாயிரம் பனித் துளிகளில் சூரியனின் பிம்பங்கள் தெரிகின்றன. ஆனால் சூரியன் எப்போதும் ஒன்றே, பல அல்ல. ஞானயோகத்தில், நாம் வேறு பாடு காண்பதை விட்டுவிட்டு, ஒருமையைக் காண வேண்டி யுள்ளது. அங்கே அறிபவன் இல்லை, அறியப்படும் பொருள் இல்லை, அறிவு இல்லை, நீ இல்லை, அவனோ, நானோ இல்லை; இருப்பது ஒன்று மட்டுமே, தனி ஒருமையே.

நாம் எப்போதும் அந்த ஒருமையாகவே இருக்கிறோம். ஒருமுறை முக்தி பெற்றுவிட்டால் நாம் எப்போதும் முக்தர் களாகவே இருப்போம்.

மனிதன் காரணகாரிய நியதியால் கட்டுண்டவன் அல்ல. வேதனையும் துயரங்களும் அவனில் உள்ளவை அல்ல. சூரியனைக் கடந்து செல்லும் மேகங்கள் போன்றவை அவை. மேகங்கள் சூரியனை மறைக்கின்றன. அவை விலகும்போது சூரியன் எந்த மாற்றமும் இல்லாதவனாக இருக்கிறான். மனிதனின் விஷயமும் அப்படியே. அவன் பிறப்பதில்லை, இறப்பதில்லை, காலம் இடம் போன்றவற்றால் கட்டுப்படு வதில்லை. இந்த எண்ணங்களெல்லாம் மனத்தின் பிரதி பலிப்புகள் மட்டுமே. நாம் அவற்றையே உண்மையெனக் கொள் கிறோம். அதனால் அவை மறைத்திருக்கின்ற, மகிமை பொருந்திய உண்மையைக் காணத் தவறிவிடுகிறோம். காலம் என்பது நாம் சிந்திக்கும் ஒரு வழி மட்டுமே. நம்மைப் பொறுத்த வரை நாம் எப்போதும் நிகழ்காலத்திலேயே இருக்கிறோம்.

நம்முடன் தொடர்புபடுத்திக் கொண்டுதான் நன்மையும் தீமையும் இருக்க முடியும்; ஒன்றில்லாமல் மற்றொன்று இருக்க முடியாது, ஒன்றில்லாமல் மற்றொன்றை நினைத்துப் பார்க்க முடியாது. இருமையையும், மனிதனிலிருந்து வேறுபட்டவ ராக ஒரு கடவுளையும் நினைக்கும்வரை நாம் நன்மையையும் தீமையையும் கண்டேயாக வேண்டும். மையத்திற்குச் சென்று, கடவுளுடன் நம்மை ஒன்றுபடுத்திக்கொள்ளும்போது மட்டுமே

புலன்களின் மயக்கத்திலிருந்து நாம் தப்ப முடியும். என்றென்றும் தகிக்கின்ற ஜுரமாகிய ஆசையை விடும்போது, ஓய்வே தராமல் நம்மைத் துரத்திக் கொண்டிருக்கின்ற முடிவற்ற வேட்கையை விடும்போது, என்றென்றைக்குமாக ஆசைகளைத் தணிக்கும்போதுதான் நன்மை-தீமைகளிலிருந்து நாம் தப்புவோம். அப்போதுதான் நாம் இருமைகளைக் கடப்போம்.

ஆசைகளைப் பூர்த்தி செய்வது எரியும் நெருப்பில் எண்ணெய் விடுவது போன்றதாகும். நெருப்பில் விழுகின்ற எண்ணெய் அதைக் கொழுந்துவிட்டெரியச் செய்வதுபோல், பூர்த்தி செய்கின்ற ஆசைகளும் அவற்றை வளர்க்கின்றன. சுழல்கின்ற ஒரு சக்கரத்தில், அதன் மையத்திலிருந்து விலகுந்தோறும் ஓய்வின்றி, வேகமாகச் சுழல வேண்டியிருக்கிறது. எனவே மையத்திற்கு அருகில் வாருங்கள், ஆசைகளைக் கட்டுப்படுத்துங்கள், அவற்றை அடித்து வெளியேற்றுங்கள். தவறான 'நாம்' ஒழியட்டும். அப்போது நமது காட்சி தெளிவு பெறும், நாம் கடவுளைக் காண்போம்.

இந்த வாழ்க்கையையும், சொர்க்கம் போன்ற மறுஉலக வாழ்க்கையையும் துறக்கும்போதுதான் உண்மை ஆன்மாவில் நிலைபெற்றிருக்கின்ற ஒரு நிலையை நாம் அடைய முடியும். எந்த ஒன்றையும் நாம் விரும்பினால், நாம் இன்னும் ஆசையின் பிடியிலேயே இருக்கிறோம். எந்த விருப்பமும் இன்றி, எந்த எதிர்பார்ப்பும் இன்றி ஒரு கணம் இருந்து பாருங்கள், அந்தக் கணமே வழி துலங்கிவிடும். இருப்பவை எல்லாமே நாமாக இருக்கும்போது எதற்கு ஆசைப்படுவது, எதை எதிர்பார்ப்பது? அனைத்தையும் விட்டு, தனக்குள் நிறைவு காண்பதுதான் ஞானத்தின் ரகசியம். 'இல்லை' என்றால் நீ இல்லாமல் போவாய், 'இருக்கிறேன்' என்றால் இருப்பாய். உள்ளே இருக்கின்ற ஆன்மாவை வழிபடு, வெளியில் எதுவும் இல்லை. நம்மைக் கட்டுபவை எல்லாம் மாயை, மனமயக்கம்.

## 7

உலகிலுள்ள அனைத்தும் ஆன்மாவைச் சார்ந்திருக்கின்றன. ஆனால் ஆன்மா எதையும் சார்ந்திருக்கவில்லை. அதுவே நாம் என்று அறிகின்ற அந்தக் கணமே நாம் முக்தர்கள் ஆவோம். மனிதர்கள் என்ற நிலையில் நாம் முக்தர்கள் அல்ல, ஒருபோதும் முக்தி பெறவும் முடியாது. மனித நிலையில் முக்தி என்பது ஒரு முரணான கருத்து. ஏனெனில் மனித நிலை என்பதே மாற்றத்தைக் குறிக்கின்ற ஒன்று, மாற்றமற்ற ஒன்றே

சுதந்திரமானதாக இருக்க முடியும். ஆன்மா மட்டுமே சுதந்திர மானது, அதுவே நமது உண்மையான சாரம். இந்த அக சுதந் திரத்தை நாம் உணர்கிறோம்; பல்வேறு கொள்கைகள், பல்வேறு நம்பிக்கைகள் என்று எத்தனையோ இருந்தாலும் அந்தச் சுதந் திரத்தை நாம் அறிகிறோம்; நமது ஒவ்வொரு செயலும் நாம் அறிகிறோம் என்பதையே நிரூபிக்கின்றன.

சங்கல்பம் சுதந்திரமானது அல்ல. சுதந்திரம்போல் தெரி வது ஆன்மாவின் பிரதிபலிப்பு மட்டுமே. இந்த உலகம் என்பது காரணகாரியம் என்ற ஒரு முடிவற்ற சங்கிலித் தொடர் என்றால் எங்கு நின்று அதற்கு நாம் உதவுவது? வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படுபவனைக் காப்பாற்ற வேண்டும் என்றால், காப் பாற்றுபவன் நிற்பதற்கு ஒரு தண்ணீர் இல்லாத பகுதி வேண் டுமே! அது இல்லாமல் அவன் எங்கே நின்று காப்பாற்றுவான்? 'நான் ஓர் அற்பன், வெறும் புழு' என்று கதறுகின்ற மத வெறியன்கூட, தான் ஏதோ ஒருநாள் மகானாகப் போகிறோம் என்று நினைக்கவே செய்கிறான். புழுவிலும் அவன் மகானைக் காண்கிறான்.

மனித வாழ்வில் இரண்டு லட்சியங்கள் அல்லது நோக் கங்கள் உள்ளன—1. அறிவு (உண்மையறிவு அல்லது விஞ் ஞானம்), 2. ஆனந்தம். சுதந்திரம் இன்றி இந்த இரண்டும் சாத்தியம் அல்ல. வாழ்க்கையை வெற்றிகரமாக்குவது இந்த இரண்டும்தான். எல்லார் வடிவிலும் பாவம் செய்வது நாமே என்பதை உணர வேண்டும், அதேவேளையில், பாவம் செய்பவர் களுக்காக அழவும் வேண்டும். அந்த அளவிற்கு நாம் நமது எல்லையற்ற ஒருமையை உணர்ந்திருக்க வேண்டும். தன்னலம் அல்ல, தன்னலத் தியாகமே நிரந்தர நியதி. எல்லாமே ஒன்று என்றிருக்கும்போது எந்தத் தன்னலத்தை நாடுவது? இங்கே உரிமை என்பது எதுவும் இல்லை, எல்லாம் அன்பு மட்டுமே.

ஏசுநாதர் போதித்த பேருண்மைகள் செயல்முறைப்படுத்தப் படவில்லை. அவரது வழியை நாம் முயற்சி செய்வோம், உலகம் நன்மை பெறுகிறதா என்று பார்ப்போம். இதற்கு மாறான வழி அந்த உண்மைகளை ஏறக்குறைய சாகடித்துவிட்டது. தன்னலம் அல்ல, தன்னலத் தியாகமே பிரச்சினைகளைத் தீர்க்க வல்லது.

உரிமை என்பது எல்லைப்படுத்துவது ஆகும். எனது, உனது என்பதெல்லாம் உண்மையில் கிடையாது. ஏனெனில் நானே நீ, நீயே நான். நமக்கு 'பொறுப்பு' உள்ளது, 'உரிமை' இல்லை. 'நான் பிரபஞ்சமாக இருக்கிறேன்' என்று சொல்,

'நான் ஜான்', 'நான் மேரி' என்றெல்லாம் சொல்லாதே. இந்த வேறுபாடுகள் எல்லாம் மனமயக்கம். இவையே நம்மைப் பந்தத்தில் ஆழ்த்துகின்றன. நான் இன்னார் என்று நினைத்த உடனேயே எனக்கென்று தனியாகச் சில விஷயங்கள் தேவைப் படுகின்றன. உடனே 'எனது, என்னுடையது' என்று சொல்ல ஆரம்பிக்கிறோம். இவ்வாறு புதியபுதிய வேறுபாடுகளை உருவாக்குவது தொடர்கிறது. ஒவ்வொருமுறை நாம் வேறுபாட்டை உருவாக்கும்போதும் மைய ஒருமையிலிருந்து, பகுபடாத பரம்பொருளிலிருந்து மேலும்மேலும் விலகுகிறோம்.

தனித்துவம் என்று இந்த உலகில் ஒன்றே ஒன்றுதான் உள்ளது. நாம் ஒவ்வொருவரும் அதுவே. ஒருமையே அன்பு, ஒருமையே பயமின்மை. வேறுபாடு, நம்மை வெறுப்பிற்கும் பயத்திற்குமே இட்டுச் செல்கிறது. ஒருமை, நியதியைப் பூர்த்தி செய்வதாக உள்ளது.

சிறுசிறு இடங்களை வேலியிட்டுப் பிரித்து, பிறர் அதனுள் புகாமல் தடுப்பது பூமியில் வேண்டுமானால் நடக்கலாம், ஆகாயத்தில் அது நடக்காது. கொள்கைவெறி கொண்ட மதங்கள் அத்தகைய ஒன்றைச் செய்வதில்தான் முனைந்துள்ளன. 'இந்தப் பாதை மட்டுமே முக்தியைத் தரும், மற்ற எல்லாமே தவறு' என்று அவர்கள் சொல்லும்போது இதையே முயற்சிக் கிறார்கள். இந்தச் சிறுசிறு வேலிகளை உடைத்தெறிவதே, அவை நம் கண்களிலிருந்து அகலும்படிச் செய்வதே, எல்லா மதங்களும் இறைவனை நோக்கித்தான் நம்மை அழைத்துச் செல்கின்றன என்பதை அறிவதே நமது நோக்கமாக இருக்க வேண்டும். சிறிய-நான் என்பதை ஒழிக்க வேண்டும். ஞானஸ் நானத்தின்மூலம் ஒரு புதிய வாழ்க்கையில் புகுவதாகச் சொல்கிறோமே, அது இந்த உண்மையை உணர்த்தத்தான். தவறான நாம் என்பது அழிந்து, பிரபஞ்சத்தின் ஒரே ஆன்மா அடையப்படுகிறது என்பதே அந்த நிகழ்ச்சியின்மூலம் குறிப்பிடப் படுகிறது.

வேதங்கள் கர்ம காண்டம் (செயல்பற்றிய பகுதி), ஞான காண்டம் (அறிவு, அதாவது உண்மையறிவு பற்றிய பகுதி) என்று இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மதக் கருத்துக்களின் வளர்ச்சிமுறை முழுவதையும் வேதங்களில் நாம் காணலாம். ஓர் உயர்ந்த உண்மை அடையப்படும்போது, அதை அடைவதற்கு வழியாக இருந்த தாழ்ந்த உண்மை அப்படியே பாதுகாக்கப்படுகிறது. இதன் காரணமாகத்தான்

அந்த வளர்ச்சி முறை முழுவதையும் நம்மால் காண முடிகிறது. இந்த உலகம் முடிவற்றது, ஞானம் பெறுவதற்கான முதற்படிகள் தேவைப்படுகின்ற பலர் எப்போதும் இருப்பார்கள், உயர்ந்தத் தத்துவம் எல்லோராலும் அடையப்படக் கூடியதாக இருந் தாலும் அதனை எல்லோராலும் புரிந்துகொள்ள முடியாது என்பதை நமது ரிஷிகள் உணர்ந்திருந்ததாலேயே அவர்கள் ஒவ்வொரு நிலையையும் பாதுகாத்து வைத்திருக்க வேண்டும்.

ஏறக்குறைய பிற எல்லா மதங்களிலும், கடைசியாக அடையப்பட்ட மிக உயர்ந்தத் தத்துவம் மட்டுமே வைக்கப் பட்டுள்ளது. இயல்பாகவே அதற்கு முந்தைய நிலைகள் எல் லாம் மறைந்துவிட்டன. புதிய பாதைகளோ மிகச் சிலராலேயே புரிந்துகொள்ளப் படுகின்றன. எனவே காலப்போக்கில் அவற் றைப் பலரால் புரிந்துகொள்ள முடியாமல் போகிறது. இதன் விளைவாகத்தான் பழைய சாஸ்திரங்களுக்கும் சம்பிரதாயங் களுக்கும் எதிரான கருத்துக்கள் எழுவதைக் காண்கிறோம். அவற்றை ஏற்றுக்கொள்வதற்குப் பதிலாக இன்றைய மனிதன் அவை சொல்பவற்றிற்குக் காரணகாரியங்களைக் கேட்கிறான்; சாஸ்திரங்கள் சிலவற்றை ஏற்றுக்கொள்ளச் சொல்லும்போது சாஸ்திரங்களையே விலகிச் செல்லும்படிக் கூறுகிறான்.

கிறிஸ்தவ மதத்தின் பெரும்பாலான பகுதியும், கிறிஸ்தவம் அல்லாத பழைய நம்பிக்கைகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் புதிய பெயர்களும் புதிய விளக்கங்களும் கொடுக்கப்பட்டவை யாகவே உள்ளது. அவை எங்கிருந்து எடுக்கப்பட்டனவோ அவை பாதுகாக்கப்பட்டு, அவற்றின் இன்றைய மாறுதலுக்கு உரிய காரணங்களும் முழுமையாக விளக்கப் பட்டிருக்கு மானால் விஷயங்கள் எவ்வளவோ தெளிவாக இருந் திருக்கும்.

வேதங்கள் பழைய கருத்துக்கள் அனைத்தையும் பாது காத்தன. அவை ஏன் பாதுகாக்கப்பட்டன, அவை என்ன, என்பதை விளக்கத்தான் பெரிய விளக்கவுரைகள் எழுதப்பட வேண்டியதாயிற்று. அவற்றின் உண்மைப் பொருள் மறைந்து, வெறும் சொற்பொருளை மட்டுமே பிடித்துக்கொண்டிருந்தால் விளைவது மூடநம்பிக்கைகளே. பல சடங்குகளில் பல்வேறு சொற்கள் ஓதப்படுகின்றன, இன்று அவற்றின் பொருள் புரிய வில்லை, புதிய பொருள் கொடுக்கப்படவும் இல்லை.

கிறிஸ்துவிற்கு வெகுகாலத்திற்கு முன்பே பரிணாமக் கருத்து நிலவியதை வேதங்களில் காண்கிறோம். ஆனால்

டார்வின் அதைச் சரியென்று சொல்லும்வரை அது வெறும் இந்து மூடநம்பிக்கை என்றே கொள்ளப்பட்டது.

பிரார்த்தனை, பூஜை போன்ற புறச் சாதனைகள் எல்லாம் கர்ம காண்டத்தில் உள்ளன. அவற்றை வெறும் சடங்குகள் என்ற நிலைக்குத் தாழ்த்தாமல், தன்னலமின்றிச் செய்தால் அவை நல்லவை. அவை உள்ளத்தைத் தூய்மைப்படுத்துகின்றன. தனக்கு முன்னால் ஒவ்வொருவரும் காக்கப்பட வேண்டும் என்று கர்மயோகி விரும்புகிறான். பிறர் முக்தி பெற உதவுவதையே தனது முக்தியாக அவன் கருதுகிறான். 'கண்ணனின் அடியார்களுக்குச் சேவை செய்வது மிக உயர்ந்த வழிபாடு.' 'உலகின் பாவங்கள் அனைத்தையும் ஏற்று நான் நரகத்திற்குச் செல்வேனாக, உலகம் அதனால் காக்கப்படட்டும்' என்று ஒரு மகான் பிரார்த்தனை செய்தார். இந்த உண்மையான வழிபாடு தீவிரமான தன்னலத் தியாகத்திற்கு இட்டுச் செல்கிறது. நாய்க்குத் தனது புண்ணிய பலன்கள் அனைத்தையும் கொடுத்து அதைச் சொர்க்கத்திற்கு அனுப்பத் தயாராக இருந்த ஒரு சான்றோரைப்பற்றிக் கூறப்படுகிறது. அந்த நாய் அவரிடம் அவ்வளவு நன்றி விசுவாசம் உடையதாக இருந்தது. எனவே அவர், தாம் நரகத்திற்குச் சென்றாலும் அந்த நாய் சொர்க்கத்திற்குப் போக வேண்டும் என்று விரும்பினார்.

ஞானம் மட்டுமே காக்க முடியும் என்று ஞான காண்டம் போதிக்கிறது. முக்தி பெறும்வரை ஞானத்தைச் சார்ந்து வாழ வேண்டும் என்பது இதன் பொருள். அறிபவன் தன்னை அறிகின்ற இந்த ஞானமே முக்கிய லட்சியம். அறிபவன் ஆன்மா மட்டுமே. அது வெளிப்பட்டிருப்பதன் ஒரே நோக்கம் தன்னைத் தான் அறிவதே. கண்ணாடி எவ்வளவு தரமானதாக இருக்குமோ அவ்வளவிற்கு அதனால் தரமான பிம்பத்தைத் தர முடியும். மனிதனே மிக உயர்தரமான கண்ணாடி. அவன் தூயவனாக இருக்கும் அளவிற்கு, அவனால் இறைவனைத் தெளிவாகப் பிரதிபலிக்க முடியும்.

தன்னை இறைவனிடமிருந்து பிரித்து, உடலுடன் ஒன்றுபடுத்திக் காண்கின்ற தவறைச் செய்கிறான் மனிதன். இந்தத் தவறு மாயையால் வருகிறது. மாயை என்றால் மனமயக்கம் என்று கூற முடியாது. உண்மையை உண்மையாகக் காணாமல், வேறு ஏதோ ஒன்றாகக் காண்பதே மாயை. இப்படி நம்மை உடம்புடன் இணைத்துக் கொள்வது பல்வேறு வேறுபாடுகளுக்கு வழிவகுக்கிறது. வேறுபாடுகள் வந்தால் போராட்டம்,

பொறாமை இவற்றைத் தவிர்க்க முடியாது. வேறுபாடுகளைக் காணும்வரை இன்பம் என்றால் என்ன என்பதை நாம் அறிய இயலாது. ‘அறியாமை, வேறுபாடு இந்த இரண்டும் தான் எல்லா துன்பங்களுக்கும் மூல காரணம்’ என்கிறது ஞானம்.

போதிய அளவு உலகினால் பந்தாடப்பட்ட பிறகு மனித னுக்கு முக்தியில் நாட்டம் ஏற்படுகிறது. பிழிந்தெடுக்கின்ற இந்த சம்சாரச் சக்கரத்திலிருந்து விடுபட அவன் வழிதேடுகிறான், ஞானத்தை நாடுகிறான், தான் உண்மையில் யார் என்பதை அறிகிறான், முக்தனாகிறான். அதன்பிறகு அவன் உலகை ஒரு பெரிய எந்திரமாகக் காண்கிறான். ஆனால் தன் விரல்கள் அதில் சிக்கிக்கொள்ளாமல் இருப்பதில் மிகவும் கவனமாக இருக்கிறான்.

சுதந்திரம் அடைந்தவனுக்கு, முக்தனுக்கு, கடமை என்பது இல்லை. சுதந்திரமாக உள்ள ஒருவனை எந்த ஆற்றல் கட்டுப்படுத்த முடியும்? அவன் நன்மை செய்கிறான், ஏனெனில் அது அவனது இயல்பு. ஏதோ கடமையின் அழைப்பிற்காக அவன் நன்மை செய்வதில்லை. ஆனால் புலன்களின் பிடியில் இருப்பவர்களுக்கு இது பொருந்தாது. சிறிய-நான் என்பதைக் கடந்த ஒருவனுக்கே இந்தச் சுதந்திரம் உரியது. அவன் சொந்த ஆன்மாவில் நிலைபெறுகிறான். அவன் எந்த நியதிக்கும் கீழ்ப் படிவதில்லை. அவன் சுதந்திரனாக, பூரணனாக இருக்கிறான். பழைய மூடநம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்துவிட்டு இந்தச் சக்கரத்திலிருந்து வெளியேறிவிட்டான் அவன்.

இயற்கை என்பது நம்மைப் பிரதிபலிகின்ற கண்ணாடி மட்டுமே. மனிதனின் செயல்திறனுக்கு ஓர் எல்லை உள்ளது, ஆனால் ஆசைக்கு அளவில்லை. எனவே நாம் வேலை செய்வதை விட்டுவிட்டு, பிறருடைய செயல்திறனையும் கைவசப்படுத்திக் கொண்டு, அவர்களது உழைப்பின் பலனையும் அனுபவிக்க முற்படுகிறோம்.

வேலை செய்வதற்கு எந்திரங்களைக் கண்டுபிடிப்பது வாழ்க்கையை ஒருபோதும் வளப்படுத்தாது. ஏனெனில் ஓர் ஆசையைப் பூர்த்தி செய்யும்போது அது இன்னோர் ஆசையை எழுப்புகிறது. இவ்வாறு ஆசை என்பது முடிவின்றிச் செல்கிறது. நிறைவேறாத ஆசைகளுடன் சாவது மீண்டும்மீண்டும் பிறப் பதற்கே வழிவகுக்கிறது, ஆசைகளைப் பூர்த்தி செய்வதற்கான வீண் முயற்சியும் முடிவின்றித் தொடர்கிறது. ‘மனிதனாகப்

பிறப்பதற்கு முன்னால் எண்பது லட்சம் பிறவிகளை நாம் எடுத்துள்ளோம்' என்று இந்துக்கள் கூறுகிறார்கள்.

'ஆசையைக் கொல், அதிலிருந்து விடுபடு' என்கிறது ஞானம். அதுதான் ஒரே வழி. காரணகாரிய நியதிகளை எல்லாம் விடு, ஆன்மாவை அறி. சுதந்திரம் மட்டுமே உண்மையான ஒழுக்கத்தை உருவாக்க முடியும். காரணகாரியச் சங்கிலி முடிவற்றதாக இருக்குமானால் முக்தி என்பது கிடைக்கவே முடியாது. நம்மைக் கட்டியிருப்பதுபோன்ற சங்கிலியிலிருந்து விடுபடுவதே முக்தி. காரணகாரியச் சுழலிலிருந்து வெளியேறுவதே சுதந்திரம்.

நன்மையே நமது உண்மையான இயல்பு. நாம் சுதந்திரர்கள், தூயவர்கள். நாம் தீயவர்கள் ஆகவும் முடியாது, தவறு செய்யவும் முடியாது. நமது புலன்களாலும் மனத்தாலும் இறைவனை அறியும்போது அவரை இவர், அவர் என்றெல்லாம் சொல்கிறோம். உண்மையில் இருப்பது ஒன்றே. வேறுபாடுகளும் விளக்கங்களும் எல்லாம் அந்த ஒன்றைப்பற்றியதே.

நாம் எதுவாகவும் ஆவதில்லை; நமது உண்மை ஆன்மாவை மீண்டும் பெறுகிறோம், அவ்வளவுதான். 'அறியாமையும் வேறுபாடும்'தான் துன்பங்கள் அனைத்திற்கும் காரணம் என்று புத்தர் கூறினார். இதுவரை எழுந்த கருத்துக்களுள் மிகச் சிறந்தது இது. எனவே வேதாந்திகள் அதனை அப்படியே எடுத்துக் கொண்டார்கள். மனிதர்களுள் தலைசிறந்தவரான புத்தரின் உள்ளுணர்வையே இது காட்டுகிறது.

## 2. மாயையின் காரணம்

22/24 மார்ச் 1896

மாயையின் காரணம் எது? இந்தக் கேள்வி சென்ற மூவாயிரம் ஆண்டுகளாக எழுப்பப்பட்டு வருகிறது. இதற்குரிய பதில் ஒன்றே: தர்க்கரீதியான ஒரு கேள்வியை என்று உலகம் எழுப்பு கிறதோ அன்று நாம் விடை கூறலாம், இதுதான் பதில். கேள்வி முரண்பாடாக உள்ளது. தனிப் பரம்பொருள் மற்றொன்றைச் சார்ந்ததுபோல் காணப்படுவது வெறும் தோற்றம் மட்டுமே. வரையறையற்ற பரம்பொருள் வரையறுக்கப்பட்டதாக காணப் படுவது மாயையில் மட்டுமே. பரம்பொருள் எல்லையற்றது என்பதை ஏற்றுக்கொள்ளும்போதே, அது வேறு எதனாலும் பாதிக்கப்படாதது என்பதையும் ஏற்றுக்கொள்கிறோம். அது எந்தக் காரணத்திலிருந்தும் வந்ததல்ல. எனவே அதற்கு வெளி யிலுள்ள எதுவும் அதன்மீது செயல்பட முடியாது என்றாகிறது. முதலில், அது வரையறைக்கு உட்படாதது. ஆதலால் எதுவும் அதைப் பாதிக்க முடியாது. வரையறுக்கப்படாத ஒன்றிற்கு இடம், காலம், காரண காரியம் என்பவை இருக்க முடியாது.

மேற்கண்டவற்றை ஒப்புக்கொண்டால், 'இவ்வாறு எதனாலும் மாறாத ஒன்று இப்படி மாறுவதற்குக் காரணம் எது?' என்னும் கேள்வி எழும். ஆனால் இந்தக் கேள்வி வரையறைக்கு உட்பட்ட நிலையிலேயே எழ முடியும். நீங்களோ அதை விட்டுவிட்டு, வரையறை கடந்த நிலையில் அதனைக் கேட்க விரும்புகிறீர்கள். வரையறைக்கு உட்படாத பொருள் வரையறைக்கு உட்பட்டதாகி, காலம், இடம், காரண காரியம் முதலியன ஏற்படும்போதுதான் இந்தக் கேள்வியே எழ முடியும்.

அறியாமையே மாயைக்குக் காரணம் என்ற ஒரே விடையைத்தான் நாம் அளிக்க இயலும். இந்தக் கேள்வியே பொருத்தமற்றது. பரம்பொருளைப் பாதிக்க எதனாலும் இயலாது. அங்கே காரணம் என்பது ஒன்றும் இல்லை. நமக்கு விடை தெரியாது என்பதோ, நாம் அறிவற்றவர்கள் என்பதோ அல்ல; விஷயம் அறிவுக்கு அப்பாற்பட்டது, அதை அறிவெல்லைக்கு உட்படுத்த முடியாது.

'எனக்குத் தெரியாது' என்பதை இரண்டு பொருளில் நாம் பயன்படுத்தலாம். ஒன்று, அந்த அறிவுக்கு நம் அறிவு தாழ்ந்தது. மற்றொன்று அது அறிவுக்கே அப்பாற்பட்டது. X–கதிர்கள் (X–rays) என்பது இப்போது தெரிந்த ஒன்றாகிவிட்டது. இவற்றிற்கான காரணங்கள் இன்னும் விவாதத்தில் இருக்கின்றன. ஆனாலும் இவற்றை நாம் கண்டுபிடித்துவிட முடியும் என்பது நிச்சயம். எனவே இன்னும் X–கதிர்களைப் பற்றி நமக்குத் தெரியவில்லை என்று சொல்லலாம். ஆனால் தனிப்பொருளாகிய இறைவனைப் பற்றியோ நாம் அறியவே இயலாது. X–கதிர்கள் நமது அறிவின் எல்லைக்கு உட்பட்டவை. இன்னும் நமக்கு அவைபற்றித் தெரியாது, அவ்வளவுதான். பரம்பொருளோ அறிவுக்கு மிகவும் தூரத்தில் இருப்பதால் அது அறிவதற்கு உரிய பொருள் என்ற எல்லைக்குள்ளேயே வருவதில்லை. 'அறிபவனை எதனால் அறிய முடியும்?' நாம் எப்பொழுதும் நாமாகவே இருக்கிறோம். நம்மை நாமே அறிவதற்கான பொருளாக ஆக்கிக்கொள்வது எப்படி? அழிவின்மையை நிரூபிக்க நம் முன்னோர்கள் கூறிய வாதங்களுள் இதுவும் ஒன்று. 'நான் இறந்து கிடக்கிறேன்' என்று நினைக்க முயன்றால், எப்படி நினைப்பது? நான் என்னையே பார்த்துக்கொள்கிறேன்—ஏதோவொரு பிணத்தைப் பார்க்கிறேன் என்பதாகவே நினைக்க முடியும். எனவே எனக்கு நானே பொருளாக முடியாதல்லவா?

## 3. வேதாந்தத் தத்துவம்

22/24, மார்ச் 1896

'மனிதன் பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை, சொர்க்கத்திற்குச் செல்வதும் இல்லை. ஆன்மாவைப் பொறுத்தவரையில் மீண்டும் பிறப்பது என்பது பொய்' என்கிறான் வேதாந்தி. ஒரு புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டுவதாக வைத்துக் கொள்வோம். திரும்பு பவை புத்தகங்களின் பக்கங்களே, மனிதன் அல்ல. ஒவ்வோர் ஆன்மாவும் எங்கும் நிறைந்தது. எனவே அது எங்கே போவது, எங்கே வருவது? பிறப்புகள், இறப்புகள் எல்லாம் இயற்கையின் மாறுதல்கள். அவை நம்மில் ஏற்படுவதாக நாம் தவறாக நினைக்கிறோம்.

மறுபிறவி என்பது இயற்கையின் பரிணாமம்; உள்ளிருக் கும் இறைவனின் வெளிப்பாடு.

'ஒவ்வொரு பிறவியும் அதன் முற்பிறவி வினைகளை அடிப் படையாகக் கொண்டது. எனவே முற்பிறவிகளை எல்லாம் காண முடியுமானால், நமக்கு முக்தி கிடைத்துவிடும்' என்று வேதாந்தம் கூறுகிறது. முக்தி வேண்டும் என்னும் விருப்பம்தான், குழந்தையிடம் மத ஈடுபாடாக உருப்பெறுகிறது. சில ஆண்டு களில் எல்லா உண்மைகளுமே ஒருவனுக்கு விளங்கிவிடும் என்று சொல்லலாம். இந்தப் பிறவி நீங்கிய ஒருவன் மறுபிறவிக் காகக் காத்திருக்கும்போது இந்த உலகத்தில்தான் இருக்கிறான்.

ஆன்மாவைப்பற்றிப் பின்வருமாறு கூறலாம்: ஆன்மா வைக் கத்தியால் வெட்ட முடியாது; ஈட்டியால் குத்தவோ, நெருப்பால் எரிக்கவோ, நீரால் நனைக்கவோ, அழிக்கவோ முடியாது. அது எங்கும் நிறைந்தது. எனவே [அது அழிந்து விட்டது என்று எண்ணி] யாரும் அழ வேண்டாம்.

துன்பம் மிகும்போது, நல்ல காலம் வரும் என்று நம்பு கிறோம். நிலையான முக்தி எல்லோருக்கும் உண்டு என்பதே அடிப்படைத் தத்துவம், எல்லோரும் அதை அடைந்தேயாக வேண்டும். முக்தி பெற வேண்டும் என்ற விருப்பத்தால் தூண்டப்பட்டு, நாம் போராடியே தீர வேண்டும். முக்தியைத்

தவிர, மற்ற எல்லா ஆசைகளும் கானல்நீரே. நற்செயல் ஒவ்வொன்றும் அந்த முக்தியின் வெளிப்பாடே என்று வேதாந்தி சொல்கிறான்.

உலகத்தில் பாவமே இல்லாமல் போகின்ற காலம் ஒன்று வரும் என்பதை நான் நம்பவில்லை. அது எப்படி முடியும்? இந்த ஆறு ஓடியவண்ணமே இருக்கிறது. ஒரு முனைவழியே நீர் பெருகி வெளியே செல்கிறது; மற்றொரு முனைவழியே பெருகி உள்ளே புகுந்தவண்ணம் இருக்கிறது.

'நீ தூயவன், பரிபூரணன். நல்லது கெட்டது இரண்டிற்கும் அப்பாற்பட்ட நிலை ஒன்று இருக்கிறது. அதுதான் உனது இயல்பு' என்று வேதாந்தம் கூறுகிறது. இந்த நிலை நல்லதை விட உயர்ந்தது. புண்ணியம் என்பது பாவத்தைப் போன்றது தான்; பிரித்துவைக்கும் தன்மையில் பாவத்தைவிடச் சக்தி குறைந்தது; அவ்வளவுதான்.

பாவம் உண்டு என்பது நமது கொள்கையல்ல. பாவத்தை நாம் அஞ்ஞானம் என்கிறோம்.

உலக விவகாரங்கள், நல்லொழுக்கம் ஆகிய எல்லாம் இந்தப் பிரபஞ்சத்திற்கே பொருந்தும். உண்மையை உள்ளபடிச் சொல்வதானால் அஞ்ஞானம் போன்ற குறைபாடுகள் இறைவனிடம் இருப்பதாக நாம் ஒருநாளும் சொல்ல மாட்டோம். இறைவனைப்பற்றிச் சொல்லும்போது உண்மை-அறிவு-இன்பம் என்று சொல்கிறோம். அவனைப்பற்றி நினைக்க முயன்றாலும், பேச முயன்றாலும் அவன் புலன்களால் அறியக் கூடிய பொருளாகிவிடுவான்; அவனது தன்மையே மாறிவிடும்.

ஒரு கருத்தை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். 'நானே இறைவன்' என்று கூறும்போது அது புலனுலக நிலையில் இருக்கக் கூடாது. புலனுலகத்தில் இருக்கும்போது, 'நான் கடவுள்' என்றால், நீங்கள் பாவம் செய்வதற்குத் தடையாக எது நிற்கும்? எனவே, 'நான் கடவுள்' என்பது நிலைபேறான நிலையைப் பற்றியதாகும். நான் இறைவனானால் புலன்களின் போக்கைக் கடந்தவன் ஆகிறேன். எனவே தீமை செய்ய மாட்டேன். நல்லொழுக்கம் மனிதனின் முடிவான லட்சியம் அல்ல; அது முக்தி என்னும் லட்சியத்தை அடைவதற்கான வழி. இறையுணர்வு பெறுவதற்கு யோகம் ஒரு வழி என்று வேதாந்தம் கூறுகிறது. உள்ளே எழும் முக்திப் பேருணர்வாலேயே இது முடியும் என்றும் பிற அனைத்தும் அதற்கு வழிவிடும் என்றும் வேதாந்தம் கூறுகிறது. முக்தியைக் கருத்தில் கொள்ளும்போது,

நல்லொழுக்கம், நல்வழி எல்லாமே அவற்றிற்கு உரிய இடத்தில் ஒழுங்குபடுத்தப் பட்டுவிடும்.

அத்வைதத் தத்துவத்தைப்பற்றிக் கூறும் குறைகளை எல்லாம் தொகுத்துச் சொன்னால், அது இதுதான்: அத்வைதத் தத்துவத்தில் புலனின்பங்களுக்கு இடமில்லை என்பதே அந்தக் குறை. இதை நாங்கள் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொள்கிறோம்.

வேதாந்தமுறை பெரும் துன்பநோக்கில் தொடங்குகிறது; ஆனால் உண்மையான இன்பநோக்கில் முடிகிறது. புலனின்ப நம்பிக்கைகளை நாங்கள் மறுக்கிறோம்; புலன்களுக்கு அப்பாற் பட்ட அழிவற்ற பேரின்ப அனுபவத்தை ஒப்புக்கொள்கிறோம். உண்மையின்பம் புலன்களில் இல்லை, புலன்களைக் கடந்த நிலையிலேயே உள்ளது. அந்தப் பேரின்பம் ஒவ்வொருவருள் ளும் இருக்கிறது. உலகத்தில் நாம் காணும் புலன்வழி இன்பங்கள் நம்மை ஆசையில் சிக்கவைத்து அழிவுப் பாதைக்கே அழைத்துச் செல்லும்.

எங்கள் தத்துவத்தில் விட்டுவிடுதல் என்பது முக்கிய இடம் பெற்றுள்ளது. விட்டுவிடுவது என்பது ஆன்மாவின் உண்மையை வலியுறுத்துவது. புலனுலகை மறுப்பதால் வேதாந்தம் துன்பநோக்குக் கொண்டதுதான். ஆனால் உண்மை உலகமாகிய பேரின்ப உலகை வலியுறுத்துவதால் அது இன்ப நோக்குக் கொண்டது ஆகிறது.

மனிதனது பகுத்தறிவை வேதாந்தம் பெருமளவில் ஏற்றுக் கொண்டாலும் அறிவைவிட உயர்ந்த ஏதோ ஒன்று இருக்கிறது என்பதையும் அது கூறுகிறது. ஆனால் அதை அறிவின் வழியாகவே உணர வேண்டும் என்பதையும் ஒத்துக் கொள்கிறது.

பழைய மூடக்கொள்கைகளை எல்லாம் விரட்டியடிக்க நமக்குப் பகுத்தறிவு தேவைதான். இவற்றை விரட்டிய பிறகு நிற்பது வேதாந்தமே. அழகான சம்ஸ்கிருத கவிதை ஒன்றில் ஒரு முனிவர் பின்வருமாறு தம்மிடம் கூறுகிறார்: 'நண்பா, நீ ஏன் அழுகிறாய்? உனக்கு அச்சமோ மரணமோ இல்லை. பின்பு நீ ஏன் அழுகிறாய்? உனக்கு எந்தவிதமான துக்கமும் இல்லை. அகன்ற நீலவானம் போன்றவன் நீ. எந்த வகையான மாறு தலும் உனக்கு இல்லை. பல நிற மேகங்களும் எதிரே வந்து ஒரு கணநேரம் விளையாடிவிட்டுப் போகின்றன, வானம் மாறுவதே இல்லை; மேகங்களைத் துரத்துவது மட்டுமே உன் வேலை.'

மடையைத் திறந்து வழியைச் சீராக்க வேண்டும், அவ்வளவு தான். தண்ணீர் தானாக உள்ளே வந்து நிரம்பிவிடும். ஏனெனில் ஏற்கனவே அது அங்கே உள்ளது.

மனிதன் பெரிதும் உணர்வு நிலையிலும், சிறிது உணர்வறு நிலையிலும் இருப்பவன். உணர்வுகடந்த நிலைக்கும் அவனால் போக முடியும். மனிதனாகும்போதுதான் நாம் பகுத்தறிவைக் கடந்த நிலைக்குப் போக முடியும். உயர்வு, தாழ்வு என்னும் சொற்களுக்கு, நிலையற்ற இந்தப் பிரபஞ்சத்தில் தான் பொருள் உண்டு. நிலையான உண்மையுலகில் அவற்றிற்குப் பொருளே இல்லை. அங்கே எந்த வேறுபாட்டிற்கும் இடம் இல்லை. இந்த உலகில் மனிதனே உயர்ந்த படைப்பு. தான் தேவர்களைவிடவும் உயர்ந்தவன் என்றே வேதாந்தி கூறுகிறான். தேவர்களும் கண்டிப்பாக ஒருநாள் இறந்து, பின்னர் மனிதராகப் பிறக்க வேண்டும். மனிதவுடலில்தான் நிறைவு என்பதைப் பெற முடியும்.

நாம் ஏதோ ஒரு கொள்கையை உருவாக்குகிறோம் என்பது உண்மைதான். ஆனால் அதுவே நிறைவானது என்று சாதிக்கக் கூடாது. ஏனெனில் உண்மை என்பது எல்லா கொள்கைகளுக்கும் அப்பாற்பட்டது.

வேதாந்த நெறியை மற்ற நெறிகளுடன் ஒப்பிட்டு, இது ஒன்றே பகுத்தறிவுக்கு ஏற்ற நெறி என்று நிரூபிக்க முடியும் என்றாலும் இது குறைவற்ற முறையல்ல. ஏனெனில் பகுத்தறிவு குறையே அற்றது என்று கூறிவிட முடியாது. மனித மனத்திற்கு எட்டிய ஒரே பகுத்தறிவு முறை இது என்பது மட்டும் உண்மை.

ஒரு நெறி ஆற்றல் மிக்கதாக வேண்டுமானால், அது பலரிடையே பரவ வேண்டும் என்பது ஓரளவு உண்மை. வேதாந்த நெறியைப்போல் பெரிதும் பரவிய ஒன்று எதுவுமே இல்லை. இன்றும் குரு-சீடர் முறையிலேயே இதை உபதேசிக்கிறார்கள். ஏராளமாகப் படிப்பதால் மட்டும் ஒருவன் மனிதன் ஆகிவிட மாட்டான். சிலர் உண்மையான மனிதத்தன்மை பெறக் காரணம் குரு-சீடர் உறவே. இத்தகையோர் மிகச் சிலரே என்பது உண்மை; ஆனால் இவர்களின் தொகை அதிகரித்தே தீரும். ஆனாலும் நாம் எல்லோரும் ஒருநாள் தத்துவ ஞானியர் ஆகிவிடுவோம் என்பதை நம்ப முடியவில்லை. இன்பமே நிறைந்து துன்பமே இல்லாத காலம் ஒன்று வரும் என்பதையும் நாம் நம்பவில்லை.

எப்போதாவது ஒரு கணம் பேரானந்த அனுபவம் நமக்குக் கிடைக்கிறது. அப்பொழுது நாம் எதையும் கேட்பதும் இல்லை; கொடுப்பதும் இல்லை. ஆனந்த உணர்ச்சியைத் தவிர வேறு எதற்கும், அப்போது இடம் இல்லை. அடுத்த கணத்தில் அந்த அனுபவம் மறைந்து, மீண்டும் பிரபஞ்சம் நம் முன் இயங்கத் தொடங்குகிறது. இந்த இயக்கம், எல்லாவற்றிற்கும் நிலைக்களனான இறைவனின்மீது தோன்றும் சித்திரம் என்பது நமக்குத் தெரியும்.

நிர்வாணம் அல்லது மோட்சத்தை இங்கேயே, இப்பொழுதே ஒவ்வொருவரும் பெற முடியும்; இந்த அனுபவம் மரணத்திற்குப் பிறகே கிடைக்கும் என்று நினைப்பது தவறு என்கிறது வேதாந்தம். ஆன்மானுபூதி பெறுவதே நிர்வாணம். ஒரு கணமாவது இந்த அனுபவம் பெற்றவர்கள் மீண்டும் மாயையில் ஏமாற மாட்டார்கள். கண் இருக்கும் வரையில் தோற்றப் பிரபஞ்சத்தைப் பார்த்தேயாக வேண்டும்; ஆனால் அது வெறும் தோற்றம்தான் என்ற உண்மை அவர்களுக்கு எப்போதும் தெரியும். அதன் உண்மையை அவர்கள் கண்டு விட்டார்கள். எந்த வகை மாறுதலும் இல்லாத ஆன்மாவை மறைத்து நிற்பது மாயை என்னும் திரைதான். திரை விலகுகிறது, அதற்குப் பின்னால் இருக்கும் ஆன்மாவின் காட்சி கிடைக்கிறது. மாறுதல்கள் எல்லாம் திரையில்தான். மகானில் இந்தத் திரை மிக மெல்லியதாக இருக்கிறது; உண்மை ஒளி கிட்டத் தட்ட முழுமையாக இதன்மூலம் தெரிகிறது. பாவியிடம் இந்தத் திரை தடிப்பாக உள்ளது. இந்தத் திரைக்குப் பின்னாலும், ஆன்மா என்னும் உண்மை மகானின் திரைக்குப் பின்னால் இருப்பதுபோல் இருக்கிறது என்ற எண்ணமே இல்லாமல் செய்துவிடும் அளவுக்கு இதன் தடிப்பு இருக்கிறது. இந்தத் திரை முற்றிலும் விலகும்போதுதான் அங்கே திரை ஒன்று இருக்கவே இல்லை என்பதை நாம் உணர்கிறோம்—'நாம் என்றும் ஆன்மாவாகவே இருந்தோம், வேறு எதுவாகவும் இருக்கவில்லை' என்ற அனுபவம் ஏற்படுகிறது. அப்போது திரையைக்கூட மறந்து விடுகிறோம்.

வாழ்க்கையின் இந்த வேறுபாடுகளில் இரண்டு நிலைகள் உள்ளன—ஒன்று, உண்மை ஆன்மாவை உணர்ந்தவன் எதனாலும் பாதிக்கப்பட மாட்டான்; இரண்டு, இவனால் மட்டுமே உண்மையாக உலகத்திற்கு நன்மை செய்ய முடியும். மற்றவர்களுக்கு நன்மை செய்வதற்கான உண்மையான தூண்டுதலை

இவன் மட்டுமே அறிவான். இருப்பது ஒன்றே, இதை அவன் அறிவான். இதை அகங்காரம் என்று சொல்ல முடியாது. ஆன்மாவைத் தவிர ஒன்று இருப்பதாக நினைப்பது வேற்றுமை கற்பிப்பதாக முடியும். உலகம் முழுவதையும் வேற்றுமையற்ற ஒன்றாகக் காண்பதுதான் உண்மையான தன்னல மறுப்பு. இந்த அறிவு உலகம்தழுவியது; சுருங்கியது அல்ல. அன்புச் செயல் ஒவ்வொன்றும், இரக்கச் செயல் ஒவ்வொன்றும் இதையே வற்புறுத்துகின்றன. 'நான் அல்ல, நீயே. பிறர் உன்னிலும் நீ பிறரிலும் இருப்பதால் பிறருக்கு உதவு'—இது தான் தத்துவ ரீதியான விளக்கம். பிறருக்காகத் தன் வாழ்வை யும் எவ்விதத் துயரமும் இன்றிக் கொடுக்க வேதாந்தியால் மட்டுமே முடியும். ஏனெனில் தனக்கு மரணமில்லை என்பது அவனுக்குத் தெரியும். இந்த உலகத்தில் ஒரு சிறு பூச்சி உயிரோடிருக்கும்வரை, அவனும் உயிரோடிருக்கிறான்; ஒரு உயிராவது உண்ணும்வரை அவனும் உண்கிறான். எனவே அவனது வாழ்க்கை பிறருக்கு நன்மை செய்வதிலேயே கழிகிறது. தன் உடலைக் கவனித்துக்கொள்ள வேண்டும் என்ற இன்றைய எண்ணங்கள்கூட இன்றி அவன் நன்மை செய்துகொண்டே போகிறான்.

இத்தகைய தன்னல மறுப்புநிலை ஒருவனுக்கு வாய்க்குமா னால், அவன் நன்னெறிக்கான போராட்டங்களுக்கு அப்பாற் பட்டவன் ஆகிறான்; எல்லாவற்றிற்குமே அப்பாற்பட்டவன் ஆகிறான். மிகவும் படித்த பண்டிதன், பசு, நாய், துன்பம் நிறைந்த இடங்கள் இங்கெல்லாம் அவன் அவற்றைக் காண்ப தில்லை; எல்லாவற்றிலும் அந்த ஒரே தெய்வீகம் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதையே காண்கிறான். அவன் மட்டுமே இன்பத்தை அனுபவிக்கிறான். இந்தச் சமத்துவ நிலை யைப் பெற்றவன் இந்தப் பிறவியிலேயே வாழ்வு அனைத்தையும் வென்றவன் ஆகிறான். இறைவன் தூயவன்; எனவே இத்தகைய தூய காட்சியுடையவன் இறைவனில் வாழ்வதாகச் சொல்லப் படுகிறான். 'ஆபிரகாமுக்கு முன்னரே நான் இருக்கிறேன்' என்றார் ஏசு. ஏசுவும் அவரைப் போன்றோரும் முக்த ஆன்மாக்கள். நாசரேத்தில் பிறந்த ஏசு மனித உருவெடுத்தது வினைப்பயனால் அல்ல; மக்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்பதற்காகவே என்பதுதான் இதன் பொருள். ஒருவன் முக்தி பெற்றுவிட்டான் என்றால் அவன் எல்லா இயக்கங்களையும் இழந்து வெறும் பிண்டமாகிவிட்டான் என்பது அல்ல;

மற்ற எல்லா உயிர்களையும்விடச் செயல்துடிப்பு மிக்கவனாக இருப்பான் என்பதே அதன் பொருள். மற்ற உயிர்களெல்லாம் கட்டாயத்தின் பேரில் இயங்குகின்றன; முக்தன் மட்டுமே சுதந்திரனாக இயங்குகிறான்.

இறைவனுடன் நாம் இரண்டறக் கலந்திருக்கிறோம் என்றால் நமக்கு ஒரு தனித்துவமே இல்லையா? கட்டாயம் உண்டு, அதுதான் கடவுள். நமது தனித்துவமே கடவுள்தான். இப்போது உங்களுக்கிருக்கும் தனித்துவம் அல்ல அது. நீங்கள் அந்தத் தன்மையை நோக்கியே போய்க்கொண்டிருக்கிறீர்கள். தனித்துவம் என்பதன் பொருள், பகுக்க முடியாதது என்பதுதான். இப்போதைய உங்கள் நிலைமையைப் பகுக்க முடியாத தன்மை என்று எப்படிக் கூறுவீர்கள்? இப்போது ஒன்றை நினைக்கிறீர்கள்; அடுத்த கணம் வேறொன்றைச் சிந்திக்கிறீர்கள்; அதற்கடுத்த கணம் இன்னொன்றில் மனம் தாவுகிறது. ஆனால் மாறுதல் எதுவுமே இல்லாததுதான் தனித்தன்மை. அது எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது; மாறுதலே இல்லாதது. ஆனால் இப்போதைய நிலைமை நிலையாக இருந்துவிடுவது மிகவும் அபாயகரமானது—திருடன் என்றும் திருடனாகவே இருப்பான்! அயோக்கியன் அயோக்கியனாகவே இருப்பான்! குழந்தை என்றும் குழந்தையாகவே இருக்கும். உண்மையான தனித்துவம் என்பது ஒருபோதும் மாறாதது, எந்தவிதமான மாறுதலுக்கும் உட்படாதது. இதுவே நம்முள் உள்ள இறைவன்.

வேதாந்தம் என்பது மிகப் பெரிய கடல். அங்கே ஒரு சிறு கட்டுமரத்திற்குப் பக்கத்தில் போர்க்கப்பல் ஒன்றும் இருக்கலாம். வேதாந்தக் கடலில் உண்மையான யோகி ஒருவன் உருவ வழிபாடு செய்யும் ஒருவனின் பக்கத்திலோ, ஏன் நாத்திகனின் பக்கத்திலும்கூட இருக்கலாம். இன்னும் என்ன சொல்ல! வேதாந்தக் கடலில் இந்து, முஸ்லீம், கிறிஸ்தவன், பார்சி எல்லோரும் ஒருவரே; எல்லோரும் எல்லாம் வல்ல இறைவனின் மக்களே.

## 4. இயற்கைநியதியும் முக்தியும்

முக்தி பெற்றவனுக்குப் போராட்டம் என்பது பொருளற்ற ஒன்று. ஆனால் நம்மைப் பொறுத்தவரை அது பொருளுடைய ஒன்று. ஏனெனில் நாம-ரூபம் அல்லவா உலகைப் படைத்துள்ளது!

வேதாந்தத்தில் போராட்டத்திற்கு இடம் உண்டு; ஆனால் பயத்திற்கு இடம் இல்லை. உங்கள் சொந்த இயல்பில் நீங்கள் உறுதியாக நிலைபெறும்போது எல்லா பயங்களும் மறைந்துவிடும். நீங்கள் கட்டுண்டிருப்பதாக நினைத்தால் கட்டுண்டவர்களாகவே இருப்பீர்கள், முக்தர்கள் என்று எண்ணினால் சுதந்திரர்களாக விளங்குவீர்கள்.

தோற்றப் பிரபஞ்சத்தில் இருக்கும்போது நாம் அனுபவிக்கும் இந்தச் சுதந்திரம் உண்மைச் சுதந்திரத்தின் மிகச் சிறிய ஒரு பகுதியாகும். ஆனாலும் இது உண்மைச் சுதந்திரம் அல்ல.

இயற்கையின் நியதிகளுக்குக் கட்டுப்படுவதுதான் சுதந்திரம் என்ற கருத்தை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். அது எதைக் குறிப்பிடுகிறது என்பதே எனக்குப் புரியவில்லை. இயற்கை நியதிகளை மீறுவதன்மூலமே மனிதகுலம் வளர்ச்சி பெற்றுள்ளது என்பது மனிதகுல வரலாறு அறிவிக்கும் ஒன்று. உயர்ந்த நியதிகளின்மூலமே தாழ்ந்த நியதிகளை வெற்றி காண முடிந்தது என்று கூறலாம். அங்கேயும் வெற்றியை நாடும் மனம் சுதந்திரம் பெறவே முயல்கிறது. நியதிகளை மீறுவதற்கான போராட்டத்தின்மூலமே சுதந்திரம் பெற முடியும் என்பதை அறிந்த உடனே அந்த நியதிகளை வெற்றி காண மனம் விரும்புகிறது. எனவே எங்கும் சுதந்திரமே லட்சியமாக உள்ளது. மரங்கள் நியதிகளை மீறுவதில்லை, பசு திருடுவதில்லை, சிப்பி பொய் சொல்வதில்லை. ஆனாலும் அவை மனிதனைவிட உயர்ந்தவை அல்ல. பன்மடங்கு உறுதியுடன் விடுதலையை வலியுறுத்துவதே வாழ்க்கை.

நியதிகளுக்கு அடங்கி நடப்பதை மிகவும் வலியுறுத்தும்போது சமூகத்திலானாலும் அரசியலானாலும் மதத்திலானாலும் நாம் வெறும் ஜடப்பொருளாகிவிடுவோம். நியதிகள்

அளவுக்கு மீறியிருப்பது அழிவின் நிச்சயமான அறிகுறியாகும். ஒரு சமூகத்தில் நியதிகள் ஏராளம் இருந்தால் அந்தச் சமூகம் அழியப் போகிறது என்பது உறுதி. இந்தியாவின் பண்புகளை ஆராய்ந்தால், இந்துக்களைக் கட்டுப்படுத்தும் நியதிகளைப் போன்ற சட்டங்கள் வேறு எந்த நாட்டிலும் இல்லை என்பதைக் காண்பீர்கள். விளைவு தேசிய அழிவாகத்தான் இருக்கும். ஆனால் இந்துக்களிடம் ஒரு சிறப்பான விஷயம் இருந்தது. அவர்கள் மத விஷயங்களில் வெறியையோ பிடிவாதத்தையோ காட்டவில்லை. எனவே இந்துமதம் மிக மேலான வளர்ச்சியைக் கண்டது. நிலையான நியதி சுதந்திரமாகாது. ஏனெனில் நிலையானது, நியதிக்கு உட்பட்டது என்று கூறுவதே அதை வரையறைக்கு உட்படுத்துவதாகும்.

இறைவனுக்கென்று எந்த நோக்கமும் இல்லை. நோக்கம் இருக்குமானால் அவர் மனிதனைவிட எந்த விதத்திலும் உயர்ந்தவர் ஆகமாட்டார். அவருக்கு நோக்கம் எதற்கு? நோக்கம் இருக்குமானால், அது அவரைக் கட்டுப்படுத்தும்; அதாவது, அவரைவிடப் பெரிய ஒன்று இருக்கிறது என்றாகிவிடும். தரை விரிப்பு தயாரிப்பவன் விரிப்பு ஒன்றை நெய்கிறான். அதை நெய்யும் எண்ணம் அவனுக்கு வெளியே இருந்தது. அது அவனை விடப் பெரியது. இதுபோல் எந்தக் கருத்திற்குக் கடவுள் தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும்? மாபெரும் சக்கரவர்த்திகளும் சிலவேளைகளில் பொம்மையை வைத்து விளையாடுவதுபோல், இறைவன் இந்த இயற்கையுடன் விளையாடுகிறார். அதையே நாம் நியதி என்கிறோம். ஒன்றோடொன்று இணைந்து சமரசமாக இயங்கும் சிறு பகுதிகளை மட்டுமே நாம் காண்பதால் நியதி என்கிறோம். நியதி பற்றிய நம் கருத்துக்கள் எல்லாமே இந்த மிகச்சிறு பகுதிக்குள் அடங்கிவிடுகிறது. நியதி எல்லையற்றது. கற்கள் கீழே வீழ்ந்து கொண்டுதான் இருக்கிறது என்று சொல்வது முட்டாள்தனம். எல்லா ஆராய்ச்சிகளுக்கும் அனுபவமே ஆதாரம் என்றால், ஐம்பது லட்சம் ஆண்டுகளுக்கு முன்னரும் கல் கீழேதான் விழுந்தது என்பதை யார் கண்டார்?

எனவே நியதிக்குக் கட்டுப்படுவது மனித இயற்கை அல்ல. நாம் எங்கே ஆரம்பித்தோமோ, அங்கேதான் முற்றுப் பெறவும் செய்வோம் என்பது மனிதனைப் பற்றிய விஞ்ஞானபூர்வமான கூற்றாகும். உண்மையில் நாம் நியதியிலிருந்து சிறிதுசிறிதாக விடுபட்டுக்கொண்டே வருகிறோம்; முழு வாழ்க்கையின்

அனுபவத்தையும் அதனுடன் இணைத்து முற்றிலுமாக விடுபடு கிறோம். இறைவனில், முக்தியில் நாம் ஆரம்பித்தோம்; இறைவனில், முக்தியில்தான் நிறைவுறவும் செய்வோம். நாம் கடந்து செல்ல வேண்டிய இந்த இடைப்பகுதியில்தான் இந்த நியதிகள் எல்லாம்.

வேதாந்தம் எப்போதும் முக்தியையே வலியுறுத்துகிறது. நியதி என்ற கருத்தே வேதாந்திக்குப் பயத்தைக் கொடுத்துவிடும். அழியாத நியதி என்ற பேச்சை அவனால் சகிக்கவே முடியாது. அது உண்மையானால், இதிலிருந்து விலகி முக்தி பெறவே முடியாதே! எப்போதும் ஒரு நியதி அவனைக் கட்டுப்படுத்திக் கொண்டே இருக்கும் என்றால், அவனுக்கும் புல்லுக்கும் என்ன வேறுபாடு இருக்க முடியும்? இந்த நியதிக் கருத்தை நாம் நம்பு வதில்லை.

நாம் தேட வேண்டுவது முக்தி. முக்தியே இறைவன் என்று தான் நாம் கூறுகிறோம். இறை இன்பமும் மற்ற இன்பமும் ஒன்றேதான். அந்த இன்பத்தை எல்லையுள்ள ஒரு பொருளில் தேடும்போது, அதன் சிறுபகுதியே கிடைக்கிறது. திருடன் திரு டும்போது பெறும் அதே இன்பத்தையே இறைவனை அடையும் ஒருவனும் பெறுகிறான். ஆனால் திருடன், இன்பத்தின் ஒரு சிறு கிரணத்தையும் அதனுடன் மிகுந்த துன்பத்தையும் பெறு கிறான். உண்மையான ஆனந்தம் இறைவனே. அன்பே கடவுள்; முக்தியே கடவுள்; கட்டுப்பாடு எதுவுமே கடவுள் அல்ல.

மனிதன் என்றும் முக்தனாகவே இருக்கிறான்: ஆனால் அதை அவன் அறிய வேண்டும். அவன் சுதந்திரனாகவே இருக் கிறான், ஆனால் அதை மறந்துவிடுகிறான். அறிந்தோ அறியா மலோ அதைக் கண்டுபிடிக்கும் முயற்சிதான் வாழ்க்கை. ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் உள்ள வேற்றுமை இதுதான்: ஞானி தாம் அறிந்தே இந்த முயற்சியில் ஈடுபடுகிறார்; மற்றவர் அறியாமல் செய்கிறார். அணுமுதல் அண்டம்வரை உள்ள எல்லாம் சுதந்திரத்திற்காகவே போராடுகின்றன. எல்லைக்கு உட்பட்ட சுதந்திரம் பெற்றாலும் திருப்தி அடைகிறான் அஞ்ஞானி. பசி, தாகம் இவற்றிலிருந்து விடுதலை கிடைத்து விட்டால் போதும் அவனுக்கு. ஆனால் முனிவரோ அதைவிடப் பெரிய தளை ஒன்று இருப்பதையும் அதிலிருந்து விடுபட வேண்டும் என்பதையும் உணர்கிறார். செவ்விந்தியர் அனுப விக்கும் சுதந்திரத்தை ஒரு சுதந்திரமாகவே அவர் கருதுவது இல்லை.

நமது தத்துவ ஞானியரின் கருத்துப்படி, முக்தியே வாழ்க்கையின் லட்சியம். அறிவு, லட்சியம் ஆகாது. ஏனெனில் அறிவு ஒரு கலவை. ஆற்றலும் சுதந்திரமும் சேர்ந்த கலவை அது. விரும்பத்தக்கது சுதந்திரம் ஒன்றே. இதற்காகவே மக்கள் போராடுகிறார்கள். ஆற்றல் மட்டும் இருப்பது அறிவு ஆகாது. உதாரணமாக, மின்சார அதிர்வைச் சில மைல்தூரம் செலுத்து கிறான் விஞ்ஞானி. ஆனால் இயற்கை எல்லையற்ற தூரம் அதைச் செலுத்த வல்லது. இயற்கைக்கு ஏன் நினைவுச் சிலைகளை எழுப்புவதில்லை? நாம் விரும்புவது நியதி அல்ல. நியதியை உடைக்கும் ஆற்றலே நமக்கு வேண்டும். நாம் நியதிக்கு அப்பாற்பட்டவர்களாக இருக்க வேண்டும். நீங்கள் நியதி களுக்குக் கட்டுப்பட்டிருந்தால், உங்களுக்கும் களிமண்ணுக்கும் வேறுபாடு ஒன்றுமில்லை. நீங்கள் நியதிகளுக்கு அப்பாற்பட்ட வர்களா, இல்லையா என்பதல்ல பிரச்சினை. நாம் கட்டுப் பாட்டிற்கு அப்பாற்பட்டவர்கள் என்ற எண்ணமே முக்கியம். மனித வரலாற்றின் அடிப்படையே இந்த எண்ணம்தான். உதாரணமாக, ஒருவன் காட்டில் வாழ்கிறான். அவனுக்கு எந்த விதமான படிப்போ அறிவோ இல்லை. கல் ஒன்று கீழே விழுவதை அவன் பார்க்கிறான். அது ஒரு சாதாரண இயற்கை நிகழ்ச்சி. இதுவே சுதந்திரம் என்று அவன் எண்ணுகிறான். அதற்கும் ஓர் ஆன்மா உண்டென்றும் அது விழுந்ததன்மூலம் சுதந்திரம் பெற்று விட்டதென்றும் அவன் கருதுகிறான். ஆனால் அது விழுந்துதான் ஆக வேண்டும் என்பதை அறியும் அந்தக் கணமே அதை இயற்கை என்றும் உயிரற்ற எந்திர இயக்கம் என்றும் கூறுகிறான். நான் தெருவுக்குப் போகலாம்; போகா மலும் இருக்கலாம். நான் மனிதன் என்று கூறிக்கொள்வதன் பெருமை இதில்தான் இருக்கிறது. நான் அங்கே போகத்தான் வேண்டும் என்ற நிலை வந்தால், நான் அந்தத் தூண்டுதலுக்கு அடங்கி, ஓர் எந்திரம் ஆகிவிடுகிறேன். எல்லையற்ற சக்தி பெற்றிருந்தாலும் இயற்கை ஓர் எந்திரமே; சுதந்திரம் ஒன்றே உயிருள்ள வாழ்க்கையை அளிக்கிறது.

காட்டில் வாழும் மனிதனுடைய கருத்தே சரியானது என்று வேதாந்தம் சொல்கிறது. அவன் உணர்வது சரி, ஆனால் அவன் கூறும் விளக்கம் சரியல்ல. அவன் தன்னைச் சூழ்ந் துள்ள இயற்கையைச் சுதந்திரம் என்று கருதுகிறான், அது நியதிக்குக் கட்டுப்பட்டதென்று உணர்வதில்லை. இந்த எல்லா அனுபவங்களுக்கும் பிறகுதான் நாமும் இப்படி நினைக்கத்

தொடங்குவோம். ஆனால் இந்தக் கருத்து தத்துவத் தொடர்பு உடையதாக இருக்கும். உதாரணமாக, நான் தெருவிற்குப் போக விரும்புகிறேன். சித்தம் தூண்டுகிறது; பிறகு நான் நிற்கிறேன். சித்தத்தின் தூண்டுதலுக்கும் தெருவுக்குப் போகும் செயலுக்கும் இடையே நான் ஓர் ஒழுங்குடன் நடந்துகொள்கிறேன். செயலின் ஒழுங்கையே நியதி என்கிறோம். எனது செயல்களின் இந்த ஒழுங்கு சிறு பகுதிகளாகப் பிரிவதால், என் செயல்கள் ஒரு நியதிக்குக் கட்டுப்பட்டது என்று சொல்வதில்லை. நான் சுதந்திரத்தின் வாயிலாகவே செயல்புரிகிறேன். நான் ஐந்து நிமிட நேரம் நடக்கிறேன். ஆனால் இந்த ஐந்து நிமிடநேர ஒழுங்கான நடையாகிய செயலுக்கு முன்னால் சித்தத்தில் அந்தச் செயல் இருந்தது. இதுவே நடக்கத் தூண்டியது. இதனால்தான் மனிதன் தான் சுதந்திரமானவன் என்று கூறுகிறான். ஏனெனில் அவனுடைய செயல்களை எல்லாம் சிறுசிறு பகுதிகளாகப் பிரித்து விட முடியும். இந்தக் கால இடைவெளிக்குள் ஒரே ஒழுங்குமுறை தென்பட்டாலும், இவற்றுக்கு அப்பால் இந்த ஒழுங்கு இல்லை. இந்த ஒழுங்கின்மைக் கருத்தில்தான் சுதந்திரம் இருக்கிறது. இயற்கையில் நாம் நீண்டகால ஒழுங்குமுறைகளைப் பார்க்கிறோம். ஆனால் இவற்றின் ஆரம்பமும் முடிவும் சுதந்திரத் தூண்டுதல்களாக இருக்க வேண்டும். சுதந்திரமான செயல் தூண்டுதல் ஆரம்பத்தில் கொடுக்கப்பட்டது. இது தொடர்ந்து நடைபெறுகிறது. ஆனால் நம் செயலின் கால இடைவெளியுடன் ஒப்பிடும்போது, இயற்கைச் செயலின் கால இடைவெளி நீண்டதாகத் தோன்றுகிறது.

தத்துவ அடிப்படையில் ஆராயும்போது நான் சுதந்திரமானவன் என்ற உணர்ச்சி மட்டும் அறிவில் ஒளிர்கிறது. அது எப்படி என்பதையே நாம் விளக்க வேண்டும். நம்முள் இரண்டு தூண்டுதல்கள் இருப்பதைக் காண்கிறோம். ஒவ்வொரு செயலும் வேறு ஒரு தூண்டுதலால் ஏற்படுகிறது என்று நம் பகுத்தறிவு கூறுகிறது. அதேவேளையில் தூண்டுதல் ஒவ்வொன்றுடனும் சுதந்திரத்தையும் நாம் வலியுறுத்துகிறோம். இந்தப் பிரச்சினைக்கு வேதாந்தம் காட்டும் விடை இதுதான். ஆன்மா சுதந்திரமானது. அது சுதந்திரமற்ற உடல், மனம் இவற்றின் மூலம் செயல் புரிகிறது.

எப்போது நாம் பிரதிச்செயல் புரிகிறோமோ அப்போது நாம் அடிமையாகி விடுகிறோம். ஒருவன் என்னைக் குற்றம் கூறியதும் என்னிடமிருந்து கோபம் என்னும் பிரதிச்செயல்

வெளிப்படுகிறது. அவன் உண்டாக்கிய அந்தச் சிறு அசைவு என்னை அடிமை ஆக்கிவிட்டது. எனவே நாம் நம் சுதந்திரத் தைக் காட்ட வேண்டியிருக்கிறது.

மிக உயர்ந்த அறிஞர்களிடமும், மிகத் தாழ்ந்த பிராணி களிடமும், மிகக் கொடியவர்களிடமும், முனிவரையோ மனிதனையோ பிராணியையோ பார்க்காமல் எல்லாவற்றுள் ளும் இறைவனையே பார்ப்பவன்தான் உண்மை முனிவன், உண்மை ஞானி. இத்தகையோர் இந்தப் பிறவியிலேயே வேற்றுமை உணர்வை வென்று, நிலையான சமநோக்கில் நிலைபெற்றுவிட்டார்கள். இறைவன் தூய்மையானவன்; எல்லோருக்கும் சமமாக இருப்பவன். எனவே அத்தகைய முனிவர், வாழும் தெய்வமே. இந்த லட்சியத்தை நோக்கியே நாம் போகிறோம். எல்லாவகை இறைவழிபாடும் மனித குலத்தின் எல்லா செயல்களும் அந்த லட்சியத்தை அடைவதற்கு உரிய வழிகளே. பணம் தேடும் ஒருவனும் சுதந்திரம் பெறவே முயல்கிறான். ஆனால் அது வறுமைத் துன்பங்களிலிருந்து பெறும் சுதந்திரம். மனிதனுடைய ஒவ்வொரு செயலும் வழிபாடே. ஏனெனில் இதன் நோக்கம் விடுதலை பெறுதல். எல்லா செயல்களும் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ விடுதலைக்கே காரணமாகின்றன. இந்த விடுதலைக்குத் தடையான செயல்களை நாம் தவிர்க்க வேண்டும். தெரிந்தோ தெரியாமலோ, பிரபஞ்சம் முழுவதும் வழிபாடு செய்தவண்ணம் இருக்கிறது; ஆனால் இது அதற்குத் தெரியாது. நிந்திப்பதும் ஒருவகை வழிபாடே ஆகும். இப்படி நிந்திப்பவர்களும் சுதந்திரத்தையே விரும்புகிறார்கள். ஒரு தூண்டுதலுக்குப் பிரதிச்செயல் புரிவதால் அதற்கு நாம் அடிமையாகிறோம் என்பது அவர்களுக்குத் தெரிவதில்லை. குத்திய முள்ளை உதைப்பது கடினம்.

நாம் கட்டுப்பட்டவர்கள் என்ற எண்ணத்தை விலக்கிவிட முடியுமானால், எந்தச் செயலையும் இப்பொழுதே நம்மால் செய்ய முடியும். உரிய நேரம் வர வேண்டும். எனவே ஆற்றலைப் பெருக்குங்கள்; அதன்மூலம் காலத்தைக் குறையுங்கள். பளிங்குக் கல்லை உருவாக்கும் ரகசியத்தை அறிந்த பேராசிரியரின் சாதனையை நினைத்துப் பாருங்கள். இயற்கை பல நூற்றாண்டு களில் சாதித்த ஒன்றை அவர் பன்னிரண்டே ஆண்டுகளில் சாதித்துவிட்டார்.

## 5. ஞானயோகம்

7 மே 1896

முதலில், தியானம் எதிர்மறை நிலையில் இருக்க வேண்டும். ஒவ்வொன்றையும் சிந்தித்து ஒதுக்கிவிடு! மனத்தில் வரும் ஒவ் வொன்றையும் சங்கல்ப சக்தியின்மூலம் பகுத்தறிய வேண்டும்.

அதன்பின் உண்மையில் நாம் எதுவாக இருக்கின்றோமோ அதை, அதாவது உண்மை-அறிவு-ஆனந்த வடிவமாக, இருப்பு-அறிதல்—அன்பு செய்தலாக இருப்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

தியானிப்பவரையும் தியானிக்கப்படும் பொருளையும் இணைப்பதுதான் தியானம்.

தியானம் செய்யுங்கள்:

மேலே உள்ளவை எல்லாம் நானே, கீழே உள்ளவை எல்லாம் நானே, இடையில் இருப்பன எல்லாம் நானே. எல்லா உயிர்களிலும் நானே இருக்கிறேன். எல்லா உயிர்களும் என் னில் இருக்கின்றன. ஓம் தத் சத்! அதுவே நான். மனத்திற்கு அப்பாற்பட்டவன் நான். இந்தப் பிரபஞ்ச ஆன்மாவுடன் ஒன்று பட்டவன் நான். நான் இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை.

இந்த உடல் பருகுகிறது, சாப்பிடுகிறது. மற்றும் இது போன்ற வேலைகளைச் செய்கிறது. இந்த உடல் நான் அல்ல; மனமும் நான் அல்ல; நானே அவன்.

நானே சாட்சி, நான் விலகி நின்று பார்க்கிறேன். உடல் நலனுக்கு நான் சாட்சி, நோய்க்கும் நானே சாட்சி.

உண்மை நானே, அறிவும் நானே, ஆனந்தமும் நானே.

சாரம் நானே; அறிவமுதமும் நானே. நான் ஒருபோதும் மாறுதல் அடைவதில்லை. நான் அமைதியானவன், ஒளிமிக்க வன், மாறுதல் இல்லாதவன்.

## 6. ஞானயோகம்

ஆன்மாக்கள் எல்லாம் விளையாடுகின்றன. அறிந்து விளை யாடுபவை சில; சில அறியாமல் விளையாடுபவை. அறிந்து விளையாடக் கற்றுக்கொள்வதே மதம்.

அன்றாட உலக வாழ்வில் எந்த நியதிகள் உண்மையோ அதே நியதிகள் ஆன்மீக வாழ்விற்கும் பொருந்தும்; பிரபஞ்ச வாழ்விற்கும் பொருந்தும். அந்த நியதி ஒன்றே; அது உலகம் தழுவியது. ஆன்மீகத்திற்கு, உலகத்திற்கு என்று தனித்தனி நியதிகள் இல்லை. உடலும் சாத்தானும் கடவுளிலிருந்து வேறு படுவது, அளவில்தான்.

மரணத்திற்குப் பிறகும் நாம் வாழ்கிறோம் என்பதை நிரூபிப்பதற்காக மேலை நாட்டு மதவாதிகளும், தத்துவவாதி களும் ஒன்றுவிடாமல் எல்லாவற்றையும் துருவி ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள். எவ்வளவு அற்பமான விஷயம் பாருங்கள்! சிந்திப்பதற்கு உயரிய விஷயங்கள் எவ்வளவோ உள்ளன! நாம் இறக்கப்போவதாக நினைப்பதே மூட நம்பிக்கை அல்லவா! நமக்குச் சாவில்லை என்று சொல்வதற்குப் புரோகி தரும் வேண்டாம், பூதமும் வேண்டாம், பேயும் வேண்டாம், அது தானாகவே ஒளிரும் மாபெரும் உண்மை. தன் மரணத் தைப்பற்றி எந்த மனிதனாலும் எண்ண முடியாது. மரணமிலாத் தன்மை அவனது இயல்பிலேயே மறைந்துள்ளது.

எங்கே வாழ்வு உண்டோ அங்கே சாவும் உண்டு. மரணத் தின் நிழல் வாழ்வு; வாழ்வின் நிழல் மரணம். இந்த இரண்டையும் வேறுபடுத்துகின்ற எல்லைக்கோடு வரையறுக்க இயலாதது; கருத்திற்கு எட்டாதது; சிந்தையில் பிடிபடாத நுட்பமான ஒன்று.

'நாம் என்றும் முன்னேறிக் கொண்டிருக்கிறோம், ஒரே நேர்கோட்டில் முடிவில்லாமல் சென்று கொண்டேயிருக் கிறோம்' என்பதை நாம் நம்புவதில்லை. அப்படி நம்புவது முட்டாள்தனம். என்றும் நேர்கோட்டிலேயே செல்லும் இயக்கம் ஒன்று இல்லை. நேர்கோடு ஒன்றை எல்லையின்றி

நீட்டிக்கொண்டே போனால் அது வட்டமாக முடியும். வெளியில் செலுத்தப்பட்ட ஆற்றலும் வட்டத்தை முடித்து, தான் தொடங்கிய இடத்திற்கே வந்து சேர்கிறது.

நேர்கோடாகவே செல்லும் முன்னேற்றம் என்ற ஒன்று இல்லவே இல்லை. ஒவ்வோர் ஆன்மாவும் வட்டமாக இயங்கு கிறது என்றுதான் சொல்ல வேண்டும். அது அந்த வட்டத்தை முடித்தேயாக வேண்டும். எந்த ஆன்மாவும் ஒரேயடியாகக் கீழ் நோக்கியே போய்க் கொண்டிருக்க முடியாது; அது மேல் நோக்கிச் சென்றேயாக வேண்டும். ஆரம்பத்தில் அது கீழ் நோக்கிச் சென்றாலும் வட்டத்தை முடிப்பதற்காக மேல்நோக்கி வந்துதான் ஆக வேண்டும். நாம் எல்லோரும் இறைவன் என்ற ஒரே மையத்திலிருந்துதான் வெளியேறினோம். ஒவ்வொருவரும் வட்டத்தை முடித்துக்கொண்டு, புறப்பட்ட இடமான மையத்தை அடைந்தே தீர வேண்டும்.

ஒவ்வோர் ஆன்மாவும் ஒரு வட்டம். உடல் இருக்கும் இடம்தான் அதன் மையம். அதன் செயல்பாடுகள் அங்கே வெளிப்படுகின்றன. ஒரே புள்ளியில் நாம் குவிந்திருப்பதுபோல் உணர்ந்தாலும் நாம் எங்கும் நிறைந்தவர்கள். இந்தப் புள்ளி தன்னைத்தானே வெளிப்படுத்திக்கொள்ள ஜடப்பொருள் அணுக்கள் பலவற்றைச் சேர்த்து ஒரு எந்திரத்தை உண்டாக்கிக் கொண்டது. இப்படித் தன்னை வெளிப்படுத்திக்கொள்ள ஆன்மா ஏற்படுத்திக்கொண்ட எந்திரமே உடல். நாம் ஒவ்வொரு வரும் எங்கும் நிறைந்தவர்கள். ஓர் உடல் அல்லது எந்திரம் ஓய்ந்துவிட்டால், அதன் மையச் சக்தி நகர்ந்து, மேலும் நுட்ப மான அல்லது பருமனான ஜடப்பொருள் மூலக்கூறுகளைச் சேர்த்துக்கொண்டு, அதன்மூலமாகச் செயல்படுகிறது. இது மனிதன். கடவுள் என்பது என்ன? எங்குமே மையப்புள்ளியாக வும், சுற்றுக்கோடே இல்லாததாகவும் உள்ள வட்டமே கடவுள். அந்த வட்டத்தில் உள்ள ஒவ்வொரு புள்ளியுமே உயிர் உள்ளது, உணர்வுள்ளது, துடிப்பு உள்ளது, ஒரே அளவில் செயலாற்றும் தன்மை உடையது. எல்லைக்கு உட்பட்ட நமது ஆன்மாக்களைப் பொறுத்தவரை ஒரே ஒரு புள்ளி மட்டுமே உணர்வுடையதாக இருக்கிறது. இதுவே முன்னும்பின்னுமாக இயங்குகிறது.

ஜீவான்மா என்பது ஏதோ ஓர் உடலில் மையம்கொண்ட, சுற்றுக்கோடே இல்லாத (எல்லையற்ற) ஒரு வட்டம். மரணம் என்பது இந்த மையத்தின் மாற்றமே ஆகும். இறைவன் என்பது எங்கும் மையப் புள்ளியைக் கொண்ட, சுற்றுக்கோடே

இல்லாத வட்டம். எல்லைக்கு உட்பட்ட மையமாகிய உடலிலிருந்து நம்மால் விலக முடியுமானால் நாமும் நமது உண்மையான ஆன்மாவான இறைவனை உணர்வோம்.

சிறுசிறு துண்டுக் காகிதங்களையும் வைக்கோல் துண்டு களையும் சுமந்தவண்ணம் சக்தி மிகுந்த ஆறு ஒன்று கடலை நோக்கி ஓடிக்கொண்டிருக்கிறது. இந்தத் துண்டுகள் ஓட்டத்தை எதிர்த்துச் செல்லப் போராடலாம். ஆயினும் இவை முடிவில் கடலை அடைந்துதான் தீர வேண்டும். இதுபோலவே நான், நீங்கள், இயற்கை அனைத்துமே இவ்வாறு ஒரு சக்தி மிகுந்த நீரோட்டத்தால் வாழ்வுக்கடலை நோக்கி இழுத்துச் செல்லப் படுகின்ற சிறுசிறு வைக்கோல் துண்டுகளாக உள்ளோம். இந்த வாழ்வுக்கடலே நிறைவு அல்லது இறைவன். நாம் திரும்பிப் போகவோ இந்த ஓட்டத்தை எதிர்த்துப் போராடவோ முயல லாம். அங்கும் இங்குமாக இந்த வெள்ளத்தில் நீந்தலாம். ஆனால் முடிவில் கங்குகரையில்லாத ஆனந்தக் கடலை நாம் அடைந்தே யாக வேண்டும்.

ஞானம் என்பது மதங்களுக்கு அப்பாற்பட்டது; ஆனால் மதங்களை வெறுப்பதல்ல. அது மதத்தைவிட உயர்ந்த, மதத் திற்கு அப்பாற்பட்ட நிலை என்பதே இதன் பொருள். ஞானி (உண்மையான தத்துவவாதி) எதையும் அழிக்க முயல் வதில்லை; எல்லோருக்கும் உதவவே முயல்கிறான். எல்லா ஆறுகளும் ஓடிக் கடலுடன் கலந்து ஒன்றாகின்றன. இதுபோல் எல்லா மதங்களும் ஞானத்தில் நிறைவுற்று ஒன்றாக வேண்டும். உலகப் பற்றை ஒழிக்க வேண்டும் என்று ஞானம் கூறுகிறதே தவிர, உலகையே துறக்க வேண்டும் என்று கூறுவதில்லை. உலகத்தில் வாழ்ந்துகொண்டே அதில் பற்றற்றிருப்பதுதான் உண்மைத் துறவின் அடையாளம்.

ஆரம்பத்திலிருந்தே எல்லா அறிவும் நம்மிடம் நிறைந்திருக் கிறது. வேறுவிதமாக நம்ப என்னால் முடியவில்லை. நீங்களும் நானும் ஒரு பெருங்கடலின் சிறு அலைகள் என்றால், பின்னணி யாக இருப்பது பரந்த கடல்தானே?

ஜடப்பொருள், மனம், உயிர் மூன்றுக்கும் இடையே உண்மையில் வேறுபாடு எதுவும் இல்லை. ஒரே பரம்பொருளை அனுபவிப்பதில் பல நிலைகளே அவை. இந்த உலகம் ஐம்புலன் கள் வழியாக ஜடப்பொருளாகவும், கெட்டவர்களுக்கு நரக மாகவும், நல்லவர்களுக்குச் சொர்க்கமாகவும், நிறைநிலையில் இருப்பவர்களுக்கு இறைவனாகவும் காட்சியளிக்கிறது.

பிரம்மம் ஒன்றே உண்மை என்பதைப் புலன்கள் உணரும் படிக் கண்ணெதிரில் காட்ட முடியாது. ஆனால் முடிவு இது வாகத்தான் இருக்கும் என்பதை உணர்த்த முடியும். உதாரண மாக, எல்லாவற்றிலும் சாதாரணப் பொருட்களிலும்கூட இந்த ஒருமை இருக்க வேண்டும். மனிதன் என்று பொதுமைப் படுத்துவதையே எடுத்துக் கொள்வோம். வேறுபாடுகளுக்கெல் லாம் காரணம் பெயரும் உருவமுமே என்கிறோம். ஆனால் இதை மனத்தில் கொண்டு பிரிக்க முயன்றால், பெயரோ வடி வமோ எங்கும் இருப்பதில்லை. பெயரையோ, உருவத்தையோ, காரணங்களையோ பொருட்கள் அல்லது காரியங்களிலிருந்து பிரித்துத் தனியே காண முடியவே முடியாது. இதுவே மாயை. இது உருவத்தையும் பெயரையும் சார்ந்திருக்கிறது; உருவத்தை யும் பெயரையும் நீக்கிவிட்டால் அதுவும் அழிந்துவிடுகிறது. கடலின் அலையைப் பாருங்கள். கடல்நீர், அலை உருவில் இருக்கும் வரையிலும் அந்த அலை தனிப்பொருளாகக் காட்சி யளிக்கிறது. அது மீண்டும் கடல்நீரோடு ஒன்றும்போது அலை யும் இல்லாததாகிவிடுகிறது. ஆனால் கடல் இந்த அலையை அவ்வளவாகச் சார்ந்து இருக்கவில்லை. அலை முற்றிலும் இல்லாமல் போனாலும், கடல் இருக்கவே செய்யும்.

உண்மை ஒன்றே. மனம் அதைப் பலவாகத் தோன்றச் செய்கிறது. நாம் பலவற்றைக் காணும்போது ஒருமை மறைந்து விடுகிறது; ஒருமையைக் காணும்போது பன்மை மறைகிறது. தினசரி வாழ்க்கையிலும் ஒருமை தோன்றும்போது பன்மை தோன்றுவதில்லை. நாம் ஆரம்பித்தது ஒருமையிலேயே. ஒரு வினோத உண்மையைப் பாருங்கள்—இரு அமெரிக்கர்களின் தோற்றத்தில் வேறுபாட்டை ஒரு சீனன் காண்பதில்லை; சீனர்கள் இருவரின் வேறுபாடு நமக்குத் தெரிவதில்லை.

பொருட்களை நாம் அறியச்செய்வது மனம்தான் என்பதை நிரூபிக்க முடியும். சில தனித்தன்மைகளைக் கொண்ட பொருட் கள் மட்டுமே மனத்தால் அறிந்த அல்லது அறியக்கூடிய எல்லைக்குள் வர முடியும். பண்பு எதுவும் இல்லாத பொருளை அறிய முடியாது. எடுத்துக்காட்டாக மனத்தால் அறியப்படாத தும் அறிய இயலாததுமான அ என்ற புற உலகம் இருக்கிறது. அதை நான் மனத்தால் அறிந்தேன் என்றால் அந்த உலகம், அ-வும் மனமும் சேர்ந்த கலப்பே. உலகத்தை நான் அறியும்போது அந்த அறிவின் முக்கால் பகுதிக்குக் காரணம் மனமே. அது போலவே அக உலகம் என்பது இ-யும் மனமும் கலந்தது.

புற உலகம் அ-வும் மனமும் கலந்தது. புற உலகிலும் சரி, அக உலகிலும் சரி, நாம் காணும் வேறுபாடுகளெல்லாம் நம் மனத்தின் படைப்பே. உண்மையில் இருப்பதோ யாரும் அறியாததும், அறிய இயலாததுமான ஒன்று. அது அறிவின் எல்லைக்கு அப்பாற்பட்டது. அறிவுக்கு அப்பாற்பட்ட எதனிடமும் வேறுபாடு இருக்காது. எனவே புற உலகமான அ-வும், அக உலகமான இ-யும் ஒன்றே. அதாவது உண்மையில் உள்ளது ஒன்றே.

இறைவன் ஒருபோதும் ஆராய்ச்சி செய்வதில்லை. எல்லாமே உங்களுக்குத் தெரிந்திருந்தால் நீங்கள் ஏன் ஆராய வேண்டும்? சில உண்மைகளை அறிவதற்காக நாம் புழுக்கள் போல் ஊர்ந்து செல்ல வேண்டியிருப்பது பலவீனத்தின் அறிகுறியே. இப்படி அறிந்த சில உண்மைகளும் பயனற்றுப் போய்விடுகின்றன. மனத்திலும் எல்லா பொருட்களிலும் ஆன்மா பிரதிபலிக்கிறது. ஆன்மாவின் ஒளிதான் மனத்திற்கு அறியும் திறனைக் கொடுக்கிறது. எல்லாமே இந்த ஆன்மாவின் விளக்கம்தான். மனங்கள் எல்லாம் பல்வேறு கண்ணாடிகள். அன்பு, அச்சம், வெறுப்பு, புண்ணியம், பாவம் என்றெல்லாம் நீங்கள் அழைக்கின்ற எல்லாமே ஆன்மாவின் பிரதிபலிப்புகள் தான். பிரதிபலிக்கும் கண்ணாடி தாழ்ந்ததாக இருந்தால் பிரதிபலிப்பும் தாழ்ந்ததாக இருக்கும்.

உண்மைப்பொருளில் எந்த வெளிப்பாடும் இல்லை. அதை நாம் சிந்தித்துப் பார்க்க முடியாது. சிந்திக்க மனம் தேவை. ஆனால் மனமே ஒரு வெளிப்பாடுதான். கருத்திற்கு எட்டாதது என்பது இந்தப் பொருளின் மகிமை. ஒளியின் மிகத் தாழ்ந்த அதிர்வுகளையும், மிக உயர்ந்த அதிர்வுகளையும் நாம் பார்க்க முடியாது என்பதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும். இவை இருப்பு என்பதன் இருமுனைகள் ஆகும். இப்பொழுது நமக்குத் தெரியாத சில பொருட்கள் இருக்கின்றன. ஆனால் நம்மால் அவற்றை அறிந்துகொள்ள முடியும். அவை தெரியாமல் இருப்பதற்கு நமது அறியாமையே காரணம். சிலவற்றைப்பற்றி நாம் ஒருபோதும் அறிந்துகொள்ள முடியாது. அவை அறிவின் உயர்ந்த எல்லைக்கு அப்பாற்பட்டவை. எப்போதுமே நாம் என்றென்றும் இருப்பவர்கள்; ஆனால் நமக்கு இது தெரிவதில்லை. அங்கே அறிவது என்பது இயலாத காரியம். அந்தக் கருத்துக்கள் எல்லைக்கு உட்பட்டிருக்கின்றன என்பதே அவை இருப்பதற்கு அடிப்படை.

எடுத்துக்காட்டாக, என்னில் இருப்பவற்றுள் மிகமிக நிச்சயமானது ஆன்மாதான் என்றாலும், நான் அதை எல்லைக்கு உட்பட்ட உடல், மனம், மகிழ்ச்சியுறுவது, துயருறுவது, ஆண், பெண்—இவ்வாறுதான் என்னால் நினைக்க முடிகிறது. அதேவேளையில் அதை உள்ளது உள்ளபடி நினைக்க நான் முயல்கிறேன். அப்போது அதன் நிலையைத் தாழ்த்தியே என்னால் அதை நினைக்க முடிகிறது. என்றாலும் அந்த உண்மை இருக்கிறது என்ற நிச்சய அறிவு எனக்கு உண்டு. 'என் அன்பே, யாருமே தன் கணவனிடம் அவன் தன் கணவன் என்பதற்காக அன்பு செலுத்துவதில்லை; ஆன்மா அங்கு இருப்பதாலேயே அன்பு செலுத்துகின்றனர். ஆன்மாவிலும் ஆன்மாவின்மூல மாகவுமே அவள் தன் கணவனிடம் அன்பு செலுத்துகிறாள். அதுபோலவே என் அன்பே, கணவனும் மனைவியிடம் அவள் தன் மனைவி என்பதற்காக அன்பு செலுத்துவதில்லை; ஆன்மா விலும் ஆன்மாவின் மூலமாகவுமே அவன் அன்பு செலுத்து கிறான்.' அழியாத இந்த உண்மைப்பொருளே நாம் அறிந்த ஒரே பொருள். ஏனெனில் இதிலும் இதன்மூலமாகவுமே நாம் மற்ற எல்லாவற்றையும் அறிகிறோம். ஆனாலும் அதனை நாம் சிந்தித்துப் பார்க்க முடியாது. அறிபவனையே அறிவது எப்படி? அதை அறிய இயலுமானால், அது அறியப்படுகின்ற பொரு ளாக இருக்க முடியுமே தவிர அறிபவனாக இருக்க முடியாது.

உயர்ந்த ஆன்மானுபவம் பெற்றவன், 'நான் அரசர்களுக் கெல்லாம் அரசன், எனக்கு மேல் அரசர் யாருமில்லை. நானே கடவுள், எனக்கு மேல் எந்தக் கடவுளும் இல்லை. நான் மட்டுமே இருக்கிறேன், என்னைத் தவிர எதுவும் இல்லை' என்கிறான். வேதாந்தத்தின் இந்த அத்வைதக் கருத்து பலருக்குப் பயங்கர மாகத் தோன்றுகிறது. அதற்குக் காரணம் அறியாமையே.

ஓய்வாக, அமைதியாக, என்றும் இருக்கும் ஆன்மாவே நாம். நாம் அழக் கூடாது; ஆன்மாவுக்கு அழுகை என்பது இல்லை. இறைவன் தனது அரியாசனத்தில் இருந்தபடியே மக்களை எண்ணிப் பரிவால் அழுது கொண்டிருக்கிறான் என்று நாம் கற்பனை செய்கிறோம். இத்தகைய இறைவன் நாம் சென்று அடையத் தக்கவன் அல்ல. இறைவன் எதற்காக அழ வேண்டும்? அழுகை பலவீனத்தின் அறிகுறி; அடிமைத் தனத்தின் அறிகுறி.

மிக உயர்ந்ததையே எப்போதும் நாடுங்கள்! மிக உயர்ந்ததிலேயே அழிவற்ற பேரின்பம் இருக்கிறது. நான்

வேட்டையாடினால் சிங்கத்தையே வேட்டையாடுவேன்; கொள்ளையிட வேண்டுமானால், அரசனது கருவூலத்தையே கொள்ளையிடுவேன். மிக உயர்ந்ததையே எதிலும் நாடுங்கள்.

அம்மம்மா! எந்த எல்லைக்கும், வருணனைக்கும் எட்டாதவன் அவன்! உள்ளத்திற்கு உள்ளே தோன்றும் ஒளிப்பிழம்பு அவன்! ஒப்புயர்வற்றவன், எல்லையற்றவன், நீல வானம்போல் எவ்வித மாறுதலும் இல்லாமல் இருப்பவன்! ஓ புனிதனே, இப்படி எல்லாமான பொருளை அறிந்துகொள். வேறு எதையும் தேடாதே!

எங்கே இயற்கையின் மாறுதல்கள் எட்ட முடியாதோ, எது எல்லா கருத்திற்கும் அப்பாற்பட்டதோ, மாற்றம் இல்லாததோ, அசைவு இல்லாததோ, யாரை எல்லா நூல்களும் போற்றுகின்றனவோ, எல்லா முனிவர்களும் வழிபடுகின்றார்களோ, ஓ புனிதனே, அவரையே தேடு. வேறு எதையும் தேடாதே.

அது ஒப்பில்லாதது; எல்லையற்ற ஒன்று; இணையற்றது. மேலே, கீழே, வலப்புறம், இடப்புறம், எங்கும் தண்ணீர்; தண்ணீர்ப் பரப்பில் அலையோ வேறு எந்தவகையான அசைவோ இல்லை, ஆழ்ந்த அமைதி. எல்லாம் முடிவற்ற ஆனந்தம். அந்தப் பொருள் உங்கள் உள்ளத்தில் வரும்; வேறு எதையும் நாடாதே.

சகோதரா நீ ஏன் அழுகிறாய்? உனக்கு மரணம் இல்லை. நோய் இல்லை. நீ ஏன் அழ வேண்டும்? துன்பமில்லை. உனக்குத் துரதிர்ஷ்டமில்லை. நீ ஏன் அழுகிறாய்? சகோதரா! மாறுதலோ மரணமோ உனக்கு இல்லை. இருக்கின்ற ஒரே பொருள் நீயே.

இறைவன் என்றால் என்ன என்பது எனக்குத் தெரியும்—அவனை உனக்கு விளக்க என்னால் முடியாது. இறைவன் என்றால் என்ன என்பது எனக்குத் தெரியாது—அவனை உனக்கு விளக்க என்னால் எப்படி முடியும்? ஆனால் என் சகோதரா, நீயே அவன், அவனே நீ என்பதை நீ காணவில்லையா? கடவுளை ஏன் இங்குமங்கும் தேடுகிறாய்? தேடாதே, அதுவே கடவுள். உன் ஆன்மாக இரு.

இறைவா, நீயே எங்கள் தந்தை, எங்கள் தாய், எங்கள் அன்பு நண்பன். உலகின் சுமையை நீயே தாங்குகிறாய். எங்கள் வாழ்வுச் சுமைகளை நாங்களே சுமக்க எங்களுக்கு உதவுவாய். நீயே எங்கள் நண்பன், எங்கள் காதலன், எங்கள் கணவன், நீயே நாங்கள்.

## 7. வேதாந்தம் பற்றிய குறிப்பு

தியானம், தத்துவ ஆராய்ச்சி இவற்றால் உருவாக்கப்பட்ட சாஸ்திரங்களிலும் வேதத்தின் பல பகுதிகளிலுள்ள நீதி நெறி பற்றிய உபதேசங்களிலுமே இந்து மதத்தின் உயிர்நாடியான அம்சங்கள் அடங்கியுள்ளன. இந்தப் பிரபஞ்சம் முடிவில்லாதது, என்றுமுள்ளது என்று இவை வலியுறுத்துகின்றன. அதற்குத் தோற்றம் இல்லை, முடிவும் இல்லை. ஜடப் பொருட்களில் உணர்வு வெளிப்படுவதையும், வரையறைக்கு உட்பட்ட பொருட்களில் எல்லையற்ற பொருள் ஊடுருவி நிற்பதையும் காட்டக்கூடிய வெளிப்பாடுகள் உலகில் கணக்கின்றி இருக்கின்றன. எனினும் எல்லையற்ற பொருள் தானே இயங்கவல்லது, என்றுமிருப்பது, மாறுதலற்றது. என்றுமுள்ள இந்தப் பொருளில் காலத்தின் சுவடுகள் பதியாது. புலன்களுக்கு அப்பாற்பட்டதும் அறிவுக்கு எட்டாததும் ஆகிய அந்த மண்டலத்தில் கடந்தகாலமும் இல்லை, எதிர் காலமும் இல்லை.

ஆன்மா அழிவற்றது என்று வேதங்கள் போதிக்கின்றன. பிறப்பு-இறப்பு நியதிக்குக் கட்டுப்பட்டது உடம்பு. வளர்வது அழிந்தேயாக வேண்டும். ஆனால் உடலுள் இருக்கும் ஆன்மா எல்லையற்ற பரம்பொருளுடன் தொடர்புகொண்டது; அமர வாழ்வு பெற்றது. அதற்குத் தோற்றம் இல்லை; ஆகவே அழிவும் இல்லை. இந்த உலகில் பிறக்கும்போதே ஒவ்வோர் ஆன்மாவிற்கும் தொடக்கம் ஏற்படுகிறது என்று கிறிஸ்தவ மதம் கூறுகிறது. ஆனால் வேதங்களோ 'மனித ஆன்மா, பரப்பிரம்மத்திலிருந்து தோன்றியது. எனவே கடவுளைப் போன்றே அதுவும் தொடக்கமற்றது' என்று கூறுகின்றன. கிறிஸ்தவ மதத்திற்கும் வேத மதத்திற்கும் உள்ள முக்கியமான வேறுபாடுகளுள் இது ஒன்று. ஓர் உடம்பிலிருந்து இன்னொரு உடம்பு என்று பிரவேசிக்கின்ற தனது யாத்திரையில் இந்த ஆன்மா எண்ணற்ற விதங்களில் வெளிப்பட்டிருக்கிறது; இனியும் வெளிப்படும். ஆன்மீகப் பரிணாமம் என்ற மாபெரும் நியதிப்படி பூரணமடைந்து, மேலும் மாறுதல் இல்லாத நிலை அடையும்வரை, இது நிகழ்ந்துகொண்டே இருக்கும்.

## 8. வேதங்கள் மற்றும் உபநிடதங்கள் பற்றிய சில கருத்துக்கள்

வேதத்தில் காணப்படும் யாககுண்டமே வரைகணிதத்தின் (Geometry) பிறப்பிடம்.

ஒளிமயமான தேவர்களை எழுந்தருள வேண்டுவது தான் வழிபாட்டின் அடிப்படை. அது பிரார்த்திப்பவர்களுக் கும் பிரார்த்தனையை ஏற்பவர்களுக்கும் பரஸ்பரம் உதவி செய்கிறது என்பதே கருத்து.

தோத்திரங்கள் வெறும் புகழ்மொழி மட்டுமல்ல, சரியான மனோபாவத்துடன் உச்சரிக்கும்போது அவை சக்தி வாய்ந்த மந்திரங்கள் ஆகின்றன.

அதிகப் புலனின்பமும் மிகுந்த சக்தியும் பெற்று வாழும் நிலையே சொர்க்கம் ஆகும்.

உயர் உலகில் வாழும் உடல்களும் இந்தத் தூல உடல் களைப் போலவே அழியும் தன்மை உடையவை.

இந்த உலகத்திலும் சரி, பிற உலகங்களிலும் சரி, எல்லா உடல்களுக்கும் மரணம் உண்டு. தேவர்களும் மரணத்திற்கு உட்பட்டவர்களே. அவர்களால் மகிழ்ச்சி மட்டுமே தர முடியும்.

இந்த உடலுக்குப் பின், உணரவும் பார்க்கவும் வல்ல உயர்ந்த ஒன்று இருப்பதுபோல் எல்லா தேவர்களுக்கும் பின்னணியாக ஒருவர் இருக்கிறார். அவரே கடவுள்.

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய சக்திகளும், எங்கும் நிறைந்த, எல்லாம் அறிந்த, எல்லாம் வல்ல குணங்களும் உள்ளவரே தேவர்களுக்கும் தேவரான இறைவன்.

'அழியாத அமரத்துவத்தின் குழந்தைகளே! மேலுலகத் தில் உள்ள தேவர்களே கேளுங்கள்!'[1] 'எல்லா இருளுக்கும் எல்லா சந்தேகங்களுக்கும் அப்பாற்பட்ட ஒளிச்சுடரை நான் கண்டுகொண்டேன்.'[1] புராதனப் பழம்பொருளை நான் கண்டு கொண்டேன். இதற்கான வழி உபநிடதங்களில் காணப் படுகிறது.

---

1. சுவேதாஸ்வதர உபநிடதம், 2. 5, 3. 8.

நாம் பூமியில் சாகிறோம்; சொர்க்கத்திலும் சாகிறோம்; அதற்கும் மேலான உலகிலும் சாகிறோம். கடவுளை அடையும் போதுதான் நாம் அமர வாழ்வு பெறுகிறோம்.

உபநிடதங்கள் இதைப் பற்றியே பேசுகின்றன. உபநிடதங்களின் வழி தூய வழி. பழக்கவழக்கங்கள் பலவற்றையும், வட்டார வழக்கங்களைப் பற்றிய குறிப்புகளையும் இன்று நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. எனினும் அவற்றின் மூலம் உண்மை நமக்குத் தெளிவாகிறது. உண்மையின் ஒளியை அடைவதற்காக விண்ணும் மண்ணும் புறக்கணிக்கப்படுகின்றன.

உபநிடதங்கள் பின்வருமாறு கூறுகின்றன—

'இறைவன் இந்தப் பிரபஞ்சத்தில் ஊடுருவி நிற்கிறான். இந்தப் பிரபஞ்சம் முழுவதும் அவனுடையது.'

'அவன் எங்கும் நிறைந்தவன், இரண்டற்ற ஒருவன், உருவமற்றவன், தூயவன், மகாகவி. கதிரவனையும் தாரகைகளையும் சந்தமாகக் கொண்டு கவி புனைபவன்; உரியவருக்கு உரியவற்றை அளிப்பவன்.'

'சடங்குகளின் மூலம் ஒளியை அடைய முயல்பவர்கள் முழு இருளில் மூழ்கிக் கிடக்கிறார்கள். இயற்கையே எல்லாம் என்று எண்ணுபவர்களும் இருளில் மூழ்கியுள்ளவர்களே. இந்த எண்ணத்தின்மூலம் இயற்கைக்கு அப்பால் செல்ல விரும்புபவர்களோ இன்னும் ஆழ்ந்த இருளில் மூழ்கியுள்ளவர்கள்.''

அப்படியானால் சடங்குகள் தீயவையா? இல்லை. முன்னேறிச் செல்பவர்களுக்கே அவை பயன் தரும்.

உபநிடதம் ஒன்றில் (கடோபநிடதம்) நசிகேதன் என்ற சிறுவன் கீழ்க்கண்டவாறு எமனிடம் கேட்கிறான்: 'இறந்தவனைப்பற்றிச் சிலர், ''அவன் போய்விட்டான்'' என்று கூறுகின்றனர், மற்றும் சிலர், ''அவன் இன்னும் வாழ்கிறான்'' என்கின்றனர். எமனே, நீ மரணத்தின் அதிதேவன்; உண்மையை அறிந்தவன். தயவுசெய்து எனது ஐயத்தைப் போக்கு.'

எமன் பதில் அளித்தான்: 'பெரும்பாலான தேவர்களுக்கே இது தெரியாது. அப்படியிருக்க மனிதர்களைப்பற்றி என்ன கூறுவது! குழந்தாய், இந்த விஷயத்தை என்னிடம் கேட்காதே.'

நசிகேதன் விடவில்லை. மீண்டும் வற்புறுத்துகிறான். எமன் மறுபடியும் சொல்கிறான்: 'தேவர்களுக்குக் கிடைக்கக் கூடிய இன்பங்களை எல்லாம் உனக்குத் தருகிறேன். இந்தக் கேள்வியை மட்டும் வற்புறுத்தாதே.'

நசிகேதன் அசையவில்லை, குன்றனைய உறுதியுடன் நின்றான். அதைக் கண்ட மரணதேவன் கூறுகிறான்:

'குழந்தாய், செல்வம், அதிகாரம், நீண்ட ஆயுள், புகழ், குடும்பம் ஆகியவற்றையெல்லாம் மும்முறை நிராகரித்துவிட்டாய். மிக உயர்ந்த சத்தியத்தைக் கேட்கும் துணிவு உன்னிடம் உள்ளது. எனவே நான் உனக்கு அதை உபதேசிக்கிறேன். அதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று சத்திய வழி, மற்றொன்று சுக வழி. நீ சத்திய வழியைத் தேர்ந்தெடுத்திருக்கிறாய்.'

இந்த இடத்தில் சத்திய உபதேசத்திற்குரிய நிபந்தனைகளை நீங்கள் கவனிக்க வேண்டும். முதலாவது பரிசுத்தம். ஆசை மேகம் படராத பரிசுத்தமான ஒரு சிறுவன் இந்தப் பிரபஞ்ச ரகசியத்தைக் கேட்கிறான். இரண்டாவதாக, சத்தியத்திற்காகவே அவன் அந்தச் சத்தியத்தை ஏற்க வேண்டும்.

தாமே உணர்ந்து மெய்யுணர்வு பெற்ற ஒருவரிடமிருந்து சத்தியத்தை அறிந்தாலன்றி, அது பலன் தராது. புத்தகங்கள் அதைத் தர முடியாது. தர்க்கத்தால் அதை நிலைநிறுத்த முடியாது. யார் அதன் ரகசியத்தை அறிகிறானோ, அவனிடமே சத்தியப் பொருள் வருகிறது.

சத்தியத்தை அறிந்தபின் அமைதியாக இரு; வீண் வாக்கு வாதங்களில் உழல வேண்டாம். இறை உணர்வில் ஒன்றிவிடு. நீயே அதைச் செய்ய வல்லவன். அது இன்பம் அல்ல, துன்பமும் அல்ல, பாவம் அல்ல, புண்ணியமும் அல்ல; ஞானம் அல்ல, ஞானம் அல்லாததும் அல்ல. அதை நீயே உணர வேண்டும். நான் உனக்கு எவ்வாறு விவரிக்க முடியும்?

'ஆண்டவனே, உன்னைத் தவிர வேறு எதுவும் எனக்கு வேண்டாம்' என்று உளங்கனிந்து கரைந்து கதறுபவனுக்கே இறைவன் காட்சி தருவான். தூயவனாக இரு; அமைதியாக இரு. குழம்பிய உள்ளம் ஆண்டவனைப் பிரதிபலிக்க இயலாது.

'வேதங்கள் யாரை அறிவிக்கின்றனவோ, யாரை அடைவதற்காக நாம் பிரார்த்தனையும் வழிபாடும் செய்கிறோமோ அவனுக்கு, வருணிக்க முடியாத அந்தப் பரம்பொருளுக்கு ஓம் என்பதே புனிதமான பெயர். சொற்கள் எல்லாவற்றுள்ளும் புனிதமான சொல் இதுவே. இந்தச் சொல்லின் ரகசியத்தை அறிந்தவன், விரும்பியதைப் பெறுவான்.' இந்தச் சொல்லில் சரண்புகுங்கள். இதில் சரணடைபவர்களுக்கே வழி திறக்கிறது.

## 9. பிறப்பு இறப்பு நியதி

ஒக்லண்ட், 7 மார்ச் 1900

'இந்தப் பிறவியையும் மரணத்தையும் ஒழிப்பது எப்படி? சொர்க்கத்திற்குப் போவது எவ்வாறு என்பதல்ல, சொர்க்கத் திற்குப் போவதைத் தடுப்பது எவ்வாறு?—என்பதே இந்து தேடும் பொருளாகும்.

எதுவும் தனித்திருக்கவில்லை. எல்லாமே காரணகாரியம் என்ற முடிவற்ற சங்கிலியின் ஒரு பகுதிதான். மனிதனைவிட உயர்ந்த உயிர்கள் இருக்குமானால், அவையும் நியதிகளுக்கு அடங்கியே நடக்க வேண்டும். உயிரிலிருந்துதான் உயிர் தோன்றும், எண்ணத்திலிருந்துதான் எண்ணம் தோன்றும், ஜடப்பொருளிலிருந்துதான் ஜடப்பொருள் தோன்றும். ஜடப் பொருளைக்கொண்டு பிரபஞ்சத்தைப் படைக்க முடியாது. அது எப்போதும் இருந்துகொண்டே இருக்கிறது. மனிதர்கள் இயற்கையால் புதியவர்களாகப் படைக்கப்பட்டு இந்த உலகத் திற்கு வருவார்களானால், எந்தவிதமான பதிவுகளும் இல்லாமலே வருவார்கள். நாம் அவ்வாறு வருவதில்லை. எனவே நாம் புதியவர்களாகப் படைக்கப்பட்டவர்கள் அல்ல என்பது தெரிகிறது. சூன்யத்திலிருந்து ஆன்மாக்கள் படைக்கப்படு மானால், மீண்டும் அவை சூன்யத்திற்கே செல்வதை யாரால் தடுக்க முடியும்? எதிர்காலத்தில் நாம் எப்போதும் வாழ்ந்து கொண்டே இருக்க வேண்டும் என்றால், இறந்தகாலத்திலும் நாம் எப்போதும் வாழ்ந்து வந்தவர்களாகவே இருக்க வேண்டும்.

ஆன்மா மனமும் அல்ல, உடலும் அல்ல என்பது இந்து வின் நம்பிக்கை. 'நானே நான்' என்று சொல்கின்ற, அழிவில் லாத, நிலைத்து நிற்கின்ற பொருள் எது? அது உடல் அல்ல. ஏனெனில் மனம் உடலைவிட வேகமாக மாறிக்கொண்டே இருக்கிறது. மேலும், மனத்தில் சில நிமிடங்கள்கூட எண்ணங் கள் மாறாமல் அப்படியே இருப்பதில்லை. நதிக்குக்கரைகள் இருப்பதுபோல், மாறாத ஒரு தனித்துவம் மனிதனுக்கும் இருக்க வேண்டும். கரைகள் மாறுவதே இல்லை. அவை மாறாமல்

---

இதுவும், அடுத்த குறிப்பும் ஒக்லண்ட் டிரிப்யூன் என்ற பத்திரிகையில் வந்தவை.

இருக்கவில்லை என்றால், தொடர்ந்து மாறிக்கொண்டே யிருக்கும் நதியை நாம் அறிய முடியாது. உடலுக்கு அப்பால், மனத்திற்கு அப்பால், ஒன்று இருக்க வேண்டும். அதுவே ஆன்மா, அதுவே மனிதனை ஒருங்கிணைக்கிறது. தலைவனாக இருக்கும் ஆன்மா, மனம் என்ற நுண்ணிய கருவியின் வாயிலாக உடலை இயக்கிக்கொண்டிருக்கிறது. இறந்தபின் 'ஒருவன் உடம்பை விட்டுவிட்டான்' என்று நாங்கள் இந்தியாவில் சொல்வது வழக்கம்; 'அவன் உயிரை விட்டுவிட்டான்' என்று நீங்கள் சொல்கிறீர்கள். மனிதன் ஓர் ஆன்மா என்றும், அவனுக்கு ஓர் உடல் உண்டு என்றும் இந்துக்கள் நம்புகிறார்கள். மேலை நாட்டினர், மனிதன் ஓர் உடல் என்றும் அவனுக்கு ஓர் ஆன்மா உண்டு என்றும் நம்புகின்றனர்.

கூட்டுப் பொருட்கள் அனைத்தும் அழியும். வேறு எந்தப் பொருளாலும் ஆக்கப்படாத ஒரு தனித்த மூலப்பொருள் ஆன்மா. ஆகவே அதற்கு அழிவில்லை. ஆன்மாவின் இயல்பே அழிவின்மை. உடல், மனம், ஆன்மா என்ற மூன்றும் நியதி என்னும் ஒரு சக்கரத்தைச் சுற்றி இயங்கிக் கொண்டேயிருக் கின்றன. யாரும் இதிலிருந்து விலக முடியாது. விண்மீன்களும் சூரியனும் அவற்றிற்குரிய நியதிகளை மீறிச் செல்ல முடியாதது போல் நாமும் இந்த நியதியை மீற முடியாது. இவை பிரபஞ்ச நியதிகள். ஒவ்வொரு செயலுக்கும் உடனேயோ, காலம் கடந்தோ பயன் ஏற்பட்டே தீர வேண்டும் என்பது கர்ம நியதி.

எகிப்தில், பதம் செய்து காக்கப்பட்ட ஓர் இறந்த உடலின் கையில் இருந்த விதையை ஐயாயிரம் ஆண்டு கழிந்தபிறகு எடுத்து, விதைத்தபோது அது முளைவிட்டு வளர்ந்தது. இந்த உண்மை, மனிதச் செயல்கள் அழியாமல் தொடரும் தன்மை யுடையது என்பதற்கு ஓர் உதாரணம். ஒரு செயலை உண்டாக் காமல் ஒரு செயல் அழிவதில்லை. நம் செயல்களுக்கு உரிய பலன்கள் நாம் வாழும் இந்த உலகத்திலேயே ஏற்படும் என்றால், காரணகாரியங்களால் ஆன ஒரு வட்டத்தைச் சுற்றி நாம் திரும்பத்திரும்ப வந்துகொண்டே இருக்க வேண்டும் என்றா கிறது. இதுவே மறுபிறவிக் கோட்பாடு. நாம் சட்டத்தின் அடிமைகள், நியதியின் அடிமைகள், வேட்கையின் அடிமைகள், ஆசையின் அடிமைகள், இன்னும் ஆயிரக்கணக்கான பொருட் களுக்கு அடிமைகள். பிறவியைத் துறந்தால்தான் நாம் அடிமைத் தனத்தைத் துறந்து, சுதந்திரம் பெற முடியும். கடவுள் ஒருவரே சுதந்திரமாக இருப்பவர். கடவுளும் சுதந்திரமும் ஒன்றே.

## 10. உண்மையும் நிழலும்

ஒக்லன்ட, 8 மார்ச் 1900

ஒரு நிலையான தன்மையைப் பெற, மாறாத ஒன்றை அடைய ஆன்மா எப்போதும் முயன்றுகொண்டே இருக்கிறது. அது திருப்தி அடைவதே இல்லை. செல்வம், ஆசை, விருப்பத்தைப் பூர்த்தி செய்தல் இவை அனைத்தும் மாறிக்கொண்டே இருக்கும். இவற்றை அடைந்த பிறகும் மனிதன் திருப்தி அடைவதில்லை. மாறாத ஒன்றின்மீது கொண்டிருக்கும் வேட்கையை எவ்வாறு பூர்த்தி செய்வது என்பதை நமக்குக் கற்பிக்கின்ற விஞ்ஞானமே மதம். இடம், பொருள், சூழ்நிலை போன்றவற்றால் மதங்கள் வேறுபட்டிருந்தாலும் அவை ஒரு பொருளையே, அதாவது மனிதனின் ஆன்மாவில்தான் உண்மை இருக்கிறது என்பதையே போதிக்கின்றன.

இரண்டு உலகங்கள் இருப்பதாக வேதாந்தத் தத்துவம் கூறுகிறது. புலன்களால் அறியக்கூடிய புற உலகம் ஒன்று, அக உலகம் அல்லது எண்ண உலகம் என்பது மற்றொன்று.

இந்த வேதாந்தத் தத்துவம் மூன்று அடிப்படைக் கருத்துக்களைக் கூறுகிறது. அவை காலம், இடம், காரணம் என்பவை. அவற்றால் ஆனது மாயை. இந்த மாயையே மனித எண்ணம் தோன்றுவதற்கான அடிப்படை. எண்ணத்தால் ஆன பொருள் அல்ல இந்த மாயை. ஜெர்மானியத் தத்துவ அறிஞராகிய காண்ட் என்பவரும் பிற்காலத்தில் இந்த முடிவைத் தெரிவித்துள்ளார்.

எனது உண்மைத் தன்மையும், இயற்கையின் உண்மைத் தன்மையும், கடவுளின் உண்மைத் தன்மையும் ஒன்றே. இவற்றின் இடையே தோன்றும் வேறுபாடு தோற்ற அளவில் மட்டும் தான் உள்ளது. இந்த வேறுபாட்டை உண்டாக்குவது மாயை. கரையின் அமைப்புதான், கடலை ஒரு விரிகுடாவாகவோ, ஜலசந்தியாகவோ, வளைகுடாவாகவோ செய்கிறது. ஆனால் உருவத்தை உண்டாக்கும் இந்த மாயை நீங்கிவிட்டால், விரிகுடா, ஜலசந்தி, வளைகுடா என்ற வெவ்வேறான உருவங்கள்

மறைந்துபோகும், வேறுபாடுகள் நீங்கிவிடும், மீண்டும் எல்லாம் கடலாகிவிடும்.

'மனிதன் ஒரு காலத்தில் தூயவனாக இருந்தான்; தவறி வீழ்ந்தான்; மீண்டும் தூயவனாவான்' என்ற கருத்துடனேயே தற்கால மதங்கள் எல்லாம் தொடங்குகின்றன. அவை எங்கிருந்து இந்தக் கருத்தைப் பெறுகின்றன என்பது எனக்குத் தெரியவில்லை. அறிவின் பீடம் ஆன்மா. புறச் சூழ்நிலை ஆன்மாவைத் தூண்டுகிறது. அறிவே ஆன்மாவின் சக்தி. கோடிக்கணக்கான ஆண்டுகளாக அது உடலை உற்பத்தி செய்து கொண்டேயிருக்கிறது. பிறவிதோறும் ஆன்மா பெறும் வெவ்வேறு உருவங்கள் ஆன்மாவின் வரலாறு என்னும் நூலின் தொடர் அத்தியாயங்கள். நாம் தொடர்ந்து நமது உடல்களை உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம். இந்தப் பிரபஞ்சம் விரிந்து, சுருங்கி, மாறிக் கொண்டே இருக்கிறது. அடிப்படையில் ஆன்மா ஒருபோதும் மாறுவதில்லை என்பதும், மாயை அதை மாற்றி அமைக்கிறது என்பதும் வேதாந்தத்தின் முடிவு. மன எல்லைக்குள் அடங்கிய கடவுளே இயற்கை. இயற்கையின் பரிணாமமே ஆன்மாவின் மாற்றம். அனைத்து உயிர்களிலும் உள்ளுறையும் ஆன்மா அடிப்படையில் ஒரே தன்மையானது. அதன் வெளிப்பாட்டை மாற்றி அமைப்பது உடல். மனித குலத்திற்குப் பொதுவாக இருக்கும் இந்த ஆன்ம ஒற்றுமை, ஒழுக்கத்திற்கும் நீதிக்கும் அடிப்படையாக அமைகிறது. இந்தக் கண்ணோட்டத்தில் எல்லோரும் ஒருவரே. ஆகவே ஒரு சகோதரனுக்குத் தீங்கு செய்வது, தன் ஆன்மாவிற்குத் தீங்கு செய்வதேயாகும்.

இந்த எல்லையற்ற ஒருமையின் வெளிப்பாடே அன்பு. நீங்கள் எந்தத் துவைதக் கொள்கையால் அன்பை விளக்க முடியும்? 'முத்தமிடுவது, மனிதனை மனிதன் கொன்று தின்னும் பழக்கத்தையும் அவனது சுவையறியும் திறனையும் நினைவூட்டுகிறது' என்று ஐரோப்பியச் சிந்தனையாளர் ஒருவர் கூறுகிறார். நான் அதை ஒத்துக்கொள்ளவில்லை.

நாம் எல்லோரும் தேடுவது எது? சுதந்திரம். நமது முயற்சிகளும் போராட்டங்களும் அதற்காகவே. எல்லா மனித இனங்களும் உலகங்களும் மதங்களும் தேடுவதும் அதையே.

நாம் கட்டுண்டிருந்தால், நம்மைக் கட்டியவர் யார்? எல்லையற்ற பரம்பொருள் தன்னைத்தானே கட்டிக்கொள்ளுமே தவிர, அதைக் கட்டிவைக்கும் சக்தி வேறு எதுவுமே இல்லை.

## 11. மெய்ப்பொருளும் மாயையும்

ஒரு பொருளை மற்றொன்றிலிருந்து பிரித்துக் காட்டுவன— காலம், இடம், காரணகாரியம் என்ற மூன்றுமே.

வேறுபாடுகள் எல்லாம் புறவுருவிலேயே; அகக்கருவில் (Substance) அல்ல. புற உருவை அழித்துவிடலாம், அது ஒரே யடியாகவும் மறைந்துவிடும். ஆனால் கரு எப்போதுமே நிலைத் திருக்கும். இந்தக் கருவை ஒருபோதும் அழிக்க முடியாது.

பரிணாமம் என்பது இயற்கையின் கூறு, ஆன்மாவினு டையது அல்ல—இயற்கையின் பரிணாமம், ஆன்மாவின் வெளிப்பாடு.

பொதுவாகக் கூறப்படுவதுபோல் மாயை என்பது பொய்த் தோற்றம் அல்ல. மாயை உண்மையானது, அதேவேளையில் உண்மையற்றதும்கூட. மாயையின் பின்னால் மெய்ப்பொருள் இருப்பதால் அது உண்மை. மெய்ப்பொருள் அதற்கு மெய்த் தோற்றத்தை அளிக்கிறது. மாயையில் எது உண்மையாக இருக் கிறதோ அதுதான் மாயையை ஊடுருவி நிற்கும் மெய்ப்பொருள். இந்த மெய்ப்பொருளை நாம் ஒருபோதும் பார்க்க முடியாது. ஆகையால் எதை நாம் பார்க்கிறோமோ அது உண்மையற்றது; அதற்கு உண்மையான தனி இருப்பு என்பது இல்லை. தனது இருப்புக்கு அது மெய்ப்பொருளையே சார்ந்திருக்கிறது.

ஆகவே மாயை என்பது முன்னுக்குப்பின் முரணானது— உண்மையானது, எனினும் உண்மையற்றது; ஒரு பொய்த் தோற்றம், எனினும் பொய்த்தோற்றம் அல்லாத ஒன்று.

மெய்ப்பொருளை அறிந்தவன் மாயையில் பொய்த் தோற்றத்தைக் காண்பதில்லை, மெய்ப்பொருளையே காண் கிறான். மெய்ப்பொருளை அறியாதவன் மாயையில் பொய்த் தோற்றத்தையே காண்கிறான், அதையே உண்மையென்று கருதுகிறான். ❖

**சுடர் 3 முற்றும்**